# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஏழாம் மடலம் - இரண்டாம் பாகம்

## (மி - மூ)

## Vol. VII - Part - II

து. இராசேந்திரன், இ.ஆ.ப.
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு
2007

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## ஏழாம் மடலம் - இரண்டாம் பாகம்

## (மி - மூ)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VII-PART II

துு. இராசேந்திரன், இ.ஆ.ப.
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்
செய்தித் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு

2007

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 20

முதற் பதிப்பு : 2007

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. VII, Part - II



விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VII- PART II

ஏழாம் மடலம் - இரண்டாம் பாகம்

(மி - மூ)

பதிப்புக் குழு


**து. இராசேந்திரன், இ.ஆ.ப.**

*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை*

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்

திரு.மா.பூங்குன்றன்

தொகுப்பாளர்கள்

திரு.முத்து.பிச்சை

முனைவர் மு.கண்ணன்

முனைவர் பா.வெற்றிச்செல்வன் (பகுதிப் பொறுப்பாளர்)

முனைவர் ச.செந்திலாண்டவன்

முனைவர் இரா.கு.ஆல்துரை

திரு.கா.இளமுருகு

திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*




மு. கருணாநிதி
முதலமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 20.4.2007

# அணிந்துரை

அகரமுதலி திட்டத்தின் ஏழு மற்றும் எட்டாம் மடலங்கள் இதழ்களை விரிப்பது கண்டு என் இதயம் பெருமிதம் எய்துகிறது. ஒவ்வொரு மொழியிலும் அதன் சொற்களுக்கு வேர் மூலம் காண முற்படும்போது, பெரும்பாலான சொற்களின் வேர்மூலங்கள் அடுத்த மொழிகளில் சென்று நிற்கும். ஆனால், தமிழில் உள்ள சொற்களின் மூலங்கள் அனைத்தும் தமிழிலேயே அமைந்துள்ளன. இப்போது நடைமுறையில் வழங்குகிற தமிழ்ச் சொற்களும், உருவாகி வருகின்ற கலைச் சொற்களும், தொழில்நுட்பச் சொற்களும் ஏற்கனவே வழங்கிய வேர் மூலங்களிலிருந்து விரிந்தும் பெருகியும் வந்தனவும் வருவனவும் ஆகும்.

அறிவியல் வளர்ச்சி மிகுந்துள்ள இந்நாளில், செய்தித் தொடர்பாலும் தொழில் நுட்ப வளர்ச்சியாலும் உலகம் சுருங்கிவிட்ட நிலையில், ஒரு மொழியில் அண்டையயல் மொழிச் சொற்களெல்லாம் கலந்து விடுவது இயல்பு. இத்தகைய சூழ்நிலையிலும் தமிழ் தனித்தியங்க வல்லதாக நெடுங்காலமாக இயங்கிக் கொண்டு இருக்கிறது. இதைத்தான் பாவேந்தர் பாரதிதாசனார் 'தனித்தியங்கும் தன்மை தமிழினுக்கு உண்டு; தமிழே ஞாலத்தில் தாய்மொழி பண்டு' என்று ஆணித்தரமாகப் பாடி வைத்தார்.

அவ்வாறு, தமிழ், தான் தனித்தியங்குவது மட்டுமல்லாமல், பிற மொழிகளுக்கும் சொற்களை வாரி வழங்கிக் கொண்டுள்ளது. தமிழகத்திற்கு அப்பால் தனித்தனியே பிரிந்து வழங்கிவரும் திராவிட மொழிகளுக்கெல்லாம் தமிழ்மொழி வேர் மூலங்களை வழங்கியுள்ளதால், அவற்றின் அடிப்படையிலேயே அம்மொழிகளில் சொற்கள் பெருகியுள்ளமையைக் காண்கிறோம். அதனாலேயே, 'தமிழ் திரவிடத்திற்குத் தாய்' என்று தேவநேயப் பாவாணர் பறை சாற்றினார்.

இன்னும் பல மொழிகளிலுமுள்ள சொற்களின் வேர் மூலங்களும் தமிழிலேயே இருப்பதைக் காண நேர்கிறது. இது மொழியியல் உலகின் ஆய்வுப் போக்கைப் பல திருப்பங்களுக்கு உள்ளடக்குகின்றது. நெடுங்காலமாக வழக்கத்தில் இருப்பதும், தனித்தியங்க வல்லதும், பிறமொழிகளுக்குச் சொற்களை வழங்கவல்லதுமான மொழியே 'செம்மொழி' எனச் செம்மொழி இலக்கணம் வரையறுக்கப்படுகின்றது. தமிழின் இலக்கண இலக்கிய நூல்கள் இருட்டடிப்புச் செய்யப்பட்டு மறைக்கப்பட்டிருந்த காலமான கி.பி. 1857 அளவில் தமிழகம் வந்திருந்த கால்டுவெல் பெருமகனார் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் ஓர் ஒப்புமையைக் கண்டறிந்து, "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" (The comparative grammar of Dravidian Languages) என்ற நூலை வெளியிட்டார். அதன் வழி அவர் தன் ஆராய்ச்சியில் கண்ட முடிவுதான், "தமிழ் ஒரு செம்மொழி" என்பதாகும்.

அதன்பின், ஆங்கில அறிஞர்களான, "மெக்ஸின்" போன்றவர்கள் த்மிழ்மொழியில் உள்ள பதிவுகளையும், தமிழர்களின் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றையும் அறிவியல், வானியல் போன்றவற்றில் அவர்கள் பெற்றிருந்த அறிவாற்றலையும் ஆராய முற்பட்டனர். அவற்றின்வழி அந்த அறிஞர் பெருமக்கள் எல்லாம், 'தமிழ் ஓர் உயர் தனிச் செம்மொழி' (Primary Classical) என்று வழிமொழிந்து சென்றனர்.

இவற்றின் தொடர்ச்சியாகத் தமிழை ஒரு செம்மொழி என அரசே அறிவிக்க வேண்டுமென்று பரிதிமாற் கலைஞர் தன் கோரிக்கையை முதன்முதலில் அரசின் முன்வைத்து வலியுறுத்தினார்.

ஆனால், இதை முழுவதுமாக அறிவியல் வழியாக மொழியியலில் நிறுவுவதற்குச் சொற்களுக்கு உரிய வேர் மூலம் காணும் சொற்பிறப்பியல் பணியே துணை நிற்கும் என்று, தன் வாழ்நாளையே சொல்லாய்வுக்கென ஒப்புவித்துக் கொண்டவர் 'மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்'. இத்தகைய பலரது தொடர்ச்சியான சிந்தனைகளின், செயல்பாடுகளின் மூலமாகத்தான் தமிழ் ஒரு செம்மொழி என்பதற்கான அங்கீகாரத்தை இன்று நாம் வென்றெடுத்துள்ளோம்; வெற்றிவாகை சூடியுள்ளோம்.

தமிழ்மொழியில் வழங்கும் சொற்களுக்கெல்லாம் வேர்மூலம் காண்பது என்பது ஆழ்கடலில் முத்தெடுக்கும் பணியினும் கடினமானது; இந்தப் பணியொன்றே தமிழ் செம்மொழி என்பதை ஏற்கச் செய்யும் முதன்மைப் பணியாகும். இப்பணியில் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் பல ஆண்டுகள் உழைத்து ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை உருவாக்கி வெளியிட்டுள்ளார்; 'உயர்தனிச்செம்மொழி' (The Primary Classical Language of the World) என்ற நூலைப் பல ஆண்டுகளுக்கு முன்னமேயே வெளியிட்டுள்ளார்.

தேவநேயப் பாவாணரின் இந்தச் சொல்லாராய்ச்சித் திறனை அறிந்து, அவர்தம் பணி தமிழ் உலகிற்குத் தேவை என்று நான் கருதியதால் 8.5.1974 அன்று, 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம்' என்னும் ஒரு துறையைப் புதிதாக நிறுவி, அதற்குப் பாவாணர் அவர்களையே இயக்குநராகவும் நியமனம் செய்து அகர முதலித் தொகுதிகள் வெளிவர ஆவன செய்ததை இவ்வேளையில் மகிழ்வுடன் நினைவு கூர்கிறேன். அதன் பயனாக, பணிகள் சிறப்பாக நிகழ்ந்து முதல் தொகுதி அணியமாகிக் கொண்டிருக்கும் நிலையில் பாவாணர் அவர்கள் திடீரென மறைந்தார்கள். அதற்குப்பின் அவர்தம் நூல்களை அடிப்படையாகக் கொண்டு, அவரின் அணுகுமுறையிலேயே தொடர்ந்து அகர முதலித்திட்டத்தின் அடுத்தடுத்தத் தொகுதிகள் வெளிவரலாயின.

பாவாணர் மறைவுக்குப் பின்னும், ஒவ்வொரு முறையும் அரசுப்பொறுப்பு ஏற்கிற போதும் இந்தத் துறையின் வளர்ச்சியில் நான் மிகுந்த அக்கறை செலுத்தி வந்துள்ளேன். 1996ஆம் ஆண்டில் தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாட்டுக்கு எனத் தனி அமைச்சகம் உருவாக்கப்பட்டுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்குத் தேவையான கூடுதல் பணியாளர்கள், கணிப்பொறியமைப்பு போன்ற வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

இதுவரை, மும்மூன்று தொகுதிகள் கொண்ட ஆறு மடலங்களாக மொத்தம் 18 தொகுதிகள் சென்ற ஆண்டுவரை வெளிவந்து முடிந்துள்ளன. இப்போது 'ம', 'ய', 'வ' வரிசையில் ஆறு பகுதிகள் வெளிவருவது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். எஞ்சிய பகுதிகளும் விரைந்து வெளிவர வேண்டும் என்பது என் அவா. இந்த அகரமுதலிப் பகுதிகள் வெளிவர உறுதுணையாய் நின்ற தமிழ் வளர்ச்சி–பண்பாடு (ம) அறநிலையத் துறை சிறப்பு ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர் மற்றும் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் பொறுப்பு இயக்குநர் திரு. து. இராசேந்திரன், இ.ஆ.ப. அவர்களுக்கும், நூல்களை உருவாக்கியுள்ள அகரமுதலித் திட்டத்தின் ஆசிரியர், பணியாளர் குழுக்களுக்கும் எனது உளமார்ந்த பாராட்டுகள் உரித்தாகுக.

என்றும்,
அன்புடன்

(மு. கருணாநிதி)

*து. இராசேந்திரன்,* இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையம் (ம) செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்,

# பதிப்புரை

*ஞால முதன்மொழி – தமிழ்!*

*திராவிடத்திற்குத் தாய் – தமிழ்!!*

*ஆரியத்திற்கு மூலமொழி – தமிழ்!!!*

என்ற கொள்கையைத் தம் வாழ்நாள் முழுக்க நிலை நாட்டியவர் பாவாணர். தமிழ்மொழிக்குச் சொற்பிறப்பியல் அகரமுதலி யொன்று உருவாக்க வேண்டுமென்று 1974ஆம் ஆண்டு மாண்புமிகு முதலமைச்சர், முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் உணர்ந்து, சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்க வேண்டி, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் தலைமையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தை உருவாக்கினார். அது வளர்ந்து உயிரெழுத்துக்களுக்கு மூன்று பகுதியும், க, ச, த, ந, ப ஆகிய எழுத்துகளுக்கு மும்மூன்று பகுதிகள் மேனி பதினைந்து பகுதிகளுமாகப் பதினெட்டு பகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன. அடுத்து 'ம' மடலத்தின் மூன்று பகுதிகளில் மி–மூ வரிசை என்ற இப்பகுதி இரண்டாம் பகுதியாகும். அகரமுதலி வெளியீட்டில் இந்த மி–மூ பகுதி இருபதாவது பகுதியாக வெளியிடப்படுகிறது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி எல்லோருக்கும் பயன்படும் பொது வகையான சொற்பொருளகரமுதலியும் (General purpose Dictionary) ஆய்வாளர்க்கே பயன்படும் சொற்பிறப்பியல் அகரமுதலியும் (Etymological Dictionary) இணைந்த பேரகரமுதலி (Comprehensive Dictionary) யாகையால் பல சொற்களுக்கு நீண்ட விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக *"முக்கழகம், முக்கூடற்பள்ளு, முகம்"* போன்ற சொற்கள் அமைந்துள்ளன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி ஒவ்வொரு மடலமும் அரைக் கலைக் களஞ்சிய வடிவில் அமைந்துள்ளது. வெளிவரவிருக்கும் மடலங்களும் அவ்வாறே அமையவிருக்கின்றன.

மாந்தவினம் அறிவியல் வளர்ச்சியில் வேகமாய் முன்னேற்றமடைந்து வருவது கண்கூடேயாகும். இக்காலத்தில் நகரத்தில் தோன்றும் நாகரிக வளர்ச்சி ஒரு நொடிக்குள் சிற்றூர் மக்களிடையே சென்றடைகிறது. சிற்றூர் மக்கள் முற்காலத்தில் பயன்படுத்திய ஏனங்கள் போன்ற பிறபொருட்களெல்லாம் இன்றைக்குக் காட்சிப் பொருளாக அருங்காட்சியகத்தில் வைக்கப்பட வேண்டிய நிலைக்கு வந்துவிட்டன. ஏழாம் மடலமாகிய மி, மீ, மு, மூ வரிசையில் அரிய படவிளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. பழங்காலத் திருமணத்தின்போது மணமகன், அணிந்த 'மிஞ்சி' என்ற அணிகலனை இன்றைக்குப் பெரும்பாலும் யாரும் அணிவதில்லை. 'மிஞ்சி' என்ற அணிகலன் படமாக வரையப்பட்டு பக்கம் 12இல் பதிவு செய்யப்பட்டுள்ளது. அதுபோலவே மிதிகட்டை (பக்.22), முக்காணி[2] (பக்.81), முக்காலி (பக்.83) போன்ற படங்களும் பதிவு செய்யப்பட்டுள்ளன.

சிற்றூர் மக்கள் அறிவு சார்ந்த வகையில் வாழ்க்கையோடு ஒட்டி உறவாடும் நல்ல தமிழ்ச் சொற்களும், பயன்படுத்திய பழமொழிகளும் தலைப்புச் சொற்களின் விளக்கத்தில் கையாளப்பட்டுள்ளன.

பழம் பண்பாட்டின் நிலைக்களனாகச் சில சொற்கள் இடம் பெற்றுள்ளன. 'முச்சந்தி மண்' : கண்ணேறு கழிக்கப் பயன்படும் மண். நம் நாட்டில் மூலிகையைப் பற்றிய ஆய்வு கொஞ்சங் கொஞ்சமாக மறைந்து வரும் நிலையில் முசுட்டை, முசுமுசுக்கை போன்ற பல மூலிகைகளின் சிறப்புகளும், அவைபோக்கும் நோய்களும் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

முட்டு என்னும் சொல்லின் கூட்டுச் சொற்களிடையே காணப்படும் சிறு சிறு வேறுபாடுகள் சுட்டிக்காட்டப்படுவது செந்தமிழுக்குச் சிறப்புச் சேர்ப்பதாகும். முட்டுக்கால், முட்டுக்கொடுத்தல், முட்டுச்சட்டம், முட்டுச்சுவர் முதலிய தொடர்ச் சொற்கள். தாங்கல் கொடுத்தலையும்; *முட்டுக்கட்டை, முட்டுத்தொய்வு (மூச்சு விடமுடியாமை), முட்டுப்பாடு* முதலிய தொடர்ச் சொற்கள் தடைபண்ணுதலையும்; *முட்டுமுடுகு, முட்டிடை* முதலிய சொற்கள் வழியிடுக்கத்தையும்; *முட்டுச் சீலை, முட்டுப் பட்டினி, முட்டுப்பாந்தை* முதலிய தொடர்ச் சொற்கள் தீட்டுப்பாட்டையும் விளக்கமாக காட்டுவது தமிழுக்குச் சிறப்புச் சேர்ப்பதுவாகும். தலைப்புச் சொல்லின் விளக்கத்திற்கு அரணாக இலக்கியங்களிலிருந்து மேற்கோள்களும் இணைக்கப்பட்டுள்ளன.

கழகப் புலவர்களின் பெயர்கள் கூடியவரை கிடைத்த தரவுகளின் அடிப்படையில் தொகுக்கப்பட்டுள்ளன. சிலரின் இயற்பெயர்கள் தெரியாததால் அவர்கள் பாடிய பாடல்களில் காணப்படும் சிறப்பான தொடராட்சிகளையே பெயராகக் கையாண்டனர். இத்தொகுதியில் இவ்வாறு சிறப்புப் பெயர் பெற்ற புலவர்களின் பெயரும் பெயர்க் கரணியமும் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

மின்மானி, மின்மாற்றி, மின் விசிறி, மின் வாங்கி போன்ற நடைமுறையிலுள்ள புதிய அறிவியற் கருவிகளின் பெயர்களும் படங்களும் இம்மடலத்தில் இடம்பெற்றுள்ளன.

முகம் – என்ற சொல் (பக்.109) தமிழா? வடமொழியா? என்ற ஐயம் அறிஞர் பெருமக்களிடம் காணும் குழப்பமாகும். இக்குழப்பத்திற்கு இப்பகுதியில் விளக்கம் காணப்படுகிறது. இச்சொல் தூய தமிழ்ச் சொல்லே என்பதற்குத் தகுந்த வேர் விளக்கம் சான்றுகளுடன் கூறப்படுகிறது. மேலும் *மிழலை நாடு (பக்.29), முக்குற்றம் (பக்.90), முகத்தலளவை (பக்.102), முத்திரை (பக்.207)* போன்ற சொற்களுக்கு வரலாற்று முறையில், வேர்ச்சொல் விளக்கங்கள் கூறப்படுகின்றன. இனச்சொற்களாகத் திரவிட மொழிகளில் காணும் வடிவங்களும் மேலை ஆரிய மொழிகளில் காணும் வடிவங்களும் எடுத்துக் காட்டப்படுகின்றன (முட்டு[3] பக்.154).

தமிழ் வளர்ச்சிக்குப பல்லாற்றானும் ஊக்கம் அளித்து வரும் நம் ***மாண்புமிகு முதலமைச்சர்*** அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பகுதியை உருவாக்குவதில் உறுதுணையாக நின்ற பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள், பகுதிப் பொறுப்பாளர், தொகுப்பாளர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் மனமார்ந்த நன்றி.

7/3/[illegible]

**து. இராசேந்திரன்**

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# மி

**மி** *mi*, மகர மெய்யும் (ம்) இகர உயிரும் (இ) சேர்ந்து பிறந்த கூட்டெழுத்து; the compound of 'ம்' and 'இ'.

*[ம் + இ – மி.]*

இவ்வெழுத்து கி.மு.3ஆம் நூற்றாண்டு தொடங்கி இன்றுவரை அடைந்துள்ள மாற்றங்கள்.

கி.மு.3–ஆம் நூற்றாண்டுக் குகைக் கல்வெட்டுகளில் என்பது போன்றும் கி.பி.5ஆம் நூற்றாண்டில் என்பது போன்றும் கி.பி.7ஆம் நூற்றாண்டில் என்பது போன்றும் கி.பி.8ஆம் நூற்றாண்டில் என்பது போன்றும் கி.பி.12ஆம் நூற்றாண்டில் என்பது போன்றும் கி.பி.17ஆம் நூற்றாண்டு முதல் மி என்றும் வழங்கி வருகிறது.

**மிக்க**[1] *mikka,* கு.பெ.எ.(adj.) 1. மிகுந்த; great much. *"மிக்க பெரும்புகழ் மாவலி" (திவ். பெரியாழ்.1.8:7). "குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளல்" (குறள், 504).* 2. உயர்ந்த; excellent, superior. *"மிக்க வேதியர்" (திவ். கண்ணிநுண்.9). "மாலைநீ தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள் ஆர்ப்ப" (கலித்.118:17).*

க. மிக்க

*[மிகு →மிக்க.]*

**மிக்க**[2] *mikka,* வி.அ.(adv.) மிக; very. *நீ கூறியது மிக்க சரி.*

*[மிகு →மிக்க.]*

**மிக்ககுளிர்ந்தநிலம்** *mikka-kuḷirnda-nilam,* பெ.(n.) மிகவும் குளிர்ச்சியான நிலம்; a kind of chilled land.

*[மிக்க + குளிர்ந்த + நிலம்.]*

ஆசியாவின் நிலப்பிரிவில் (கண்டம்) உள்ள சைபீரிய நாட்டின் வடபகுதியில் இருக்கும் (வர்க்கோயான்ஸ்பர்க்) இடம்; எல்லாப் பகுதிகளைக் காட்டிலும் குளிர்ச்சி மிகுந்த நிலம் (அபி.சிந்.).

**மிக்ககுளிர்வாதம்** *mikka-kuḷir-vādam,* பெ.(n.) உடம்பு வியர்த்துக் குளிர்க் காய்ச்சலுடன் தாகமுண்டாகி, பசியற்று சோர்வையுண்டாக்கும் ஒருவகை நோய்; a disease marked by fever, excessive perspiration, thirst, chillness etc. *அவன் பாட்டி மிக்க குளிர்வாதத்தினால் துன்பப்படுகின்றார்.*

*[மிக்க + குளிர் + **Skt.** வாதம்.]*

**மிக்கசெயல்** *mikka-šeyal,* பெ.(n.) 1. அளவிறந்த ஆற்றல்; extraordinary power. 2. பெருந்தன்மை; magnanim y.

*[மிக்க + செயல்.]*

**மிக்கதண்ணீர்வேட்கை** *mikka-taṇṇīr-vēṭkai,* பெ.(n.) மிகுதியான தண்ணீர்த் தாகம்; excessive thirst. *மிக்க தண்ணீர் வேட்கை மாடுகளுக்கு இருந்த போதிலும் கூவம் ஆற்றில் ஓடும் அழுக்கு நீரைக் குடிக்காது.*

*[மிக்க + தண்ணீர் + வேட்கை.]*

**மிக்கது** *mikkadu,* பெ.(n.) 1. மிகுதியா யிருப்பது; that which is abundant or excessive. 2. சிறந்தது; that which is excellent. *"அதன்கணின்று மீடல் மிக்கது"*

*(இறை.3, பக்.44).* **3.** ஒன்றின் மேம்பட்டது; that which is superior. **4.** எஞ்சியது; that which remains, as of food after a meal. **5.** மீறுகை (அதிக்கிரமச் செய்கை); that which oversteps the limits, excess; transgression. *"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம் தகுதியான் வென்று விடல்" (குறள், 158).* **6.** வேறானது; that which is different. *"ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்" (திருமந். 1467).* **7.** முறையற்றது (சது.); that which is unjust.

க. மிக்கது; தெ. மிகடா.

*[மிகு →மிக்கது.]*

**மிக்கபெயல்** *mikka-peyal,* பெ.(n.) மிகு பெயல் (குறள், 732, உரை) பார்க்க; see *migu-peyal.*

*[மிக்க + பெயல்.]*

**மிக்கவர்** *mikkavar,* பெ.(n.) **1.** மிக்கார், 1 பார்க்க; see *mikkār.* **2.** பார்ப்பனன் (திவா.); Brahmins.

*[மிகு →மிக்க →மிக்கவர்.]*

**மிக்கவை** *mikkavai,* பெ.(n.) **1.** அடிசில் (அக.நி.), சோறு; cooked rice. **2.** ஊன் (அக.நி.); meat. **3.** நிறைகை; being full; abundance.

க. மிக்கவு.

*[மிகு →மிக்க →மிக்கவை.]*

**மிக்கார்** *mikkār,* பெ.(n.) **1.** பெரியோர்; great persons. *"மிக்கா ராரடியானென்னின்" (திருவாச.6:48). "கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற மிக்காருள் மிக்க கொளல்" (குறள், 724).* **3.** மிக்கோர் பார்க்க; see *mikkōr.* **4.** பெரும்பாலோர்; majority of persons, most people. *"மிக்கீரு நொந்தீர்கள் போலும்" (கந்தபு. சிங்கமு.374).* **5.** தீமை செய்பவர்; evil-doers. *"மிக்கார்க் குதவார் விழுமியோர்" (நன்னெறி.36).* **6.** பகைவர் (திவா.); foes, enemies.

*[மிகு →மிக்க →மிக்கார்.]*

**மிக்கான்** *mikkāṉ,* பெ.(n.) மிக்கார் பார்க்க; see *mikkār.*

*[மிக்கார் →மிக்கான்.]*

**மிக்கிது** *mikkidu,* வி.எ.(adv.) மிகுதியான பொருளை, இதனில் மிக்கதை; that which is too much. *'மாவின் போகத்தில், ஸ்ரீ கோயிலில் கணபதியார்க்கு அமுது செய்வதாகவும், மிக்கிது கொண்டு சித்திரை உத்திரத்திந் நான்று அமுது செய்வதாகவும்' (செந்தலைக் கல்வெட்டு. கல்வெட்டு அறிக்கை எண்.7/1899) (கல்.அக.)*

**மிக்கிளமை** *mikkiḷamai,* பெ.(n.) மிகுந்த கட்டிளமை (வின்.); extreme youth.

*[மிகு → மிக்கு + இளமை.]*

**மிக்கு**[1] *mikku,* பெ.(n.) கரும்பு; sugarcane - *Saccharam officinarum* (சா.அக.).

*[மிகு → மிக்கு. இனிப்புச் சுவை மிகுந்தது.]*

**மிக்கு**[2] *mikku,* கு.வி.எ.(adv.) மிக பார்க்க; see *miga.* *"அச்ச மிக்குற்றுழியும்" (சி.போ. பா.6:1/ பக்.120).*

தெ. மிக்கிலி; க. மிக்கு.

*[மிகு → மிக்கு.]*

**மிக்குண்டம்** *mikkuṇḍam,* பெ.(n.) மிகுண்டம் பார்க்க; see *miguṇḍam* (சா.அக.).

**மிக்கோர்** *mikkōr,* பெ.(n.) அறிஞர்; அறிவுடையோர்; பெரியோர் (திவா.); wise person. *"மிக்கோ ருறையும் விழுப்பெருஞ் செல்வத்து" (மணிமே.22:105).*

*[மிகு →மிக்கு →மிக்கோர்.]*

**மிக்கோன்** *mikkōṉ,* பெ.(n.) பெரியோன்; great person. *"மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாக" (நள.கலிநீங்கு.71). "மிக்கோன் கூறிய மெய்ம்மொழி ஓம்பி" (சிலப்.15:174). "மிக்கோன் பாதம் விழுந்தனர் இரப்ப" (மணிமே.12:74).*

*[மிகு →மிக்கு →மிக்கோன்.]*

**மிக**[1] *miga,* கு.வி.எ.(adv.) மிகவும்; very much; abundently. *"மிகத்தாம் வருந்தியிருப்பரே" (நாலடி, 31). "அரும்பே முன்னும் மிகச் சிவந்தனவே" (குறுந்.94:2). "உகந்தவை மொழியவு மொல்லான் மிகக் கலுழ்ந்து" (நெடுநல்.156).*

*[மிகு → மிக..]*

**மிக**[2] *miga,* கு.வி.எ.(adv.) 1. தன்மையின் மிகுதியைக் காட்டுவதற்கும் ஒன்றிற்கு அழுத்தம் தந்து கூறுவதற்கும் பயன்படுத்தப் படுவது; used to indicate the highest degree of that which it qualifies or to intensify something which qualities. *அவர் மிக நல்லவர். நீ கூறியது மிகச்சரி.* 2. அடைக்கு அடையாக வரும்போது மிகுதியைக் காட்டுவது; when it precedes an attribute used to indicate the enormity or immensity of something. *மிகப் பெரிய பொறுப்பு.*

*[மிகு → மிக.]*

**மிகச்சடைச்சி** *miga-c-caḍaicci,* பெ.(n.) வாய்க்காற் சடைச்சி; a pith plant found grown on the sides of canals, *Aeschynomene Palurose* (சா.அக.).

**மிகப்படச்சொல்லல்** *miga-p-paḍa-c-collal,* பெ.(n.) மிகைப்படக்கூறல் (யாழ்.அக.) பார்க்க; see *migai-p-paḍa-k-kūṟal.*

*[மிகை+படு+சொல்லல்–மிகைப்படுசொல்லல் →மிகப்படச்சொல்லல் (உ.வ.).]*

**மிகல்** *migal,* பெ.(n.) 1. மிகுகை; being plentiful or abundant. 2. பெருமை; greatness. *"வேத்தவை காவார் மிகன் மக்கள்" (நீதிநெறி.26). "இகலதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே மிகலூக்கும் தன்மை யவர்" (குறள், 855). "வருதார் தாங்கி யமர் மிகல் யாவது" (புறநா.62.1). "மேனிலை மிகலிகலின் மிடைகழி பிழிவு மேற்சென்று" (கலித்.104:32).* 3. வெற்றி; victory. *"மிகன் மேவன் மெய்ப் பொருள் காணார்" (குறள், 857).* 4. மிகற்கை பார்க்க; see *migaṟkai. "வல்லெழுத்து மிகலே" (தொல்.எழுத்து.412).*

க. மிகில்; தெ. மிக்கிலி.

**Goth.** mikilis; **Icel.** mjok; **A.S.**micel, **O.E.** Michel, muchel; **E.**much.

*[மிகு →மிகல்.]*

**மிகவல்லோர்** *miga-vallōr,* பெ.(n.) 1. அதி வீரர்; warrior. 2. அறிஞர்; wisemen.

*[மிகு → மிக + வல்லோர்.]*

**மிகவு** *migavu,* பெ.(n.) மிகுதி, 1 பார்க்க; see *migudi,* 1. *'தன்வலி மிகவின்கண்' (குறள், 471, உரை).*

*[மிகு →மிக →மிகவு.]*

**மிகவும்** *migavum,* வி.அ.(adv.) மிக பார்க்க; see *miga.*

*[மிக → மிகவும்.]*

**மிகற்கை** *migaṟkai,*பெ.(n.) வல்லின எழுத்து இரட்டிக்கை; doubling, as of hard consonant. *"இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்" (தொல்.எழுத்து.157).*

*[மிகல் → மிகற்கை.]*

**மிகன்மக்கள்** *migaṉ-makkaḷ,* பெ.(n.) பெருமையிற் சிறந்தோர்; great man.

*[மிகன் + மக்கள்.]*

**மிகனித்தபம்** *migaṉi-t-tabam,* பெ.(n.) மூத்திரக் குழலில் எற்படும் அழற்சி; inflammation of the urinary passage, *Uretheritis* (சா.அக.).

**மிகாவண்ணம்** *migāvaṇṇam,* பெ.(n.) தேரையர் செய்த தமிழ் மருத்துவ (வைத்திய) நூல்; a medical treatise in Tamil by Theraiyar (சா.அக.)

**மிகு[1]–தல்** *migu,* **21** செ.கு.வி.(v.i.) 1. அதிகமாதல்; to exceed, surpass; to be in excess. *"முந்திரிமேற் காணி மிகுவதேல்" (நாலடி, 346). "செருமிகு சினவேந்தன் சிவந்திறுத்த புலம் போல" (கலித்.13:1).* 2. பெருகுதல்; to grow, increase. *"காப்பு மிகின்" (இறை.16).* 3. பொங்குதல் (பிங்.); to swell. 4. எழுத்து இரட்டித்தல்; to be doubled, as a letter. *"மெல்லெழுத்து மிகினும்" (தொல்.எழுத்து.341). இகர ஈற்று வினையெச்சத்தின் பின் ஒற்று மிகும்.* 5. நெருங்குதல்; to crowd. *"தலைத்தலை மிகூஉம்" (பரிபா.16:14).* 6. சிறத்தல்; to be great, to be excellent. *"அதன்க ணின்று மீடல் மிக்கது" (இறை.3 பக்.44).* 7. ஒன்றின் மேம்படுதல்; to be superior. 8. எஞ்சுதல்; to remain; to be left over; to be super fluous. 9. செருக்குறுதல்; to be self-conceited arrogant. *"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம் தகுதியான் வென்று விடல்" (குறள், 158).* 10. தீமையாதல்; to be evil. *"மிக்கவை செய்தாரை" (குறள்.158).*

க. மிகுற்; தெ. மிகுலு.

*[மீ→மிகு→மிகு–தல் (சு.வி..)]*

**மிகு[2]–த்தல்** *migu-,***18** செ.குன்றாவி.(v.t.) 1. அதிகப்படுத்துதல்; to augment, make large. *"பீலிபெய் சாகாடும் அச்சுஇறும் அப்பண்டம் சாலமிகுத்துப் பெயின்" (குறள், 475).* 2. விஞ்சுதல்; to excel, surpass. 3. பெருக்குதல்; to increase. 4. பெருமையாகக் கருதுதல்; to regard with pride. *'இவ்வாறு செய்தேமென்று தன்னை மிகுத்ததுவும்' (புறநா.77, உரை).* 5. மிகுத்து–தல் பார்க்க; see *miguttu-.*

க. மிகிசு.

*[மீ →மிகு→ மிகு–த்தல்.]*

**மிகு[3]** *migu,*இடை.(part.) நிறைந்த; full of; ful. *வண்ணமிகு படை அணிவகுப்பு. அருள் மிகு தெய்வம்.*

*[மீ → மிகு.]*

**மிகு[4]** *migu,*கு.பெ.எ.(adj.) பெரிய; great. *மிகு உயரமான ஆள்.*

*[மீ →மிகு.]*

**மிகு[5]** *migu,*இடை.(part.) ஓர் உவம உருபு; a word of comparison. *"மிகுதலுங் குறைதலும் தாழ்தலும் பான்மாறு படுதலும் பாகுபாடுடைய" (தண்டி.34).*

*[மீ → மிகு.]*

**மிகுக்கு–தல்** *migukku-*,18 செ.குன்றாவி. (v.t.) மிகு–த்தல் பார்க்க; see *migu-*.

*[மிகு →மிகுக்கு→மிகுக்கு–தல்.]*

**மிகுகடும்பத்தியம்** *migu-kaḍum-pattiyam,* பெ.(n.) உப்பு, புளி காரமில்லாமல் வெந்நீர் மட்டும் சோற்றுடன் கலந்து உண்ணுகை; very strict diet without salt, tamarind and chilly.

*[மிக + கடும் + **Skt.** பத்தியம்.]*

**மிகுகளிப்பு** *migu-kaḷippu,* பெ.(n.) பெரு மகிழ்ச்சி; pleasure, great pleasure.

*[மிகு + களிப்பு. களிப்பு = மகிழ்ச்சி.]*

**மிகுகொடையாளன்** *migu-koḍai-y-āḷaṉ,* பெ.(n.) 1. கொடையிற் சிறந்தவன் (பிங்.); great in bounty. 2. கன்னன் (கர்னன்); *kaṉṉaṉ.*

*[மிகு[1] + கொடையாளன்.]*

**மிகுண்டம்** *miguṇḍam,* பெ.(n.) சாரணை (சங்.அக.); a pungent medicinal creeper - *Trianthema mongyna.*

**மிகுண்டாகிதம்** *miguṇḍāgidam,* பெ.(n.) பெரும் பூனைக்காலி; a climbing plant used in medicine (சா.அக.).

**மிகுத்தம்** *miguttam,* பெ.(n.) மிகுதி (வின்.); abundance.

*[மிகு → மிகுத்தம்.]*

**மிகுத்திகம்** *miguttigam,* பெ.(n.) வில்வம் (மூ.அ.); bael tree - *Aegle marmelos.*

**மிகுத்தியல்[1]** *miguttiyal,* பெ.(n.) மிகுத்திகம் பார்க்க; see *miguttigam.*

**மிகுத்தியல்[2]** *miguttiyal,* பெ.(n.) பெரிய மாவிலிங்க வகை (L.); a species of garlic pear.

**மிகுத்து–தல்** *miguttu-*,5 செ.குன்றாவி. (v.t.) மிச்சப்படுத்துதல்; to save, spare; to leave over.

*[மிகு[1] →மிகுத்து →மிகுத்து–தல்.]*

**மிகுத்துச்சொல்லல்** *miguttu-c-collal,* பெ.(n.) 1. மிகைபடுத்திக் கூறுகை; making emphatic mention. 2. புகழ்ந்து கூறுகை (யாழ்.அக.); prise, appreciation.

*[மிகுத்து + சொல்லல்.]*

**மிகுதம்** *migudam,* பெ.(n.) மிகுதி (வின்.); abundance; profusion; redundance.

*[மிகு[1] →மிகுதம்.]*

**மிகுதி** *migudi,* பெ.(n.) 1. அதிகம்; much, abundance. *"மிகுதிகண் டன்றோ விலனே நீநின் பல்பொருள் வேட்கையிற் சொல்வரை நீவி" (அகநா.379:16, 17). இந்தப் பகுதியில் துணி நெய்வதைத் தொழிலாகக் கொண்ட மக்கள் மிகுதி. வலி மிகுதியால் துடித்தாள். எப்போதும் கணக்கில் மட்டும் மிகுதியான மதிப்பெண்கள் வாங்கி விடுவான்.* 2. மிகற்கை (தொல்.எழுத்து.411) பார்க்க; see *migaṟkai.* 3. நிறைவு (வின்.); fulness, satiety. 4. திரள் (வின்.); crowd. 5. பொலிவு (வின்.); increase. 6. மீதி; excess, remainder, surplus. 7. ஒண்மை (திவா.); excellence. 8. செருக்கு; arrogance. *"மிகுதியான் மிக்கவை செய்தாரை" (குறள், 158).*

*[மிகு → மிகுதி.]*

**மிகுதிக்குறை** *migudi-k-kuṟai,* பெ.(n.) ஏறத்தாழ நிலத்தை நேரில் அளந்து கணக்கிட்டு எழுதும்போது இவ்வாறு குறித்தல் ஆவண வழக்காகும்; a

measurement of land unite more or less as on script. *"இன்னான்கெல்லையிலும் உட்பட்ட கருத்தளவில் மிகுதிக் குறை உள்ளடங்க ஊர்க்கொல்லையும்" (சிதம்பரம் கல்வெட்டு.தெ. கல்.தொ.12, கல்.171) (கல்.அக.).*

*[மிகுதி + குறை.]*

மிகுதிக்குறைமை *migudi-k-kuraimai,* பெ.(n.) மிகுவதும் குறைவதும்; excess or deficiency. *"மிகுதிக் குறைமையும்" (தெ.இ. கல்.2:425).*

*[மிகுதி + குறைமை. குறைவு →குறைமை.]*

மிகுதிச்சொல் *migudi-c-col,* பெ.(n.) வரம்பு கடந்த சொல்; vaunt, boast. *"விழுமியோ ரெக்காலுஞ் சொல்லார்" (நாலடி, 346).*

*[மிகுதி + சொல்.]*

மிகுதியாய் *migudi-y-āy,* கு.வி.எ.(adv.) மிகுதியும் பார்க்க; see *migudi-y-um.*

*[மிகுதி → மிகுதியாய்.]*

மிகுதியும் *migudi-y-um,* கு.வி.எ.( n.) 1. மிகவும் (வின்.); greatly, exceedingly. 2. பெரும்பாலும் (உ.வ.); usually, generally.

*[மிகுதி →மிகுதியும்.]*

மிகுந்த *migunda,* பெ.எ.(adj.) 1. அதிக அளவிலான, அதிக நிறைவான; used to express the excess of something, extreme, much. *தலைவர் மிகுந்த சினங்கொண்டு பேசினார். அவர் அறிவில் மிகுந்தவர். பசி மிகுந்து காணப்பட்டார். உதவிக்கு மிகுந்த நன்றி. "மிகுந்தும் குறைந்தும் நோய் செய்யும்" (பழ.). "வண்ணம் மிகுந்த அண்ணல் யானை" (நற்.273:6).* 2. மிச்சமான; remaining. *மிகுந்த பொருளை என்ன செய்வது? (உ.வ.).*

மறுவ. மீந்த.

*[மிகு → மிகுந்த.]*

மிகுந்தபண்டம் *migunda-paṇḍam,* பெ.(n.) 1. எஞ்சிய பண்டம்; remaining substance after using. 2. அதிகமான பொருள்; excessive substance (சா.அக.).

*[மிகு → மிகுந்த + பண்டம்.]*

மிகுந்தவணம் *migunda-vaṇam,* பெ.(n.) தண்ணீர் விட்டான் கொடி (மலை.); thorny claimber, water root-*Asparagusracemosa* (சா.அக.).

*[மிகுந்த + வணம்.]*

மிகுந்திகா *migundigā,* பெ.(n.) பெரு மூங்கில்; large bamboo (சா.அக.).

*[மிகு →மிகுந்திகா = நீளம் மிகுந்த மூங்கில்.]*

மிகுந்திகி *migundigi,* பெ.(n.) மிகுந்த வணம் பார்க்க; see *migundavaṇam* (சா.அக.).

மிகுப்பலத்தம் *migu-p-palattam,* பெ.(n.) காற்றோட்டி என்னும் செடிவகை (மலை.); Ceylon caper-*Capparis Zeylanica.*

மிகுபத்தம் *migu-pattam,* பெ.(n.) பொன்னாவிரை; tanners cassia - *Cassia auriculata* (சா.அக.).

மிகுபத்தரி *migu-pattari,* பெ.(n.) காற்றோட்டி என்னும் கொடி வகை; thorny caper-*Capparis horrida* (சா.அக.).

மிகுபலம் *migu-palam,* பெ.(n.) கோதுமை; wheat-*Triticum vulgare* (சா.அக.).

**மிகுபலவந்தம்** *migu-palavandam,* பெ.(n.) ஆதொண்டை; a thorny shrub, thorny caper, - *Capparis horrida alias C.zeylanica* (சா.அக.).

**மிகுபித்தர்** *migu-pittar,* பெ.(n.) பூனைக்காஞ் சொறி; small climbing nettle (சா.அக.).

**மிகுபெயல்** *migu-peyal,* பெ.(n.) மிகுமழை பார்க்க; see *migu-maḻai.*

*[மிகு + பெயல். பெயல் = மழை.]*

**மிகுமணம்** *migu-maṇam,* பெ.(n.) விரிந்த பூ; blossomed flower. *உலகம் சிரித்தது என்ற தொடரில் உலகம் என்பது அதில் வாழும் மக்களைக் குறித்தது போல, இங்கு மிகுந்த மணம் என்பது, மணமுடைய மலரைக் குறித்தது எனலாம் (சா.அக.).*

*[மிகு + மணம்.]*

**மிகுமழை** *migu-maḻai,* பெ.(n.) அதிக மழை (சூடா.); excessive rains.

*[மிகு + மழை.]*

**மிகுமின்கடத்தி** *migu-miṉ-kaḍatti,* பெ.(n.) மிகக் குறைந்த வெப்ப நிலையில் மின்சாரத்தைத்தடை இல்லாமல் கடத்தும் பொருள்; super conductor.

*[மிகு + மின் + கடத்தி.]*

**மிகுவெறி** *migu-veṟi,* பெ.(n.) பெருங் கிறுக்கு, கோட்டி (பைத்தியம்); great lunacy. *அவன் மிகுவெறி கொண்டவன்; அவனிடத்தில் பார்த்து பேசு (சா.அக.).*

*[மிகு + வெறி. வெறி = கிறுக்கு, கோட்டி.]*

**மிகை[1]** *migai,* பெ.(n.) 1. மிகுதி; abundance, excess. *"குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளல்" (குறள், 504).* 2. சிறந்த பொருள்; excellent thing. *"மிகையிரண்டுள" (இரகு.நகரப்.5).* 3. மேன்மை; excellence. *"காரியங்கள் மிகை படர்ந்து" (விநாயகபு.நைமி.25).* 4. பெருமை; greatness. *"மிகை மக்களால்" (நாலடி, 163).* 5. தேவையற்றது; that which is unnecessary, superfluous. *"யான் மிகையோ" (கம்பரா. ஆரணிய. சூர்ப்.139).* 6. வேண்டு மளவின் மிக்கதென்னுங் குற்றம்; superfluity; redundancy, a defect in argumentation. *"முதற் கடவு ளொருவனே யமையுமாகலின் வேறும் அத்தன்மைய ருண்டெனின் மிகையென்னுங் குற்றமாம்" (சி.போ.பா.1:3, பக்.52, சுவாமிநா.).* 7. மிஞ்சு பொருள் (உரி.நி.); that which remains or is left over, remainder. 8. அதிகப்படியானது; extra. *"மிகைக்கை காணாது" (பெருங். உஞ்சைக். 43:149). "உழைக்கோர் புள்ளி மிகையன்று" (திவ்.பெரியாழ்.5, 1, 2). மிகைப்படச் சொல்லேல் (பழ.).* 9. செருக்கு; arrogance. *"மிகை நடுக்கெனா" (தொல். பொருள்.260).* 10. தீச்செயல்; evil deed. *"மிகை பல செய்தேன்" (தேவா.1115, 6).* 11. தவறு; fault, defect, error. *"மிகை சீறுபு" (சீவக.281).* 12. தண்டனை; punishment. *"தந்தை யின்ன மென்ன மிகை செய்யினும்" (பிரபோத.4:18).* 13. துன்பம் செய்கை (அக.நி.); troubling, torturing. 14. வருத்தம் (அ.க.); pain. 15. துன்பம் (யாழ்.அக.); sorrow, affliction. 16. கேடு (வின்.); destruction. 17. உண்மையில் இருப்பதைக் காட்டிலும் அதிகப்படுத்தப் பட்டது, ஒவ்வாத முறையில் அதிகப்படுத்தப் பட்டது; exaggeration, to excess, too much, that which is over

done. *அவர் எழுத்தாளருக்கெல்லாம் எழுத்தாளர் என்றால் அது சற்றும் மிகை இல்லை. அந்த குணச்சித்திர நடிகரின் மிகையான நடிப்பு எரிச்சலைத்தான் கிளப்பியது. கற்றோர் தன்னைத்தானே மிகைப்படுத்திப் பேசுதல் கல்வி கற்றதற்கு அழகல்ல.*

க. மிகெ.

*[மிகு → மிகை.]*

**மிகை[2]–த்தல்** *migai-*, 4 செ.கு.வி.(v.i.) 1. அதிகமாதல்; to increase, swell. 2. செருக்குறுதல்; to be proud. *'மிகைத்துச் செல்லும் படை' (புறநா.71, உரை).*

*[மிகு → மிகை.]*

**மிகைசொல்(லு)–தல்** *migai-col-*, 13 செ.கு.வி.(v.i.) பொய்க்குற்றஞ்சாட்டுதல் (வின்.); to bring a false accusation.

*[மிகைக + சொல்(லு)–தல்.]*

**மிகைபடக்கூறல்** *migai-paḍa-k-kūṟal*, பெ.(n.) நூற்குற்றம் பத்தனுள் வேண்டுமளவின் மிக்கதைக் கூறுங் குற்றம் (நன்.12); redundancy, a defect in literary composition, one of ten *nūṟ-kuṟṟam.*

*[மிகைபடு + கூறல் – மிகைபடுகூறல் → மிகைபடக்கூறல்]*

*'குன்றக் கூறன் மிகைபடக் கூறல்*
*கூறியது கூறன் மாறுகொளக் கூறல்*
*வழூஉச்சொற் புணர்த்தல் மயக்க வைத்தல்*
*வெற்றெனத் தொடுத்தல் மற்றொன்று விரித்தல்*
*சென்று தேய்ந் திறுத னின்றுபய னின்மை*
*என்றிவை யீரைங் குற்ற நூற்கே' (நன்.12).*

**மிகைபடு–தல்** *migai-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. அதிகப்படுதல்; to increase; to be excessive. 2. குற்றத்திற்கு உள்ளாதல் (யாழ்.அக.); to be at fault.

*[மிகை + படு–தல்.]*

**மிகைபோடு–தல்** *migai-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) மிகைசொல்(லு)–தல் பார்க்க; see *migai-col-.*

*[மிகை + போடு–தல்.]*

**மிகைமொழி** *migai-moḻi*, பெ.(n.) உயர்வு நவிற்சியணி (பிங்.); hyperbole.

*[மிகை + மொழி.]*

**மிகையுவமை** *migai-uvamai*, பெ.(n.) உவமானம் உவமேயம் இரண்டிற்கும் அடிப்படை வேறு என்பதன்றி வேற்றுமை யில்லையென்னும் உவமையணி (வீரசோ. அலங்.14, உரை); a simile which states that there is no difference between *uvamāṉam* and *uvamēyam* except in their *loci.*

*[மிகை + உவமை.]*

உவமையின் வகைகள்: 1. புகழ்ச்சி உவமை; 2. பழிப்புவமை; 3. விரோத உவமை; 4. கருத்துவமை; 5. இசையுவமை; 6. உண்மை உவமை; 7. ஐயவுவமை; 8. இகழ்ச்சியுவமை; 9. எதிர்ப்பொருளுவமை; 10. அற்புதவுவமை; 11. நோக்குவமை; 12. இதரே தரவுவமை; 13. மிகையுவமை; 14. பண்புவமை; 15. உயர்வுவமை; 16. நியமவுவமை; 17. அநியமவுவமை; 18. தடை யுவமை; 19. தெற்றுவமை; 20. சிலேடை உவமை; 21. துணிவுவமை; 22. உம்மையுவமை; 23. பொருளுவமை; 24. ஒப்புவமை; 25. கூட்டவுவமை; 26. அபூதவுவமை; 27. வாக்கியப் பொருளுவமை; 28. கோவையுவமை; 29. காரணவுவமை;

30. மயக்க வுவமை; 31. பலவியலுவமை; 32.விக்கிரியவுவமை; 33. சந்தானவுவமை (வீரசோ. அலங்.14).

மிகையுவமைக்கு எடுத்துக்காட்டு: *"நின்முகங் கண்டதுவு நின்கண்ணே திங்களையும் விண்மிசையே கண்டதுவு மிக்கு"* இது மிகையுவமை.

*"இவ்வயிற் கண்டது பொருளையும் பொருவையு மிவ்வயிற் கண்டதென் பதுமிகையுவமை"* எனக் கொள்க.

இவ்வுவமையைத் தண்டியாசிரியர் அதிசய வுவமை என்று சொல்லுவர் (வீரசோ.அலங்.14) தண்டியலங்காரம் கூறும் உவமை வகைகள்:

1. விரியுவமை; 2. தொகையுவமை, 3. இதரவிதரவுவமை; 4. சமுச்சயவுவமை; 5. உண்மையுவமை; 6. மறுபொருளுவமை; 7. புகழுவமை; 8. நிந்தையுவமை; 9. நியமவுவமை; 10. அநியம வுவமை; 11. ஐயவுவமை; 12. தெரிதருதேற்ற வுவமை; 13. இன்சொல்லுவமை; 14. விபரீத வுவமை; 15. இயம்புதல் வேட்கை யுவமை; 16. பலபொருளுவமை; 17. விகார வுவமை; 18. மோலக வுவமை; 19. அபூத வுவமை; 20. பலவயிற்போலி யுவமை; 21. ஒருவயிற்போலி யுவமை; 22. கூடாவுவமை; 23. பொது நீங்குவமை; 24. மாலையுவமை (தண்டி.32).

இவ்வுவமை அணி மேலும் அற்புதம், சிலேடை, அதிசயம், விரோதம், ஒப்புமைக் கூட்டம், தற்குறிப்பேற்றம், விலக்கு, ஏது என்னும் எட்டு அணிகளோடும் சேர்ந்து வரும் (தண்டி.33).

**மிச்சகம்** *miccagam,*பெ.(n.) எலுமிச்சை; lime fruit (சா.அக.).

**மிச்சங்காய்** *miccangāy,* பெ.(n.) எலுமிச்சங்காய்; lime fruit (சா.அக.).

**மிச்சஞ்சொச்சம்** *miccañ-joccam,*பெ.(n.) மீதி (வின்.); anything left over, that which can be spared. *"மிச்சஞ் சொச்சம் வைக்காமல் உண்டு விட்டான்".*

*[மிச்சம் + சொச்சம் (மரபுத் தொடர்).]*

**மிச்சப்படுத்து-தல்** *micca-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) செலவாவதைத் தவிர்த்தல், சேமித்தல்; to save. *குளிர் காலத்தில் குறைந்த விலையில் மின் விசிறி வாங்கிப் பணத்தை மிச்சப்படுத்தலாம். எங்கள் குறிப்பைப் பின்பற்றினால் எரிபொருளை மிச்சப்படுத்தலாம். ஒரு சிறந்த பெண்ணானவள் தன் கணவனின் மாத ஊதியத்தில் ஒரு பங்கை மிச்சப்படுத்தி குடும்பம் நடத்துவாள். காக்கையானது தான் உண்ணும் உணவில் ஒரு பகுதியை மிச்சப்படுத்தித் தன் குஞ்சுக்கு ஊட்டும்.*

*[மிச்சம் + படுத்து-தல்.]*

**மிச்சம்**[1] *miccam,*பெ.(n.) 1. செலவழித்தது, எடுத்தது, கழித்தது போக தங்கியிருப்பது; மீதி; what is left over. *காய்கறி வாங்கியபின் இரண்டு ரூபாய் தான் கையில் மிச்சம் இருந்தது. சாப்பாட்டுத் தட்டில் உள்ள உணவு வகைகளில் எதையும் மிச்சம் வைக்காமல் சாப்பிடு.* 2. ஒரு முழுவேலையில் கொஞ்சம் செய்யப்படாமல் இருக்கும் எஞ்சிய வேலை; remainder. *இந்த வேலையை இதோடு நிறுத்திக் கொண்டு மிச்சத்தை நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம். படத்தில் மிச்சத்தையும் வரைந்து முடி.* 3. ஒரு செயலுக்கு எதிர்பார்ப்பது ஒன்றாகவும் கிடைப்பது வேறொன்றாகவும் இருப்பதைச் சுட்டிக் காட்டுவது, ஒட்டு மொத்தமாகக் கடைசியில் கிடைத்த பயன்; all that remains. *சந்து (சமாதானம்) செய்யப் போய்*

*நான் அடி வாங்கியதுதான் மிச்சம். பணத்துக்காக அலைந்ததுதான் மிச்சம்.* 4. அதிகம்; excess. *அவன் மிச்சமாய் எடுத்துக்கொணடான்.*

ம. மிச்சம்

*[மிஞ்சு + அம் – மிச்சம் (சு.வி.).]*

**மிச்சம்²** *miccam,* வி.அ.(adv.) 1. மிக; very. *மிச்சம் பெரிய வீடு. மிச்சம் நல்ல சாப்பாடு.* 2. நிறைய; many. *உங்களைப் பார்த்து மிச்சம் நாளாச்சே?*

*[மிஞ்சு + அம் – மிச்சம் (சு.வி.).]*

**மிச்சம்³** *miccam,* பெ.(n.) 1. பொய்; lie; falsity. *'மிச்ச நீங்குதலும்' (திருநூற்.13, உரை).* 2. பொய்யறிவு; false knowledge.

**மிச்சம்பிடி–த்தல்** *miccam-pidi-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. சேமித்தல்; செட்டாயிருந்து பொருள் சேர்த்தல் (கல்வி.வி.1, 1, 2); to scrape up, save by means of one's thrift. 2. மிச்சப்படுத்துதல்; save money. *இப்போதே மிச்சம் பிடித்துக் காசு சேர்த்தால் பிற்காலத்தில் உனக்கு உதவும்.*

*[மிச்சம் + பிடி–த்தல்.]*

**மிச்சம்மீசாடி** *miccam-mīšādi,* பெ.(n.) தேவைக்கும் அதிகமானப் பொருள்; remaining product (வட்.வழ.அக.).

*[மிச்சம் + மீசாடி.]*

**மிச்சமீதி** *miccamīdi,* பெ.(n.) மிகக் குறைந்த அளவில் அல்லது எண்ணிக்கையில் எஞ்சியிருப்பது; the left-overs; the remains of something. *மாலையில் சோற்றுப் பானையில் மிச்சமீதி ஏதாவது இருக்கிறதா என்று பார்த்தாள். எனது தாய் மிச்சமீதி உள்ள காசினை நான் செலவு செய்து விடுவேன் என்று சொல்லி வாங்கிக் கொண்டாள்.*

*[மிச்சம் + மீதி.]*

**மிச்சவாரம்** *micca-vāram,* பெ.(n.) பயிரிடுஞ் செலவு தீர்வை முதலியன கழித்து வயலிலிருந்து கிடைக்கும் வருவாய் (நாஞ்.); net income from a field.

*[மிச்சம் + வாரம். வாரம் = வருவாய்.]*

**மிச்சிரகம்** *micciragam,* பெ.(n.) கணித வகையுளொன்று (யாப்.வி.528); a mode of calculation.

**மிச்சிரகெந்தகம்** *miccira-kendagam,* பெ.(n.) அரிதாரம்; yellow orpiment (சா.அக.).

**மிச்சில்** *miccil,* பெ.(n.) 1. எஞ்சிய பொருள்; remainder. *"வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி மிச்சில் மிசைவான் புலம்" (குறள், 85). "கொள்ளாமிச்சில்" (புறநா.23:6). "சேடுசினை யுரீஇ உண்ட மிச்சில்" (அகநா. 331:4). "வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்" (குறுந்.56:1). "ஆர்ந்தன வொழிந்த மிச்சில் சேய்நாட்டு" (நற்.43:4).* 2. எச்சில் (பிங்.); leavings, what is left after a meal. *"உண்டொழி மிச்சிலும்" (சிலப்.15:169).* 3. கரி (தைலவ.தைல.); charcoal, as the remains of fire.

*[மிஞ்சு + இல் – மிச்சில் (சு.வி.57).]*

**மிச்சில்சீப்பவர்** *miccil-cīppavar,* பெ.(n.) எச்சில் இலை முதலியன வெடுத்து இடத்தைத் தூய்மை செய்வோர்; servants who remove the leaves, plates, etc., and clean the floor after a meal. *"மிச்சில் சீப்பவர்" (சீவக.832).*

*[மிச்சில் + சீப்பவர்.]*

**மிச்சு** *miccu,* பெ.(n.) விலாமிச்சு; a grass with fragrant roots-*Khus khus - Vetiveria zizanioides* (சா.அக.).

**மிச்சை**[1] *miccai,* பெ.(n.) 1. மிச்சம் [2], 1 பார்க்க (பிங்.); see *miccam*[2], *1*. 2. அறியாமை; ignorance. 3. வறுமை (திவா.); poverty.

**மிச்சை**[2] *miccai,* பெ.(n.) 1. எலுமிச்சை; lime. 2. விலாமிச்சை; a grass with fragrant roots-*Khus khus - Vetiveria zizanioides.* 3. உத்தாமணி; a twining shrub - *Demia extensa* (சா.அக.).

**மிச்சை**[3] *miccai,* பெ.(n.) இலாமிச்சை (தைலவ. தைல.); cuscus-grass.

*[இலாமிச்சை → மிச்சை.]*

**மிசாதாரம்** *miśādāram,* பெ.(n.) மரமஞ்சள்; tree turmeric (சா.அக.).

**மிசி** *miśi,* பெ.(n.) 1. தாளிசபத்திரி; a medicinal leaf of a shrub - *Flacourtia cataphracta.* 2. சதகுப்பை; dill seed - *Anethum A.sowa* (சா.அக.).

**மிசிகம்** *miśigam,* பெ.(n.) பாம்புவளை; snake hole (சங்.அக.).

**மிசிசாரம்** *miśi-śāram,* பெ.(n.) ஒருவகைச் சிற்பநூல்; a kind of architectural book (அபி.சிந்.).

**மிசிரகம்** *miśiragam,* பெ.(n.) தாழ்ந்த வங்கம்; low grade lead (சா.அக.).

**மிசிரா** *miśirā,* பெ.(n.) சின்ன முள்ளங்கி; a kind of radish (சா.அக.).

**மிசிரிப்பருப்பு** *miśiri-p-paruppu,* பெ.(n.) சாலாமிசிரி; salep orchid (சா.அக.).

சாலாமிசிரி = எகிப்து நாட்டு கிழங்கு வகை.

**மிசுக்கன்** *miśukkan,* பெ.(n.) 1. ஈனன்; vile or worthless person. 2. வறியவன்; poor man.

*[பிசுக்கர் = இழிந்தவன், பயனற்றவன், ஏழை. பிசுக்கர் →பிசுக்கன் →மிசுக்கன்.]*

**மிசுக்கு** *miśukku,* பெ.(n.) கணக்கு; computation. *புள்ளிமிசுக்கு, ஒப்படிமிசுக்கு.*

**மிசுக்கை** *miśukkai,* பெ.(n.) இழிவானது (வின்.); trifle, vile or worthless thing.

*[பிசுக்கு = சிறியது, இழிவானது, எந்தப் பொருள் வாங்கினாலும் பிசுக்குக் கேட்பான். பிசுக்கு → மிசுக்கு →மிசுக்கை.]*

**மிசை**[1]**-தல்** *miśai-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. உண்ணுதல்; to eat a meal. *"வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி மிச்சில் மிசைவான் புலம்?"* (குறள், 85). 2. நுகர்தல் (யாழ்.அக.); to taste, enjoy, experience.

*[மீ →மி →மிசை →மிசை-தல் = உண்ணல்.]*

**மிசை**[2] *miśai,* பெ.(n.) 1. உணவு; food. *"அரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டும்" (ஐங்குறு.81).* 2. சோறு (சூடா.); boiled rice.

**Cf.E.** mess, to eat; **O.Fr.** mes; **Fr.** mets.

*[மீ →மி →மிசை = மிஞ்சியதை உண், உண் (சு.வி.பக்.57).]*

**மிசை**[3] *miśai,* பெ.(n.) 1. உயர்ச்சி (சூடா.); eminence, elevation. 2. மேலிடம் (பிங்.); elevated place. 3. மேடு; hill, mound. *"அவலா கொன்றோ மிசையா கொன்றோ" (புறநா.187).* 4. வானம்; sky. *"மிசைபாடும்*

*புள்ளின்" (கலித்.46).* 5. முன்னிடம்; front. *"ஈற்றுமிசை யகர நீடலு முரித்தே" (தொல். எழுத்து.312).*

*[மீ = மேலிடம், உயரம், வானம். மீ →மி→மிசை.]*

**மிசை[4]** *mišai,* இடை.(part.) ஏழாம் வேற்றுமை யுருபு; a locative ending. *"மலைமிசைத் தோன்றும் மதியம் போல்" (நாலடி, 21).*

*[மிசை[3] →மிசை[4].]*

**மிசைஞர்** *mišaiñar,* பெ.(n.) உண்பவர்; eaters. *"இரும்பிண மிசைஞரின்" (ஞானா. 17:31).*

*[மிசை (= உணவு, சோறு)→மிசைஞர்.]*

**மிசைத்திரள்** *mišai-t-tiraḷ,* பெ.(n.) காற்கரடு (பிங்.); ankles.

*[மிசை + திரள்.]*

பாதத்திற்குமேல் திரண்ட தசைத்திரள்.

**மிசைபாடும்புள்** *mišai-pāḍum-puḷ,* பெ.(n.) வானம்பாடி; the Indian skylark. *"துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளின்" (கலித்.46).*

*[மிசை + பாடு + புள் (மிசை = வானம்).]*

**மிசைவடம்** *mišai-vaḍam,* பெ.(n.) வீரக்கழல் (வின்.); warrior's ankle-ring.

*[மிசை + வடம்.]*

பாதத்திற்கு மேலுள்ள கணுக்காலில் அணியும் வடம், அணி. வடம் = கனமான கயிறு, கயிறு போன்று மாழையால் செய்த அணிகலன்.

**மிசைவு** *mišaivu,* பெ.(n.) 1. உண்கை; eating. 2. உணவு; food. *"முழவு மருள் பெரும் பழஞ் சிலைகெழு குறவர்க் கல்கு மிசைவாகும்" (புறநா.236:2).*

*[மிசை→மிசைவு. மிசை = உணவு.]*

**மிஞ்சகம்** *miñjagam,* பெ.(n.) எலுமிச்சை; lime (சா.அக.).

**மிஞ்சி[1]** *miñji,* பெ.(n.) கையில் கணையாழி (மோதிர) விரலிலும் காலில் இரண்டாவது விரலிலும் அணியும் கணையாழி வகை; ring worn on the ring - finger or the second toe. *"கால் மிஞ்சிக்காரன் பின் போனாள்" (தனிப்பா.ii, 138:351).*

க. மிஞ்சு

*[மீ →மிச்சு →மிஞ்சி.]*

திருமணமான ஆண் கால்விரலில் அணியும் அணிகலன் மிஞ்சி, திருமணமானப் பெண் கால் விரலில் அணிவது மெட்டி என்னும் அணிகலன்.



**மிஞ்சி[2]** *miñji,* பெ.(n.) முஞ்சிப் புல்லால் செய்த அரைஞாண்; waist-cord made of *muñja* grass.

*[முஞ்சி[1] →மிஞ்சி[2]. முஞ்சி = ஒருவகை நாணல் புல்.]*

**மிஞ்சிகம்** *miñjigam,* பெ.(n.) பெண்களின் மயிர்முடி (பிங்.); lock of women's hair.

மிஞ்சிகை *miñjigai*, பெ.(n.) 1. குண்டலம் (அக.நி.); a kind of ear-ring. 2. பேழை (அரு.நி.); box.

*[மஞ்சிகை (= பெட்டி)→மிஞ்சிகை.]*

மிஞ்சிப்போ-தல் *miñji-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) எல்லை மீறிப் போதல்; to exceed limits; to go to far. *'அவர் செயல் மிஞ்சிப் போய் விட்டது' (உ.வ.).*

*[மிஞ்சு →மிஞ்சி + போ-தல்.]*

மிஞ்சிபோனால் *miñji-pōṉāl*, வி.அ.(adv.) மிக அதிகமாகக் கணித்தால் கூட; at the most. *அந்தப் பெண்ணுக்கு மிஞ்சிப்போனால் பதினேழு வயது தான் இருக்கும்; மிஞ்சி போனால் அவன் ஒரு கல் தொலைவு கூடப் போயிருக்க மாட்டான்.*

*[மிஞ்சி + போனால்.]*

மிஞ்சினவன் *miñjiṉavaṉ*, பெ.(n.) 1. அடங்காதவன் (வின்.); perverse, unmanageble man. 2. மேற்பட்டவன் (இ.வ.); one who is pre-eminent.

*[மிஞ்சுதல் = வரம்பு மீறுதல், செருக்குக் கொள்ளுதல். மிஞ்சு→மிஞ்சினவன்.]*

மிஞ்சு[1]-தல் *miñju-*,5 செ.குன்றாவி.(v.t.) 1. மீதமாதல்; be left over; remain. *விற்றது போக இரண்டு காணி நிலம் மட்டும்தான் நமக்கு மிஞ்சுகிறது. நான்கு பேருக்குத்தான் சமைத்தேன் இருந்தாலும் சோறு (சாதம்) மிஞ்சி விட்டது. இவ்வளவு செய்தும் பயன் இல்லை, வருத்தம் தான் மிஞ்சுகிறது.* 2. திறன், இயல்பு, அளவு போன்றவற்றை அதிகம் கொண்டிருப்பதால் முன்நிலையில் இருத்தல், முந்துதல், விஞ்சுதல்; excel, outdo. *திரைப்படத் துறையில் தன்னை யாரும் மிஞ்சக்கூடாது என்ற எண்ணம் அந்த இயக்குநருக்கு இருந்தது. நீ குருவை மிஞ்சிய சீடனா?* 3. குறிப்பிட்ட வரம்பை, ஒழுங்கை கடத்தல், கட்டுப்படுத்த முடியாத அளவுக்குப் போதல், மீறுதல்; exceed; go beyond limits. *அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் (அமிர்தமும்) நஞ்சு. காலம் தாழ்த்தினால் காரியம் மிஞ்சிவிடும். அவன் என் பேச்சையும் மிஞ்சிப் போய்விடுவான் போலிருக்கிறது. தேர்தலில் வழக்கமாக வெற்றிபெறும் தலைவரை விட இந்த முறை புதியதாக தேர்தலில் நின்றவர் ஓட்டு எண்ணிக்கையில் மிஞ்சிப் போனார்.*

தெ., க. மிஞ்சு.

*[மீ→மி→மிஞ்சு →மிஞ்சு-தல் (சு.வி.57).]*

மிஞ்சு[2]-தல் *miñju-*, 5 செ.கு.வி.(v.i.) 1. மிகுதல்; to increase. *"பகல்கண் மிஞ்சி" (சீவக.255). "மிஞ்சிய கருமம் அஞ்சச் செய்யும்" (பழ.).* 2. செருக்குதல் (வின்.); to become proud; to be elevated.

தெ., க. மிஞ்சு.

*[மிஞ்சு[1] →மிஞ்சு[2]-தல்.]*

மிஞ்சு[3] *miñju*, பெ.(n.) 1. மிகுவது (அக.நி.); excess. *"மிஞ்சினது கொண்டு மேற்கே போகல் ஆகாது" (பழ.).* 2. வண்டு (அக.நி.); beetle.

*[மிஞ்சு[1] →மிஞ்சு[3].]*

மிஞிறு *miñiṟu*, பெ.(n.) 1. வண்டு (திவா.); beetle. *"மிஞிறுமூசு கவுள சிறுகண் யானை" (அகநா.159:16).* 2. தேனீ; honey bee. *"மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சியும்" (கலித்.26:3). "மிஞிறார்க்குங் கமழ் கடாத்த" (புறநா.22:6).*

*[ஞிமிறு → மிஞிறு. ஞிமிறு = வண்டு, தேனீ.]*

**மிஞிறுணவு** *miñiṟuṇavu,* பெ.(n.) தேன் (சா.அக.); honey.

*[மிஞிறு + உணவு.]*

**மிட்டா** *miṭṭā,* பெ.(n.) 1. நாட்டின் உட்பகுதி, வட்டம்; sub-division of a district. 2. ஊர்க்கிழமை, குறுநில ஆட்சி; possession. 3. சொத்து; property. 4. உரிமை; responsibility.

த. மிட்டா > இ. மிட்டா (mittha.)

*[முட்டா → மிட்டா. முட்டா = 1. ஊர்க்கிழமை, குறுநில ஆட்சி. 2. சொத்து (வே.க.4, பக்.53).]*

**மிட்டாதார்** *miṭṭā-dār,* பெ.(n.) மிட்டாவுக்கு உரியவன்; male proprietor of a *miṭṭā.*

*[மிட்டா + தார். தார் = வடமொழிப் பின்னொட்டு.]*

**மிட்டாதார்னி** *miṭṭā-tārṉi,* பெ.(n.) மிட்டாவுக்கு உரியவள் (C.G.); female proprietor of a *miṭṭā.*

*[மிட்டா + தார்னி. தாரி (ஆ.பா.) தாரினி (பெ.பா.). தாரினி → தார். தார்னி = வடமொழிப் பின்னொட்டு.]*

**மிட்டாதாரி** *miṭṭā-tāri,* பெ.(n.) மிட்டாதாருக் குரியது (R.T); that which belongs to a *miṭṭātāri.*

*[மிட்டா + தாரி. தாரி = வடமொழிப் பின்னொட்டு.]*

**மிடல்** *miḍal,* பெ.(n.) 1. வலி; strength. *"மிடல் புக் கடங்காத வெம்முலையோ பாரம்" (சிலப்.7:17).* 2. மிடன், 2, 3 பார்க்க; see *miḍaṉ,* 2, 3. *"அடங்காதார் மிடல்சாய அமரர்வந் திரத்தலின்" (கலித்.2:2). "நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பொருந்தலர்" (அகநா. 266:12). "நள்ளாதார் மிடல் சாய்த்த" (புறநா.125:5).*

**மிடற்றுக்கருவி** *miḍaṟṟu-k-karuvi,* பெ.(n.) இன்னிசையெழுப்பும் கண்டம் (தக்கயாகப். 638, சிறப்புக் குறிப்பு); throat, considered, a musical instruments.

*[மிடறு + கருவி.]*

**மிடற்றுத்துவாரம்** *miḍaṟṟu-t-tuvāram,* பெ.(n.) குரல்வளைத் துளை; entrance of the larynx-Adifus (சா.அக.).

*[மிடறு + **Skt.** துவாரம்.]*

**மிடற்றுநோவு** *miḍaṟṟu-nōvu,* பெ.(n.) தொண்டை வலி (M.L.); laryngites.

*[மிடறு + நோவு.]*

**மிடறு** *miḍaṟu,* பெ.(n.) 1. கழுத்து; neck. *"கறைமிட றணியலு மணிந்தன்று" (புறநா.1:5). "வரிமிடறு யாத்த பகுவாய்த் தெண்மணி" (குறுந்.279:2).* 2. ஒலியெழும் கண்டவுறுப்பு; trachea, windpipe. *"தலையினு மிடற்றினு நெஞ்சினு நிலைஇ" (தொல்.எழுத்து.83).* 3. தொண்டை; throat. *"மிடறு மெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கி" (திவ்.பெரியாழ்.3, 2:6).* 4. மிடற்றுக் கருவி பார்க்க; see *miḍaṟṟu-k-karuvi. "நரம்பு நம்பியூழ் மணிமிடறு மொன்றாய்" (சீவக.728).* 5. கீழ்வாய் (வின்.); lower jaw. 6. ஒருவாய் கொண்ட நீர்மப் பண்டம்; draught, a quantity of liquid taken at one swallow.

*[மிழறு → மிடறு.]*

**மிடறுகம்மல்** *miḍaṟu-kammal,* பெ.(n.) தொண்டைக்கம்மல்; sore throat (சா.அக.).

*[மிடறு + கம்மல்.]*

**மிடறுசெய்–தல்** *miḍaṟu-šey-*,1 செ.கு.வி. (v.i.) பெருங்குரலெடுத்தல் (ஈடு, 3. 8, பிர.); to raise one's voice.

*[மிடறு + செய்–தல்.]*

**மிடறுதண்ணீர்** *miḍaṟu-taṇṇīr*, பெ.(n.) ஒரு முறை விழுங்கும் நீரளவு; a gulp or a draught of water - *Haustus* (சா.அக.).

*[மிடறு + தண்ணீர்.]*

**மிடறுதின்(னு)–தல்** *miḍaṟu-tiṉ-*, 13 செ.கு.வி.(v.i.) தொண்டையில் அரிப்புண்டாதல்; to irritate in the throat. *"மிடறு தின்றால் சொறிய வொண்ணாதாற் போல" (திவ்.பெரியதி.1. 1:5, வியாக். பக்.37).*

*[மிடறு + தின்னு–தல்.]*

**மிடன்** *miḍaṉ*, பெ.(n.) 1. வலிமை; strength. 2. மகன்; son. 3. நிலவு; moon.

*[மிடல்→மிடன்.]*

**மிடா** *miḍā*, பெ.(n.) 1. வெறியம் (சாராயம்) காய்ச்சுதல் முதலியவற்றுக்குப் பயன்படும் பெரிய மண் பானை; large earthen pot used especially for keeping fermented country liquor. *"சோறு செப்பினாயிரம் மிடா" (சீவக. 692). மாந்தரை மிரட்டும் பேய்கள் மிடா சோறு தின்னும் வல்லமை படைத்தவை.* 2. பானை; pot.

*[முழா→முடா→மிடா (வே.க.முல்.4:47)]*

**மிடாச்சு** *miḍāccu*, பெ.(n.) ஒருவகை மரம் (சங்.அக.); tripterocarp dammar.

*[மிடா→மிடாச்சு.]*

மிடாபோல் பெரிய அடிப்பகுதியை யுடைய மரம்.

**மிடாத்தவளை** *miḍā-t-tavaḷai*, பெ.(n.) பெருந்தவளை (M.M.90); bull frog.

*[முழா→முடா→மிடா + தவளை= பெருந்தவளை (வே.க.முல்.4).]*



**மிடி**[1] *miḍi*, பெ.(n.) 1. வறுமை (சூடா.); poverty, want. 2. துன்பம்; affliction. *"மிடியென்னுங் காரணத்தின்" (நாலடி, 56).*

**மிடி**[2]**–த்தல்** *miḍi-*, 4 செ.கு.வி.(v.i.) 1. வறுமையுறுதல்; (சூடா.); to be poverty-stricken, destitute. *'மிடித்தார்க்குச் சுற்ற மின்றா யிருந்தது' (சீவக.2535, உரை).* 2. குறைவுறுதல்; to be scanty.

**மிடிமை** *miḍimai*, பெ.(n.) வறுமை (யாழ். அக.); poverty, want. *"மிடிமையிலும் படிமை நன்று" (பழ.).*

*[மிடி →மிடிமை.]*

**மிடியன்** *miḍiyaṉ*, பெ.(n.) வறியன்; poor, indigent person. *"அமுதினை மிடியன் மேவியே யுண்டனனென" (பிரபுலிங்.மருள.5).*

*[மிடி →மிடியன்.]*

**மிடிவு** *miḍivu*, பெ.(n.) மிடிமை (யாழ்.அக.) பார்க்க; see *miḍimai.*

*[மிடி →மிடிவு.]*

**மிடுக்கன்** *miḍukkaṉ*, பெ.(n.) 1. வலிமை யுடையோன்; strong, powerful man. 2. முருடன்; rough, coarse person. 3. இறுமாப்புடையவன் (இ.வ.); proud conceited man. 4. முருட்டுத்தனம் (வின்.); coarseness.

*[மிடுக்கு → மிடுக்கன்.]*

**மிடுக்கு** *miḍukku*, பெ.(n.) 1. வலிமை; strength. *"மிடுக்கிலாதானை வீமனே....... என்று" (தேவா.647, 2).* 2. செருக்கு (வின்.); pride; stiffness of manners. *மிடுக்காகப் போ.* 3. இளமைத் துடிப்பு; youthful, vitality. *வாலிப மிடுக்கு.* 4. தோற்றம்; imposing appearance.

தெ., க. மிடுகு; ம. மிடுக்கு.

**மிடுபுடலை** *miḍu-puḍalai*, பெ.(n.) பேய்ப் புடலை; a bitter kind of wild snake gourd - *Tricosanthus laciniosa* (சா.அக.).

**மிடுமிடு-த்தல்** *miḍu-miḍu-*, 4 செ.கு.வி. (v.i.) விரைதல் (யாழ்.அக.); to hasten.

*[மிடுமிடெனல் → மிடுமிடு-த்தல்.]*

**மிடுமிடுப்பு** *miḍu-miḍuppu*, பெ.(n.) விரைவு (யாழ்.அக.); haste.

*[மிடுமிடு→மிடுமிடுப்பு.]*

**மிடுமிடெனல்** *miḍu-miḍeṉal*, பெ.(n.) விரைவுக்குறிப்பு (யாழ்.அக.); onom. expr. of haste.

**மிடை[1]-தல்** *miḍai-*, 2 செ.கு.வி.(v.i.) 1. செறிதல்; to be close set or crowded. *"வேன்மிடைந்த வேலியும் பிளந்து" (சீவக. 279).* 2. நிறைதல் (அரு.நி.); to be full. 3. கலத்தல்; to be mixed, mingled. *"பொய்யோ டிடைமிடைந்த சொல்" (நாலடி, 80).* 4. வருந்துதல் (சங்.அக.); to be distressed.

க. மிடுகு

*[மிசை→மிடை →மிடை-தல்.]*

**மிடை[2]-தல்** *miḍai-*, 2 செ.குன்றாவி.(v.t.) 1. செறிதல்; to set closely; to crowd. 2. பின்னுதல்;to weave, as mat, etc. 3. மிகுத்திடல்; to increase.

*[மிசை→மிடை →மிடை-தல்.]*

**மிடை[3]** *miḍai*, பெ.(n.) 1. பரண்; platform for watching, loft in a corn-field. *"நல்லவர் கொண்டார் மிடை" (கலித்.103).* 2. புணர்ச்சி; sexual union. *"மிடையொடு விழைவு வேறுத்த வீரர்கள்" (சூளா.முத்.5).* 3. தூறு (வின்.); bush, small shrub.

*[மிசை→மிடை. மிசை = மேல், மேலிடம்.]*

**மிடை[4]** *miḍai*, பெ.(n.) நெருக்கம்; closeness. *"பசுக்களை மிடையற மேய்க்கும்படி பண்ணினலனே" (திவ்.பெரியாழ். 2. 3 : 7 வியா. பக்.292).*

*[மிசை→மிடை.]*

**மிடைதூறு** *miḍai-tūṟu*, பெ.(n.) நெருங்கிய காடு; thick forest.

*[மிடை[4] + தூறு. தூறு = காடு.]*

**மிண்டன்** *miṇḍaṉ*, பெ.(n.) 1. திண்ணியோன் (சூடா.); strong man. 2. அறிவில்லாதவன்; ignorance. *"மிண்டர் பாய்ந்துண்ணுஞ் சோற்றை" (திவ். திருமாலை.14).*

*[மிண்டு→மிண்டன்.]*

**மிண்டி[1]** *miṇḍi*, வி.எ.(adv.) நெருங்கி; dense, compact close together. *"சிரத்தினிற் கனத்து மிண்டி" (பரராச சேகரம்) (சா.அக.).*

*[மிண்டு→மிண்டி.]*

**மிண்டி[2]** *miṇḍi*, பெ.(n.) நெம்பு தடி (யாழ்.அக.); staff or post used as a lever.

க. மிண்டு.

*[மிண்டு → மிண்டி.]*

**மிண்டிபோடு–தல்** *miṇḍi-pōḍu-,* 19 செ. குன்றாவி.(v.t.) நெம்பு தடியாலெடுத்தல் (யாழ்.அக.); to raise by a lever; to break up.

*[மிண்டி + போடு–தல்.]*

**மிண்டிமரம்** *miṇḍi-maram,* பெ.(n.) உலுக்கு மரம்; ulukku tree.

*[மிண்டி + மரம்.]*

**மிண்டு[1]–தல்** *miṇḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நெருங்குதல்; to throng. *"பொதும்பிடை வரிவண்டு மிண்டி" (திவ்.பெரியதி.4. 10 : 2).* 2. நிறைதல்; to be full. 3. வலியதாதல்; to be hard. *"மிண்டு மனத்தவர்" (சேந்.திருப்பல்.2).* 4. மதங்கொள்ளுதல்; to be exultant, vain. *"கருணை மட்டுப் பருகிக் களித்து மிண்டுகின்றேனை" (திருவாச.6:33).* 5. போரில் கலத்தல்; to join battle. *"தேர்மிசைக் கண்டு மிண்டுவீர்" (பாரத. நிரை.54).*

**மிண்டு[2]–தல்** *miṇḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. நெம்புதல்; to try, lift, as with a lever. 2. குத்திக் கிளப்புதல்; to thrust. *"மிளிர மிண்டி" (பெரும்பாண்.92).* 3. செருக்காகப் பேசுதல்; to talk harshly or arrogantly. *"பிண்டியர்கள் மிண்டுமொழி" (தேவா.49, 10).* 4. முன்தள்ளுதல் (வின்.); to push, to force forward.

**மிண்டு[3]** *miṇḍu,* பெ.(n.) 1. வலிமை; strength. *"விரலூன்றி மிண்டது தீர்த்த" (தேவா. 510, 8).* 2. முட்டு (யாழ்.அக.); prop. support. 3. துணிவு; bravery, courage. *"இராவணன் கொண்டு மிண்டாய்ப் போகையில்" (இராமநா.ஆரணி.26).* 4. அறிந்து செய்யும் குற்றம்; wilful fault, crime. 5. துடுக்கு; mischief. *"மிண்டுகள் செய்து பின்பு வீண்பழி போடுவானை" (ஆதியூரவதானி.61).* 6. இடக்கர்ப் பேச்சு; vulgar talk; vulgarity. *"மிண்டுறு கயவ னோர்நாள்" (திருவாலவா. 35:9).* 7. செருக்கிக் கூறும் மொழி; presumptuous speech. *"வானோரார் தானவர் துற்று மிண்டுகள் பேசி" (திருவாலவா. 4:7).*

**மிண்டை** *miṇḍai,* பெ.(n.) கண்ணின் கருவிழி; apple of the eye. *'விழித்திருக்க மிண்டையைக் கொள்வான்' (கலித்.108, உரை).*

*[முண்டை → மிண்டை = கருவிழி (வே.க. முல்.5).]*



**மிணர்** *miṇar,* பெ.(n.) மிணறு பார்க்க; see *miṇaṟu.*

**மிணறு** *miṇaṟu,* பெ.(n.) ஒருவாயளவு கொண்ட நீர்மப் பண்டம்; draught, a quantity of liquid taken at one swallow.

*[மிடறு → மிணறு.]*

**மிணாட்டி** *miṇāṭṭi,* பெ.(n.) மணாட்டி (மனைவி) என்னும் சொல்லின் திரிபு; other word of a wife (கல்.அக.). *"இது மாறுவான் தந் மிணாட்டியை பரைமாயன்றுக்குக் குடுப்பான் (தெ.இ.கல். தொ.12, கல்.164).*

*[மனையாட்டி → மிணாட்டி.]*

**மிணுமிணு–த்தல்** *minu-minu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வாய்க்குள் தானே சொல்லுதல்; to mumble, speak with a low reiterated sound. *"தீமுகந்தனில் வாய் மிணுமிணுத்து நெய்சிந்தி" (பிரபோத.10:8).* 2. கமுக்கம் பேசுதல் (யாழ்.அக.); to murmur, as a secret. 3. மந்திரஞ் சொல்லுதல் (இ.வ.); to utter incantations.

**மிணுமிணுப்பு** *minu-minuppu,* பெ.(n.) முணுமுணுப்பு (யாழ்.அக.); mumbling.

*[மிணுமிணு → மிணுமிணுப்பு.]*

**மிணுமிணுப்புக்காரன்** *minu-minuppu-k-kāran,* பெ.(n.) மந்திரஞ் செய்வோன் (இ.வ.); magician.

*[மிணுமிணுப்பு + காரன்.]*

**மித்திரம்** *mittiram,* பெ.(n.) வெங்காரம்; borax (சா.அக.).

**மித்துருப்பதமை** *mitturu-p-padamai,* பெ.(n.) ஈய மணல்; lead ore (சா.அக.).

**மித–த்தல்** *mida-,* 3 செ.கு.வி.(v.i.) 1. நீர் முதலியவற்றின் மேற்பரப்பில் மூழ்காமல் நிலைகொள்ளுதல்; to float. *"சுரையாழ அம்மி மிதப்ப" (நன்.152, விருத்.). நீ தண்ணீரில் எவ்வளவு நேரம் மிதப்பாய்? இரும்பு நீரில் மிதக்காது.* 2. மேலெழுப்புதல் (வின்.); to rise high in the sky. 3. அளவில் மேற்குவிதல்; to be heaped in a measure, as corn. மிதக்க அள. 4. வீண் பெருமை பண்ணுதல் (வின்.); to assume, to pretend to a character above the reality. 5. மிகுதல்; to be abundant; to be in excess. *"வெம்பு நீர் மிதப்ப மாந்தி" (விநாயகபு.74:226).* 6. கீழ் இறங்காமல் காற்றில் அலைதல்; to be borne in the air. *பறவைகளின் இறகுகள் காற்றில் மிதந்து சென்றன. அவன், கற்பனையில் மிதக்கிறான்.*

*[மீ → மீது → மித → மித–த்தல் = மேற்கிடத்தல் (சு.வி.57).]*

**மிதக்கங்காய்** *midakkankāy,* பெ.(n.) தும்மட்டி (யாழ்.அக.); country cucumber.



**மிதக்கு–தல்** *midakku-,* 5 செ.கு.வி.(v.i.) மித–த்தல் பார்க்க; see *mida-.*

*[மித–த்தல் → மிதக்கு–தல்.]*

**மிதசுரம்** *mida-šuram,* பெ.(n.) எழுவகைப் பண்களில் (சுரம்) நான்காவதாகிய 'ம' என்ற பண்; middle tone.

*[மித + **Skt.** சுரம்.]*

**மிதடி** *midadi,* பெ.(n.) நீர் (பிங்.); water.

*[மித → மிதடி. மிதப்பதற்குப் பயன்படும் பொருள்.]*

**மிதடு** *midadu,* பெ.(n.) மூளை (C.G.); brain.

தெ. மெதடு; க. மிதுளு.

**மிதந்தபுத்தி** *midanda-putti,* பெ.(n.) மிதந்தவறிவு பார்க்க; see *midanda-v-arivu.*

**மிதந்தவறிவு** *midanda-v-arivu,* பெ.(n.) மேலெழுந்த அறிவு (இ.வ.); superficial knowledge.

*[மிதந்த + அறிவு.]*

**மிதப்பு** *midappu,* பெ.(n.) 1. நீர் முதலியவற்றின் மேற் கிடக்கை; floating. *"பால்கடை நுரையின் பரூஉ மிதப் பன்ன" (அகநா.224:6).* 2. தெப்பம்; boat, ship, raft, as floating. *"கடலி லமிழ்ந்துவார் அங்கே ஒரு மிதப்புப் பெற்றுத் தரிக்குமா போலே" (ஈடு. 5:8 பிர.).* 3. தூண்டில், வலை முதலியவற்றில் நீர் மேல் மிதக்குமாறு அமைத்த மரச்சக்கை; float of a finishing line, net, etc. *"தூண்டிற்காரனுக்கு மிதப்புமேலே கண்" (பழ.).* 4. மேலெழுந்த தன்மை; superficiality. 5. செழிப்பு; plenty. 6. துன்பம் (வின்.); sulkiness. *'தம்பிக்குக் கொஞ்சம் மிதப்பாயிருக்கிறது'.* 7. உயர்ச்சி (யாழ்.அக.); height, loftiness. 8. மேடு (சங்.அக.); elevated place. 9. திடீர் மேல்நிலை அல்லது வெற்றி தந்த நிலை; மமதை, செருக்கு; euphoria, elation, gloating with pride. *அந்தக் கட்சியினர் இன்னும் வெற்றியின் மிதப்பிலிருந்து விடுபடவில்லை. பணம் போனால் மிதப்பும் போய்விடும்.*

*[மித →மிதப்பு = செருக்கு (சு.வி.57).]*

**மிதப்புக்கட்டை** *midappu-k-kaṭṭai,* பெ.(n.) 1. நங்கூரம் கற்பாறை மீன்பிடிவலை முதலியன நீரின் கீழ்க் கிடப்பதை யுணர்த்தும் பொருட்டு அவற்றிற்கு நேர் மேலாக மிதக்கவிடுங் கட்டை; buoy. 2. மரக்கட்டை; தக்கை; cark.

*[மிதப்பு + கட்டை.]*

**மிதப்புப்புத்தி** *midappu-p-putti,* பெ.(n.) மிதந்தவறிவு பார்க்க; see *midanda-v-arivu.*

**மிதப்புவலை** *midappu-valai,* பெ.(n.) நீரின் மேல் மிதந்துக் கொண்டிருக்கும் மீன்பிடி வலை; a fishing net which floats on the surface of the water.

*[மிதப்பு + வலை.]*



**மிதம்** *midam,* பெ.(n.) 1. அதிகமாகவோ, குறைவாகவோ இல்லாத நிலை, அளவானது, நடுநிலை; moderation, sensible limits. *மிதமான குளிர். மிதமான பழக்க வழக்கங்கள். அதிக வேகம் வேண்டாம் மிதமாகச் செல்!* 2. பொறுமை (நிதானம்); moderation. 3. நடுத்தரமானது (சங்.அக.); medium quality.

*[மெது→மிது→மிதம்.]*

**மிதமான** *midamāṉa,* பெ.எ.(adj.) நடுத்தரமானது (மீனவ.); medium quality. *மிதமான வெப்பம் நிலவியது.*

*[மிதம் →மிதமான.]*

**மிதமிஞ்சிக்கொழுத்தல்** *midamiñji-k-koḻuttal,* பெ.(n.) அளவு கடந்து கொழுத்த நிலை; excessive copulency - obesity.

*[மிதமிஞ்சி + கொழுத்தல்.]*

**மிதமிஞ்சு-தல்** *mida-miñju-,* 5 செ.கு.வி. (v.i.) அளவுக்கு அதிகமாதல், அளவு கடந்து போதல்; be immoderate, gobeyond reasonable limits. *மிதமிஞ்சிய மகிழ்ச்சி.*

**மிதலை** *midalai,* பெ.(n.) கொப்பூழ் (சது.); navel.

*[இதலை → மிதலை. இதலை = கொப்பூழ்.]*

**மிதவல்** *midaval,* பெ.(n.) மீன்பிடிக்க ஏதுவாய் அல்லது இதமாய் இருக்கை; fit or warmness condition of fishing. *காற்றும் கடலும் மிதவலாயிருப்பதால் மீன்பிடிக்கப் போகலாம் (மீனவ.).*

*[மிதம்→மிதவல்.]*

**மிதவல்காற்று** *midaval-kāṟṟu,* பெ.(n.) கடற்பரப்பில் காற்று குறைவாய் இருக்கை; airless at the seashore. *கடற்பரப்பில் மிதவல் காற்று குறைவாய் வீசுகிறது.*

*[மிதவல் + காற்று.]*

**மிதவாதி** *mida-vādi,* பெ.(n.) பொறுமையான கொள்கையாளன்; moderate.

*[மெது→மிது→மிதம் + **Skt.** வாதி.]*

**மிதவை**[1] *midavai,* பெ.(n.) 1. நீரில் மிதந்து செல்லக் கூடிய தெப்பம் போன்ற அமைப்பு; raft or raft like structure which floats on the water. *"வெண்கிடை மிதவையர்" (பரிபா.6:35). தண்ணீரில் தெப்பம் கொண்டு பயணம் செய்யலாம்.* 2. கடல், பெரிய கால்வாய் முதலியவற்றில் ஊறு நேரும் இடங்களைச் சுட்டிக் காட்டுவதற்காக மிதக்க விடப்பட்டிருக்கும் பொருள்; buoy. 3. நீரில் விழுந்தவர்களைக் காப்பாற்றும் பொருட்டு வைக்கப்பட்டிருக்கும், நீரில் மிதக்கக் கூடிய வளையம்; lifebuoy.

*[மித →மிதவை.]*

கடல் மற்றும் ஆறு முதலியவற்றின் நீரில் மூழ்கி உள்ள பாறைகளையும், ஆழம் குறைந்த இடங்களையும் தெரிந்து கொள்ள பயன்படுவது மிதவை.

மிதவைகளை மாழை (உலோகம்)யால் உண்டாக்கி பலவண்ண நிறங்கள் பூசி, வரிசை எண்களையும் குறிப்பிட்டு இருப்பர்.

மிதவைகளில் விளக்குகள் இருக்கும். மிதவைகளில் உள்ள விளக்கு நிறங்களின் மூலம் மாலுமிகளுக்கு எச்சரிக்கை செய்வர். மிதவைகளை ஒருவகையில் கலங்கரை விளக்கம் என்றே சொல்வர். மிதவைகளில் மணியோசையும் உண்டு, ஊதல் ஓசையும் உண்டு. கடலில் உண்டாகும் நிகழ்வுகளுக்கு ஏற்ப அதனைப் பயன்படுத்துவர் (குழ.கலை.கள.).



**மிதவை**[2] *midavai,* பெ.(n.) 1. சோறு (சூடா.); boiled rice. 2. கூழ்; porridge, gruel. *"ஆய்மக ளட்ட வம்புளி மிதவை" (புறநா. 215:4).* 3. கும்மாயம்; a preparation of dhal. *"உழுந்து தலைப் பெய்த கொழுங்களி மிதவை" (அகநா.86:1).*

*[மித →மிதவை.]*

**மிதவைப்பயிரிகள்** *midavai-p-payirigaḷ,* பெ.(n.) நீரில் மிதந்து வாழும் பயிரிகள்; phytoplankton.

*[மிதவை + பயிரிகள்.]*

மிதவைப் பயிரிகள் பச்சை நிறத்தில் இருக்கும். நீரில் உள்ள உப்புகள், போன்றவற்றை உறிஞ்சி கதிரவன் ஒளி உதவியுடன்தான் உயிர்வாழ்வதற்கேற்ற உணவினை ஆக்கிக் கொள்ளும் தன்மையுடைவை (குழ.கலை.க.).

**மிதவையுயிரிகள்** *midavai-uyirigaḷ,* பெ.(n.) கடல், ஏரி, குளம், குட்டை முதலிய நீர்நிலைகளில் மிதந்து கொண்டே அலைந்து திரிந்து வாழும் உயிரிகள்; plankton.

*[மிதவை + உயிரிகள்.]*

**மிதவைவலை** *midavai-valai,* பெ.(n.) மீன்பிடி வலை வகை; a kind of fishing net.

*[மிதவை + வலை.]*

**மிதவைவிலங்குகள்** *midavai-vilaṅgugaḷ,* பெ.(n.) மிதவைப் பயிரிகளை உணவாக உண்டு வாழும் மிதவைச் சிற்றுயிரிகள்; zoo plankton.

*[மிதவை + விலங்குகள்.]*

வகைகள்: புரோட்டோ சோவா என்னும் ஓரணு உயிர், செல்லி மீன், கடல் வண்ணத்தி, நீர்த்தெள்ளு, கடல் சாமந்தி, நண்டு, இறால், ஈர்க்கிறால் போன்ற மெல்லுடலிகள்; ஒட்டு மீன்கள், ஒடி விண்மீன், கடல் முள்ளெலி, கடல் வெள்ளரி போன்ற முட் டோலிகள் (குழ.கலைக்கள.).

**மிதழ்** *midaḻ,* பெ.(n.) மிதடு (C.G.) பார்க்க; see *midaḍu.*

**மிதி¹-த்தல்** *midi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. காலின் அடிப்பகுதிபடும் வகையில் ஒன்றின் மீது காலைப் பதித்தல்; ஒன்றின் மீது வேகத்துடன் காலை இறக்குதல்; உதைத்தல்; step on, tread or stamp. *சாணியை மிதித்து விடாதே. பார்த்து நடந்து வா! சண்டையில் வேகமாக அவனைக் கீழே தள்ளி நெஞ்சில் மிதித்தான். கோழி மிதித்து குஞ்சு சாகுமா?* 2. மிதிவண்டியை இயங்கச் செய்வதற்காக அதற்கான பாகத்தில் காலை வைத்து விசையுடன் அழுத்துதல்; pedal (a bicycle) hard. *மழை வருவது போல இருந்ததால் மிதிவண்டியை அவன் வேகமாக மிதித்தான். அந்த மேட்டைக் கடக்க மிதிவண்டியை மிதித்ததில் அவனுக்கு வியர்த்துக் கொட்டிவிட்டது.* 3. அடிவைத்தல்; to tread on. *மிதித்தாரைக் கடியாத பாம்பு உண்டா? (பழ.). சேற்றை மிதிக்காதே.* 4. காலால் துவைத்தல்; to tread down, trample on. *"மிதித்தேறி யீயுந் தலைமே லிருத்தலால்" (நாலடி, 61).* 5. இகழ்தல்; to insult, dishonour. *"மிதித்திறப்பாரு மிறக்க" (நாலடி, 61).* 6. பாய்தல்; to rush or dash against, to attack, as a door of a fort. *"போரார் கதவ மிதித்த தமையுமோ" (கலித்.90:12).*

*[மொத்துதல்=வலுக்க அடித்தல். மொத்து → மத்து. மத்தித்தல் = வலுவாக பொருதல். மத்து → மத்தி → மதி → மதித்தல் = மோதுதல், அழுத்துதல். மதி → மிதி → மிதி-த்தல் = காலால் மோதுதல்.]*

**மிதி²-த்தல்** *midi-,* 4 செ.கு.வி.(v.i.) குதித்தல் (சூடா.); to jump.

*[மித → மிதி → மிதி-த்தல்.]*

**மிதி³** *midi,* பெ.(n.) 1. மிதிக்கை; treading. *"மிதியின் றிடைபொலி சென்றன" (இரகு. யாகப்.21). "குருகுஊது மிதியுலைப் பிதிர்விற் பொங்கி" (அகநா.202). "உலைவாங்கு மிதிதோல் போல" (குறுந்.172:6).* 2. அடி வைப்பு; tread. *"மகனார்தம் மிதியாம்" (இரகு. தசரதன்சாப.109).* 3. படிக்கல் (C.G.); step in a tank or well. 4. நெய்வார் கருவிகளு ளொன்று (சங்.அக.); treadle of weaver's loom. 5. மிதித்துத் திரட்டப் பெற்ற கவளம்; food trampled and formed into a ball. *"நெய்ம்மதி பெறாஅது" (புறநா.44).* 6. நடை; walking; gait. *"பலதுரக மிதியிற் றகுபல தாளவிதம் பெற்றிட" (இரகு.யாகப்.18).*

க. மிதி

மிதி[4] *midi,* பெ.(n.) 1. அளவு; measure. 2. அறிவு (சங்.அக.); knowledge. 3. அறிவாற்றல்; intellect. 4. சான்று (யாழ். அக.); evidence. 5. அழகு; beauty.

*[மதி → மிதி. மதி = அளவு.]*

மிதிக்கட்டில் *midi-k-kaṭṭil,* பெ.(n.) மிதிக் கட்டையைத் தாங்கும் மரம் (நெசவு); a wooden rod which bears the treadles.

*[மிதி + கட்டில்.]*

மிதிக்கரணைக்கோல் *midi-k-karaṇai-k-kōl,* பெ.(n.) நெசவுத் தறியில் பன்னைக்குக் கீழ் மிதிக்கட்டையை மிதிக்கும் நேரத்தில் புணிமாறி வரப் பயன்படுத்துப்படும் நீளத்தில் குறைந்த இருகோல்கள்; two short poles which helps to change the `*puṇi*' when treading the treadles in the loom.

*[மிதி + கரணை + கோல்.]*

மிதிகட்டை *midi-kaṭṭai,* பெ.(n.) கால் குழியில் புணிமாற்றுவதற்காக மிதிக்கப்படும் கட்டை (நெசவு); wooden log which is tread for the purose of changing the `*puṇi*'.

*[மிதி + கட்டை.]*



மிதிகல் *midi-kal,* பெ.(n.) ஏற்றத்தில் நீர் இறைப்பவர் நிற்பதற்குரிய நீண்ட இரு கருங்கற்கள்; படிகல் (கிணற்றில் மேற்பக்கத்தில் மூன்றடியில் பொருத்தப் படுவது) (நெசவு); stone laid on the upper side of the well to stand, for the person who bail water from the lift.

*[மிதி + கல்.]*

மிதிகீரை *midi-kīrai,* பெ.(n.) பூடுவகை (இ.வ.); a plant - *Asystasia coromandelina.*

*[மிதி + கீரை.]*

மிதிகோரை *midi-kōrai,* பெ.(n.) கோரை வகை (வின்.); a kind of sedge.

*[மிதி + கோரை.]*

மிதிதோல் *midi-tōl,* பெ.(n.) துருத்தி; bellows. *"உலை வாங்கு மிதி தோல்" (குறுந்.172).*

*[மிதி + தோல்.]*

மிதிபட்டடை *midi-paṭṭaḍai,* பெ.(n.) மிதி பலகை (யாழ்.அக.) பார்க்க; see *midi-palagai.*

*[மிதி + பட்டடை. பட்டடை = பாதம் வைக்கும் படிபலகை.]*

மிதிபயறு *midi-payaṟu,* பெ.(n.) வயலிற் கதிறுக்குமுன் விதைக்கப்பட்டு அறுவடையான பின் விளைந்து முதிரும் பயறு வகை (நாஞ்.); seeds of pulse sometimes sown in paddy-fields just before harvest and maturing after harvest, as being trampled upon by reapers.

*[மிதி + பயறு.]*

மிதிபலகை *midi-palagai,* பெ.(n.) பாதம் வைக்கும் படிப் பலகை (வின்.); foot - stool.

மறுவ. மிதிபட்டடை

*[மிதி + பலகை.]*

**மிதிபாகல்** *midi-pāgal,* பெ.(n.) நஞ்சை முறிக்கும் ஒருவகைப் பாகல்; small variety of bitter gourd which is useful as antidote to arsenical and mercurial poisoning. The plant is a prostate creeper.

*[மிதி + பாகல்.]*

**மிதிபாவை** *midi-pāvai,* பெ.(n.) மிதிபாகல் பார்க்க; see *midi-pāgal.*

*[மிதி + பாவை. பாகல்→பாகை→பாவை.]*

**மிதிமரம்** *midi-maram,* பெ.(n.) 1. படியாயுள்ள பலகை; step-board. 2. நெசவுக் கருவியுறுப்புளொன்று; treadle of a loom. 3. ஏற்றக்காரன் கிணற்றின் மேல் நின்று கொண்டு நீரிறைக்குமாறு அமைக்கப்படும் மரம்; tread in a well for one to stand on, when baling. 4. மிதிபலகை (யாழ்.அக.) பார்க்க; see *midi-palagai.*

*[மிதி + மரம்.]*

**மிதிமுளைக்குச்சி** *midi-muḷai-k-kucci,* பெ.(n.) நெசவுத் தறியில் மிதிக்கட்டையில் உள்ள சிறுகுச்சிகள் (நெசவு); small poles in the treadles of the weavers loom.

*[மிதி + முளைக்குச்சி.]*



**மிதியடி** *midi-y-aḍi,* பெ.(n.) 1. காலில் உள்ள தூசு முதலியவற்றை அகற்றிக் கொள்வதற்காக கயிறு, நார் போன்றவற்றால் செய்யப்படும் சொரசொரப்பான பரப்புடைய சிறு விரிப்பு; door mat. 2. செருப்பு, மரப் பலகையாலான காலணி; sandal, foot wear. *நடக்கும் போதே மிதியடியின் வார் அறுந்து விட்டது. "திருவடியின் மிதியடியும்" (கோயிற்பு. பதஞ்.11).*

*[மிதி + அடி.]*

**மிதியடிக்கொட்டை** *midiyaḍi-k-koṭṭai,* பெ.(n.) பாதுகைக் குமிழ் (பிங்.); knob in sandals.

*[மிதியடி + கொட்டை.]*

**மிதியல்** *midiyal,* பெ.(n.) மிதிக்கை (யாழ்.அக.); treading.

*[மிதி → மிதியல்.]*

**மிதியிடல்** *midi-y-iḍal,* பெ.(n.) எண்ணெய் பூசித் தேய்க்கை; to mollify contracted or diseased limbs by rubbing them with oil and massaging (சா.அக.).

**மிதியிடு[1]-தல்** *midi-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) காலடியால் குறி செய்தல்; to make a tract or impression by one's foot.

*[மிதி + இடு-தல்.]*

**மிதியிடு[2]-தல்** *midi-y-iḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) காலால் துவைத்தல்; to tread under foot.

*[மிதி + இடு-தல்.]*

**மிதியுழல்கோல்** *midi-y-uḻal-kōl,* பெ. (n.) இருமிதிக்கட்டைகளையும் இணைத்து இயக்க உதவும் இரும்பாலான கோல் (நெசவு); an iron rod, which helps to join the two treadle of weavers loom to activate.

*[மிதி + உழல் + கோல்.]*

**மிதிலை** *midilai,* பெ.(n.) 1. இராமாயணக் கதையில் விதேகநாட்டின் தலைநகர்; the

capital of *Vidēha* in Ramayana Story. *'பொன்மதின் மிதிலை புக்கார்' (கம்பரா. மிதிலைக்.5).* 2. விதேகநாடு (வின்.); the ancient realm of Mithilai, now identified with Champaran and Darbhanga districts.

மிதிலைநாடி *midilai-nāḍi,* பெ.(n.) மிதிலை நகரில் பிறந்த சீதை; Šita as born in the country of Mithilai. *"மிதிலை நாடியை" (கம்பரா.பிணிவீட்.21).*

*[மிதிலை + நாடி.]*

மிதிவண்டி *midi-vaṇḍi,* பெ.(n.) மிதித்து ஓட்டப்படும் வண்டி, ஈருருளி வண்டி; bicycle, as being propelled by pedalling.

*[மிதி + வண்டி.]*



மிதுக்காங்காய் *midu-k-kāṅgāy,* பெ.(n.) வெள்ளரிக்காய்; cucumber (சா.அக.).

மிதுக்காய் *midukkāy,* பெ.(n.) மிதுக்கை பார்க்க; see *midukkai.*

மிதுக்கு *midukku,* பெ.(n.) மிதுக்கை பார்க்க; see *midukkai.*

மிதுக்கை *midukkai,* பெ.(n.) 1. வெள்ளரிக் கொடி; cucumber's creeper. 2. தும்மட்டி; country cucumber.

மிதுகயம் *midukayam,* பெ.(n.) கையாந்தகரை; a prostate plant - *Eclipta prostata* (சா.அக.).

மிதுகெந்தா *midukendā,* பெ.(n.) மகிழம்பூ; a very fragrant flower of a tree - *Mimusops elengi* (சா.அக.).

மிதுரி¹ *miduri,* பெ.(n.) வெள்ளை நீலாம்பரம் (சங்.அக.); crested purple nail dye.

மிதுரி² *miduri,* பெ.(n.) செம்முள்ளி (சா.அக.); a thorny plant - *Barleria prionitis.*

மிதுனக்குடைமூலி *miduṉa-k-kuḍai-mūli,* பெ.(n.) பிரண்டை; a medicinal climber - *Vitis quardrang ularis* (சா.அக.).

மிதுனி *miduṉi,* பெ.(n.) கரிக்குருவி (சங்.அக.); king crow.

மிந்தாச்சொல் *mindā-c-col,* பெ.(n.) இந்துப்பு (சு.வை.ர.125); rock salt.

மிமிதை *mimidai,* பெ.(n.) கல்லுப்பைக் கட்டும் ஒருவகைப் பூடு (சா.அக.); a herb, it is said to consolidate rock salt.

மியா *miyā,* இடை.(part.) ஒரு முன்னிலையசைச் சொல் (தொல். சொல். 276); a suffix added to verbs in second person, imperative mood.

மியூல் *miyūl,* பெ.(n.) பூடுவகை (யாழ்.அக.); a plant.

மியூலசீவி *miyūla-šīvi,* பெ.(n.) மியூல் பார்க்க; see *miyūl* (சங்.அக.).

மிரசன் *mirašaṉ,* பெ.(n.) பெருங்காயம்; asafoetida (சா.அக.).

மிரட்சி¹ *miraṭci,* பெ.(n.) அச்சம் நிறைந்த கலக்கம், மருட்சி; fright, dismay; be wilderment. *நேராய்வில் அவன் மிரட்சியுடன் பதில் சொன்னான்.*

*[மிரள் → மிரட்சி.]*

மிரட்சி² *miraṭci,* பெ.(n.) அடிக்கடி மிரளும் மாட்டு வகை (அபி.சிந்.); a class of bull.

**மிரட்டல்** *mirattal,* பெ.(n.) செய்கையால், பேச்சால் அச்சப்படச் செய்தல்; threat; intimidation. *தந்தை, மகனை வரும் காலாண்டுத் தேர்வில் மதிப்பெண் கூடுதலாக எடுக்கவில்லை என்றால் உதைப்பேன் என்று மிரட்டினார்.*

*[மிரள் (த.வி.)→ மிரட்டு (பி.வி.).]*

**மிரட்டி** *miratti,* பெ.(n.) பேய்மிரட்டி; a plant - Malabar catmint, - *Anisomeles mala barica* (சா.அக.).

**மிரட்டிவாங்கு-தல்** *miratti-vāṅgu-,* 5 செ.குன்றாவி.(v.t.) அச்சுறுத்திக் கைப்பற்றுதல் (C.G.); to extort.

*[மிரள்→ மிரட்டு + வாங்கு-தல் - மிரட்டி வாங்கு-தல். வாங்கு - துணை வினை.]*

**மிரட்டினி** *mirattini,* பெ.(n.) சொக்குப் பொடி (சங்.அக.); magic powder.

*[மிரட்டு →மிரட்டி →மிரட்டினி.]*

**மிரட்டு[1]-தல்** *mirattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தன்நோக்கம் நிறைவேற அல்லது பிறர் நோக்கத்தை முறியடிக்கச் செய்கையாலோ அல்லது பேச்சாலோ அச்சப்பட வைத்தல், அச்சுறுத்துதல்; threaten by word or act intimidate. *வேலை நிறுத்தத்தைக் கைவிடாவிட்டால் கதவடைப்பு செய்வோம் என்று நிருவாகம் தொழிலாளர்களை மிரட்டியது. நள்ளிரவில் திருடன் கத்தியைக் காட்டி மிரட்டி வீட்டில் உள்ளப் பொருள்களைக் கொள்ளையடித்தான்.* 2. மயக்குதல்; to fascinate, to deceive. *"விழித்து மிரட்டி" (திருப்பு.219).* 3. ஓட்டுதல்; to drive away. *"இருநோய் மலத்தைச் சிவவொளியால் மிரட்டி" (திருப்பு.1042).*

*[மிரள்-தல் →மிரட்டு-தல்.]*

**மிரண்டபார்வை** *miranda-pārvai,* பெ.(n.) நடுக்கம் உள்ள பார்வை; treambled look (சா.அக.).

**மிரண்டுபோ-தல்** *mirandu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) அச்சத்தினால் செயலிழந்து நிலை குலைந்துபோதல்; get frightened. *துமுக்கி (துப்பாக்கி)யைக் கண்டதும் பயணிகள் மிரண்டு போனார்கள்.*

*[மிரண்டு + போ-தல்.]*

**மிரதம்** *miradam,* பெ.(n.) பாம்பு; snake (சா.அக.).

**மிரழ்-தல்** *miraḻ-,* 2 செ.கு.வி.(v.i.) மிரள்-தல் (யாழ்.அக.) பார்க்க; see *miraḷ-.*

**மிரள்(ளு)-தல்** *miraḷ-,* 16 செ.கு.வி.(v.i.) 1. அச்சத்தினால் கலக்கமடைந்து கட்டுப்பாடு இழத்தல்; get frightened or scared, lose control when scared. 2. மயங்கி அஞ்சுதல்; to be freightened, startled. *குடையைக் கண்டால் மாடு மிரளும்.*

**மிரளமிரள** *miraḷa-miraḷa,* வி.அ.(adv.) விழிகளை அங்குமிங்கு உருட்டியபடி; to look at someone or something in perplexity. *கனவு கண்டு அஞ்சி எழுந்து மிரள மிரள விழித்தான். வகுப்பறையில் தூங்கியிருந்து ஆசிரியர் கேட்ட கேள்விக்கு மாணவன் ஒன்றும் புரியாமல் மிரள மிரளப் பார்த்தான்.*

**மிரிகி** *mirigi,* பெ.(n.) காக்கைவலிப்பு; a disease; epilepsy.

**மிரிகை** *mirigai,* பெ.(n.) யாழ்ப்பிருடை (வின்.); tuning key for the cords of a lute.

**மிரிசபத்திரி** *miriša-pattiri,* பெ.(n.) வறட்சுண்டி; a sensitive plant - *Mimosa triprictra* (சா.அக.).

மிரிசம் *mirišam*, பெ.(n.) மிளகு; pepper-*Piper nigrum*.

[மிரியல்→ மிரிசம்.]

மிரிசனம் *mirišaṉam*, பெ.(n.) மிரிசம் பார்க்க; see *mirišam*(சா.அக.).

மிரிசி *miriši*, பெ.(n.) மிரிசம் பார்க்க; see *mirišam*(சா.அக.).

மிரிஞ்சி *miriñji*, பெ.(n.) செம்முருங்கை; red Indian laburnum - *Hyperanthera moringa* (சா.அக.).

மிரிநாளம் *mirināḷam*, பெ.(n.) தாமரை (மலை.); lotus.

மிரியம் *miriyam*, பெ.(n.) மிளகு (பிங்.); pepper.

தெ. மிரியமு

[மிரியல் →மிரியம் (மு.தா.155).]

மிரியல் *miriyal*, பெ.(n.) மிளகு; pepper.

[(நுள்)→நெள்→நெரி→நெரியல்→மெரியல் →மிரியல் (மு.தா.155).]

மிரியலகம் *miriyalagam*, பெ.(n.) மிரியல் பார்க்க; see *miriyal* (சா.அக.).

[மிரியல் + அகம்.]

மிரியற்கொடி *miriyaṟ-koḍi*, பெ.(n.) மிளகுக் கொடி; pepper creeper-*Piper nigrum* (சா.அக.).

[மிரியல் + கொடி.]

மிரியாகூந்தல் *miriyā-kūndal*, பெ.(n.) குதிரை வாலி தவசம், ஒருவகைப் புன்செய்ப் பயிர்; poor man's horse millet.

மிரியாதியெண்ணெய் *miriyādi-eṇṇey*, பெ.(n.) கண் புகைச்சல் முதலிய கண் நோய்களுக்குப் பயன்படுத்தும் ஒருவகை எண்ணெய்; a medicated oil for eye disease (சா.அக.).

மிரியார்கூந்தல் *miriyār-kūndal*, பெ.(n.) சவுரிக் கொடி; a big creeper - *Trichosanthes Palmata* (சா.அக.).

மிரியால் *miriyāl*, பெ.(n.) மிரியம் (சங்.அக.) பார்க்க; see *miriyam*.

தெ. மிரியாலு

மிரியாலிகம் *miriyāligam*, பெ.(n.) சித்தரத்தை (சங்.அக.); lesser galangal - *Alpinia galang*.

மிருக்கெண்ணெய் *miru-k-keṇṇey*, பெ. (n.) ஒருவகை எண்ணெய், மெருகெண்ணெய்; a kind of oil for polish (சா.அக.).

[மெருகு →மிருகு + எண்ணெய்.]

மிருகக்கொட்டை *mirugakkoṭṭai*, பெ.(n.) கும்பாதிரி மரம்; lac tree.

மிருககாமினி *miruga-kāmiṉi*, பெ.(n.) வாய் விளங்கம் (மூ.அ.); common windberry.

மிருகண்மூலம் *mirugaṇ-mūlam*, பெ.(n.) திப்பிலிவேர் (சங்.அக.); long-pepper root.

மிருகபத்திரி *miruga-pattiri*, பெ.(n.) வறட்சுண்டி; floating sensitive - plant.

மிருகமதவாசை *miruga-mada-vāšai*, பெ.(n.) கத்தூரி மல்லிகை (மூ.அ.); musk jasmine.

மிருகாலா *mirugālā*, பெ.(n.) நன்னீர்மீன்; cirrhina mrigala (mingal) (சா.அக.).

மிருங்கம் *miruṅgam*, பெ.(n.) கையாந்தகரை (மலை.); a plant.

மிருஞ்சி *miruñji,* பெ.(n.) செம்முருங்கை; a red species of hyperanthera moringa (சா.அக.).

மிருடாகம் *mirudāgam,* பெ.(n.) மாமரம்; mango tree - *Mangifera indica* (சா.அக.).

மிருடாலகம் *mirudālagam,* பெ.(n.) மிருடாகம் பார்க்க; see *mirudāgam.*

மிருடி *mirudi,* பெ.(n.) மான்; deer (சா.அக.).

மிருணாலம் *mirunālam,* பெ.(n.) தாமரை நூல் (யாழ்.அக.); lotus - fibre.

மிருணாலி *mirunāli,* பெ.(n.) தாமரை (மூ.அ.); lotus.

மிருத்திகம் *miruttigam,* பெ.(n.) கொடி முந்திரி (சங்.அக.); grape vine.

மிருத்திகை *miruttigai,* பெ.(n.) 1. மண்; earth. 2. ஒருவகை உவர்மண்; a kind of fuller's earth (சா.அக.).

மிருத்தியகெந்தம் *miruttiya-kendam,* பெ.(n.) 1. கல்லுப்பு; rock salt. 2. சிறு செண்பகம்; small champauk - *Michelia nilagirica* with small flowers (சா.அக.).

மிருத்தியம் *miruttiyam,* பெ.(n.) மிருத்திகை பார்க்க; see *miruttigai*(சா.அக.).

மிருத்தியல் *miruttiyal,* பெ.(n.) தூதுவளை (சங்.அக.); climbing brinjal.

மிருத்தியுபலம் *miruttiyupalam,* பெ.(n.) இலந்தை (மூ.அ.); jujube-tree.

மிருத்தியுபலை *miruttiyupalai,* பெ.(n.) 1. வாழை (மூ.அ.); plantain. 2. மூங்கில்; bamboo (சங்.அக.).

மிருத்தியுபிரசூனம் *miruttiyupirašūnam,* பெ.(n.) கரும்பு (யாழ்.அக.); sugar-cane.

மிருத்தியுபுட்பம் *miruttiyuputpam,* பெ.(n.) கரும்பு; sugar-cane - *Saccharum officinarum* (சா.அக.).

மிருத்துசம் *miruttušam,* பெ.(n.) மூங்கில்; bamboo (சா.அக.).

மிருத்துவிகா *miruttuvikā,* பெ.(n.) புளி கொடி முந்திரி; sour grapes - *Vitis vinifera* (சா.அக.).

மிருத்துவீசம் *miruttuvīšam,* பெ.(n.) மூங்கில் (மலை.); spiny bamboo.

மிருதங்கம் *mirudaṅgam,* பெ.(n.) மூங்கில் (யாழ்.அக.); bamboo.

மிருதபலி *mirudapali,* பெ.(n.) பேய்ப்புடல்; wild snake gourd - useful for fever (சா.அக.).

மிருதம் *mirudam,* பெ.(n.) தண்ணீர்விட்டான் (மலை.); climbing asparagus.

மிருதவள்ளி *mirudavalli,* பெ.(n.) வள்ளிக் கிழங்கு; sweet potato - *Ipomoca batatas* (சா.அக.).

மிருதாசியம் *mirudāšiyam,* பெ.(n.) கருப்பறுகு; a black variety of rub grass.

மிருதுபலம் *mirudupalam,* பெ.(n.) பேரீந்து (மூ.அ.); date palm.

மிருதுபலா *mirudupalā,* பெ.(n.) நெல்லி (மலை.); emblic myrobalan.

மிருதுமம் *mirudumam,* பெ.(n.) இலாமிச்சை (சங்.அக.); cuscus grass.

மிருதூவிகம் *mirutūvigam,* பெ.(n.) மூங்கில்; bamboo (சா.அக.).

**மிருதூற்பலம்** *mirudūṟpalam,* பெ.(n.) கரு நெய்தல்; blue Indian water-lilly.

**மிருந்தாலகம்** *mirundālagam,* பெ.(n.) 1. உவர் மண் (சங்.அக.); fuller's earth. 2. துவரை (மலை.); dholl.

**மிருநாளம்** *mirunāḷam,* பெ.(n.) 1. தாமரைத் தண்டு; stalk of the lotus. 2. இலாமிச்சை (தைலவ.தைல.); cuscus grass.

**மிருநாளீசம்** *mirunāḷīšam,* பெ.(n.) தாமரையின் நரம்பு (தாமரைத் தாது); filaments of lotus flower, fibres of lotus (சா.அக.).

**மிருநாறம்** *mirunāṟam,* பெ.(n.) தாமரை; lotus (சா.அக.).

**மிருமணி** *mirumaṇi,* பெ.(n.) சுவர் முள்ளங்கி (சங்.அக.); a parasitic plant growing on walls.

**மில்லாங்கயிறு** *millāṅgayiṟu,* பெ.(n.) படகில் பயன்படுத்தும் ஒருவகைக் கயிறு; a kind of rope used in boat.

பாய்மரக்கப்பலிற் பாயை நிறுத்துதற் பொருட்டு கட்டப்பெறுவது மில்லாங் கயிறு.

**மிலாங்கிலி** *milāṅgili,* பெ.(n.) 1. செங்காந்தள் (மலை.); red species of Malabar glory-lilly. 2. திருநீற்றுப் பச்சை (சங்.அக.); sweet basil.

**மிலாடு** *milāḍu,* பெ.(n.) மலையமான் நாடு (M.P.S.A.525); country of *Malaiyamāṉ.*

*[மலையமான் நாடு→மலைநாடு→மலாடு→ மிலாடு.]*

இச்சொல் கல்வெட்டுக்களில் 'மலாடு' என்று குறிக்கப்பெற்றுள்ளது. நடுநாட்டின் வளநாடுகளில் ஒன்று.

நடுவில் மண்டலத்துப் பெண்ணை வடகரை மலாடாகிய ஐந்நாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோயிலூர் (தெ.கல்.தொ.7, கல்.936).

**மிலாடுடையார்** *milāḍuḍaiyār,* பெ.(n.) மலையமான் நாட்டின் அரசன், மெய்ப்பொருள் நாயனார்; *Malaiyamāṉ NāḍuMey-p-poruḷ nāyaṉār. "இரண்டு கையுடையாராகக் கனமாகச் செய்த தத்தா நமரேகாண் என்ற மிலாடுடையார் ஒருவர்" (தெ.கல்.தொ.2:2, கல்.40).*

*[மிலாடு + உடையார்.]*

**மிலார்** *milār,* பெ.(n.) விளாறு; twig.

*[வளார் →விளார்→மிலார். வளார் = வளைந்த சிறு போத்து (மு.தா.70).]*

**மிலாரடி** *milāraḍi,* பெ.(n.) 1. கலக்கம்; perturbation; dilamma. 2. உன்மத்தன்; unfeelingness; stupor, stupefaction.

*[மலாரடி → மிலாரடி. மலாரடி = கலக்கம்.]*

**மிலாறு** *milāṟu,* பெ.(n.) விளாறு (C.G.); twig, switch.

*[மிலார் →மிலாறு (மு.தா.70).]*

**மிலை¹-தல்** *milai-,* 2 செ.கு.வி.(v.i.) சூடுதல்; to put on wear. *"உழிஞைப் பவரொடு மிலைந்து" (*புறநா.*77).*

*[மலை → மிலை. மலை-தல் = சூடுதல்.]*

**மிலை²-த்தல்** *milai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மயங்குதல்; to be bewildered. *"மிலைத்தலைந்தேனை" (திருவாச.6:40).* 2. கனைத்தல்; to low, as a cow. *"எப்படி யூரா மிலைக்கக் குருட்டா மிலைக்கு மென்னும்" (திவ்.இயற்.திருவிருத்.94).*

*[மலை-த்தல் → மிலை-த்தல்.]*

**மிலை[3]** *milai,* பெ.(n.) தலைமேலணி; head ornament.

*[மிலை[1] →மிலை[3].]*

**மிலைச்சம்** *milaiccam,* பெ.(n.) சாதிலிங்கம் (சங்.அக.); vermilian.

**மிலைச்சு-தல்** *milaiccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மிலை[1]-தல் பார்க்க; see *milai-. "நலம்பெறு சென்னி நாமுற மிலைச்சி" (குறிஞ்சிப்.116).*

*[மிலை[1] →மிலைச்சு→மிலைச்சு-தல்]*

**மிழலை[1]** *miḻalai,* பெ.(n.) மழலைச் சொல் (சூடா.); prattle, lisp.

*[மிழற்று→மிழலை. மிழற்று-தல் = மழலைச் சொல் பேசுதல்.]*

**மிழலை[2]** *miḻalai,* பெ.(n.) மிழலைக்கூற்றம் பார்க்க; see *miḻalai-k-kūṟṟam. "புனலம் புதவின் மிழலையொடு" (புறநா.24).*

**மிழலைக்கூற்றம்** *miḻalai-k-kūṟṟam,* பெ.(n.) சோணாட்டின் ஒரு பகுதி (புறநா.24, உரை); a division of *Coḻa-nāḍu. "மிழலைக் கூற்றத்து வடபாம்பாற்றுச் சுந்தர பாண்டிய நல்லூர் சிறுவம்பூர்" (தெ.கல்.தொ.5, கல். 987).*

*[மிழலை + கூற்றம்.]*

தஞ்சை, மதுரை மாவட்டங்களைச் சேர்ந்த பகுதி மிழலைக் கூற்றம். இது வேள்எவ்வி ஆண்ட பகுதி. பாண்டி நாட்டின் இராசேந்திர சோழ வளநாட்டின் உட்பிரிவுகளுள் ஒன்று.

**மிழலைச்சதகம்** *miḻalai-c-cadagam,* பெ.(n.) 16ஆம் நூற்றாண்டில் சர்க்கரைப் புலவர் மிழலை நாட்டின் பெருமையைப் பற்றிப் பாடிய சதகம்; a *śadagam* on the greatness of *miḻalai,* by Cakkarai-*pulavar.*

*[மிழலை[2] + சதகம். சதகம் = 100 பாடல்கள் கொண்ட சிற்றிலக்கிய வகை.]*

**மிழலைநாடு** *miḻalai-nāḍu,* பெ.(n.) பழந்தமிழ்ச் சோழ நாடுகளுள் ஒன்று; an ancient *Cōḻā* country in Tamil nadu. *"வடகரை மிழலை நாடு" (திருவிசலூர் கல்வெட்டு. தெ.கல். தொ.23, கல்.22). "நீதி வழுவா நெறியினராய் நிலவுங் குடியால் நெடுநிலத்து மீது விளக்கும் தொன்மையது மிழலை நாட்டுப் பெருமிழலை" (பெரியபு.23:1).*

*[மிழலை + நாடு.]*

கும்பகோணம் வட்டத்தின் கிழக்குப் பகுதியில் காவிரியின் வடகரையிலுள்ள சோழபுரம், சேய்ஞ்ஞலூர், திருவாய்பாடி மிழலை, திருத்தேவன்குடி ஆகிய ஊர்களடங்கிய பகுதி மிழலை நாடாகும். மிழலைநாடு பற்றிய தமது ஆய்வில் அறிஞர் ஒருவர் இராசேந்திர சிங்க வளநாடு என்பது காவிரியாற்றின் வடகரையில் இருந்த ஒரு பெரிய நிலப்பரப்பாகும். இவ் வளநாட்டில் 20 உள்நாடுகள் இருந்தன என்றும், அதில் ஒன்றே மிழலை நாடு என்றும், அம்மிழலை நாடு தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள கும்பகோணம் வட்டத்தில் காவிரியாற்றுக்கு வடக்கே மண்ணியாற்றின் தென்கரை வரையில் அமைந்திருந்ததோர் வளநாடு என உரைக்கிறார். மேலும் பெருமிழலை அந்நாட்டின் தலைநகர் என்றும் கழகக் காலத்தில் (சங்க காலத்தில்) சுட்டப்படும் மிழலைக் கூற்றம் பாண்டிய நாட்டுப் பகுதி என்பது இவர் எண்ணம் (செந்தமிழ்ச் செல்வி சிலம்பு-23, பக்.163:66).

**மிழற்றல்** *miḻaṟṟal,* பெ.(n.) 1. சொல்லுகை (சூடா.); speaking. 2. மிழலை[1] பார்க்க (யாழ்.அக.); see *miḻalai.* 3. பேசுவதால் எழும் மொழி (யாழ்.அக.); noise of speaking.

*[மிழற்று → மிழற்றல்.]*

**மிழற்று–தல்** *mil̠ar̠r̠u-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மழலைபோல் இனிமையாகப் பேசுதல்; to prattle as a child. *"பண்கள் வாய்மிழற்றும்" (கம்பரா.நாட்டு.10).* 2. மெல்லக் கூறுதல்; to speak softly. *"யான் பலவும் பேசிற் றானொன்று மிழற்றும்" (சீவக.1626).*

**மிழறு–தல்** *mil̠ar̠u-,* 5 செ.குன்றாவி.(v.t.) மிழற்று–தல் பார்க்க; see *mil̠ar̠r̠u.*

*[முழா → மிழா (வே.க.முல்.4).]*

**மிழா** *mil̠ā,* பெ.(n.) பருத்த ஆண்மான்; stag, male of red deer or of other large kinds of deer.

*[முழா → மிழா (வே.க.முல்.4).]*

**மிளகம்மை** *miḷagammai,* பெ.(n.) ஒரு வகை அம்மை நோய்; a kind of pox (சா.அக.).

*[மிளகு + அம்மை. மிளகு போன்ற கொப்புளம் உண்டாக்கும் அம்மை நோய்.]*

**மிளகரணை** *miḷagaraṇai,* பெ.(n.) மிளகு கரணை (வின்.) பார்க்க; see *miḷagu-karaṇai.*

**மிளகரந்தி** *miḷagarandi,* பெ.(n.) மிளகு கரணை (வின்.) பார்க்க; see *miḷagu-karaṇai.*

**மிளகறுப்பான்** *miḷagar̠uppān̠,* பெ.(n.) நெல் வகை; a kind of paddy.

**மிளகறையன்** *milagar̠aiyan̠,* பெ.(n.) புடவை வகை (யாழ்.அக.); a kind of saree.

**மிளகாணம்** *miḷagāṇam,* பெ.(n.) மிளகாய்க்குப் பதிலாக மிளகு சேர்த்துச் சமைத்த குழம்பு (யாழ்ப்.); sauce prepared with pepper instead of chillies.

*[மிளகு + ஆணம்². ஆணம் = குழம்பு.]*

**மிளகாய்** *miḷagāy,* பெ.(n.) 1. காரமுள்ள காய் விளையும் செடி வகை; chilly plant - *Capsicum frutescens.* 2. கறி மிளகாய்; chilly used for curry preparations - *Capsicum annum - Spanish pepper,* red pepper. 3. மிளகுகாய்; carienne pepper.

தெ. மெரப்பக்காய்

வகைகள்: 1. மிளகாய், 2. சிவப்பு மிளகாய், 3. பச்சை மிளகாய், 4. கொள்ளி மிளகாய், 5. சீமை மிளகாய், 6. காந்தாரி மிளகாய், 7. சீனத்து மிளகாய், 8. ஈர மிளகாய், 9. சீமைப் பச்சை மிளகாய், 10. ஊசி மிளகாய். மிகு உறைப்பான மிளகாய். இது கதிர் வெப்பத்தைப் புசிப்பதனால் மிக உறைப்பாக இருக்கும் (சா.அக.).

மிளகாய் காரமுடையப் பொருள். ஊசிமிளகாய், குடைமிளகாய் முதலியன நடு ஆசியாவில் இருந்து வந்ததாகக் கூறப்படுகிறது. இச்செடி நம் நாட்டினதன்று. அயல்நாட்டினின்று இந்திய முன்னோர் நம்நாட்டிற்குக் கொண்டுவந்துப் பயிராக்கினர். இக்காயினைக் காயாகவும், பழமாகவும் உலர்த்தியும், கறி முதலியவற்றிற்குப் பயன்படுத்துவர் (அபி.சிந்.).

நம் நாட்டில் காரத்திற்கு மிளகையே பயன்படுத்தி வந்தனர். இதே போல் காரமுடைய காயை இங்கு இறக்குமதி செய்தபின் மிளகு போன்ற காரமுடைய காயானதால் மிளகாய் என்ற வழங்கினர்.

முள் போன்று மேற்பரப்புடையதானதால் முள் → முளகு என்றானது.

*[முள் → முளகு → முளகாய் → மிளகாய் (மு.தா.ப.155).]*

**மிளகாய்ச்சக்களத்தி** *miḷagāy-šakkaḷatti,* பெ.(n.) மிளகாய் செடி போன்று தோற்றமுடைய களைச் செடிவகை (மூ.அ.); a weed, vinea pusilla.

*[மிளகாய் + சக்களத்தி . சக்களத்தி = போலி, போலிபொருள்.]*

**மிளகாய்ப்பழம்** *miḷagāy-p-paḻam,* பெ.(n.) காய்ந்த அல்லது பழுத்த மிளகாய்; ripe and dried red chilly as opposed to (பச்சை மிளகாய்) green chilly.

*[மிளகாய் + பழம்.]*

**மிளகாய்ப்புள்** *miḷagāy-p-puḷ,* பெ.(n.) நீள் சிறகும் தோலடியும் உடைய கடற் பறவை வகை (வின்.); a kind of gull.

*[மிளகாய் + புள்.]*

**மிளகாய்ப்பூண்டு** *miḷagāy-p-pūṇḍu,* பெ.(n.) மிளகாய்ச்சக்களத்தி பார்க்க; see *miḷagāy-c-cakkaḷatti.*

*[மிளகாய் + பூண்டு.]*

**மிளகாய்ப்பொடி** *miḷagāy-p-poḍi,* பெ.(n.) குழம்புக்குத் துணைப்பொருளாய்ப் பயன்படும் மிளகாய்த் தூள்; powder of chillies with spices, used as a relish.

*[மிளகாய் + பொடி.]*

**மிளகாய்மீன்** *miḷagāy-mīṉ,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish.



**மிளகாய்வற்றல்** *miḷagāy-vaṟṟal,* பெ.(n.) வெயிலில் காய வைத்த மிளகாய்; dried chilli.

*[மிளகாய் + வற்றல்.]*

**மிளகாயரை–த்தல்** *miḷagāy-arai-,* 4 செ.கு.வி.(v.i.) ஏமாந்தவனை ஆட்டிப் படைத்தல்; one who credulous to distribute. *கொஞ்சம் அயர்ந்தால் போதும் தலையிலே மிளகாய் அரைத்துவிடுவாயே (உ.வ.).*

*[மிளகாய் + அரை–த்தல்.]*

**மிளகாயிலை** *miḷagāy-ilai,* பெ.(n.) மிளகாயினிலை; மிளகாய் இலைகளில் உள்ள சாற்றைச் செப்புக் காசுகளின் மேல் தடவி இலைகளில் பொதிந்து புடம்போடப் பயன்படுத்துவர்; leaf of chilly plant a piece of copper is covered by the paste of this leaf, luted and subjected to [புடம்/pudam] calcination fire, it become calcined powder (சா.அக.)

*[மிளகாய் + இலை.]*

**மிளகி** *miḷagi,* பெ.(n.) மிளகுச்சம்பா (நாமதீப.351) பார்க்க; see *miḷagu-c-cambā.*

*[முல் → முள் → முளகு → முளகி → மிளகி (மு.தா.155)]*

**மிளகு** *miḷagu,* பெ.(n.) 1. சமையலில் பயன்படுத்தும் சின்னஞ்சிறிய காரமான கருப்பு நிறக்காய்; black pepper. 2. கொடிவகை; black pepper, *Piper nigrum.* 3. திரிகடுகத் தொன்றான மிளகுக் கொடியின் காய்; pepper-corn, one of *tiri-kaḍugam.* *"மிளகறி யுலக்கையின்" (பதிற்றுப்.41). "மிளகு சிறுத்தாலும் வீரியம் போகாது", "மிளகுபெய் தனைய சுவைய*

*புன்காய்" (நற்.66:1).* 4. மிளகுச்சம்பா பார்க்க; see *milagu-c-cambā.* 5. கிச்சிலிக் கரணை (வின்.); lopez root.

ம. மிலகு; க. மெழசு.

வகைகள்: 1. வெள்ளை மிளகு, 2. கருப்பு மிளகு, 3. கொச்சி மிளகு, 4. பச்சை மிளகு (சா.அக.).

*[முல்→ முள்→முளகு→மிளகு (மு.தா.).]*

கொடியாகப் படரும் ஒரு பயிரின் கனிதான் மிளகு. இது மிகுதியாக கேரளநாட்டில் பயிராகிறது. மிளகுக் கொடி நான்கு அல்லது ஐந்து ஆண்டுகளில் பலன் கொடுக்கத் தொடங்கும் வாழ்நாள் 50 ஆண்டுகள் என்பர். அதற்கு மேலும் வாழ்வதுண்டு. போர்த்துக்கீசியர் பரப்பிய மிளகாய்க்கு முன் மிளகையே தமிழர் பயன்படுத்தி வந்தனர். வெளிநாட்டினர் இந்நாட்டிற்கு வழிகண்டுபிடிக்க முற்பட்டது மிளகு போன்ற நறுமணப் பொருளுக்காகவே என்பர் (குழந்.கலை.).

**மிளகுக்கஞ்சி** *milagu-k-kañji,* பெ.(n.) குரங்கு; monkey (சா.அக.).

*[மிளகு + கஞ்சி.]*

**மிளகுக்கரணை** *milagu-k-karaṇai,* பெ.(n.) கிச்சிலிக்கரணை; lopez root.

*[மிளகு + கரணை.]*

**மிளகுக்கருக்கு** *milagu-k-karukku,* பெ.(n.) மிளகுப் பொடியால் செய்யும் குடிநீர் (கருக்கு); tincture of pepper.

*[மிளகு + கருக்கு.]*

**மிளகுக்கறி** *milagu-k-kaṟi,* பெ.(n.) 1. மிளகுங் காடியுஞ் சேர்ந்த கறி (பரவ.); curry containing black pepper and vinegar. 2. மிளகாணம் பார்க்க; see *milagāṇam.*

*[மிளகு + கறி.]*

**மிளகுக்காய்** *milagu-k-kāy,* பெ.(n.) ஒருவகைக் காரமான காய், அழற்காய்; a kind of pungent fruit (சா.அக.).

*[மிளகு + காய்.]*

**மிளகுக்காயின்காம்பு** *milagu-k-kāyiṉ-kāmbu,* பெ.(n.) மிளகுச் செடியில் மிளகு நீங்கிய உலர்ந்த காம்பு; the stalk of the pepper bunch (சா.அக.).

*[மிளகு + காய் + இன் + காம்பு.]*

**மிளகுக்கியாழம்** *milagu-k-kiyāḻam,* பெ.(n.) மிளகைக் கொண்டு வடித்த கருக்கு நீர் (கஷாயம்); pepper decoction prepared without frying it relieves kapha diseases; decoction prepared after charing it is used for pitha diseases (சா.அக.).

*[மிளகு + கியாழம்.]*

**மிளகுக்குத்தல்** *milagu-k-kuttal,* பெ.(n.) மிளகை ஊசியில் குத்தி நெருப்பில் காட்டி புகை பிடிக்கை; inhalation of the pepper smoke (சா.அக.).

*[மிளகு + குத்தல்.]*

**மிளகுக்குழம்பு** *milagu-k-kuḻambu,* பெ.(n.) மிளகாணம் பார்க்க; see *milagāṇam.*

*[மிளகு + குழம்பு.]*

**மிளகுச்சம்பா** *milagu-c-cambā,* பெ.(n.) மிளகு போன்ற சிறுமணிகளையுடைய உயர்ந்த சம்பா நெல்வகை (பதார்த்த.813); *Cambā* paddy of superior quality, as having grains like pepper-corn.

*[மிளகு + சம்பா.]*

**மிளகுச்சாரணை** *miḷagu-c-cāraṇai,* பெ. (n.) ஒருவகைச் செடி; a plant (சா.அக.).

*[மிளகு + சாரணை.]*

**மிளகுச்சாறு** *miḷagu-c-cāṟu,* பெ.(n.) மிளகுத்தண்ணீர் (யாழ்.அக.) பார்க்க; see *miḷagu-t-taṇṇīr.*

*[மிளகு + சாறு.]*

**மிளகுச்சோறு** *miḷagu-c-cōṟu,* பெ.(n.) மிளகுப்பொடி, சீரகம் முதலியன சேர்த்து செய்த பொங்கல் வகை (யாழ்.அக.); boiled rice, prepared with pepper powder cumin etc.

*[மிளகு + சோறு.]*

**மிளகுத்தக்காளி** *miḷagu-t-takkāḷi,* பெ.(n.) காரற் கத்திரி; brinjal.

*[மிளகு + தக்காளி.]*

**மிளகுத்தண்ணீர்** *miḷagu-t-taṇṇīr,* பெ.(n.) மிளகு மிகுதியாகச் சேர்த்த சாறு (ரசம்); mulligatawny, a soup highly seasoned with pepper.

*[மிளகு + தண்ணீர்.]*

**மிளகுத்தரகு** *miḷagu-t-taragu,* பெ.(n.) மிளகு வணிகர்கள் கொடுக்கும் வரி (I.M.P.S. A.140); an ancient tax on pepper.

*[மிளகு + தரகு.]*

**மிளகுத்துவரை** *miḷagu-t-tuvarai,* பெ.(n.) சின்னத் துவரை; small leaved ebony - *Diospyros microphylas* (சா.அக.).

*[மிளகு + துவரை.]*

**மிளகுத்தூள்** *miḷagu-t-tūḷ,* பெ.(n.) மிளகின் தூள்; powder of pepper (சா.அக.).

*[மிளகு + தூள்.]*

**மிளகுத்தைலம்** *miḷagu-t-tailam,* பெ.(n.) மிளகு சேர்த்து வடித்த எண்ணெய் (இராசவைத்.159); a medicinal oil prepared from pepper.

*[மிளகு + **Skt.** தைலம்.]*

**மிளகுதிரி** *miḷagu-tiri,* பெ.(n.) அம்மை நோய் வகை (வின்.); a species of small pox.

*[மிளகு + உதிரி. மிளகை உதிரியாகப் போட்டாற்போல் கொப்புளம் போடும் அம்மை வகை.]*

**மிளகுநங்கை** *miḷagu-naṅgai,* பெ.(n.) செடிவகை (M.M.562); pepper *naṅgay, Polygala chinensis.*

*[மிளகு + நங்கை.]*

**மிளகுநீர்** *miḷagu-nīr,* பெ.(n.) மிளகுத் தண்ணீர் பார்க்க; see *miḷagu-t-taṇṇīr.*

*[மிளகு + நீர்.]*

**மிளகுப்பட்டுமணி** *miḷagu-p-paṭṭumaṇi,* பெ.(n.) கழுத்தணி வகை (பரவ.); kind of necklace.

**மிளகுப்புளிப்பு** *miḷagu-p-puḷippu,* பெ.(n.) எலுமிச்சைச் சாறு கலந்த மிளகு ஊறுகாய்; pepper pickle in the juice of lime (சா.அக.).

*[மிளகு + புளிப்பு.]*

**மிளகுப்பெட்டி** *miḷagu-p-peṭṭi,* பெ.(n.) அஞ்சறைப் பெட்டி (இ.வ.); box of condiments.

*[மிளகு + பெட்டி.]*

**மிளகுப்பொடி** *miḷagu-p-poḍi,* பெ.(n.) 1. மிளகுத்தூள் (தெ.இ.கல்.தொ.2:127); powdered pepper. *முட்டை அடையில் மிளகுத் பொடியைத் தூவிக் கொடு.* 2. மிளகும் சீரகமும் உப்புங் கலந்து சோற்றோடு உண்ண உதவும் பொடி; powdered pepper with cumin and salt used as a relish.

*[மிளகு + பொடி.]*

**மிளகுபட்டினி** *miḷagu-paṭṭiṉi,* பெ.(n.) மகப்பேறு வேண்டிச் சில மிளகு மட்டும் உட்கொண்டு பசிபொறுத்திருக்கும் நோன்பு; a fast which consists in taking only a few grains of pepper as food, undertaken by a childless person with a view to be blessed with a child.

*[மிளகு + பட்டினி.]*

**மிளகுரசம்** *miḷagu-rašam,* பெ.(n.) மிளகுத் தண்ணீர் பார்க்க; see *miḷagu-t-taṇṇīr.*

*[மிளகு + **Skt.** ரசம்.]*

**மிளகுவட்டம்** *miḷagu-vaṭṭam,* பெ.(n.) கழுத்தணி வகை (பரவ.); a kind of necklace.

*[மிளகு + வட்டம். மிளகு போல் செய்யப்பட்ட உருக்களையுடைய கழுத்தணி.]*



**மிளகுவல்லி** *miḷagu-valli,* பெ.(n.) மிளகுக் கொடி; pepper creeper - *Piper nigrum* (சா.அக.).

*[மிளகு + வல்லி. வல்லி = கொடி.]*

**மிளகெண்ணெய்** *miḷageṇṇey,* பெ.(n.) மிரியாதியெண்ணெய் பார்க்க; see *miriyādi-eṇṇey.*

*[மிளகு+ எண்ணெய். மிளகை முதன்மையாகக் கொண்டு செய்யப்படும் மருந்தெண்ணெய்.]*

**மிளகெலி** *miḷageli,* பெ.(n.) மிளகுக் கொடிகளைக் கடித்தழிக்கும் எலி வகை (M.M.676); pepper rat as damaging pepper vine.

*[மிளகு + எலி.]*

**மிளகோதனம்** *miḷagōdaṉam,* பெ.(n.) மிளகுச்சோறு (பதார்த்த.1404) பார்க்க; see *miḷagu-c-cōṟu.*

*[மிளகு + ஓதனம். ஓதனம் = சோறு, உணவு.]*

**மிளகோரை** *miḷagōrai,* பெ.(n.) மிளகுச் சோறு பார்க்க; see *miḷagu-c-cōṟu.*

*[மிளகு + ஓரை³. ஓரை = சோறு.]*

**மிளப்பு** *miḷappu,* பெ.(n.) இலவங்கம் (சங். அக.); wild cinnamon.

**மிளாறு** *miḷāṟu,* பெ.(n.) சவுக்கு, புளி முதலிய மரத்தின் வளைந்து கொடுக்கும் தன்மையுள்ள இளங்கொம்பு; the flexible twig of certain trees, such as tamarind. *மாணவன் தவறு செய்துவிட்டான் என்பதற்காக இப்படியா புளிய மிளாறினால் அடிக்க வேண்டும்.*

*[வளாறு→மிலாறு→மிளாறு.]*

**மிளிர்¹–தல்** *miḷir-,* 2 செ.கு.வி.(v.i.) 1. புரளுதல்; to turn, roll, as eyes. *"மீநில மெய்தி மிளிர்ந்துருகா" (சீவக.1384). "கெண்டை யொண்கண் மிளிர" (திவ். பெரியதி.3. 7:2).* 2. கீழ்மேலாதல்; to be upset,

to be turned topsy turvy. *"உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி" (பெரும்பாண்.92).* 3. குதித்தல்; to jump. *"மிளிர்ந்துவீ ழுருவியும்" (சீவக.148).* 4. ஒளிர்தல்; to shine, gleam. *"மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே" (திருவாச.1: 38).* 5. பெருமை யடைதல் (வின்.); to become famous.

*[முல் (மில்) → மின் → மின்னல். (மில்) வில் = ஒளி. முல் → முள் → மள் → மண் → மணி = விளங்கும் கல். முள் → (மிள்) → மிளிர் = ஒளிர்தல் (மு.தா.ப.139).]*

**மிளிர்²–த்தல்** *miḷir-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. புரட்டுதல்; to roll, turn over. *"மால்வரை மிளிர்க்கு முருமினும்" (நற்.2).* 2. கீழ் மேலாக்குதல்; to upset. *"பெருமலை மிளிர்ப்பன்ன காற்றுடைக் கன பெயல்" (கலித்.45).*

*[மிளிர்¹–தல் → மிளிர்²–த்தல்.]*

**மிளிர்³** *miḷir,* பெ.(n.) 1. ஒளி (ஆ.நி.8:11); light, splendndour. 2. பெருமை (யாழ்.அக.); greatness.

*[மிளிர்¹–. → மிளிர்³.]*

**மிளிர்வை** *miḷirvai,* பெ.(n.) குழம்பிலிடுங் கறித்துண்டு; pieces of flesh and vegetables in sauce. *"கருங்கண் வராஅற் பெருந்தடி மிளிர்வை யொடு" (நற்.60).*

*[மிளிர் → மிளிர்வை.]*

**மிளிறு** *miḷiṟu,* பெ.(n.) 1. கரடி (சது.); bear. 2. காகம்புல்; a grass.

**மிளிறை** *miḷiṟai,* பெ.(n.) அரிவாள் மூக்குப் பூண்டு; bill-hook nose.

**மிளை** *miḷai,* பெ.(n.) 1. காவற்காடு; wood, forest, serving as a defence. *"செல்லா வருமிளை புகுமின்" (சீவக.1142).* 2. குறுங்காடு; thicket copse. *"அருமிளைக் குண்டகழி" (பு.வெ.6:5).* 3. சிறுதூறு; bush. *"முயறுளர் மிளை முயறுள" (திவ். பெரியதி. 8.7:3).* 4. கட்டுவேலி (சிலப்.13:183, உரை); fenced enclosure. 5. காவல்; guard, watch. *"மிளைசூழ் கோவலர்" (மலைபடு. 409).* 6. ஊர்ப்பெயர்; a village name.

க. மிளே.

*[மிடை → மிளை. மிடை = தூறு.]*

**மிளைக்கந்தனார்** *miḷai-k-kandaṉār,* பெ.(n.) குறுந்தொகை 196ஆம் பாடலைப் பாடிய கழகக் காலப் புலவர்; a *Śaṅgam* poet.

*[மிளை + கந்தனார்.]*

இவரின் இயற்பெயர் கந்தனார். மிளை என்னும் ஊரினைச் சேர்ந்தவராதலின் மிளைக் கந்தனார் என வழங்கப்பட்டார். பாரி வள்ளலின் பறம்பு மலையின் சுனைநீரைப் பற்றிப் பாடியுள்ளதால் பாரியின் காலத்தைச் சேர்ந்தவராகலாம்.

*"வேம்பின் பைங்காயென் தோழி தரினே*
*தேம்பூங் கட்டி யென்றனிர் இனியே*
*பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்*
*தைஇத் திங்கட் டண்ணிய தரினும்*
*வெய்ய உவர்க்கும் என்றனிர்*
*ஐய அற்றால் அன்பின் பாலே" (குறுந்.196).*

**மிளைகிழான்நல்வேட்டனார்** *miḷai-kiḻāṉ-nal-vēṭṭaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a *Śaṅgam* poet.

*[மிளை + கிழான் + நல்வேட்டனார். மிளை என்பது ஊர்ப்பெயர்.]*

நல்வேட்டனார் என்று வேறு அடையின்றியும் இவர் பெயர் காணப்படுகின்றது. வேளாண் மரபினர். இவர் பேய்க் காஞ்சியைத் தலைமகன் தனக்கு உவமை கூறியதாகப் பாடியுள்ளார் (நற்.349). இவர் ஐந்து திணையையும் பாடுவதில் வல்லவர். அடைக்கலமாக

வந்தோர்க்கு ஏற்படும் துன்பத்தைப் போக்குவதே செல்வம் எனப்படும். ஏனையச் செல்வம் தவப்பயனால் எய்துவன வாமென்கிறார் (நற்.210). நற்றிணையில் 4 பாடல்களும் குறுந்தொகையில் 1 பாடலும் இவர் பாடியவையாகும்.

*"பல்வீ படரிய பசுநனைக் குரவம்*
*பொரிப்பூம் புன்கொடு பொழிலணிக்*
*கொளாஅச்*
*சினையினி தாகிய காலையுங் காதலர்*
*பேணா ராயினும் பெரியோர் நெஞ்சத்துக்*
*கண்ணிய ஆண்மை கடவ தன்றென*
*வலியா நெஞ்சம் வலிப்ப*
*வாழ்வேன் தோழியென் வன்க ணானே"*

*(குறுந்.341).*

**மிளைப்பெருங்கந்தனார்** *mil̤ai-p-peruṅ kandaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a *thamizh-k-kazhagam* poet.

*[மிளை + பெரும் + கந்தனார்.]*

காமத்தின் இயல்பை குறுந்தொகை 136, 204, 234 ஆகிய பாடல்களில் அழகாக எடுத்தியம்பும் பாங்கு போற்றுதற்குரியது.

*"சுடர்செல் வானஞ் சேப்பப் படர்கூர்ந்து*
*எல்லுறு பொழுதின் முல்லை மலரும்*
*மாலை என்மனார் மயங்கி யோரே*
*குடுமிக் கோழி நெடுநகர் இயம்பும்*
*பெரும்புலர் விடியலும் மாலை*
*பகலும் மாலை துணையிலோர்க்கே"*

*(குறுந்.234)*

மாலைக் காலத்தில் மட்டுமே காமநோய் மிகுதியாக வருத்தும். காதலர் பிரிந்து தமியராயினார்க்கு எல்லாச் சிறுபொழுதும் மாலைக்காலம் போன்றே நோயை மிகுவிக்கும் என்பது கருத்து. மிளைக் கந்தனரும் இவரும் வேறுவேறு என்றும் கூறப்படுகிறது.

**மிளைவேள்தித்தனார்** *mil̤ai-vēḷ-tittaṉār,* பெ.(n.) குறுந்தொகை 284ஆம் பாடலைப் பாடிய கழகக் காலப் புலவராவார்; a *Śaṅgam* poet.

*[மிளை + வேள் + தித்தனார்.]*

*"பொருத யானைப் புகர்முகங் கடுப்ப*
*மன்றத் துறுகல் மீமிசைப் பலவுடன்*
*ஒண்செங் காந்தள் அவிழும் நாடன்*
*அறவ னாயினும் அல்ல னாயினும்*
*நம்மே சுவரோ தம்மிலர் கொல்லோ*
*வரையிற் றாழ்ந்த வால்வெள் ளருவி*
*கொன்னிலைக் குரம்பையின் இழிதரும்*
*இன்னா திருந்தஇச் சிறுகுடி யோரே"*

*(குறுந்.284)*

இவர் உழுவித்துண்ணும் வேளாண் மரபைச் சேர்ந்தவர்.

**மிற்கு** *miṟku,* பெ.(n.) 1. இரை (அக.நி.); food. 2. பேசுகை (அரு.நி.); speaking. 3. மென்மை (அக.நி.); softness.

**மிறல்** *miṟal,* பெ.(n.) பெருமை (யாழ்.அக.); greatness.

*[விறல் → மிறல். விறல் = பெருமை, வீரம்.]*

**மிறுக்கு** *miṟukku,* பெ.(n.) 1. துன்பம்; sorrow, trouble. 2. தொல்லை; difficulty. *"சாலமிறுக் குடைத்து" (ஈடு.2. 5:10).* 3. மிடுக்கு (திவ். பெரியாழ்.3. 4:10 வியா.); stiffness of manners.

*[மிறை→மிறுக்கு. மிறை = துன்பம், வருத்தம்.]*

**மிறுங்கம்** *miṟuṅgam,* பெ.(n.) கையாந்தகரை; a prostate plant - *Eclipta prostata* (சா.அக.).

**மிறுங்காவியம்** *mirungāviyam*, பெ.(n.) பெருந்தேட் கொடுக்கி; *perundēṭkoḍukki* (சா.அக.).

**மிறுங்கு–தல்** *mirungu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. இறுகுதல்; to harden. 2. மாறுபடுதல் (திவ். பெரியாழ்.2:6, பிர.பக்.358); to be opposed or inimical.

**மிறுசீரம்** *miru-šīram*, பெ.(n.) இலாமிச்சை (மலை.); cuscus grass.

**மிறுத்தாரி** *miruttāri*, பெ.(n.) யானை கற்றாழை அல்லது பெருங் கற்றாழை; large aloe-*Agave veracruz* (சா.அக.).

**மிறுத்தாலகம்** *miruttālagam*, பெ.(n.) துவரை; red-gram (சா.அக.).

**மிறுத்தாவிகம்** *miruttāvigam*, பெ.(n.) பெருநாரத்தை; a large citrus variety (சா.அக.).

**மிறுதார்சிங்கி** *mirutār-šingi*, பெ.(n.) சிங்கி நஞ்சு (பாஷாணம்); a kind of arsenic.

**மிறுந்திகம்[1]** *mirundigam*, பெ.(n.) மிறுந்து பார்க்க; see *mirundu.*

**மிறுந்திகம்[2]** *mirundigam*, பெ.(n.) கொடி முந்திரி; a creeper grapes - *Vitis vinifera* (சா.அக.).

**மிறுந்து** *mirundu*, பெ.(n.) நெல்லி; Indian gooseberry tree -*Emblica officinalis* (சா.அக.).

**மிறுதுஞ்சம்** *miru-tuñjam*, பெ.(n.) பெருங்காயம்; asafoetide (சா.அக.).

**மிறுதுபலா** *mirudu-palā*, பெ.(n.) மிறுந்து பார்க்க; see *mirundu.*

**மிறுதுபலிகம்** *mirudu-paligam*, பெ.(n.) பெருஞ்சீரகம்; common anise (சா.அக.).

மறுவ. சோம்பு



**மிறுதுபுட்பம்** *mirudu-puṭpam*, பெ.(n.) வாகை; vāgaitree - *Albizzialebbek* (சா.அக.).

**மிறுதுபூகம்** *mirudu-pūgam*, பெ.(n.) பெருங் குரும்பை; bowstring, hemp, stemless plant - *Sansaviera zeylanica* (சா.அக.).

**மிறை[1]–த்தல்** *mirai-*, 4 செ.குன்றாவி.(v.t.) துன்புறுத்துதல்; to oppress, harass. *"மிறைத்தார் புரமெய்த வில்லிமை" (பதினோ. திருவே.தி.59).*

**மிறை[2]–த்தல்** *mirai-*, 4 செ.கு.வி.(v.i.) 1. விறைத்தல்; to become stiff, as a limb. *"குறைத்தலை மிறைத்துக் கூத்து நின்றாடின" (கம்பரா.வேள்வி.54). "ஒருகை யிரும்பிணத் தெயிறு மிறையாக" (புறநா. 284:6).* 2. மிடுக்காயிருத்தல்; to be stuck up with pride, to be stiff in manners. *"அமரர்கள் விரும்பித் தொழ மிறைத்து" (திவ்.பெரியார்.3. 4:10).* 3. துன்பப்படுதல் (சூடா.); to suffer; to be afflicted. 4. பாடுபடுதல் (யாழ்.அக.); to labour hard.

**மிறை**[3] *mirai,* பெ.(n.) 1. அச்சம் (திவா.); fear. 2. குற்றம் (திவா.); fault, defect. 3. வருத்தம்; trouble. *"அறிவிலான் செய்யும் பெருமிறை தானே தனக்கு" (குறள், 847).* 4. துன்பம்; torment. 5. அரசிறை (சூடா.); tax. 6. வளைவு; bend, curve. *"மிறைக்கொளி திருத்தினானே" (சீவக.284).*

தெ. மெர.

*[முல் = வளைதற்கருத்து. முல்→முரு = வளைவு. முருகுதல் = வளைதல். முரு→முறு→முறை = வளைவு. முறை→மிறை = வளைவு (வே.க.4:75). ஒ.நோ. முண்டு→மிண்டு. முடுக்கு→மிடுக்கு.]*

**மிறைக்கவி** *mirai-k-kavi,* பெ.(n.) சித்திரக் கவி (திவா.); variety of metrical composition.

*[மிறை + **Skt.** கவி..]*

**மிறைக்கொளிதிருத்து-தல்** *mirai-k-koli-tiruttu-,*5 செ.குன்றாவி.(v.t.) ஆய்தத்தை வளைவு நீக்குதல்; to straighten out, as a bent weapon. *"மிறைக் கொளி திருத்துவார்" (சீவக.2293).*

*[மிறை + கொள் + திருத்து-தல்.]*

**மிறைக்கொளுவு-தல்** *mirai-k-koluvu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மிறைக்கொளி திருத்து-தல் பார்க்க; see *mirai-k-koli-tiruttu-. "எஃக மிறைக் கொளீஇ" (பு.வெ.8:21).*

*[மிறை + கொளுவு-தல். கொளுவுதல் = கூறாக்குதல், வளைவு நீக்குதல்.]*

**மின்**[1] *min,*பெ.(n.) 1. ஒளி (சூடா.); flash, glitter. *"மின்மின் கொள் கவசம்" (கம்பரா. நிகும்பலை.84). "மின்னின் றூவி இருங்குயில் பொன்னின்" (குறுந்.192:3). "மின்னுகு தளிரன்ன மெலிவுவந் துரைப்பதால்" (கலித்.48:19). "மின்னிலைப் பொலிந்த விளங்கிணர் அவிழ்பொன்" (அகநா.80 :11).* 2. மின்னல்; lightning. *"மின்னினிகழ்ந் தாகாசத்திற் காணாது" (மணிமே.29:238). "மின்கம்பிகள் அறுந்து கிடந்தன".*

தெ. மின்னுகு; க. மின்னு; ம.மின்.

**மின்**[2] *min,* இடை.(part.) முன்னிலை யேவற்பன்மை ஈறுகளில் ஒன்று (விகுதி யுளொன்று); a verbal suffix of the imperative plural. *"இர் ஈர் மின் என வரூஉம் மூன்றும் பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும் சொல்ஓ ரனைய என்மனார் புலவர்" (தொல்.சொல்.வினை.27).*

**மின்**[3] *min,* பெ.(n.) பெண்; woman. *"மின்னன்மை விபசாரத்து........ மடிந்திடும்" (நீதிசாரம்.60).*

**மின்**[4] *min,* பெ.(n.) தாழைவேர்; shrup - screw pine found grown near seashore - *Pandanam oderatisima* (சா.அக.).

**மின்**[5] *min,* பெ.(n.) 1. மின்னாற்றல், மின்சாரம்; electricity. 2. மின்சாரத்தால் இயங்கும் பொருளின் பெயர்களுக்கு முன் இடம்படும் அடைச்சொல்; a suffix of the things those operated by electricity. *மின்காந்தம், மின்தொடர் வண்டி.*

**மின்கசிவு** *min-kašivu,* பெ.(n.) கம்பியில் செல்லும் மின்சாரம் அருகில் உள்ள ஈரப்பகுதி சுவரிலோ பொருத்தியிருக்கும் கூரையிலோ பரவுதல்; electrical leakage. *மின் கசிவினால் தீப்பிடித்தல் முதலான ஏதங்கள் ஏற்பட வாய்ப்புண்டு.*

*[மின் + கசிவு.]*

**மின்கடமாலை** *minkada-mālai,* பெ.(n.) மின்னூக்கி; battery (சா.அக.).

**மின்கலம்** *minkalam,* பெ.(n.) வேதியியல் முறையில் மின்சாரம் செய்யும் அமைப்பு; battery, cell.

*[மின் + கலம்.]*

**மின்காந்தம்** *min-kāndam,* பெ.(n.) கம்பிச் சுருள் வழியாக மின்சாரம் பாய்ந்து கொண்டு இருக்கும் வரை காந்த ஆற்றலைப் பெற்றிருக்கும் மாழைத் துண்டு; electromagnet.

*[மின் + காந்தம்.]*

**மின்கொடி** *min-kodi,* பெ.(n.) பெண்; woman (சா.அக.).

*[மின் + கொடி.]*

மின்னலைப் போன்ற கொடி இடையை யுடைய பெண்.

**மின்சாரக்கம்பி** *minšāra-k-kambi,* பெ.(n.) மின்னாற்றலைக் கடத்தும் கம்பி (வின்.); electric wire.

*[மின்[1] + சாரம் + கம்பி.]*

**மின்சாரக்காந்தம்** *minšāra-k-kāndam,* பெ.(n.) மின்காந்தம் பார்க்க; see *min-kāndam.*

*[மின்சாரம் + காந்தம்.]*

**மின்சாரக்காந்தி** *minšāra-k-kāndi,* பெ.(n.) மின்விளக்கு; electric light (சா.அக.).

**மின்சாரக்குப்பி** *minšāra-k-kuppi,* பெ.(n.) மின் ஆற்றலைப் பெருக்கக் கூடிய மின்கலம்; electric cell (சா.அக.).

**மின்சாரத்திருக்கை** *minšāra-t-tirukkai,* பெ.(n.) கடலில் வாழும் ஒரு வகைத் திருக்கை மீன்; a fish - *Torpedo Ray. மின்சாரத்தைத் தொட்டால் எப்படிக் கை முழுவதும் சிறிது நேரம் உணர்ச்சியற்றுப் போகிறதோ அதைப் போன்ற ஆற்றலை உடைய மீன் (சா.அக.).*

*[மின்சாரம் + திருக்கை.]*



**மின்சாரம்** *minšāram,* பெ.(n.) விளக்குகளை ஒளிரச் செய்தல், இயந்திரங்களை இயக்குதல் முதலியவற்றிற்குப் பயன்படும் மின் அணுக்களின் வழி கிடைக்கும் ஆற்றல், வடிவம்; electricity.

*[மின் + சாரம். சாறு→சாரு→சாரம்.]*

**மின்சாரமருத்துவம்** *minšāra-maruttuvam,* பெ.(n.) மின்சார ஆற்றலை உடம்பில் ஊட்டி செய்யும் மருத்துவம்; electric treatment or magnetic cure.

*[மின்சாரம் + மருத்துவம்.]*

**மின்சாரமானி** *minšāra-māni,* பெ.(n.) மின்னோட்டத்தை யளக்குங் கருவி (பாண்டி.); volt meter.

*[மின்சாரம் + மானி.]*

**மின்சாரயந்திரம்** *minšāra-yandiram,* பெ. (n.) மின்னாற்றலை யுண்டாக்கும் பொறி; eletric machine or generator.

*[மின்சாரம் + எந்திரம்.]*

**மின்சாரவண்டி** *minšāra-vaṇḍi,* பெ.(n.) மின்னாற்றலால் இயங்கும் வண்டி; electric tram or train.

*[மின்சாரம் + வண்டி.]*

**மின்சாரவிளக்கு** *minšāra-viḷakku,* பெ.(n.) மின்விளக்கு பார்க்க; see *min-viḷakku.*

*[மின்சாரம் + விளக்கு.]*

**மின்சாரவெளிச்சம்** *minšāra-veḷiccam,* பெ.(n.) மின் ஆற்றலைக் கொண்டு ஆக்கும் ஒளி (வெளிச்சம்); electric light (சா.அக.).

*[மின்சாரம் + வெளிச்சம்.]*

**மின்தடங்கல்** *min-taḍaṅgal,* பெ.(n.) தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் மின்னோட்டம் இடையே நின்று விடுகை; power failure. *நிகழ்ச்சியின் போது கிட்டத்தட்ட ஐந்து மணித்துளி மின் தடங்கல் ஏற்பட்டதற்கு வருந்துகிறோம்.*

*[மின் + தடங்கல்.]*

**மின்தடை** *min-taḍai,* பெ.(n.) 1. மின் அளவைக் குறைத்துப் பாய்வதற்காகப் பயன்படுத்தும் தடையமைப்பு; resistance. 2. மின்தடங்கல் பார்க்க; see *min-taḍaṅgal.*

*[மின் + தடை.]*

**மின்துகள்** *min-tugaḷ,* பெ.(n.) அணுக் கருவினுள் மின்னோட்டத்திற்குக் கரணியமான துகள்கள்; atomic particles circulated in Nucleus caused for electricity.

*[மின் + துகள்.]*

**மின்தொகுப்பு** *min-toguppu,* பெ.(n.) வெவ்வேறு மின் நிலையங்களில் இருந்து வரும் மின் ஆற்றலைப் பெற்று, அதைப் பயன்படுத்துவதற்கெனப் பிரித்து அனுப்பும் அமைப்பு; grid.

*[மின் + தொகுப்பு.]*

**மின்தொடர்வண்டி** *min-toḍar-vaṇḍi,* பெ.(n.) மின்சாரத்தின் மூலமாக ஓடும் தொடர்வண்டி; electric train.

*[மின் + தொடர் + வண்டி.]*



**மின்பிரவாகம்** *min-piravāgam,* பெ.(n.) மின்னோட்டம் பார்க்க; see *minnōṭṭam* (சா.அக.).

**மின்மணல்** *min-maṇal,* பெ.(n.) வெள்ளி மணல்; silver ore (சா.அக.).

*[மின் + மணல்.]*

**மின்மயமாக்கு–தல்** *min-mayam-ākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) எரியாற்றலாலோ வேறு வகையிலோ இயங்கும் பொறிகளை முழுவதுமாக மின்சாரத்தால் இயங்குமாறு மாற்றி அமைத்தல்; electrification. *இருபெரும் நகரங்களுக்கு இடையே உள்ள தொடர் வண்டிப் பாதை மின் மயமாக்கப்பட்டு வருகிறது.*

*[மின் + மயம் + ஆக்கு–தல்.]*

**மின்மாற்றி** *min-mārri,* பெ.(n.) நெடுந் தொலைவு கம்பிகளின் மூலம் கொண்டு செல்வதற்கு அல்லது பயன்படுத்தும் அளவிற்கு ஏற்ற வகையில் மின்சாரத்தின் அழுத்தத்தையும், அளவையும் கூட்டவோ அல்லது குறைக்கவோ செய்யும் பொறி; transformer.

*[மின் + மாற்றி.]*

**மின்மானி** *min-māni,* பெ.(n.) மின்சாரமானி பார்க்க; see *minšāra-māni.*

**மின்மினி** *min-mini,* பெ.(n.) இரவில் ஒளிவீசும் ஒருவகைப் பூச்சி; fire-fly. *"மதியாதவன் கதிர் மின்மினிபோ லொளிர்" (அஷ்டப். திருவேங்கடத்தந்.20). "நிலம் படு மின்மினி போல் பலவுடன்" (அகநா.67:16). "பன்மர உயர்சினை மின்மினி விளக்கத்து" (நற். 44:10).*

*[மினுமினு → மின்மினி. மினுமினுத்தல் = ஒளிவிடுதல்.]*

இருட்டில், பறக்கும்போது ஒளிவிட்டு மின்னும் உறுப்பை வயிற்றுப் பகுதியில் கொண்ட ஒரு சிறு பூச்சி.

**மின்மினிநெல்** *minmini-nel,* பெ.(n.) நெல் வகை (பெரும்பாண்.305, உரை); a kind of paddy.

**மின்மினிப்பூச்சி** *minmini-p-pūcci,* பெ.(n.) மின்மினி பார்க்க; see *min-mini.*

*[மின்மினி + பூச்சி.]*

**மின்மினிபற–த்தல்** *minmini-para-,* 3 செ.கு.வி.(v.i.) ஒளிமிகுதியாற் கண்ணொளி மழுங்குதல்; to grow dim; to be dazed, as the eye. *"மின்மினி பறவா நின்றது காணும்" (ஈடு, 3. 7:4).*

*[மின்மினி + பற–த்தல்.]*

**மின்முலாம்** *min-mulām,* பெ.(n.) பொருள்களின் மேல் மின்னியல் (வேதி.) முறைப்படி பூசப்படும் மாழைப் பூச்சு; electroplating. *பாண்டங்களின் மீது மின் முலாம் பூசினால் நீண்ட நாட்களுக்கு அழியாமல் இருக்கும்.*

*[மின் + அரபு. முலாம்.]*

அரபு. முலம் மா > த. முலாம்.

**மின்வாகி** *min-vāgi,* பெ.(n.) மின்வாய்; electrode (சா.அக.).

**மின்வாங்கி** *min-vāngi,* பெ.(n.) மின்னலைத் தன்னிடம் பெற்றுக் கொள்ளும் கருவி; lightning conductor.

மறுவ. மின்தாங்கி, இடிதாங்கி.

*[மின் + வாங்கி.]*

இக்கருவி மாழைகளால் செய்யப்பட்டக் கம்பிகளைக் கொண்டது. கட்டடங்களின் வழியே நிலத்திற்குள் அழுந்தப்பதித்திருப்பது. இவ்வாறு செய்வதால் கம்பிகளின் வழியே மின்சாரம் நிலத்திற்குள் சென்று விடுவதால் இடி விழுவது தடுக்கப்படுகிறது (அபி.சிந்.).

**மின்விசிறி** *min-viširi,* பெ.(n.) காற்று வீசச் செய்யக் கூடிய இறக்கைகளை மின்சாரத்தால் இயக்கும் பொறி; electric fan.

*[மின் + விசிறி.]*



**மின்விளக்கு** *min-viḷakku,* பெ.(n.) மின்சார ஆற்றலால் ஒளிதரும், ஒளிரும் விளக்கு; electric light. *மின் விளக்கு ஒப்பனை செய்த வீடு.*

*[மின் + விளக்கு.]*

**மின்வெட்டு** *min-veṭṭu,* பெ.(n.) மின்சாரம் தேவையான அளவு கிடைக்காத காலங்களில் மின்சாரத்தைக் குறிப்பிட்ட கால அளவு நிறுத்தி விடுகை; current cut.

*[மின் + வெட்டு.]*

**மின்னஞ்சல்** *min-n-añjal,* பெ.(n.) இணைய வழி நடைபெறும் அஞ்சல் சேவை; electronic mail, e-mail.

*[மின் + அஞ்சல்.]*

**மின்னல்**[1] *minnal,* பெ.(n.) 1. மழை முகிலில் தோன்றும் மின்னொளி (சூடா.); lightning. *மின்னினால் மழை பெய்யுமா?* 2. ஒளிமிக்க காசு (நாணயம்); bright coin. *"திருவாங்கோட்டு மின்னல்" (பணவிடு.137).*

*[முல்→(மில்) →மின்→மின்னல் (மு.தா.).]*

பெரும்பாலும் மழைக்காலத்தில் முகில்களுக் கிடையே ஏற்படும் மின்னோட்டத்தின் விளைவாக உண்டாகக் கூடியது; வானில் சில நொடிப் பொழுதில் மிகுந்த வேகத்துடன் பரவி மறையும் தன்மை வாய்ந்தது; இடியுடன் கூடிய ஒளிப்பிழம்பு.

**மின்னல்**[2] *minnal,* பெ.(n.) 1. நாகமணல்; zinc ore. 2. அறிவன் (புதன்) கோள்; mercury (சா.அக.).

**மின்னல்கொடி** *minnal-koḍi,* பெ.(n.) மின்னற்கொடி பார்க்க; see *minnaṟ-koḍi.*

*[மின்னல் + கொடி.]*

**மின்னலி-த்தல்** *minnali-,*4 செ.கு.வி. (v.i.) மின்னுதல்; to flash as lightning. *"மின்னலிக்கும் வணக்கத் திடையாளையும்" (பதினோ. திருவேகம். திருவந்.74).*

*[மின்னு-தல் → மின்னலி-த்தல்.]*

**மின்னற்கொடி** *minnaṟ-koḍi,* பெ.(n.) 1. நீண்ட கொடி போல் தோன்றும் மின்னல் ஒளி; flash of lighting. 2. மின்னலின் ஒளிக்கொடி (சூளா.தூது.11); streak of lightning.

*[மின்னல் + கொடி.]*

**மின்னணு** *min-n-aṇu,* பெ.(n.) மின்துகள் பார்க்க; see *min-tugaḷ.*

*[மின் + அணு.]*

**மின்னணுவியல்** *min-n-aṇuviyal,* பெ.(n.) மின்னணுவின் இயக்கம் குறித்தும், அதனை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்த அறிவியல் குறித்தும் விளக்கும் துறை; electronics.

*[மின்னணு + இயல்.]*

**மின்னற்றழுக்கு** *minnaṟṟaḻukku,* பெ.(n.) நாகமணல் (யாழ்.அக.); lead ore.

**மின்னாக்கி** *minnākki,* பெ.(n.) மின்சாரத்தை உருவாக்கும் கருவி; generator.

*[மின் + ஆக்கி.]*

**மின்னாம்பூச்சி** *min-n-ām-pūcci,* பெ.(n.) மின்மினி பார்க்க (இ.வ.); see *minmini.*

*[மின் + ஆம் + பூச்சி.]*

**மின்னார்** *minnār,* பெ.(n.) அழகிய பெண்டிர்; women with dazzling beauty. *"மின்னார்க ளின்பமே மெய்யென்றும்" (தாயு. மௌன.4).*

*[மின் → மின்னார்.]*

**மின்னாற்றல்** *minnāṟṟal,* பெ.(n.) மின்சாரத்தின் ஆற்றல்; electric power.

*[மின் + ஆற்றல்.]*

**மின்னி** *minni,* பெ.(n.) 1. கருங்காக்கணம்; mussell-shell creeper. 2. நீர்ப்பயறு; a leguminous plant.

*[முன்→முன்னி→மின்னி = முல்லை நிலத்தில் இயற்கையாக விளையும் ஒரு சிறு பயறு (வே.க.4.)]*

**மின்னிட்டான்புழு** *minniṭṭāṉ-puḻu,* பெ. (n.) மின்மினி பூச்சி; fire fly (சா.அக.).

மறுவ. மினுக்கட்டான்பூச்சி.

*[மினிட்டான் + புழு.]*

**மின்னிடை** *miṉ-ṉ-iḍai,* பெ.(n.) மின்னல் போன்ற கொடி இடையை யுடையவளான பெண்; woman as having a waist like a streak of lightning.

*[மின் + இடை.]*

**மின்னிப்பயறு** *minni-p-payaṟu,* பெ.(n.) மின்னி, 2 பார்க்க (வின்.); see *minni,* 2.

*[மின்னி + பயறு.]*

**மின்னியல்** *minniyal,* பெ.(n.) மின்சார ஆக்கம், பயன்பாடு முதலியவைக் குறித்தும் மின்சாரத்தால் இயங்கும் பொறிகள் குறித்தும் விளக்கும் துறை; the study of electricity; electrical engineering.

*[மின் + இயல்.]*

**மின்னியார்-த்தல்** *minni-y-ār-,*4 செ.கு.வி. (v.i.) ஒளிவீசுதல் (யாழ்.அக.); to dazzle.

*[மின்னு + ஆர்-த்தல்.]*

**மின்னியிலை** *minni-y-ilai,* பெ.(n.) முன்னை யிலை; leaf of *munnai.*

*[முன்னி→மின்னி + இலை.]*

**மின்னு-தல்** *minnu-,*5 செ.கு.வி. (v.i.) 1. மின்னல் பளீரெனத் தோன்றுதல்; flash. *மின்னுவதெல்லாம் பொன்னல்ல (பழ.). "மின்னுவிடச் சிறிய வொதுங்கி மென்மெல" (அகநா.8:14).* 2. ஒளி பட்டுப் பளபளத்தல்; விட்டு விட்டு ஒளிர்தல்; shine; glitter; dazzle. *கதிரவன் ஒளியில் அவள் கூந்தல் மின்னியது. சாணை தீட்டியவுடன் கத்தி பளபளவென மின்னியது. இருட்டில் பூனையின் கண்கள் மின்னின.* 3. கண்களில் முகத்தில் ஆர்வம், ஆசை முதலியவை தெளிவாகப் புலப்படும் வகையில் வெளிப்படுதல்; மிளிர்தல்; glitter, brighten up. *அவன் சொன்ன கதையைக் கண்களில் மகிழ்ச்சி மின்னக் கேட்டுக் கொண்டு இருந்தது குழந்தை.*

*[மின்→மின்னு→மின்னு-தல்.]*

**மின்னுக்கொடி** *minnu-k-koḍi,* பெ.(n.) மின்னற்கொடி பார்க்க; see *minnaṟ-koḍi.* *"மின்னுக் கொடி யொன்று மீவிசும்பில் தோன்றுமால்" (சிலப்.29:9).*

**மின்னூட்டம்** *minnūṭṭam,* பெ.(n.) மின்னாற்றலை மின்கலத்தில் ஏற்றுகை; charge the cell or battary.

*[மின் + ஊட்டம்.]*

**மின்னூது-தல்** *minnūdu-,*5 செ.கு.வி.(v.i.) நகையில் அதனுருக்களைப் பொடி வைத்துச் சேர்த்தல் (இ.வ.); to solder in making jewel.

*[மின் + ஊது-தல்.]*

**மின்னூல்**[1] *minnūl,* பெ.(n.) மெய்ந்நூல் (வின்.); sacred writing.

*[மெய்ந்நூல் → மின்னூல்.]*

**மின்னூல்**[2] *minnūl,* பெ.(n.) 1. பூநூல்; sacred thread. 2. மகளிர் கழுத்தணி வகை; woman's necklace of three strands.

*[முந்நூல்→மின்னூல்.]*



**மின்னெறி-தல்** *minneri-,* 2 செ.கு.வி.(v.i.) மின்னு-தல் பார்க்க (யாழ்.அக.); see *minnu-.*

*[மின்[1] + எறி-தல்.]*

**மின்னேற்றம்** *minnērram,* பெ.(n.) மின்னூட்டம் பார்க்க; see *minnuttam.*

**மின்னைவேர்** *minnai-vēr,* பெ.(n.) முன்னை வேர் (சா.அக.); root of *munnai.*

*[மின்னை + வேர்.]*

**மின்னொழுக்கு** *minnolukku,* பெ.(n.) 1. மின்னல் பாய்கை (M.L.); stroke of lightning. 2. மின்கசிவு; electrical leakage.

*[மின் + ஒழுக்கு.]*

**மின்னொழுகுதல்** *minnolugudal,* பெ.(n.) மின்னல் பாய்கை (இ.வ.); stroke of lighting.

*[மின் + ஒழுகுதல்.]*

**மின்னோட்டம்** *minnōttam,* பெ.(n.) மின்சாரம் பாய்தல்; flow of current.

*[மின் + ஓட்டம்.]*

**மினக்கெடு-தல்** *minakkedu-,* 20 செ.கு.வி. (v.i.) காலம் வேலை முதலியன வீணாகுதல் (உ.வ.); to waste time, labour, etc.

மறுவ. மெனக்கெடுதல்

*[வினைகெடு-தல் → மினைகெடு-தல் → மினக்கெடு-தல்.]*

**மினக்கேடு** *mina-k-kēdu,* பெ.(n.) காலம் வேலை முதலியன வீணாகுகை (உ.வ.); waste of time, labour, etc.

*[மினக்கெடு → மினக்கேடு.]*

**மினவு-தல்** *minavu-,* 5 செ.குன்றாவி.(v.t.) நலமறிதல் (யாழ்.அக.); to greet; to make kindly enquiries of.

*[வினவு-தல் → மினவு-தல்.]*

**மினான்** *minān,* பெ.(n.) ஊர்க் கணக்கன் (வின்.); a village accountant.

ம. மேனவன்

**மினிக்கி** *minikki,* பெ.(n.) ஒருவகை மரம் (பச்.மூ.); a kind of tree.

**மினிச்சி** *minicci,* பெ.(n.) ஒருவகை நஞ்சு (இரசித பாஷாணம்); a kind of arsenic acting on mercury and copper.

**மினிப்பூச்சி** *mini-p-pūcci,* பெ.(n.) மின் மினிப்பூச்சி; fire fly (சா.அக.).

*[மினி + பூச்சி.]*

**மினிரம்** *miniram,* பெ.(n.) காரீயக்கல்; graphite (சா.அக.).

**மினுக்கம்** *minukkam,* பெ.(n.) 1. ஒளி; polish, brightness. 2. சிறப்பு; excellence. *"சில மினுக்கங்களுண்டிறே" (ஈடு,7. 6:4).* 3. பகட்டு (வின்.); showiness, show.

*[மினுக்கு → மினுக்கம்.]*

**மினுக்கல்** *minukkal,* பெ.(n.) மினுக்கம் (சங். அக.) பார்க்க; see *minukkam.*

**மினுக்கன்வளையல்** *minukkan-valaiyal,* பெ.(n.) வளையல் வகை; a kind of bangle. *"இத்தேவர்க்குக் கொடுத்த மினுக்கன் வளையல் இரண்டினால்" (தெ.இ. க.தொ. vii, 8:128).*

*[மினுக்கன் + வளையல். ஒளிவீசும் வளையல்.]*

**மினுக்கி** *minukki,* பெ.(n.) 1. தன்னை அழகுபடுத்திக்கொள்பவ-ன்–ள்; one who beautifies one self. *"மீதோலெங்கு மினுக்கிகள்" (திருப்பு.623).* 2. பகட்டுபவள் (இ.வ.); showy, attractive woman.

*[மினுக்கு → மினுக்கி.]*

**மினுக்கு¹–தல்** *minukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பளபளப்புண்டாக்குதல், மிளிர்தல்; to polish brighten, beautify. *"தண் புனலின் மினுக்கி யுளைவகிர்ந்தன" (அழகர்கல.10). ஏனத்தைத் தேய்த்துக் கழுவி மினுக்கி வைத்திருந்தாள்.* 2. அரிசி தீட்டுதல்; to remove bran from rice in polishing.

*[மினங்கு–தல் → மினுக்கு–தல்.]*

**மினுக்கு²–தல்** *minukku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மிளிர்தல்; polish, brighten. 2. பகட்டுதல், பகட்டுக்காட்டுதல்; be glamorous; flaunt. *குலுக்கி மினுக்கி வருவதைப்பார்!* 3. துணி முதலியவற்றைத் தேய்த்தல்; press clothes. *இந்த வேட்டியைக் கஞ்சி போட்டு மினுக்க வேண்டும்.*

*[மினுங்கு–தல் → மினுக்கு–தல்.]*

**மினுக்கு³** *minukku,* பெ.(n.) மினுக்கம் பார்க்க; see *minukkam.*

*[மினுங்கு → மினுக்கு.]*

**மினுக்குத்தகடு** *minukku-t-tagadu,* பெ. (n.) காக்காய்ப் பொன்; tinsel, mica.

*[மினுக்கு + தகடு.]*

**மினுக்குத்தொடர்** *minukku-t-todar,* பெ.(n.) அணிகலன் வகை; a kind of jewel. *"தேவர்பூணும் மினுக்குத் தொடராலும்" (தெ. இ.கல்.தொ.5:234).*

**மினுக்குப்பசை** *minukku-p-pasai,* பெ.(n.) நெய்வார் இடும் பசை வகை (வின்.) (நெசவு); a varnish used by weavers.

*[மினுக்கு + பசை.]*

நெய்யும் துணி பளபளக்க வேண்டி பசையூட்டுதல்.

**மினுக்குமினுக்கென்று** *minukku-minu-k-kenru,* வி.அ.(adv.) ஒளிர்தல் குன்றித் தோன்றுகை; glimmering. *நெடுந் தொலைவில் உள்ள கோவிலின் விளக்கு மினுக்குமினுக்கென்று எரிந்து கொண்டு இருந்தது.*

*[மினுக்கு + மினுக்கு + என்று.]*

**மினுக்குமினுக்கெனல்** *minukku-minu-kenal,* பெ.(n.) ஒளி குன்றுகை; glimmering; flickering. *விளக்கு மினுக்கு மினுக்னெ எரிகின்றது.*

*[மினுக்கு + மினுக்கு + எனல்.]*

**மினுக்கெண்ணெய்** *minukkenney,* பெ.(n.) 1. உடலுக்குப் பளபளப்புண்டாகும் எண்ணெய்

வகை; an oil used in toilet. 2. மரச் சாமான்களுக்குரிய பூச்செண்ணெய்; a varnish.

*[மினுக்கு + எண்ணெய்.]*

**மினுங்கு–தல்** *minuṅgu-*,5 செ.கு.வி.(v.i.) 1. ஒளிவீசுதல்; to glitter, shine. *"வனமாலை மினுங்க" (திவ்.நாய்ச்.14:2).* 2. விளக்கமாய்த் தோன்றுதல்; to appear bright. *"அழகு மினுங்கியிருப்பது" (திவ்.திருமாலை, 23, வியா, பக்.81).*

க. மினுகு

*[மின் → மின்னு → மினுங்கு → மினுங்கு–தல்.]*

**மினுங்குபொழுது** *minuṅgu-poḻudu*, பெ.(n.) மாலை வேளை (யாழ்.அக.); dusk.

*[மினுங்கு + பொழுது.]*

**மினுங்குவாரப்பொழுது** *minuṅgu-vāra-p-poḻudu*, பெ.(n.) மினுங்குபொழுது (யாழ். அக.) பார்க்க; see *minuṅgu-poḻudu.*

*[மினுங்கு + வாரம் + பொழுது.]*

**மினுமினு–த்தல்** *minuminu*,4 செ.கு.வி. (v.i.) 1. ஒளிர்தல் (உ.வ.); to glitter, dazzle. 2. ஒளி குன்றுதல் (இ.வ.); to glimmer, flicker. 3. விட்டு விட்டு, முழு வெளிச்சத்துடன் ஒளிர்தல்; shine brightly but intermittently, glitter. *விளக்கொளியில் அவள் நகைகள் மினுமினுத்தன. பட்டுச் சட்டை மினுமினுக்க நடந்து வந்தான்.*

**மினுமினுப்பு**[1] *minu-minuppu*, பெ.(n.) விட்டு விட்டுப் புலப்படும் ஒளிர்வு; polish, glitter.

*[மினுமினு → மினுமினுப்பு.]*

**மினுமினுப்பு**[2] *minu-minuppu*, பெ.(n.) சளி மிகுதியினால் உடம்பின் தோலின் மேல் ஏற்படும் ஒருவகை நிலைமை; good lustre caused by phlegm humour in the body.

# மீ

**மீ**[1] *mī*, பெ.(n.) மகர ஒற்றும் ஈகார உயிரும் இணைந்து ஒலிப்பதனால் இவ்வெழுத்துப் பிறக்கும்; the compound of 'ம்' and 'ஈ'.

*[ம் + ஈ.]*

வாயைச் சற்று நீட்டி இசைப்பதால் இவ்வொலி தோன்றும்.

பல்வேறு காலங்களில் இவ்வெழுத்து அடைந்த வரி வடிவ மாற்றங்கள்.

**மீ**[2] *mī*, பெ.(n.) 1. மேலிடம்; top, surface. *"நாண் மலர் வான்மீ யகத்தே வர" (திருநூற். 84). "காழ்விரி வகையார மீவரு மிளமுலை" (கலித்.4:9).* 2. உயரம் (திவா.); height, elevation, eminence, loftiness. 3. வானம் (பிங்.); sky, heavens. *"மீப்பாவிய விமையோர் குலம்" (கம்பரா.நிகும்பலை.149).* 4. மேன்மை; greatness, dignity, eminence, esteem, honour, nobility. *"வெற்றிக் கருளக் கொடியான்றன் மீமீதாடா வுலகத்து" (திவ்.நாய்ச்.13:7).*

தெ. மீ; க. மே.

**மீ**[3]**–தல்** *mī-*,2 செ.கு.வி.(v.i.) மீந்திருத்தல்; to remain.

**மீ**[4]**–த்தல்** *mī-*,4 செ.கு.வி.(v.i.) மீத்து வைத்தல்; to save for future use. *சம்பளத்தில் மீத்தத் தொகையில் தான் மகளுக்குத் திருமணம் செய்து வைத்தான் (உ.வ.).*

**மீக்கல்** *mīkkal*, பெ.(n.) காக்கைப் பொன் (அப்பிரகம்); mica (சா.அக.).

**மீக்குணம்** *mī-k-kuṇam,* பெ.(n.) பெரு மிதமாய் நடக்குந் தன்மை; superciliousness. *"மீட்பில்லோரை மீக்குணம் பழியார்" (முது.காஞ்.22).*

*[மீ + குணம்.]*

**மீக்குவம்** *mīkkuvam,* பெ.(n.) 1. மருத மரம்; marudhu tree - *Terminalia paniculata.* 2. பெரும் பருத்தி; a plant. 3. கருமருது; black mardhu-*Terminalia tomentosa.*

**மீக்கூர்-தல்** *mī-k-kūr-,* 2 செ.கு.வி. (v.i.) அதிகமாதல், பெருகுதல்; to increase, to multiply, to surplus. *"நாண் மீக்கூரி" (பெருங்.உஞ்ஞைச்.55:94).*

*[மீ² + கூர்-தல்.]*

**மீக்கூற்றம்** *mīkkūṟṟam,* பெ.(n.) 1. புகழ் (பிங்.); praise. *"பொது மீக்கூற்றத்து நாடு கிழவோயே" (புறநா.135).* 2. மேலாக மதிக்கப்படும் சொல்; speech or word which wins high regard. *"புகழ் செல்வ மீக்கூற்றஞ் சேவகம்" (ஏலாதி.1). "யாதுமீக் கூற்றம் யாமில மென்னும்" (கலித்.87:14).*

*[மீக்கூறு → மீக்கூற்றம். மீக்கூறுதல் = உயர்வாகக் கூறுதல்.]*

**மீக்கூற்று** *mīkkūṟṟu,* பெ.(n.) மீக்கூற்றம் பார்க்க; see *mī-k-kūṟṟam. "மீக் கூற்றாளர்" (சிலப்.28:149).*

*[மீக்கூற்றம் → மீக்கூற்று.]*

**மீக்கூறல்** *mīkkūṟal,* பெ.(n.) மேம்பாடு (அக. நி.); superiority, pre-eminence value.

*[மீக்கூறு → மீக்கூறல்.]*

**மீக்கூறு¹-தல்** *mī-k-kūṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) உயர்வாகக் கூறுதல்; to praise high of oneself. *"காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல் மீக்கூறும் மன்னன் நிலம்" (குறள், 386).*

*[மீ + கூறு-தல். கூறு-தல் = சொல்லுதல், புகழ்ந்து சொல்லுதல்.]*

**மீக்கூறு²** *mī-k-kūṟu,* பெ.(n.) மீக்கூற்றம், 1 பார்க்க; see *mīkkūṟṟam.*

**மீக்கொள்(ளு)¹-தல்** *mī-k-koḷ-,* 13 செ.கு.வி. (v.i.) 1. உயர்தல்; to ascend, to rise high. *"அகின்மா புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின் மீக்கொள" (திருவாச.3:92).* 2. மிகுதல்; to increase. *"வசையுங் கீழ்மையு மீக்கொள" (கம்பரா. யுத்த. மந்திரப்.99).*

*[மீ + கொள்(ளு)-தல்.]*

**மீக்கொள்(ளு)²-தல்** *mī-k-koḷ-,* 13 செ. குன்றாவி. (v.t.) 1. மேலாக மதித்தல்; to esteem, to honour; to be noble. *"மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க" (நன்னெறி, 22).* 2. மிகுதியாகக் கொள்ளுதல்; to possess in abundance. *"ஊற்ற மீக்கொண்ட வேலையான்" (கம்பரா.வருணனைவழி.7).* 3. மேலே அணிதல்; to put on. *"பாப்புரி யன்ன மீக்கொ டானை" (பெருங்.உஞ்சைக். 42:244).*

*[மீ + கொள்(ளு)-தல்.]*

**மீக்கோழை** *mī-k-kōḻai,* பெ.(n.) பாண்டிய வளநாட்டின் பிரிவுகளுள் அடங்கியவொரு நாடு; a country in *Pāṇḍiya*kingdom. *"பாண்டிய குலாசனி வளநாட்டு மீகோழை தேவதான பிரம தேயம் திருவானைக்காவில்" (கல்.அக.).*

*[மேற்கு → மேல்+கோழை-மேக்கோழை → மீக்கோழை.]*

ஒருகா. வளங்கொழித்த இடம் கோழை எனப்பட்டிருக்கலாம்.

இன்று திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின் பகுதி. திருவானைக்கா மீக்கோழை நாட்டுள் அடங்கிய ஊர்களுள் ஒன்றாகும் (கல்.அக.).

**மீக்கோள்** *mīkkōḷ*, பெ.(n.) 1. ஏறுகை (பிங்.); ascent. 2. மேற்றாங்குகை (வின்.); upholding. 3. பொலிவு (அரு.நி.); abundance, plenty. 4. மேற்போர்வை; upper garment. *"மீக்கோ ளுடற்கொடுத்துச் சேர்தல் வழி" (ஆசாரக்.31). (பிங்.).*

*[மீக்கொள்→மீக்கோள்.]*

**மீகக்கல்** *mīka-k-kal*, பெ.(n.) மீக்கல் பார்க்க; see *mīkkal.*

**மீகண்** *mī-kaṇ*, பெ.(n.) 1. கண்ணின் மேலிடம் (தொல்.எழுத்து.250, உரை); the region above or over the eye. 2. மேலிடம் (சங்.அக.); top, upper or outer surface.

*[மேல் + கண் – மேக்கண்→மீக்கண்→மீகண்.]*

**மீகாமன்** *mīkāmaṉ*, பெ.(n.) கப்பலைச் செலுத்தும் தலைவன் (மாலுமி); pilot, captain of a vessel. *'மரக்கல மீகாமர்' (மதுரைக்.321, உரை). "மீகாமன் இல்லா மரக்கலம் ஒருகாலும் ஓடாது" (பழ.).*

**மீகாமன்வலங்கை** *migāmaṉ-valaṅgai*, பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் அறிவானந்த சித்தியார் என்னும் நூலை இயற்றியவர்; author of *Aṟivāṉanda śiddiyār.*

*[மீகாமன் + வலங்கை.]*

வலங்கை என்பது ஊர்ப்பெயர். இவ்வூர் கும்பகோணம் எனப்படும் குடமுக்குக்கு அருகில் உள்ளது. அரண்மனையில் அரசர்க்கு வலப்புறம் அமர்ந்திருப்போர்க்காக ஒதுக்கப்பட்ட குடியிருப்பு.

**மீகாரம்** *mī-kāram*, பெ.(n.) மாளிகையின் மேலிடம்; upper storey or terrace of a mansion. *"மீகார மெங்கணு நறுந்துகள் விளக்கி" (கம்பரா.ஊர்தே.3).*

*[மீ + Skt.ஆகாரம்.]*

**மீகான்**[1] *mīkāṉ*, பெ.(n.) ஒரு பெரிய ஏனம் (மீனவ.); big vessel or utensil.

**மீகான்**[2] *mīkāṉ*, பெ.(n.) மீகாமன் பார்க்க; see *mī-kāmaṉ.* *'நான்முகன் மீகானா' (தண்டி.37, உரை, எடு.).*

*[மீகாமன் → மீகான்.]*

**மீகை**[1] *mīkai*, பெ.(n.) மேலெடுத்த கை; uplifted arm. *"வென்றி யாடிய தொடித்தோண் மீகை" (பதிற்றுப்.40:12).*

*[மீ + கை.]*

**மீகை**[2] *mīkai*, பெ.(n.) புலி தடுக்கிக் கொடி வகை (மலை.); Mysore thorn - a creeper.

**மீச்சிதக்களி** *mī-c-cidakkaḷi*, பெ.(n.) வெள்ளாவிப்பானை; earthern pot used by washer man for boiling clothes with fuller's earth.

**மீச்சிதம்** *miccidam*, பெ.(n.) மீச்சிதக்களி பார்க்க; see *miccida-k-kaḷi.*

**மீச்செலவு** *mī-c-celavu*, பெ.(n.) 1. வரம்பு மீறிய நடத்தை; arrogant conduct, presumption, forward behaviour. *"சிறியா ரிடைப்பட்ட மீச்செலவு காணின்" (நீதிநெறி. 17).* 2. மேற்போகை (யாழ்.அக.); advancing, progressing.

*[மீ + செலவு. செலவு = நடை, போக்கு, ஓட்டம்.]*

**மீசப்பரவை** *mīša-p-paravai,* பெ.(n.) ஒருவகை மீன் (மீனவ.); a kind of fish. *கெண்டைமீன் வகையைச் சார்ந்தது.*

**மீசரம்** *mīšaram,*பெ.(n.) 1. மேலானது; that which is superior or great. *இந்தத் தவசம் மீசரமாயிருக்கிறது (வின்.).* 2. மிகுதி (வின்.); plenty. 3. விரைவு (யாழ்ப்.); speed, hurriedness.

தெ. மீசரமு.

*[மீ + தரம் – மீதரம்→மீசரம்.]*

**மீசரன்** *mīšaran,*பெ.(n.) மேலானவன்; superior, great person. *"செம்பீரந் த்ன்னில் மீசரா" (இராமநா.உயுத்.31).*

*[மீசரம் → மீசரன்.]*

**மீசவாரம்** *mīša-vāram,* பெ.(n.) நில வுடைமையாளரின் முதல் பங்கு (அ) கண்டு முதலில் மேல் வாரப் பங்கு (W.G.); the landholder's share of the crop yield.

*[மீசு + வாரம். மீசு = மிகுதி.]*

**மீசு** *mīšu,* பெ.(n.) 1. மீது பார்க்க; see *mīdu.* *"துவராடை மீசுபிறக்கிய மெய்யினாரும்" (தேவா.38, 10).* 2. மிகுதி (யாழ்.அக.); abundance, copiousness.

*[மீது → மீசு.]*

**மீசுபொலி** *mīšu-poli,*பெ.(n.) அறச் செலவின் பொருட்டு முதலிற் கொள்ளுங் களநெல் (யாழ்ப்.); grain first taken from the grain - heap at the threshing floor for charitable purposes.

*[மீசு + பொலி. பொலி = நெற்குவியல். களத்தில் நெல்லளக்கும் போது முதல் மரக்காலுக்கு நற்சொல்லாக வழங்கும் பெயர். பொல்→பொலி = செழித்தல், பெருகுதல். நெல்லளக்கும் போது முதலில் அளக்கும் அளவையை, பொலி வளர என்று நற்சொல்லாகக் கூறுவர்.]*

**மீசுமீட்டல்** *mīšu-miṭṭal,*பெ.(n.) மேலாக எடுக்கை (யாழ்.அக.); taking superficially.

*[மீசு + மீட்டல்.]*

**மீசுரம்** *mīšuram,*பெ.(n.) 1. மீசரம் பார்க்க; see *mīšaram.* *"மயல் மீசுரமாகுது" (தனிப்பா.1, 377:20).* 2. மிகவும் கடுமை (உக்கிரம்)யானது (யாழ்.அக.); that which is extremely severe of or fierce.

*[மீசரம் →மீசுரம். மீசரம் = மேலானது, மிகுதி.]*

**மீசுவைத்தல்** *mīšu-vaittal,* பெ.(n.) மேலே வைக்கை (யாழ்.அக.); placing at the top, priority.

*[மீசு + வைத்தல். மீசு = மேலே, மேற்புறம், மேடு.]*

**மீசெங்கிலிநாடு** *mīšeṅgili-nāḍu,* பெ.(n.) புதுக்கோட்டை நாட்டினுள் அடங்கிய குளத்தூர் வட்டத்தைச் சார்ந்த மலையம்பட்டி முதலான ஊர்கள் அடங்கிய நாடு; villages or townships in *Malayampaṭṭi,* in *Pudukkoṭṭai* dist. *இந்நாடு மீசெங்கிலி நாடு, கீழ்ச்செங்கிலி நாடு என்றும் பிரிக்கப்பட்டிருந்தது (புதுக்கோட்டை கல்வெட்டு.116) (கல்.அக.).*

**மீசை** *mīšai,*பெ.(n.) 1. ஆண்களின் மேல் உதட்டின்மேல் இருக்கும் முடி; moustache. *"துடித்த தொடர்மீசைகள் சுறுக்கொள" (கம்பரா. மாரீச.49). மீசை வளர்க்க ஆசை.* 2. பூனை, புலி போன்ற விலங்குகளின் வாயின் மேல் புறத்தில், பக்கவாட்டில் நீண்டிருக்கும் முடி; whiskers. 3. கரப்பான்

போன்ற பூச்சிகளின் தலையின் இருபுறமும் உள்ள விறைப்பான நீண்ட முடி போன்ற உணர்வு கொம்பு; antenna. 4. மேலிடம்; upper part. *"மீசைநீள் விசும்பில்" (சீவக.911).*

தெ. மீசமு; க. மீசெ; ம. மீசா.

*[மிசை → மீசை.]*

**மீசைக்காரன்** *mīšai-k-kāraṉ,* பெ.(n.) இறால் மீன் (மீனவ.) (குழூஉக்குறிச்சொல்); prawn fish.

*[மிசை + காரன்.]*



**மீசைக்குத்தா** *mīšai-k-kuttā,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன் (மீனவ.); a kind of sea fish.

**மீசைக்கொம்பு** *mīšai-k-kombu,* பெ.(n.) ஒருவகைக் கொம்பு; horns which are in an elaborated position.

*[மீசை + கொம்பு. விரிந்து மீசைபோல் இருக்கும் கால்நடைக் கொம்பு.]*

**மீசைமுறுக்கு–தல்** *mīšai-muṟukku-,* 5 செ.கு.வி.(v.i.) வீரக் குறிப்பாக மீசையைப் பக்கவாட்டில் விரலால் திருகுதல்; to twist the moustache in anger, defiance or challenge. *"மீசை முறுக்கிச் சினந்து" (தனிப்பா.1, 296 : 6). எதற்கெடுத்தாலும் மீசையை முறுக்காதே.*

*[மீசை + முறுக்கு–தல். வீரத்தோடு எதிர்த்துச் சண்டையிட அணியமாக இருத்தல்.]*

**மீசையைமுறுக்குகிறான்** *mīšaiyai-muṟuk kugiṟāṉ,* பெ.(n.) சண்டைக்கு வருகிறான்; coming for a fight or a combat.

*[மீசை + ஐ + முறுக்குகிறான்.]*

**மீட்சி¹** *mīṭci,* பெ.(n.) 1. திரும்புகை; turning, returning. *"மீட்சியுங் கூஉக்கூஉ மேவு மடமைத்தே" (பரிபா.19:65). வறுமையில் இருந்து மீட்சி பெற வழிதான் என்ன?* 2. உடன்போக்கின் வகையுள் ஒன்று (செவிலி, தலைவியைக் காணாது மீண்டு வருதலும், உடன்போய் தலைவனுந் தலைவியு மீண்டு வருதலுமாம்; a kind of accompaniment.

*[மீள் → மீட்சி.]*

**மீட்சி²** *mīṭci,* பெ.(n.) 1. திருப்புகை; turning (bringing) back, causing to return. 2. விடுதலை செய்கை (உ.வ.); releasing redeeming. 3. கைம்மாறு; recompense. *"மீட்சிசெய் திறமிலை" (கம்பரா.நாகபா.267).*

*[மீள் → மீட்சி. ஒரு நிலையிலிருந்து விடுபடுதல், மீளுதல்.]*

ஒருவர் ஒரு பதவியில் இருக்கும்போது பணி முடியாமலோ, தவறிச் செயற்படும் போதோ மேல் அதிகாரிகள் செய்யும் ஒருவகை நடவடிக்கை.

**மீட்டிடம்** *mīṭṭiḍam,* பெ.(n.) மீட்பதற்கு உரிய இடம்; place of return. *"மீட்டிடம் பெற்றுக் கூட்டிடங் கூடி" (பெருங்.உஞ்சைக்.57:75).*

*[மீள் + இடம் – மீட்டிடம்.]*

**மீட்டு¹–தல்** *mīṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. மீளச் செய்தல்; to cause to return. *போனவனை மீட்டுக் கொண்டு வந்தான்.*

2. ஒத்தி முதலியவற்றைத் திருப்புதல் (யாழ்.அக.); to redeem, as mortgaged property. 3. காத்தல் (யாழ்.அக.); to save. 4. யாழ் முதலியவற்றின் நரம்பை விரலால் தெறித்தல்; to fillip the strings of lute, etc. *யாழ் மீட்டினான் (உ.வ.).* 5. வீணை போன்ற இசைக்கருவிகளின் நரம்பை விரலால் அதிரச் செய்தல்; to play on the lute. *வீணையை மீட்டிக் கொண்டு பாடத் தொடங்கினான்.* 6. நாணேற்றுதல்; to fasten the string of a bow. 7. அள்ளுதல் (யாழ். அக.); to take a handful of. 8. நினைவு கூர்தல்; to recall. *நீங்கள் சொன்னதைத் திரும்பவும் மீட்டிப் பார்க்கிறேன்.*

க., தெ. மீடு.

*[மீள்–தல்→மீட்டு–தல்.]*

**மீட்டு**[2] *mīṭṭu,* வி.அ.(adv.) திரும்ப; again, further. *"சொல்பவோ மேன்மக்கள் தம் வாயால் மீட்டு" (நாலடி, 70). "கேட்டவை தோட்டியாக மீட்டாங்(கு)" (அகநா.286:6). "கோட்டினத் தாயர் மகனன்றே மீட்டொரான்" (கலித்.103:33).*

*[மீள் → மீட்டு.]*

**மீட்டுணர்வு** *mīṭṭuṇarvu,* பெ.(n.) ஒத்த தன்மையுடைமை; recognition of identity or similarity. *"நினைவு மீட்டுணர்வு நேர்தரும்" (நீலகேசி.119).*

*[மீட்டு + உணர்வு.]*

**மீட்டுப்பட்டான்** *mīṭṭu-p-paṭṭāṉ,* பெ.(n.) ஆனிரைகளை மீட்டபொழுது இறந்தவன்; person who died, while collecting back (recovering) the captured cattles. *ஆநிரைகளைப் பகைவரோடு போரிட்டு மீட்டுவிட்டானெனினும், பகைவரால் கொல்லப்பட்டான். மீட்டல் – கரந்தை என்ற புறத்திணைக்கு இச்செய்தி இலக்காகி நிற்கின்றது. "ஆந்தைப்பாடி ஈசைபெரும் பாணாரைசரு மருமக்கள் தொறுக் கொண்ட ஞான்று மீட்டுப்பட்டான்" (செங்கம்நடு கற்கள் – கி.பி.7ம் நூற்றாண்டு) (கல்.அக.).*

*[மீட்டு + பட்டான்.]*

**மீட்டும்** *mīṭṭum,* கு.வி.எ.(adv.) மீட்டு பார்க்க; see *mīṭṭu. "மீட்டு மினி யெண்ணும் வினை" (கம்பரா.பொழிலிறு.5).*

*[மீட்டு → மீட்டும்.]*

**மீட்டுமுறி** *mīṭṭu-muṟi,* பெ.(n.) ஒத்தியுரிமை நீங்கியதைக் குறிக்கும் ஆவணம் (நாஞ்.); redemption deed.

*[மீட்டு + முறி.]*

**மீட்டுருவாக்கம்** *mīṭṭuruvākkam,* பெ.(n.) கிடைக்கும் வடிவங்களைக் கொண்டு முன்பு இருந்த வடிவங்களைக் கண்டறியும் முறை; reconstruction.

*[மீள் → மீட்டு + உருவாக்கம்.]*

**மீட்டெடு**[1]**–த்தல்** *mīṭṭeḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. காத்தல்; to redeem, rescue, save. 2. மேலாக எடுத்தல்; to take out superficially.

*[மீட்டு + எடு–த்தல்.]*

**மீட்டெடு**[2]**–த்தல்** *mīṭṭeḍu-,* 4 செ.கு.வி. (v.i.) இரையெடுத்தல்; to chew the cud.

*[மீட்டு + எடு–த்தல்.]*

**மீட்பர்** *mīṭpar,* பெ.(n.) காப்பவர் (இரட்சகர்); saviour, redeemer. *உலக மீட்பர் வந்து விட்டார். மீட்பர் இன்றி உய்ய முடியாது. மீட்பரே அனைத்துக்கும் கரணியமாவர்.*

*[மீள்→மீட்பு→மீட்பர்.]*

**மீட்பு**[1] *mīṭpu,* பெ.(n.) 1. காப்பாற்றும் நடவடிக்கை; rescue operation. *வெள்ளம் மற்றும் நில அதிர்வால் பாதிக்கப்பட்ட ஊர்களைக் காப்பாற்ற மீட்பு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இரவு பகலாக மீட்பு வேலைகள் நடைபெற்றன.* 2. ஒருவர் சட்டத்திற்கு முரணாக வைத்திருக்கும் பொருள்களைக் கைப்பற்றுதல்; confiscation, recovery. *பல இலக்க உருபா மதிப்புள்ள தங்கக் கட்டிகள் மீட்பு.*

*[மீள் → மீட்பு.]*

**மீட்பு**[2] *mīṭpu,* பெ.(n.) மீட்கை (யாழ்.அக.); releasing, redemption, salvation.

*[மீள் → மீட்பு.]*

**மீடம்** *mīḍam,* பெ.(n.) சிறுநீர் (சங்.அக.); urine.

*[மீள் → மீடம் = குடித்த நீர் சிறுநீராக வெளி வருதல்.]*

**மீண்செயல்** *mīṇ-šeyal,* பெ.(n.) எதிர்த் தாக்கம்; reaction.

*[மீள் → மீண் + செயல்.]*

**மீண்டு** *mīṇḍu,* பெ.(n.) மீட்டு பார்க்க; see *mīṭṭu. "மீண்டு வாராவழி யருள் புரிபவன்" (திருவாச.2:117).*

*[மீள்→மீண்டு.]*

**மீண்டும்** *mīṇḍum,* வி.அ.(adv.) மறுபடியும், திரும்பவும், மேலும்; again, repeatedly, moreover. *"மீண்டு வாராவழி யருள்புரிபவன்" (திருவாச.2:117). "மீண்டும் பீடுயர் பீண்டி அவற்றிற்கும்" (பரிபா.2:11). சற்று ஓய்வு எடுத்த பிறகு மீண்டும் எழுதத் தொடங்கினார். முதல் பத்தியை மீண்டும் ஒரு முறை படியுங்கள்! மீண்டும் மீண்டும் அதையே சொல்லிக் கொண்டு இருக்காதே!*

*[மீள் →மீண்→மீண்டும்.]*

**மீத்துவை-த்தல்** *mīṭṭu-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) மீதப்படுத்துதல் (உ.வ.), மிச்சப்படுத்துதல்; to save for future use; to be thrifty; to lay by. *மீத்து வைத்த சொத்தெல்லாம் நெருப்புக்கு இரையாயிற்று.*

*[மிகு →மிகுத்து→மீத்து + வை (துணை வினை)-த்தல்.]*

**மீத்தோல்** *mīttōl,* பெ.(n.) மேலேயிருக்கும் தோல், பீத்தோல்; epidermis - scarf.

*[மீ + தோல்.]*

**மீதம்** *mīdam,* பெ.(n.) மீதி, மிச்சம்; balance, remainder. *மீதம் வைக்காமல் சாப்பிட வேண்டும்.*

*[மீதி →மீதம்.]*

**மீதாட்சி** *mīdāṭci,* பெ.(n.) மீயாட்சி பார்க்க; see *mīyāṭci. "காராண்மை மீதாட்சி உள்ளடங்க"* (T.A.S.1, 6:14).

*[மீது + ஆட்சி - மீதாட்சி.]*

**மீதாடு-தல்** *mīdāḍu-,* 5 செ.கு.வி.(v.i.) கடந்து செல்லுதல்; to transcend, surpass, go beyond. *"வெற்றிக்கருளக் கொடியான்றன் மீமீதாடா வுலகத்து" (திவ். நாய்ச்.13:7).*

*[மீது + ஆடு-தல்.]*

**மீதாரி**[1] *mīdāri,* பெ.(n.) மிச்சம்; that which remains; remainder, balance. *உன்னிடத்து ஏதேனும் மீதாரியிருக்கிறதா?*

*[மீது + ஆர் - மீதார் → மீதாரி.]*

ஒருகால் ஊதாரி என்ற வடசொல்லுக்கு எதிர்ச்சொல்லாக மீதத்திலிருந்து மீதாரி என்ற சொல் வழக்குக்கு வந்திருக்கலாம்.

**மீதாரி²** *mīdāri*, பெ.(n.) ஒருவகைக் கலப்பு மணப்புகை (வாசனைத் தூபம்) (சைவச. மாணா.9, உரை); incense composed of various substances.

*[மீது + ஆர் – மீதார் → மீதாரி.]*

**மீதான** *mīdāṉa*, பெ.அ.(adj.) 1. ஒருவர் மேல் உள்ள; against some one. *ஒருவர் தொழிலாளர் மீதான வழக்குகளை நிருவாகம் திரும்பப் பெற வேண்டும் என்று கோரினார்.* 2. முன்பு குறிப்பிட்டதைக் கரணியமாகக் கொண்டு, நிகழ்கிற; concerning, relating to, regarding. *புது திட்ட அறிக்கை மீதான வழக்கு இன்று மக்களவையில் கொண்டு வரப்பட்டது.*

*[மீது → மீதான.]*

**மீதி¹** *mīdi*, பெ.(n.) 1. மிச்சம், மீதம்; that which is left over, that which remains, surplus. *மீதி வைக்காமல் சாப்பிடு. செலவு போக மீதி இவ்வளவுதானா?* 2. எஞ்சியிருப்பது; remainder. *எட்டில் மூன்று போனால் மீதி ஐந்து.*

மறுவ. மிச்சம்

*[மிகுதி → மீதி.]*

**மீதி²** *mīdi*, பெ.(n.) 1. காட்டுக் கத்தரி (மலை.); hedge caper. 2. எட்டி (சங்.அக.); strychnine tree, nux-vomica. 3. கருஞ்சூரை; aspecies of black thorny shrub (சா.அக.).

**மீதிகி** *mīdigi*, பெ.(n.) மீதி² பார்க்க; see *mīdi²* (சா.அக.).

**மீதிடல்** *mīdiḍal*, பெ.(n.) வளர்கை (இலக். அக.); growth.

*[மீது + இடல்.]*

**மீதிரா** *mīdirā*, பெ.(n.) பெருலவங்கப் பட்டை; thick cinnamon, a bark.

**மீதிரை** *mīdirai*, பெ.(n.) சூரைச் செடி; *Šūrai* plant.

**மீதீந்து** *mīdīndu*, பெ.(n.) பேரரத்தை; greater galangal - *Alpinia galangal* (major).

**மீது¹** *mīdu*, பெ.(n.) 1. மேற்புறம்; top, outer or upper surface. 2. மேடு (நாமதீப.535); elevated or raised place.

*[மீ → மீது.]*

**மீது²** *mīdu*, இடை.(part.) இடவேற்றுமைப் பொருளில் வழங்கும் சொல்லுருபு; மேல்; word used as a locative sign, `on' `at'. *"பூவிரி புன்னை மீது தோன்று பெண்ணை" (அகநா.310:12). "தண்வயலூரன் மீது" (நாலடி,389). 'புத்தகத்தை நாற்காலியின் மீது வை'. அவர் மீது பழி சொல்லாதே! அவர் மீது வழக்குத் தொடர்ந்தார்.*

*[மீ → மீது.]*

**மீது³** *mīdu*, வி.அ.(adv.) அதிகம் (வின்.); over, excess, that which exceeds; extra, surplus. *"மிகவரினு மீதினிய வேழப் பிணவும்" (பரிபா.10:15).*

*[மீ → மீது.]*

**மீதுந்து** *mīdundu*, பெ.(n.) நெல்லி; Indian gooseberry - *Emblica myrobalam* (சா.அக.).

**மீதுபொலி** *mīdu-poli*, பெ.(n.) மீசுபொலி பார்க்க; see *mīšu-poli*.

*[மீசுபொலி → மீதுபொலி.]*

**மீதுரை** *midurai*, பெ.(n.) விளம்பல்; பலகால் திரும்பத் திரும்பச் சொல்லுதல் (சூடா.); repetition, tautology.

*[மீது + உரை.]*

**மீதுரைவேர்** *midurai-vēr*, பெ.(n.) ஒருவகை நறுமண மஞ்சள்; musk turmeric - *Curcuma aromatica*.

*[மீதுரை + வேர்.]*

**மீதூண்** *midūṇ*, பெ.(n.) அளவுக்கு அதிகமான உணவு; to eat in excess. *"மீதூண் விரும்பேல்" (பழ.).*

*[மிகுதி + ஊண். ஊண் = உணவு.]*

**மீதூணருந்தல்** *midūṇ-arundal*, பெ.(n.) மிதமிஞ்சி உண்ணுகை; glut to eat in excessive eating.

*[மீதூண் + அருந்தல்.]*

**மீதூணன்** *midūṇaṉ*, பெ.(n.) பெருந்தீனி தின்போன்; glutton.

*[மீதூண் → மீதூணன்.]*

**மீதூர்[1]-தல்** *midūr-*, 2 செ.கு.வி.(v.i.) 1. மேன்மேல் வருதல்; to increase, to aggravate, to come crowded. *"துன்பமே மீதூரக் கண்டும்" (நாலடி, 60).* 2. அடர்தல்; to press hard. *"மெய்யைந்து மீதூர" (பு.வெ.8:33).*

*[மீது + ஊர்-தல்.]*

**மீதூர்[2]-தல்** *midūr-*, 2 செ.குன்றாவி.(v.t.) அடர்த்தல்; to subdue. *"ஒளியாரை மீதூர்ந் தொழுகுவ தல்லால்" (பழ.248).*

*[மீது + ஊர்-தல்.]*

**மீதோல்** *mi-tōl*, பெ.(n.) மீந்தோல் பார்க்க; see *mi-n-dōl*. *"மீதோ லெங்கு மினுக்கிகள்" (திருப்பு.623).*

*[மீந்தோல் → மீதோல்.]*

**மீந்தது** *mindadu*, பெ.(n.) மீதி[1] பார்க்க; see *midi*.

*[மிகு→மிகுதி →மீதி →மீந்தது.]*

**மீந்தோல்** *mi-n-dōl*, பெ.(n.) மேற்றோல் (தொல்.எழுத்து.251, உரை); epidermis, superficial skin.

*[மீ + தோல்.]*

**மீநீர்** *mi-nir*, பெ.(n.) நீரின் மேற்பரப்பு; surface of water. *"மீநீர் நிவந்த விறலிழை" (பரிபா.21:40).*

*[மீ + நீர்.]*

**மீப்பாய்** *mi-p-pāy*, பெ.(n.) மீன்பிடிப் படகில் பயன்படும் ஒரு வகைப் பாய்; mast used in the fishing boat. *பாய்ப் பருமலின் மேலே விரிக்கப்படும் பாய் (நெல்லைமீனவ.).*

*[மீ + பாய்.]*

**மீப்பு** *mippu*, பெ.(n.) 1. மிகுதி (புறநா.104, உரை); abundance. 2. மேன்மை; excellence, greatness, esteem, honour. *"மீப்பில்லோரை" (முது.காஞ்.22).*

*[மீ → மீப்பு.]*

**மீப்போர்-த்தல்** *mi-p-pōr-*, 4 செ.குன்றாவி. (v.t.) மேலே போர்த்தல்; to put on, cover with, as a shawl. *"மீப்போர்த்த கருந்தோலாற் கண்விளக்கப் பட்டு" (நாலடி, 47).*

*[மீ + போர்-த்தல்.]*

**மீப்போர்வை** *mī-p-pōrvai,* பெ.(n.) மேற் போர்வை; outer covering, coat. *"பொய்ம்மறைக்கு மீப்போர்வை மாட்சித் துடம்பானால்" (நாலடி, 42).*

*[மீ + போர்வை.]*

**மீபார்க்கெல்லை** *mī-p-pārkkellai,* பெ.(n.) மேற்புற எல்லை; western side boundary (கல்.அக.).

**மீமகன்** *mī-magaṉ,* பெ.(n.) இப்போதைய முறைமையை முற்றிலும் அழித்துப் புதிய நிலையை உண்டாக்குபவனாக இருப்பவன்; one who creates new once in supersession of existing customs.

**மீமிசை[1]** *mī-miśai,* பெ.(n.) 1. மிக்கது (பிங்.); that which exceeds or abounds. 2. மீமிசைச்சொல் பார்க்க; see *mī-miśai-c-col. "மீமிசை யென்று பெயராய் அர்த்தத் தினுடைய அதிசயத்தைக் காட்டக் கடவது" (திவ். பெரியதி.8. 1:7, வியா.).*

*[மீ + மிசை.]*

**மீமிசை[2]** *mī-miśai,* வி.அ.& இடை.(adv. & prep.) மேலிடத்தில்; above, over. *"கள்ளி மீமிசைக் கலித்த வீநறு முல்லை" (நற்.169:5). "கொல்களிற்று மீமிசை" (புறநா.9:7) "நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு" (அகநா.9:9). "மீமிசைத் தாஅய வீஇ சுமந்து" (குறுந்.200:2).*

*[மீ + மிசை.]*

**மீமிசைச்சொல்** *mīmiśai-c-col,* பெ.(n.) சிறப்புப் பொருளைத் தெரிவித்தற்கு முன்னுள்ள சொல்லின் பொருளிலேயே, அடுத்து வருஞ்சொல்; pleonasm, word redundantly used.

*[மீமிசை + சொல்.]*

**மீமிசையண்டம்** *mīmiśai-y-aṇḍam,* பெ.(n.) துறக்கம் (மோட்சம்); the highest heaven, celestial. *"மீமிசை யண்ட மாண்டி ருப்பாற்கு" (திவ்.பெரியதி.2.1:4).*

*[மீமிசை + அண்டம். அண்டம் = உலகம்.]*

**மீயச்சூர்** *mī-y-accūr,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊரின் பெயர்; a village in Thanjavur Dist. *"தோற்றும் கோயிலும் தோன்றிய கோயிலும் வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்" (இலக் .ஊர்.).*

**மீயடுப்பு** *mī-y-aḍuppu,* பெ.(n.) புடையடுப்பு (தொல்.சொல்.17, உரை); side oven, supplemental oven.

மறுவ. கொடியடுப்பு.

*[மீ + அடுப்பு.]*



**மீயாட்சி** *mī-y-āṭci,* பெ.(n.) 1. நிலங்களின் குத்தகைப் பங்குரிமை; right for share in the land lease. 2. நில முதலியவற்றின் மேலதிகாரம் (கல்.); pro-prietorship, overlordship, as of land.

*[மீ + ஆட்சி.]*

நிலத்திற்கு உரிமையாளராகிய ஆட்சியாளர், தன்னிடம் குத்தகைக்குப் பெற்றுப் பயிரிடுபவரிடம் விளைச்சலில் பங்குரிமை ஆட்சி பெறுதலின், ஆட்சி மேல் ஆட்சி பெறுதலின் மீயாட்சி என்று கூறப்பட்டது (கல்.அக.).

**மீயாள்(ளு)-தல்** *mī-y-āḷ-*, 10 செ. குன்றாவி. (v.t.) மேலதிகாரஞ் செலுத்துதல்; to exercise overlordship, to boss over. *"உத்திரவேதிச் சதுர்வேதி மங்கல மீயாளுங் கணத்தாருள்" (தெ.இ.கல்.தொ.3:2).*

*[மீ + ஆள்(ளு)-தல்.]*

**மீயாளுங்கணத்தார்** *mī-y-āḷuṅgaṇattār*, பெ.(n.) மேற்பார்வை செய்யும் கூட்டம்; members of the supervising body.

*[மீயாள் + கணத்தார்.]*

**மீயான்** *mīyāṉ*, பெ.(n.) மீகாமன் (சங்.அக.) பார்க்க; see *mī-kāmaṉ*.

*[மீகான் →மீயான்.]*

**மீயை** *mīyai*, பெ.(n.) செங்குடை (பிங்.); umbrella made of red cloth.

**மீரம்** *mīram*, பெ.(n.) கடல் (யாழ்.அக.); sea.

**மீராசு** *mīrāśu*, பெ.(n.) 1. ஆதாயம்; gain. 2. வருமானம்; income, profit. 3. பயன்படுகை; usefulness.

**மீலம்** *mīlam*, பெ.(n.) வானம் (சங்.அக.); sky.

**மீவான்** *mīvāṉ*, பெ.(n.) மீகாமன் (நாமதீப. 172) பார்க்க; see *mīkāmaṉ*.

*[மீகாமன் →மீவான். மீகாமன் = மாலுமி.]*

**மீள்[1](ளு)-தல்** *mīḷ-*, 16 செ.கு.வி.(v.i.) 1. திரும்புதல்; to return. *"போகத்து மன்னியும் மீள்வர்கள்" (திவ்.திருவாய்.4. 1:8). வளையம் மீளும் தன்மையை இழந்துவிட்டது.* 2. இல்லையாதல்; to disappear, vanish. *"பேதைமை மீளச் செய்கை மீளும்" (மணிமே. 30:119).* 3. காப்பாற்றப்படுதல்; to be cured, as of a disease; to be rescued, redeemed, liberated. *சாகும் தறுவாயில் இருந்த பெரியவரை மருத்துவர்கள் பாடுபட்டு மீளக் கொண்டுவந்தனர்.*

**மீள்[2]-தல் (மீட்டல்)** *mīḷ-*, 13 செ.குன்றாவி. (v.t.) 1. சிறையினின்று வெளியேற்றுதல்; to liberate, extricate, release. 2. திரும்பக் கொணர்தல்; to bring, back, recover. *"எயில்...... இரும்புண்ட நீரினு மீட்டற் கரிதென" (புறநா.21).* 3. போக்குதல்; to remove; to eradicate, to cause to disappear. *"தொண்டர் வருத்த மீட்பாராய்" (பெரியபு. திருநா. 304).* 4. செலுத்துதல்; to cause to go. *"மீளாவழியின் மீட்பனவே" (பெரியபு. நமிநந்தி.33).* 5. காத்தல்; to redeem, restore, rescue. 6. விடுபடுதல்; recover from, get over. *அதிர்ச்சியில் இருந்து அவர் இன்னும் மீளவில்லை. மீளாத் துயரில் ஆழ்ந்தார்.*

**மீள்[3]-தல்** *mīḷ-*, 16 செ.கு.வி.(v.i.) அசையிடுதல் (யாழ்.அக.); to chew the cud.

**மீள்[4](ளு)-தல்** *mīḷ-*, 16 செ.குன்றாவி.(v.t.) கடத்தல் (பிங்.); to pass beyond, to kidnap.

**மீள்[5]-தல்** *mīḷ-*, 16 செ.கு.வி.(v.i.) 1. விடுவித்துத் தம் வயம் பெறுதல்; to recover, regain, taken aback. *கடத்தப்பட்ட சிலையை மீட்க நடவடிக்கை எடுத்தனர். கடத்தல் காரனிடமிருந்து குழந்தையை மீட்டனர். நம் எல்லைப் பகுதியை மீட்கத்தான் இந்தப் போர்.* 2. திரும்பப் பெறுதல்; redeem, retain. *வீட்டை இந்த ஆண்டாவது மீட்க வேண்டும்.*

**மீள** *mīḷa*, கு.வி.எ.(adv.) மறுபடியும்; once again. *"உன் வயிற்றுட் கடைநாட் சென்றுறைந்து மீள வருந்தேவரை" (திருவேங்கடக்கலம்.11).*

*[மீள் → மீள.]*

**மீளக்கொடு-த்தல்** *mīḷa-k-koḍu-*, 4 செ. குன்றாவி. (v.t.) திரும்பக் கொடுத்தல்; to return. *"மீளக் கொடுக்குமாப் போலே" (ரஹஸ்ய.410).*

*[மீள் → மீள + கொடு-த்தல்.]*

**மீளவும்** *mīḷavum*, கு.வி.எ.(adv.) மீள பார்க்க; see *mīḷa*.

*[மீள → மீளவும்.]*

**மீளாக்கடன்** *mīḷā-k-kaḍaṉ*, பெ.(n.) தீராக் கடன் (கூட்டுறவு.1); irredeemable debt.

*[மீள் + ஆ + கடன்.]*

**மீளாக்கதி** *mīḷā-k-kadi*, பெ.(n.) வீடுபேறு (மோட்சம்) (பிங்.); salvation, as a state from which there is no return, attainment, emancipation.

*[மீள் + ஆ + கதி. கதி = பற்றுக்கோடு, நிலைமை, இயல்பு.]*

**மீளாக்காட்சி** *mīḷā-k-kāṭci*, பெ.(n.) மீளாக் கதி பார்க்க; see *mīḷā-k-kadi*. *"மீளாக் காட்சி தருதி" (கல்லா.முருகக்.).*

*[மீள் + ஆ + காட்சி.]*

**மீளாநரகம்** *mīḷā-naragam*, பெ.(n.) மீளாவளறு பார்க்க; see *mīḷā-v-aḷaṟu*.

*[மீளா + Skt. நரகம்.]*

**மீளாநோய்** *mīḷā-nōy*, பெ.(n.) குணமாகாத நோய்; an incurable or chronic disease.

*[மீளா + நோய்.]*

**மீளாவழி** *mīḷā-vaḻi*, பெ.(n.) மீளாக்கதி பார்க்க; see *mīḷā-k-kadi*. *"கழல்க ணினைவாரை மீளாவழியின் மீட்பனவே" (பெரியபு. நமிநந்தி. 33).*

*[மீள் + ஆ + வழி.]*

**மீளாவளறு** *mīḷā-v-aḷaṟu*, பெ.(n.) மீட்சி யில்லாத நிரய வகை; a hell, considered a region of eternal damnation.

*[மீள் + ஆ + அளறு.]*

**மீளி¹** *mīḷi*, பெ.(n.) 1. மீளுகை; retrieval, returning. *"இரவில் வந்து மீளியுரைத்தி" (திருக்கோ.151).* 2. இரங்கல் (அரு.நி.); pity, sympathy. *"மீளி மொய்ம்பொடு நிலனெறியாக் குறுகி" (அகநா.93:18).*

*[மீள்→மீளி.]*

**மீளி²** *mīḷi*, பெ.(n.) 1. தலைவன்; lord, chieftain. *"மீளி... ஆகோள் கருதின்" (பு.வெ.1:20).* 2. பாலைநிலத் தலைவன் (சூடா.); chief of a desert tract. 3. இறை (அரு.நி.); king, sovereign. 4. படைத் தலைவன் (நாமதீப. 139); commander of an army. 5. திண்ணியன் (பிங்.); strong man. 6. பெருமையிற் சிறந்தோன் (பிங்.); great man, worthy man. 7. வலிமை (பிங்.); strength. 8. வீரம்; valour, bravery. *"மீளி முன் பினாளிபோல" (புறநா.207).* 9. பெருமை; greatness. 10. தலைமை; merit, distinction. *"மீளிக் கடற்றானை"* (பு.வெ.7:5). 11. கூற்றுவன்; Yama, king of Dharma. *"மீளியுடம்பிடித் தடக்கை" (பெரும்பாண்.75).* 12. பேய்; devil, spirit. *"சீயமாவு மீளியும்" (கம்பரா. மூலபல.80).* 13. இளைஞன்; youth, young man, lad. *"வீவி லாற்றலொர் மீளி" (சீகாளத். பு.கண்ணப்ப.50).* 14. ஏழகவை முதல் பத்தகவை முடியுமளவுள்ள பருவம் (பன்னிருபா. 228); period of life between the seventh and tenth years.

*[மீள் → மீளி.]*

**மீளிமை** *mīḷimai,* பெ.(n.) 1. வலிமை; strength, prowess. *"அடக்க முடையவன் மீளிமை" (இன்.நாற்.40).* 2. வீரம்; bravery, heroism, valour. *"வன்படை..... மீளிமைக் கடையாளமோ" (திருவானைக்.நகரப்.35).*

*[மீளி → மீளிமை.]*

**மீளும்நோய்** *mīḷum-nōy,* பெ.(n.) குணமாகும் நோய்; curable disease.

*[மீள் → மீளும் + நோய்.]*

**மீறல்** *mīṟal,* பெ.(n.) சட்டம், உரிமை முதலியவற்றை மீறும் செய்கை; violation of rules, rights, etc, infrigement. *மனித உரிமை மீறல்கள் அதிகமாகி வருவதை எதிர்த்துப் போராடினார்கள்.*

*[மீறு →மீறல்.]*

**மீறான்கனியண்ணாவி** *mīṟāṉ-kaṉi-y-aṇṇāvi,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் குறமாது என்னும் நூலை இயற்றியவர்; an author who wrote `*kuramāḍu*', during 19th century.

**மீறு¹-தல்** *mīṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. ஆணை முதலியன கடத்தல் (உ.வ.); to break, as a law, to violate, infringe, as a right, tresspass. 2. மேற்போதல் (நாமதீப. 763); to go beyond, exceed ones limit. 3. அதிகாரஞ் செய்தல்; to dominate.

க. மிறு

*[மீள்⁴ →மீறு.]*

**மீறு²-தல்** *mīṟu-,*5 செ.கு.வி.(v.i.) 1. எஞ்சியிருத்தல் (வின்.); to be in excess, to remain over. 2. மிகுதல்; to be great. *"மீறுகாத லளிக்கும்" (திருப்பு.923).* 3. பெரிதாய் வளர்தல்; to grow lofty, as a tree, to grow stout, as a person. 4. செருக்கடைதல் (இ.வ.); to be haughty, to be arrogant. 5. சட்டம், நெறி (விதி) போன்றவற்றைப் பின்பற்றாமல் விடுதல்; புறக்கணித்தல்; transgress, violate, break rules, etc. *வேகக் கட்டுப்பாட்டை மீறிச் செல்வது தண்டனைக்குரிய குற்றமாகும். தடை ஆணையை மீறி ஊர்வலம் செல்ல முயன்றவர்கள் கைது செய்யப்பட்டனர்.*

க. மிறு.

*[மீள் →மீறு.]*

**மீன்¹** *mīṉ,* பெ.(n.) 1. விண்மீன்; star. *"பதியிற் கலங்கிய மீன்" (குறள், 1116).* 2. பதினான்காம் விண்மீனாகிய நெய்ம்மீன் (சித்திரை); the 14th naksatra. 3. பதின்மூன்றாம் விண் மீனாகிய கைம்மீன் (அத்தம்); the 13th naksatra.

க. மீன்.

*[மின் →மீன். மீன் = மின்னும் வெண்ணிற மீன்.]*

**மீன்²** *mīṉ,* பெ.(n.) 1. உடலில் அமைந்திருக்கும் சிறகு போன்ற செதிலாலும், வாலாலும் நீந்திச் செல்லக் கூடிய நீர் வாழ் உயிரினம் (பிங்.); fish. 2. மீனவோரை (சூடா.); pisces of the zodiac. 3. மீன்கோட்பறை (யாழ்.அக.) பார்க்க; see *mīṉ-kōṭpaṟai.* 4. சுறா (வின்.); shark.

*[மின் →மீன்.]*

மீன் வகைகள் : 1. விரால் மீன், 2. குறவை மீன், 3. அயிரை மீன், 4. இறால் மீன், 5. கெண்டை மீன், 6. சன்னக் கெண்டை, 7. பேராரல் மீன், 8. சிற்றாரல் மீன், 9. கச்சல் மீன், 10. உழுவை மீன், 11. கொடுவா மீன், 12. வாளை மீன், 13. சேல்

கெண்டை, 14. கெளிற்று மீன், 15. ஓலை வாளை, 16. சுறா மீன், 17. கொள்ளி மீன், 18. சன்ன கூலி, 19. திருக்கை மீன், 20. மடவை மீன், 21. சுரும்பு மீன், 22. உல்ல மீன், 23. கற்றலை மீன், 24. வெள்ளை வௌவால், 25. கருவௌவால், 26. நெய்த் தோலி, 27. மயிறி மீன், 28. விலாங்கு மீன், 29. கிழங்கான் மீன், 30. வஞ்சிரம் மீன்.

**மீன்அமர்வு** *mīṉ-amarvu*, பெ.(n.) சமதரையில் தாமரை அமர்வு நிலையில் அமர்ந்து பின்புறம் கைகளைக் கட்டியபடி செய்யும் அமர்வு வகை; a kind of *yogā* positure.

*[மீன் + அமர்வு.]*

**மீன்ஆயம்** *mīṉ-āyam*, பெ.(n.) மீன் பிடித்தலுக்கு வாங்கும் வரி; tax, a levy. *மீன் ஆயம் கட்டி விட்டீர்களா?*

*[மீன் + ஆயம்.]*

சோழர் காலத்தில் மீனவர்களிடம் வாங்கிய வரி.

**மீன்கட்டை** *mīṉ-kaṭṭai*, பெ.(n.) கட்டுமரம் (இ.வ.); catamaran, fishing raft.

*[மீன் + கட்டை.]*

**மீன்கண்** *mīṉ-kaṇ*, பெ.(n.) ஒருவகை மணிக்கல் (சங்.அக.); pearl, a kind of gem.

*[மீன் + கண். மீனின் கண் போன்ற மணிக்கல், முத்து.]*

**மீன்கண்டம்** *mīṉ-kaṇḍam*, பெ.(n.) மீன் துண்டு; piece of fish (meat) curry.

*[மீன் + கண்டம்.]*

**மீன்கண்ணணிந்தோன்** *mīṉkaṇ-ṇ-aṇindōṉ*, பெ.(n.) சிவன் (நாமதீப.12); Šiva.

*[மீ + கண் = மேலுள்ள கண், நெற்றிக்கண். மீ + கண்→மீங்கண்→மீன்கண் + அணிந்தோன்.]*

**மீன்கருவாப்பு** *mīṉ-karuvāppu*, பெ.(n.) மீன் கூட்டம் (மீனவ.); mass of fishes.

**மீன்கல்** *mīṉ-kal*, பெ.(n.) மீனின் தலையிலுண்டாகும் கெட்டியான வெளுத்த கல். இதைத் தண்ணீரிலுரைத்து குடிக்க கல்லடைப்புப் போகும்; a white stone grown in the head of some fish. It is a good diuretic, even it removes stone in the bladder and kidney.

*[மீன் + கல்.]*

**மீன்கவிச்சு** *mīṉ-kaviccu*, பெ.(n.) மீன் நாற்றம்; unpleasant smell of fish, stink.

*[மீன் + கவிச்சு. கவிச்சு = புலால் நாற்றம்.]*

**மீன்காட்சியகம்** *mīṉ-kāṭci-y-agam*, பெ.(n.) வகைவகையான மீன்களும் பிற நீர் வாழ் உயிரினங்களும் நீர் நிறைந்த கண்ணாடிப் பெட்டிக்குள் உயிருடன் காட்சிக்கு வைக்கப்பட்டு இருக்கும் இடம்; aquarium.

*[மீன் + காட்சியகம்.]*

**மீன்காரன்** *mīṉ-kāraṉ*, பெ.(n.) 1. மீன் விற்போன்; fish - monger. 2. செம்படவன் (வின்.); one who belongs to fisherman caste.

மறுவ. மீனவர், பரவர்.

க. மீனுகாரா.

*[மீன் + காரன்.]*

**மீன்காரி** *mīṉ-kāri*, பெ.(n.) 1. மீன் விற்பவள்; fish woman. 2. செம்படத்தி (வின்.); woman of the fisherman caste.

*[மீன்காரன் (ஆ.பா.)→மீன்காரி (பெ.பா.).]*

**மீன்குஞ்சு** *mīṉ-kuñju,* பெ.(n.) மீனின் இளமை; young fishes, minnow. *"மீன் குஞ்சுக்கு (குட்டிக்கு) நீச்சல் பழக்க வேண்டுமா?" (பழ.).*

*[மீன் + குஞ்சு.]*

மீன்கள் முட்டையிட்டுப் பொரித்த குஞ்சு.

**மீன்குத்தி** *mīṉ-kutti,* பெ.(n.) 1. மீன் கொத்தி (வின்.) பார்க்க; see *mīṉ-kotti.* 2. பாரைக் கோல் (பிங்.); crowbar, pick-axe.

*[மீன் + குத்தி. கொத்தி →குத்தி.]*

**மீன்குத்திக்குருவி** *mīṉ-kutti-k-kuruvi,* பெ.(n.) மீன்குத்தி பார்க்க; see *mīṉ-kutti.*

*[மீன் + குத்தி + குருவி.]*

**மீன்குழம்பு** *mīṉ-kuḻambu,* பெ.(n.) மீன் அல்லது மீன் துண்டம் இட்ட குழம்பு (வின்.); fish - sauce. *"மீன் குழம்போ தேன் குழம்போ?" (பழ.).*

*[மீன் + குழம்பு.]*

**மீன்கூடு** *mīṉ-kūḍu,* பெ.(n.) மீன்பிடிக்குங் கருவி வகை (வின்.); fishing contrivance.

*[மீன் + கூடு.]*

**மீன்கொடியோன்** *mīṉ-koḍiyōṉ,* பெ.(n.) 1. மீன் வடிவம் பொறித்த கொடியையுடைய காமன் (யாழ்.அக.); Kaman, one who has the fish as the emblem of his banner. 2. பாண்டியன் (வின்.); *Paṇḍiya*king.

*[மீன் + கொடியோன்.]*

**மீன்கொத்தி** *mīṉ-kotti,* பெ.(n.) 1. சிச்சிலிப் பறவைப் பொது (குற்றா.குற.87:3); kingfisher, darters. 2. சிச்சிலிப் பறவை வகை; lesser, kingfisher, species of *alcedo.* 3. சிச்சிலிப் பறவை வகை; pied kingfisher, species of *ceryle.* 4. சிச்சிலிப் பறவை வகை; white-breasted or larger kingfisher, *Halcyon smyrnensis.*

மறுவ. பொன்னான்தட்டான்.

*[மீன் + கொத்தி.]*

ஆறுகுளம் முதலிய நீர் நிலைகளில் உள்ள மீன்களைப் பிடித்துத் தின்னும் நீண்ட அலகுடன் நீலமும், பழுப்பும் கலந்த நிறத்தில் இருக்கும் ஒரு சிறு பறவை.



**மீன்கொல்லி** *mīṉ-kolli,* பெ.(n.) 1. செடி வகை; rattlewort, *Crotalaria pulcherrima.* 2. செடிவகை; rattlewort, *Crotalaria laburnifolia.*

*[மீன் + கொல்லி.]*

மீனைத் தன் இதழ்களால் வளைத்துப் பிடித்துத் தனக்கு இரையாக்கிக் கொள்ளும் செடிவகை.

**மீன்கொல்லிப்பூனை** *mīṉ-kolli-p-pūṉai,* பெ.(n.) மீன் பிடித்துண்ணும் பூனை வகை; fishing tiger-cat, *Felis viverrina.*

*[மீன் + கொல்லி + பூனை. கொல் →கொல்லி.]*

## மீன்கொத்தி வகை


பெரிய அலகு மீன்கொத்தி


சிரால் மீன்கொத்தி


கருந்தலை மீன்கொத்தி


வெண்மார்பு மீன்கொத்தி


சிறுமீன்கொத்தி


கருப்பு வெள்ளை மீன்கொத்தி

**மீன்கொழுப்பு** *mīṉ-koḻuppu,* பெ.(n.) திமிங்கிலத்தின் எண்ணெய் (தைலம்) (இங்.வை.); spermaceti-*Cetaceum.*

*[மீன் + கொழுப்பு.]*

மீனிலிருந்து எடுக்கப்படும் கொழுப்பு. இது சத்து மருந்தாகவும் பயன்படுகிறது.

**மீன்கொள்ளி** *mīṉ-koḷḷi,* பெ.(n.) மீன்கொல்லி பார்க்க; see *mīṉ-kolli.*

*[மீன் + கொள்ளி. கொல்லி→கொள்ளி.]*

**மீன்கோட்பறை** *mīṉ-kōṭ-paṟai,* பெ.(n.) நெய்தனிலப் பறை (இறை.1, பக்.17); drum of the maritime tract.

*[மீன் + கோட்பறை.]*

**மீன்சாறு** *mīṉ-šāṟu,* பெ.(n.) மீன்குழம்பு; fish curry, saucy.

*[மீன் + சாறு.]*

**மீன்சிதள்** *mīṉ-šidaḷ,* பெ.(n.) மீன்செதிள் பார்க்க; see *mīṉ-šediḷ.*

*[மீன் + சிதள். செதிள்→சிதள்]*

**மீன்சிலாம்பு** *mīṉ-šilāmbu,* பெ.(n.) கணவாய் மீன் ஓடு; cuttle fish bone.

*[மீன் + சிலாம்பு.]*

இதைத் தவறுதலாய்க் கடல் நுரையென்றும் சொல்லிக் கடையில் விற்பதுண்டு.

**மீன்சிறகு** *mīṉ-širagu,* பெ.(n.) சிறகு போலக் காணப்படும் மீனின் உறுப்பு (வின்.); fin.

*[மீன் + சிறகு.]*

**மீன்சினை** *mīṉ-šiṉai,* பெ.(n.) 1. மீன் முட்டை; fish-spawn, roe - corn. *"சிறுமீன் சினையினு நுண்ணிதே யாயினும்" (நறுந்.).* 2. மீனின் கொழுப்பு (யாழ்.அக.); fat extracted from fish.

*[மீன் + சினை. சினை = முட்டை.]*

**மீன்சினைப்பாடு** *mīṉ-šiṉai-p-pāḍu,* பெ.(n.) கருவுற்ற மீனின் முட்டைகள் (செங்கை. மீனவ.); fertilized eggs of fish.

*[மீன் + சினை + பாடு.]*

**மீன்சீவுதல்** *mīṉ-šīvudal,* பெ.(n.) மீனைப் பதப்படுத்துகை; to be seasoned of fishes.

*[மீன் + சீவுதல்.]*

**மீன்சூடு** *mīṉ-šūḍu,* பெ.(n.) சுட்ட மீன்; fish fry.

மறுவ. கருவாடு

*[மீன் + சூடு.]*

**மீன்சூப்பு** *mīṉ-šūppu,* பெ.(n.) மீனிலிருந்து செய்யப்பட்ட கருக்கு நீர்; fish soup.

*[மீன் + சூப்பு. E. soup > த. கருக்கு நீர்.]*

**மீன்செகிள்** *mīṉ-šegiḷ,* பெ.(n.) மீன்செதிள் (வின்.) பார்க்க; see *mīṉ-šediḷ.*

*[மீன் + செகிள். செதில் → செகிள்.]*

**மீன்செடி** *mīṉ-šeḍi,* பெ.(n.) மீன்கவிச்சு (மாட்டுவா.160) பார்க்க; see *mīṉ-kaviccu.*

*[மீன் + செடி.]*

**மீன்செதில்** *mīṉ-šedil,* பெ.(n.) மீன்செதிள் (வின்.) பார்க்க; see *mīṉ-šediḷ.*

*[மீன் + செதில். செதிள் →செதில்.]*

**மீன்செதிள்** *mīṉ-šedil,* பெ.(n.) மீனின் மேற்புறத்துள்ள தகடு போன்ற அமைப்புகள் (வின்.); fish scales.

*[மீன் + செதிள்.]*

**மீன்செய்குளம்** *mīṉ-šey-kuḷam,* பெ.(n.) மீன்காட்சியகம் பார்க்க; see *mīṉ-kāṭciyagam.*

*[மீன் + செய் + குளம்.]*

**மீன்செலு** *mīṉ-šelu,* பெ.(n.) மீன்செதிள் (வின்.) பார்க்க; see *mīṉ-šediḷ.*

*[மீன் + செலு. செதிள் →செலு.]*

**மீன்செவுள்** *mīṉ-ševuḷ,* பெ.(n.) மீன் முதலிய நீர்வாழ் உயிரிகளின் கன்னத்தினருகேயுள்ள மூச்சு உறுப்பு; gill.

*[மீன் + செவுள்.]*

**மீன்தலைக்கல்** *mīṉ-talai-k-kal,* பெ.(n.) மீன்கல் பார்க்க; see *mīṉ-kal.*

*[மீன் + தலை + கல்.]*

**மீன்தலைவாளம்** *mīṉ-talai-vāḷam,* பெ.(n.) மீனெலும்பு (யாழ்.அக.); fish - bone.

**மீன்தெளித்தல்** *mīṉ-teḷittal,* பெ.(n.) மீனைப் பரப்புகை; spreading of fishes for drying.

*[மீன் + தெளித்தல்.]*

**மீன்தென்படுதல்** *mīṉ-teṉpaḍudal,* பெ.(n.) கண்ணிற் காணுமாறு நீர்ப்பரப்பின் மேல் மீன் தெரிகை; fishes as seen on the surface of water.

*[மீன் + தென்படுதல்.]*

**மீன்தைத்தல்** *mīṉ-taittal,* பெ.(n.) வலையில் நெருக்கமாய் மீன் அகப்படுகை; trapping of fishes in large quantity in net.

மறுவ. மீன்பாடு

*[மீன் + தைத்தல்.]*

**மீன்படப்பு** *mīṉ-paḍappu,* பெ.(n.) மீன்களை வெய்யிலிற் காய வைப்பதற்காக உண்டாக்கப் பட்ட பனை நாராலான விரிப்பு; a spread, made from palmyra fibres to dry fishes.

*[மீன் + படப்பு.]*

**மீன்படுதல்** *mīṉ-paḍudal,* பெ.(n.) வலையில் மீன் அகப்படுகை; to entrap fishes into fishing net.

மறுவ. மீன்தைத்தல், மீன்பாடு.

*[மீன் + படுதல்.]*

**மீன்படுபள்ளம்** *mīṉ-paḍu-paḷḷam,* பெ.(n.) மீன் தங்குவதற்குரியதாக கடலில் இயற்கையாக அமைந்த பள்ளம்; naturally formed ditch in the sea where the fishes hide.

*[மீன் + படு + பள்ளம்.]*

**மீன்படை** *mīṉ-paḍai,* பெ.(n.) மீன் கூட்டம்; thick fish population.

*[மீன் + படை.]*

**மீன்பண்ணை** *mīṉ-paṇṇai,* பெ.(n.) மீன் வளர்க்குமிடம்; fish farm.

*[மீன் + பண்ணை.]*

**மீன்பரத்துதல்** *mīṉ-parattudal,* பெ.(n.) மீன் தெளித்தல் பார்க்க; see *mīṉ-teḷittal.*

*[மீன் + பரத்துதல்.]*

**மீன்பரவர்** *mīṉ-paravar,* பெ.(n.) மீன்பிடி தொழில் செய்வாருள் ஒரு வகுப்பினர்; a sect of fishermen community.

*[மீன் + பரவர்.]*

**மீன்பரிசம்** *mīṉ-parišam,* பெ.(n.) மீன் விலை; fish (rate) price.

*[மீன் + பரிசம்.]*

**மீன்பலுக்கு–தல்** *mīṉ-palukku-,* 5 செ.கு.வி. (v.i.) மீன் இனப்பெருக்கம் செய்தல்; fish productivity.

*[மீன் + பலுக்கு–தல்.]*

**மீன்பறி** *mīṉ-paṟi,* பெ.(n.) மீன்பிடிக்குங் கூட்டுப் பொறி; fish-pot, basket - trap for fishing.

*[மீன் + பறி. பறி = மீன் பிடிக்குங் கருவி.]*



**மீன்பறிசல்** *mīṉ-paṟišal,* பெ.(n.) மீன்பறி பார்க்க; see *mīṉ-paṟi.*

*[மீன்+பறி. பறி = மீன் பிடிக்குங் கருவி கூடை.]*

**மீன்பாட்டம்** *mīṉ-pāṭṭam,* பெ.(n.) மீன் பிடிப்பதற்கு வாங்கும் வரி (தெ.இ.க.தொ.3, 115); tax on fishing.

*[மீன் + பாட்டம். பாட்டம் = வரி.]*

**மீன்பாடு** *mīṉ-pāḍu,* பெ.(n.) மீன்கள் வலையுட் படுகை (யாழ்ப்.); catch of fish in the net. *"பாவி போன இடம் மீன்பாடு அத்துப் போச்சு".*

மறுவ. மீன் தைத்தல், மீன் படுகை.

*[மீன் + பாடு. பாடு = மீன்பிடிக்கை.]*

**மீன்பாய்** *mīṉ-pāy,* பெ.(n.) பனைநாரால் செய்யப்பட்ட விரிப்பு, பனைபாய்; a spread or mat made of palmyrah fibres.

மறுவ. பனைபாய்

*[மீன் + பாய்.]*

மீனைக் கருவாடாக்குதற்காகப் பனை நாரினால் செய்யப்பட்ட விரிப்பு.

**மீன்பாய்–தல்** *mīṉ-pāy-,* 1 செ.கு.வி.(v.i.) கடற்பரப்பில் நீந்தும் மீன் நீர் மட்டத்தின் மேல் துள்ளிப் பாய்தல்; leaping and galloping of the fish while swimming on the surface of water.

*[மீன் + பாய்–தல்.]*

**மீன்பிசினி** *mīṉ-pišiṉi,* பெ.(n.) மீன் கொழுப்பிலிருந்து செய்யப்படும் பொருள்; glue taken from fish fat.

*[மீன் + பிசினி.]*

**மீன்பிடி¹** *mīṉ-piḍi,* பெ.(n.) பாணருள் ஒரு சாரார் (E.T.4:31); a sub-division of the *Pāṇar* caste.

*[மீன்+ பிடி. மீன் பிடிக்கும் பாணர் இனத்தவர்.]*

**மீன்பிடி²–த்தல்** *mīṉ-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) வலை மற்றும் தூண்டிலின் மூலம் மீன் பிடித்தல்; catching of fish with the help of net and fish - hook.

*[மீன் + பிடி–த்தல்.]*

**மீன்பிடிக்கருவி** *mīṉ-piḍi-k-karuvi,* பெ.(n.) மீனைப்பிடிக்கப் பயன்படும் தூண்டில், வலை, கட்டுமரம், படகு, மரக்கலம் போன்றவை; catching of fish with the help of fish-hook, net, catamaran, etc.

*[மீன்பிடிக்கும் + கருவி.]*

**மீன்பிடிகாரர்** *mīṉ-piḍikārar,* பெ.(n.) வலைஞர் (யாழ்.அக.); fishermen, men of the fishermen caste.

*[மீன்பிடி + காரர்.]*

**மீன்பிடித்தட்டு** *mīṉ-piḍi-t-taṭṭu,* பெ.(n.) மீன்களைப் பிடித்து வைப்பதற்காக உடன் வைத்துக் கொள்ளும் ஒருவகைக் கூடை; a kind of basket to collect fishes, caught.

*[மீன்பிடி + தட்டு.]*

**மீன்பிடித்துறைமுகம்** *mīṉ-piḍi-t-tuṟai mugam,* பெ.(n.) மீன்பிடிபாட்டிடம்; fishing harbour.

*[மீன் + பிடி + துறைமுகம்.]*

**மீன்பிரால்** *mīṉ-pirāl,* பெ.(n.) மீன்செதிள் (யாழ்.அக.) பார்க்க; see *mīṉ-šediḷ.*

**மீன்பிலால்** *mīṉ-pilāl,* பெ.(n.) மீன் செதிள் பார்க்க; see *mīṉ-šediḷ.*

**மீன்பீலி**[1] *mīṉ-pīli,* பெ.(n.) காற்சிறு விரலில் அணியும் மீனுருவான கணையாழி (வின்.); fish shaped ring worn on the little toe.

*[மீன் + பீலி. பீலி = மகளிர் அணியும் கால் விரலணி.]*

**மீன்பீலி**[2] *mīṉ-pīli,* பெ.(n.) கெண்டைப் பீலி மீன்; a kind of fresh water fish.

**மீன்புகையூட்டல்** *mīṉ-pugai-y-ūṭṭal,* பெ.(n.) புகையூட்டி மீன் பதனிடுகை; tanning of fishes by smoking.

*[மீன் + புகை + ஊட்டல்.]*

**மீன்புளி** *mīṉ-puḷi,* பெ.(n.) மலையாத்தி; Malabar mountain ebony.

**மீன்பொறுக்கு-தல்** *mīṉ-poṟukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) வலையிலிருந்து மீனை இனம், அளவு வாரியாகத் தனித்தனியாகப் பொறுக்கிப் பிரித்தல்; to sort out the fishes from the mass or heap according to their species, and size.

*[மீன் + பொறுக்கு-தல்.]*

**மீன்மடை** *mīṉ-maḍai,* பெ.(n.) குளங் குட்டைகளில் மீன்பிடித்தற்கு அமைத்த சிறிய மண்ணணை (இ.வ.); small bund of mud made across a stream or pond for catching fish.

*[மீன் + மடை. மடை = மதகு, மதகுப்பலகை, சிறிய அணை.]*

**மீன்மண்டியாள்** *mīṉ-maṇḍiyāḷ,* பெ.(n.) மீன் மொத்த வணிகர் (நெல்லைமீனவ.); wholesale fish merchant.

*[மீன் + மண்டி+ஆள். மண்டி = பொருள்கள் விற்குமிடம்.]*

பொருள்கள் மண்டியிருத்தலால் மண்டி எனப்பட்டது.

**மீன்மலம்** *mīṉ-malam,* பெ.(n.) மீனம்பர் (யாழ்.அக.) பார்க்க; see *mīṉambar.*

*[மீன் + மலம்.]*

**மீன்மிதப்பு** *mīṉ-midappu,* பெ.(n.) மீனிற் குள்ளிருக்கும் காற்றுப் பை; air bladder of fish.

*[மீன் + மிதப்பு. மிதப்பு = மிதக்கப் பயன்படும் உறுப்பு.]*

**மீன்மீசை** *mīṉ-mīšai,* பெ.(n.) மீனின் வாய்ப்புறம் நீட்டிக் கொண்டிருக்கும் இழைகள்; string or fibre like part in front of the fish mouth.

*[மீன் + மீசை.]*

**மீன்முள்** *mīṉ-muḷ,* பெ.(n.) மீனெலும்பு; fish bone, fish spine or thorn.

*[மீன் + முள்.]*

**மீன்முளைத்தல்** *mīṉ-muḷaittal,* பெ.(n.) விடியல் வேளையில் விண்மீன் வெளிப்படத் தோன்றுகை (உ.வ.); visible appearance of the stars in the sky, at morning twilight.

*[மீன் + முளைத்தல்.]*

**மீன்வச்சிரம்** *mīṉ-vacciram,* பெ.(n.) மீன்பிசின் வகை (இங்.வை.); isinglass, fish-glue, Ilthyocolla.

*[மீன் + **Skt.** வச்சிரம்.]*

**மீன்வலையர்** *mīṉ-valaiyar,* பெ.(n.) வலையர், வலைஞர், பரதர், பரதவர், பரவர், பரவா என்னும் பெயர்களாலும் அழைக்கப்படும் மீன் பிடிப்பவர்; people who do fishing.

மறுவ. செம்படவன்

*[மீன் + வலையர்.]*

**மீன்வளம்** *mīṉ-vaḷam,* பெ.(n.) தரமான மீன்கள் இருக்கும் இடத்தையும், மீன்களின் பெருக்கத்தையும் கூறுகை; place of qualitative fishes and good fishes.

*[மீன் + வளம்.]*

**மீன்வெட்டி** *mīṉ-veṭṭi,* பெ.(n.) சுறாமீன் (சங்.அக.); shark.

*[மீன் + வெட்டி. வெட்டு→வெட்டி.]*



**மீன்வெளிச்சம்** *mīṉ-veḷiccam,* பெ.(n.) மீனிலா (இ.வ.) பார்க்க; see *mīṉilā.*

*[மீன் + வெளிச்சம்.]*

**மீன்வேட்டுவர்** *mīṉ-vēṭṭuvar,* பெ.(n.) மீன்பிடிதொழிலை அதிக ஈடுபாட்டுடன் வேட்டைத் தொழிலாகக் கருதி விரும்பிச் செய்வோர்; those who desires to engage themselves in fishing as hunting.

*[மீன் + வேட்டுவர்.]*

**மீன்வேட்டை** *mīṉ-vēṭṭai,* பெ.(n.) மீன் பிடிக்கை (வின்.); fishing, angling.

*[மீன் + வேட்டை. வேட்டை = மீன்பிடித்தல்.]*

**மீன்வேடன்** *mīṉ-vēḍaṉ,* பெ.(n.) 1. சிவன்; God Šivā. 2. செம்படவன்; fisherman.

*[மீன் + வேடன்.]*

**மீனக்காரி** *mīṉa-k-kāri*, பெ.(n.) மீன ஓரையில் உள்ள காரிகோள் (வின்.); *Šaturn* in pisces, considered unpropitious.

*[மீன் → மீனம் + காரி.]*

**மீனகாதி** *mīṉa-kādi*, பெ.(n.) கொக்கு; stork, crane.

மீனுக்குப் பகையான கொக்கு.

**மீனக்கொடியோன்** *mīṉa-k-koḍiyōṉ*, பெ. (n.) 1. பாண்டியன்; *Pāṇḍiyaṉ*. 2. காமன்; *Kāmaṉ*

*[மீன்கொடியோன் →மீனக்கொடியோன்.]*

**மீனங்கம்** *mīṉaṅgam*, பெ.(n.) மீன்முள் பார்க்க; see *mīṉ-muḷ*.

*[மீன் + **Skt.**அங்கம்.]*

**மீனங்கு** *mīṉaṅgu*, பெ.(n.) விரியன் பாம்பு (சங்.அக.); a viper.

**மீனச்சனி** *mīṉa-c-caṉi*, பெ.(n.) மீனக்காரி பார்க்க; see *mīṉa-k-kāri*.

*[மீனம் + **Skt.** சனி.]*

**மீனஞ்சு** *mīṉañju*, பெ.(n.) மீன் கொல்லிப் பூடு; a kind of plant killing fish - *ratle wort-Crotolaria paniculata*.

*[மீன் + நஞ்சு.]*

**மீனஞ்சுவள்ளி** *mīṉañju-vaḷḷi*, பெ.(n.) மீனஞ்சுவன்னி பார்க்க; see *mīṉañju-vaṉṉi*.

*[மீனஞ்சு + வள்ளி.]*

**மீனஞ்சுவன்னி** *mīṉañju-vaṉṉi*, பெ.(n.) கடல் நுரை; bone of cuttle fish.

*[மீனஞ்சு + வன்னி.]*

**மீனத்துவசன்** *mīṉa-t-tuvašaṉ*, பெ.(n.) மீன்கொடியோன் பார்க்க; see *mīṉ-koḍiyōṉ*. *"வரிபயின் மீனத்துவசன் முன்னே" (திருவிளை.பயகர.29).*

*[மீன் + அத்து + **Skt.** துவசன்.]*

**மீனநிலயம்** *mīṉa-nilayam*, பெ.(n.) 1. மீன்களின் இருப்பிடமான கடல்; sea, as the abode of fish. *"மூதூர் மீனநிலயத்தி னுகவீசி" (கம்பரா.பொழிலிறுத்.2).* 2. மீன் காட்சியகம்; aquarrium.

*[மீன் + நிலையம்.]*

**மீனம்[1]** *mīṉam*, பெ.(n.) விண்மீன்; star. *"மீனத் திடை நிலை" (மணிமே.11:42).*

*[மின் → மீன் → மீனம். மின் = மின்னுதல், ஒளிவீசுதல்.]*

**மீனம்[2]** *mīṉam*, பெ.(n.) 1. மீன் (திவா.); fish. 2. மேழத்திலிருந்து பன்னிரண்டாம் வோரை (பிங்.); pisces of the zodiac. 3. பன்னிரண்டாவது தமிழ் மாதம் (பங்குனி); the 12th month of Tamil. *"மீனமதி யுத்தரத்தங் கெழுந் தருளி" (திருவாலவா. 4:16).*

*[மீன்→ மீனம்.]*

**மீனம்பர்** *mīṉ-ambar*, பெ.(n.) மீன் வயிற்றிலகப்படும் ஒருவகை மணப்பொருள்; ambergris, grey amber, *Ambragrisea*.

*[மீன் + U. அம்பர்.]*

**மீனம்பல்** *mīṉ-ambal*, பெ.(n.) மீனம்பர் (யாழ்.அக.) பார்க்க; see *mīṉ-ambar*.

**மீனம்பாக்கம்** *mīṉam-bākkam*, பெ.(n.) சென்னை மாநகரிலுள்ள ஓர் ஊர்; a part of city in Chennai.

[மீனம் + பாக்கம்.]

காஞ்சிபுரம் மாவட்டத்தைச் சார்ந்த ஊர். வானூர்தி நிலையம் (உள்நாடு மற்றும் வெளிநாட்டு) உள்ளது.

**மீனமரம்** *mīṉa-maram*, பெ.(n.) மலைவேம்பு; a species of margosa tree.

**மீனமாதம்** *mīṉa-mādam*, பெ.(n.) பன்னிரண்டாவது தமிழ் (பங்குனி) மாதம்; Tamil month of *paṅguṉi*.

[மீனம் + மாதம்.]

**மீனரசு** *mīṉ-arašu*, பெ.(n.) 1. விண் மீன்களின் அரசான நிலவு; moon, as king of the stars. *"மீனர சாண்ட வெள்ளி விளக்கட் து" (சிலப்.4:26).* 2. மீனைக் கொடியாகக் கொண்ட பாண்டிய அரசு; *Pāṇḍya* government.

[மீன் + அரசு.]

**மீனராசி** *mīṉa-rāši*, பெ.(n.) மீனவோரை பார்க்க; see *mīṉa-v-ōrai*.

[மீனம் + Skt. இராசி.]

**மீனவக்கெளுத்தி** *mīṉava-k-keḷutti*, பெ.(n.) ஒருவகைக் கெளுத்தி மீன்; a species of fish - *Macrene*.

**மீனவல்லிகை** *mīṉavalligai*, பெ.(n.) மீன்கொத்திக் குருவி; a bird with long beak - kingfisher, darter.

**மீனவன்**[1] *mīṉavaṉ*, பெ.(n.) 1. மீன்கொடி யுடையவனான பாண்டியன்; *Pāṇḍya* king, as flying the fish - banner. *"தேனார் கமழ் தொங்கன் மீனவன் கேட்ப" (காரிகை. பாயி.2).* 2. மீன் பிடிக்கும் இனத்தவர்; fisher man caste. 3. மீன் பிடிக்கும் தொழிலாளி; a man who take fishing as his vocation.

[மீன் → மீனவன்.]

**மீனவன்**[2] *mīṉavaṉ*, பெ.(n.) மீனைக் கொடியாகக் கொண்டோன் – காமன்; Kama, as having the fish-emblem on his banner. *"மாதர் மேனியல்லால் வில்லில்லை மீனவர்க்கு" (தேசிகப்.4:15).*

[மீன் → மீனவன்.]

**மீனவிராசி** *mīṉa-v-irāši*, பெ.(n.) மீன வோரை பார்க்க; see *mīṉa-v-ōrai*.

**மீனவுச்சன்** *mīṉa-v-uccaṉ*, பெ.(n.) மீன வோரையை உச்சவிடமாகக் கொண்ட வெள்ளி (சுக்கிரன்) (நாமதீப.101); *Šukkiraṉ*, as having his exaltation in pisces.

[மீனம் + உச்சன்.]

**மீனவோரை** *mīṉa-v-ōrai*, பெ.(n.) மேழவோரையிலிருந்து பன்னிரண்டாம் ஓரை; pisces of the zodiac.

[மீனம் + ஓரை.]

**மீனறுவடைக்காலம்** *mīṉ-aṟuvaḍai-k-kālam*, பெ.(n.) மீன் பிடிக்கும் காலம்; fish catching season. *தற்போது கழிமுகப் பண்ணையில் மீன் அறுவடைக் காலம்.*

[மீன் + அறுவடை + காலம்.]

**மீனன்** *mīṉaṉ*, பெ.(n.) மீனவோரையை வீடாகவுடையவான வியாழன் (நாமதீப.100); Jupiter, as the lord of pisces.

[மீன் → மீனன்.]

**மீனா** *mīṉā*, பெ.(n.) வயிரம் பாய்ந்த ஒரு மரவகை (Nels.); a kind of hard wood, *Spondia aurentalis*.

**மீனாங்கன்** *mīṉāṅgaṉ,* பெ.(n.) காமன் (சங்.அக.); *Kāmaṉ.*

**மீனாஞ்சு** *mīṉāñju,* பெ.(n.) 1. மீனஞ்சு பார்க்க; see *mīṉañju.* 2. நெருப்புக் கட்டி; an abscess wtih burning sensation (சா.அக.).

**மீனாட்சி[1]** *mīṉāṭci,* பெ.(n.) மதுரையை உறைவிடமாகக் கொண்ட தெய்வம்; *Umā,* the tutelary Goddess of Madurai.

*[மீன் + ஆட்சி. மீனைக் கொடியில் சின்னமாகக் கொண்டவள்.]*

**மீனாட்சி[2]** *mīṉāṭci,* பெ.(n.) பொன்னாங் கண்ணி; a medicinal prostate plant - *Illecebrum sessile* (சா.அக.).

**மீனாட்சிசுந்தரக்கவிராயர்** *mīṉāṭci-šundara-k-kavirāyar,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a Tamil poet, who belongs to the 19th centuary.

இவர் கழுகுமலைத் திரிபந்தாதி, முருகர் அனுபூதி, எட்டையபுரம் இளவரசர் ஒருதுறைக் கோவை, வண்டுவிடு தூது, குதிரைமலைப் பதிகம் போன்ற நூல்களை இயற்றியுள்ளார். பாண்டிய நாட்டு முகவூரைச் சேர்ந்தவர். தந்தைப் பெயர் கந்தசாமி புலவர்.

**மீனாட்சிசுந்தரம்பிள்ளை** *mīṉāṭci-šundaram-piḷḷai,* பெ.(n.) தமிழ்ப் புலவர்; a Tamil poet who lived in the 19 centuary.

திருச்சிக்கருகில் எண்ணெயூரில் 1815ல் பிறந்தவர். உறையூர் புராணம், சீகாழிக் கோவை முதலிய நூல்களை எழுதியவர்.

**மீனாட்சிசுந்தரனார் தெ.போ.** *mīṉāṭci-šundaraṉār te, pō,,* பெ.(n.) பலராலும் பாராட்டப் பெற்ற தமிழ் அறிஞர்; a famous Tamil scholar, felicitated by many.

**மீனாண்டி** *mīṉāṇḍi,* பெ.(n.) சருக்கரை (சங்.அக.); sugar.

**மீனாம்பூச்சி** *mīṉām-pūcci,* பெ.(n.) ஒளி வீசும் ஒருவகைப் பூச்சி; fire - fly.

மறுவ. மின்மினிப் பூச்சி, மின்மினி.

*[மின்னாம்பூச்சி →மீனாம்பூச்சி.]*

**மீனாய்** *mīṉāy,* பெ.(n.) 1. நீர்நாய் (யாழ்.அக.); otter, *Lutra vulgaris.* 2. ஒரு வகை மீன்; a kind of fish. *நீரில் வாழும் நாய் வடிவில் உள்ள நீர்வாழ் விலங்கு.*

*[மீன் + நாய்.]*

**மீனாலயம்** *mīṉālayam,* பெ.(n.) மீனநிலயம் (யாழ்.அக.) பார்க்க; see *mīṉa-nilayam.*

*[மீன் + ஆலயம்.]*

**மீனிரைதல்** *mīṉiraidal,* பெ.(n.) மீன் நீந்துதலாலும் வால் துடுப்பைச் சுழற்றி யடித்தலாலும் உண்டாகும் ஒலி; sound created by fish while swimming and twisting its tail paddle.

*[மீன் + இரைதல்.]*

**மீனிலா** *mīṉilā,* பெ.(n.) விண்மீன் ஒளி (இ.வ.); star light.

*[மீன் +நிலா.]*

**மீனிறக்கம்** *mīṉ-iṟakkam,* பெ.(n.) மீன்கள் இயல்பாய் மேயும் இடத்தினின்று கரையை நோக்கி வருகை; migration of fish from its natural abode towards coastal areas. *மீனிறக்கம் கண்டேன் வலையை விரி (மீனவ.).*

*[மீன் + இறக்கம்.]*

**மீனீரலெண்ணெய்** *mīṉ-īral-eṇṇai,* பெ. (n.) மீனெண்ணெய் பார்க்க; see *mīṉeṇṇey.*

*[மீன் + ஈரல் + எண்ணெய்.]*

**மீனு** *mīṉu,* பெ.(n.) வாலேந்திர போளம்; myrrh - agum - resin used in medicines.

**மீனுணங்கல்** *mīṉ-uṇaṅgal,* பெ.(n.) கருவாடு; salted, dried fish. *"பன்மீ னுணங்கற் படுபுள் ளோப்புதும்" (அகநா.80:6).*

*[மீன் + உணங்கல்.]*

**மீனுரசுதல்** *mīṉ-uraśudal,* பெ.(n.) குழம்புக்காக மீன்களின் செதில்கள் நீங்குமாறு செய்கை; removal of scales of fishes. *குழம்புக்கு மீனுரசிவிட்டாயா?*

*[மீன் + உரசுதல்.]*

**மீனூர்தி** *mīṉ-ūrdi,* பெ.(n.) மீனை ஊர்தியாக உடையவனான வருணன் (நாமதீப.82); *Varuṇa,* as having a fish as his vehicles.

*[மீன் + ஊர்தி.]*

**மீனெண்ணெய்**[1] *mīṉ-eṇṇey,* பெ.(n.) 1. மீனிலிருந் தெடுக்கும் நெய் (M.M.462); Malabar oil, Oleum pisces. 2. ஒருவகை மீனின் கல்லீரலிலிருந்து எடுக்கும் நெய்; cod liver oil, *Oleum morrhuae.*

*[மீன் + எண்ணெய்.]*

**மீனெண்ணெய்**[2] *mīṉ-eṇṇey,* பெ.(n.) காட் என்ற மீனின் கல்லீரலிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்; codliver oil (fish oil).

*[மீன் + எண்ணெய்.]*

**மீனெய்** *mīṉey,* பெ.(n.) மீனிலிருந்து வடிக்கும் நெய்; fish-oil. *"மீனெய்யொடு நறவு மறுகவும்" (பொருந.215).*

*[மீன் + நெய்.]*

**மீனெரிஞ்சான்** *mīṉ-eriñjāṉ,* பெ.(n.) மீன் கொல்லி (மலை.) பார்க்க; see *mīṉ-kolli.*

*[மீன் + எறிஞ்சான் – மீனெறிஞ்சான் → மீனெரிஞ்சான்.]*

**மீனெலும்பு** *mīṉ-elumbu,* பெ.(n.) மீன்முள் பார்க்க; see *mīṉ-muḷ.*

*[மீன் + எலும்பு.]*

**மீனெறி** *mīṉeṟi,* பெ.(n.) மீன்கொத்திக் குருவி; a bird with long beak - king fisher.

**மீனெறிதூண்டிலார்** *mīṉeṟi-tūṇḍilār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; *Śaṅgam* poet.

*[மீனெறி + தூண்டிலார்.]*

இவர் யானை இழுத்துவிட்ட மூங்கிலுக்கு, மீன் பிடிப்பவர் மேலே இழுத்த தூண்டிலை உவமை கூறியதனால் இப்பெயர் பெற்றார். இவர் இயற்பெயர் தெரியவில்லை. இவர் பாடிய பாடலொன்று குறுந்தொகையில் உள்ளது.

*"யானே யீண்டை யேனே யென்னலனே*
*ஏனல் காவலர் கவணொலி வெரீஇக்*
*கான யானை கைவிடு பசுங்கழை*
*மீனெறி தூண்டிலின் நிவக்கும்*
*கானக நாடனொடு ஆண்டொழிந்தன்றே"*
*(குறுந்.54).*

**மீனெறிபறவை** *mīṉeṟi-paṟavai,* பெ.(n.) மீன்கொத்தி (திவா.) பார்க்க; see *mīṉ-kotti.*

*[மீன் + எறி + பறவை.]*

**மீனேறு** *mīṉ-ēṟu,* பெ.(n.) சுறாமீன் (திவா.); shark. *"மீனே றுயர்த்த கொடிவேந்தனை வென்ற பொற்பிற் றானே றனையா னுளன் சீவக சாமி யென்பான்" (சீவக.6).*

*[மீன் + ஏறு.]*

# மு

மு *mu,* பெ.(n.) மகரமெய்யும்(ம்) உகர உயிரும் (உ) இணைந்து பிறக்கும் உயிர்மெய்யெழுத்து; the compound of ம்and உ.

*[ம் + உ – மு.]*

'மு' மகரமெய்யும் உகர உயிரும் சேர்ந்து பிறந்தது; உதடுகளை அழுத்தி பின் மூக்கொலியாக வெளிப்படும்.

'மு' பல்வேறு காலங்களில் வரிவடிவில் ஏற்பட்ட மாற்றங்கள்.

கி.மு.3–ஆம் நூற்றாண்டு –

கி.பி.5–ஆம் நூற்றாண்டு –

கி.பி.7–ஆம் நூற்றாண்டு –

கி.பி.17–ஆம் நூற்றாண்டு–

முக்கட்சுழி *mukkaṭ-šuḻi,* பெ.(n.) மாட்டின் நெற்றியில் உள்ள தாச்சுழிக்கும், குடைமேல் குடைச்சுழிக்கும் கீழுள்ள சுழி; circular or curved mark on the forhead of the cow situated beneath the *tāccuḻi*and *kuḍai mēl kuḍai.*

*[மூன்று + கண் + சுழி.]*

முக்கட்செல்வன் *mukkaṭ-šelvaṉ,* பெ.(n.) மூன்று கண்களையுடைய சிவன் (திவா.); *Šivaṉ,* as having three eyes. *"முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" (புறநா.6:18).*

*[மூன்று + கண் + செல்வன்.]*

முக்கட்டு[1] *mukkaṭṭu,* பெ.(n.) 1. முச்சந்தி (இ.வ.) பார்க்க; see *muccandi.* 2. இக்கட்டு நிலை (தஞ்சை.); difficult situation.

*[மூன்று +கட்டு – முக்கட்டு. கட்டு = கட்டுப்பாடு. மூன்றுகட்டு → முக்கட்டு = மூன்று வழிகள் சேருமிடம்.]*

முக்கட்டு[2] *mukkaṭṭu,* பெ.(n.) விரலின் பொருத்து (இ.வ.); knuckle.

*[முன் + கட்டு.]*

முக்கட்டெண்ணெய் *mukkaṭṭeṉṉey,* பெ.(n.) முக்கூட்டெண்ணெய் (நெல்லை.) பார்க்க; see *mukkūṭṭeṉṉey.*

*[முக்கூட்டெண்ணெய் → முக்கட் டெண்ணெய்.]*

முக்கட்பகவன் *mu-k-kaṭ-pagavaṉ,* பெ.(n.) முக்கட்செல்வன் பார்க்க; see *mukkaṭ-šelvaṉ. "முக்கட் பகவனடி தொழாதார்க் கின்னா" (இன்.நாற்.1).*

*[மூன்று + கண் + பகவன்.]*

முக்கடுகம் *mu-k-kaḍugam,* பெ.(n.) சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூன்று வகை மருந்துச் சரக்குகள் (வின்.); the three medicinal stuffs.

*[மூன்று + கடுகம்.]*

முக்கடுகு *mu-k-kaḍugu,*பெ.(n.) முக்கடுகம் (வின்.) பார்க்க; see *mu-k-kaḍugam.*

முக்கடுப்பு *mu-k-kaḍuppu,*பெ.(n.) சினக் குறிப்பினைக் காட்டும் முகம்; frowning of the face.

*[முகக்கடுப்பு → முக்கடுப்பு.]*

முக்கடை *mu-k-kaḍai,*பெ.(n.) ஆறு விரலம் கொண்ட ஒருபிடி யுயரம் (இ.வ.); height of the fist with thumb raised vertically = 6 inches.

*[மூன்று + கடை.]*

**முக்கண்டகம்** *mu-k-kaṇḍagam,* பெ.(n.) நெருஞ்சி (தைலவ.தைல.); cow's thorn.

*[மூன்று + கண்டகம்.]*

**முக்கண்டலி** *mu-k-kaṇḍali,* பெ.(n.) முக்கண்டகம் (பரி.அக.) பார்க்க; see *mu-k-kaṇḍagam.*

**முக்கண்ணப்பன்** *mu-k-kaṇ-ṇ-appaṉ,* பெ.(n.) மூன்று கண்களையுடைய சிவன்; *Šivaṉ* three eyed god. *"முனியே நான்முகனே முக்கண்ணப்பா" (திவ். திருவாய். 10, 10:7).*

*[மூன்று + கண் + அப்பன்.]*

**முக்கண்ணன்** *mukkaṇṇaṉ,* பெ.(n.) 1. மூன்று கண்களை உடையவன்; one who has three- eyed. 2. மூன்று கண்களை உடைய சிவன் (சூடா.); *Šivaṉ.* 3. வீரபத்திரன்; *Vīrabhadraṉ.* 4. பிள்ளையார்; *Gaṇēšaṉ.*

*[மூன்று + கண்ணன்.]*

**முக்கண்ணான்** *mu-k-kaṇṇāṉ,* பெ.(n.) முக்கண்ணன், 2 பார்க்க; see *mu-k-kaṇṇaṉ.* *"கடந்தடு முன்பொடு முக்கண்ணான்" (கலித்.2).*

*[மூன்று + கண்ணான்.]*

**முக்கண்ணி** *mu-k-kaṇṇi,* பெ.(n.) 1. காளி (திவா.); *Kāḷi.* 2. மலைமகள் (பிங்.); *Pārvati.* 3. தேங்காய் (வின்.); coconut.

*[மூன்று + கண்ணி.]*

**முக்கண்ணின்பால்** *mu-k-kaṇṇiṉ-pāl,* பெ.(n.) தேங்காய்ப் பால்; milky juice of coconut kernel.

*[மூன்று + கண் + பால்→ மூன்று கண்ணின் பால்→முக்கண்ணின்பால்.]*

**முக்கண்ணிளையோன்** *mu-k-kaṇ-ṇ-iḷai-yōṉ,* பெ.(n.) இளநீர்; tender coconut.

*[முக்கண் + இளையோன்.]*

**முக்கண்ணொருகண்** *mukkaṇ-ṇ-orukaṇ,* பெ.(n.) பச்சைக் கருப்பூரம்; crude camphor.

*[முக்கண் + ஒருகண்.]*

**முக்கண்பால்** *mu-k-kaṇ-pāl,* பெ.(n.) தேங்காய்ப்பால்; milk of coconut kernel.

*[முக்கண் + பால்.]*

**முக்கணச்சுழி** *mu-k-kaṇa-c-cuḻi,* பெ.(n.) இரு கண்களின் (சற்று) மேலுள்ள தீமையைத் தரும் மாட்டுச் சுழி (கோவை.); a curve found above the eyes of the cow, suppose tobe a bad-sign.

*[முக்கணம் + சுழி.]*

**முக்கணவன்** *mukkaṇavaṉ,* பெ.(n.) கொடி வகை (யாழ்.அக.); a climber.

**முக்கணன்** *mukkaṇaṉ,* பெ.(n.) முக்கண்ணன் பார்க்க; see *mu-k-kaṇṇaṉ.* *"முக்கணா போற்றி" (தேவா.968, 10).*

**முக்கணி** *mu-k-kaṇi,* பெ.(n.) முக்கண்ணி (வின்.) பார்க்க; see *mu-k-kaṇṇi.*

**முக்கந்தம்** *mukkandam,* பெ.(n.) முருங்கை மரம்; drumstick tree - *Moringa oleifera.*

**முக்கந்தன்** *mukkan daṉ,* பெ.(n.) இடையருள்ளும் கொடிக்காற் காரருள்ளும் ஒரு சாரார்க்கு வழங்கும் பட்டப் பெயர்; title of a sect of shepherds and of betel vine cultivators.

**முக்கப்பு** *mu-k-kappu,* பெ.(n.) முக்கவராய்தம் (சூலாயுதம்); three - pronged dart; trident. *"பருமுக் கப்பினரே" (தக்கயாகப். 98).*

*[மூன்று + கப்பு. கப்பு = கவர்கொம்பு, கிளை, பிளவு.]*

**முக்கம்** *mukkam,* பெ.(n.) முற்கம், 1 பார்க்க; see *muṟkam.*

*[முற்கம் →முக்கம்.]*

**முக்கம்பாலை** *mukkam-pālai,* பெ.(n.) மரவகை (நாஞ்.); a kind of tree.

**முக்கரணம்**[1] *mu-k-karaṇam,* பெ.(n.) 1. குட்டிக் கரணம் (தனிப்பா.2, 3:5); somersault. 2. விடாப்பிடி; stubborn.

*[மூன்று + கரணம்.]*

**முக்கரணம்**[2] *mu-k-karaṇam,* பெ.(n.) மனம், வாக்கு, காயம்; three classes of organs - mind, speech and action.

*[மூன்று + Skt. கரணம்.]*

**முக்கரணம்போடு-தல்** *mukkaraṇam-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. குட்டிக்கரணம் போடுதல்; to turn a somersault. *"முக்கரணம்.... போட்டு முயன்றிடினும்" (தனிப்பா.2, 3:5).* 2. விடாபிடியாக இருத்தல்; to be stubborn.

*[முக்கரணம் + போடு-தல்.]*

**முக்கருணை** *mu-k-karuṇai,* பெ.(n.) காறுகருணை, காறாக்கருணை, புளிக் கருணை என்ற மூவகைக் கருணைச் செடிகளின் கிழங்குகள் (தைலவ.தைல.); the three species of *karuṇai* roots, viz., *kāṟu-, karuṇai, kāṟā-k-karuṇai, puḷi-k-karuṇai.*

*[மூன்று + கருணை.]*

**முக்கருவு** *mukkaruvu,* பெ.(n.) 1. முட்டை; egg. 2. தொப்புள் கொடி; placental cord (சா.அக.).

**முக்கல்**[1] *mukkal,* பெ.(n.) 1. முயற்சி முதலியவற்றில் இறுகப் பிடித்த மூச்சைச் சிற்றொலிபட வெளிவிடுகை; straining, as in travail. 2. பெரு முயற்சி (உ.வ.); great effort. 3. எடுத்தலோசை (பிங்.); high pitch. 4. பேசுவதால் எழுமொலி (சது.); voice.

*[முக்கு →முக்கல்.]*

**முக்கல்**[2] *mukkal,* பெ.(n.) ஈரமிகுதி முதலியவற்றாற் பொருள்களில் வீசும் கெட்ட நாற்றம்; stench of things owing to dampness etc. *இந்த அரிசி முக்கலடிக்கிறது.*

*[மக்கல் → முக்கல்.]*

**முக்கல்**[3] *mukkal,* பெ.(n.) முக்கும் செய்கை; groan made while struggling; straining.

*[முக்கு → முக்கல்.]*

**முக்கலாசான்நல்வெள்ளையார்** *mukkal-āšāṉ-nalveḷḷaiyār,* பெ.(n.) கழகக்காலப் புலவர்; a *Šaṅgam* poet.

*[முக்கல் + ஆசான் + நல் + வெள்ளை + ஆர்.]*

முக்கல் என்பது ஒரூராகும். இஃது எங்குளது எனப் புலப்படவில்லை. ஆசான் என்பது சிறப்புப் பெயராக இருக்கலாம். இவர் பாடிய பாடலொன்று நற்றிணையில் உள்ளது (நற்.272).

*"கடலங் காக்கைச் செவ்வாய்ச் சேவல்*

*படிவ மகளிர் கொடிகொய் தழித்த*

*பொம்மல் அடும்பின் வெண்மணல்*

*ஒருசிறைக்*

*கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்*

*கிருஞ்சேற் றயிரை தேரிய தெண் கழிப்*

*பூவுடைக் குட்டந் துழவுந் துறைவ*

*னல்கா மையி னசைபழ தாகப்*

*பெருங்கை யற்றவென் சிறுமை யலர்வாய்*

*ஆம்பல் மூதூ ரலர்தந்த*

*நோயா கின்றது நோயினும் பெரிதே"*

*(நற்.272).*

**முக்கலிப்பு** *mukkalippu,* பெ.(n.) மணங் கமழும் ஒருவகைச் செடி (கோட்டம்); costus shrub, *Saussurea lappa.*

**முக்கவர்த்தடி** *mukkavar-t-tadi,* பெ.(n.) மீன், பன்றி முதலியவற்றைக் குத்த உதவும் ஈட்டி வகை (மண்டா.); harpoon, gaff.

*[முக்கவர் + தடி.]*

மூன்று கிளைகளைக் கொண்ட ஈட்டி வகை.

**முக்கவெளி** *mukkaveli,* பெ.(n.) ஒன்பான் மணிகளில் ஒன்று (புட்பராகம்); one of nine gems - Topaz (சா.அக.).

**முக்கழகம்** *mukkalagam,* பெ.(n.) பாண்டிய அரசின் கீழ் அமைந்த தமிழ்ப் புலவர்களாலாகிய தலைக்கழகம், இடைக் கழகம், கடைக்கழகம் என்ற மூன்று தமிழ்க் கழகங்கள்; the three ancient Tamil academies which flourished under the partronage of the *Pandiya* kings viz. *talai-k-kalagam, idai-k-kalagam, kadai-k-kalagam. "கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து" (திருவிளை. திருநாட்.56).*

*[குல் – கூடற்கருத்து. குல்→குள்→கள்→களம் = 1. கூட்டம், 2. கூடுமிடம். களம்→கழகு→கழகம்= 1. பேரவை, 2. புலவரவை.]*

த. கழகம் > வ. சங்கம்.

முக்கழகம் பற்றிய தேவனேயப் பாவாணர் கருத்து :–

முக்கழக வுண்மை :

ஆரிய வருகைக்கு முற்பட்ட தனித்தமிழ் நூல்கள் அத்தனையும், முன்னைத் தமிழர் நாகரிகத்திற்குச் சான்றும் பின்னைத் தமிழர் முன்னேற்றத்திற்குத் துணையும் ஆகாதவாறு, அழிக்கப்பட்டுவிட்டன. மொழியாராய்ச்சியும் நடுநிலையும் நெஞ்சுரமும் இல்லாத தொடை நடுங்கிகட்கு, இவ்வுண்மையைக் காணும் அகக்கண் இல்லை.

தமிழ், வரலாற்றில் கெட்டாத உலக முதற்றாய் உயர்தனிச் செம்மொழி யாதலாலும், ஆரிய வருகை முன்னைத் தமிழிலக்கியம் அனைத்தும் அழிக்கப்பட்டுவிட்டதனாலும், இறையனார் அகப்பொருள் உரையிற் கூறப்பட்டுள்ள முக்கழக வரலாறு, முற்காலச் செய்திகளும் பிற்காலச் செய்திகளும் மயங்கி, நடுநிலையாராய்ச்சி வல்லுநர் அல்லாதார் சிக்கறுக்க முடியாப் பெருமுடிச்சாய்க் கிடக்கின்றது.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்

குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள

வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு

தென்றிசை யாண்ட தென்னவன்" என்னும் இளங்கோவடிகள் கூற்று, பொல்லாப் புன்சிறு பொய்ம் மொழியாய் இருத்தல் எவ்வகையிலும் இயலாது.

அடியார்க்குநல்லார் தம் சிலப்பதிகார வுரையில், முழுகிப் போயினவாகப் பெயர் குறித்துக் கூறிய ஏழேழ் நாடுகளும் பிறவும் பற்றிய செய்தியும், கட்டுக் கதையாய் இருத்தல் முடியாது.

வைகை மதுரையைத் தென்மதுரை யென்னும் பெருவழக்கில்லை. ஆதலால், தென்மதுரை யென்பது பஃறுளி மதுரையே.

*"முதற்சங் கமுதூட்டும் மொய்குழலா ராசை*
*நடுச்சங்கம் நல்விலங்கு பூட்டும்—*
*கடைச்சங்கம்*
*ஆம்போ ததுவூதும்"* என்னும் பட்டினத்தடிகள் பாட்டு, சங்காகிய சங்கத்தைப் பற்றிய தேனும், முக்கழகத்தே முன்னிய தென்பது வெளிப்படை.

காலத்தால் மட்டுமன்றிக் கருத்தாலுங் கடைப்பட்ட வைகை மதுரைப் பாண்டியரே தமிழ்வளர்ச்சிக் கழகம் நிறுவினரெனின், அவர்க்கு முற்பட்ட தலையிடைக்காலப் பாண்டியர் ஏன் கழகம் நிறுவியிரார்?

முக்கழக வுண்மையை இற்றை இலக்கியச் சான்றின்மை பற்றி நம்பாதார் பாட்டனைப் பெற்ற பூட்டனைக் கண்டிராமையால் அவன் இவ்வுலகி லிருந்ததை நம்பாதாரே.

முக்கழகமும் நிறுவியர் பாண்டியரே

*"மோனையாந் தெய்வத் தமிழ்மொழி நிறீஇய*
*சங்கத் தலைவர்கள் தலைமை பூண்டங்*
*கறம்வள ரவையில்அரங்கே றியநாள்*
*வழுதியர் வளர்த்தது சங்க காலம்"* என்பது பேரிசைச் சூத்திரம் என்னும் திரட்டில், தமிழ் மொழி விளக்கம் என்னும் பகுதியைச் சேர்ந்த ஒரு நூற்பா.

பாண்டியன் பராந்தக வீரநாராயணனின் (கி.பி.9ஆம் நூற்.) தளவாய்புரச் செப்பேடு,

*"மன்னெதிரா வகைவென்று தென்மதுரா*
*புரஞ்செய்தும்*
*அங்கதனி லருந்தமிழ்நற் சங்கம் இரீஇத்*
*தமிழ்வளர்த்தும்"*

என்றும், அவன் மகனான பாண்டியன் இராசசிம்மனின் சின்னமனூர்ப் பெரிய செப்பேடு,

*"மகாபாரதந் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம்வைத்தும்"*

என்றும், முன்னோர் செயலைப் பின்னோர்மேல் ஏற்றிக் கூறுகின்றன. வைகை மதுரையைத் தென்மதுராபுரம் என்றது, கண்ணன் மதுரையை வடமதுரை யெனக் கருதியதாகல் வேண்டும்.

*"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியும்*
*சவுந்தர பாண்டியன் எனுந்தமிழ் நாடனும்*
*சங்கப் புலவரும் தழைத்தினி திருந்தது*
*மங்கலப் பாண்டி வளநா டென்ப."*

*"உங்களிலே நானொருவ னொப்பேனோ*
*வொவ்வேனோ*
*திங்கட் குலனறியச் செப்புங்கள் – சங்கத்துப்*
*பாடுகின்ற முத்தமிழ்க்கென் பைந்தமிழு*
*மொக்குமோ*
*ஏடவிழ்தா ரேழெழுவீ ரின்று."*

*"பூவேந்தர் முன்போற் புரப்பா ரிலையன்றிப்*
*பாவேந்த ருண்டென்னும் பான்மைதான் –*
*மாவேந்தன்*
*மாற னறிய மதுரா புரித்தமிழோர்*
*வீறணையே சற்றே மித"*

என்பவை, 12ஆம் நூற்றாண்டினரான பொய்யாமொழிப் புலவர், மதுரையிற் கடைக்கழகப் புலவரின் கற்படிமையையும் கழகப் பலகையையும் நோக்கிப் பாடியன.

இவையெல்லாம் கடைக்கழகத்தையே பற்றியவை யேனும், முதலிரு கழகமும் பாண்டியர் நிறுவினவேயென்பதைக் குறிப்பாக வுணர்த்துவன வாகும், இந்துமாவாரியில் மூழ்கிப் போன தமிழ் நிலமெல்லாம் பாண்டிநாடேயாதலின், அதில் சேர சோழர் எவ்வகை யிலேனும் இருந்திருக்க முடியாது. இறையனா ரகப்பொருளுரை முக்கழக வரலாறு, "தலைச்சங்கம் இடைச்சங்கங் கடைச்சங்கமென மூவகைப்பட்ட சங்கம் இரீஇயினார் பாண்டியர்கள்" என்றே தொடங்குதல் காண்க.

தலைக்கழகம் (தோரா. கி.மு.10,000 – 5,000)

இறையனா ரகப்பொருளுரையிலுள்ள முச்சங்க வரலாறு :

தலைச்சங்கம் :

"தலைச்சங்கம் இடைச்சங்கங் கடைச் சங்கமென மூவகைப்பட்ட சங்கம் இரீஇயினார் பாண்டியர்கள். அவருள் தலைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்றெறிந்த முருகவேளும் முரஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனும் என இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத் தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்ப. அவர்களாற் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகும் களரியாவிரையும் என இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தார் என்ப. அவர்களைச் சங்கமிரீ இயினார் காய்சின வழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக எண்பத்தொண்பதின்மர் என்ப. அவருட் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்து கடல் கொள்ளப்பட்ட மதுரை என்ப அவர்க்கு நூல் அகத்தியம்."

இதன் விளக்கம் :

கழகத்தைக் குறிக்கும் சங்கம் என்பது பிற்காலத்துச் சமற்கிருதச் சொல்லாதலால், அச் சொல்லே அக்காலத்தில் தமிழகத்தில் வழங்கியிருக்க முடியாது. ஆரியர் இந்தியாவிற்குட் புகுந்தகாலம் தோரா கி.மு.1500. அதற்கு நான்கு அல்லது ஐந்து நூற்றாண்டிற்குப் பின்னரே, வேத ஆரியமுந் தமிழுங் கலந்து சமற்கிருதம் என்னும் இலக்கிய வழக்கு வகைமொழி (Dialect) தோன்றிற்று. சமற்கிருதம் என்னுஞ் சொல்லே கலந்து செய்யப்பட்டது என்னும் பொருளதே.

அம்பலம், அமை–அவை, ஆயம், கடிகை, களம், களரி, கழகு–கழகம், குழு, குழாம், குழுமல்–குழுவல், குறி, கூட்டு–கூட்டம், கூடல், கோட்டி, சேகரம், தொகை, பண்ணை, பொது–பொதியம், மன்று–மன்றம் என்னம் சொற்களுள் ஒன்றே அக்காலத்துக் கழகத்தைக் குறிக்க வழங்கியிருத்தல் வேண்டும்.

முதலிரு கழகமும் மூழ்கிய பின்னரே அகத்தியர் தென்னாடு வந்ததனால், அவர் தலைக்கழகத்தில் இருந்திருக்க முடியாது. இடைக்கழக விருக்கையை மூழ்குவித்த இரண்டாங் கடல் கோளுக்குத் தப்பிய மாவேந்த (மகேந்திர) மலையும், அகத்தியர் வந்தபின் முழுகிவிட்டது. அதனால் அவர் பொதிய மலையிலேயே நிலையாக வதிய நேர்ந்தது.

"அந்த மலய மலையினது உச்சியில் வீற்றிருக்கிறவரும், சூரிய பகவானைப் போல மிகுந்த ஒளியுடன் விளங்குபவருமான, அகஸ்திய முனிவர் பெருமானைக் காண்பீர்கள்....... சாகரத்தின் மத்தியில் அகஸ்தியரால் வைக்கப்பட்டதும் அழகிய பல மரங்களடர்ந்ததும், அழகிய பொன்மயமானதும், மலைகளில் சிறந்ததெனத் திரிலோகப் பிரசித்தி பெற்றதுமான, மகேந்திரம் என்னும் பர்வதம் பெருங்கடலில் மூழ்கிக் கிடக்கின்றது" என்று சுக்கிரீவன் சீதையைத் தேடித் தென்றிசை சென்ற வானரப் படையை நோக்கிக் கூறியதாக, வான்மீகியார் தம் வடமொழி யிராமாயணத்தில் வரைந்திருத்தல் காண்க.

அகத்தியர் இராமர் காலத்தவராதலாலும் அவர் மகேந்திர மலையை வாரியிடை வைத்தார் என்பதனாலும், அனுமன் மகேந்திர மலையினின்று கடலைத் தாண்டினான் என்பதனாலும் அகத்தியர் காலத்தில் அம் மலையின் மேற் பகுதி ஒரு தீவாக இருந்ததெனக் கருதலாம்.

திரிபுரமெரித்த விரிசடைக்கடவுள் என்றது, இறையனார் போலச் சிவபெருமான் பெயர் தாங்கிய

ஒரு புலவரையே. இது குணசாகரர் தம் யாப்பருங்கல விரிவுரையில் திரிபுரமெரித்தவர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர் என்றும், திரிபுரமெரித்த விரிசடை நிருத்தர் பெயர்மகிழ்ந்த பேராசிரியர் என்றும், ஒரு புலவர் பெயரைக் குறித்ததை ஒருபுடை யொத்தாகும்.

குன்றெறிந்த முருகவேள் என்றது முருகன் என்னும் பெயர் கொண்ட புலவரையே. பெயரொப்புமை பற்றி மாந்தரைத் தேவரெனக் கொண்டது, எழுதப்பட்ட வரலாறின்மையையும் அப் புலவரின் சேணெடுந் தொன்மையையும் காட்டும்.

"ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை யென்பார் செந்தமிழில் வெளியிட்ட ஈழமும் தமிழ்ச்சங்கமும் என்னுமொரு கட்டுரையில், கி.மு. ஐந்நூற்று நாற்பத்து மூன்றாவது ஆண்டில் விசயன் என்னும் அரசன் சிங்கள அரசினை நிலைபெறுத்துவதற்கு முன், தமிழரது அரசு இலங்கையில் இருந்ததென்றும், அந் நாட்டிற்கே நாகத்தீவு என்ற பெயர் வழங்கிய தென்றும், நாகர்கோயில், முசிறி என்ற பெயர்கள் ஈழநாட்டில் வழங்கினவென்றும், சோழன் மணந்த நாககன்னிகை அந்நாட்டு அரசன் மகளென்றும், இளநாகன் என்னும் அரசன் கி.பி.38-ல் அவண் அரசாண்டா னென்றும் கூறுதலால் உதியஞ் சேரலாதனைப் பாடிய முடிநாகராயர் ஈழமன்னர் மரபினராயிருத்தல் கூடுமென்று கருதுதற்கு இடமுண்டு."[2] என்று கூறியுள்ளார் பேரா.கா.சுப்பிரமணியப் பிளளை. பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் இடைக்கழகத்திற்குப் பிற்பட்ட பாரதக் காலத்தவனாதலால், அவனைப் பாடிய முடிநாகராயர் தலைக்கழகத்தில் இருந்திருத்தல் முடியாது. அப் பெயரார் ஒருவர் அக் கழகத்தில் இருந்திருப்பின், அவர் வேறொருவராயிருந்திருத்தல் வேண்டும் என்ரி, சியார்சு, எட்வார்டு என்னும் பெயரினர் பலர் இங்கிலாந்தரசரா யிருந்ததை நோக்குக.

முடிநாகர் என்பார் சூட்டுநாகர் என்னும் நாகர் வகுப்பார். நாகவுருவைத் தலையில் அணிந்திருந்ததனால் அப் பெயர் பெற்றதாகத் தெரிகின்றது. முடிநாகரின் அரையர் முடிநாகராயர்.

*"கீண்டது வேலை நன்னீர் கீழுறக் கிடந்த நாகர்*
*வேண்டிய வுலக மெங்கும் வெளிப்பட மணிகள் மின்ன*
*ஆண்டகை யதனை நோக்கி யரவினுக் கரசர் வாழ்வுங்*
*காண்டகு தவத்த னானேன் யானெனக் கருத்துட் கொண்டான்"*

என்னும் கம்பராமாயணக் கடல்தாவு படலச் செய்யுள் (20) ஈண்டுக் கவனிக்கத் தக்கது.

நிதியின் கிழவன் என்றது அளகையாளி அல்லது திருமாவளவன் என்பது போன்ற பெயருடைய ஒரு புலவரை.

தலைக்கழகக் காலத்துப் பாண்டிநாடு குமரிமுனைக்குத் தெற்கில் ஏறத்தாழ ஈராயிரங்கல் தொலைவு பரந்திருந்ததனால், அக்கழகப் புலவர் ஐந்நூற்று நாற்பத் தொன்பதின்மர் என்பதிலும் அவருள்ளிட்டுப் பாடினார், நாலாயிரத்து நானூற்று நாற்பத் தொன்பதின்மர் என்பதிலும், இம்மியும் ஐயுறவிற்கு இடமில்லை. கழகமிருந்தார் நிலையான உறுப்பினர்; உள்ளிட்டுப் பாடினார் இடையிடை வந்து பாடிச்சென்ற பிறர்.

அவர் பாடியதாகச் சொல்லப்படும் பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகும் களரியாவிரையும் அக்காலத்துப் பொதுவிலக்கியமே. அவற்றுள், முதலது இசையிலக்கியமும் இடையிரண்டும் இசையிலக் கணமுமாகும். அந்நான்கனுள் ஒன்றுகூட இக்காலத்தில்லை. கலிப்பாவின் திரிபான பரிபாடல் தலைக்கழகக் காலத்திற் பாடப்பட்ட தென்பது ஐயத்திற்கிட மானதே.

தலைக்கழகத்தைப் புரந்த பாண்டியர் எண்பத்தொன்பதின்மர் என்பதிலும், அவர் ஆண்ட

காலம் நாலாயிரத்து நானூற்று நாற்பதியாண்டு என்பதிலும், அவருட் பாவரங்கேறினார் எழுவர் என்பதிலும், எவ்வகை ஐயத்திற்கும் இடமில்லை. அக்காலத்து மக்கட்கு வாழ்நாள் நீண்டிருந்ததனால், தலைக்கு ஐம்பதியாண்டு நிரவலாக வைத்துக் கணிப்பின், மொத்தம் நாலாயிரத்து நானூற்று ஐம்பதாக, பத்தாண்டு கூடியே வருதல் காண்க.

கடுங்கோன் என்பவன், களப்பாளர் (களப்பிரர்) காலத்தின் பின் பாண்டி நாட்டைக் கைப்பற்றிய கடுங்கோன் அல்லன். பெயரொப்பு மையைத் தீதாகப் பயன்படுத்தித் தமிழினத்தின் தொன்மையையும் தலைமையையும் மறைப்பதும் குறைப்பதும், தமிழ்ப் பகைவரான ஆரிய வரலாற்றாசிரியரின் வழக்கமான குறும்பாகும். காய்சின வழுதி என்னும் பெயரினன் ஒருவனும் பிற்காலப் பாண்டியருள் இன்மை காண்க. தலைக்கழகப் பாண்டியர் எண்பத்தொன்பதின்மர் பெயரும் குறித்திருப்பின், அவரனைவரும் குமரிநாட்டின் ரென்பது வெள்ளிடை மலையாகும்.

தலைக்கழக இருக்கை கடல் கொள்ளப்பட்ட மதுரை என்று தெளிவாக அடைகொடுத்துப் பிரித்திருத்தலை ஊன்றி நோக்குக.

அகத்தயம் தலைக்கழக நூலன்று. முதலிரு கழக நூல்கள் அத்தனையும் அழிக்கப்பட்டுவிட்டன. தமிழ் உலக முதன் மொழி. அதன் இலக்கியமும் உலக முதல் அறிவியற் படைப்பு. ஆதலால் வரலாற்றிற் கெட்டாத தொன்மைத்தது. நெடுகலும் தொடர்ந்து தமிழகப் பொது வரலாறெழுதும் வழக்கம் பண்டை நாளிலில்லை. நாடுவாரியாகவும் ஆட்சி வாரியாகவும் பகுதிபகுதியாக எழுதப்பட்ட வரலாறுகளும் வரலாற்றுச் சான்றுகளும், அவ்வப்போது நேர்ந்த போர்களில் அழிக்கப்பட்டு விட்டன. கி.மு.1200 போல் எழுதப்பட்ட அகத்தியமே கி.பி.7ஆம் நூற்றாண்டில் முதற் பண்டை நூலாக இருந்தனால், அது தலைக்கழக இலக்கண நூலாக இறையனாரகப் பொருளுரையிற் குறிக்கப்பட்டது. தலைக்கழகக் காலமோ கி.மு.52 நூற்றாண்டுக்கு முந்தியது.

அவர் சங்கமிருந்து செய்யுள் செய்தது அல்லது நூலியற்றியது என்னாது, "அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது" என்று தலைக்கழகத்திற்குங் கூறியதனால். அக் கழகத் தோற்றத்திற்கு முன்பே நல்லிசைப் புலவர் பலர் செய்யுள் செய்திருந்தனரென்பதும் அவற்றை ஆராய்வதே கழகத்தின் முதல் நோக்கமும் முதன்மையான நோக்கமு மென்பதும், அறியப்படும். இதனால் தமிழின் தொன்மையும் பண்பாடும் ஒருங்கே விளங்கும்.

**இடைக்கழகம் :**

### இடைச்சங்கம்

இனி, இடைச்சங்க மிருந்தார் அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் இருந்தையூர்க் கருங் கோழியும் மோசியும் வெள்ளூர்க் காப்பியனும், சிறுபாண்டரங்கனும் திரையன் மாறனும் துவரைக்கோனும் கீரந்தையுமென இத் தொடக்கத்தார் ஐம்பத் தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு மூவாயிரத்தெழுநூற்றுவர் பாடினார் என்ப. அவர்களாற் பாடப்பட்டன கலியும் குருகும் வெண்டாளியும் வியாழமாலையகவலுமென இத்தொடக்கத்தன என்ப. அவர்க்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமும் மாபுராணமும் இசைநுணுக்கமும் பூத புராணமுமென இவை யென்ப. அவர் மூவாயிரத் தெழுநூற்றி யாண்டு சங்கமிருந்தார் என்ப. அவரைச் சங்கமிரீஇயினார் வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங்கேறினார் ஐவர் பாண்டியர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்து கபாட புரத்தென்ப. அக்காலத்துப்போலும் பாண்டியனாட்டைக் கடல் கொண்டது.

இதன் விளக்கம் :

அகத்தியர் தென்னாடு வந்தது கி.மு.12ஆம் நூற்றாண்டென்று முன்னரே கூறப்பட்டது. அதற்குள் முதலிரு கழக விருக்கையும் மூழ்கிவிட்டன. தொல்காப்பியர் காலம் கி.மு.6ஆம் அல்லது 7ஆம் நூற்றாண்டு. ஆகவே, அகத்தியரும் தொல்காப்பியரும் ஒருகால வாணராகவோ இடைக்கழகப் புலவராகவோ இருந்திருக்க முடியாதென்பது வெள்ளிடை மலை.

தமிழ்ப் புலவர் வரலாற்றில், அகத்தியரையும் தொல்காப்பியரையும் ஆசிரியரும் மாணவருமாக இணைத்தது, உண்மை வரலாற்றிற்கு ஒரு பெரிய இடறுகட்டை யாகும். முதலிரு கழக இலக்கிய மனைத்தும், நூற்பெயரும் நூலாசிரியர் பெயரும் எதிர்காலத்தில் எவருக்கும் தெரியாதவாறு கூட்டுக் கட்டுப்பாட்டுடன் அழிக்கப்பட்டுவிட்டமையால், அகத்தியரே முதல் தமிழாசிரியரும் அகத்தியமே முதல் தமிழிலக்கணமும் ஆகக் கருத நேர்ந்துவிட்டது. அகத்தியம் மாபிண்டம் என்னும் முத்தமிழிலக்கணம். இலக்கணத்திற்கு முந்தியது இலக்கியம் என்பதும், இலக்கணத்துள்ளும் முத்தமிழிலக்கணத்திற்கு முந்தியது இயற்ற மிழிலக்கணம் என்பதும், இயற்றமிழிலக் கணத்துள்ளும் பொருளுக்கு முந்தியது சொல்லும் சொல்லிற்கு முந்தியது எழுத்தும் ஆகும் என்பதும், ஒவ்வொரு துறையிலும் அதன் படிநிலைகளிலும் முதலும் வழியும் சார்பும் சார்பிற் சார்புமாகப் பல நூல்கள் பன்னூற்றாண்டு வழங்கிய பின்னரே, பெரும்பாலும் நிறைவான அளவை நூல் தோன்றுமென்பதும், பண்டையாசி ரியர்க்குத் தெளிவாகத் தெரிந்ததில்லை.

அகத்தியர்க்குத் தொல்காப்பியர் நான்கு அல்லது ஐந்து நூற்றாண்டு பிற்பட்டவர். அகத்தியத்திற்கு அடுத்துத் தோன்றிய இயற்றமிழ் இலக்கண நூல் தொல்காப்பியமாதலின், பிற்காலத்தார் தொல்காப்பியரை அகத்தியரின் மாணவராகக் கருதிவிட்டனர். அகத்தியரைத் தொல்காப்பியத்தில் குறிப்பாக வேனும் ஓரிடத்துங் குறிப்பிடாமையும், "என்ப", "என்மனார் புலவர்", "எனமொழிப" என்றும், பிறவாறும், முன்னூலா சிரியரைப் பன்மையிலேயே தொல்காப்பியர் நெடுகலுங் குறித்துச் செல்லுதலும், அவர் உடன் மாணவரான பனம் பாரனார்,

*"முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப*
*புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்"*

என்றும் தம் சிறப்புப்பாயிரத்திற் கூறியிருத்தலும், தொல்காப்பியர்க்கு அகத்தியரொடு தொடர் பின்மையைத் தெளிவாகக் காட்டும். ஆயினும் நச்சினார்க்கினியர்,

*"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்*
*தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்*
*தன்பால் தண்டமிழ் தாவின் றுணர்ந்த*
*துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்"*

என்னும் புறப்பொருள் வெண்பாமாலைச் சிறப்புப் பாயிரத்தை நம்பி, பகுத்தறிவிற் கொவ்வாத ஒரு கதையைக் கட்டிவிட்டார்.

அகத்தியம் இறந்துபட்டமைக்குத் தொல் காப்பியரின் எதிர்ச் சாவிப்பு கரணியமன்று. அது முத்தமிழ் முழு நூலாயிருந்து தமிழின் பெருமையைச் சிறப்பக் காட்டினதனாலும், தொல்காப்பியம் போல் ஆரியக் கருத்துகளைப் புகுத்தாமையாலும், வடசொல்லைச் செய்யுட் சொல்லாகக் கொள்ளாமையாலுமே, முதுகுடுமிப் பெருவழுதி போன்றார் காலத்தில் தமிழ்க் கடும் பகைவரான ஆரிய வெறியரால் அழிக்கப்பட்டு விட்டது.

அகத்தியரையும் தொல்காப்பியரையும் முதலிற் குறித்ததனால் இருந்தையூர்க் கருங்கோழி, மோசி, வெள்ளூர்க் காப்பியன் சிறு பாண்டரங்கன், திரையன் மாறன், துவரைக் கோன், கீரந்தை என்பவரும் பிற்காலத்தவரே.

துவரைக்கோன் என்றது, எருமையூர் (மைசூர்) நாடென்னும் கன்னட நாட்டில் இன்று துவாரசமுத்திரம் என வழங்கும் துவரை நகரைத் தலைநகராகக் கொண்ட, இருங்கோவேளின் முன்னோன்.

கழகமிருந்தார் தொகை ஐம்பத் தொன்பதாகவும் உள்ளிட்டுப் பாடினார் தொகை மூவாயிரத்து எழுநூறாகவும் குறைந்து போனமைக்கு, பனிமலைவரை வடக்கிலுள்ளது போன்ற ஒரு பெரு நிலப்பரப்பு முழுகிப்போனமையே கரணியம்.

அவர் பாடியதாகச் சொல்லப்படும் கலியும் குருகும் வெண்டாளியும் வியாழமாலையகவலும் பிறவும் இறந்துபட்டன. அவையும் அக்காலத்துப் பொதுவிலக்கியமே.

அவர்க்கு இலக்கண நூலென்ற ஐந்தும் இடைக்கழகத்திற்கும் கடைக்கழகத்திற்கும் இடைப்பட்டவையே மாபுராணமும் பூதபுராணமும் இறந்துபட்டன. இசைநுணுக்கம் இன்றும் கையெழுத்துப் படியாயிருப்பதாகச் சொல்லப் படுகின்றது. ஆயின், அச்சேறி வெளிவராமையோடு மறைவாகவும் உள்ளது. புராணம் என்னும் வட சொல்லே, மாபுராணமும் பூத புராணமும் ஆரியம் வழக்கூன்றிய பிற்காலத்தன வென்பதைத் தெரிவிக்கும். அதே சமயத்தில், அவை கூறும் இலக்கணச் செய்தியின் தொன்மையையும் உணர்த்தும்.

புராணம் என்னும் பெயர் வட மொழியிலக்கியத்திற் பழங்கதை அல்லது அதுபற்றிய பனுவலையே குறிக்கும். பிற்காலத்தில் படைப்பு, துணைப்படைப்பு, மன்னூழி (மன் வந்தரம்), அரச மரபுகள், அவற்றின் வரலாறுகள் ஆகிய ஐந்தையும் பற்றிக் கூறுவதே புராணம் என்று ஒரு வரையறை செய்யப்பட்டது. அவ் வரையறைக்கு முந்தி மாபுராணமும் பூதபுராணமும் தோன்றி யிருக்கலாம்.

இடைக் கழகத்தைப் புரந்த பாண்டியர் வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமாறன் வரை ஐம்பத்தொன்பதின்மர். தலைக்கு நாற்பதாண்டு நிரவலாக வைத்துக் கொள்ளின். அவர் ஆண்ட காலம் ஈராயிரத்து முந்நூற்றறுப தாண்டாகும். முக்கழக வரலாற்றில் அது மூவாயிரத்தெழு நூறாண்டென்றது, கழகமில்லாத இடைக் காலத்தையும் சேர்த்ததாகல் வேண்டும். ஏனெனின், தலைக்கழக விருக்கையை உட்கொண்ட ஒரு பெரு நிலப்பரப்பு திடுமென மூழ்கியபின், உடனடியாக ஆட்சி ஏற்பட்டிருக்க முடியாது. ஆட்சி ஏற்பட்டபின்னும், நாடு முழுதுந் தழுவிய தலைமைப் புலவர் கழகம் உடன் தோன்றியிருக்க முடியாது. ஆதலால், ஆயிரத்து முந்நூற்று நாற்பதாண்டு இடையீடு பட்டிருத்தல் வேண்டும். கடல்கோளுக்குத் தப்பிய குடிகளைக் குடியேற்றவும், புதிய அரசமைக்கவும் ஆட்சிக்கு மருதநிலத்தலைநகரும் வணிக வளர்ச்சிக்கு நெய்தல்நிலத்தலைநகரும் எடுப்பிவிக்கவும், எதிர்காலக் கடல்கோள் தடுப்பிற்கான ஏற்பாடுகளைச் செய்யவும், மீண்டும் புலவர் கழகந் தோற்று வித்தற்கேற்ற செழிப்பும் அமைதியும் நாட்டில் நிலவவும், அத்துணைக் கால இடையீடும் வேண்டியது இயற்கையே.

வெண்டேர்ச் செழியன் முடத்திருமாறன் என்னும் பெயர்கள் பிற்காலத்துப் பாண்டியர் பெயர் போலாது தூய தமிழாயிருத்தல், ஆரிய வருகைக்கு முந்திய நிலையைக் காட்டும்.

சிலர், முடத்திருமாறன் கடல்கோளுக்குத் தப்பும் முயற்சியில் முடம்பட்டு அப் பெயர் பெற்றானென்று கூறுவர். வன் பிறப்பிலேயே முடம்பட்டு மிருந்திருக்கலாம்.

புலவர் தொகை போன்றே, பாண்டியர் தொகையும் அவருட் பாவரங்கேறினார் தொகையும் குறைந்தமை, பழம் பாண்டியநாடு மிகக் குறுகிப் போனமையைக் காட்டும்.

கபாடபுரம் என்னும் பெயர் வான்மீகி யிராமாயணத்தினின்று அறிந்தது. அச் சொல்லிற்கு வடமொழியில் வாயில் அல்லது கதவு என்பதே பொருள். அண்மையில் வெளிவந்த (P.S.) கிருட்டிணசாமி ஐயரின் மொழிபெயர்ப்பிலும், கபாட என்பது வாயிலின் கதவு என்றே மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. (பாண்டயாநாம் கபாடம் த்ரக்ஷ்யத = பாண்டிய நாடுகளின் உட்புகும் வாயிலின் கதவைக் காண்பீர்கள்).

ஆரிய வருகைக்கு முற்பட்ட பழம் பாண்டி நாட்டு நகருக்கு வேற்றுமொழிப் பெயர் அமைந்திருத்தல் இயலாது. கபாட என்னும் சொல்லிற்கு வடமொழியில் மூலமும் இல்லை. ஆறு, கடலொடு கலக்குமிடம் வாய போன்றிருத்தலால், அதற்குக் கயவாய் என்று பெயர். (ஒ.நோ.: Portsmouth, Plymouth) கயம் = கடல். குமரியாறு கடலொடு கலந்த இடத்திலேயே கபாடபுரம் என்னும் பட்டினம் இருந்திருத்தல் வேண்டும். அதன் பெயரும் அதனொடு முழுகிப் போயிற்று.

ஒருகால், புகார் (ஆறு கடலிற் புகுமிடம்) என்பது போன்றே கயவாய் என்பதும் சிறப்புப் பெயராய் வழங்கி யிருக்கலாம்; அல்லது, புதவம் (வாயில்) என்று பெயரிருந்திருக்கலாம். கபாட என்னும் சொல் கதவம் என்னும் தென்சொல்லின் முறைமாற்றுத் திரிபாயுமிருக்கலாம்.

கடைக்கழகக் காலத்தின் முற்பகுதியிலும் குமரியாறிருந்ததாகத் தெரிவதால், காவிரி யாறிருக்கவும் காவிரிப்பூம்பட்டினம் முழுகிப் போனதுபோன்றே, குமரியாறிருக்கவும் கபாடபுரம் என்னும் பட்டினமும் முழுகிப் போயிருத்தல் வேண்டும். அம் முழுக்கும் ஒரு பகுதி முன்னும் ஒரு பகுதி பின்னுமாக இருந்திருக்கலாம்.

தென்னாட்டார் வடதிசையிற் கங்கையாடச் சென்றது போன்றே, வடநாட்டார் தென்றிசையிற் குமரியாட வந்ததும், பண்டைக்காலத்திற் பெருவழக்காயிருந்தது.

*"தெனா அது உருகெழு குமரியின் தெற்கும்" (புறம்.6).*

*"தடநீர்க் குமரி வடபெருங் கோட்டின் காறும்" (சிலப்.8:1, அடியார், உரை).*

என்பன குமரியாற்றின் பெருமையைக் காட்டும்.

இடைக்கழக விருக்கையைக் கொண்டது இரண்டாம் அல்லது மூன்றாங் கடல்கோள். அது கி.மு.1500 போல் நிகழ்ந்திருக்க வேண்டும். ஏறத்தாழ அதுவே கீழையாரியர் இந்தியாவிற்குட் புகுந்த காலமும்.

ஆகவே, முதலிரு கழகமும் முற்றும் ஆரியத் தொடர்பற்றன என்பதை அறிதல் வேண்டும் (தமிழிலக்கிய வரலாறு – பக்.62–73).

முக்கனி *mu-k-kaṉi,*பெ.(n.) மா, பலா, வாழை என்ற மூவகைப் பழங்கள்; the three kinds of fruits, viz. *mā, palā, vāḻai. "முந்து முக்கனியி னானா முதிரையின்" (கம்பரா. நாட்டு.19). "தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாய்க் கூட்டிச் சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே" (அருட்பா.345).*

*[மூன்று + கனி.]*

முக்காட்டங்கி *mukkāṭṭaṅgi,* பெ.(n.) மகளிருடைய தலைமறைவுச் சீலை (வின்.); hood or veil, worn by women.

*[முக்காடு + அங்கி. தலையை மறைத்துக் கொள்ளப்பயன்படும் துணி.]*

முக்காட்டுக்கூறை *mukkāṭṭu-k-kūṟai,* பெ.(n.) 1. மணப் பெண்ணுக்குப் பெற்றோர் கொடுக்கும் தலைமறைவுச் சீலை (வின்.); garment given by the parents to the bride to cover her head. 2. ஒருத்தி கைம்பெண்ணாகும் போது அவளது

பெற்றோர் கொடுக்கும் சீலை (இ.வ.); garment given by the parents of a woman on the occasion of her widowhood.

*[முக்காடு + கூறை. கூறை = ஆடை, துணி.]*

**முக்காட்டுச்சீலை** *mukkāṭṭu-c-cīlai,* பெ.(n.) முக்காட்டங்கி (வின்.) பார்க்க; see *mukkāṭṭaṅgi.*

*[முக்காடு + சீலை. சீலை = துணி.]*

**முக்காட்டுநித்திரை** *mukkāṭṭu-nittirai,* பெ.(n.) முகத்தையும் உடம்பையும் மூடித் தூங்குவது; sleeping covering the face.

*[முக்காட்டு + **Skt.** நித்திரை. .]*

முகத்தை மூடித் தூங்குவதால் இரண்டு கண்களுக்கும், தோள்களுக்கும் வலிவுண்டாகும். அன்றியும் குளிர்வாடை, வெயில், வேகம், தூசி, பனிக்காற்று இதனால் விளையும் நோய்கள் நீங்கும்.

**முக்காட்டுப்பூச்சி** *mukkāṭṭu-p-pūcci,* பெ.(n.) சிவப்புக் கம்பளிப் பூச்சியின் தாய்ப்பூச்சி (கோவை.); mother of red caterpillar.

*[முக்காட்டு + பூச்சி.]*

**முக்காடு** *mukkāḍu,* பெ.(n.) மறைவுச் சீலை, தலையை மூடிக் கொள்ள உதவும் துணி; veil or cloth worn to cover one's head. *"கவலையுட் கொடு போர்த்த முக்காடு" (பிரபோத.3:55). அவள் கெட்ட கேட்டுக்கு முக்காடு வேறா? முக்காட்டின் கீழே கைகாட்டுகிறது (பழ.அக.). முக்காட்டுக்குள்ளே மூடுமந்திரமா? (பழ. அக.).*

ம. முக்காடு

*[முட்டாக்கு → முக்காடு. முட்டாக்கு பார்க்க.]*

**முக்காணி**[1] *mu-k-kāṇi,* பெ.(n.) எண்பதில் மூன்று பங்குடைய பின்ன வெண்; the fraction 3/80 as three *kāṇi.*

*[மூன்று + காணி[1] – முக்காணி.]*

**முக்காணி**[2] *mu-k-kāṇi,* பெ.(n.) தன்னிச்சையாய் ஓடாமலிருப்பதற்கும் தன்பால் மூத்திரம் முதலியவற்றைக் குடியாமலிருப்பதற்கும் மாட்டின் கழுத்திலிடும் முக்கோண வடிவாயமைந்த சட்டகம், தளை (இ.வ.); triangular frame on the neck of cattle to prevent them from going astray or drinking their own milk or urine.

*[மூன்று + கோணம் – முக்கோணம் → முக்காணி.]*



**முக்காணி**[3] *mukkāṇi,* பெ.(n.) முக்காணியர் பார்க்க; (G.Tn.D.I.507) see *mu-k-kāṇiyar.*

**முக்காணிக்கொம்பு** *mukkāṇi-k-kombu,* பெ.(n.) ஏற்றக் கோலின் அடிப்பகுதியில் உள்ள துளையில் பொருத்தப்பட்டிருக்கும் கொம்பு; wooden pole, joined in the hole of the lift at the bottom.

*[முக்காணி + கொம்பு.]*

**முக்காணியர்** *mukkāṇiyar,* பெ.(n.) முன்குடுமி தரிப்பவரும் திருநெல்வேலி மாவட்டத்தில் முக்காணி ஊரைச் சார்ந்தவருமாகிய பார்ப்பன வகையார்; a class of Brahmins, who wear the hair - tuft in front of the head, as belonging to the Village *Mukkāṇi* in Tirunelveli District.

*[முக்காணி – ஊர்ப்பெயர். முக்காணி→ முக்காணியர் = முக்காணி என்னும் ஊரில் வாழ்பவர்.]*

**முக்காத்துட்டு** *mukkā-t-tuṭṭu,* பெ.(n.) பழங்காலக் காசு வகை; an ancient coin. *"முக்காத்துட்டுக்கு மூன்று தரம் காலில் விழுவான். முக்காத்துட்டுக்குப் பயனில்லாதவன்".*

*[முக்கால் + துட்டு.]*

**முக்காதம்** *mukkādam,* பெ.(n.) மூன்று காத தூரம்; three *kādam* distance. *"முக்காதம் சுமந்தாலும் முசல் கைதூக்குதான்" (பழ.அக.).*

*[மூன்று + காதம்.]*

**முக்காதலர்** *mu-k-kādalar,* பெ.(n.) கணவன், தோழன், மகன் என்ற மூன்று நட்பாளர்கள் (வின்.); the triple friends viz. *kaṇavaṉ, tōḻaṉ, magaṉ.*

*[மூன்று + காதலர் – முக்காதலர்.]*

**முக்காய்** *mu-k-kāy,* பெ.(n.) கடுக்காய், நெல்லி, தான்றி என்னும் மூன்று வகைக் காய்கள்; three kinds of fruits viz. gallnut, Indian gooseberry, bellerica.

*[மூன்று + காய்.]*

**முக்காய்வேளை** *mukkāy-vēḷai,* பெ.(n.) மருந்துச் செடி வகை; five leaved wild indigo - *Tephrosia senticosa.*

**முக்காரக்கல்** *mukkāra-k-kal,* பெ.(n.) குத்துக்கல்லின் கீழுள்ள கல்; stone standing on edge as a prop in a lift used for irrigation.

**முக்கால்**[1] *mu-k-kāl,* பெ.(n.) 1. நான்கில் மூன்று பங்குடைய பின்னவெண்; the fraction 3/4 as three quarters. *மணி ஒன்றே முக்கால். "முக்காற் பணத்துக் குதிரை மூன்று பணத்துப் புல் தின்றாற் போல" (பழ.அக.).* 2. ஒருவகை இசை (சந்தம்); a kind of metre. *"திருமுக்கால்" (தேவா.86, பதிகத் தலைப்பு).*

*[மூன்று + கால். கால் = ஒரு பொருளின் நான்கில் ஒரு பாகம்.]*

**முக்கால்**[2] *mu-k-kāl,* பெ.(n.) 1. மும்முறை; three times. *"ஆரியனை முக்காலும் வலங்கொடு" (கம்பரா.அதிகாய.87).* 2. மூன்றாவது முறை; a third time. *"முக்காலின் முடிந்திடுவான் முயல்வான்" (கம்பரா.மாரீச.212).* 3. முக்காலம், 1 பார்க்க; see *mu-k-kālam,1*

*[மூன்று + கால். கால் = ஒரு பொருளின் நான்கில் ஒரு பாகம்.]*

**முக்கால்நோக்கு** *mukkāl-nōkku,* பெ.(n.) நால்வகை கோள் (கிரக) நோக்குக் கூறுள் ஒரு கோள் (கிரகம்) முக்கால் பார்வையோடு நோக்குகை; aspect of a planet having three- quarters of a sight one of four *kiraka-nōkku.*

*[முக்கால் + நோக்கு.]*

**முக்கால்புள்ளி** *mu-k-kāl-pulli,* பெ.(n.) எழுதும் போதோ, அச்சிடும் போதோ விளக்கம், எடுத்துக்காட்டு முதலியவைத் தரப்படுவதற்கு முன் பயன்படுத்தப்படும் (:என்னும்) குறி; colon. *கட்டுரையில் முக்கால் புள்ளியை அடிக்கடி பயன்படுத்துகின்றார்.*

*[முக்கால் + புள்ளி.]*

**முக்கால்வட்டம்** *mu-k-kāl-vattam,* பெ.(n.) கோயில் (T.A.S.3, 193); temple, shrine.

*[முக்கால் + வட்டம்.]*

**முக்கால்வளையம்வேர்** *mukkāl-valaiyam-vēr,* பெ.(n.) மூக்காய்வேளை வேர்; root of *mūkkāy-vēlai.*

**முக்காலம்**[1] *mu-k-kālam,* பெ.(n.) 1. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலங்கள்; the three divisions of time, viz. *irappu, nigalvu, etirvu. "அம்முக்காலமுங் குறிப்பொடுங் கொள்ளும்" (தொல்.சொல். 200).* 2. விரைவு (துரிதம்), நடுநிலை (மத்திமம்), காலத்தாழ்வு (விளம்பம்) என்னும் இசைக்குரிய மூன்று காலம் (திரிகாலம்); tempo, a measure of time, three in number.

*[மூன்று + காலம்.]*

**முக்காலம்**[2] *mu-k-kālam,* பெ.(n.) மூன்று வேளை; காலை, நண்பகல், மாலை; the three times a day morning, noon and evening. *கோயிலில் முக்காலமும் பூசை நடைபெறுகிறது.*

*[மூன்று + காலம்.]*

**முக்காலமறிந்தவன்** *mukkālam-arindavan,* பெ.(n.) மூன்று காலங்களையு மறிந்த அறிஞர் (ஞானி); sage, as knowing the past, the present and the future.

*[முக்காலம் + அறிந்தவன்.]*

**முக்காலி** *mukkāli,* பெ.(n.) 1. மூன்று கால் கொண்ட இருக்கை; three footed stool, triped. *"பெண்ணையும் கொடுத்து முக்காலியும் சுமந்தாப்பலே" (கோவை.).* 2. தீ (தைலவ.பாயி.61); fire.

*[மூன்று + (கால் →) காலி..]*



**முக்காலும்** *mukkālum,* கு.வி.எ.(adv.) எப்போதும் (இ.வ.); for ever. *முக்காலும் காகம் முழுகிக் குளித்தாலும் கொக்கு ஆகுமா? (பழ.அக.).*

*[முக்கால் → முக்காலும்.]*

**முக்காலேமூன்றுவீசம்**[1] *mukkālē-mūnru-vīšam,* கு.வி.எ.(adv.) பெரும்பாலும்; almost certainly. *முக்காலே மூன்று வீசம் வந்துவிடுவான் (உ.வ.).*

*[முக்கால் + மூன்று + வீசம்.]*

**முக்காலேமூன்றுவீசம்**[2] *mukkālē-mūnru-vīšam,* பெ.(n.) கீழ்வாய் இலக்கத்தில் ஒன்று (15/16); a fraction number 15/16.

*[முக்கால் + மூன்று + வீசம். வீசம் = 1/16 பதினாறில் ஒன்று. முக்கால் என்பது 12/16, மூன்று வீசம் 3/16; 12/16 + 3/16 –15/16 முக்காலும் மூன்று வீசமும்.]*

**முக்காலேயரைக்கால்முழம்** *mukkālē-y-araikkāl-muḻam,* பெ.(n.) நீட்டலளவை (முழத்தால் அளக்கும்) முறையில் ஒருவகை; linear measurement of measuring a statue by elbow. *முதல் இராசராசனுடைய மனைவியருள் சோழமாதேவியார் திருஇராச ராசேசுவரத்தில் செய்து அமைத்த மாழையாலான ஆடவல்லான் திருமேனியை இம்முறையால் அளந்தனர்.*

*[முக்கால் + அரைக்கால் + முழம்.]*

**முக்காவல்நாட்டுஆமூர்மல்லன்** *mu-k-kāval-nāṭṭu-āmūr-mallaṉ,* பெ.(n.) தித்தனுடைய மகன்; Tittan's son. *இவன் சோழன் தித்தனுடைய மகன். மற்போரிற் சிறந்தவன். சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளியாற் போரிட்டு கொல்லப்பட்டவன். சாத்தந்தையரால் பாடல் பெற்றவன் (புற.நா.80).*

*[முக்காவல் + நாட்டு + ஆமூர் + மல்லன்.]*

**முக்காவனாடு** *mukkāvaṉāḍu,* பெ.(n.) தமிழகத்துப் பழைய சிறு நாடுகளுள் ஒன்று; a small district in ancient *Tamiḻagam.* *"முக்காவனாட்டு ஆமூர்மல்லனை" (புறநா. 80, தலைப்பு).*

*[மூன்று + காவல் + நாடு.]*

**முக்காவெள்ளாமை** *mukkā-veḷḷāmai,* பெ.(n.) சரியான விளைச்சலின் அளவில் முக்கால் பாகம் (கோவை); as three quarters of yielding.

*[முக்கால் + வெள்ளாமை.]*

**முக்காவேளை** *mukkā-vēḷai,* பெ.(n.) முக்காய்வேளை (பதார்த்த.472) பார்க்க; see *mukkāy-vēḷai.*

*[முக்காய்வேளை → முக்காவேளை.]*

**முக்காழ்** *mu-k-kāḻ,* பெ.(n.) மூன்று கோவையாலான முத்துவடம்; pearl necklace of three strands. *"மயிர்ப்புறஞ் சுற்றிய கயிற்கடை முக்காழ்" (மணிமே.3:135).*

*[மூன்று + காழ்.]*

**முக்காழி** *mu-k-kāḻi,* பெ.(n.) மூன்று கொட்டையுள்ள பனம்பழம் முதலியன; fruit containing three stones or seeds, as of the palmyra palm. *முக்காழி யிருப்பை.*

*[மூன்று + (காழ்→) காழி.]*

**முக்காழிபனங்காய்** *mukkāḻi-paṉaṅgāy,* பெ.(n.) முக்காழி பார்க்க; see *mu-k-kāḻi.*

*[முக்காழி + பனங்காய்.]*

**முக்கானோக்கு** *mukkāṉōkku,* பெ.(n.) முக்கால்நோக்கு (வின்.) பார்க்க; see *mukkāl-ṉōkku.*

*[முக்கால் + நோக்கு.]*

**முக்கிமுக்கி** *muki-muki,* வி.எ.(adv.) பெரு முயற்சி செய்து; to make great efforts. *துணியை நாலு முக்கிமுக்கிக் காயப்போடு. முக்கி முக்கி உண்டான்.*

**முக்கிமுனகி** *mukki-muṉagi,* வி.அ.(adv.) ஒன்றைச் செய்வதற்கு மிகவும் இடர்பட்டு; with much difficulty, groaning. *முக்கிமுனகி எப்படியோ வீட்டுக்கான முன்பணத்தைக் கொடுத்துவிட்டேன். குழந்தை முக்கி முனகி சோறு தின்றது.*

**முக்கிமுனகு–தல்** *mukki-muṉagu-,* 5 செ.கு.வி. (v.i.) முக்கிமுனங்கு–தல் பார்க்க; see *mukki-muṉaṅgu-.*

*[முக்கு + முனகு–தல் →முக்கிமுனகு–தல்.]*

**முக்கிமுனங்கு–தல்** *mukki-munaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மனமின்மை காட்டி முணுமுணுத்தல்; to grumble. 2. மிகத் துன்புறுதல் (உ.வ.); to suffer much. 3. மிகையாக உண்ணுதல்; to eat large quantity of food. *"திரையணற் கொடுங்கவுள் நிறைய முக்கி" (நற்.22:5). "பாசவன் முக்கித் தண்புனற் பாயும்" (புறநா.63:13).*

*[முக்கு + முணங்கு–தல் →முக்கிமுனங்கு–தல்.]*

**முக்கிளைக்கள்ளி** *mukkiḷai-k-kaḷḷi,* பெ.(n.) உறைப்பான பால் போன்ற சாறுடைய செடிவகை; a kind of spurge.

*[முக்கிளை + கள்ளி.]*

**முக்கீச்சாரம்** *mukkī-c-cāram,* பெ.(n.) கோயில்; temple. *சோழநாட்டு உறையூரில் உள்ள கோயில். மூவேந்தரும் சேர்ந்து வழிபட்டக் கோயில். "சீரினால் அங்கொளிர் தென்வன் செம்பியன் வில்லவன் சேரும் முக்கீச்சரத் தடிகள் செய்கின்றதோர் செம்மையே" (சம்ப.தேவாரம்).*

**முக்கீரம்** *mukkīram,* பெ.(n.) ஒரு வகைச் செடி; a kind of plant.

**முக்கு[1]–தல்** *mukku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. முயற்சியால் இறுகப் பிடித்து மூச்சினை ஒலிபட வெளிவிடுகை; to strain, as a woman in travail. 2.பெருமுயற்சி செய்தல் (உ.வ.); to make great efforts. *எவ்வளவு முக்கியும் மூட்டையைத் தூக்க முடியவில்லை.* 3. ஒரு செயலைச் செய்வதற்காக மூச்சை உள்ளிழுத்து நிறுத்தி அழுத்தம் தருதல்; strain in order to do something, groan. *எடை அதிகம் உள்ள பாறையை முக்கிமுக்கித்தான் தள்ள வேண்டி இருந்தது.*

தெ. முக்கு; க. முக்கிரி; ம. முக்குக.

*[முற்கு → முக்கு →முக்கு–தல். முற்கு – எழுத்திலா ஒலி.]*

**முக்கு[2]–தல்** *mukku-,*5 செ.குன்றாவி. (v.t.) நிரம்ப வாயிற் பெய்து உண்ணுதல்; to eat in large mouthfuls. *"பாசவன் முக்கி" (புறநா.63). உணவை ஒரு முக்கு முக்கினான்.*

*[முழுகு →முழுங்கு; முழுங்கு–தல் = தொண்டைக்குள் வயிற்றுக்குள் முழுகச் செய்தல். முழுகு →முக்கு–தல்.]*

**முக்கு[3]–தல்** *mukku-,*5 செ.குன்றாவி.(v.t.) மூழ்குவித்தல்; to press anything under water, to immerse. *"தீர்த்தம்...... அதிலெனை முக்கியெடுத்து" (தணிகைப்பு. நந்தி.60). குளத்தில் நன்கு முக்கிக் குளித்தான்.*

*[முழுக்கு–தல் →முக்கு–தல். முழுக்கு–தல் = அமிழ்த்துதல்.]*

**முக்கு[4]–தல்** *mukku-,* 5 செ.கு.வி.(v.i.) மூழ்குதல்; to immerse one's self. *"முத்துப் படுந் துறையில் முக்குவார் முகத்தைக் கொடுத்துப் பழங் கொள்ளுவார்கள்" (திவ்.திருமாலை.1, வியாக்.பக்.14). நீரில் மூழ்கி எழுந்தான்.*

*[முழுங்கு–தல்→முங்கு–தல்→முக்கு–தல் = தண்ணீர் முதலிய நீர்மத்தில் ஒருபொருளை முழுவதுமாக நனையச் செய்தல்.]*

**முக்கு[5]** *mukku,* பெ.(n.) 1. முக்கல், 1, 2 (உ.வ.) பார்க்க; see *mukkal,1, 2.* 2. மூச்சுத் திணறுகை (வின்.); suffocation. 3. நோய் வகை; a disease. *"முக்கு நோயற வோட்டு மருந்தென" (சிவதரு.பாவ.69).*

*[முற்கு → முக்கு.]*

முக்கு[6] *mukku,* பெ.(n.) சாலை, தெரு, சந்து முதலியவற்றின் முனை; corner, of a street, etc. *முக்கு அங்காடி வரை போய் வருகிறேன். தெரு முக்கில் என்ன கூட்டம்?*

ம. முக்கு

*[முடுக்கு→முக்கு. முடுக்கு = மூலை, கோணல் தெரு.]*

முக்குக்கடுக்கன் *mukku-k-kaḍukkaṉ,* பெ.(n.) கடுக்கன் வகை (இ.வ.); a kind of ear- ring.

*[முக்கு + கடுக்கன்.]*

முக்குக்கணம் *mukku-k-kaṇam,* பெ.(n.) குழந்தைகளுக்கு குதம் (ஆசனம்) வெளிப்பட்டு முக்கலுடன் அரத்தமும் சீழும் ஒழுகி உடல் வாட்டமடையும் ஒருவகை நோய்; a disease in children causing hard breathing, *Tabes mesentric.*

*[முக்கு + கணம்.]*

முக்குடுமி *mu-k-kuḍumi,* பெ.(n.) 1. குடுமி வகை (வின்.); triple lock of hair. 2. முக்கவராய்தம் (சூலம்) (பெரியபு. உருத்திர. 10); trident.

*[மூன்று + குடுமி→முக்குடுமி.]*

முக்குடுமியெறிவேல் *mukkuḍumi-y-eṟivēl,* பெ.(n.) முக்குடுமி, 2 (தக்கயாகப். 461 ) பார்க்க; see *mukkuḍumi,2.*

*[முக்குடுமி + எறிவேல்.]*

முக்குடை *mu-k-kuḍai,* பெ.(n.) அருகனுக்குரிய குடை; an umbrella peculiar to Arhat. *"குளிர் முக்குடையி னிழலோய் நீ" (சீவக.1244).*

*[மூன்று + குடை.]*

முக்குடைக்கல் *mukkuḍai-k-kal,* பெ.(n.) சமணச் சமைய அறச்செயல்களுக்காக விடப்பட்ட நிலத்தின் எல்லையைக் குறிக்கும் முக்குடை வடிவில் செதுக்கப் பெற்ற கல் (கல்வெட்டு); boundary stone for lands granted to Jaina institution, as marked by *mukkuḍai.*

*[முக்குடை + கல்.]*

முக்குடைச்செல்வன் *mukkuḍai-c-celvaṉ,* பெ.(n.) முக்குடை உடையவனான அருகக் கடவுள் (சூடா.) ; Arhat, as having *mukkuḍai.*

*[முக்குடை + செல்வன்.]*

முக்குடையான் *mukkuḍaiyāṉ,* பெ.(n.) முக்குடைச்செல்வன் பார்க்க; see *mukkuḍai-c-celvaṉ. "முக்குடையான் றாளினை" (சீவக.3142).*

*[முக்குடை → முக்குடையான்.]*

முக்குடையோன் *mu-k-kuḍaiyōṉ,* பெ.(n.) முக்குடைச்செல்வன் (திவா.) பார்க்க; see *mukkuḍai-c-celvaṉ.*

*[முக்குடை→முக்குடையோன்.]*

முக்குணம்[1] *mu-k-kuṇam,* பெ.(n.) மூன்று குணம்; the three fundamental qualities. *"முக்குணவசத்தான் முறைமறந்தறைவரே" (இலக்.கொ.6).*

*[மூன்று + குணம் – முக்குணம். மூன்று குணமாவது தேவிகம் (சாத்துவம்), மாந்திகம் (இராசதம்), பேயிகம் (தாமதம்) (பாவாணர் தமிழர் மதம்).]*

முக்குணம்[2] *mu-k-kuṇam,* பெ.(n.) ஊதை (வாதம்), பித்தம், கோழை (சிலேட்டுமம்) என்ற

மூன்று குணங்கள்; the three humours in the human system namely *vatham*(wind humour) *pitham* (bile humour) *kapham* (phlegm humour).

*[மூன்று + குணம்.]*

முக்குணவேளை *mu-k-kuṇa-vēḷai,* பெ.(n.) கிழமைகளை ஒன்றரை மணிக் கூறுகளாகப் பிரிக்கும் காலப்பகுதி (பஞ்.); the divisions of a day into periods of one and a half hours, named successively as *tāmašam*, and *šātvigam, rājasam.*

*[முக்குணம் + வேளை.]*

முக்குணுக்கிடு-தல் *mu-k-kuṇu-k-kiḍu-,*18 செ.குன்றாவி. (v.t.) மூன்று வளைவு உண்டாகும்படி செய்தல் (திவ்.பெரியதி. 8. 2:5 வியா.); to cause three bendings, as in a pose of the body.

*[மூன்று + குணுக்கு + இடு-தல்.]*

முக்குணுக்கு *mu-k-kuṇukku-,* பெ.(n.) மூன்று வளைவு; three bendings.

*[மூன்று + குணுக்கு. குணுக்கு = வளைவு.]*

முக்குந்துருக்கம் *mu-k-kunturukkam,* பெ.(n.) மூன்று வகை நறுமணப் புகை (குங்கிலியம்); the three kinds of incenses.

முக்குமாந்தம் *mukku-māndam,* பெ.(n.) குழந்தைகளுக்கு உடல் மெலிந்து முக்கி முக்கி வெளிப்படும் அரத்தக் கழிச்சலுடன் காய்ச்சலையும் உண்டாக்கும் ஒருவகைச் செரியாமை நோய் (மாந்தம்); a disease in children accompanied by fever hard breathing and dysentery and purging.

*[முக்கு + **Skt.** மாந்தம் = செரியாமை.]*

முக்குமீன் *mukku-mīṉ,*பெ.(n.) சுறா மீன் வகை; a kind of shark fish.



முக்குமூலம் *mukku-mūlam,* பெ.(n.) மூலச்சூடு நோய்; heat near the rectal region.

*[முக்கு + மூலம். மூலம் = ஒருவகை நோய்.]*

முக்குராணிபோடு-தல் *mukkurāṇi-pōḍu-,*20 செ.கு.வி.(v.i.) நீர் குடிக்கும் போது மாடு முதலியவை மூக்கை நீருட் செலுத்தி யுறிஞ்சுதல்; to immerse the nose deeply in water when drinking, as bulls. *மாடு முக்குராணி போட்டுக் குடிக்கிறது (உ.வ.).*

*[மூக்கு + உரிஞு + போடு-தல்→முக்குராணி போடு-தல்.]*

முக்குருந்து *mukkurundu,* பெ.(n.) காட்டெலுமிச்சை; wild lime.

முக்குலம் *mu-k-kulam,* பெ.(n.) பழங் காலத்திலிருந்த மூன்று அரச குலங்கள்; the three ancient lines of kings. *"முக்குலத்தினு மதிக்குல முதன்மை பெற்றது வென்று" (பாரத.குருகுல.28).*

*[மூன்று + குலம். மூன்றுகுலம் → முக்குலம்.]*

முக்குலைச்சு *mu-k-kulaiccu,* பெ.(n.) 'தெ' என்ற குறியுள்ளதும் நான்கில் மூன்று பங்குடையதுமான பின்னவெண் (யாழ்ப்.); the fraction 3/4, as three - quarters.

முக்குவர் *mukkuvar,* பெ.(n.) குமரி, முகவையில் வாழும் மீனவக் குடியினருள் ஒரு வகுப்பினர் (மீனவ.); sect of people in fisherman community.

க. முக்குவர்.

*[முக்கு →முக்குவர். முக்கு–தல் = மூழ்கு–தல்.]*

'முக்குவர்' இலங்கையிலும் பழஞ்சேர நாடாகிய கேரளத்திலும் உள்ளனர். சேரநாட்டு முக்குவர் ஈழவருடனும் முகவருடனும் இலங்கையினின்று வந்ததாகச் சொல்லப்படுவர்' என்று குண்டர்ட்டு தம் மலையாள – ஆங்கில அகரமுதலியிற் கூறுவர் (தேவநேயம்.12, பக்.96).

முக்குவன் *mukkuvan,* பெ.(n.) நுளையன்; fisherman.

*[முக்கு →முக்குவன்.]*

முக்குழி *mu-k-kuḻi,* பெ.(n.) வேள்வித் தீயை வளர்க்குங் குழிகள்; sacrificial pits for maintaining the three *Vēdic* fires. *"சமிதை முக்குழிக் கூட்டத்துட்பட்ட வோக்கி" (பெருங்.இலாவாண.3:15).*

*[மூன்கு + குழி.]*

முக்குழியாட்டம் *mu-k-kuḻi-y-āṭṭam,* பெ.(n.) சிற்றூர் சிறுவர்கள் விளையாடும் விளையாட்டு வகை; a village game which children plays.

முக்குழிப்பாய்ச்சு–தல் *mu-k-kuḻi-p-pāyccu-,* 5 செ.குன்றாவி.(v.t.)1. முக்கோண வடிவாக நடவு அமையும்படி நாற்று நடுதல் (இ.வ.); to transplant seedlings in triangular shapes. 2. தந்திரத்தால் கேட்டிற்குள்ளாதல் (இ.வ.); to entrap and ruin. *அவனை முக்குழிப் பாய்ச்சிவிட்டான்.*

*[முக்குழி + பாய்ச்சு–தல். பாய்ச்சுதல் = நீர்ப் பாய்ச்சுதல்.]*

முக்குளம்[1] *mu-k-kuḷam,* பெ.(n.) கங்கை, யமுனை, சரசுவதி ஆகிய மூன்று ஆறுகளும் கூடுமிடம் (வின்.); the confluence of the rivers, the *Jumṉā,* the Šaraswathy and the Ganges. *"முக்குளம் செற்றார் பாதம் சேருமுக்குளமும் பாடி உளமகிழ்ந் தேத்தி வாழ்ந்தார்" (சேக்கிழார்).*

*[மூன்று + குளம் – முக்குளம். குளம் = நீர் நிலையைக் குறித்தது ஆற்றையும் குறித்தது.]*

முக்குளம்[2] *mukkuḷam,* பெ.(n.) இருபதாவது விண்மீனான முற்குளம் (பூராடம்) (வின்.); the 20th naksatra.

முக்குளி[1]–த்தல் *mukkuḷi-,* 4 செ.கு.வி. (v.i.) முழுகுதல்; to dive. *அவன் முக்குளிக்க நீரில் பாய்ந்தான். "இரைகவர் ஞெண்டு முக்குளித்தூறு மளறு கிடங்கில்" (திருச்செந். பிள்ளை. செங்கீரை.10).*

தெ. புக்கிளிஞ

*[முங்கிக்குளி–த்தல் →முக்குளி–த்தல் = நீரில் அமிழ்ந்து உள்ளே செல்லுதல்.]*

முக்குளி[2] *mukkuḷi,* பெ.(n.) கோழி முளையான் பூடு (பதார்த்த.607); large flowered purslane.

முக்குளிக்காரை *mukkuḷi-k-kārai,* பெ.(n.) சதக்காரைச் செடி; a kind of webera - *Canthium genus.*

**முக்குளிக்கீரை** *mukkuḷi-k-kīrai,* பெ.(n.) உப்புக்கீரை; a kind of vegetable greens - *Portulaca pilosa.*

**முக்குளிப்பான்** *mukkuḷippāṉ,* பெ.(n.) 1. உள்ளான் என்னும் சிறிய நீர்ப்பறவை வகை (வின்.); dabchick, a small grebe. 2. நோய் வகை (சங்.அக.); a kind of disease.

*[முங்குளிப்பான்→முக்குளிப்பான்.]*



**முக்குற்றக்கலப்பு** *mukkuṟṟa-k-kalappu,* பெ.(n.) ஊதை (வாதம்) பித்தம், கோழை (சிலேட்டுமம்) முதலியவற்றின் கலப்பு; the mixture of the three humours in the body (சா.அக.).

*[முக்குற்றம் + கலப்பு.]*

**முக்குற்றங்கடிந்தோன்** *mukkuṟṟaṅ-kaḍindōṉ,* பெ.(n.) முக்குற்றத்தையும் ஒழித்த புத்தன் (திவா.); the Buddha, as having, eradicated *mukkuṟṟam.*

*[முக்குற்றம் + கடிந்தோன். காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூவகைக் குற்றங்களிலிருந்து விடுபட்டவன்.]*

**முக்குற்றம்** *mu-k-kuṟṟam,* பெ.(n.) காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூவகை உயிர்க் குற்றங்கள் (பிங்.); the three evils pertaining to the soul viz. *kāmam, veguḷi, mayakkam.* *"முக்குற்ற நீக்கி" (நாலடி.190).*

*[மூன்று + குற்றம்.]*

ஆதனின் (ஆன்மாவின்) அல்லது மாந்தனின் குற்றங்களை யெல்லாம் மூன்றாக அடக்கி, அவற்றை ஆசை, சினம், அறியாமை என முறைப்படுத்திக் கூறினர் நம் முன்னோர். அவற்றையே,

*"காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்*
*நாமங் கெடக்கெடு நோய்" (குறள், 360)*

என்றார் திருவள்ளுவர். காமம், ஆசை : வெகுளி, சினம்; மயக்கம், அறியாமை. வெகுளி, சினம் என்பன ஒருபொருட் சொல்லாயினும், வேகும் நெருப்பைப் போல வெம்மை மிக்க சினமே வெகுளி என அறிக.

*"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி*
*கணமேயுங் காத்த லரிது" (குறள், 29)*

என்னும் குறளை நோக்குக.

பொதுவாக, அறியாமையே துன்பத்திற் கெல்லாம் மூலமாகச் சொல்லப்படுகின்றது. ஒரு பொருளைத் தவறாகப் பயன்படுத்துவதாலும், ஒரு கொடிய உயிரியிடம் அல்லது பொறியிடம் அல்லது இயற்கையிடம் அகப்பட்டுக் கொள்வதாலும், ஒரு தீயபொருளை நல்லதென்று நுகர்வதாலும், துன்புறுவது மெய்யே. ஆயின், அவற்றை அண்டாமலும் நுகராமலும் இருந்த விடத்திற் பாதுகாப்பாக விருப்பின், பெரும்பாலும் துன்பத்திற்குத் தப்பிக்கொள்ளலாம். ஒரு பொருளைத்தேடிச் சென்று அது கிடையாக்கால் துன்புறுவதற்கு, அது பற்றிய அறிவும் ஓரளவு கரணியமாம். ஆகவே, உண்மையில் துன்பத்திற்கு மூலக்கரணியமா யிருப்பது ஆசையேயன்றி வேறன்று. இன்ப துன்பங்களை விளைவிக்கும் நல்வினை தீவினைகளைச் செய்விப்பதும், ஒருவனுடைய ஆசையே யன்றி அறியாமையன்று. அதனாலேயே,

*"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றும்*
*தவாஅப் பிறப்பீனும் வித்து" (குறள், 361)*

*"அவாவிலார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேல்*
*தவாஅது மேன்மேல் வரும்" (குறள், 368)*

*"இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்*
*துன்பத்துள் துன்பங் கெடின்" (குறள், 369).*

*"ஆரா வியற்கை யவர்நீப்பி னந்நிலையே*
*பேரா வியற்கை தரும்" (குறள், 370)* என்றார் திருவள்ளுவர். அவாவறுத்தல் என்னும் அதிகாரத்தைத் துறவறவியலின் இறுதியில் வைத்திருப்பதும் கவனிக்கத்தக்கதாம்.

காமம் அல்லது ஆசை துன்பத்திற்கு மூலக் கரணியமா யிருப்பத னாலேயே அது முன்வைக்கப்பட்டது. விரும்பியதொன்று கிடையாமையால் அல்லது வெறுப்பான தொன்றை இன்னொருவன் செய்ததனால், சினம் அல்லது வெகுளி பிறப்பது இயல்பே. ஆயின், காமத்திற்கும் வெகுளிக்கும் இடை நிலம் (middle ground) இருப்பதனால், வெகுளி என்பது காமம் என்பதன் எதிர்ச்சொல்லே (contrary term) யன்றி மறுதலைச் சொல் (contradictory term) அன்று. விரும்பாத பொருள்மே லெல்லாம் ஒருவனுக்கு வெறுப்புண்டாகாது. அம் மனப்பான்மை நொதுமல் நிலை யொத்ததே. காமத்தொடு எதிர்நிலைத் தொடர்பு கொண்டிருப்பதால், வெகுளி அதன்பின் வைக்கப்பட்டது.

மயக்கம் என்றது அறியாமையே. அறிவு முற்றறிவும் சிற்றறிவும் என இருவகைப்பட்டிருப்பது போன்றே. அறியாமையும் முற்றறியாமையும் சிற்றறியாமையும் என இருதிறப்படும். ஒன்றைப்பற்றி ஒன்றும் தெரியாமை முற்றறியாமை. ஒன்றை இன்னொன்றாகப் பிறழ வுணர்தல் சிற்றறியாமை. ஒன்றை அதுவோ இதுவோ என மயங்கல்; அறிவிற்கும் அறியாமைக்கும் இடைப்பட்ட ஐயநிலை. சிற்றறியாமை திரிபு என்றும், முற்றறிவு தெளிவு என்றும், சொல்லப்பெறும். காம வெகுளி மயக்கம் என்னும் மூன்றையும் வடவர் ஐந்தாக விரிப்பர்.

"குற்றங்க ளைந்தாவன: அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பென்பன: இவற்றை வடநூலார் பஞ்சக் கிலேசமென்பர் என்று 38ஆம் குறளுரையிலும்,

"அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிது வேண்டுமென்னும் அவாவும். அதுபற்றி அப் பொருட்கட் செல்லுமாசையும், அதுபற்றி அதன் மறுதலைக்கட் செல்லுங் கோபமுமென வடநூலார் குற்ற மைந்தென்றார். இவர் அவற்றுள் அகங்காரம் அவிச்சைக்கண்ணும் அவாவதல் ஆசைக்கண்ளு மடங்குதலான், மூன்றென்றார்" என்று 360ஆம் குறளுரையிலும், பரிமேலழகர் கூறியிருத்தல் காண்க.

அகங்காரம் என்னும் சொல், வடமொழியில் வினை முதனிலையின்றி அஹம்–கார என நின்று, நான் என்னும் அகப்பற்றை யுணர்த்துமென்றும், தமிழில் அகங்கரி என்னும் முதனிலையடிப் பிறந்து அகங்கரிப்பு அல்லது செருக்கு என்று பொருள்படும் தொழிற்பெயர் அல்லது தொழிற் பண்புப் பெயராகுமென்றும். வேறுபாடறிக. அகம், மனம், கரித்தல், கடுத்தல் அல்லது மிகுதல். அகம் + கரி = அகங்கரி – அகங்கரிப்பு. அகங்காரம் வடமொழியில், அஹம்–கார என்பது எனது என்னம் புறப்பற்றை யுணர்த்தும் மமகார என்பதன் மறுதலைச் சொல்லாம். தமிழில் அத்தகைய நிலை யின்மையை நோக்குக. இதனால் இருசொல்லும் வெவ்வேறெனவும், வடிவொப்புமையினாலும் ஆராய்ச்சியின்மையாலும் தமிழரால் அறியாதும், வடவரால் அறிந்தும், ஒன்றோடொன்று மயக்கப் படுகின்றன வென்றும் அறிக.

இனி, ஆரியச் சார்பான சிவனியக் கொண்முடிபில் (சைவ சித்தாந்தத்தில்), ஆணவம், மாயை, காமியம் எனக் கூறியிருக்கும் மும்மலப் பெயரும், காம வெகுளி மயக்கம் என்பவற்றின் திரிப்பே யென்பது, என் 'தமிழர் மதம்' என்னும் நூலில் விளக்கப்பெறும். ஆணவம் என்பது ஆண் என்னும் அடிப்பிறந்து அறியாமையைக் குறிப்பதன்று. மயக்கம் என்பதே அறியாமையை (உயிரொடு நிலையான தொடர்பற்ற உடம்பை நான் என உணரும் திரிபுணர்ச்சியை) உணர்த்தும். ஐம்பூதங்கட்கும் மூலமான மாயை வேறு; பிறழ்வுணர்ச்சியைக் குறிக்கும் மயக்கம் வேறு. மாய் + ஐ = மாயை (மாய்ந்த அல்லது மறைந்த நிலை). ஒ.நோ. சாய் + ஐ = சாயை = சாயா (வ), மாயை – மாயா (வ.) காமம் – காமியம் = விருப்பமானவை. கார்மிய என்பதன் திரிபாகக் கொண்டு இருவகை வினையென்று கூறுவது பொருந்தாது.

திருவள்ளுவர் இல்லறத்தாலும் வீடுபேறுண் டெனக் கூறியிருத்தலாலும் சிவனடியார் பலர் இல்லறத்தில் நின்றே வீடுபெற்றதாகப் பெரிய புராணங் கூறுதலாலும் நுகர்ச்சியினாலும் நல்வினையாலும் பழந்தீவினை போக்கப்படு மாதலாலும் தீவினை கலவாது இறைவழிபாட்டோடு கூடிய நல்வினைத் தொகுதியும் பிறவிக்குக் கரணியமாம் என்பது உத்திக்குப் பொருந்தாமையாலும், இவ் வுலகிற் பிறந்து வளர்ந்து கற்றுத் துறந்து ஒரு வினையும் செய்யாமல் வீடுபெறாமென்பது இயலாத தாதலும், "நல்வினை தீவினைகள் மேற்குறித்தவாறு தூலமாச் செய்யப்படும்பொழுது 'ஆகாமியம் என்றும் பின் சூக்குமமாய நிலைபெற்று நிற்கும்பொழுது 'சஞ்சிதம்' என்றும், பின் இன்ப துன்பங்களாய் வந்து பயன்படும்பொழுது 'பிரார்த்தம்' என்றும் பெயர் பெறும் 'பிரார்த்தமே' ஊழ் எனப்படுகின்றது. 'நல்வினை தீவினை' என இருவகைப்பட்டு விரியால் எண்ணிறந்தனவாய் நிற்றலின் சடமாயும் பலவாயும் உள்ள இவை 'காரியம், என்பதும். அதனால் இவை *"தோற்றமும் அழிவும் உடையன"* என்பதும், அதனால் மூல கன்மமே காரண கன்மமாய்த் 'தோற்றக் கேடின்றி நிற்கும்' என்பதும், பெறப்படும்" என்று அறப்புரவளாகம் (தருமையாதீனம்) வெளியிட்டுள்ள 'சித்தாந்தத் தெளிவியல்' என்னும் கொண்முடிபுத் தெளிவியல் கூறுவது (பக்.160) அறிவாராய்ச்சி மிக்க இக் காலத்திற் கேற்காது.

ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்னும் மூன்றையும் முறையே எதிர்வு. இறப்பு, நிகழ்வு எனத் தூய தமிழிற் கூறலாம் (பாவாணர் தமிழியற் கட்டுரைகள், பக்.145–147).

**முக்குறட்டை** *mukkuraṭṭai,* பெ.(n.) பூனை முட்குறட்டைச் செடி; a variety of *kuraṭṭai*, small korattai - *Trichanthesgenus.*

**முக்குறுணி** *mu-k-kuruṇi,* பெ.(n.) மூன்று குறுணி தவசவளவு, மூன்று மரக்கால்; a grain measure.

*[மூன்று + குறுணி → முக்குறுணி. குறுணி = எட்டுப் படி கொண்ட தவசவளவு, ஒரு மரக்கால்.]*

**முக்குறுணிப்பிள்ளையார்** *mu-k-kuruṇi-p-piḷḷaiyār,* பெ.(n.) முக்குறுணியரிசிப் பிள்ளையார் பார்க்க; see *mu-k-kuruṇi-y-ariši-p-piḷḷaiyār.*

*[மூன்று + குறுணி + பிள்ளையார்.]*

**முக்குறுணியரிசிப்பிள்ளையார்** *mu-k-kuruṇi-y-ariši-p-piḷḷaiyār,* பெ.(n.) மூன்று குறுணியரிசி சமைத்து வழிபடப்பெறும் பிள்ளையார்; an image of *Gaṇēša* to whom an offering prepared of three *kuruṇi* of rice is made.

*[மூன்று + குறுணி + அரிசி + பிள்ளையார்.]*

**முக்குறும்பு** *mu-k-kuṟumbu,* பெ.(n.) முக்குற்றம் பார்க்க; see *mu-k-kūṟṟam.* *"காம முதலா முக்குறும் பற" (கம்பரா. விராதன்.2).*

*[மூன்று + குறும்பு. குற்றம் →குறும்பு.]*

**முக்கூட்டரத்தம்** *mukkūṭṭarattam,* பெ.(n.) வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு மூன்றையும் மெல்லுதலால் உண்டாகுஞ் செந்நிறம்; red colour produced by chewing betel, arecanut and lime. *"முக்கூட்டரத்த வொண்பசை விலங்கி" (பெருங்.நரவாண.1, 205).*

*[முக்கூட்டு + அரத்தம் – முக்கூட்டரத்தம்.]*

**முக்கூட்டு** *mu-k-kūṭṭu,* பெ.(n.) 1. மூன்று சரக்குக்களாலாகிய மருந்து; a medicine compounded of three drugs. *"கைபுனைந் தியற்றிய முக்கூட்டமிர்தும்" (பெருங். இலாவாண.4:91).* 2. மூன்று கட்டிகளைக் கூட்டியமைத்த அடுப்பு (வின்.); oven, as formed of three stones or lumps of earth placed triangularly. 3. முக்கூட்டெண்ணெய் (வின்.) பார்க்க; see *mu-k-kūṭṭeṇṇey.* 4. தாழி விண்மீன் (பரணி); the 2nd naksatra. 5. மூன்று வழிகள் சேருமிடம்; junction, where three paths meet. *முக்கூட்டில் நிற்காதே.*

*[மூன்று + கூட்டு.]*

**முக்கூட்டுத்தைலம்** *mu-k-kūṭṭu-t-tailam,* பெ.(n.) முக்கூட்டெண்ணெய் பார்க்க; see *mu-k-kūṭṭeṇṇey.*

*[முக்கூட்டு + தைலம். **Skt.** தைலம் = எண்ணெய்..]*

**முக்கூட்டுநெய்** *mu-k-kūṭṭu-ney,* பெ.(n.) முக்கூட்டெண்ணெய் பார்க்க; see *muk-kūṭṭeṇṇey.*

*[முக்கூட்டு + நெய்.]*

**முக்கூட்டெண்ணெய்** *mukkūṭṭeṇṇey,* பெ.(n.) நல்லெண்ணெய், சிற்றாமணக் கெண்ணெய், ஆவின் நெய் ஆகிய இம்மூன்றோடு மற்ற மருந்து சரக்குகளையும் சேர்த்துப் போகர் முறைப்படி செய்தவோர் தலைமுழுக்குக் கெண்ணெய்; medicated bathing oil prepared with gingelly oil, castor oil and ghee with other drugs according to *Bōgar.*

*[முக்கூட்டு + எண்ணெய். முக்கூட்டு = மூன்றும் கலந்தது.]*

**முக்கூடல்** *mu-k-kūḍal,* பெ.(n.) 1. மூன்று ஆறுகள் கூடும் நன்னீர்த் துறை; a place where three rivers meet, generally considered sacred. *"திருமுக்கூட லென்றி சைப்ப" (கருவூர்ப்பு.ஆமிரா.45).* 2. நெல்லை மாவட்டத்தில் சித்திரா ஆறும் உப்போடையும் தாமிரபருணியுடன் கூடும் இடத்துள்ளதோர் மாலியத் தலம்; a shrine in Tinnevelly District at the confluence of the *Tāmiraparuṇi,* the *Cittirānadi* and the *Uppōḍai,* sacred to *Visṇu.* *"வடி வார்வேல் முக்கூடல் அம்மா முருகமருங் கொன்றையந்தார் முக்கூட மாட்டா முலை" (சிவபெருமான் திருவந்தாதி. 50).*

*[மூன்று + கூடு–தல் → முக்கூடல்.]*

**முக்கூடற்பள்ளு** *mukkūḍaṟ-paḷḷu,* பெ.(n.) முக்கூடல் அழகர் பேரில் 17 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட பள்ளுப் பனுவல்; a *paḷḷu* poem on *Visṇu*at *Mukkūḍal,* 17th century.

*[முக்கூடல் + பள்ளு → முக்கூடற்பள்ளு.]*

பள்ளுப்பாட்டு நூல்களில் தலைசிறந்தது முக்கூடற்பள்ளு. இது 17ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. தாமிரபருணி ஆற்றோடு சிற்றாறும், கயத்தாறும் கலந்து கூடும் இடத்தை முக்கூடல் என்பர். முக்கூடலில் கோயில் கொண்ட அழகர் மீது பாடப்பட்டது இந்நூல். முக்கூடலில், ஒரு பண்ணையாரிடத்தில் பயிர்த்தொழில் செய்யும் பள்ளன் ஒருவனுக்கு இரு மனைவியர். மூத்த மனைவி முக்கூடற்பள்ளி, பெருமாளை வணங்குபவள். இளையவள் மருதூர் பள்ளி, சிவனை வணங்குபவள். இவ்விரு மனைவியருக்குள் நிகழும் போட்டி, சண்டை, சச்சரவு, உரையாடல்கள் போன்றவற்றை இந்நூலில் காணலாம். அதிலே நாட்டைப் பற்றியும் ஊரைப் பற்றியும், இருவரின் மதத்தைப் பற்றியும் ஏச்சுகளும் பேச்சுகளும் நகைச் சுவையுடன் அமையக் காணலாம்.

இத்தகைய நயமிக்க முக்கூடற் பள்ளு நூலை எழுதிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்நூலை நாடகமாக்கித் தந்தவர் 'வேளான் சின்னத் தம்பி' என்னும் பெயருடைய என்னயினாப் புலவர். (திரு.மு.அருணாசலப் பிள்ளை, முக்கூடற்பள்ளு நூல் ஆராய்ச்சி) இந்நூலில் அமைந்துள்ள நயமிக்க பாடல்கள் சில,

*"ஆற்று வெள்ளம் நாளைவரத் தோற்றுதே*
*குறி–மலை*
*யாளமின்னல் ஈழமின்னல் சூழமின்னுதே*
*நேற்றுமின்றும் கொம்புசுற்றிக்*
*காற்றடிக்குதே–கேணி*
*நீர்ப்படு சொறித்தவளை கூப்பிடுகுதே!*
*சேற்றுநண்டு சேற்றைக்குழைத்*
*தேற்றடைக்குதே–மழை*
*தேடியொரு கோடிவானம் பாடி யாடுதே*
*போற்றுதிரு மாலழகர்க்கேற்ற*
*மாம்பண்ணைச்–சேரிப்*
*புள்ளிப்பள்ளர் ஆடிப்பாடித் துள்ளிக்*
*கொள்வோமே"*

*"உள்ளத்தில் ஊசலிடும் உல்லாசப்*
*பார்வைவிழிக்*
*கள்ளத்தி னாலிரும்புங் கல்லுங் கரையாதோ*
*வெள்ளத்தி லேதுயில்கார் மெய்யழகர் முக்கூடற்*
*பள்ளத்தி யாரழகு பார்க்க முடியாதே"*

இத்தகைய வளமுள்ள பாடல்கள் சிந்தும் விருத்தமும் விரவி வரப் பாடப்பட்டுள்ளன. இந்நூலில், சித்திரக் காலி, வாலான் சிறை மீட்டான், மணல் வாரி, செஞ்சம்பா, கருஞ்சூறை, பொற்பாளை, கத்தூரிவாணன், பூம்பாளை, கருங்குறுவை, புனுகுச் சம்பா போன்ற நெல்லின் வகைகளையும், குடைக்கொம்பன், செம்மறையன், குத்துக் குளம்பன், மோழை, குடைச் செவியன், குற்றாலன், கூடு கொம்பன் போன்ற மாட்டின் வகைகளையும் காணலாம்.

**முக்கூறிடல்** *mu-k-kūṟiḍal,* தொ.பெ. (vbl.n.) மூன்று பங்காய்ச் செய்கை; make in to three equal parts (சா.அக.).

*[மூன்று + கூறிடல்.]*

**முக்கூறிலை** *mu-k-kūṟilai,* பெ.(n.) மூன்று முனைகளை உடைய இலை; tricuspidate leaf (சா.அக.).

*[மூன்று + கூறு + இலை.]*

**முக்கூறு** *mu-k-kūṟu,* பெ.(n.) மூன்று பங்கு; three parts.

*[மூன்று + கூறு.]*

**முக்கூறுபோடல்** *mukkūṟu-pōḍal,* பெ.(n.) முக்கூறிடல் பார்க்க; see *mukkūṟiḍal.*

**முக்கை** *mu-k-kai,* பெ.(n.) மூன்று (உ.வ.); three, a term used in games.

*[மூன்று + கை.]*

**முக்கைப்புனல்** *mu-k-kai-p-puṉal,* பெ.(n.) மூன்று முறை குடங்கையால் நீர் முகந்து முன்னோர்க்கு (பிதிரர்க்கு)ச் செய்யும் நீர்க்கடன்; the three handfuls of water poured out as offerings to the manes. *"குருதியால் முக்கைப் புனலுருப்பன்" (கம்பரா.மாயாசனக.91).*

*[மூன்று + கை + புனல். புனல் = நீர்.]*

**முக்கோட்டான்நடவு** *mukkōṭṭāṉ-naḍavu,* பெ.(n.) வரிசையில்லாமல், ஒழுங்கின்றி நடவு செய்கை (உழவு); transplanting the seedlings without any order.

*[முக்கோட்டான் + நடவு.]*

**முக்கோட்டை** *mu-k-kōṭṭai,* பெ.(n.) வழிபட்டோர்க்குப் பாட்டியற்றும் ஆற்றலை அளிக்கும் கொற்றவை கோயில்; a shrine of *Durgā* who is said to endow Her votaries with poetic power. *"பாடுவித்த முக்கோட்டை யிருக்கிறபடி" (ஈடு, 4. 5:2).*

*[மூக்கோட்டை → முக்கோட்டை.]*

**முக்கோடியேகாதசி** *mu-k-kōḍi-y-ēkādaśi,* பெ.(n.) சிலை (மார்கழி) மாதத்து வளர்பிறையில் வரும் பதினோராம் நாள் (ஏகாதேசி); the 11th titi of the bright fortnight of *Mārkaḻi.*

*[மூன்று + கோடி + **Skt.** ஏகாதசி.]*

**முக்கோண்** *mu-k-kōṇ,* பெ.(n.) முக்கோணம், 1 பார்க்க; see *mu-k-kōṇam,1. "வட்டமுஞ் சதுரமு முக்கோண் வடிவமும்" (பெருங். உஞ்சைக்.42:29).*

*[முக்கோணம் →முக்கோண்.]*

**முக்கோணம்** *mu-k-kōṇam,* பெ.(n.) 1. மூன்று கோணங்களையுடைய வடிவம்; triangle. 2. நிரய வகை; a hell. *"அதன்கீழ்க் குலிச முக்கோணம்" (சிவதரு. சுவர்க்கநரக. 109).*

*[மூன்று + கோணம். கோணம் = மூன்று கோணங்களையும் மூன்று பக்கங்களையும் உடைய வடிவம்.]*

**முக்கோணவாரி** *mukkōṇa-vāri,* பெ.(n.) உட்காதினுள்ளிருக்கும் பள்ளம்; the oval cavity of the internal ear - *Vestibule* (சா.அக.).

**முக்கோணி** *mukkōṇi,* பெ.(n.) மலைமகள் (பார்வதி); Malaimagal (Parvadi), as residing in the mystic triangle. *"சக்தி கௌரி முக்கோணி" (பேரின்பக்கீர்த்.பக்.55).*

*[முக்கோணம்→முக்கோணி.]*

**முக்கோதனம்** *mukkōdaṉam,* பெ.(n.) தோதகத்தி; a tree (சா.அக.).

**முக்கோல்** *mu-k-kōl,* பெ.(n.) 1. மாலிய குரவர்கள் கையில் வைத்திருக்கும் மூன்று கவையுடைய கோல்; trident -staff carried by *Vaisṇava* ascetics. *"நூலே கரக முக்கோல் மணையே" (தொல்.பொருள். 625).* 2. இருபத்திரண்டாவது விண்மீன் (திருவோணம்); the 22nd naksatra.

*[மூன்று + கோல்.]*

**முக்கோற்பகவர்** *mukkōṟ-pagavar,* பெ.(n.) முத்தண்டமேந்திய துறவிகள்; a class of ascetics who carry *tiritaṇḍam. "முக்கோற் பகவரைக்கண்டு" (கலித்.9, துறைக்குறிப்பு).*

*[முக்கோல் + பகவர். பகவன் → பகவர் = திருமாலடியவரான முனிவர்.]*

**முக¹–த்தல்** *muga-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. நீரைக் குழித்தல் அல்லது துளைத்தல் போல மொள்ளுதல்; to draw, as water; to bale. *"கனையிருள் வானங் கடன்முகந்து" (கலித்.145).* 2. நீர்ப்பொருளையும் கூலப் பொருளையும் கலத்தால் அல்லது படியால் மொண்டளத்தல்; to measure, as grain or liquid. 3. நிரம்பப் பெறுதல்; to obtain in full measure. *படியால் முகந்து நெல்லை சணல் பையில் போட்டார்கள். முந்நீர் முகந்து செல்லும் முகில் (மேகங்கள்). "முகந்தனர் திருவருள்" (கம்பரா.எழுச்சி.2).* 4. தாங்கி யெடுத்தல்; to lift, take up. *"முகந்துயிர் மூழ்கப் புல்லி" (கம்பரா.கும்பகர்ண.129).* 5. விரும்புதல்; to desire, like. *"மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்" (நல்வழி.24).*

க. மொகெ.

*[முழு→முகு→முக→முக–த்தல். நீர் முதலிய நீர்மங்களை (திரவங்களை) அல்லது தவசங் (தானியங்)களைக் கையால் அல்லது கொள்கலனால் நிறைத்து எடுத்தல்.]*

**முக²–த்தல்** *muga-,* 2 செ.குன்றாவி.(v.t.) மூக்கால் நுகருதல் (உ.வ.); to smell.

*[முகம்→முக→முக–த்தல்.]*

**முகக்கட்டு** *muga-k-kaṭṭu,* பெ.(n.) நாணமின்மை; shameless.

*[முகம் + கட்டு.]*

**முகக்கட்டை** *muga-k-kaṭṭai,* பெ.(n.) 1. மோவாய்க் கட்டை (வின்.); chin. 2. தாடி; beard.

*[முகம் + கட்டை. கட்டை = உடல்.]*

**முகக்கடுப்பு** *muga-k-kaḍuppu,* பெ.(n.) 1. முகத்தில் தோன்றும் கடுமைக்குறி (வின்.); severity of countenance. 2. முகச் சினப்பு; a swelling or pimple on the face.

*[முகம் + கடுப்பு. கடுப்பு = வெகுளி, முகஞ்சுளிக்கை.]*

**முகக்கண்ணாடி** *muga-k-kaṇṇāḍi,* பெ.(n.) முகம் பார்க்குங் கண்ணாடி; mirror, looking glass. *"முட்டிணை வட்டு முகக் கண்ணாடியும்" (பெருங்.உஞ்சைக்.38:170).*

*[முகம் + கண்ணாடி.]*

**முகக்கயில்** *muga-k-kayil,* பெ.(n.) உடைந்த தேங்காயின் கண்ணுள்ளதாகிய மேன்மூடி (யாழ்ப்.); upper half of a coconut shell with the kernal.

*[முகம் + கயில். கயில் = தேங்காயில் பாதி.]*

**முகக்கருவி** *muga-k-karuvi,* பெ.(n.) கடிவாளம்; bit of a bridle. *"குதிரைகள்.... முகக் கருவி பொரப்பட்ட செவ்வாயை உடைமையான்" (புறநா.4:8, உரை).*

*[முகம் + கருவி.]*

**முகக்கவர்ச்சி** *muga-k-kavarci,* பெ.(n.) 1. முகத்தின் அழகு; charm of face. நடிகைக்கு முகக்கவர்ச்சி தேவை (அவசியம்). 2. பார்வையால் மயக்கும் மாயக்கலை; bewitching by looks, a magic art.

*[முகம் + கவர்ச்சி.]*

**முகக்களை** *muga-k-kaḷai,* பெ.(n.) முகத்தின் அழகு (உ.வ.); charm or brightness of countenance attractiveness of face.

*[முகம் + களை. களை = அழகு.]*

**முகக்காறை** *muga-k-kāṟai,* பெ.(n.) அணிகலன் வகை; (M.E.R.720 of 1916 - B) a kind of ornament.

*[முகம் + காறை. காறை = பெண்களும், குழந்தைகளும் அணியும் அணிகலன்.]*

**முகக்கிளர்ச்சி** *muga-k-kiḷarcci,* பெ.(n.) முகமலர்ச்சி (வின்.) பார்க்க; see *muga-malarcci.*

*[முகம் + கிளர்ச்சி. கிளர்ச்சி = மகிழ்ச்சி, செழிப்பு.]*

**முகக்குறி** *muga-k-kuṟi,* பெ.(n.) 1. முகத்திற் றோன்றுங் குறிப்பு; facial expression, indication of the face. 2. நோயாளியின் முகத்தில் தோன்றும் நோயறிகுறிகள்; symptoms in the face of a patient. 3. ஒருவகை முகச்சாயல்; a kind of face feature (சா.அக.).

*[முகம் + குறி.]*

**முகக்கொம்பு** *muga-k-kombu,* பெ.(n.) கால் நடையின் முன்பக்கமாக வளைந்த கொம்பு (வின்.); horn bent forward.

*[முகம் + கொம்பு.]*

**முகக்கொள்(ளு)-தல்** *muga-k-koḷ-,* 7 செ.குன்றாவி. (v.t.) அளந்து கொள்ளுதல்; to take in; to comprehend. *"கண்ணுக்கு முகக்கொள்ள வொண்ணாத போக்யதை யுடையவன்" (ஈடு, 5.8:7).*

*[முக + கொள்-தல். முக-த்தல் = அளத்தல்.]*

**முகக்கொள்ளி** *muga-k-koḷḷi,* பெ.(n.) கொள்ளிவாய்ப்பேய்; will-o-the-wisp, ignis fatus. *"முடைக் கொள்ளு முதிர வூன்செம் முகக் கொள்ளி கொண்டு நேடி" (இரகு. சூசனயோ.22).*

*[முகம் + கொள்ளி.]*

**முகக்கோட்டம்** *muga-k-kōṭṭam,* பெ.(n.) வெறுப்பு, வருத்தம் முதலியவற்றின் குறியாக முகங்கோணுகை; expression of face, indicating grief, dislike, reluctance, etc.

மறுவ. முகவாட்டம்

*[முகம் + கோட்டம்.]*

**முககட்டணம்** *muga-kaṭṭaṇam,* பெ.(n.) 1. கோயில் முகப்பிலமைந்த கற்கட்டிடம், மண்டபம்; stone pavilion in the edifice of the temple. *"திருநாவுக்கரசு தேவன் திருமடத்து நாயனார், அழகிய திருவையாறுடையார் கீழைத் திருவாசல் முககட்டணத்து எழுந்தருளி இருந்து" (தெ.கல்.தொ.8, கல்.43). (கல்.அக.).* 2. கட்டடமுகப்பு (தெ.இ.கல்.தொ.3, 21); porch.

*[முகம் + கட்டணம். கட்டடம்→கட்டணம்.]*

**முககந்தம்** *muga-kandam,* பெ.(n.) முருங்கை மரம் (பரி.அக.); Indian horse radish tree.

**முகங்கடு-த்தல்** *mugaṅ-kaḍu-,* 4 செ.கு.வி. (v.i.) சினம், வெறுப்பு முதலியவற்றின் குறியாக முகத்திற் கடுமை தோற்றுவித்தல்; to set one's face in anger; to frown.

*[முகம் + கடு-த்தல். கடுத்தல் = சினத்தல்.]*

**முகங்கரு-த்தல்** *mugaṅ-karu-,* 4 செ.கு.வி. (v.i.) முகங்கடு-த்தல் பார்க்க; see *mugaṅ-kaḍu-.*

*[முகம் + கரு-த்தல்.]*

**முகங்கருகு-தல்** *mugaṅ-karugu-,* 5 செ.கு.வி. (v.i.) சீற்றம், சினம் முதலியவற்றின் குறியாக முகத்தில் கடுமை தோற்றுவித்தல் (வின்.); to

show the rages of reluctance in face foaming with extreme anger.

*[முகம் + கருகு–தல். கருகுதல் = சின மிகுதியால் முகத்தில் கடுமை தோன்றுதல்.]*

முகங்கவிழ்–தல் *mugaṅ-kaviḻ-*, 2 செ.கு.வி. (v.i.) நாணம் முதலியவற்றால் தலை குனிதல்; to bend down one's face, as when put to shame or disgrace; coyness as a feminine.

*[முகம் + கவிழ்–தல். கவிழ்தல் = நாண முதலியவற்றால் தலையிறங்குதல்.]*

முகங்காட்டு¹–தல் *mugaṅ-kāṭṭu-*,5 செ.கு.வி. (v.i.) காட்சி கொடுத்தல்; to appear, to assume a visible form. *"அவன் முகங் காட்டுகைக்காக" (ஈடு, 10. 11: 3).*

*[முகம்+காட்டு–தல். காட்டுதல் = காண்பித்தல்.]*

முகங்காட்டு²–தல் *mugaṅ-kāṭṭu-*,5 செ. குன்றாவி. (v.t.) பெரியோரைச் சென்று காணுதல் (நாஞ்.); to pay a visit to a great man.

*[முகம் + காட்டு–தல். காட்டுதல் = காணுதல்.]*

முகங்காண்(ணு)–தல் *mugaṅ-kāṇ-*, 16 செ.கு.வி. (v.i.) கட்டி உடைவதற்கு முன் வாய் வைத்தல்; கட்டி உடைவதற்கான முன் குறியீடு; to gather, as a head of a boil.

*[முகம் + காண்(ணு)–தல்.]*

முகங்காண்பி–த்தல் *mugaṅ-kaṇbi-*, 4 செ.குன்றாவி. (v.t.) முகங்காட்டு²–தல், பார்க்க; see *mugaṅ-kāṭṭu²-*. *"நாட்டார் மன்னனை முகங் காண்பிக்க வந்திருக்கிறார்கள்" (நாஞ்.).*

*[முகம் + காண்பி–த்தல்.]*

முகங்குப்புறு–தல் *mugaṅ-kuppuṟu-*, 20 செ.கு.வி.(v.i.) முகங்கவிழ்–தல் பார்க்க; see *mugaṅ-kaviḻ-*.

*[முகம் + குப்புறு–தல். குப்புறு–தல் தலைகவிழ்தல், தலைகுனிதல்.]*

முகங்குறாவு–தல் *mugaṅ-kuṟāvu-*, 5 செ.கு.வி.(v.i.) துன்பத்தால் முகம் பொலிவிழத்தல் (வின்.); lent face due to distress.

மறுவ. முகக்கோட்டம்.

*[முகம் + குறாவு–தல். குறாவுதல் = வாடுதல், ஒடுங்குதல், பொலிவிழத்தல்.]*

முகங்கொடு–த்தல் *mugaṅ-koḍu-*, 4 செ.கு.வி.(v.i.) 1. இன்முகங் காட்டுதல்; to show a kindly face. *"ஆசாலேச முடையார்க்கு முகங்கொடாதவனாய்" (ஈடு,4. 7:9).* 2. முகங்காட்டு–தல், 1 பார்க்க; see *mugaṅ-kāṭṭu-,1*. *"இன்னானுக்கு இன்ன தோப்பிலே முகங்கொடுக்கக் கடவோம்" (திவ்.பெரியதி.5:1, பிர.).* 3. செவிசாய்த்தல் (வின்.); to grant a kind hearing. 4. செல்லங் கொடுத்தல் (வின்.); to fondle, treat wtih indulgence. *பிள்ளைக்கு முகங் கொடுக்காதே (வின்.).*

*[முகம் + கொடு–த்தல்.]*

முகங்கொள்(ளு)¹–தல் *mugaṅ-koḷ-*, 16 செ.கு.வி. (v.i.) 1. இசைவு பெறுதல்; to obtain consent. *'இரவுக்குறி யேற்பித்து முகங் கொண்டு' (திருக்கோ.156, உரை).* 2. இசைவுக் குறி காட்டுதல்; to indicate consent. *'பொதுப்பட விலக்கி முகங் கொண்டு' (திருக்கோ.81, உரை).*

*[முகம் + கொள்ளு–தல்.]*

**முகங்கொள்(ளு)²–தல்** *mugaṅ-koḷ-,* 16 செ.கு.வி.(v.i.) கட்டி அல்லது பரு உடைவதற்கு முன் வாய் வைத்தல்; obtain formtion of cone in an abscess ulcer or carbuncle - shoot forth as in boils (சா.அக.).

*[முகம் + கொள்(ளு)–தல்.]*

**முகங்கோடு–தல்** *mugaṅ-kōḍu-,* 5 செ.கு.வி. (v.i.) முகங்கோணு–தல், பார்க்க; see *mugaṅ-kōṇu-.*

*[முகம் + கோடு–தல். கோடுதல் = வளைதல்.]*

**முகங்கோணு–தல்** *mugaṅ-kōṇu-,* 5 செ.கு.வி. (v.i.) முகத்தில் வெறுப்புக்குறி காட்டுதல்; to indicate dissatisfaction by one's countenance.

*[முகம் + கோணு–தல். கோணுதல் மாறுபடுதல், வெறுப்புக் கொள்ளுதல்.]*

**முகச்சரக்கு** *muga-c-carakku,* பெ.(n.) கடைக்குமுன்னால் பார்வைக்காக வைக்கப்படும் பண்டம் (வின்.); commodities exhibited for show.

*[முகம் + சரக்கு. சரக்கு = வணிகப் பண்டம், வணிகப் பொருள்கள்.]*

**முகச்சவரம்** *muga-c-cavaram,* பெ.(n.) முகத்தில் செய்து கொள்ளும் மழிக்கை (சவரம்); shaving of the face.

*[முகம் + சவரம். **Skt.** ksaura > த. சவரம்.]*

**முகச்சாடு** *muga-c-cāḍu,* பெ.(n.) முக்காடு (இ.வ.); veil, covering for the face.

*[முகம் + சாடு. சாடு = கையில் மாட்டிக் கொள்ளும் உறை; தலையில் போட்டுக் கொள்ளும் துணி.]*

**முகச்சாடை** *muga-c-cāḍai,* பெ.(n.) 1. முகச் சாயல் பார்க்க; see *muga-c-cāyal.* 2. முகக்குறிப்பு; indication of the face. 3. கண்டுங் காணாமை (வின்.); slight notice, pretended half notice; winking.

*[முகம் + சாடை. சாடை = சாயல், ஒப்பு, சைகை (வே.க.உ.பக்.107).]*

**முகச்சாய்ப்பு** *muga-c-cāyppu,* பெ.(n.) 1. விருப்பமின்மை (வின்.); slight aversion. 2. வருத்தம் (இ.வ.); displeasure. 3. வெகுளி (வின்.); anger.

*[முகம் + சாய்ப்பு. சாய் → சாய்ப்பு = முகங்கொடாமை, வெறுப்பு, வெகுளி.]*

**முகச்சாயல்** *muga-c-cāyal,* பெ.(n.) 1. முகத்தின் அழகு தோற்றம்; features, lineaments of the face. 2. முகஒற்றுமைத் தோற்றம்; facial resemblance. *இந்தப் பையன் அவன் தாத்தாவின் முகச் சாயலில் இருக்கிறான்.*

*[முகம் + சாயல். சாயல் = அழகு, ஒப்புமை, நிழல்.]*

**முகச்சாயை** *muga-c-cāyai,* பெ.(n.) முகச்சாடை (உ.வ.); facial features.

*[முகம் + சாயை. சாயை = நிழல், ஒப்பு, சாயல், முகஒப்புமை.]*

**முகச்சார்த்து** *muga-c-cārttu,* பெ.(n.) சார்த்துவரி என்னும் இசைப்பாட்டு (சிலப்.7, பக்.207); a kind of *cārttu-vari.*

**முகச்சிரட்டை** *muga-c-ciraṭṭai,* பெ.(n.) கண்ணுள்ள தேங்காய் மூடி; upper half of a coconut shell.

*[முகம் + சிரட்டை. சிரட்டை = தேங்காய் மூடி.]*

**முகச்சுருக்கம்** *muga-c-curukkam,* பெ.(n.) முகத்திரை; wrinkless of the face.

*[முகம் + சுருக்கம்.]*

**முகச்செழிப்பம்** *muga-c-ceḻippam,* பெ.(n.) முகக்களை பார்க்க; see *muga-k-kaḷai.*

*[முகம் + செழிப்பு + அம். 'அம்' பெருமைப் பொருள் பின்னொட்டு.]*

**முகச்செழிப்பு** *muga-c-ceḻippu,* பெ.(n.) மகிழ்ச்சி; cheerful, countenance.

*[முகம் + செழிப்பு. செழிப்பு = வளம், வளமை, தெளிவு.]*

**முகசந்தி** *muga-šandi,* பெ.(n.) நாடக சந்தி ஐந்தனுள் முதலில் உள்ள சந்தி (சிலப்.3:13, உரை); the first juncture or opening of a drama, one of five *nāḍaga-c-candi.*

*[முகம் + சந்தி. சந்தி = இணைவு.]*

நாடகசந்தி = 1. முகம், 2. படி (பிரதி) முகம், 3. தருப்பம், 4. வளைவு. 5. துய்த்தல்.

அந்தி→சந்தி. அந்தி = கூடுகை. பகலும் இரவும் கூடும் நேரம். ஒ.நோ.அவை→சவை.

**முகசம்** *mugašam,* பெ.(n.) பல்; tooth.

**முகசரம்** *muga-šaram,* பெ.(n.) கூரையின் அடிப்பகுதியைத் தாங்க விட்டுள்ள நீட்டு மரம்; beam or log supporting the lower part of a roof.

*[முகம் + சரம். சரம் = கூரையைத் தாங்கும் மரம்.]*

**முகசன்னி** *muga-šaṉṉi,* பெ.(n.) முகத்திற் காணும் இசிவு நோய் (சன்னி) வகை (இங்.வை.); facial neuralgia - *Ticdouloureux.*

*[முகம் + சன்னி. சன்னி = இசிவு நோய்.]*

**முகசின்னம்** *muga-šiṉṉam,* பெ.(n.) முகக்குறி பார்க்க; see *muga-k-kuṟi.*

**முகசீரி** *muga-šīri,* பெ.(n.) நாக்கு; tongue (சா.அக.).

**முகசுரம்** *muga-šuram,* பெ.(n.) பனங்கள் (பரி.அக.); toddy.

**முகசோதனம்** *muga-šōtaṉam,* பெ.(n.) முகங் கழுவுகை; cleaning of the face (சா.அக.).

*[முகம் + Skt. சோதனம்.]*

**முகசோதி** *muga-šōdi,* பெ.(n.) எலுமிச்சை (ம.வெ.); lime - fruit.

**முகஞ்சா-தல்** *mugañ-jā-,* 19 செ.கு.வி. (v.i.) முகஞ்சுண்டு-தல் பார்க்க; see *mugañ-juṇḍu-.*

*[முகம் + சா-தல்.]*

**முகஞ்சிறுத்துப்போ-தல்** *mugañ-jiṟuttu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) சினம், ஏமாற்றம் முதலியவற்றால் முகம் சுருங்கிப் போதல்; face becoming wan-smallar through anger and perplexity.

*[முகம் + சிறுத்துப்போ-தல்.]*

**முகஞ்சின்னம்போ-தல்** *mugañ-jiṉṉam-pō-,* 8 செ.கு.வி.(v.i.) வெட்கப்படுதல் (வின்.); to be put out of countenance, to be ashamed.

*[முகம் + சின்னம் +போ-தல்.]*

**முகஞ்சுண்டுதல்** *mugañ-juṇḍudal,* பெ.(n.) 1. முகங்கருகு-தல் பார்க்க; see *mugaṅ-karugu-.* 2. முகங்கடு-த்தல் பார்க்க; see *mugaṅ-kaḍu-.* 3. முகஞ்சின்னம்போ-தல்

பார்க்க; see *mugañ-jiṉṉam-pō-.*

*[முகம் + சுண்டு-தல்.]*

**முகஞ்சுளி-த்தல்** *mugañ-juḷi-,* 4 செ.கு.வி. (v.i.) முகங்கடு-த்தல் பார்க்க; see *mugaṅ-kaḍu-.*

*[முகம் + சுளி-த்தல்.]*

**முகஞ்சூம்பு-தல்** *mugañ-jūmbu-,* 5 செ.கு.வி. (v.i.) முகத்திற் களைப்புத் தோன்றுதல் (வின்.); to look worn out and exhausted.

*[முகம் + சூம்பு-தல். சூம்புதல் = மெலிதல், மெலிந்து வாடுதல், களைத்தல்.]*

**முகஞ்செத்துப்போ-தல்** *mugañ-jettu-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) தவறு செய்ததால் வெட்கமடைந்து முக வாட்டமடைதல்; face becoming wan- pale through shame (சா.அக.).

*[முகம் + செத்து + போ-தல்.]*

**முகஞ்செய்[1]-தல்** *mugañ-jey-,* 1 செ. குன்றாவி. (v.t.) நோக்குதல்; to face, to look toward. *"முன்னினான் வடதிசை முகஞ்செய்து" (சீவக.1408).*

*[முகம் + செய்-தல்.]*

**முகஞ்செய்[2]-தல்** *mugañ-jey-,* 1 செ.கு.வி. (v.i.) 1. தோன்றுதல்; to appear. *"முகஞ்செய் காரிகை" (பெருங். உஞ்சைக்.35:49).* 2. முன்னாதல்; to be first. *"தோன்றினாண் முகஞ்செய் கோலம்" (சீவக.675).*

*[முகம் + செய்-தல்.]*

முகக்கொம்பு, முகதலை, முகமண்டபம், முகவாசல், முகவுரை, உரைமுகம், கழிமுகம், துறைமுகம், நூன்முகம், போர்முகம் என்னும் கூட்டுச் சொற்களில் முகம் என்னுஞ் சொல் முன்புறத்தையே குறித்தல் காண்க (வே.க.முல்[1]).

**முகஞ்செய்[3]-தல்** *mugañ-jey,* தொ.பெ. (vbl.n.) சிலந்தி (கட்டி) குழித்தல்; formation of the point in an abscess.

*[முகம் + செய்-தல்.]*

**முகஞ்செழி-த்தல்** *mugañ-jeḻi-,* 4 செ.கு.வி. (v.i.) முகமலர்-தல் (வின்.) பார்க்க; see *muga-malar-.*

*[முகம் + செழி-த்தல். முகப்பொலிவு கொள்ளுதல்.]*

**முகட்டறை** *mugaṭṭaṟai,* பெ.(n.) முகட்டு வீட்டில் உத்தரமட்டத்திற்கு மேலுள்ள அறை (புதுச்.); garret.

*[முகடு + அறை.]*

**முகட்டாணி** *mugaṭṭāṇi,* பெ.(n.) கூரையின் உச்சியிலுள்ள மர ஆணி வகை; ridge peg.

*[முகடு + ஆணி. முகடு = உச்சி, வீட்டின் மேற் கூரை.]*

**முகட்டுக்கால்[1]** *mugaṭṭu-k-kāl,* பெ.(n.) வீட்டின் மேல்முகட்டு வளையைத் தாங்க, வைக்குங் கால்; small upright post below the ridge piece.

*[முகடு + கால்.]*

**முகட்டுக்கால்[2]** *mugaṭṭu-k-kāl,* பெ.(n.) மேட்டு மடையின் கால் (தெ.இ.கல். தொ.iii:347); high level channel.

*[முகடு + கால்.]*

**முகட்டுக்காவணம்** *mugaṭṭu-k-kāvaṇam,* பெ.(n.) முகட்டுப்பந்தல் பார்க்க (நாஞ்.); see *mugaṭṭu-p-pandal.*

*[முகடு + காவணம் – முகட்டுக்காவணம். காவணம் = பந்தல்.]*

**முகட்டுத்துவாரம்** *mugaṭṭu-t-tuvāram,* பெ.(n.) முகட்டுத்துளை பார்க்க; see *mugaṭṭu-t-tuḷai.*

*[முகடு + **Skt.** துவாரம்.]*

**முகட்டுத்துளை** *mugaṭṭu-t-tuḷai,* பெ.(n.) கூரையிற் காற்றுச் செல்லவிடும் வழி; ventilator in a slopping roof.

*[முகடு + துளை.]*

**முகட்டுப்பந்தல்** *mugaṭṭu-p-pandal,* பெ.(n.) முகடு வைத்த சாய்வு பந்தல் (நாஞ்.); a pandal with a ridged roof.

*[முகடு + பந்தல்.]*

**முகட்டுப்பாய்ச்சு** *mugaṭṭu-p-pāyccu,* பெ.(n.) முகட்டுவளை (யாழ்.அக.) பார்க்க; see *mugaṭṭu-vaḷai.*

**முகட்டுப்பூச்சி** *mugaṭṭu-p-pūcci,* பெ.(n.) மூட்டுப்பூச்சி (வின்.) பார்க்க; see *muṭṭu-p-pūcci.*

*[முகடு + பூச்சி.]*

**முகட்டுவளை** *mugaṭṭu-vaḷai,* பெ.(n.) கூரை முகட்டின் நீட்டுவளை; ridge - piece.

*[முகடு + வளை. வளை = சிறிய உத்தரம், சிறிய மரத்துண்டு.]*

**முகட்டோடு** *mugaṭṭōḍu,* பெ.(n.) முகட்டை மூடும் ஓடு; ridge - tile.

*[முகடு + ஓடு.]*



**முகடமறியோன்** *mugaḍamaṟiyōṉ,* பெ.(n.) பச்சோந்தி; green lizard chameleon.

**முகடன்** *mugaḍaṉ,* பெ.(n.) உள்ளான் குருவி; a bird, snipe.

**முகடி** *mugaḍi,* பெ.(n.) மூதேவி; goddess of misfortune. *"மடிஉளாள் மாமுகடி என்ப மடிஇலான் தாள்உளான் தாமரையி னாள்" (குறள், 617).*

*[முகடு → முகடி.]*

கூரை முகட்டில் தங்குவதாகக் கருதப்படுவதால் மூதேவி முகடி எனப்பட்டாள். இனி முகடு என்னும் சொற்குப் பாழ் என்னும் பொருள் இருப்பதால் பாழான நிலைமையுண்டு பண்ணுபவள் முகடி என்றுமாம். அவளது பேய்த் தன்மையாலும் வறுமைப் பஞ்சத்தன்மையாலும் அவளுக்குக் கருமை நிறம் கொள்ளப்பட்டது (பாவாணர்).

**முகடிக்கொடி** *mugaḍi-k-koḍi,* பெ.(n.) காக்கை; crow.

**முகடு** *mugaḍu,* பெ.(n.) 1. உச்சி; top, highest part. *"முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவின்" (பெரும்பாண்.246). "திரைப்பிதிர் கடுப்ப முகடுகந் தேறி" (நற்.89:2).* 2. வீட்டின் மேற்கூரை (வின்.); ridge of a roof. 3. முகட்டுவளை பார்க்க; see *mugaṭṭu-*

valai. *"இகழ்ந்தார் முகட்டுவழி கட்டிற்பாடு" (ஆசாரக்.23).* 4. துறக்கவுலக (அண்ட) முகடு; roof the heavens. *"வானெடு முகட்டை யுற்றனன்" (கம்பரா. மருத்து.30).* 5. உயர்வு; superiority, excellence, acme. *"முனிமை முகடாய மூவா முதல்வன்" (சீவக.1609).* 6. வீட்டின் வாயில்; entrance of a house. *"முகட்டு வழியூண் புகழ்ந்தார்"* (ஆசாரக்.23). 7. சபைக்குறடு; platform, as of an assembly. *"பெரியோர்கள் சபையிலே முகடேறி வந்தது பிதற்றிடும் பெருமூடரும்" (அறப்.சத.35).* 8. தலை; head. *"முகடூர் மயிர்கடிந்த செய்கையாரும்" (தேவா.936, 10).* 9. ஒட்டகம் முதலியவற்றின் உயர்ந்த முதுகுப்புறம்; hump, as of camel etc. *"சொல்லத்தகு முகட் டொட்டகம்" (கனா.15).* 10. பாழ்; the region of Chaos,as beyond the worlds. *"நீர்மலிய முகடுபடு மண்ட கோளகை" (தக்கயாகப்.140).* 11. வீடுபேறு (தக்கயாகப்.140, உரை); salvation. 12. முலை முகம்; nipple.

தெ., க. மொகடு.

**முகடுதெற்று–தல்** *mugaḍu-teṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) கூரை வீட்டில் மோடு கட்டுதல் (வின்.); to construct the ridge of an ola roof.

*[முகடு + தெற்று–தல். தெற்றுதல் = மாற்றுதல், பின்னுதல், தொடுத்தல், மேடாக்குதல்.]*

**முகடுபடு–தல்** *mugaḍu-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) பாழாதல்; to be devastated, ruined. *"புறம்புநீர் மலிய முகடுபடு மண்டகோளகை" (தக்கயாகப்.140).*

*[முகடு + படு–தல். படுதல் = அழிதல், சாதல், சாய்தல், பாழாதல்.]*

**முகடுமுறி–த்தல்** *mugaḍu-muṟi-,* 4 செ.கு.வி.(v.i.) முகடுதெற்று–தல், (வின்.) பார்க்க; see *mugaḍu-teṟṟu-.*

**முகடோடி** *mugaḍōḍi,* பெ.(n.) முகட்டுவளை பார்க்க; see *mugaṭṭu-vaḷai.*

*[முகடு + ஓடு – முகடோடு → முகடோடி.]*

**முகண்டம்** *mugaṇḍam,*பெ.(n.) கடலை; gram, pulse.

**முகத்தல்** *mugattal,*பெ.(n.) முகத்தலளவை பார்க்க; see *mugattal-aḷavai.*

*[முக → முகத்தல்.]*

**முகத்தலளவு** *mugattal-aḷavu,* பெ.(n.) முகத்தலளவை (வின்.) பார்க்க; see *mugattal-aḷavai.*

*[முகத்தல் + அளவு.]*

**முகத்தலளவை** *mugattal-aḷavai,* பெ.(n.) நால்வகை யளவைகளுள் தவசம் முதலியவற்றை முகந்தளக்கும் அளவை (நன்.290, உரை); measure of capacity, one of four *aḷavai.*

*[முகத்தல் + அளவை.]*

நால்வகை அளவை : நீட்டலளவை, நிறுத்தல் அளவை, முகத்தல் அளவை, எண்ணல் அளவை.

முகந்தளக்கப்படும் பொருள்களுள் நெல் பெரும்பான்மையாகவும் சிறந்ததாகவுமிருத்தல் பற்றி முகத்தலளவை நெல்லிலக்கம் எனப்படும்.

கீழ் வருவது முகத்தலளவை :

| | | |
|---|---|---|
| 2 செவிடு | – | 1 பிடி |
| 4 செவிடு | – | 1 ஆழாக்கு |

| | | |
|---|---|---|
| 2 ஆழாக்கு | – | 1 உழக்கு |
| 2 உழக்கு | – | 1 உரி |
| 2 உரி | – | 1 நாழி |
| 8 நாழி | – | 2 குறுணி (மரக்கால்) |
| 2 குறுணி | – | 1 பதக்கு |
| 12 பதக்கு | – | 1 தூணி (காடி) |
| 3 தூணி | – | 1 கலம் |
| 400 குறுணி | – | 1 கரிசை (பறை) |

அரசு முத்திரையிட்ட அளவை நாழியும் மரக்காலும், அரச பண்டாரத்தில் அரசன் பெயரையும், கோயிற் பண்டாரத்தில் தெய்வப் பெயரையும் தாங்கியிருந்தன. சோழாந்தகன் நாழி, அருண்மொழித் தேவன் மரக்கால் என்பன அரசன் பெயரையும், ஆடவல்லான் மரக்கால் செப்புக்கால் திருச்சிற்றம்பலமுடையான் மரக்கால் என்பன தெய்வப் பெயரையும் தாங்கியவையாகும் (பழ. தமிழாட்சி. பக்.72)

**முகத்தலளவையாகுபெயர்** *mugattalaḷavai-āgu-peyar,* பெ.(n.) அளத்தற்குரிய பெயர் அளக்கும் கருவிக்கு ஆகி வருவது; the measurement's instrument name. *(எ.கா.) நாழி.*

*[முகத்தல் + அளவை + ஆகுபெயர்.]*

**முகத்தலை** *mugattalai,* பெ.(n.) முகதலை[1], 2 பார்க்க; see *mugatalai. "முகத்தலை யறிந்து உடுத்தாயிருந்ததே" (ஈடு, 8. 9:5).*

*[முகம் + தலை.]*

**முகத்தாணி** *muga-t-tāṇi,* பெ.(n.) அவல்; flaked rice (சா.அக.).

**முகத்தாராளம்** *muga-t-tārāḷam,* பெ.(n.) முகமலர்ச்சி (வின்.); cheerfulness.

*[முகம் + தாராளம்.]*

**முகத்தாலடி–த்தல்** *mugattāl-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) முகத்திலடி–த்தல் (வின்.) பார்க்க; see *muga-t-til-aḍi-.*

**முகத்தாவு** *mugattāvu,* பெ.(n.) முன்னிலை; presence of a person.

**முகத்தான்** *mugattāṉ,* வி.அ.(adv.) பொருட்டு; with the intention of, for the purpose of. *வழிபாடு இயற்றும் முகத்தான் தென்னாட்டு பயணம் மேற்கொண்டோம்.*

**முகத்திரியக்குநாடி** *muga-t-tiriyakku-nāḍi,* பெ.(n.) முகத்தில் குறுக்காயோடும் அரத்தக் குழாய் வகை (வின்.); transverse facial artery.

*[முகம் + திரியக்குநாடி.]*

**முகத்திரை[1]** *mugattirai,* பெ.(n.) 1. முகத்தை மறைக்கும் முறையில் போட்டுக் கொள்ளும் மெல்லிய துணி; veil. 2. உண்மை நோக்கத்தை மறைத்திருப்பது; mask. *அவன் முகத்திரை ஒரு நாள் விலகும்.*

*[முகம் + திரை.]*

**முகத்திரை[2]** *mugattirai,* பெ.(n.) முகத்தில் ஏற்படும் தோல் சுருக்கம்; furrous in the face - wrinkles in the face (சா.அக.).

*[முகம் + திரை.]*

**முகத்திலடி[1]–த்தல்** *mugattil-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. நேரே பழித்தல்; to abuse or reproach another to his face. 2. நேருக்கு நேர் கடுமுகங் காட்டிக் கண்டித்தல் (வின்.); to condemn or forbid by one's countenance. *முகத்தில் அடிப்பதுபோல் சொல்லி விட்டான்.*

*[முகத்தில் + அடி–த்தல்.]*

முகத்திலடி[2]–த்தல் *mugattil-aḍi-*,4 செ.கு.வி. (v.i.) அருவருப்பாதல் (இ.வ.); to be replusive or disgusting.

*[முகத்தில் + அடி–த்தல்.]*

முகத்திலருப்பமிறங்குகை *mugattil-aruppam-iṟaṅgugai,* பெ.(n.) முகத்திலரும்புகை பார்க்க; see *mugattil-arumbugai.*

*[முகத்தில் + அருப்பம் + இறங்குகை.]*

முகத்திலரும்புகை *mugattil-arumbugai,* பெ.(n.) மேலுதட்டில் மயிர் தோன்றுகை (வின்.); sprouting of hairs in the upper lip.

*[முகத்தில் + அரும்புகை.]*

முகத்திலீயாடாமை *mugattil-i-y-āḍāmai,* பெ.(n.) 1. கவலை கொண்ட முகங் கொள்ளுகை (உ.வ.); having a very anxious look. 2. அதிர்ச்சியாலோ உணர்ச்சி மேலீட்டாலோ முகம் நிலைக்குத்தி அசையாது நிற்றல்; due to shock or over feelings the face stunning.

*[முகத்தில் + ஈ + ஆடாமை.]*

முகத்திற்கரிக்கோடிடுகை *mugattiṟ-kari-k-kōḍiḍugai,* பெ.(n.) முகத்திலரும்புகை பார்க்க; see *mugattil-arumbugai.*

*[முகம் →முகத்தில் + கரிக்கோடிடுகை.]*

முகத்திற்கரிபூசு–தல் *mugattiṟ-kari-pūśu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. அவமானப் படுத்தல்; to despise, disgrace. 2. நம்ப வைத்து ஏமாற்றுதல்; deceit, treachery. *அவனை நம்பியிருந்தேன். முகத்தில் கரிபூசிவிட்டான்.*

*[முகத்தில் + கரிபூசு–தல். முகத்திற்கரிபூசி அழகைக் கெடுப்பது போல் அவமானம் செய்தல்.]*

முகத்தீடு *muga-t-tīḍu,* பெ.(n.) பிணத்தின் முகமூடிச் சீலை (வின்.); face cloth.

*[முகம் + இடு – முகமிடு →முகத்திடு → முகத்தீடு.]*

முகத்துக்குமுகம் *mugattukku-mugam,* பெ.(n.) நேருக்குநேர்; face to face.

முகத்துநாடி *mugattu-nāḍi,* பெ.(n.) முகத்திலோடும் அரத்தக் குழாய் (இங்.வை.); facial artery.

*[முகம் + அத்து + நாடி.]*

முகத்துரை *muga-t-turai,* பெ.(n.) தானே நேரில் நின்று பேசுகை; direct speech of a person. *'கொண்டெடுத்து மொழியப்படுவ தல்லது முகத்துரையாக நிகழ்த்தும் நிகழ்ச்சி...... இல்லாமை' (இலக்.வி.563, உரை).*

*[முகம் + அத்து + உரை.]*

முகத்துவாரம் *muga-t-tuvāram,* பெ.(n.) 1. கழிமுகம் (உ.வ.); mouth of a firth or river. 2. நுழைவு வாயில்; enterance. 3. முகத்தில் உள்ள துளைகள் (வாய், மூக்கு); face holes.

*[முகம் + Skt. துவாரம். Skt. துவாரம் →த. துளை, வழி.]*

முகத்தூண் *muga-t-tūṇ,* பெ.(n.) முகப்புத் தூண் (பெருங்.உஞ்சைக்.58:54); front pillar.

*[முகம் + அத்து + தூண்.]*

முகத்தெளிவு *muga-t-teḷivu,* பெ.(n.) முகக்களை பார்க்க; see *muga-k-kaḷai.*

*[முகம் + தெளிவு.]*

**முகத்தேங்காய்** *muga-t-tēṅgāy,* பெ.(n.) முகக்கயில் (யாழ்ப்.) பார்க்க; see *muga-k-kayil.*

*[முகம் + தேங்காய். உடைந்த தேங்காயில் கண்ணுள்ளதாகிய மேல் மூடி.]*

**முகத்தைக்காட்டு-தல்** *mugattai-k-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) இசைவின்மையை முகக் குறிப்பால் தோற்றுவித்தல்; to express unwillingness by facial signs. *'ஒரு செயலை ஏவினால் முகத்தைக் காட்டுகிறான்'.*

*[முகம்→முகத்தை + காட்டு-தல்.]*

**முகத்தைத்துடை-த்தல்** *mugattai-t-tuḍai-,* 4 செ.கு.வி.(v.i.) தேற்றுதல்; console.

*[முகம் →முகத்தை + துடை-த்தல்.]*

**முகத்தைமுறித்தல்** *mugattai-muṟittal,* பெ.(n.) நேருக்கு நேராக, முகத்தில் அடித்தாற்போல பேசிவிடுகை, எடுத்தெறிந்து பேசுகை; it's given abuse speech.

*[முகத்தை + முறித்தல்.]*

**முகத்தோற்றம்** *muga-t-tōṟṟam,* பெ.(n.) உணர்ச்சியைக் காட்டும் முகம்; facial expression, look. *நாட்டியக் கலையில் முகத்தோற்றம் என்பது இன்றியமையாத ஒன்றாகும். அவர் எப்போது பேச்சை நிறுத்துவார், வீட்டுக்கு எப்போது போவோம் என்கிற முகத்தோற்றத்துடன் காத்திருந்தனர்.*

*[முகம் + தோற்றம்.]*

**முகதரிசனம்** *muga-tarišaṉam,* பெ.(n.) பெரியோர் (அ) மதிப்புமிக்கவரின் முகத்தைக் காண்கை; sight as of a great person's face.

*[முகம் + **Skt.**தரிசனம். **Skt.** தரிசனம்→ த. காட்சி, தோற்றம்]*

**முகதலை**[1] *muga-talai,* பெ.(n.) 1. மகளிரின் சீலை முந்தானை (வின்.); the front or outer end of a saree. dist. fr. camatalai. 2. எதிர் முகமாக்குகை (வின்.); confrontation.

*[முகம் + தலை. தலை = நுனி, முடிவு.]*

**முகதலை**[2]**-த்தல்** *mugatalai-,* 4 செ. குன்றாவி. (v.t.) எதிர் முகமாக்குதல் (வின்.); to confront, face. *எங்களை முகதலைத்துவிடும் (வின்.).*

*[முகதலை[1] → முகதலை[2]-த்தல்.]*

**முகதலைப்பு** *muga-talaippu,* பெ.(n.) முகதலை[1] பார்க்க; see *muga-talai*[1].

*[முகம் + தலைப்பு.]*

**முகதவசம்** *muga-tavašam,* பெ.(n.) மொச்சை; field bean - *Dolichos lablab.*

**முகதா** *mugada,* பெ.(n.) முன்னிலை; presence of a person. *அவன் முகதாவிற் பேசினேன்.*

*[முகம் + தாவு - முகத்தாவு→முகதா.]*

**முகதாட்சிணியம்** *muga-tāṭciṇiyam,* பெ. (n.) ஒருவர் முன்னிலையிற் காட்டும் கண்ணோட்டம் (உ.வ.); delicacy, consideration for the feelings of a person in his presence.

*[முகம் + **Skt.** தாட்சிணியம். **Skt.** தாட்சிணியம் > த. கண்ணோட்டம், இரக்கம்.]*

**முகதாட்சிணை** *muga-tāṭciṇai,* பெ.(n.) முகதாட்சிணியம் (வின்.) பார்க்க; see *muga-tāṭciṇiyam.*

*[முகம் + **Skt.** தாட்சிணை.]*

முகதாவு *muga-tāvu,* பெ.(n.) முகதா (வின்.) பார்க்க; see *mugatā.*

முகந்தகம் *mugandagam,* பெ.(n.) ஈர வெங்காயம் (மூ.அ.); onion.

முகந்தண்டு *mugantaṇḍu,* பெ.(n.) முதுகின் நடுவேயுள்ள மணிக் கோவையைப் போன்ற எலும்பு; the vertibral column (சா.அக.).

*[முதுகுத்தண்டு → முகந்தண்டு.]*

முகந்தம் *mugandam,* பெ.(n.) முககந்தம் (அரு.அக.) பார்க்க; see *muga-kandam.*

*[முககந்தம் → முகந்தம். முககந்தம் = முருங்கை.]*

முகந்தரு-தல் *mugandaru-,* 20 செ.கு.வி. (v.i.) இரக்கம்காட்டுதல் (பட்சங்காட்டுதல்); to show favour.

*[முகம் + தரு-தல்.]*

முகந்திகா *mugandikā,* பெ.(n.) முருங்கை; drumstick.

மறுவ. முககந்தம்

முகந்திரி-தல் *mugan-diri-,* 2 செ.கு.வி. (v.i.) முகமாறு-தல் பார்க்க; see *muga-māṟu-.* *"முகந்திரிந்து நோக்கக் குழையும் விருந்து" (குறள், 90).*

*[முகம் + திரி-தல்.]*

முகந்திருத்து-தல் *mugan-diruttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) முகவாட்டந் தவிர்த்தல்; to compose one's countenance. *"இருந்து முகந்திருத்தி" (தனிப்பா.1, 94:11).*

*[முகம் + திருத்து-தல்.]*

முகந்துடை-த்தல் *mugan-tuḍai-,* 4 செ. குன்றாவி. (v.t.) முகமழி-த்தல் (புதுக். கல்.909) பார்க்க; see *mugam-maḻi-.*

*[முகம் + துடை-த்தல்.]*

முகநகை *muga-nagai,* பெ.(n.) முகமலர்ச்சி; laughing face.

*[முகம் + நகை.]*

முகநட்பு *muga-naṭpu,* பெ.(n.) வெளி நட்பு (உ.வ.); pretended, outward friendship.

*[முகம் + நட்பு.]*

முகநாடி[1] *muga-nāḍi,* பெ.(n.) முகக்குறி பார்க்க; see *muga-k-kuṟi.*

*[முகம் + நாடி.]*

முகநாடி[2] *muga-nāḍi,* பெ.(n.) முகத்தையும் மூக்கில் ஓடும் வளிநிலையையும் பார்த்து நோயின் தன்மை கூறும் நூல் (தஞ்.சர.3:191); a treatise on the diagnosis of diseases by an examination of the face and of the breath of the nostrils.

*[முகம் + நாடி.]*

முகநாளம் *mugaṉāḷam,* பெ.(n.) முகத்தின் குருதிக் குழாய்; facial vein.

*[முகம் + நாளம். நாளம் = குழல்]*

முகநிலை *muga-nilai,* பெ.(n.) இசைப் பாட்டு வகை (சிலப்.6:35, உரை); a kind of song.

முகநிலைப்பசாசம் *muga-nilai-p-pašāšam,* பெ.(n.) பெருவிரலும் சுட்டு விரலும் முகங்கூடி உகிர் விட்டு நிற்கும் நிலை (சிலப்.3:18, உரை); a gesture in which the thumb and forefinger are joined just below the nails.

*[முகநிலை + **Skt.** பசாசம்.]*

**முகநிறம்** *muga-niṟam,* பெ.(n.) முகத் தோற்றம்; complexion.

**முகநோக்கு-தல்** *muga-nōkku-,* 5 செ.கு.வி. (v.i.) நோக்கெதிர் நோக்குதல் (இலக்.வி.580, உரை, பக்.530); to meet face to face, to exchange glances.

*[முகம் + நோக்கு-தல். முகநோக்குதல் = முகத்தை நேருக்குநேர் நோக்குதல்.]*

**முகப்பட்டா** *muga-p-paṭṭā,* பெ.(n.) குதிரையின் முகத்திற்கு மாட்டும் அணிகலன் (கோவை.); an ornamental on the face of horse.

*[முகம் + பட்டா. படம் → பட்டா.]*



**முகப்படு-தல்** *muga-p-paḍu-,*20 செ.கு.வி. (v.i.) முன்றோன்றுதல்; to appear in front. *"விழி யிணைக்கு முகப்பட்டிடும்" (பாரத. நச்சுப்.19).*

*[முகம் + படு-தல்.]*

**முகப்படை** *muga-p-paḍai,*பெ.(n.) முகத்தில் ஏற்படும் தோல் நோய்; eczema.

*[முகம் + படை. முகத்தில் உண்டாகும் ஒருவகை நோய்.]*

**முகப்பணி** *muga-p-paṇi,* பெ.(n.) முகச்சவரம் பார்க்க; see *muga-c-cavaram.*

*[முகம் + பணி.]*

**முகப்பந்தல்** *muga-p-pandal,* பெ.(n.) வீட்டின் முன் போடும் பந்தல்; pandal in front of a house. *"முத்து வளைத்து முகப் பந்தலிட்டார்கள்" (சித்.நாய.46).*

*[முகம் + பந்தல்.]*

**முகப்பரு** *muga-p-paru,* பெ.(n.) இளைஞரின் முகங்களில் வெங்காயப் பூ போலும், இலவமுள்ளைப் போலும் அடி பருத்து முனையுள்ளதாகிய கொப்புளங்கள்; facial pimples amongst lads attaining maturity - *Acne.*

*[முகம் + பரு.]*

**முகப்பழக்கம்** *muga-p-paḻakkam,* பெ.(n.) அறிமுகம் (வின்.); acquaintance.

*[முகம் + பழக்கம்.]*

**முகப்பாக்கு** *muga-p-pākku,* பெ.(n.) பாக்கின் மேற்பகுதி (யாழ்ப்.); the upper part of an arecanut.

*[முகம் + பாக்கு.]*

**முகப்பிரியம்**[1] *muga-p-piriyam,* பெ.(n.) நாரத்தை; a citron fruit.

**முகப்பிரியம்**[2] *muga-p-piriyam,* பெ.(n.) மதிப்பு, மதிப்புரவு (மரியாதை) (வின்.); respect for persons.

*[முகம் + **Skt.** பிரியம்.]*

**முகப்பு** *mugappu,*பெ.(n.) 1. முன்னிலை; front. *"இருந்திடா யெங்கள் கண்முகப்பே" (திவ். திருவாய்.9. 2:7).* 2. முற்பகுதி; forepart,

frontis piece. 3. வீட்டின் முன்புறக் கட்டிடம்; porch, facade. *"முகத்தணிந்த முகப்பு" (அரிச்.பு. இந்திர.20).* 4. அணிகலன்களில் முன்புறத்தி லெடுப்பாகச் செய்யப்பட்ட பொருத்துவாய் முதலியன; front piece of a jewel. 5. முகதலை[1], 1 பார்க்க; see *muga-talai*[1],1. 6. வீடு, கட்டடம் முதலியவற்றின் வாயிலும் வாயிலை ஒட்டிய பகுதியும்; front part of a house, etc. *வீட்டின் முகப்பில் ஒரு நாய் ஓடியது.* 7. பார்வைக்கு முதலில் படும்படியாக அமைந்திருக்கும் பகுதி; face, facade of a house. *பழைய திரையரங்கம் எடுப்பான முகப்புக் கொண்டதாகப் புதுப்பிக்கப்பட்டது. விண்ணப்பிக்கும் பணியின் பெயரை உறையின் மேல் முகப்பில் எழுதவும். தலைவர் படத்தைச் சிற்றுந்தின் முகப்பில் வைத்துக் கட்டியிருந்தார்கள்.*

க. மொகப்பு

*[முல் → முள் → முளு → முழு → முகு → முக → முகப்பு (வே.க.).]*

**முகப்புமடை** *mugappu-maḍai,* பெ.(n.) தலைமடை; ridged cut.

*[முகப்பு + மடை. மடை = மதகு, மதகுப் பலகை.]*

**முகப்புற்று** *muga-p-puṟṟu,* பெ.(n.) முகத்திற் கட்டி வெடிக்கும் நோய் வகை; lupus.

*[முகம் + புற்று.]*

**முகப்பூச்சு** *muga-p-pūccu,* பெ.(n.) 1. முகத்தில் பூசிக் கொள்ளும் பசை அல்லது மாவுப் பொருள்; painting or powder for the face. *தெருக்கூத்தில் முகப்பூச்சு இன்றியமையாத ஒன்று. இரவு நாடகங்களில் கோமாளிக்கு மட்டுமல்லாமல் அரசனுக்கும் முகப்பூச்சு பூசப்படுகிறது.* 2. வெளிப்பகட்டு; ostentalious.

*[முகம் + பூச்சு.]*

**முகப்பொருத்தம்** *muga-p-poruttam,* பெ.(n.) 1. முகநட்பு (வின்.) பார்க்க; see *muga-naṭpu.* 2. முகராசி (யாழ்.அக.) பார்க்க; see *muga-rāśi.*

*[முகம் + பொருத்தம்.]*

**முகப்பொலி** *muga-p-poli,* பெ.(n.) கதிரினின்று உதிர்ந்த நெல்; paddy dropped from ears of corn.

*[முகம் + பொலி. பொலி = தூற்றாத நெற் குவியல்.]*

**முகப்பொலிவு** *muga-p-polivu,* பெ.(n.) முகக்களை பார்க்க; see *muga-k-kaḷai.*

*[முகம் + பொலிவு. பொல்→பொலி. பொலிவு = தோற்றப் பொலிவு, அழகு, முகமலர்ச்சி.]*

**முகப்போதரவு** *muga-p-pōtaravu,* பெ.(n.) இச்சகம் (வின்.); coaxing, flattery.

*[முகம் + போதரவு. போதரவு = இச்சகம், முகமன்.]*

**முகபங்கம்** *muga-baṅgam,* பெ.(n.) இலச்சை (வின்.); shame.

*[முகம் + பங்கம். **Skt.** பங்கம் > த. குறை, பழுது, கேடு. இலச்சை = வெட்கம், நாணக் கேடு, மானக்கேடு.]*

**முகபடாம்** *muga-paḍām,* பெ.(n.) யானையின் முகத்தில் இடும் ஒப்பனை செய்த (அலங்காரத்) துணி; ornamental cloth on

the face of an elephant. *"முகபடாமன்ன மாயை நூறி" (தாயு. மௌன.1).*

*[முகம் + படாம். படாம் = சீலை, திரைச்சீலை, முகபடாம்.]*




முகபரிச்சயம் *muga-pariccayam,* பெ.(n.) முகப்பழக்கம் (வின்.) பார்க்க; see *muga-p-paḻakkam* .

*[முகம் + **Skt.** பரிச்சயம்.]*

முகபாகம் *muga-bāgam,* பெ.(n.) முகத்தின் பகுதி; facial region.

*[முகம் + பாகம்.]*

முகபாடம் *muga-bāḍam,* பெ.(n.) வாய்ப் பாடம் (வின்.); that which is learnt by heart.

*[முகம் + பாடம். பாடம் = படிக்கும் நூற்பகுதி, மூலபாடம், படிப்பு.]*

முகபாவம் *muga-bāvam,* பெ.(n.) முகத் தோற்றம் பார்க்க; see *muga-t-tōṟṟam.*

*[முகம் + **Skt.** பாவம்.]*

முகபூரணம் *muga-pūraṇam,* பெ.(n.) முகக்களை பார்க்க; see *muga-k-kaḷai*

*[முகம் + **Skt.** பூரணம்.]*

முகம்[1] *mugam,* பெ.(n.) 1. தலையில் நெற்றி முதல் மோவாய் வரையுள்ள முன்புறம்; face. *"முகத்தா னமர்ந் தினிது நோக்கி" (குறள், 93). முகம் பார்க்கும் கண்ணாடி, அரிமா முகம் பொறித்த காசு.* 2. வாய்; mouth. *"மொழிகின்ற முகத்தான்" (கம்பரா. வாலிவ.74). "வாண்முகந் துமிப்ப வள்ளிதழ் குறைந்த" (குறுந்.227:2). "விம்முறு கிளவிய ளென்முக நோக்கி" (நற்.33:10).* 3. முன்பு; front. *"ஈன்றாள் முகத்தேயு மின்னாதாம்" (குறள், 923).* 4. குத்துவிளக்கு போன்றவற்றில் திரியிட்டு எரிக்கும் பகுதி; that part of the lamp, such as *kuttu-viḷakku*. *ஐந்து முக விளக்கு, முற்றத்தைப் பார்க்கும்படி விளக்கினைத் திருப்பி வை.* 5. இயல்பு, குணம்;one's nature. *இது அவளுடைய முகம் இல்லை. முகத்திலே விழித்தாலும் மூன்று நாளைக்கு சோறு அகப்படாது (பழ.). முகத்துக்கு அஞ்சி மூத்தா ரோடு போனால் குலத்துக்கெல்லாம் ஈனமாம் (பழ.). முகத்துக்கு முகம் கண்ணாடி (பழ.).*

*[முல் – தோன்றுதல் கருத்து. முள்→முள→ முளை = வித்திலிருந்து வெளிப்படும் முதல் வெளிப்பாடு. முள்→முளு→முழு→முகு = முகிழ். முகிழ்–தல் = அரும்புதல். முகு→முகம் = மூக்கும் வாயும் சேர்ந்த முன்பகுதி. முகம்→முகமை = முதன்மை, தலைமை.முகம் = முன்பக்கம், தலையின் முன்பக்கம், முகத்தின் முன் நீண்டுள்ள மூக்கு, நுனி, தொடக்கம், முன்பு, முதன்மை. இவையெல்லாம் முன்மைக் கருத்தைப் பொதுவாகக் கொண்டவை. இப்பொருள்கட்கெல்லாம் அடிப்படை தோன்றற் கருத்தே. இயல்பான தோற்றமும் இயக்கமும் முன்னோக்கியே நிகழ்வதால். ஒரு பொருள் தோன்றம் போது அதன் முன்புறமே தெரியும். வடமொழியில் முக என்னுஞ் சொற்கு மூலமில்லை. வடவர் அச்சொற்கு முகம் என்பதைவிட வாய் என்பதையே சிறப்புப்*

*பொருளாக் கொள்வதால் பின்வருமாறு பொருந்தப் பொய்த்தலாக மொழிப் பொருட் காரணங் கூறுவதுண்டு. முக = மு + க (kha). க = கன் = தோண்டு. முக = தோண்டப்பட்ட கிடங்கு போன்ற வாய். இது ஒரு நகையாட்டுச் செய்தியாக இருப்பதொடு, கன் (khan) என்னும் சொல்லும் தென் சொல்லாகவே இருத்தல் காண்க. கல்லுதல் = தோண்டுதல். கல்→கன்→கன்னம் = சுவரில் தோண்டும் துளை (வ.மொ.வ.236, 237).]*

தமிழ், கடந்த மூவாயிரம் ஆண்டுகளாக அகப்பகையாலும் புறப்பகையாலும், மறையுண்டும் குறையுண்டும் வந்திருந்தும் ஐரோப்பாவிலும் இங்கிலாந்திலும் ஒருசில நடுநிலை மொழி யாராய்ச்சியாளர் தமிழ் முகம் திரும்பி அதன் தொன்மையையும் முன்மையையும் வடமொழிக்குச் சொல் வழங்கிய வன்மையையும் உணர்ந்து, அதை உலகனுக்குணர்த்த முன் வந்திருப்பது மிக மகிழத்தக்கதே. ஆயினும்; ஏமாற்றுவதிலும் அறைபோவதிலும் துறைபோய ஒருசில புறத்தமிழரும் போலித் தமிழரும், இன்றும், முகம் என்னும் சொல் வடசொல்லென்று வலிக்கத் துணிவது எத்தனை இரங்கத்தக்க செய்தியாம்!

முகம் என்னும் சொல் தென்சொல்லேயென ஒன்பான் ஆண்டுகட்கு முன்னரே என் 'முதற்றாய்மொழி'யில் விளக்கியிருப்பினும், அதனைப் பாராமையாலோ, ஆராய்ச்சி யின்மையாலோ, வடமொழி வெறிபற்றிய தமிழ் வெறுப்பாலோ, அடிமைத்தனத்தினாலோ, 'முகம்' வடசொல்லென இன்றும் ஒருசார் தமிழாசிரியர் வகுப்பிற் சொல்வதும், அதுகேட்டு மாணவர் மயங்குவதும், சில தேர்வாளர் மாணவர் போட்டித் தேர்வுகளில் முகம் எம்மொழிச் சொல் என வினவி உண்மையுரைப்பாரைத் தவறுவிப்பதும் வழக்கமாயிருந்து வருகின்றன. இது பலர்க்கும் இடர்ப்பாட்டை விளைத்தலின், இனிமேல் இப் பொருள்பற்றி ஐயுறவும் ஏமாற்றும் தருக்கமும் இல்லாதவாறு, முகம் என்பது தென்சொல்லேயென முடிந்த முடிபாக நாட்டுதற்கு எழுந்ததிக் கட்டுரையென்க.

முகம் என்பது தென்சொல்லேயெனக் கோடற்கு மறுக்கொணாச் சான்றுகள் வருமாறு :–

(1) தமிழில் மூலமும் பொருளும் முற்றும் பொருந்துதல் :–

முகம் (முகு + அம்) = முன்பு, முன்னுறுப்பு, முன்பக்கம்.

முனை, நுனி, தோற்றம்.

முகப்பு, முகனை, முகச்சரக்கு, முகதலை, முகமண்டபம், முகமனை, முகவாசல், முகவுரை, உரைமுகம், துறைமுகம், நூன்முகம், போர்முகம் முதலிய வழக்குகளை நோக்கின் முன்மைக் கருத்தே முகம் என்னும் சொல்லின் வேர்ப்பொருள் என்பது விளங்கும்.

உயிரிகளின் (பிராணிகளின்) முன்பக்கத்திற் சிறந்த உறுப்பு தலையின் முன்புறமாதலின், அது முகம் எனப்பட்டது.

உயிரிகளின் இயல்பான இயக்கம் அல்லது தோற்றம் முன்னோக்கியே நிகழ்தலின் முன்மைக் கருத்தில் தோற்றக் கருத்துத் தோன்றிற்று. எ–டு:

முகம் = தோற்றம்

முகஞ்செய்தல் = தோன்றுதல்

முகம்பெறுதல் = தோன்றுதல்

முகு + உள் = முகுள்–முகிள் = அரும்பு

முகிள் + அம் – முகிளம் = அரும்பு.

அரும்புதல் = தோன்றுதல்

முகுள் – (முகுர்) – முகுரம் = தளிர்

முகிள் – முகிழ் = அரும்பு. முகிளம் – முகிழம் = மலரும் பருவத்தரும்பு.

முகிழ்த்தல் = தோன்றுதல்

"மூவகை யுலகு முகிழ்த்தன முறையே" (ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்து).

முகு + ஐ – முகை = அரும்பு, முகைதல் = அரும்புதல், முகைத்தல் = அரும்புதல்.

முகு–முக்கு–மொக்கு = அரும்பு. மொக்கு – மொக்குள் = அரும்பு.

முகம் என்னும் சொல்லில் முகு என்னும் பகுதியும், முகு என்னும் பகுதியில் மு என்னும் எழுத்தும், மு என்னும் உயிர்மெய்யில் உ என்னும் உயிரும், உயிர்நாடியான உறுப்புகளாம்.

முன், முந்து முதலிய சொற்களில் முகரமும், ஊங்கு, உங்கு, உங்ஙன், உது, உவன் முதலிய சொற்களில் ஊகார உகரங்களும், அடிப்படையாயிருந்து முன்மைக் கருத்தை யுணர்த்துதல் காணக்.

முகம் – முகர் – முகரை – மோரை.

முகர் – முகரி = முன்புறம், தொடக்கம்

முகம் – முகன் – முகனை – மோனை.

முகு – முக – முகப்பு.

2) வடமொழியிற் கூறும் மூலமும் பொருளும் ஒரு சிறிதும் பொருந்தாமை :

வடமொழியில் முகம் என்பது முக்ஹ (mukha) என்றே வழங்கினும், அதனை வடசொல்லாகக் காட்டல் வேண்டி, னகர (நகர) மெய்யை ஈற்றிற் சேர்த்து முக்ஹன் (mukhan) என்னும் வடிவைப் படைத்து; அதில் 'மு' என்னும் முதன்மையான பகுதியைப் பொருளற்ற முன்னொட்டாக (Prefix)த் தள்ளி, எஞ்சிய க்ஹன் (khan) என்னும் கூற்றைத் தோண்டுதற் பொருள் தரும் வினைப்பகுதியாக்கி, தோண்டுதல், தோண்டப்பட்ட கிடங்கு, கிடங்கு போனற் வாய், வாயுள்ள இடம் (முகம்) என, முறையே முகம் என்னும் சொற்குப் பொரு ளுரைப்பர் வடநூலார்.

இது பகுத்தறிவிற்குச் சற்றும் பொருந்தாமையொடு.

*"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று,*

*சூழினுந் தான்முந் துறும்" (குறள், 380)*

என்னும் தெய்வத் திருமறைக்கேற்ப, மீண்டும் முகம் என்பது தென்சொல்லே யென்பதை வலியுறுத்தல் காண்க.

முகம் – முகன் (கடைப்போலி)

இனி, கன் என்னும் சொல்லும் தென் சொல்லே.

கல் – கன். கல்லுதல் = தோண்டுதல். கன் – கன்னம் = தோண்டுதல், சுவரைத் துளைத்துத் திருடுதல்.

லகரம் னகரமாகத் திரிதல் இயல்பு.

ஒ.நோ: ஆல் – ஆன் (3ஆம் வேற்றுமை யுருபு).

மேல – மேன.

(3) வடமொழியிலும் முக்ஹ என்பது முகம் என்னும் பொருளில் வழங்கல்

எ–டு: முக்ஹ + கமல = முகத் தாமரை (தாமரை முகம்)

முக்ஹ என்னும் சொற்கு வடமொழியில் வாய் என்பதேர முதன்மைப் பொருளாகக் கொள்ளினும், முகம் என்னும் பொருட்கும் வட்டஞ்சுற்றி வழியே வருதல் காண்க.

(4) தொடர்புடைய தென் சொற்கள்:

தலையில் முகம் முன்புறமா யிருத்தல்போல் முகத்தில் மூக்கு முன்னுறுப்பா யிருத்தலால், முன்மைக் கருத்தை அடிப்படையாகக் கொண்ட முகம் என்னும் சொல் தமிழில் மூக்கையும் உணர்த்தும்.

முகம் – முக, முகத்தல் = மூக்கால் மணம் நுகர்தல்.

முக – மோ – மோப்பு – மோப்பம்

முகம் – முகர், முகர்தல் = மோத்தல், முகர் – மோர்.

முகு – முக்கு – மூக்கு

மூக்கு – முக்கை = ஆறு திரும்பும் மூலை.

(5) எதுகை வடிவான இனப்பொருட் சொற்கள் :

முகு என்னும் அடிக்கு எதுகையான நுகு, புகு முதலிய அடிகளும், முன்மைக் கருத்தின் வழிப்பட்ட தோன்றற் கருத்தை யுணர்த்துவதாகும்.

நுகு – நுகும்பு = பனையின் இளமடல்

நுகு – நுங்கு = இளம் பனங்காய்ச் சுளை அல்லது கொட்டை.

நுகு – (நகு) – நாகு = இளமை

புகு – பூ, பூத்தல் = தோன்றுதல்

"பூந்தலிற் பூவாமை நன்று"

பூ – போ – போத்து = இளங்கிளை.

போத்து – போந்து = பனங்குருத்து

போந்து – போந்தை = பனங்குருத்து

புகு – (பொகு) – பொகில் = அரும்பு

பொகில் –போகில் = அரும்பு

ழகரம் சில சொற்களில் ககரமாகத் திரியும்.

எ–டு : தொழுதி – தொகுதி. முழை – முகை.

இங்ஙனமே, நுழு, புழு, முழு முதலிய ழகர உயிர்மெய்யீற்றுச் சொற்களும் ககர வுயிர் மெய்யீற்றினவாய்த் திரிந்திருத்தல் வேண்டும்.

முள்–முழு–முகு. நுள்–நுழு–நுகு.

முள்–முளை, முளைத்தல் = தோன்றுதல்.

நுழுந்து = இளம்பாக்கு, நுழாய் = இளம்பாக்கு.

ஆயிரக்கணக்கான பழந் தென்சொற்கள் அழிந்துபோயினமையால், பல கருத்துகளை இணைக்கும் அண்டுகளை எல்லா மொழிமுதல் அடிகட்கும் காட்டமுடிந்திலது.

(6) வடமொழியிற் பிற சொல்லிருத்தல் :

முகத்தைக் குறித்தற்கு ஆனனம், வதனம், முதலிய பிறசொற்கள் வடமொழியிலுள.

(7) தென்மொழியிற் பிற சொல்லின்மை :

தென்மொழியில் முகத்தைக் குறித்தற்குத் தொன்றுதொட்டு வழங்குவதுக முகம் என்னும் சொல் ஒன்றே.

(8) தென்சொல்வளம் :

இலை, தாள், தோகை, ஓலை என ஒரே, நிலைத்திணைச் சினையை நால் வகைப்படுத்தவும், வடு (மா), மூசு (பலா), கச்சல் (வாழை) என முக்கனிகட்கும் பிஞ்சுநிலையில் சிறப்புச்சொல் வழங்கவும் தெரிந்த மதிமாண் பண்டைத் தமிழர்க்கு முகத்தைக் குறித்துச் சொல்லில்லையென்பது, பகுத்தறிவுடையார்க்குக் கூறும் கூற்றன்று.

(9) வடமொழியில் தென்சொலுண்மை :

ஆயிரக்கணக்கான தென்சொற்கள் வடமொழியில் வெளிப்படையாய் வழங்கிவருவதால்

வடமொழி தென்சொல்லைக் கடன் கொள்ளா தென்னும் பித்தர் கூற்றை எள்ளி யிகழ்க.

(10) மேலையாரியத்தில் முகம் என்னும் சொல்லின்மை :

மேலையாரிய மொழிகளுள் ஒன்றிலேனும் முகம் என்னும் சொல்லின்மையால், முகம் என்பது தென்பாலி முகத்துத் தோன்றிய தென் சொல்லேயென ஓங்கி அறைக.

*"பொய்யுடை யொருவன் சொல்வன் மையினால்*
*மெய்போ லும்மே மெய்போ லும்மே*
*மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையாற்*
*பொய்போ லும்மே பொய்போ லும்மே"* – பாவாணர் தமிழ்ப்பொழில் மடங்கல் (ஆவணி) 1958.

**முகம்**[2] *mugam,* இடை.(part.) 1. இயங்குவதை அல்லது இருப்பதைக் குறிப்பிடும் போது திசை என்ற பொருள் வரும்படிச் சொல்வது; direction, side to which one turns or keeps one's face. *அவர் என் முகமாகத் திரும்பி ஏதோ சொன்னார். ஆறு தென்முகமாக ஓடுகிறது.* 2. பெயரெச்சத்தின் பின் வகை அல்லது வண்ணம் என்ற பொருள்வரும்படி பயன்படுத்துவது; by way of. *வரிகட்டாமல் ஏய்ப்பவர்களை எச்சரிக்கும் முகமாக இந்த ஆணை வெளியிடப் பட்டுள்ளது. கடற்கரைக்கு மக்கள் வந்தமுகமாக இருந்தனர்.*

*[முகு→முகம்.(வே.க.).]*

**முகம்**[3] *mugam,*பெ.(n.) 1. வாயில் (சங்.அக.); entrance, as of a house. 2. சுழி (பிங்.); back water. 3. இடம் (திருக்கோ.356, உரை); place.

*[முகு→முகம் (வே.க.).]*

**முகம்**[4] *mugam,*பெ.(n.) 1. கட்டியின் முனை; point of the abscess or boil etc. 2. இந்திர கோபப் பூச்சி; cochineal insect (பரி.அக.). 3. தொடக்கம்; commencement as in 'urukkumugam' (உருக்குமுகம்).

*[முகு → முகம் (வே.க.).]*

**முகம்**[5] *mugam,* பெ.(n.) முகப்பு, அணிகலன்களின் முன்புறத் தோற்றம்; facet of the ornaments. *அணிகலன்களின் தோற்றப் பொலிவாகவும், புடைப்பாகவும் மணிகள் (இரத்தினங்கள்) வைத்து இழைக்கப்படும் முகப்பு. "முத்தின் பட்டிகை ஒன்றினால்... பொன்னின்பூ ஆறும்முகம் ஒன்றும்" (தெ.கல். தொ.5, கல்.521).*

*[முகு→முகம் (வே.க.).]*

**முகம்**[6] *mugam,*பெ.(n.) 1. நோக்கு; look, sight. *'புகுமுகம் புரிதல்' (தொல். பொருள். 261).* 2. ஊழ்கம் (தியானம்); meditation. *"செல்வன்... இரண்டுருவ மோதி நேர்முக நோக்கினானே" (சீவக.1289).* 3. முகமன்; praise, flattery. *"முகம் பலபேசி யறியேன்" (தேவா.742, 2).* 4. மூலம்; instrumentality. 5. வேள்வி (யாகம்); sacrifice. *"மறைவழி வளர்முகமது சிதைதர" (தேவா.573, 5).*

*[முகு→முகம் (வே.க.).]*

**முகம்**[7] *mugam,*பெ.(n.) 1. காரணியம் (உ.வ.); cause, reason. 2. ஏழாம் வேற்றுமையுருபு; ending of seventh case. *"இனிய செய்தி நின்னார் வலர் முகத்தே" (புறம்.12).* 3. நாடகச் சந்தி ஐந்தனுள் முதலிலுள்ள சந்தி (சிலப்.3:13, உரை); the first juncture or opening of a drama, one of five *nāṭaka-canti.* 4. உவம உருபு (சீவக.298); particle

of comparison. *கிளிமுகக் கிளவி (சீவக. 298).*

*[முகு →முகம் (வே.க.).]*

**முகம்**[8] *mugam,* பெ.(n.) 1. நடிகர்கள் அரங்கத்திற்கு வருமுன் நிகழும் கூத்து (சிலப்.3:147, உரை); opening dance before the appearance of the actors on the stage. 2. இயல்பு; character, nature. *"களி முகச் சுரும்பு" (சீவக.298).* 3. நிலை (வின்.); state, condition. 4. பக்குவம்; full-growth, maturity. *"பயம்பின்வீழ் முகக்கேழல்" (மதுரைக்.295).*

*[முகு →முகம் (வே.க.).]*

**முகம்**[9] *mugam,* பெ.(n.) 1. முதன்மை (வின்.); chieftaincy. 2. ஊர் (கிராம) முதலியவற்றின் பகுதி (நாஞ்.); part, as of a town or village.

*[முகு →முகம் (வே.க.)]*

**முகம்**[10] *mugam,* பெ.(n.) வகை; kind, class. *"பலமுகங்களான கலக்கங்கள் நேரிட்ட சமயத்தில்" (ரகஷ்ய.4).*

*[முகு →முகம் (வே.க.)]*

**முகம்**[11] *mugam,* பெ.(n.) 1. மேலிடம் (வின்.); head, top. 2. நுனி; point. *"அமின் முகக்கணை" (கம்பரா.ஆற்றுப்.14).* 3. வடிவு; form, shape. *"கூன்முகமதி" (பிரபுலிங். கைலாச.3).* 4. தோற்றம்; aspect, appearance. *"களிமுகக் களிறன்னான்" (சீவக.298).*

*[முகு →முகம் (வே.க.)]*

**முகம்குளுப்பைதட்டல்** *mugam-kuḷuppai-taṭṭal,* தொ.பெ.(vbl.n.) முகம் வீங்கல்; face becoming swollen.

*[முகம் + குளுப்பை + தட்டல்.]*

**முகம்கொடுத்துப்பேசு–தல்** *mugam-koḍuttu-p-pēšu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஈடுபாடு காட்டி மதித்துப் பேசுதல்; talk directly and in a friendly way. *அவர் என்னிடம் முகம் கொடுத்துப் பேசி நீண்ட நாட்கள் ஆகிறது என வருத்தப்பட்டுக் கொண்டான்.*

*[முகம் + கொடுத்து + பேசு–தல்.]*

**முகம்சுண்டல்** *mugam-šuṇḍal,* பெ.(n.) முகம் சுளிக்கை; frowning.

**முகம்சுளி–த்தல்** *mugam-šuḷi-,* 4 செ. குன்றாவி.(v.t.) அருவருப்பு முதலியவற்றால் முகத்தில் ஏற்படும் சுருக்கம்; screw up one's face as an expression of dislike, disgust, etc. *தன் முது சேறுபட்டுவிட்டது கண்டு முகம் சுளித்தான்.*

*[முகம் + சுளி–த்தல்.]*

**முகம்செத்துப்போ–தல்** *mugam-šettu-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) முகம் களை இழத்தல்; fall of the face. *திருமண வீட்டில் நுழைந்தவரை 'நீங்கள் யார்' என்று கேட்டதும் அவருடைய முகம் செத்துப் போயிற்று.*

*[முகம் + செத்து + போ–தல்.]*

**முகம்பார்–த்தல்** *mugam-pār-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. நேர்நோக்குதல்; to look one in the face. 2. அன்பு செய்தல் (வின்.); to show kindness to. 3. நன்கு மதித்தல் (சிலப்.11:182, அரும்); to treat with regard. 4. முகம் நோக்கி இனம் அறிதல் (உ.வ.); to recognise faces of persons, as a child.

*[முகம் + பார்–த்தல்.]*

**முகம்பார்வை** *mugam-pārvai,* பெ.(n.) பழைய வரிவகை; an ancient tax. *"ஜோடி முகம்பார்வை, சுங்க சாலை, சம்படம்" (I.M.P. Cg.1095).*

*[முகம் + பார்வை.]*

**முகம்புகு-தல்** *mugam-pugu-,* 2 செ.கு.வி. (v.i.) 1. முகமலர்-தல் பார்க்க; see *mugam -malar-. "முகம்புகன் முறைமையின்" (தொல்.பொருள்.152).* 2. இரக்கத்திற்காக (தயைக்காக) எதிர் சென்று நிற்றல்; to approach for favours. *"முகம் புகுத லாற்றுமோ மேல்" (நாலடி, 306). "முகம் புகுகின்ற தோழிக்கு" (ஐங்குறு. 20, துறைக் குறிப்பு).*

*[முகம் + புகு-தல். புகுதல் = அடைதல், தாழ்நிலை அடைதல், செல்லுதல், நுழைதல்.]*

**முகம்புடை-த்தல்** *mugam-pudai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. துயரக் (துக்கக்) குறியாக முகத்திலடித்துக் கொள்ளுதல்; to beat one -self on the face, as an expression of grief. *"பலசன முகம்புடைத் தகங்குழைந் தழவே" (சீவக.2758).* 2. கட்டி உடைவதற்கு முன் வாய் வைத்தல்; to gather, as the head of a boil.

*[முகம் + புடை-த்தல். புடைத்தல் = அடித்தல், குத்துதல்.]*

**முகம்புதை-த்தல்** *mugam-p-udai-,* 4 செ.கு.வி. (v.i.) முகத்தை மூடிக்கொள்ளுதல்; to cover one's face. *"கையா னகை முகம் புதைத்த தோற்றம்" (சீவக.2461).*

*[முகம் + புதை-த்தல். புதைத்தல் = மறைத்தல், ஒளித்து வைத்தல். வாய்புதைத்தல், அமிழ்த்துதல்.]*

**முகம்பெறு-தல்** *mugam-peṟu-,* 21 செ. கு.வி.(v.i.) தோன்றுதல்; to rise, as the sun; to appear. *"சுடர் முகம் பெற்றபோதே" (சீவக.1404).*

*[முகம் + பெறு-தல். பெறுதல் = அடைதல், பிறப்பித்தல், தோன்றுதல்.]*

**முகம்மதியர்** *mugammadiyar,* பெ.(n.) இசுலாம் மதத்தினர்; followers of the religion of Muhammad.

*[முகம்மது → முகம்மதியர்.]*

**முகம்மது**[1] *mugammadu,* பெ.(n.) முகமதுநபி பார்க்க; see *mugammadu-nabi.*

**முகம்மது**[2] *mugammadu,* பெ.(n.) 20ஆம் நூற்றாண்டில் மெய்ஞானக் குறவஞ்சி என்ற நூலை இயற்றியவர் புலவர்; author of *mey-ñāṉa-k-kuṟavañji.*

**முகம்மதுஉசேன்** *mugammadu-ušēṉ,* பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் தவுக்கிடு மாலை, பெண்புத்தி மாலை, ஆகிய நூல்களை இயற்றிய புலவர்; author of *peṉ-putt-mālai* and *tavukkidu-mālai.*

*[முகம்மது + உசேன்.]*

**முகம்மதுநபி** *mugammadu-nabi,* பெ.(n.) முகமதிய மத அருட்பணிப் பெருந்தகையான முகமது நபிகள் நாயகம்; Muhammad the Prophet of Islam.

*[முகமது + நபி.]*

**முகம்மழி-த்தல்** *mugam-maḻi-,* 4 செ. குன்றாவி.(v.t.) முகத்திலுள்ள மயிரை (தாடி, மீசை) நீக்குதல்; to shave one's face.

*[முகம் + மழி-த்தல்.]*

முகம்வை–த்தல் *mugam-vai-,* 4 செ.கு.வி. (v.i.) முகங்காண்(ணு)–தல் பார்க்க; see *mugaṅ-kāṇ-,*

*[முகம் + வை–த்தல்.]*

முகமண்டகம் *muga-maṇḍagam,* பெ.(n.) முகமண்டபம் பார்க்க; see *muga-maṇḍabam.* *"விட்டுணுக் கிருகத்து முகமண்டகத்தே கூடியிருந்து" (தெ.இ. கல்.தொ.3:12).*

*[முகம் + மண்டகம். மண்டகம் = மண்டபம், கற்கட்டடம்.]*

முகமண்டபம் *muga-maṇḍabam,* பெ.(n.) கோயிலின் முன்மண்டபம்; front hall in a temple. *"முகமண்டபஞ் செய்து நிரந்தளித்தான்" (செந்.4, பக்.335).*

*[முகம் + மண்டபம். மண்டபம் = கற்கட்டடம்., சாவடி, ஒப்பனை செய்யப்பட்ட பந்தல்.]*

முகமண்டலம் *muga-maṇḍalam,* பெ.(n.) தலையில் நெற்றிமுதல் மோவாய் வரையுள்ள முன்புறம்; face.

*[முகம் + மண்டலம்.]*

முகமதியர் *mugamadiyar,* பெ.(n.) முகமது நபியை முழுமுதற்கடவுளாக எண்ணி வழிபடுபவர்கள்; followers of the Prophet muhammad.

*[முகமது → முகமதியர்.]*

முகமயக்கு *muga-mayakku,* பெ.(n.) 1. பார்வையால் மயக்கும் கலை (வித்தை) (சங்.அக.); bewitching by looks, a magic art. 2. முகமாயம் பார்க்க; see *muga-māyam.*

*[முகம் + மயக்கு.]*

முகமலர்–தல் *muga-malar-,* 2 செ.கு.வி. (v.i.) முகப் பொலிவு கொள்ளுதல்; to wear a cheerful countenance. *"பூம்புன லூரன் புக முகமலர்ந்த..... கோதை" (திருக்கோ.363, கொளு.).*

*[முகம் + மலர்–தல். மலர்தல் = தோன்றுதல், பொலிவு கொள்ளுதல்.]*

முகம் மலர் போன்றதென்பதும் முகம் மேனோக்கிக் கிடத்தல் மொட்டு விரிந்த நிலையையும் முகங் குப்புறக் கிடத்தல் மலர்ந்த பூக்குவிந்த நிலையையும் ஒக்குமென்பதும் கருத்து (வே.க.)

முகமலர்ச்சி *muga-malarcci,* பெ.(n.) முகத்தில் மகிழ்ச்சி தோன்றுகை; cheerfulness of countenance. *"முக மலர்ச்சி கூறல்" (திருக்கோ.363, தலைப்பு).*

*[முகம் + மலர்ச்சி. மலர்ச்சி = மகிழ்சி, மலர்கை.]*

முகமழி–த்தல் *mugamaḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) முகம்மழி–த்தல் பார்க்க; see *mugam-maḻi-.*

*[முகம் + அறி–தல். அறிதல் = புதியதாய்க் கண்டுபிடித்தல், பட்டறிதல், தோன்றுதல்.]*

முகமறி–தல் *mugam-aṟi-,* 2 செ.குன்றாவி. (v.t.) அறிமுகமாதல்; to be acquainted with. *"முகமறியா விருந்தொன்று" (இலக். வி.555, உதா).*

முகமறு–த்தல் *mugam-aṟu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. இரக்கமின்றிப் பேசுதல்; to speak impartially. *முகமறுத் துறவாடு.* 2. கணக்காய்ப் பேசுதல்; to speak accurately.

*[முகம் + அறு–த்தல்.]*

**முகமன்** *mugamaṉ,* பெ.(n.) 1. ஒருவரைப் புகழ்ந்து கூறும் சொற்கள், முகப்புகழ்ச்சி; flattery. *"முருகென உணர்ந்து முகமன் கூறி" (அகநா.272:13).* 2. ஒருவரை நலம் உசாவி வேண்டியோ அல்லது விருந்து போன்றவை கொடுப்பதற்காகவோ சொல்லப்படுவது; civilities, greetings. *விருந்தினர்களை முகமன் கூறி வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றனர்.* 3. பண்பட்ட பழக்க வழக்கம்; civility, politeness. *"முன்னையிற் புனைந்து முகம னளித்தும்" (கல்லா.13).* 4. வழிபாடு (துதி); praise. *"புகழ்ந்துமுன் னுரைப்பதென் முகம்மனே" (தேவா.863, 3).*

*[முகம் → முகன்.]*

**முகமா-தல்** *mugam-ā-,* 6 செ.கு.வி. (v.i.) ஏற்றுக் கொள்ளுதல், உடன்படுதல்; to agree. *'தான் முற்கூறியதற்கு முகமாகாமை கண்டு' (சீவக.1120, உரை).*

*[முகம் + ஆ-தல்.]*

**முகமாட்டம்** *mugam-āṭṭam,* பெ.(n.) 1. முகத்தைக் காட்டுகை (வின்.); showing one's face. 2. ஒருதலைச் சார்பு (பாரபட்சம்) (வின்.); partiality. 3. மதிப்பு (வின்.); respect for persons. 4. முகமன், 1 (யாழ்.அக.) பார்க்க; see *mugamaṉ.*

*[முகம் + ஆட்டம்.]*

**முகமாயக்காரி** *muga-māya-k-kāri,* பெ.(n.) முகக்கவர்ச்சியுள்ளவள் (வின்.); woman of a fascinating looks or charming face.

*[முகம் + மாயக்காரி. மாயக்காரி = மாயக்கள்ளி, மயக்கி ஏமாற்றுபவள்.]*

**முகமாயம்** *muga-māyam,* பெ.(n.) முகவழகில் உண்டாம் கவர்ச்சி (வின்.); charm of fascinating face, as of a woman.

*[முகம் + மாயம்.]*

**முகமாற்று** *muga-māṟṟu,* பெ.(n.) முகமயக்கு, 1 பார்க்க (சங்.அக.); see *muga-mayakku,1.*

*[முகம் + மாற்று.]*

**முகமாறு-தல்** *muga-māṟu-,* 5 செ.கு.வி. (v.i.) முகங்கோணு-தல் பார்க்க; see *mugaṅ-kōṇu-.* *'தம்பால் இரந்தவர்களுக்கு... முகமாறாது ஈதலை' (கலித்.61:11, உரை).*

*[முகம் + மாறு-தல்.]*

**முகமில்வரி** *mugam-il-vari,* பெ.(n.) இசைப் பாட்டு வகை (சிலப்.7:4, அரும்.); a kind of song.

*[முகம் + இல்[2]+வரி. முகமில் வரி = முகமொழிந்து ஏனை உறுப்புக்களான் வருவது. வரி = இசை, இசைப்பாட்டு.]*

**முகமினுமினுப்பு** *muga-miṉu-miṉuppu,* பெ.(n.) எண்ணெய் கசிவினால் முகம் பளபளப்பாயிருக்கை; face that glows due to the oil secretion.

*[முகம் + மினுமினுப்பு.]*

**முகமுகங்கணோக்கு-தல்** *muga-mugaṅga-ṉōkku-,* 5 செ.கு.வி. (v.i.) முகமுகம்பார்-த்தல், பார்க்க; see *mugamugam-pār-.* *"கண்மல்குநீரார் முகமுகங்க ணோக்கினார்" (சீவக.1808).*

*[முகம் + முகம் + கண் + நோக்கு-தல்.]*

முகமுகம்பார்–த்தல் *muga-mugam-pār-,* 4 செ.கு.வி. (v.i.) முகத்தை முகம் பார்த்தல்; to look one another in the face. *"மதுரைநகர் நின்ற மாயவினைப் புரவி முகமுகம் பார்த்து" (திருவாலவா.29:1).*

*[முகம் + முகம் + பார்–த்தல்.]*

முகமுகமாய் *muga-mugam-āy,* கு.வி.எ. (adv.) நேருக்கு நேராய் (வின்.); face to face, personally.

*[முகம் + முகம் + ஆய்.]*

முகமுகெனல் *muga-mugeṉal,* பெ.(n.) 1. வண்டு எழுப்பும் (ரீங்காரஞ் செய்யும்) ஒலிக்குறிப்பு; onom. expr. signifying humming of bees. 2. குடத்துள் நீர்புகும் ஒலிக்குறிப்பு; gurgling of water.

முகமுடைவரி *muga-muḍai-vari,* பெ.(n.) மூன்றடி முதல் ஏழடி வரை வரும் இசைப்பாட்டு வகை (சிலப்.7:4, அரும்.); a kind of song, of four to seven lines.

*[முகமுடை + வரி.]*

முகமுதல் *muga-mudal,* பெ.(n.) முகமும் கண்களும் கிட்டத்தட்ட மெல்லிய (சிறிய) வீக்கமுடன் இருக்கை; soft swelling about the face and the eyes - *urticaria gigantea* (சா.அக.).

*[முகம் + முதல்.]*

முகமுறி[1]–தல் *muga-muṟi-,*4 செ.கு.வி. (v.i.) 1. கண்ணோட்டமின்மை (தாட்சணிய மறுதல்); to be discourteous; to be unsympathetic. 2. மனநோதல் (வின்.); to be offended. *ஒருவனை முகமுறியப் பேசாதே.*

*[முகம் + முறி–தல்.]*

முகமுறி[2]–த்தல் *muga-muṟi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. ஈவு இரக்கமின்றி துன்புறுத்துதல் (வின்.); to wound one's feelings; to offend. 2. சின மூட்டுதல் (யாழ். அக.); to provoke another to anger.

*[முகம் + முறி[2]–த்தல்.]*

முகமுறிவு *muga-muṟivu,* பெ.(n.) 1. சிறிதும் இரக்கமின்றி துன்புறுத்துகை; discourteous behaviour, want of consideration for the feelings of others. 2. வெறுப்பு (சங்.அக.); dislike, hatred.

*[முகமுறி →முகமுறிவு.]*

முகமுன்னிலை *muga-muṉṉilai,* பெ.(n.) நேர்முகம் (வின்.); one's presence.

*[முகம் + முன்னிலை.]*

முகமூடி *muga-mūḍi,* பெ.(n.) 1. பிறக்கும் போது குழந்தையின் முகத்தை மூடியுள்ள பை (வின்.); covering often found on the face of children when born. 2. முக்காடு; veil. 3. பிணத்தின் முகத்தை மூடும் ஆடை (இ.வ.); face-cloth. 4. முகத்தை மறைத்து அணிந்து கொள்ளும் துணி அல்லது தோல்; mask of cloth, paper, etc. *முகமூடிக் கொள்ளை புறநகர் பகுதிகளில் அதிகம்.*

*[முகம் + மூடி. முகமூடி = முகத்தை மறைத்து அணிந்து கொள்ளும் துணி அல்லது தோல்.]*

முகமை *mugamai,* பெ.(n.) முகாமை பார்க்க; see *mugāmai. அவன் முகமையாயிருந்து செயலைச் செய்தான்.*

*[முகம் → முகமை. முகமை = முதன்மை, தலைமை.]*

முகமொட்டு—தல் *mugam-oṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) சேவல்களைச் சண்டைக்கு எதிர்முகமாக்குதல் (யாழ்ப்.); to turn the face of one cock towards another rousing them to fight.

*[முகம் + ஒட்டு—தல்.]*

முகர்[1]—தல் *mugar-,* 2 செ.குன்றாவி. (v.t.) மூக்கால் மோத்தல், மணமறிதல்; to smell.

*[முகம்→முகர்→முகர்—தல்.]*

முகர்[2]—த்தல் *mugar-,* 4 செ.கு.வி.(v.i.) முகத்தல்; take water in a vessel.

முகர்[3] *mugar,* பெ.(n.) 1. முகம்; face. 2. மூக்கு; nose.

*[முகம்→முகர்.]*

முகர்வுக்கணு *mugarvukkaṇu,* பெ.(n.) பரு (T.U.L.M.); tubercle.

முகரதம் *muga-radam,* பெ.(n.) முகத்திற் புணர்கை; carnal intercourse in the mouth. *"தன் மனையாளை முகரதஞ் செய்வித்து" (கடம்ப.பு.இலீலா.108).*

*[முகம் + Skt. ரதம்.]*

முகரம் *mugaram,* பெ.(n.) 1. தொடர்ஒலி; noise, continuous sound. *முகரப்பாய்மா (கம்பரா. அதிகாய.186).* 2. சங்கு; conch. *"முகரத் திடை...... சுறவங் கொணர்ந்தெற்று மறைக்காடே" (தேவா.846, 2).* 3. காகம் (சங்.அக.); crow.

முகரன் *mugaraṉ,* பெ.(n.) பயனிற்சொல் சொல்லுவோன் (சங்.அக.); chatter-box; one who speaks without purpose.

முகராசி *muga-rāśi,* பெ.(n.) 1. முகக் கவர்ச்சி பார்க்க; see *muga-k-kavarcci.* 2. ஆகூழ் (அதிர்ஷ்டம்); luck.

*[முகம் + Skt. ராசி.]*

முகரி[1] *mugari,* பெ.(n.) 1. மல்லிகைப்பூ (வின்.); jasmine flower. 2. தாழைச் செடி (மலை.); fragrant screw-pine.

தெ. மொகலி

*[முகம் → முகரி.]*

முகரி[2] *mugari,* பெ.(n.) ஆரவாரஞ் செய்வோன்; one who makes noise. *"பஞ்சேந்திரிய வஞ்ச முகரிகாள்" (தேவா. 719 :9).*

முகரி[3] *mugari,* பெ.(n.) 1. முகனை, 1, 2, 3 பார்க்க; see *mugaṉai, 1, 2, 3.* 2. மூக்கினடி; bottom of the nose.

*[முகம்→முகர்→முகரி.]*

முகரி[4] *mugari,* பெ.(n.) மூரி (யாழ்.அக.) பார்க்க; see *mūri.*

முகரி[5] *mugari,* பெ.(n.) முகலி பார்க்க; see *mugali.*

முகரிகுளித்தல் *mugari-kuḷittal,* பெ.(n.) அள்ளுகொள்ளை, பெருங்கொள்ளை (யாழ். அக.); plunder, pillage.

*[முகரி + குளித்தல்.]*

முகரிமை *mugarimai,* பெ.(n.) 1. பேரறிவு (பிங்.); wisdom, knowledge of divine things. *"முகரிமைசா னற்றவர்" (சேதுபு. பலதீ.30).* 2. தலைமை; chieftaincy, lordship. *"முகரிமை யடைந்தவன் றோல்முகத்தவன்" (கந்தபு. கயமுகனுற்.49).*

*[முகரி → முகரிமை.]*

முகரியோலை *mugari-y-ōlai,* பெ.(n.) முறியோலை பார்க்க; see *muri-y-ōlai.*

முகரு-தல் *mugaru-,* 2 செ.குன்றாவி. (v.t.) நுகருதல்; smelling (சா.அக.).

*[முகர்[1]-தல் → முகரு-தல்.]*

முகரூபம் *muga-rūbam,* பெ.(n.) 1. முகச்சாயல் (வின்.) பார்க்க; see *muga-c-cāyal.* 2. முகத்தின் அழகு (யாழ்.அக.); beauty of face.

*[முகம் + **Skt.** ரூபம். த. உருவம்→வ. ரூப.]*

முகரூபு *muga-rūbu,* பெ.(n.) முகத்தின் அழகு (யாழ்.அக.); beauty of face.

*[முகம் + **Skt.** ரூபு. த. உருவம்→வ. ரூப - ரூபு.]*

முகரெனல் *mugarenal,* பெ.(n.) ஒலிக் குறிப்பு வகை (வின்.); onom. expr. of humming, as of bees.

முகரை *mugarai,* பெ.(n.) 1. முகவாய்க் கட்டை; chin. அவன் முகரையில் ஒரு குத்து விட்டான். 2. மூக்கினடி; bottom of the nose. *"முகரை யாலுழுத தொய்யில்" (திருக்காளத். பு.கண்ணப்ப.3).* 3. முகம், பழிக்கப்படும் முகம்; face, face as ugly. *'அவன் முகரையைப் பார் எப்படி இருக்கிறதென்று' (உ.வ.).*

தெ. மோர; க. மோரெ; **Hind.** mukhrā.

*[முகம்→முகர்→முகரை. முகரை = மூக்கும் வாயும் சேர்ந்த பகுதி.]*

முகரைக்கட்டை *mugarai-k-kaṭṭai,* பெ.(n.) முகரை, 1 பார்க்க; see *mugarai,* 1. *சண்டையில் அவன் முகரைக் கட்டை உடைந்தது.*

*[முகரை + கட்டை.]*

முகரையெலும்பு *mugarai-y-elumbu,* பெ. (n.) மோவா யெலும்பு; lower - jaw, bone.

*[முகரை + எலும்பு.]*

முகரோமம் *muga-rōmam,* பெ.(n.) மீசை மயிர் (சித்.மரபுகண்.பக்.6); moustache.

*[முகம் + **Skt.** ரோமம்.]*

முகலட்சணம் *muga-laṭšaṇam,* பெ.(n.) முகத்தோற்றம்; visage (சா.அக.).

*[முகம் + **Skt.** லட்சணம்.]*

முகலாங்கலம் *mugalāṅgalam,* பெ.(n.) பன்றி; hog (சா.அக.).

முகலி[1] *mugali,* பெ.(n.) 1. தாழை; a wild shrub growing near the sea shore - fragrant screw pine -pan - dana oderatissima. 2. நிலப்பனை; ground palm - *Curculigo - Corchioides.*

முகலி[2] *mugali,* பெ.(n.) சீகாளத்திப் பக்கத்தோடும் ஓர் ஆறு (தேவா.1095, 3); a river flowing by *Kḷahasti.*

முகவங்கு *muga-vaṅgu,* பெ.(n.) முகத்தில் படரும் கருந்தேமல்; a skin disease rendering the face black (சா.அக.).

*[முகம் + வங்கு.]*

முகவசனம் *muga-vašaṉam,* பெ.(n.) வாய்ச் சொல்; talk, words. *"சுப்பு ஓதுவார் முகவசனத்தாலும் விசதமாகுமே" (மீனாட். சரித்.2:310).*

*[முகம் + **Skt.** வசனம்.]*

முகவசிகரம் *muga-vašigaram,* பெ.(n.) முகக்கவர்ச்சி பார்க்க; see *muga-k-kavarcci.*

*[முகம் + **Skt.** வசிகரம்.]*

**முகவசியம்** *muga-vašiyam,* பெ.(n.) முகக்கவர்ச்சி பார்க்க; see *muga-k-kavarcci.*

*[முகம் + வசியம். வயம் →வசியம்.]*

**முகவசீகரம்** *muga-vašigaram,* பெ.(n.) முகக்கவர்ச்சி பார்க்க; see *muga-k-kavarcci.*

*[முகம் + **Skt.**வசீகரம்.]*

**முகவட்டம்** *muga-vaṭṭam,* பெ.(n.) முக மண்டலம் பார்க்க; see *muga-maṇḍalam.*

*[முகம் + வட்டம்.]*

**முகவட்டி** *muga-vaṭṭi,* பெ.(n.) அரச முத்திரை இடும் அலுவலர்; officer of the Royal sealed. *"புரவரிசி காணத்து முகவட்டி மகட மங்கலமுடையான் எழுத்து" (புது.கல். 183:6).*

**முகவட்டு** *muga-vaṭṭu,* பெ.(n.) விலங்கின் நெற்றியுச்சியில் அணியும் அணிவகை; an ornament worn on the forehead of an animal. *"நெற்றி முன்னாப் பூட்டுத் தரள முகவட்டும் பொலிய" (திருவிளை. மாயப்பசு. 15).*

*[முகம் + வட்டு. வட்டு = வட்டமான அணிகலன்.]*

**முகவணை**[1] *muga-vaṇai,* பெ.(n.) இசைக் கருவி வகை; a kind of Indian darionet. *"முகவணையை வாசி" (பணவிடு.183).*

**முகவணை**[2] *muga-vaṇai,* பெ.(n.) 1. முகப்பு; facade, porch. 2. முகவுரை (வின்.); preface. 3. வண்டியின் முகப்பில் வண்டிக்காரன் இருந்தோட்டும் இடம்; driver's seat in front of a cart. 4. முகவணைக்கல் பார்க்க; see *mugavaṇai-k-kal. "நிலைகால் அருகனை முகவனை.... கட்டினதும்" (கோயிலொ.138).*

*[முகம் + அணை.]*

**முகவணைக்கல்** *muga-v-aṇai-k-kal,* பெ. (n.) வாயிலின் மேலுள்ள உத்தரப்படிக்கல், முகப்புக்கல்; stone placed at the top across the pillars of a gate. *"மண்டபத்தில் வாசலில் முகவணைக்கல்லு பழூவூ ருடையான் செம்போ உய்யிவந்த பெருமாள்" (புது.கல்.612 : 3).*

*[முகவணை + கல்.]*

**முகவர்** *mugavar,* பெ.(n.) ஓர் அமைப்பின், நிறுவனத்தின் சார்பாக பொருள் வாங்கி விற்பனை செய்து கழிவுத் தொகை பெறுபவர்; agent of an organisation, firm, etc. *ஆயுள் காப்பீடு முகவர்கள். சிறுசேமிப்பு முகவர்கள்.*

**முகவரி** *muga-vari,* பெ.(n.) ஒரு பெயருக்குரியவரின் அல்லது ஒரு நிறுவனத்தின் இருப்பிடம்பற்றிய விளத்தம்; address, superscription.

*[முகம் + வரி. முகம் = இடம். வரி = எழுத்து.]*

**முகவரை** *mugavarai,* பெ.(n.) அணிகலனின் நடுவில் பதிக்கும் கல்; central stone in a jewel. *'முகவரை என்று பாடமாம் போது, நாயகக்கல்லுப் போலே பாட்டுக்களுக் கெல்லாம் பிரகாசமாயிருக்கும்' (திவ். திருப்பல்.2, வியா. பக்.34)*

*[முகம் + அரை. முகம் = இடம், நடுவிடம். அரை = அரைதல், பதித்தல்.]*

**முகவல்லபம்** *muga-vallabam,* பெ.(n.) மாதுளை (பரி.அக.); pomegranate.

**முகவலிப்பு** *muga-valippu,* பெ.(n.) முகத்தைக் கோணச் செய்யும் இசிவு (சன்னி) நோய் வகை (வின்.); facial paralysis.

மறுவ. முகவதாசன்னி, முகவூதை.

*[முகம் + வலிப்பு. வலிப்பு = இசிவு, இழுப்பு நோய்..]*

முகத்தைப் பற்றிய நோய். தலைவலி கண்டு, முகம் சுளுக்கி கண் சிவந்து பிடரியுளைந்து பழைய முகமாறி ஒரு முகமாய்த் திருகி வாங்கி வலித்திடுமோர் ஊதை (வாதம்) நோய்.

**முகவவ்வால்** *muga-vavvāl,* பெ.(n.) சிவப்பும் சாம்பனிறமுங் கலந்த மீன்வகை; white pomfret, brownish grey, *Stromatens sinensis.*

*[முகம் + வவ்வால். வவ்வால் = மீன்வகை.]*



**முகவழி** *muga-vaḻi,* பெ.(n.) மூலம்; means. *அவன் முகவழியாகப் போக வேண்டும்.*

*[முகம் + வழி.]*

**முகவளை** *muga-vaḷai,* பெ.(n.) வளைகள் கழலாதிருக்க அணியும் தடை வளையல்; bangle of shorter size, worn as a keeper. *"வளைக்கு முகவளை" (குலோத்.கோ.505).*

*[முகம் + வளை. வளை = கைவளை.]*

**முகவாச்சியம்** *muga-vācciyam,* பெ.(n.) 1. கையால் வாயை அடித்து இசையெழுப்புகை; playing on the mouth by striking it with the hand. 2. முகவீணை பார்க்க; see *muga-viṇai.*

*[முகம் + வாச்சியம். வாச்சியம் = முழக்கி இசை யெழுப்பும் கருவி.]*

**முகவாசச்செப்பு** *muga-vāša-c-ceppu,* பெ.(n.) முகவாசம் வைக்கும் பரணி; casket or box for spices used with betel. *"இன் முகவாசச் செப்பும்....... இளையவ ரேந்தினாரே" (சீவக.838).*

மறுவ. வெற்றிலைப்பெட்டி.

*[முகவாசம் + செப்பு. செப்பு = பெட்டி.]*

**முகவாசம்**[1] *muga-vāšam,* பெ.(n.) 1. நறுமணத்து (வாசனை)க்காக வாயில் இட்டுக் கொள்ளுதற்குரிய தக்கோலம், தீம்பூ, இலவங்கம், கருப்பூரம், இனவகை (சாதி) என்ற ஐவகை நறுமணப் பண்டங்கள் (சீவக.838, உரை); fragrant spices, of which there are five viz. *takkōlam, tīmbū, ilavaṅgam, karuppūram, šāti.* 2. வெற்றிலை (சீவக. 1055); betel. *"கொண்டாரின் முகவாசம்" (சீவக.1055).* 3. முகப்பழக்கம் (யாழ்.அக.); familiarity, acquaintance.

*[முகம் + **Skt.** வாசம்.]*

**முகவாசம்**[2] *muga-vāšam,* பெ.(n.) பிணத்தின் முகத்தை மூடும் ஆடை (உ.வ.); face-cloth.

**முகவாசல்** *muga-vāšal,* பெ.(n.) தலைவாசல்; front gate.

*[முகம் + வாசல்.]*

**முகவாசை[1]** *muga-vāšai,* பெ.(n.) ஒருதலைச் சார்பு (வின்.); partiality.

**முகவாசை[2]** *muga-vāšai,* பெ.(n.) முகவாசம்[2] பார்க்க; see *muga-vāšam*[2].

**முகவாட்டம்** *muga-vāṭṭam,* பெ.(n.) முகத்தில் தோற்றுஞ் சோர்வு (வின்.); jaded countenance; fatigued appearance.

*[முகம் + வாட்டம்.]*

**முகவாடல்** *muga-vāḍal,* பெ.(n.) முகவாட்டம் (வின்.) பார்க்க; see *muga-vāṭṭam.*

*[முகம் + வாடல்.]*

**முகவாத்தியம்** *muga-vāttiyam,* பெ.(n.) முகவாச்சியம் பார்க்க; see *muga-vācciyam.*

*[முகம் + **Skt.** வாத்தியம்.]*

**முகவாதசன்னி** *muga-vāda-šaṉṉi,* பெ.(n.) முகத்தைக் கோணச் செய்யும் ஒருவகை இசிவு நோய் (வின்.); facial paralysis.

மறுவ. முகவலிப்பு

*[முகம் + **Skt.** வாதசன்னி.]*

**முகவாதம்** *muga-vādam,* பெ.(n.) முகவூதை பார்க்க; see *muga-v-ūdai.*

*[முகம் + **Skt.** வாதம்.]*

**முகவாதை** *muga-vādai,* பெ.(n.) முகவூதை பார்க்க; see *muga-v-ūdai.*

**முகவாய்[1]** *muga-vāy,* பெ.(n.) முகவாய்க் கட்டை பார்க்க; see *muga-vāy-k-kaṭṭai.*

**முகவாய்[2]** *muga-vāy,* பெ.(n.) ஏற்றச்சால் முகப்பதற்கு ஏற்புடையதாகக் கரை முகப்பிடத்தில் தோண்டுவிக்கும் மடைநீர் வாய்; channel.

*[முகம் + வாய்.]*

**முகவாய்க்கட்டை** *muga-vāy-k-kaṭṭai,* பெ.(n.) மோவாய்; chin.

*[முகவாய் + கட்டை.]*

**முகவாய்நீட்சி** *muga-vāy-nīṭci,* பெ.(n.) கீழ்த் தாடை எலும்பு; prominent lower jaw.

*[முகவாய் + நீட்சி.]*

**முகவாயு** *muga-vāyu,* பெ.(n.) முகவலிப்பு பார்க்க; see *muga-valippu.*

*[முகம் + **Skt.** வாயு.]*

**முகவார்[1]** *muga-vār,* பெ.(n.) குதிரை முதலியவைகட்கு முகத்திலிடுங் கயிறு; head-stall, halter.

*[முகம் + வார்.]*

**முகவார்[2]** *muga-vār,* பெ.(n.) மிதியடியின் கட்டைவிரல் பகுதியையும், நடுப்பகுதியையும் இணைக்கும் வார்; a kind of shoe lether.

*[முகம் + வார்.]*

**முகவாள்** *muga-vāḷ,* பெ.(n.) கலப்பைக்கூர் (செந்.4, பக்.212); plough share.

*[முகம் + வாள். வாள் = கூர்மை.]*

**முகவிகாரம்** *muga-vigāram,* பெ.(n.) முகவேறுபாடு பார்க்க; see *muga-vēṟupāḍu.*

*[முகம் + **Skt.** விகாரம்.]*

**முகவியர்** *mugaviyar,* பெ.(n.) இன்முகமா யுள்ளோர்; those who look pleased. *"முன்பட்ட தொழிந்து நுங்கண் முகவியர் முனிவு தீர்ந்தார்" (சீவக.2045).*

*[முகம் →முகவியர்.]*

**முகவிலாசம்** *muga-vilāšam,* பெ.(n.) முகப் பொலிவு (வின்.); beaming countenance.

*[முகம் + Skt. விலாசம்.]*

**முகவிழி** *muga-viḻi,* பெ.(n.) முகத்தில் விழிக்கை; facing, meeting. *அவனுடன் முகவிழி கிடையாது.*

*[முகம் + விழி. விழி = விழித்தல்.]*

**முகவிழுப்பு** *muga-v-iḻuppu,* பெ.(n.) முகவலிப்பு பார்க்க; see *muga-valippu.*

*[முகம் + இழுப்பு.]*

**முகவீணை** *muga-vīṇai,* பெ.(n.) ஒரு வகை இசைக் கருவி; Indian clarionet. *"தித்திசிறு முகவீணை... மிழற்ற" (குற்றா. தல. தருமசா. 54).*

*[முகம் + வீணை.]*

**முகவு** *mugavu,* பெ.(n.) 1. மாளிகை முகப்பு; facade, porch. 2. ஒளி, காந்தி; brilliance.

*[முகம் →முகவு = முன்மண்டபம்.]*

**முகவுரை[1]** *muga-v-urai,* பெ.(n.) முன்னுரை (நன்.1); introduction, preface.

*[முகம் + உரை.]*

நூல் முதலியவற்றில் நூலின் மூலப் பகுதி தொடங்குமுன் எழுதப்பெறும் நூல் எழுதப் புகுந்த கரணியம், நூல் அமைப்பு, நூலின்தேவை, நன்றியுரை வரை அடக்கிய உரை.

**முகவுரை[2]** *muga-v-urai,* பெ.(n.) 1. கணக்குப் புத்தக முதலியவற்றின் தலைப்பில் எழுதும் ஆண்டு, மாதம், நாள் முதலிய குறிப்பு; introductory entry of date, etc. in daily account. 2. திருமுகம் முதலியவற்றின் தொடக்கத்தில் எழுதும் நற்சொல்; auspicious expression, at the commencement of an epistle etc.

*[முகம் + உரை.]*

**முகவூதை** *muga-v-ūdai,* பெ.(n.) முகவலிப்பு பார்க்க; see *muga-valippu.*

*[முகம் + ஊதை.]*

**முகவெட்டி** *muga-veṭṭi,* பெ.(n.) சோழர் ஆட்சியில் இறைவரி முதலிய பல துறைகளிலும், அரசும், அதிகாரிகளும் செலுத்தி வந்த ஆணைக்குரிய ஓலைகளைத் தணிக்கை செய்து முத்திரையிட்டு உரியவர்க்கு ஆணை வழி அனுப்பும் அதிகாரி; an auditor of *Chōḻa* period. *"இவை புரவுவரி சீகரணத்து முகவெட்டி தெங்கூருடையா னெழுத்து" (தெ.கல்.தொ. 5, கல்.662).*

**முகவெட்டிநாயகம்** *muga-veṭṭi-nāyagam,* பெ.(n.) புரவு வரித் திணைக் களத்தில் அடங்கிய முகவெட்டி என்னும் வரி திட்ட அதிகாரிகள் எழுதிய ஆணை ஓலைகளை ஆய்வு செய்து அனுமதிக்கும் தலைமை அதிகாரி; chief auditor of *Chōḻa* period.

*[முகவெட்டி + நாயகம்.]*

**முகவெட்டு** *muga-veṭṭu,* பெ.(n.) பெரும்பாலும் திரைப்படத்தில், நாடகத்தில் பங்கு (பாத்திரம்) ஏற்பவருக்கு வேண்டிய முகத்தோற்றம்; facial features. *கதைத் தலைவனுக்கு நல்ல முகவெட்டு இருக்க வேண்டும் என்று*

*எதிர்பார்த்த காலம் போய் விட்டது. புகழ்பெற்ற நடிகைக்கு இருப்பது போன்ற முகவெட்டு வேண்டும்.*

*[முகம் + வெட்டு.]*

முகவெண்டலை *muga-veṇḍalai,* பெ.(n.) முகமட்டும் வெள்ளையாயிருக்கும் மாட்டுக் குற்றம் (மாட்டுவா.15); a blemish in cattle, of having the face alone white.

*[முகம் + வெண்மை + தலை.]*

முகவெழுத்து *muga-v-eḻuttu,* பெ.(n.) முகத்தில் எழுதிப் புனையும் ஒப்பனை (பெருங்.வத்தவ.13, தலைப்பு); painting on the face.

*[முகம் + எழுத்து.]*

முகவெள்ளைப்பருந்து *muga-veḷḷai-p-parundu,* பெ.(n.) முகம் மட்டும் வெளுத்திருக்கும் ஒரு வகைப் பருந்து; a species of kite with white face.

*[முகம் + வெள்ளை + பருந்து.]*



முகவேலை *muga-vēlai,* பெ.(n.) முகத்தில் மட்டும் முடி மழிக்கை; shaving of the face alone without shaving the head.

*[முகம் + வேலை.]*

முகவேறுபாடு *muga-vēṟupāḍu,* பெ.(n.) முகத்தில் ஏற்படும் வேறுபாடு; facial deformity.

*[முகம் + வேறுபாடு.]*

முகவை *mugavai,* பெ.(n.) **1.** மொண்டு கொள்ளுகை; drawing, as water; taking up, as grain. *"பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்" (அகநா.126:11). "முகவை யின்மையி னுகவை யின்றி" (புறநா.368:11).* **2.** மிகுதியாகக் கொடுக்கப்படும் பொருள்; anything which is given in large quantities. *"புகர்முக முகவை" (புறநா.371).* **3.** நீர் முகக்குங் கருவி; bucket for drawing water. *"கயிறுகுறு முகவை" (பதிற்றுப். 22:14).* **4.** அகப்பை (வின்.); ladle. **5.** நெற் பொலி (சிலப்.10:137, உரை); heap of paddy on the threshing-floor. **6.** இராமநாதபுரம்; Ramnad. *"தென் முகவையின் சேதுபதி" (தனிச்.சிந். பக்.456: 34).*

*[முழு→ முகு →முக →முகவை (வே.க.).]*

முகவைக்கண்ணமுருகனார் *mugavai-k-kaṇṇa-muruganār,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் குருவாசகக் கோவை என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet, author of *kuruvāšaga-k-kōvai.*

*[முகவை + கண்ணன் + முருகனார்.]*

முகவைப்பாட்டு *mugavai-p-pāṭṭu,* பெ.(n.) களத்திற் சூடடிக்கும் போது பாடும் பொலிப்பாட்டு; song sung during the treading of grain on the threshing-floor by cattle. *"பெருஞ் செய்ந்நெல்லின் முகவைப் பாட்டும்" (சிலப்.10: 137). "முகக்கக் கொடுத்தலின் முகவை யாயிற்று" (மேற்படி உரை).*

*[முகவை + பாட்டு.]*

**முகவோலை** *muga-v-ōlai,* பெ.(n.) மன்னர் முதலியோர் எழுதும் திருமுகம்; ola letter of a king or of a great person. *"கன்னிதன்னை முன்னர்ப் பயந்தோன் முகவோலை...... மன்னர்க் கெழுத" (பாரத. சம்பவ.43).*

*[முகம் + ஒலை.]*

**முகனை** *muganai,* பெ.(n.) 1. முன்புறம்; fore - part, front. 2. தொடக்கம்; beginning, introduction. 3. முதன்மை, தலைமை; headship, leadership. *அவன் முகனை பண்ணுகிறான் (வின்.).* 4. உடனடியாகச் செயற்படுத்துகை; instantaneousness. *நான் வந்த முகனையிலே அவன் போய்விட்டான் (வின்.).* 5. கடுஞ்சினம்; irritability, irascibility. *ஏன் இவ்வளவு முகனை உனக்கு? (இ.வ.).* 6. முதலெழுத்து; first letter.

*[முகம்→முகன்→முகனை.]*

**முகனைக்கல்** *muganai-k-kal,* பெ.(n.) கோயில் முதலியவற்றின் வாசற் காலின் மேலுள்ள உத்திரக்கல்; stone lintel, as of a temple gateway.

*[முகனை + கல்.]*



**முகனைக்காரன்** *muganai-k-kāran,* பெ.(n.) முதலாளி (வின்.); manager, superintendent, headman.

*[முகனை + காரன்.]*

**முகனைமுடிவு** *muganai-muḍivu,* பெ.(n.) தொடக்கமும் முடிவும் (ஆதியந்தம்) (வின்.); beginning and end.

*[முகனை + முடிவு.]*

**முகாத்தமஞ்சரி** *mugātta-mañjari,* பெ.(n.) திப்பிலி; long pepper -*Piper longum.*

**முகாம்புரி** *mugām-puri,* பெ.(n.) சிற்றூர் தேவதை (நாஞ்.); a village goddess.

**முகாமயம்** *mugāmayam,* பெ.(n.) முகத்தில் உண்டாகும் நோய்; disease of the face.

*[முகம்→முகாம் +மயம்.]*

**முகாமிடல்** *mugām-iḍal,* பெ.(n.) மகிழ்ச்சி யூட்டும் ஒரு பொழுது போக்கு; recreation.

*[முகாம் + இடல்.]*

இதில் இடம் தேர்வு, தலைவர், ஊதல், எழுதுகோல், ஊசி நூல் முதல், உணவுப் பொருட்கள் வரை கொண்டு வந்து தீயால் உணவு ஆக்குவர். சாரணர் பயிற்சி இதில் அடங்கும் (கலை.கள.).

**முகாமுகமாய்** *mugā-mugamāy,* பெ.(n.) முகமுகமாய் (வின்.) பார்க்க; see *muga-mugamāy.*

**முகாமை** *mugāmai,* பெ.(n.) முதன்மை, தலைமை (வின்.); headship, superiority, pre-eminence, precedence.

*[முகம் = முதன்மை. முகம்→முகமை →முகாமை.]*

முகாமைக்காரன் *mugāmai-k-kāraṉ,* பெ. (n.) முன்னின்று நடத்துவோன் (வின்.); manager, headman, president, as of a society; agent.

*[முகாமை + காரன்.]*

முகாமையாளர் *mugāmai-y-āḷar,* பெ. (n.) மேலாளர்; manager. *வங்கி முகாமையாளர்.*

*[முகாமை + ஆளர்.]*

முகாமொத்தைமூலி *mugāmottai-mūli,* பெ. (n.) முடக்கொற்றான்; a medicinal creeper, balloon vine - *Cardio - spermum halicacabum* (சா.அக.).

முகாயி *mugāyi,* பெ. (n.) 1. திப்பிலி; long pepper - *Piperlongum*. 2. கருமுகில் நஞ்சு (பாஷாணம்); a prepared arsenic (சா.அக.).

முகாரவிந்தம் *mugāra-vindam,* பெ. (n.) முகத்தாமரை; lotus like face (சா.அக.).

முகாரி *mugāri,* பெ. (n.) இசைவகை; a musical mode.

முகி[1]-த்தல் *mugi-,* 4 செ.குன்றாவி. (v.t.) முடித்தல்; to finish, conclude; to achieve, accomplish. *"ஆற்றிற் பாலத்தை முகித்தே னல்லேன்" (குற்றா.தல.கண்டக.39).*

*[முடி-த்தல் →முகி-த்தல்.]*

முகி[2]-தல் *mugi-,* 2 செ.கு.வி. (v.i.) முடிதல்; to end, terminate, to be finished. *"முகியாத பகுதி புருடர்" (திருப்பு.681).*

தெ. முகியு; க. முகி.

*[முடி-தல்→முகி-தல்.]*

முகில் *mugil,* பெ. (n.) 1. கடல் நீரை முகந்து கொள்ளுவதாகக் கருதப்பட்ட மழைவான்; cloud. *"முகிலுரிஞ்சுஞ் சூழி" (பு.வெ.6:22).* 2. திரள் (பிங்.); gathering, mass.

தெ. மொகுலு; க. முகில்.

*[முக-→முகில். முகத்தல் = மொள்ளுதல்.]*

முகில்வண்ணன் *mugil-vaṇṇaṉ,* பெ. (n.) கார்முகில் நிறமுடைய திருமால்; *Visṇu,* as cloud-cloured. *"முகில் வண்ணன் பேர்பாட" (திவ்.திருப்பா.11).*

*[முகில் + வண்ணன்.]*

முகில்நிறம் *mugil-niṟam,* பெ. (n.) நீலமும் கருமையும் கலந்த நிறம்; combined colour of blue and black.

*[முகில் + நிறம்.]*

முகிவு *mugivu,* பெ. (n.) முடிவு; end, termination.

*[முகி → முகிவு.]*

முகிவுகாலம் *mugivu-kālam,* பெ. (n.) முடிவுகாலம் பார்க்க; see *muḍivu-kālam.*

*[முகிவு + காலம்.]*

முகிழ்[1]-த்தல் *mugiḻ-,* 4 செ.கு.வி. (n.) 1. அரும்புதல்; to bud, put forth buds. *"அருமணி முகிழ்த்தவேபோ லிளங் கதிர் முலையும்.... பரந்த" (சீவக.551). "குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப" (குறுந்.17:2).* 2. தோன்றுதல்; to appear. *"மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே" (ஐங்குறு. கடவுள்). "முளியிலை கழித்தன முகிழிணை ரொடுவரு" (நற்.53:7).* 3. கூம்பும் மலர்போல் குவிதல்; to fold or close up, as a flower its petals,

to shut, as the eyes. *"மகவுகண் முகிழ்ப்ப" (கல்லா.7).*

க. முகுல்.

*[முல் → முள் → முளு → முழு → முகு → முகிழ் → முகிழ்–த்தல். ஒ.நோ. தொழு → தொகு.]*

முகிழ்[2]–த்தல் *mugil-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஈனுதல்; to bear, bring forth beget. *"அமரராதி யரை முகிழ்த்து" (விநாயகபு. 81:154).* 2. தோற்றுவித்தல்; to display, to cause to appear. *"அற்புத முகிழ்த்தார்" (காஞ்சிப்பு. பன்னிரு.163).*

க. முகுல்

*[முல் → முள் → முளு → முழு → முகு → முகிழ் → முகிழ்–த்தல் (வே.க.).]*

முகிழ்[3]–தல் *mugil-*, 4 செ.கு.வி.(v.i.) முகிழ்[3], 1 பார்க்க; see *mugil[3],1*. *"முகிழ்ந்து வீங்கிள முலை" (சீவக.1004).*

முகிழ்[4] *mugil*, பெ.(n.) 1. அரும்பு; bud. *"குறுமுகிழ வாயினுங் கள்ளிமேற் கைந்நீட்டார்" (நாலடி, 262).* 2. குமிழி (மொக்குள்); bubble. *"பெயறுளி முகிழென" (கலித்.56).* 3. தேங்காய் முதலியவற்றின் மடல் (யாழ்ப்.); integument[+], as of a coconut or palmyra fruit. 4. முகிழ்ப்புறம் பார்க்க; see *mugil-p-puram. 'அனிச்சப் பூவை முகிழ் களையாது சூடினாள்' (குறள், 1115, உரை).* 5. தயிர் முதலியவற்றின் கட்டி; mass, as of curds. *"குவிந்த முகிழ்களை யுடைய உறையாலே இறுகத் தோய்ந்த இனிய தயிர்" (பெரும்பாண்.157, உரை).* 6. முகுளம், 3 பார்க்க; see *mugulam,3*.

*[முல் → முள் → முளு → முழு → முகு → முகிழ். ஒ.நோ.தொழு → தொகு.]*

முகிழ்காங்கூலம் *mugil-kāṅgūlam*, பெ.(n.) காங்கூலக் கைவகை (சிலப்.3: 18, உரை, பக்.94); a kind of *kāṅgūlam* pose.

*[முகிழ் + காங்கூலம்.]*

முகிழ்த்தம் *mugilttam*, பெ.(n.) முழுத்தம் (முகூர்த்தம்) பார்க்க; see *muluttam*. *"பெரியோரைச் சேர்ந்த முகிழ்த்தத்தினால்" (திருவிளை.பயகர.63).*

*[முழுத்தம் → முகிழ்த்தம்.]*

முகிழ்நகை *mugil-nagai*, பெ.(n.) புன்சிரிப்பு; smile. *"முள்ளெயி றிலங்கு முகிழ்நகை" (பு.வெ.11, ஆண்பாற்.9).*

*[முகிழ் + நகை.]*

முகிழ்ப்புறம் *mugil-p-puram*, பெ.(n.) காய் பூ, முதலியவற்றின் காம்படி (வின்.); that part of flower or fruit to which the stalk is attached.

*[முகிழ் + புறம்.]*

முகிழ்விரியாக்கத்திரி *mugil-viriyā-k-kattiri*, பெ.(n.) கத்தரிப் பிஞ்சு; tender brinjal.

*[முகிழ் + விரியா + கத்திரி.]*

முகிழம் *mugilam*, பெ.(n.) மலரும் பருவத்துப் பேரரும்பு (சது.); flower bud about to bloom.

*[முகழ் → முகிழம் (வே.க.)]*

முகிழரும்பு *mugil-arumbu*, பெ.(n.) 1. ஆல், அரசு, அத்தி இவற்றின் மலரும் பருவ மொட்டு; flower buds of banyan, ficus religiosa and fig. 2. மலரும் பருவத்தரும்பு; flower bud about to bloom.

*[முகிழ் +அரும்பு.]*

**முகிழி–த்தல்** *mugili-*, 4 செ.கு.வி.(v.i.) குவிதல்; to fold or close up, as a flower its petals.

*[முகிழ் →முகிழி→முகிழி–த்தல்.]*

**முகிழிதம்** *mugilidam,* பெ.(n.) முகிழ், 1 பார்க்க; see *mugil, 1. "பொன்னின் முகிழிதம் விளைத்து" (குற்றா.தல.நாட்டுச்.9).*

*[முகிழ்→ முகிழி→ முகிழிதம் = அரும்பல், அரும்பு (வே.க.).]*

**முகிள்** *mugil,* பெ.(n.) முகிழ்[1], 1 பார்க்க; see *mugil,[1], 1. "முகிண் முலை" (கம்பரா. காப்பு.3).*

*[முகிழ் → முகிள் (வே.க.)]*

**முகிளம்** *mugilam,* பெ.(n.) முகிழ்[1], 1 பார்க்க; see *mugil[1].,1.*

*[முகிழ் →முகிழம்→ முகிளம் (வே.க.)..]*

**முகிளிதம்** *mugilidam,* பெ.(n.) 1. முகிழ்[1], 1 பார்க்க; see *mugil[1], 1.* 2. அரைப்பகுதி குவிகை; half - closing, as of flowers or of eyes. *"முகிளிதங் கொண்டு வாட்கண் மொழிதரா" (விநாயகவு. திருநகரப்.126).*

*[முகிழ்→ முகிழி→ முகிழிதம்→ முகிளிதம் (வே.க.).]*

**முகிற்குன்மம்** *mugir-kunmam,* பெ.(n.) முகிற்குன்றம் பார்க்க; see *mugir-kunram.*

**முகிற்குன்றம்[1]** *mugir-kunram,* பெ.(n.) செய்நஞ்சு (மு.அ.); a mineral poison.

**முகிற்குன்றம்[2]** *mugir-kunram,* பெ.(n.) முகில் மூடிய மலை; cloudy mountain.

*[முகில் + குன்றம்.]*

**முகின்மேனி** *mugin-mēni,* பெ.(n.) திருமால்; *Visnu. "முகின்மேனி வேதன்றேட" (திருவாலவா.காப்பு.3).*

மறுவ. முகில்வண்ணன்.

*[முகில் + மேனி. முகில்வண்ண உடம்புடைய திருமால்.]*

**முகினாயகன்** *muginayagan,* பெ.(n.) வருணன்; *Varunan. "முகினாயகனை நினைப்பிட்டான்" (திருவாலவா.30:2).*

*[முகில் + நாயகன். மழை தரும் முகிலின் தலைவன்.]*

**முகினி** *mugini,* பெ.(n.) புளிய மரம் (மலை.); tamarind tree - *Tama rindus indica* (சா.அக.).

**முகுட்டை** *muguttai,* பெ.(n.) மூட்டைப் பூச்சி; bug. *"உண்ணி முகுட்டை யெறும்பு" (நீலகேசி.79).*

**முகுடம்[1]** *mugudam,* பெ.(n.) கோபுரப் பூடு; a kind of unidentified plant (சா.அக.).

**முகுடம்[2]** *mugudam,* பெ.(n.) 1. மணிமுடி (மகுடம்); crown. *"முகுடமும் பெருஞ் சேனையும்" (பாரத.குரு.14).* 2. முடியுறுப்பு ஐந்தனுளொன்று (திவா.); a part of the crown, one of five *mudi-y-uruppu.*



வ. முக்குட்ட

*[மகுடம்→முகுடம்.]*

பேராசிரியர் பரோ தம் 'சமற்கிருத மொழி' என்னும் நூலின் இறுதியில் முகுடம் (மகுடம்) என்பது திரவிடச் சொல்லென்று குறித்திருத்தல் காண்க (வே.க. முல்.1). முடியுறுப்புகள் : 1. முகுடம் (மகுடம்), 2. கயிறு (தாமம்), 3. தாமரை (பதுமம்), 4. கேடகம், 5. கிம்புரி (ஆ.நி.).

**முகுத்தம்** *muguttam*, பெ.(n.) முழுத்தம் பார்க்க; see *muluttam*. *"உதித்த நன் முகுத்தத் தானும்" (திருவாலவா.3:12).*

**முகுந்தநாயகர்** *mugunda-nāyagar*, பெ.(n.) 'பஞ்சரத்திரனம்' எனும் நூலை இயற்றிய புலவர்; a poet, author of *"Pañjarattinam"*.

**முகுந்தநிதி** *mugunda-nidi*, பெ.(n.) குபேரனது ஒன்பான் பொருட்குவையுள் ஒன்று (நவநிதியு லொன்று) (வின்.); a treasure of *Kubēra*, one of *nava-nidi*.

*[முகுந்தன் + நிதி.]*

**முகுந்தம்** *mugundam*, பெ.(n.) இதளியம் (பாதரசம்); mercury (சா.அக.).

**முகுந்தன்** *mugundan*, பெ.(n.) திருமால் (பிங்.); *Visnu*.

**முகுரம்** *muguram*, பெ.(n.) 1. கண்ணாடி (திவா.); mirror. *"முகமுகரம்புரை முதலொடு சொன்னான்" (பாரத.வாரணா.102).* 2. பெரு மல்லிகை (மூ.அ.); single flowered Arabian Jasmine. 3. தளிர் (சங்.அக.); tender leaf.

**முகுலம்** *mugulam*, பெ.(n.) 1. உடம்பு; body. 2. ஆதன் (ஆன்மா); soul (சா.அக.).

**முகுலி** *muguli*, பெ.(n.) தாழை (பரி.அக.); fragrant screwpine.

*[முசலி→முகுலி.]*

**முகுள்** *mugul*, பெ.(n.) மலரும் பருவ மொட்டு; flower bud about to bloom.

*[முகிழ்→முகிள்→முகுள் (வே.க.).]*

**முகுளம்** *mugulam*, பெ.(n.) 1. அரும்பு; bud. *"பங்கய முகுளந் தன்னைக் கொங்கையாப் படைத்த" (திருவாலவா.4:14) (சூடா.).* 2. தாமரைத் தண்டு (தைலவ.தைல); lotus stalk. 3. ஒரு கையின் ஐந்து விரலும் நிமிர்ந்து நுனிபொருந்திக் கூம்பி நிற்கும் இணையா வினைக்கை வகை (சிலப்.3:18, உரை); a gesture with one hand in which all the fingers are held upright with the tips joined together, one of 33 *inaiya-vinaikkai*. 4. இரண்டு காலும் ஒக்க வைத்து மண்டலமாக இருக்கும் இருக்கை (ஆசன) வகை (தத்துவப். 109, உரை); a squatting posture in which the two legs are joined to form a horizontal circle. 5. முகுளாதனம் (தத்துவப்.108) பார்க்க; see *mugulādanam*. 6. மூளையின் பின் பகுதியாகிய முள்ளந்தண்டுக் கொடியின் உச்சி (இங்.வை.பக்.27); medulla oblongata, hindmost segment of the brain.

வ. முகுல.

*[முகிழ்→முகிள்→முகுள்→ முகுளம் (வே.க.).]*

**முகுளமண்டலாதனம்** *mugula-mandalādanam*, பெ.(n.) முகுளம், 4 பார்க்க (தத்துவப்.109, உரை); see *mugulam, 4.*

*[முகுளம் + மண்டலாதனம்.]*

**முகுளாதனம்** *mugulādanam,* பெ.(n.) இரண்டு கையும் முதுகிலே கூட்டி கும்பிட்டிருக்கும் இருக்கை (ஆசனம்) வகை (தத்துவப்.108, உரை); a pose in which a devotee's hands are joined together on his back in a praying attitude.

*[முகுளம் + ஆதனம்.]*

**முகுளி-த்தல்** *muguli-,* 4 செ.கு.வி.(v.i.) குவிதல்; to close, as a flower. *"முகுளிக்கும்..... அரவிந்த நூறாயிரம்" (தண்டி.62).*

*[முகிழ் → முகிள் → முகுள் → முகுளி → முகுளி-த்தல் (வே.க.).]*

**முகூலகம்** *mukūlagam,* பெ.(n.) நேர்வாளம் (அரு.அக.); true croton.

**முகேரெனல்** *mugēreṉal,* பெ.(n.) ஒலிக் குறிப்பு வகை; onom. expr. signifying humming, splashing. *"தடம்பொய்கை புக்கு முகேரென்னக் கையாற் குடைந்து" (திருவாச.7 :11).*

**முகை**[1] *mugai,* பெ.(n.) 1. அரும்பு; opening bud. *"முகை மொக்கு ளுள்ளது நாற்றம் போல்" (குறள், 1274). முல்லை அரும்புவதற்குள் தான் திரும்பி வருவதாக தலைவன் தலைவியிடம் சொன்னான். நறுமுகையே.... நறுமுகையே.. நீ ஒரு நாழிகை நில்லாய்.* 2. குகை; cave. *"கன்முகை வயப்புள" (ஐங்குறு.246).* 3. கூட்டம் (பிங்.); crowd. 4. மிடா (பிங்.); large earthen vessel.

*[முகுள் →முகு →முகை (வே.க.).]*

**முகை**[2]**-தல்** *mugai-,* 2 செ.கு.வி.(v.i.) அரும்புதல்; to bud. *"பொய்கை முகைந்த தாமரை" (ஐங்குறு.6).*

*[முகுள் →முகு →முகை → முகை-தல் (வே.க.).]*

**முகை**[3]**-த்தல்** *mugai-,* 4 செ.கு.வி.(v.i.) முகை[2]-தல் (வின்.) பார்க்க; see *mugai*[2]*-.*

*[முகுள் → முகு → முகை → முகை-த்தல் (வே.க.).]*

**முகைதிற-த்தல்** *mugai-tiṟa-,* 2 செ.கு.வி. (v.i.) அரும்பு மலர்தல்; to blossom. *'பொரிப் புன்கும்... முருக்கினொடு முகைதிறந்து' (இலக்.வி.487, உரை).*

*[முகை + திற-த்தல்.]*

**முகைதீன்பிச்சைப்புலவர்** *mugaitīṉ-piccai-p-pulavar,* பெ.(n.) தரிச்சீர் கப்பல் சிந்து, வழிநடைச் சிந்து ஆகிய நூல்களை இயற்றிய புலவர்; Islamic poet.

**முகைதீன்புலவர்** *mugaitīṉ-pulavar,* பெ.(n.) மெய்ஞானச் சிந்து என்னும் நூலை இயற்றிய புலவர்; a Muslim poet one who wrote a book called *"Meyñāṉa šindu".*

**முகைப்பால்** *mugai-p-pāl,* பெ.(n.) முலைப் பால்; breast milk.

மறுவ. தாய்ப்பால்

*[முகை + பால்.]*

**முகையலூர்** *mugaiyalūr,* பெ.(n.) சோழ நாட்டில் இருந்த ஓர் ஊர்; a village in *Chōḻā* country.

**முகையலூர்ச்சிறுகருந்தும்பியார்** *mugaiyalūr-c-ciṟu-karundumbiyār,* பெ.(n.) கழகப் புலவர்; *Šaṅgam* poet.

*[முகையலூர் + சிறு + கருந்தும்பியார்.]*

**முகையூர்** *mugaiyūr,* பெ.(n.) சிதம்பரம் வட்டம் திருநாகையூருக்கருகில் இருந்த சிறிய ஊர்களில் ஒன்றின் பண்டைய பெயர்; ancient name of an village near *Tirunāgaiyūr,* which is now in Chidambaram Taluk. *'பிடாகை முகையூரில் திருணமத்துக் காணியாக' (தெ.இ.க.தொ.12, க.எண்.153:21).*

**முங்காச்சி** *muṅgācci,* பெ.(n.) நீருள் அமுங்கி முழுகுகை; plunging in water.

*[முங்கு→முங்காச்சி.]*

**முங்காச்சு** *muṅgāccu,* பெ.(n.) முங்காச்சி (இ.வ.) பார்க்க; see *muṅgācci.*

**முங்கு-தல்** *muṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நீரில் மூழ்குதல்; to plunge into water. *"கிள்ளை.... முங்கி யெழும்" (இரகு.தேனு.14).* 2. அமிழ்தல்; to sink. *"முன்னிய வங்க முங்கிக் கேடுற" (மணிமே.29:16).* 3. நிரம்பியிருத்தல்; to be full. *"கொலை முங்கும் களவிடுமால்" (இரகு. நகரப்.25).*

தெ. முங்கு; ம. முங்ஙு

*[முழுங்கு→முங்கு→முங்கு-தல்.]*

**முங்குளிப்பான்** *muṅguḷippāṉ,* பெ.(n.) நீரில் மூழ்கி யிரை தேடும் உள்ளான் என்னும் பறவை; common snipe.

*[முங்கு + குளிப்பான் – முங்குளிப்பான்.]*

**முங்கொசவம்** *muṅgošavam,* பெ.(n.) பெண்கள் சேலை கட்டும் போது முன்னால் வைக்கும் மடிப்பு (கோவை.); ornamental pleating in a woman's dress hanging from the right hip.

*[முன் + கொசவம். கொசவம் = சேலை மடிப்பு வகை. கொய்சகம்→கொசவம்.]*



**முச்சக்கரம்** *muccakkaram,* பெ.(n.) முப்புவனம் பார்க்க; see *muppuvaṉam.* *"முச்சக்கரமு மளப்பதற்கு நீட்டியகால்" (பொருந.இறுதி வெண்பா.3).*

*[மூன்று + சக்கரம்.]*

**முச்சகம்** *muccagam,* பெ.(n.) முப்புவனம் பார்க்க; see *muppuvaṉam.* *"முச்சக நிழற்று முழுமதி முக்குடை" (நன்.258).*

*[மூன்று + **Skt.** சகம்.]*

**முச்சங்கம்** *muccaṅgam,* பெ.(n.) முக்கழகம் பார்க்க; see *mukkaḻagam.* *"ஆதிமுச்சங்கத் தருந்தமிழ்க் கவிஞர்" (சிலப்.பக்.8, கீழ்க் குறிப்பு).*

*[மூன்று + சங்கம்.]*

**முச்சட்டை[1]** *muccaṭṭai,* பெ.(n.) 1. அழகு; elegance, beauty. 2. ஒழுங்கு; neatness, order.

தெ. முட்சட

**முச்சட்டை[2]** *muccaṭṭai,* பெ.(n.) மூன்று சட்டை; three shirts. *ஒன்றே போல முச்சட்டை வாங்கினேன்.*

*[மூன்று + சட்டை.]*

**முச்சடை** *muccaḍai,* பெ.(n.) விபீடணன் மகளாய் இலங்கையில் சீதைக்குத் துணையா யிருந்து உதவியவள், திரிசடை; the daughter of *Vibhīṣaṇa* and companion of *Sītā* during her captivity in *laṅgā.* *"முச்சடை யென்பாளவள் சொல்ல" (கம்பரா. நித்தனை. 82).*

*[மூன்று + சடை.]*

**முச்சத்தி** *muccatti,* பெ.(n.) அரசர்க் குரியதாகக் கருதப்பட்ட மூவகை ஆற்றல் (இரகு.திக்கு.25); the three powers of a king.

*[மூன்று + சத்தி.]*

அரசர்க்குரிய மூவகை ஆற்றல் : 1) பொருள், படைகளால் அமையும் ஆற்றல் (பிரபு சத்தி), 2. அமைச்சரின் சூழ்ச்சி வன்மையால் அரசர்க்கு உண்டாகும் ஆற்றல் (மந்திர சத்தி), 3. முயற்சியின் பயனால் விளையும் ஆற்றல், ஊக்கம் (உற்சாக சத்தி).

**முச்சதுரம்** *mu-c-caduram,* பெ.(n.) 1. முக்கோணம்; triangle. *'நாற்சதுரமும் முச்சதுரமும் வில்வடிவமாகிய மூன்றுலகை' (திருமுரு.181, உரை).* 2. சதுரக்கள்ளி (மூ.அ.); square spurge.

*[மூன்று + சதுரம்.]*

**முச்சந்தி** *mu-c-candi,* பெ.(n.) 1. ஒரு நாளின் மூன்று பகுதியாகிய காலை, பகல், மாலை (திரிசந்தி); the three periods of the day. 2. மூன்று தெரு அல்லது மூன்று வழி கூடுமிடம் (திருமுரு.225, உரை); junction of three streets or three ways. 3. முற்காலத்தில் வட்டாட்சி அலுவலகப் பணியாளன் (நாஞ்.); a petty taluk officer of old days.

*[மூன்று + சந்தி. சந்தி = கூடுகை, கூடுமிடம்.]*

**முச்சந்திமண்** *muccandi-maṇ,* பெ.(n.) மூன்று தெரு கூடுமிடத்தில் உள்ள தரை மண்; mud at the junction of three streets.

*[முச்சந்தி + மண்.]*

குழந்தைகளுக்கு நோய் ஏற்படின் கண்ணேறு பட்டு விட்டதாகக் கருதி முச்சந்தி மண்ணை எடுத்து வந்து உப்பு, மிளகாய், மண் சேர்த்து குழந்தையின் தலையைச் சுற்றி நெருப்பில் போட கண்ணேறு போய் விடும் என்ற நம்பிக்கை இன்றளவும் ஊர்களில் காணும் பழக்கமாகும்.

**முச்சந்திமூப்பன்** *muccandi-mūppaṉ,* பெ.(n.) முச்சந்தியிலுள்ள ஒரு சிறு தெய்வம் (இ.வ.); a village deity, having its abode at the junction of three streets or ways.

*[முச்சந்தி + மூப்பன்.]*

**முச்சரக்கு** *muccarakku,* பெ.(n.) சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய முப்பண்டம்; the three pungents - dry ginger, pepper and long pepper (சா.அக.).

*[மூன்று + சரக்கு.]*

**முச்சலாடு** *muccalāḍu,* பெ.(n.) காது மிகச் சிறியதாய் உள்ள செம்மறியாடு; brown sheep which has very small size of ears.

மறுவ. மொச்சி ஆடு.

*[முச்சல் + ஆடு.]*



முச்சலீலிகை *muccaliligai,* பெ.(n.) வாய்நீர் (உமிழ்நீர்), சிறுநீர், விந்துநீர் (நாதநீர்) என்னும் மூவகை நீர்; the three liquids, viz. *vāy-nīr, širu-nīr, nāda-nīr* *"முச்சலீலிகை சொக்கிடுவார்" (திருப்பு.603).*

*[மூன்று + **Skt.** சலிலம் (நீர்)→சலீலிகை.]*

முச்சாரிகை *muccārigai,* பெ.(n.) குதிரை, தேர், யானை என்ற மூன்று படையும் ஒருங்குசேர்ந்து செல்லும் அணிவகுப்பு; parade of horses, chariots and elephants. *"முச்சாரிகை யொதுங்கு மோரிடத்தும்" (ஏலாதி.12).*

*[மூன்று + சாரிகை. சாரிகை = அணிவகுப்பு, வட்டமாயோடுகை.]*

முச்சி[1] *mucci,* பெ.(n.) 1. தலையுச்சி; crown of head. *"மகளை.... முச்சிமோந்து" (சூளா. இரதநூ.102).* 2. கொண்டை முடி; tuft of hair on the head. *"இவள் போதவிழ் முச்சியூதும் வண்டே" (ஐங்குறு.93).* 3. சூட்டு; creast. *"வாகையொண்பூப் புரையு முச்சிய தோகை" (பரிபா.14:7).*

ம. முச்சி.

*[உச்சி→ முச்சி.]*

முச்சி[2] *mucci,* பெ.(n.) முச்சில் (வின்.) பார்க்க; see *muccil.*

முச்சிமரம் *mucci-maram,* பெ.(n.) கலியாண முருக்கமரம்; a tree with prickles - *Erythrina indica* one bearing red flowers; the other white flowers (சா.அக.).

*[முச்சி[1] + மரம்.]*

முச்சிமுச்சிக்கல் *mucci-mucci-k-kal,* பெ.(n.) மணலில் பொருளை ஒளிக்கும் விளையாட்டு (கோவை.); a kind of children play.

மறுவ. கிச்சுக்கிச்சு தாம்பலம்.

*[முச்சி + முச்சி + கல்.]*

முச்சியமான்சுரம் *mucciya-mān-šuram,* பெ.(n.) விட்டுவிட்டு வரும் காய்ச்சல்; intermittent fever. *காய்ச்சல் விட்டுவிட்டு வரும்பொழுது வியர்வை, நடுக்கம், பிதற்றல், கழிச்சல், கக்கல் (வாந்தி) முதலிய குணங்கள் உண்டாகும்* (சா.அக.).

முச்சியன் *mucciyan,* பெ.(n.) 1. தச்சன் (யாழ்ப்.); carpenter, cabinet maker. 2. வண்ணக்காரன் (வின்.); painter.

ம. முச்சியன்

முச்சிரம்[1] *mucciram,* பெ.(n.) சூலம் (வின்.); trident.

*[மூன்று + **Skt.** சிரம்.]*

முச்சிரம்[2] *mucciram,* பெ.(n.) பெருஞ்சீரகம் (பரி.அக.); anise seed.

முச்சில் *muccil,* பெ.(n.) சிறுமுறம் (பிங்.); toy winnow.

*[முற்றில்→ முச்சில். முற்றில் = சிறுமுறம்.]*



**முச்சினி** *muccini*, பெ.(n.) மூன்றாம் மாதம் (க.அக.); third month.

**முச்சீரடி** *mucciradi*, பெ.(n.) சிந்தடி (மூன்று அடிகளைக் கொண்ட செய்யுள்); metrical line of three feet.

*[மூன்று + சீர் + அடி.]*

**முச்சீரம்** *mucciram*, பெ.(n.) மூன்று வகை சீரகம் (1. சீரகம், 2. பெருஞ்சீரகம், 3. கருஞ் சீரகம்); the three kinds of cumin (சா.அக.).

*[மூன்று + சீர் + அம்.]*

**முச்சு-தல்** *muccu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. மூடுதல்; to cover. *"தாட்செருப்புலகெலாந் தோன்முச்சுந் தரம்போல்" (ஞானவா. மாவலி.8).* 2. செய்தல்; to make. *"முச்சியே மரக்கோவை முயற்சியால்" (சிவதரு.பாவ.81).*

தெ. மீயூ; க., து. முச்சு.

*[மூய் = மூடுதல், முடிதல். மூய் → மூச்சு → முச்சு → முச்சு-தல்.]*

**முச்சுக்கருவளி** *muccu-k-karuvaḷi*, பெ.(n.) ஊர்க்குருவி; a bird - sparrow (சா.அக.).

**முச்சுடர்** *mu-c-cuḍar*, பெ.(n.) ஞாயிறு, திங்கள், தீ ஆகிய மூன்று சுடர்கள்; the three luminaries viz., *nāyiṟu, tiṅgaḷ, tī*. *"அந்திச் சேதியொளி முச்சுடர் முக்கணும்" (தக்கயாகப்.281).*

*[மூன்று + சுடர்.]*

**முச்சுடும்** *muccuḍum*, கு.வி.எ.(adv.) முச்சூடும் பார்க்க; see *muccūḍum*.

**முச்சுரம்** *muccuram*, பெ.(n.) ஊதை (வாதம்), பித்தம், சளி (சிலேட்டுமம்) முதலியவற்றால் உண்டான காய்ச்சல்; *vāta*fever, *pitta* fever and *kapa* fever (சா.அக.).

*[மூன்று + சுரம்.]*

**முச்சூடும்** *muccūḍum*, கு.வி.எ.(adv.) முழுவதும்; fully. *நாள் முச்சுடும் காத்திருந்தேன், ஆனால் அவனைப் பார்க்க முடியவில்லை.*

ம. முச்சூடும்.

**முச்சை** *muccai*, பெ.(n.) காற்றாடிப் பட்டத்தில் முக்கோணமாகக் கட்டி நூலுடன் இணைத்து முடிச்சிடும் மூன்று சிறுதுண்டு நூல்கள் (யாழ்ப்.); the three strings tied to a paper kite in a triangular form with their free ends knotted together with the line.

**முச்சொல்லலங்காரம்** *mu-c-col-alaṅgāram*, பெ.(n.) ஒரு தொடர் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டு மூன்று பொருள் கொண்டு நிற்கும் சொல்லணி வகை (வின்.); a figure of speech in which an expression is capable of three meanings when divided in three different ways.

*[மூன்று + சொல் + **Skt.** அலங்காரம்.]*

**முசகம்** *mušagam*, பெ.(n.) எலி; rat (சா.அக.).

**முசங்கி** *mušaṅgi*, பெ.(n.) ஒருவகைக் கொவ்வைக் கொடி; a common creeper of the hedges (சா.அக.).

**முசர்** *mušar*, பெ.(n.) 1. மோர் (பிங்.); butter milk. 2. தயிர் (சது.); curd.

க. மொசரு

**முசரு** *mušaru*, பெ.(n.) முசர் (தைலவ.தைல.) பார்க்க; see *mušar*.

முசருகம் *mušarugam,* பெ.(n.) பவளம்; coral (சா.அக.).

முசரை *mušarai,* பெ.(n.) வெள்ளாட்டுக்கு உண்டாகும் தொற்று நோய்; a contagious disease occures to goats.

முசல்¹ *mušal,* பெ.(n.) முயல் பார்க்க; see *muyal*(சா.அக.).

*[முயல் → முசல்.]*

முசல்² *mušal,* பெ.(n.) 1. கொம்மட்டி; gourd. 2. ஓர் பூண்டு; a plant.

முசல்காதிலை *mušal-kādilai,* பெ.(n.) முயற்காதிலை பார்க்க; see *muyar-kādilai* (சா.அக.)

*[முசல் + காது + இலை. முயற்காது போன்ற இலையை யுடைய கொடி.]*

முசல்செவிக்கள்ளி *mušal-ševi-k-kaḷḷi,* பெ.(n.) முயற்செவிக்கள்ளி பார்க்க; see *muyar-ševi-k-kaḷḷi.*

*[முசல் + செவி + கள்ளி. முயற்காது போன்ற இலையுடைய கள்ளிச் செடி.]*

முசல்மான் *mušal-māṉ,* பெ.(n.) முகம்மதியன்; Muhammed.

முசல்மூலி *mušal-mūli,* பெ.(n.) முயல் தின்னும் மூலிகை, அறுகம்புல்; harialli grass or devil's grass, *Cynodon dactylon* (சா.அக.).

*[முசல் + மூலி.]*

முசல்வலி *mušal-vali,* பெ.(n.) முசல் வலிப்பு பார்க்க; see *mušal-valippu.*

முசல்வலிப்பு *mušal-valippu,* பெ.(n.) வலிப்பு நோய் வகை (மூ.அ.); a kind of recurring fit or spasm, epilepsy.

*[முசல் + வலிப்பு.]*

முசலகன் *mušalagaṉ,* பெ.(n.) 1. முயலகன் பார்க்க; see *muyalagaṉ. "கனமாகச் செய்த முசலகன் ஒன்று" (தெ.இ.கல்.தொ.ii, 135:30).* 2. ஒரு நோய்; a disease. *"அகங்காரமாகிய முசலகனேறி" (திவ். திருமாலை.43, வியா.140).*

முசலம் *mušalam,* பெ.(n.) 1. உலக்கை (பிங்.); wooden pestle for pounding paddy. 2. போரில் பயன்படுத்தும் ஒரு படைக்கருவி (திவா.); a pestle like weapon of war, club. *"நெடு முசலங் கொண்டடிப்ப" (கம்பரா. கும்பகருண.56).*

முசலி¹ *mušali,* பெ.(n.) உலக்கையைப் (முசலத்தை) படையாகக் கொண்ட பலராமன் (பிங்.); Balarama as wielding a pestle-like weapon.

முசலி² *mušali,* பெ.(n.) 1. பல்லி (வின்.); house lizard. 2. ஓந்தி; blood sucker. 3. பச்சோணான்; chameleon. 4. உடும்பு; a large kind of lizard. 5. முதலை (திவா.); alligator. 6. கபில நிறமும் 2 1/2 விரல வளர்ச்சியும் உள்ள கடல் மீன்வகை; a sea fish, brassy brown, attaining 2 1/2 in. in length, *Lobotes Surinamensis.*

முசலி³ *mušali,* பெ.(n.) 1. தாழை (சூடா.); fragrant screwpine-*Pandanus.* 2. நிலப் பனை; ground palm plant, *Curculigo Orchioides.* 3. வெருகன் கிழங்கு; a bulbous root.

தெ. மெகலி

முசலிகா *mušaligā,* பெ.(n.) செந்தாழை; a red or deep yellow variety and very fragrant screw pine shrub - *Pandanus.*

முசலிகை[1] *mušaligai,* பெ.(n.) உடும்பு; guana.

முசலிகை[2] *mušaligai,* பெ.(n.) முசலிகை யாதனம் பார்க்க; see *mušaligai-y-ādaṉam.*

முசலிகையாதனம் *mušaligai-y-ādaṉam,* பெ.(n.) இரண்டு கையுங் காலுஞ் சம்மணங் கூட்டுவது போல் மடக்கி மார்பு நிலத்திலே தோயக் கிடக்குமாறு செய்யும் இருக்கை (ஆசனம்) வகை (தத்துவப்.108, உரை); a kind of yogic posture which consists in lying on one's chest with hands and legs folded in a peculiar way (சா.அக.).

*[முசலி[2] → முசலிகை + **Skt.** ஆதனம்.]*



முசலிகொங்கை *mušali-koṅgai,* பெ.(n.) தாழை விழுது; adventitious roots of screw pine (சா.அக.).

*[முசலி[2] + கொங்கை.]*

முசலை *mušalai,* பெ.(n.) ஒருவகைக் கோரைக் கிழங்கு; a kind of fragrant root as that of nut grass - *Cyperus rotundus* (சா.அக.).

முசற்காது *mušaṟ-kādu,* பெ.(n.) 1. மருந்துப் பூடு வகை; a medicinal plant, Ludwigia. 2. ஆட்டுக் காலடம்பு; goat's-foot creeper. *"வீக்கம்..... ஏகும் முசற்கா திலையிருக்கும் ஊரைவிட்டு" (பதார்த்த.573).*

*[முயல் → முசல் + காது.]*

கை, கால், விரை வீக்கத்தைப் போக்கும் ஒருவகைப் பூண்டு (சா.அக.).

முசற்கொம்மட்டி *mušaṟ-kommaṭṭi,* பெ.(n.) ஒருவகை முலாம்பழம் (கொம்மட்டி) (வின்.); a kind of melon, *convoloulus.*

*[முசல் + கொம்மட்டி.]*

முசற்செவி *mušaṟ-ševi,* பெ.(n.) 1. முயற் காது; ear's of the hare. 2. முயற் செவிக்கள்ளி பார்க்க; see *muyaṟ-ševi-k-kaḷḷi.* 3. முயற்காதிலை பார்க்க; see *muyaṟ-kādilai* (சா.அக.).

*[முயல் → முசல் + Skt. செவி.]*

முசற்றழை *mušaṟṟaḻai,* பெ.(n.) முயல் என்னும் பெயர் கொண்ட காட்டுப் புதர்ச் செடி; rabbit weed - *Hare leaf - Ipomoea biloba* (சா.அக.).

*[முயல் → முசல் + தழை.]*

முசற்றாழை *mušaṟṟāḻai,* பெ.(n.) முசற்றழை பார்க்க; see *mušaṟṟaḻai* (சா.அக.).

முசற்றிசை *mušaṟṟišai,* பெ.(n.) முயற்றிசை (வின்.) பார்க்க; see *muyaṟṟišai.*

முசாதகம் *mušādagam,* பெ.(n.) வெண்டாமரை (பரி.அக.); white lotus.

முசி[1]–தல் *muši-,* 2 செ.கு.வி.(v.i.) 1. அறுதல்; to be torn. *"மகுடந் தேய்ப்ப*

முசிந்து... தழும்பேறி" (பதினொ. காரை. அற்பு.76). 2. கசங்குதல்; to be crumpled, as a garment. 'முசிந்த புடைவையை யுடைய' (கலித். 96, உரை). 3. களைத்தல் (இ.வ.); to be tired. 4. ஊக்கங் குன்றுதல்; to feel discouraged. "முசியாத அத்விதீய காரணமா யென்னுதல்" (ஈடு, 2. 8:5). 5. முசி², 1, 3 பார்க்க; see *muši²*, *1, 3*. 6. முசி²–, 4 பார்க்க; see *muši²*, *4*. மூங்கில்போல் அன்னை சுற்றம் முசியாமல் வாழ்ந்திடுவீர்.

முசி²–த்தல் *muši-*, 4 செ.கு.வி.(v.i.) 1. களைத்தல் (வின்.); to faint, become tired. 2. துன்பம் கொள்ளுதல் (கிலேசித்தல்) (திவ்.பெரியதி.1. 9:4, அரும்.); to be distressed. 3. மெலிதல்; to grow thin. "என்னை வரவிட்ட பாவி முசித்துச் சதை கழியாமல்" (தனிப்பா.1, 236:3). 4. அழிதல்; to perish. "முசித்திடாமல் வாழ்ந்திருத்தி" (பிரபோத.3: 66). 5. முசி¹, 2 பார்க்க; see *muši¹*, 2. "திருவரையிலே முசிக்கையாலும்" (திவ்.திருப்பல்.9, வியா.).

முசி³–த்தல் *muši-*, 4 செ.குன்றாவி.(v.t.) திருகுதல்; to wrench, twist. "அன்னவன் முடித்தலை முசித்து" (கம்பரா.பொழிலிறு.7).

முசிட்டெறும்பு *mušiṭṭeṟumbu*, பெ.(n.) முசிற்றெறும்பு பார்க்க; see *mušiṟ-ṟ-eṟumbu*.

[முசிடு + எறும்பு.]

முசிடி *mušiḍi*, பெ.(n.) தன்னிறத்தை அடிக்கடி மாற்றும் ஒரு வகைக் கடல் மீன்; a sea fish which changes its colour.

முசிடு *mušiḍu*, பெ.(n.) முசிறு, 1, 2 (வின்.) பார்க்க; see *mušiṟu, 1, 2*.

க. முசுடு

[முசிறு→ முசிடு.]

முசிப்பாற்றி *muši-p-pāṟṟi*, பெ.(n.) இளைப்பாற்றுகை (வின்.); rest; refreshment.

[முசிப்பு + ஆற்றி. ஆற்று→ ஆற்றி.]

முசிப்பாறு–தல் *mušippāṟu-*, 5 செ.கு.வி. (v.i.) இளைப்பாறுதல் (வின்.); to rest, receive, take comfort.

[முசிப்பு + ஆறு–தல்.]

முசிப்பு *mušippu*, பெ.(n.) 1. மெலிவு; thinness, emaciation. "விலாப்புடை முசிப்பற வீங்க" (உத்தரரா. சந்திரகே.71). 2. களைப்பு (வின்.); languor, debility, fatigue, weariness. 3. அழிவு; destruction. "போகந் துய்த்து முசுப்பின்றி வாழ்தல் வாழ்வு" (பிரபோத.38:30). 4. இடை (வின்.); waist.

[முசி² → முசிப்பு.]

முசிரி *muširi*, பெ.(n.) முசிறி பார்க்க; see *mušiṟi*. "முகையவிழ் தார்க்கோதை முசிரியார் கோமான்" (முத்தொள்.6).

[முசிறி→ முசிரி.]

முசிலாப்பு *mušil-āppu*, பெ.(n.) ஒடுக்கிக் கட்டுகை (யாழ்ப்.); compression to a small bulk.

முசிவு¹ *mušivu*, பெ.(n.) முசிப்பு, 2 பார்க்க; see *mušippu, 2*. "அரிமுசிவொடு மெழ" (தேவா.832:3).

[முசி→ முசிவு.]

முசிவு² *mušivu*, பெ.(n.) கசங்குகை; crumpling. "திருப்பரியட்டத்தைக் கொண்டு வசைவும் முசிவுமற விரித்துச் சாத்தி" (திவ். பெரியாழ். 3. 4:2, வியா.பக்.594).

[முசி→ முசிவு.]

**முசிற்றெறும்பு** *muširrerumbu,* பெ.(n.) முசிறு பார்க்க; see *muširu.*

**முசிறி** *muširi,* பெ.(n.) மேற்கடற் கரையிலுள்ள பழைய துறைமுகப் பட்டினம்; Muziris, an ancient sea-port, near Cranganore. *"முழங்கு கடன் முழவின் முசிறியன்ன" (புறநா.343, பி-ம்.). "முதுநீர் முன்றுறை முசிறி முற்றி" (அகநா.57:15).*

வால்மீகி இராமாயணம் இப்பட்டினத்தை முரசீபத்தனம் என்று கூறுகிறது. சுள்ளி என்னும் பேரியாறு கடலில் கலக்குமிடத்து இருந்த பட்டினம். முற்காலத்து யவனர் முதலியோர் மிளகு முதலிய சரக்குகளை மேனாட்டிற்குக் கொண்டு செல்லும் துறைமுகம் எனத் தாலமி முதலிய யவன யாத்திரிகரால் புகழப்பட்டது. சேரனது தலைநகரமாகவும் இருந்தது (அபி.சிந்.).

**முசிறு** *muširu,* பெ.(n.) 1. செந்நிறமுள்ள எறும்பு வகை; red ant, Formica smaragdina. 2. கடுகடுப்புள்ளவ-ன்-ள்; one easily enraged; surly, irritable person. 3. முசு[1] பார்க்க (வின்.); see *mušu*[1].

*[முயிறு → முசிறு.]*

**முசு[1]** *mušu,* பெ.(n.) கருங்குரங்கு வகை; langur-Semnopithecus priamus. *"கருமை மெழுகியவை போன்றினிய வல்லா முகத்த முசுவுங் குரங்கு மிரிய" (சீவக.1414). "மைபட் டன்ன மாமுக முசுக்கலை" (அகநா.267:9). "மெய்யோ வாழிதோழி சாரல் மைபட்டன்ன மாமுக முசுக்கலை" (குறுந்.121:1, 2). "இன்முசுப் பெருங்கலை நன்மேயல் ஆரும்" (நற்.119:5).*

க. முசு; ம. மொச்ச; து. முஜ்ஜு (mujju).



**முசு[2]** *mušu,* பெ.(n.) திமில்; hump.

**முசுக்கட்டை** *mušu-k-kaṭṭai,* பெ.(n.) 1. கம்பளிப் பூச்சி; hair caterpiller or silk worm. 2. அரம்பத்தின் பற்களைப் போன்ற இலைகளையும், கம்பளிப் பூச்சி போன்ற பழங்களையும் உடைய ஒருவகைக் குத்துச் செடி; mulberry, *Morus indica - Indian mulberry* plant.

**முசுக்கட்டைப்பூச்சி** *mušukkaṭṭai-p-pūcci,* பெ.(n.) கம்பளிப் பூச்சி; hairy caterpiller.

*[முசுக்கட்டை + பூச்சி.]*

**முசுக்கை** *mušukkai,* பெ.(n.) முசுமுசுக்கை (மூ.அ.) பார்க்க; see *mušumušukkai.*

**முசுக்கொட்டைச்செடி** *mušu-k-koṭṭai-c-cedi,* பெ.(n.) முசுக்கட்டை, 2 பார்க்க; see *mušu-k-kaṭṭai,* 2. *இதன் இலை பட்டுப்புழுவிற்கு உணவாகப் பயன்படுகிறது.*

*[முசுக்கட்டை → முசுக்கொட்டை + செடி.]*

**முசுகுந்தன்** *mušukundan,* பெ.(n.) தேவர்கள் அசுரரொடு பொருதபொழுது தேவர்களுக்கு உதவிய ஒரு மன்னன்; an emperor, who assisted the *Dēvas* in their wars against the Asuras. *'வெற்றி பொருந்திய வேலையுடைய முசுகுந்த னென்னும் மன்னனுக்கு வரும் இடையூற்றை' (சிலப்.5:65, உரை).*

**முசுட்டுமுட்டைத்தைலம்** *musuṭṭu-muṭṭai-t-tailam,* பெ.(n.) முசுற்றெறும்பின் முட்டைகளினின்று வடித்தெடுக்கும் எண்ணெய்; a medicinal oil prepared from the eggs of red ants.

*[முசுடு + முட்டை + **Skt.** தைலம்.]*

**முசுட்டை** *musuṭṭai,* பெ.(n.) கொடி வகை (வின்.); a kind of creeper - *Iponoea candicans.*

மறுவ. பஞ்சி.

க. முசுடெ.

இது ஒரு வகைக் கொடி, தென்னிந்தியாவிலெங்கும் கிடைக்கக் கூடியது. இதன் கொடி மருத்துவ குணமுடையது. கைப்பு, கார்ப்புச் சுவையுடையது. இக் கொடியைக் குடிநீரிட்டாவது அல்லது பொடி செய்து இதர மருந்துகளுடன் சேர்த்தாவது கொடுக்க வளி, வெள்ளை, நீர்த்தினவு, புடை, சிறு சிரங்கு இவைகளை நீக்கும் குணமுடையது. இதை அரைத்து எண்ணெய்விட்டுக் காய்ச்சி சொறி, சிரங்கு, நமைச்சல் முதலியவைகட்குப் பூசிவர அவை குணமாகும். இது நுட்புழுக் கொல்லி (Germicide), ஊதை (வாத) மடக்கி (Anti-vata) மலமிளக்கி (Laxalive), ஆகியவற்றிற்குச் சிறந்த மருந்தாகும். இக்கொடியின் மருத்துவக் குணங்களைப் பற்றிய குறிப்புக்களை 'அகத்தியர் குணபாடப் பாடலால் அறிய முடிகிறது.

*"மாதே முசுட்டையது வாதமொடு ஐயத்தைத்*
*தீதே புரிநீரைத் தீர்க்குங்காண் –*
*வேதனைசெய்*
*வன்மலத்தைத் தள்ளும் வறட்சி*
*சொறிசிரங்கைச்*
*சன்மமறப் போக்கிலிடுஞ் சாற்று"*
*(பொருட்பண்புநூல்–குணபாடம் – 1 பக்.599)*

**முசுட்டைப்பெண்** *musuṭṭai-p-peṇ,* பெ.(n.) ஒருவகைப் புழு; a kind of worm (சா.அக.).

**முசுடர்** *musuḍar,* பெ.(n.) முசுண்டர் (சூடா.) பார்க்க; see *musuṇḍar.*

**முசுடு**[1] *musuḍu,* பெ.(n.) முசிறு (வின்.) பார்க்க; see *musiṟu. மரங்களில் அதிகமாக இருக்கும் பழுப்பு நிறப் பெரிய எறும்பு.*

*[முசிறு→முசுடு.]*

**முசுடு**[2] *musuḍu,* பெ.(n.) சிடுமூஞ்சி, சடுதியில் சினங்கொள்வோன் (முன்கோபி); irritable person. *அவர்முசுடாக இருந்தாலும் நல்லவர்.*

**முசுண்டர்** *musuṇḍar,* பெ.(n.) கீழ்மக்கள்; low, mean people. *"தவிர்தி யினி முசுண்டரவர் சங்கந் தன்னை" (சேதுபு.துரா.65).*

*[முசுடு→முசுண்டர் = முசுடு எறும்பு போல் தாழ்ந்த, கீழ்மக்கள்.]*

**முசுண்டி** *musuṇḍi,* பெ.(n.) படைக்கலக் கருவி வகைகளுள் ஒன்று (வின்.); a sledge - like weapon of war. *"முழு முரட்டண்டுவேன் முசுண்டி" (கம்பரா. பிரமாத்திர.48).*

**முசுண்டை** *musuṇḍai,* பெ.(n.) கொடி வகை; leather - berried bindweed - *Rivea ornata. "புல்கொடி முசுண்டையும்" (நெடுநல்.13). "முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பி" (புறநா.320:1). "குவையிலை முசுண்டை வெண்பூக் குழைய" (அகநா.94:2).*

க. முசுடே.

**முசுப்பதி** *musuppadi,* பெ.(n.) போர் வீரருறையுமிடம் (வின்.); barracks for soldiers.

**முசுப்பாத்தி**[1] *mušuppātti,* பெ.(n.) 1. முசிப்பாற்றி பார்க்க; see *muši-p-pāṟṟi.* 2. வேலை; work.

**முசுப்பாத்தி**[2] *mušuppātti,* பெ.(n.) வேடிக்கை, வியப்பு, பொழுதுபோக்கு; amusement, good fun. *குழந்தைகள் விளையாடிக் கொண்டு இருப்பதைப் பார்க்க முசுப்பாத்தியாக இருந்தது. இந்த ஊரில் ஒரு முசுப்பாத்தியும் இல்லை.*

*[முசிப்பு→முசுப்பு + ஆற்றி. முசுப்பாற்றி →முசுப்பாத்தி.]*

**முசுப்பிரா** *mušu-p-pirā,* பெ.(n.) நரிக் கொன்னை; a variety of cassia (சா.அக.).

**முசுப்பு** *mušuppu,* பெ.(n.) முசு² (உ.வ.) (திருவிருத்.21, வியா.) பார்க்க; see *mušu*².

தெ. முபு

*[முசு→முசுப்பு.]*

**முசும்பு-தல்** *mušumbu-,* 5 செ.கு.வி.(v.i.) முணமுணத்தல் (வின்.); to mumble, mutter murmur.

*[உசும்பு-தல்→ முசும்பு-தல்.]*

**முசுமக்கி** *mušu-makki,* பெ.(n.) மஞ்சட் காளான்; yellow mushroom.

**முசுமல்லிகை** *mušu-malligai,* பெ.(n.) காட்டு மல்லிகை; wild jasmine (சா.அக.).

**முசுமாலினி** *mušu-māliṉi,* பெ.(n.) மஞ்சட் காசி தும்பை; yellow balsam (சா.அக.).

**முசுமுசு**[1]**-த்தல்** *mušu-mušu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நீர் முதலியன கொதித்தல் (வின்.); to bubble up, as boiling water. 2. குறட்டை விடுதல் (வின்.); to snore. 3. தினவெடுத்தல் (சங்.அக.); to feel a sensation of itching.

*[முசுமுசெனல்→ முசுமுசு-த்தல்.]*

**முசுமுசு**[2]**-த்தல்** *mušu-mušu-,* 4 செ. குன்றாவி.(v.t.) உறிஞ்சுதல்; to snuff up, as a hog.

*[முசுமுசெனல் → முசுமுசு-த்தல்.]*

**முசுமுசுக்கை** *mušu-mušukkai,* பெ.(n.) சுனையுள்ள இலைகளையும் அரத்தநிறப் பழங்களையும் உடைய மருந்துக் கொடிவகை; bristly bryony, creeper, *Mukia scabrella.* *"முசுமுசுக்கை மாமூலி" (பதார்த்த.57).*

ம. முசுமுசுக்க.

**முசுமுசு க்கைக்கீரை** *mušu-mušukkai-k-kīrai,* பெ.(n.) முசுமுசுக்கையிலை; leaf of *mušumušukai* (சா.அக.).

தெ. முசுமுசுகய; இந். பிலவி; மரா.சித்ரதி.

*[முசுமுசுக்கை + கீரை.]*

மூச்சு இருமல் (அ) ஈளை நோய் (சுவாசகாசம்), கோழை முதலியவற்றிற்கு மருந்தாகப் பயன்படுத்தப்படுகிறது.

**முசுமுசுச்சாலை** *mušu-mušu-c-cālai,* பெ.(n.) பழைய புதைகுழி வகை (இ.வ.); kistvaen, ancient grave.

*[ஒருகா.முதுமக்கட்சால்→ முசுமுசுச்சால் →முசுமுசுச்சாலை.]*

**முசுமுசுப்பு**[1] *mušu-mušuppu,* பெ.(n.) 1. நீர் முதலியன கொதிக்கும் ஒலி; sound of boiling. 2. சொறியும் போது உண்டாகும் ஒலி; sound of scratching provoked by itching.

*[முசுமுசு→ முசுமுசுப்பு.]*

முசுமுசுப்பு² *mušu-mušuppu,* பெ.(n.) விருப்பம், அன்பு (சிரத்தை); eager of attention; earnestness. *"சீராட்டி வளர்த்த முசுமுசுப் பெல்லாம் திருநிறத்திலே தோன்றும்படி யிருக்கும்" (திவ்.பெரியாழ்.1. 2:12 வியா.பக்.38).*

முசுமுசெனல் *mušu-mušenal,* பெ.(n.) 1. நீர் முதலியன கொதித்தற் குறிப்பு; sound of boiling. 2. தினவெடுத்தற் குறிப்பு; itching sensation.

*[முசுமுசு → முசுமுசெனல்.]*

முசுரம் *mušuram,* பெ.(n.) புற்றுக் காளான்; mushroom growing on ant hill (சா.அக.).

முசுலி *mušuli,* பெ.(n.) குதிரையின் கணைக்காற் குழைச்சில் வீக்கங் கண்டு நொண்டச் செய்யும் நோய் வகை (அசுவசா. 107); a disease of swelling in the ankles of horse which makes it limp.

முசுவல் *mušuval,* பெ.(n.) முசுண்டை (மலை.) பார்க்க; see *mušuṇḍai.*

முசுறி *mušuṟi,* பெ.(n.) முசிறி பார்க்க; see *mušiṟi. "முசிறியன்ன நலஞ் சால் விழுப் பொருள்" (புறநா.343).*

முசுறு *mušuṟu,* பெ.(n.) 1. முசு¹ பார்க்க; see *mušu¹*. 2. முசிறு, 1, 2 பார்க்க; see *mušiṟu,1, 2.*

*[முசிறு + முசுறு.]*

மரங்களில் அதிகமாக இருக்கும் பழுப்பு நிறப் பெரிய எறும்பு வகை.

முசுறுப்புல் *mušuṟu-p-pul,* பெ.(n.) முயிற்றுப் புல் பார்க்க; see *muyiṟṟu-p-pul.*

மறுவ. அளத்துப்புல்

*[முசுறு + புல்.]*

முசுறுமுட்டை *mušuṟu-muṭṭai,* பெ.(n.) மரங்களில் இருக்கும் கட்டெறும்பைப் போன்ற சிவந்த எறும்பின் முட்டை. இலுப்பை மரத்தின் முசுறு முட்டை சிறப்பு குணம் எனக் கருதுவர். இதனால் காற்று பிடிப்பு நோய் நீங்கும் என்பர்; the egg of a red ant which has its nest in trees. The one on the tree Bassia longifolia is considered best for medicinal use (சா.அக.).

*[முசுறு + முட்டை.]*

முசுறுமுட்டைத்தைலம் *mušuṟu-muṭṭa-t-tailam,* பெ.(n.) சிவப்பெறும்பின் முட்டையி னின்று எடுக்கும் எண்ணெய்; a medicated oil extracted from the eggs of red ants.

*[முசுறுமுட்டை + **Skt.** தைலம்.]*

முசுறுமுட்டைப்பால் *mušuṟu-muṭṭai-p-pāl,* பெ.(n.) நஞ்சு (விஷம்) முறிவதற்காக வேண்டி பயன்படுத்தும் சிவப்பெறும்பின் முட்டையில் இருந்து எடுக்கப்பட்ட பால்; the juice from the eggs of red ants used as an antidote in poisons (சா.அக.).

*[முசுறு + முட்டை + பால்.]*

முசுறுமூலி *mušuṟu-mūli,* பெ.(n.) ஒருவகைத் தழுவு கொடி மூலம் தயாரிக்கும் பெரு மருந்து; a twiner - *Aristolochia indica.*

*[முசுறு + மூலி.]*

முசைப்பேயெட்டி *mušai-p-pēyeṭṭi,* பெ.(n.) மைலாலக்கடி மரம் (L.); common grey mango laurel, *Tetracantha rex-burghil.*

முஞ்சம் *muñjam*, பெ.(n.) குழந்தைகளின் தலை உச்சியிலணியும் அணி வகை; ornament worn in the crown of head by children. *"திணைபிரி புதல்வர் கயந்தலை முச்சிய முஞ்சமொடு தழீஇ" (பரிபா.16:8).*

*[முச்சி→ முஞ்சம்.]*

முஞ்சரம் *muñjaram*, பெ.(n.) தாமரைக் கிழங்கு (பரி.அக.); lotus root.

முஞ்சல் *muñjal*, பெ.(n.) இறப்பு; dying (சா.அக.).

முஞ்சி *muñji*, பெ.(n.) 1. ஒருவகை நாணல் (L.); reedy sugarcane-*Saccharum arundinaceum*. 2. மணமாகாத அந்தணர்கள் (பிரமசாரிகள்) அரையிற் கட்டும் நாணற் கயிறு; girdle formed of the reed, worn by Brahmin celibate - students. *"முப்புரி நூலினன் முஞ்சியன்" (கம்பரா.வேள்வி.22).*

முஞ்சு-தல் *muñju-*, 5 செ.கு.வி. (v.i.) 1. சாதல்; to die. *"அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்" (திருவாச.4:19).* 2. முடிதல் (உ.வ.); to end.

*[முடி-தல் → முஞ்சு-தல்.]*

முஞ்சை *muñjai*, பெ.(n.) தருப்பைப் புல்; sacrificial grass (சா.அக.).

முஞ்ஞை *muññai*, பெ.(n.) முன்னை[2] பார்க்க; see *munnai*[2]. *"மறிமேய்ந் தொழிந்த குறுநறு முஞ்ஞை..... அடகு" (புறநா.197).*

முஞல் *muñal*, பெ.(n.) கொசுகு (வின்.); mosquito, gnat.

முட்கடு *muṭ-kaḍu*, பெ.(n.) கடுமரவகை (அ.அ.); a species of *kaḍu*tree.

முட்கத்திரி *muṭ-kattiri*, பெ.(n.) முள்ளங் கத்திரி (மூ.அ.) பார்க்க; see *muḷḷaṅgattiri*.

*[முள் + கத்திரி.]*

முட்கரணை *muṭ-karaṇai*, பெ.(n.) காட்டுக் கரணை; wild yam.

*[முள் + கரணை.]*

முட்கரம் *muṭkaram*, பெ.(n.) ஓராய்தம்; club, mace, club. *"கணிச்சி முட்கரங் கோடாரி" (குற்றா.தல.தக்கன்வேள்விய.14).*

*[முள் + கரம் – முட்கரம் = முள் வடிவில் செய்யப்பட்ட ஓராய்தம், குண்டாந்தடி, தண்டாய்தம்.]*

முட்கலப்பை *muṭ-kalappai*, பெ.(n.) முனையிற் பற்களையுடைய நிலத்தை உழப் பயன்படுத்தும் கலப்பை வகை (யாழ்ப்.); a kind of harrow. *உழுவதற்கு முட்கலப்பை ஒன்று வாங்கி வந்தான்.*

*[முள் + கலப்பை.]*



முட்கா *muṭ-kā*, பெ.(n.) பச்சைப் பயிறு; greengram - *Phaseolus aureus.*

முட்காசிகம் *muṭ-kāšigam*, பெ.(n.) குருக்குச்செடி; a plant prickly poppy - *Argemone mexicana.*

முட்காபரணி *muṭkā-baraṇi,* பெ.(n.) ஒரு வகைப் பருப்பின் விதை, பாசிப்பயிறு; a kind of edible seed-*Phaseolustrilobus.*

முட்காய்வேளை *muṭ-kāy-vēḷai,* பெ.(n.) செடிவகை (L.); five - leaved wild indigo-*Tephrosia senticosa.*

முட்கிளுவை *muṭ-kiḷuvai,* பெ.(n.) கிளுவை செடிவகை (வின்.); Indian balm of gilead common hedge plant - *Balsamodendron- berryi.*

*[முள் + கிளுவை.]*

முட்கீரை *muṭ-kīrai,* பெ.(n.) கீரை வகை (வின்.); thorny spinach - *Amaranthus spinosus.*

*[முள் + கீரை.]*

முட்குடப்பழம் *muṭ-kuḍa-p-paḻam,* பெ.(n.) பலாப்பழம்; jack fruit. *"முட்குடப் பழமெல்லா மிடறி" (திருச்செந்தூர். பிள்ளை. செங்.4).*

*[முள் + குடம் + பழம். குடம் போன்றதும் மேல் பகுதியில் முள் போன்ற அமைப்புடையதுமான பலாப் பழம்.]*

முட்கொடுச்சி *muṭ-koḍucci,* பெ.(n.) தூதுவளை; a thorny climber - *Solaṇum trilobatum* (சா.அக.).

*[முள் + கொடுச்சி.]*

முட்கொன்றை *muṭ-koṉṟai,* பெ.(n.) கொடி வகை (வின்.); a species of prickly brasiletto - *Caesalpinia nuga.*

*[முள் + கொன்றை.]*

முட்கோல் *muṭ-kōl,* பெ.(n.) குதிரையைத் தூண்டும் தாற்றுக் கோல்வகை; a kind of goad for horses. *"முட்கோல் வலக்கையாற் றாங்கி" (சீவக.794).*

*[முள் + கோல்.]*

முட்சங்கம் *muṭ-caṅgam,* பெ.(n.) முட்சங்கு பார்க்க; see *muṭ-caṅgu.*

*[முள் + சங்கம். சங்கம் = சங்கு, சங்கஞ் செடி.]*

முட்சங்கு *muṭ-caṅgu,* பெ.(n.) 1. முள்ளுள்ள சங்கு வகை (வின்.); chank with thorn - like points. 2. சங்கஞ்செடி; mistletoe berry thorn.

*[முள் + சங்கு.]*



முட்சவள் *muṭ-cavaḷ,* பெ.(n.) கவைக்கோல் வகை (யாழ்ப்.); spade fork.

*[முள் + சவள்.]*

முட்சீதா *muṭ-cītā,* பெ.(n.) சீதா பழவகை; a variety of custard apple.

*[முள் + சீதா.]*

முட்சீரிதம் *muṭ-cīridam,* பெ.(n.) கிளுவை மரவகை; a kind of tree - *Balsmodendron berry* (சா.அக.).



முட்சங்கன்



முடக்கத்தான்



முதுக்கன் கிழங்கு



முருங்கை

முட்சுண்டை *muṭ-cuṇḍai,* பெ.(n.) தூதுவளை அல்லது பேய்ச்சுண்டை; prickly *Šuṇḍai-Solanum trilobatum* (சா.அக.).

*[முள் + சுண்டை. சுண்டை = செடி வகை.]*



முட்செடி *muṭ-ceḍi,* பெ.(n.) முட்களுடையச் செடி, முட்பூண்டு; a thorny shrub (சா.அக.).

*[முள் + செடி.]*

முட்செம்பை *muṭ-cembai,* பெ.(n.) ஒருவகை முட்செடி, செங்கிடை (L.); prickly sesban-*Sesbania aculeata.*

*[முள் + செம்பை. செம்பை = முள்ளுள்ள செடிவகை.]*

முட்செவ்வந்தி *muṭ-še-v-vandi* பெ.(n.) ஒருவகைச் செவ்வந்தி; a kind of flower - *Chrysanthemum genus* (சா.அக.).

*[முள் + செவ்வந்தி. செவ்வந்தி பூச்செடி வகை. முட்செவ்வந்தி என்பதற்கு ரோசா என்ற பொருள் யாழ்ப்பாணத்தில் வழங்குவதாக சென்னைப் பல்கலைக்கழகப் பேரகரமுதலி குறிப்புத் தருகின்றது.]*

முட்ட *muṭṭa,* வி.அ.(adv.) 1. நிறைந்து காணும்படி; filling up the entire space of something. *கை முட்ட வளையல்.* 2. முற்ற, முடிய, முழுவதுமாக; fully. *"முட்ட நித்தில நிரைத்த பந்தரின்" (பாரத. கிருட்.103). வயிறுமுட்ட சாப்பிட்டேன். "முட்ட நனைந்தவனுக்கு ஈரமில்லை, முழுவதும் கெட்டவனுக்குத் துக்கம் இல்லை" (பழ.). "முட்டநனைந்தார்க்குக் குளிரில்லை" "முட்டற்ற நாரிக்கு இரட்டைப் பரியமா" (பழ.). "முட்ட நனைந்தவனுக்கு முக்காடு எதற்கு?" (பழ.).*

*[முற்று→முற்ற→முட்ட.]*

முட்டகம் *muṭṭagam,* பெ.(n.) வெண்ணீ றாக்குதற்குரிய எருமுட்டை, பசுஞ்சாண உண்டை (நாஞ்.); ball of dried cow-dung, used in preparing sacred ashes.

மறுவ. எருவாட்டி

முட்டடி[1] *muṭṭaḍi,* பெ.(n.) அண்மை (வின்.); nearness, propinquity. 2. முட்டிடை பார்க்க; see *muṭṭiḍai.*

*[முட்டு + அடி.]*

முட்டடி[2]-த்தல் *muṭṭaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) கோலியாட்டத்தில் தோற்றவனுடைய முட்டியில் வென்றவன் கோலியாலடித்தல் (நெல்லை.); to strike the knuckles of a defeated player with the balls, at a game of marbles.

*[முட்டு + அடி-த்தல்.]*

முட்டடி[3]-த்தல் *muṭṭaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) முட்டாடு-தல் பார்க்க; see *muṭṭāḍu-*

*[முட்டு + அடி-த்தல்.]*

முட்டடைப்பான் *muṭṭaḍai-p-pāṉ,* பெ.(n.) வயிற்றை வீங்கச் செய்யும் மாட்டு நோய் வகை (M.Cm.D.I.248); a cattle disease, flatulent distension, of the belly

Tympanites. 2. கருங்கால் (மாட்டுவா.84); black leg.

*[முட்டு + அடைப்பான்.]*

**முட்டத்தட்ட** *mutta-t-tatta,* கு.வி.எ.(adv.) முழுவதற்கு நெருக்கமாக, கிட்டத்தட்ட; nearly, to full.

*[முட்ட + தட்ட.]*

**முட்டத்தட்டு–தல்** *mutta-t-tattu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. முழுதும் பறித்தல்; to shake down completely, as fruits from a tree. 2. முழுதும் இல்லையாதல்; to be wanting entirely.

*[முட்ட + தட்டு–தல்.]*

**முட்டத்தனம்** *mutta-t-tanam,* பெ.(n.) மூடத் தன்மை (வின்.); ignorance, stupidity.

*[முட்டன் + தனம். முட்டன் = மூடன்.]*

**முட்டம்**[1] *muttam,* பெ.(n.) 1. பொருந்திய பக்கம், பக்கச் சரிவு; slope. *"நளிமலை முட்டமும்" (பெருங்.வத்தவ.2:43).* 2. காக்கை; crow. *'குரங்கணின் முட்டம் போக்கு நீற்றும்' (கச்சி.வண்டு.75, உரை).*

*[முட்டு→ முட்டம்.]*

**முட்டம்**[2] *muttam,* பெ.(n.) முட்டான்[1] பார்க்க; see *muttān*[1].

**முட்டம்**[3] *muttam,* பெ.(n.) 1. கடலூர் (தென்னார்க்காடு) மாவட்டத்திலுள்ள (ஸ்ரீமுஷ்ணம்) திருமுட்டம் என்னும் ஒரு மாலியத்தலம்; Vaisnava, shirine in Cuddalore (South Arcot) District. *"முட்டத்துப் பன்றி முளரித் திருப்பதத்தை" (பெருந்தொ.26).* 2. கன்னியாகுமரி மாவட்டம் அகத்தீசுவரம் வட்டத்தில் உள்ள ஊர்; a village in *Kanniyā-kumari* District *இவ்வூரில் கடல் உள்நோக்கி வந்து முட்டிக் கொண்டிருப்பதால் பெற்ற பெயர்.* 3. மலையாள நாட்டில் உள்ள வள்ளுவ நாட்டில் இருந்த ஊர்; a village in Cērā country. *முதல் இராசராசன் இவ்வூருக்கு மும்முடிச் சோழ நல்லூர் எனப் பெயரிட்டு இவ்வூரில் உள்ள கோயிலுக்கு இறையிலி நிலம் வழங்கியுள்ளான் (பிற்காலச் சோழர் வரலாறு–சதாசிவம்).* 4. பலர்கூடி வாழும் ஊர் (சூடா.); village, town.

*[முட்டு→ முட்டம்.]*

**முட்டம்**[4] *muttam,* பெ.(n.) மதி முட்டுப்பாடு (மதிக்குறைவு) ஆகிய மடமை; stupidity, ignorance.

*[முட்டு→ முட்டம். முட்டு = குறைவு.]*

**முட்டமுட்ட** *mutta-mutta,* வி.அ.(adv.) 1. அடிக்கடி; frequently. 2. எப்பொழுதும் (கோவை.); when, at what time. 3. முழுதும் (கோவை); wholly. *முட்ட முட்ட நீ இப்படியே தாண்டா சீரழிவுபண்றே (கோவை). வயிறு முட்ட முட்ட சாப்பிடாதே.*

**முட்டமுடிபோக** *mutta-mudi-pōga,* கு.வி.எ.(adv.) முட்ட பார்க்க; see *mutta.*

*[முட்ட + முடிபோக – முட்டமுடிபோக = முழுவதும்.]*

**முட்டமுடிய** *mutta-mudiya,* வி.அ.(adv.) முட்ட பார்க்க; see *mutta.*

*[முட்ட + முடிய – முட்டமுடிய = முற்றிலும், முடிவுவரை.]*

முட்டரிசி *muṭṭariśi,* பெ.(n.) நன்றாய் வேகாத சோறு (உ.வ.); rice not fully boiled. *சோறு முட்டரிசியாகாமல் நன்றாகப் பார்த்து வடி.*

மறுவ. நொறுக்கரிசி

*[முட்டு + அரிசி - முட்டரிசி = வேக்காடு குன்றிய அரிசி.]*

முட்டவம் *muṭṭavam,* பெ.(n.) முட்டகம் பார்க்க; see *muṭṭagam.*

முட்டவும் *muṭṭavum,* வி.அ.(adv.) முற்ற (வின்.) பார்க்க; see *muṟṟa.*

*[முட்ட → முட்டவும்.]*

முட்டளவுகுழி *muṭṭaḷavu-kuḻi,* பெ.(n.) முழங்காலளவு ஆழமான குழி; knee deep, depth of a pit.

*[முட்டு + அளவு + குழி.]*

முட்டறிவோர் *muṭṭaṟivōr,* பெ.(n.) கடலடியில் காணும் பாறையின் தன்மை அல்லது இருப்பிடம் அறிந்தவர்; one who knows the quality of a rock and its abode beneath the sea.

*[முட்டு + அறிவோர்.]*

முட்டன் *muṭṭaṉ,* பெ.(n.) மூடன் (வின்.); dunce.

*[முட்டம் → முட்டன்.]*

முட்டா *muṭṭā,* பெ.(n.) 1. ஊர்க்கிழமை (பண்ணை), குறுநில ஆட்சி (தேவநேயம் 12:59); estate. 2. சொத்து (வின்.); property.

*[முட்டம் = பொருந்திய பக்கம், சுற்றடைப்பு. முட்டம் → முட்டா.]*

முட்டாக்கிடு-தல் *muṭṭākkiḍu-,* 5 செ. குன்றாவி. (v.t.) முகத்தைப் போர்த்தல்; to cover the face, as a veil. *'வையை யென்னு மகள் மலராகிய ஆடையை முட்டாக்கிட்டு' (சிலப்.13:173, அரும்).* 2. உள்ளடக்குதல்; to subordinate. *"தன்னழகாலே அல்லாத வழகை முட்டாக்கிடுந் திருவபிடேகத்தை யுடையவன்" (ஈடு, 8. 8:1).*

*[மூடு + ஆக்கு - மூடாக்கு → முட்டாக்கு + இடு-தல்.]*

முட்டாக்கு *muṭṭākku,* பெ.(n.) 1. தலையை மூடும் துணி; veil. *முட்டாக்கை இழுத்து மூடு.* 2. போர்வை (சிலப்.13:173, அரும்.); overall mantle.

மறுவ. முக்காடு

*[மூடு + ஆக்கு - மூடாக்கு → முட்டாக்கு.]*

முட்டாட்டம்[1] *muṭṭāṭṭam,* பெ.(n.) 1. முட்டாள் தன்மை; stupidity. 2. அறிவின்மை யாலுண்டாகும் செருக்கு; pertinacity or conceit arising from ignorance. *அவன் முட்டாட்ட மாடுகிறான்.*

*[முட்டம் + ஆட்டம்.]*

முட்டாட்டம்[2] *muṭṭāṭṭam,* பெ.(n.) முட்டுகை (வின்.); butting.

*[முட்டு + ஆட்டம். ஒ.நோ. E.butt, meet end to end.]*

முட்டாடு-தல் *muṭṭāḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) குவித்தல் (இ.வ.); to form into a pile or heap.

*[முட்டு + ஆடு-தல்.]*

முட்டாபலம் *muṭṭā-balam,* பெ.(n.) சங்கஞ் செடி; misllitoe berry thorn - *Azima tetracatha* (சா.அக.).

**முட்டாவாள்** *muṭṭāvāḷ,* பெ.(n.) இடையறாமல் தொடர்ந்து ஊர்ப் பொது வேலை நிகழ்வதற்கு ஆள் எடுக்க அளிக்கும் வரி வகை (கடமை); an ancient tax collected for the purpose of appointing labourers for uninterrupted village work.

மறுவ. முட்டி, முட்டையாள்.

**முட்டாள்¹** *muṭṭāḷ,* பெ.(n.) மூடன்; dunce, simpleton, stupid fellow. *"முட்டாளரக்கர்" (திருப்பு.141). "முட்டாளை நம்பி எந்த வேலையும் செய்யாதே". "முட்டாளுக்கு இரண்டு ஆள்". "முட்டாளுக்கு சினம் (கோபம்) மூக்கின் மேலே". "முட்டாளுக்கு என்ன சொன்னாலும் காது கொடுத்துக் கேளான்". "முட்டாள் தனத்திற்கு முதல் பங்குக்காரன்". "முட்டாள் பயலுக்கு இரட்டைப் பரியம்".*

ம. முட்டாள்.

*[முட்டு + ஆள். அறிவைப் பயன்கொள்ளத் தெரியாததால் பிறரால் குறைவாக மதிப்பிடப்படும் ஆள்.]*

**முட்டாள்²** *muṭṭāḷ,* பெ.(n.) 1. ஊர்தியினடியில் அதைத் தாங்குவது போல் வைக்கும் படிமை; image placed underneath a vehicle as if in support. 2. கொத்து வேலைச் சிற்றாள்; mason's assistant, boy or girl cooly. *"செங்கலுக்கு நீரெடுத்து முட்டாளாய் நிற்பாரும்" (பணவிடு.285).*

க. முட்டாள்

*[முட்டு + ஆள் – முட்டாள் = முட்டும் ஆள், முட்டித் தாங்கும் ஆள், தாங்கும் உருவம்.]*

**முட்டாள்வேலை** *muṭṭāḷ-vēlai,* பெ.(n.) மூடச் செயல் (வின்.); work of a blunderer.

*[முட்டாள் + வேலை]*

**முட்டாற்றுக்கோல்** *muṭṭāṟṟu-k-kōl,* பெ.(n.) தூக்குக் கோல் (இ.வ.); steel-yard.

*[முள் +தாற்றுக்கோல். தாற்றுக்கோல் = இருப்பு முட்கோல், துலைக்கோல், நிறைகோல்.]*

**முட்டாறு** *muṭṭāṟu,* பெ.(n.) முட்கோல் பார்க்க; see *muṭ-kōl. "முட்டாற்றிற் குத்தி யுழுப்பெருது பொன்றப் புடைத்து" (சீவக.2783).*

*[முள் + தாறு. எருது, குதிரை, யானை ஆகியவற்றைத் தூண்டி செலுத்தப் பயன்படும் கூரிய முனையுள்ள கோல்.]*

**முட்டான்¹** *muṭṭāṉ,* பெ.(n.) 1. அணையாது எரிந்து கொண்டிருக்கும் நெருப்பு மூட்டம் (இ.வ.); fuel placed over the flame to keep it steadily burning. *'குளிருக்கு முட்டான் போடு'.* 2. திருநீறு நீற்றுவதற்குரிய சாணவுருண்டை; ball of cow dung used in preparing sacred ashes. *திருநீறுக்கு முட்டான் போடு.*

*[முள் → முட்டு → முட்டான் (வே.க.).]*

**முட்டான்²** *muṭṭāṉ,* பெ.(n.) முட்டான் மஞ்சள் (நெல்லை.) பார்க்க; see *muṭṭāṉ-mañjaḷ.*

*[முட்டு → முட்டான்.]*

**முட்டான்³** *muṭṭāṉ,* பெ.(n.) சிறிய மேசை; stool.

*[முட்டு → முட்டான்.]*



முட்டான்மஞ்சள் *muṭṭāṉ-mañjaḷ*, பெ.(n.) மஞ்சட்கிழங்கு; root of turmeric.

*[முட்டான்[2] + மஞ்சள்.]*

முட்டி[1] *muṭṭi*, பெ.(n.) 1. விரல்களை மடக்கியதும் மேடாகத் தெரியும் எலும்பு; முழங்காலில் உள்ள வட்டமான ஓடு (சில்லு); knuckle, knee cap. *கால் முட்டியிலும் கை முட்டியிலும் அடித்துத் துன்புறுத்தினார்கள்.* 2. விரற் பொருத்துத் தெரியும்படி முடக்கிய கை; fist. 3. முட்டிக்கையாற் குத்துங் குத்து; blow with the fist. *"முட்டிகள் படப்பட" (பாரத. வேத்திர.56).* 4. நான்கு விரல்களை யிறுக முடக்கி அவற்றின் மீது கட்டை விரலை முறுகப் பிடிக்கும் இணையா வினைக்கை (சிலப்.3:18, உரை); a gesture with one hand in which the four fingers are closed tightly and the thumb is pressed over them one of 33 *iṉaiyā-viṉaikkai.* 5. கைப்பிடியளவு; handful. *"முட்டி மாத்திரமேனும்" (சேதுபு. இராமதீ.3).* 6. பிடியளவாக இடும் ஐயம் (பிச்சை); alms. *"முட்டிபுகும் பார்ப்பார்" (தனிப்பா.1, 142:39).* 7. படைக்கலன் பிடிக்கும் வகை; a mode of holding a weapon. *"துய்ய பாசுபதத் தொடையு முட்டியும்" (பாரத. அருச்சுனன்றவ. 129).* 8. அறுபத்து நாலு கலைகளுள் கையுள் மறைத்ததை இன்னதென்று அறிந்து கூறும் கலை; art discovering anything concealed in the closed hand, one of aṟupattu-nālu-kalai. *நட்டமுட்டி சிந்தனை.* 9. உடைந்த செங்கலின் துண்டு (நெல்லை.) (இ.வ.); broken brick. 10. முட்டிகை (யாழ். அக.) பார்க்க; see *muṭṭigai.* 11. கைமுட்டி போல் செய்யப்படும் வெல்லம்; jaggery.

*[முட்டு→ முட்டி. முட்டுதல் = எதிர்ப்படுதல், பொருந்துதல், மோதுதல்.]*

வடவர் காட்டும் மூலம் முஷ். முஷ் = திருடு, கொள்ளையடி சிறைகொண்டுபோ, உளங்கவர், மகிழ்ச்சியால் மயக்கு, உடை, அழி என்று பொருள்.

"Musṭi, m.f. stealing, filching W., the clenched hand, fist (perhaps ovig, the hand closed to grasp anything stolen)" (வ.மொ.வ.) எனவே வடமொழி மூலம் இந்தப் பொருளுக்கு முற்றிலும் பொருந்தாது.

முட்டி[2] *muṭṭi*, பெ.(n.) 1. நஞ்சு தீர்க்கும் மந்திர பண்டுவ வகை (பெரியபு.திருஞா.1060); a magic cure for poison. 2. வரிவகை (புதுக். கல்.504); a tax.

முட்டி[3] *muṭṭi*, பெ.(n.) 1. பெரும்பாலும் 'கள்' இறக்குவதற்குப் பயன்படும் கலயம்; an earthen pot with a narrow mouth used mostly for collecting toddy from palm trees. *கள்ளு முட்டி.* 2. சிறுபானை; small earthen pot. *'சட்டி முட்டிகளை சடுதியில் கழுவிப்போடு' (உ.வ.)*

முட்டி[4] *muṭṭi*, பெ.(n.) 1. எட்டி மரம்; a poisonous tree - *Strychnos nux-vomica.* 2. சிற்றாமுட்டி; pavomia zeylanica. 3. பேராமுட்டி; pavonia odorata. 4. பேய்த் தும்மட்டி; bitter apple.

*[முள்→ முட்டு→ முட்டி (வே.க.).]*

முட்டி[5] *muṭṭi*, பெ.(n.) 1. சம்மட்டி எனப்படும் மீன் வகை; a kind of fish called *śammaṭṭi. சம்மட்டி போன்ற தோற்றம்*

*உடைய மீன் வகை.* 2. சிப்பி வகை; (M.M.); cockle - *Cardium ekule.*



**முட்டி[6]** *mutti,* பெ.(n.) 1. ஒரு பலவளவு (தைலவ.தைல.1.); a standard weight 1 palam. 2. இருபது கவளி கொண்ட அளவு; quantity consisting of 20 kavali. *முட்டி வெற்றிலை (தஞ்.).* 3. திருவிழாவில் ஊரெல்லைத் தெய்வத்திற்குப் படைக்கும் பலிச்சோறு (M.M.); oblation of ball of rice deposited on the boundary line of a village in a festival.

*[முள்→ முட்டு→ முட்டி (வே.க.).]*

**முட்டிக்கத்திரி** *mutti-k-kattiri,* பெ.(n.) ஒருவகைக் கத்தரிக்காய்; a species of brinjal.

மறுவ. முட்டைக் கத்திரி.

*[முட்டி + கத்திரி.]*

**முட்டிக்கல்** *mutti-k-kal,* பெ.(n.) 1. எல்லை யறியும் கல்; boundary stone. 2. சுவர் (பாது)காப்பிற்காக மூலையில் போடப்படும் 'ட' வடிவக் கல் (கோவை); 'L' shaped stone built in corner for the safty of wall.

*[முட்டி + கல்.]*

**முட்டிக்கால்** *mutti-k-kāl,* பெ.(n.) 1. முழங்கால்; knee. முட்டிக்கால் தட்டும்படி நடக்காதே. 2. முழங்காற் சிப்பி அல்லது பொருத்து; knee - pan, knee cap. 3. முட்டிக்காற் பின்னல்; knock-knee. *"கழுதையின் முட்டிக் கால் வீரம் உதை பட்டவர்க்குத்தான் தெரியும்" (பழ.).*

*[முட்டி + கால்.]*

**முட்டிக்கால்தட்டு-தல்** *mutti-k-kāl-tattu-,* 5 செ.கு.வி.(v.i.) முட்டுக்கால்தட்டு-தல் பார்க்க; see *muttu-k-kāl-tattu-.*

*[முட்டி + கால் + தட்டு-தல். முழங்காற் சிப்பிகள் ஒன்றோடொன்று உரசுதல்.]*

**முட்டிக்கால்போடு-தல்** *mutti-k-kāl-pōdu,* 20 செ.கு.வி.(v.i.) தண்டனையாக மண்டி போடுதல்; kneel down as punishment. *வீட்டுப் பாடம் எழுதிக் கொண்டு வராததால் ஆசிரியர் முட்டிபோடச் சொன்னார்.*

*[முட்டி + கால் + போடு-தல்.]*

**முட்டிக்காலன்** *mutti-k-kālan,* பெ.(n.) முட்டுக்கால் தட்டும்படி நடப்போன் (வின்.); knock knee person.

*[முட்டி + கால் + அன்.]*

**முட்டிக்காற்கழுதை** *mutti-k-kār-kaludai,* பெ.(n.) பின்னங்கால் முட்டிகள் தட்டும்படி நடக்குங் கழுதை; donkey.

*[முட்டி + கால் + கழுதை.]*

**முட்டிக்கீரை** *mutti-k-kirai,* பெ.(n.) குமுட்டிக் கீரை; a kind of greens - *Celosia nodiflora.*

*[முட்டி + கீரை.]*

முட்டிக்கை *mutti-kai,* பெ.(n.) 1. விரல் மடக்கியுள்ளகை; clenched fist. 2. முழங்கை பார்க்க; see *mulangai.*

*[முட்டி + கை.]*

முட்டிக்கால் என்பது போன்றே முட்டிக்கை என்பதும் பொருத்தையே சிறப்பாகக் குறிக்கும். முன்னது காற்பொருத்தும் பின்னது விரற் பொருத்தும் ஆகும் (வே.க.முல்[4]). ஆசிரியர் மாணவனின் முட்டிக்கையிலேயே அடித்தார் (உ.வ.).

முட்டிக்கொள்(ளு)-தல் *mutti-k-kol(lu)-,* 16 செ.கு.வி. (v.i.) 1. இருட்டு கரணியமாக பார்வை குறைவால் எதிர் இருப்பவற்றில் மோதிக்கொள்ளுதல்; to hit the opposite things when moving in dark. *இருட்டில் எதிலும் முட்டிக்கொள்ளாமல் நடந்துவா (உ.வ).* 2. சினம், கவலை முதலியவற்றால் தலையை மோதிக் கொள்ளுதல் (வின்.); to hit or dash one's head, as in despair or in anger. 3. பெரு முயற்சி யெடுத்தல் (உ.வ.); to put forth great efforts to try one's utmost.

*[முட்டு →முட்டி + கொள்(ளு)-தல்.]*

முட்டிகை *muttigai,* பெ.(n.) தட்டார் சிறு சுத்தி; jeweller's small hammer. *"முட்டிகை போல..... கொட்டி யுண்பாரும்" (நாலடி, 208).*

ம. முட்டி.

முட்டிச்சண்டை *mutti-c-candai,* பெ.(n.) முட்டிக்கைப்போர் (வின்.), குத்துச் சண்டை; boxing, pugilism.

*[முட்டி[1] + சண்டை.]*

முட்டிச்சுரை *mutti-c-curai,* பெ.(n.) மகிடி வாச்சியம் செய்வதற்குப் பயன்படும் சுரை (M.M.293); calabash, climber, lagenaria vulgaris, as used by snake charmers for a wind instrument.

*[முட்டி[1] + சண்டை.]*

முட்டிச்சுழி *mutti-c-culi,* பெ.(n.) மாட்டின் முதுகில் பின் முட்டியின் இருபுறமும், நான்கு விரலத்திற்குள்ளிருக்கும் தீமையை உண்டாக்குவதாகக் கருதப்படும் சுழி; circular or curved form mark four inches, on either side of the back joint at the back region of the cow which is considered to be a bad sign.

*[முட்டி + சுழி.]*

முட்டிடு-தல் *muttidu-,* 20 செ.கு.வி.(v.i.) நோய் முதலியன மிகுதல் (இ.வ.); to come to a crisis.

*[முட்டு + இடு-தல்.]*

முட்டிடை *muttidai,* பெ.(n.) 1. நெருக்கடி (இ.வ.); hardship, straits. 2. நெருக்கம்; over crowding.

*[முட்டு + இடை. முட்டு = இடுக்கம், நெருக்கம்.]*

முட்டிப்பிச்சை *mutti-p-piccai,* பெ.(n.) பிடியரிசியாகப் பெறும் ஐயம்; begging handful of rice.

*[முட்டி[1] + பிச்சை]*

முட்டிப்போர் *mutti-p-pōr,* பெ.(n.) கைகுத்துப் போர்; boxing.

*[முட்டி + போர்.]*

முட்டிபோடு-தல் *mutti-pōdu-,* 20 செ.கு.வி. (v.i.) முட்டிக்கால்போடு-தல் பார்க்க; see *mutti-k-kāl-pōdu-. நாள் தோறும் அந்த மாணவன் காலதாமதமாக*

*வருவதனால் தலைமை ஆசிரியர் அவனை முட்டி போடச் சொன்னார்.*

*[முட்டி + போடு-தல்.]*

**முட்டிமுரண்டு-தல்** *mutti-murandu-*, 5 செ.கு.வி. (v.i.) அருமுயற்சி யெடுத்தல்; to endeavour with persistence, struggle with stubbornness. *முட்டிமுரண்டி பார்த்தாலும் கிடைக்க வேண்டியதுதான் கிடைக்கும்.*

*[முட்டு + முரண்டு-தல்.]*

**முட்டிமோது-தல்** *mutti-mōdu-*,5 செ.கு.வி. (v.i.) 1. கூட்டத்தில் நெரிந்து முன்னேறி முயல்தல்; surge up. *திரை அரங்கத்தில் படத்தைப் பார்ப்பதற்காக மக்கள் முட்டி மோதுகின்றனர். சிற்றம்பலத்தானைக் காண மக்கள் முட்டி மோதுகின்றனர்.*

மறுவ. முட்டிமுரண்டு-தல்

*[முட்டி + மோது-தல்.]*

**முட்டியடி-த்தல்** *mutti-y-adi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. முட்டிச்சண்டையிடுதல்; boxing. 2. முட்டிப்போர் செய்தல் போல் வருந்தித் திண்டாடுதல்; to struggle hard. *வேலைக்கு முட்டியடிக்கிறான் (உ.வ.).*

*[முட்டி + அடி-த்தல்.]*

**முட்டியுத்தம்** *mutti-y-uttam*, பெ.(n.) முட்டிப்போர் பார்க்க; see *mutti-p-pōr.*

**முட்டிரட்டி** *muttiratti*, பெ.(n.) முட்டிரட்டு பார்க்க; see *muttirattu.* *"நிசதி கலவரை அரிசி பத்தெட்டுக் குத்தல் ஸ்ரீகோயிலுக்கே கொண்டு சென்று அளப்போமானோம், அளப்போமாயின் முட்டிரட்டி பந்மாகேசுவரர் தண்டிக் கொள்ள ஒட்டிக் குடுத்தோம்" (தெ.கல்.தொ.12, கல்.61).*

*[முட்டி + இரட்டி.]*

**முட்டிரட்டு** *muttirattu*, பெ.(n.) தடை பெற்றால் இரட்டிப்பாக கொடுப்பது; giving in double due to interdict. *"பொன்.... இறுத்து முட்டிரட்டி அட்டுவோமானோம்" (திருத்துறைப் பூண்டி கல்.29–37).*

*[முட்டி + இரட்டு.]*

**முட்டிருமல்** *muttirumal*, பெ.(n.) விட்டு விட்டு வரும் ஒருவகைத் தொடர் இருமல் (குத்திருமல்); irritating cough caused by inflammation.

மறுவ. தொண்டைப்புகைச்சல், கக்குவான் இருமல்.

*[முட்டு + இருமல்.]*

**முட்டிவெற்றிலை** *mutti-verrilai*, பெ.(n.) மட்டமான வெற்றிலை வகை; betel leaves, of a coarse variety.

*[முட்டி + வெற்றிலை.]*

**முட்டு[1]-தல்** *muttu-*,5 செ.குன்றாவி.(v.t.) 1. தலையை அல்லது தலையால் ஒன்றின் மீது மோதுதல்; knock one's head against something, bump one's head against, butt. *மஞ்சுவிரட்டு விழாவினை வேடிக்கைப் பார்த்துக் கொண்டு இருந்தவர்களில் சிலர் மாடு முட்டி இறந்தனர். கன்று ஆ(பசு)விடம் முட்டி முட்டிப் பால் குடித்தது. சுவரில் தலையை முட்டிக் கொண்டு கதறி அழுதான். "துள்ளித் தூண் முட்டுமாங்கீழ்" (நாலடி, 64).* 2. தடுத்தல்; to oppose, hinder. 3. எதிர்த்தல்; to assault, attack. 4. எதிர்ப்படுதல்; to meet. *"வரையா நாளிடை வந்தோன் முட்டினும்" (தொல். பொருள்.112) (சூடா.).* 5. பிடித்தல்; to grip,

grasp. "குழல்ாள்... கையினைக் கையாலவன் முட்டிடலும்" (உத்தரரா. திக்குவி.16). 6. தேடுதல்; to seek. "நாடிநாங் கொணருது நளினத் தாளைவான் மூடிய வுலகினை முற்றுமுட்டி யென்று" (கம்பரா.சம்பாதி.7).

க. முட்டு; ம. முட்டுக.

[முல் (பொருந்தல்) →முது→முத்து→முட்டு →முட்டு–தல்.]

**முட்டு²–தல்** *muṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. குன்றுதல்; to be deficient. "முட்டா வின்பத்து முடிவுல கெய்தினர்" (சிலப். 15:197). 2. முடிதல்; to end. "முட்டடி யின்றிக் குறைவு சீர்த்தாகியும்" (தொல். பொருள். 435). 3. தடைப்படுதல்; to be hindered, prevented. "வெண்ணெல்லி னரிசிமுட்டாது... பெறுகுவீர்" (மலைபடு. 564). "இத்தன்ம முட்டில்" (தெ.கல்.தொ.3, 95). 4. பொருதல்; to fight, attack. "குலப் பகைஞன் முட்டினான்" (கம்பரா.நட்புக்.50). 5. வழுவுதல்; to fail, stray away. "புண்ணிய முட்டாள்" (மணிமே.16:49). 6. அழுகை, கண்ணீர், சினம் முதலியவை வெளிப்படுகிற வகையில் நிறைதல், நிரம்புதல்; surge up of tears, anger, etc. brim with tears, etc, to be full. "தோயமுட்டிய தோடவிர் மலர்த்தடம்" (காஞ்சிப்பு.கழுவாய்.79). பேசப்பேச அவன் கண்களில் நீர் முட்டியது. அவனுக்குச் சினம் முட்டிக் கொண்டு வந்தது. 7. நெருங்குதல்; to be close.

[முட்டு¹–தல்→முட்டு²–தல்.]

**முட்டு³** *muṭṭu*, பெ.(n.) 1. முழங்கால், முழங்கை விரல்கள், இவற்றின் பொருத்து; knee, elbow, knuckle. 2. குவியல் (உ.வ.); heap. பண்டங்கள் முட்டு முட்டாய்க் கிடக்கின்றன. 3. பற்றுக்கோடு; prop, support. விலங்குகள் கொம்பால் தாக்குகை. 4. தடை; hindrance, obstacle, impediment. "முட்டுவயிற் கழறல்" (தொல்.பொருள்.271). "பன்முட்டின்றாற் றோழி நங்களவே" (அகநா.122). 5. முட்டுப்பாடு, 1, 2 பார்க்க; see *muṭṭu-p-pāḍu, 1, 2.* 6. உட்சென்று கடத்தலருமை; difficulty, as in passing. "முட்டுடை முடுக்கரும்" (சீவக.1216). 7. குறைவு; shortness, deficiency. "மூவேழ் துறையு முட்டின்று போகிய" (புறநா.166). 8. கண்டு முட்டுக் கேட்டுமுட்டு முதலிய தீட்டுக்கள் (பெரியபு.திருஞான.692); pollution. 9. மாதவிடாய் (வின்.); menses. 10. விலங்கு முதலியன கொம்பு முதலியவற்றால் தாக்குகை; battering, butting. 11. சில்லறைப் பொருள்கள்; sundry things. 'கட்டினேம் முட்டுக்களை' (புறநா. 206, உரை). வீட்டில் உள்ள தட்டு முட்டு சாமான்கள் கூட விடாமல்திருடர்கள் எடுத்துச் சென்று விட்டனர். 12. மேடு (வின்.); rising ground, high,ground. 13. ஒன்று விழாமல் தாங்கும் அல்லது நகராமல் தடுக்கும் கட்டை முதலியவை; prop, block. வண்டியை நிறுத்திச் சக்கரங்களுக்குக் கல்லால் முட்டுக் கொடுத்துவிட்டுக் கடைக்குள் சென்றான். விளம்பரப் பலகை சாய்ந்து விடாமல் இருக்க முட்டு வைத்தான். 14. கருவி; tool, instrument. "கொற்றரு மிருப்பு முட்டு" (திருவாலவா.45:8). 15. சந்தி; junction. போகவர இடையூறாக முட்டில் நிற்காதே. 16. கடலடியில் உள்ள குன்று மற்றும் பாறை போன்ற தடைகள் (மீனவ.); hindrance of rock and hill under the sea. கடலில் எங்கெங்கு முட்டுகள் உள்ளன வென்று கண்டறிந்தவரே தொழில் திறனுடையவராய்க் கருதப்படுவார்.

தெ., க., ம., து. முட்டு.

*[முல் → முது → முத்து → முட்டு=தாங்கல். ஒ.நோ.**ME.** buttress; **OF.** bouterez; **mod. F.** bouteret; **F.** bouter; **E.** buttress; **F.** butt; **OF.** abutex (but, end), end on, **E.** abut, border upon, abutment, a lateral support (வே.க.).]*

முட்டுக்கால், முட்டுக்கொடுத்தல், முட்டுச் சட்டம், முட்டுச்சுவர் முதலிய தொடர்ச் சொற்கள் தாங்கல் கொடுத்தலையும்; முட்டுக்கட்டை, முட்டுத்தொய்வு (மூச்சுவிட முடியாமை), முட்டுப்பாடு முதலிய தொடர்ச்சொற்கள் தடைபண்ணுதலையும், முட்டுமுடுகு, முட்டிடை முதலிய தொடர்ச் சொற்கள் வழி யிடுக்கத்தையும்;

முட்டுச்சீலை, முட்டுப் பட்டினி, முட்டுப் பாந்தை முதலிய தொடர்ச்சொற்கள் தீட்டுப் பாட்டையும்

முட்டுக்கால் தட்டுதல், முட்டுக்குட்டு, முட்டுக் குத்துதல் (முழங்கால் மேல் நிற்றல்), முட்டுப்பிடிப்பு, முட்டுவலி, முட்டு வீக்கம் முதலிய தொடர்ச்சொற்கள் முழங்கால் வினையையும் உணர்த்தும் (வே.க.முல்⁴).

**முட்டு⁴–தல்** *muṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) **1.** கூடுதல்; to meet, assemble, together. **2.** பொருந்துதல்; to be suitable.

*[முத்து → முட்டு → முட்டு–தல். ஒ.நோ.**O.E.** mitan; **O.S.** motian; **ON.** moeta; **Goth.** (ga) motjan; **E.**meet; **OE.** motian; **E.** moot, assembly. **E.** wikenagemot = Anglo - Saxon national council or parliament. **OE.**witena, wisemens (ge) mot, meeting (வே.க.).]*

**முட்டுக்கட்டியாடு–தல்** *muṭṭu-k-kaṭṭi-y-āḍu-*, 5 செ.கு.வி.(v.i.) பொய்க் கால்களில் நின்று நடத்தல் (வின்.); to go on stilts.

*[முட்டுக்கட்டு + ஆடு–தல். பொய்க்காற் கட்டையில் நின்று நடத்தல்.]*

**முட்டுக்கட்டு–தல்** *muṭṭu-k-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **1.** பற்றுக்கோடாகக் (ஆதாரமாகக்) கட்டை முதலியன கொடுத்தல்; to prop, buttress. **2.** வழியை யடைத்தல் (வின்.); to blockade, shut up a place or an entrance, shut or beset the avenues of a town. **3.** வயல் முதலியவற்றுக்கு வரப்பு (எல்லை) கட்டுதல் (யாழ்ப்.); to form ridges as in a field; to limit or confine within bounds. **4.** முழந்தாளைக் கைகளாற் கட்டுதல்; to sit cross - legged with arms folded round the knees. *முட்டுக் கட்டி உட்காராதே.*

*[முட்டு + கட்டு–தல்.]*

**முட்டுக்கட்டை** *muṭṭ-k-kaṭṭai,* பெ.(n.) **1.** தேர் போன்ற இழுக்கப்படும் ஊர்திகளை நிறுத்துவதற்குப் பயன்படுத்தப்படும் சாய்வு அமைப்பிலுள்ள கட்டை; stumbling block wood used as break to stop the pulling car. *தேரை நிறுத்த முட்டுக்கட்டைபோடு.* **2.** தாங்கு கம்பம்; block or stake, as a prop. or support. *வாழைக்கு முட்டுக்கட்டை கொடுக்க வேண்டும்.* **3.** தடைசெய்பவன்–பவள்–வது; person or object which is a hindrance. **4.** மேற்கொண்டு செயல்பட முடியாதவாறு தடுப்பது; stumbling block. *உன் முன்னேற்றத்துக்கு முட்டுக் கட்டையாக இருப்பது எது?*

*[முட்டு + கட்டை. முட்டு = தடை செய்கை.]*

**முட்டுக்காடு** *muṭṭu-k-kāḍu,* பெ.(n.) கடற்கரை ஓரம் சென்னைக்கு அருகில் உள்ள ஊர்; a village, near in chennai.

இது ஒரு சுற்றுலா தலம். இங்குப் படகுத்துறை முதலியவை அமைந்துள்ளன.

**முட்டுக்காய்** *muṭṭu-k-kāy,* பெ.(n.) 1. முட்டுக்குரும்பை பார்க்க; see *muṭṭu-k-kurumbai.* 2. பனி (பரி.அக.); ice.

*[முட்டு + காய்.]*

**முட்டுக்காய்த்தேங்காய்** *muṭṭu-k-kāy-t-teṅgāy,* பெ.(n.) முட்டுக்குரும்பை பார்க்க; see *muṭṭu-k-kurumbai.*

*[முட்டுக்காய் + தேங்காய்.]*

**முட்டுக்காரன்** *muṭṭu-k-kāraṉ,* பெ.(n.) மத்தளமடிப்பவன் (தஞ்சை); one who plays on *mattaḷam.*

*[முட்டு + காரன். முட்டுதல் = தாக்குதல்.]*

**முட்டுக்கால்** *muṭṭu-k-kāl,* பெ.(n.) 1. தாங்கு கால்; support, pedestal, beam to support an old wall or tree. *'தேவருலகுக்கு முட்டுக்காலாக ஊன்றிவைத்த' (பெரும்பாண். 346, உரை).* 2. முட்டிக்கால் பார்க்க; see *muṭṭi-k-kāl.*

மறுவ. கட்டைக்கால்

*[முட்டு + கால். முட்டு = தாங்கல்.]*

**முட்டுக்கால்தட்டு-தல்** *muṭṭu-k-kāl-taṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) முழங்கால் ஒன்றோடொன்று இடித்தல்; to have one's knees knocking together, as a donkey.

மறுவ. முட்டி தட்டுதல், முட்டிக்கால் தட்டுதல்.

*[முட்டுக்கால் + தட்டு. முட்டுக்கால் = முழங்கால்.]*

**முட்டுக்குச்சி** *muṭṭu-k-kucci,* பெ.(n.) தொண்டானையும், தொண்டாங் கயிற்றையும் இணைக்கும் பகுதியில் உள்ள குச்சி (உழவு); block of wood which helps in the water lift.

*[முட்டு + குச்சி.]*

தொண்டன் = தோலால் செய்யப்பட்டு கவலைச் சாலின் கீழ்ப்புறம் நீர் வெளியேறும் பகுதியில் கட்டப்பட்டிருப்பது. தொண்டாங்கயிறு = தொண்டானுடன் பிணைக்கப்பட்டு நுகத்தடியில் கட்டப்படும் கயிறு.

**முட்டுக்குட்டு** *muṭṭu-k-kuṭṭu,* பெ.(n.) முட்டுவலி (பைஷஜ.257); பார்க்க; see *muṭṭu-vali.*

தெ. முட்டுகுட்டு.

*[முட்டு + குட்டு. முட்டு = முழங்கால்.]*

**முட்டுக்குடிசை** *muṭṭu-k-kuḍišai,* பெ.(n.) மாதவிலக்குக் காலத்தில் இருளர் இனப் பெண்கள் தங்கும் குடிசை; a cottage of Erular ladies to stay at the period of menses time.

*[முட்டு + குடிசை. முட்டு = மாதவிலக்கு.]*

**முட்டுகுத்து-தல்** *muṭṭu-kuttu-,* 5 செ.கு.வி. (v.i.) முழங்கால் மேல் நிற்றல் (வின்.); to fall upon one's knees.

*[முட்டு + குத்து-தல். முட்டு = முழங்கால்]*

**முட்டுக்குரும்பை** *muṭṭu-k-kurumbai,* பெ.(n.) முற்றாத இளநீர் (இ.வ.); very immature coconut.

*[முட்டு + குரும்பை. முள் →முட்டு = குறைவு, முற்றாதது. குரும்பை = இளநீர். தெங்கு, பனைகளின் இளங்காய். முட்டுக்குரும்பை = சிறு தென்னம் பிஞ்சு அல்லது பனம் பிஞ்சு (வே.க.).]*

**முட்டுக்கொடு-த்தல்** *muṭṭu-k-koḍu,* பெ.(n.) 1. சாய்வுக்கு எதிர்ப்புறமாகக் கொம்பு நிறுத்துதல்; to put up a prop. *வாழை*

*காற்றில் சாயாமல் இருக்க ஒரு மூங்கில் கொம்பை முட்டுக் கொடு.* 2. இடையூறு செய்தல்; to put an obstacle in the way.

*[முட்டு + கொடு–த்தல். முட்டு = தாங்குதல்.]*

**முட்டுக்கொம்பு** *muttu-k-kombu,* பெ.(n.) ஏற்றக்கோல் (சால்கோல்) கயிறு துலானில் கீழ் இறங்காமல் இருக்கப் பயன்படும் கொம்பு (உழவு); a wooden pole which helps the picotah not to descend from its position.

*[முட்டு + கொம்பு. கால்கோல் = ஏற்றக்கோல். துலான் = அடிப்பக்கம் பருத்தும் மேற்பக்கம் சிறுத்தும் உள்ள மரம். அடிப்பக்கத்தில் ஏற இறங்க மிதிப்படி இருக்கும். இது நீரிறைக்கும் ஏற்றத்தில் பயன்படும்.]*

**முட்டுக்கோல்** *muttu-k-kōl,* பெ.(n.) கிட்டி (இறுக்குங்கோல்); clamps. *"முட்டுக்கோல் கொண்டு அபகரித்த தனத்தை" (ஈடு, 5. 3:9 ஜீ).*

*[முட்டு + கோல்.]*

**முட்டுச்சட்டம்** *muttu-c-cattam,* பெ.(n.) துளைக்கருவிகளைத் திருப்பும் சட்டம் (உதைமானச் சட்டம்) (C.E.M.); brace, strut.

*[முட்டு = கருவி. முட்டு + சட்டம்.]*

**முட்டுச்சந்து** *muttu-c-candu,* பெ.(n.) மேற்கொண்டு செல்ல முடியாமல் முடிந்து விடுகிற சிறு தெரு; blind alley, dead end street. *முட்டுச் சந்தில் வண்டியை நிறுத்தி வை.*

*[முட்டு + சந்து. முட்டு = தடை.]*



**முட்டுச்சீலை** *muttu-c-cilai,* பெ.(n.) மாதவிலக்குக் காலத்தில் அணிந்து கொள்ளும் புடவை (வின்.); cloth worn by a woman in her periods. *"வகையறியாதே வண்ணான் பொறவுக்குப் போனா முட்டுச் சீலையை வெளுக்கச் சொன்னான்" (பழ.).*

*[முட்டு = தீட்டு, மாதவிலக்கு. முட்டு + சீலை.]*

**முட்டுச்சுவர்** *muttu-c-cuvar,* பெ.(n.) உதைமானச் சுவர் (C.E.M.); buttress.

*[முட்டு + சுவர். முட்டு = தாங்கல் (தாங்குதல்)]*

**முட்டுச்சேலை** *muttu-c-cēlai,* பெ.(n.) முட்டுச்சீலை பார்க்க; see *muttu-c-cilai.*

*[முட்டு + சேலை.]*

**முட்டுத்தலைக்கல்** *muttu-t-talai-k-kal,* பெ.(n.) மீன்பிடி வலையின் கீழ்ப்பகுதி கடலடியில் உட்காரும் பொருட்டு வலையின் கீழ்ப்பகுதியிற் கட்டப் பெறும் கல் (தஞ்சை. மீனவ.); a stone tied at the bottom of the fishing net to make it sit under the sea.

*[முட்டு + தலை + கல்.]*

**முட்டுத்தொய்வு** *muttu-t-toyvu,* பெ.(n.) மூச்சு நோயால் மூச்சுவிடுதலில் ஏற்படும்

இடர்ப்பாடு (வின்.); difficulty in breathing, as from pulmonary disease.

*[முட்டு + தொய்வு. முட்டு = தடைசெய்கை, இடையூறு. தொய்வு = மூச்சு (சுவாசம்) முட்டு.]*

முட்டுப்பட்டினி *muṭṭu-p-paṭṭiṉi,* பெ.(n.) கண்டு முட்டுக் கேட்டு முட்டுக்களால் நேரிடும் பட்டினி; fasting to a tone for meeting a heretic or hearing about heretics. *"பறி தலைக்கையர்.... முட்டுப் பட்டினிகளோடும்... பாழிசெல்ல" (திருவாலவா. 37:74).*

*[முட்டு + பட்டினி. பட்டினி = உணவு கொள்ளாமை. முட்டு = தீட்டு.]*

முட்டுப்படு-தல் *muṭṭu-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. துன்புறுதல்; to be pressed, perplexed, to be in difficulty or extremity, as one beset by creditors. 2. தடைப்படுதல்; to be hindered. *'அறத் தொழில்கள் முட்டுப்படாத..... நன்னெஞ்சினோர்' (பட்டினப். 204, உரை).*

*[முட்டு + படு-தல்.]*

முட்டுப்பாடு *muṭṭ-p-pāḍu,* பெ.(n.) 1. தடுமாற்றம்; dilemma. எதைத் தேர்வு செய்வது என்பதில் அவருக்கு முட்டுப்பாடு. 2. தட்டுப்பாடு; need, want. *'கூடும் பொருள்கள் கூடாமையாலுள்ள முட்டுப்பாடு' (கலித்.93, பக்.565, உரை). அவருக்குப் பொருள் முட்டுப்பாடு.* 3. இடையூறு; trouble, distress. *'பரத்தையரெல்லார்க்கும் முட்டுப்பாடு உண்டாதலும் உண்டு' (கலித்.93, உரை, பக்.564). ஒருவர் முன்னேறும்போது எத்தனையோ முட்டுப்பாடுகள் வரும்.* 4. முட்டு[2], 6 (சிலப்.15, 164, உரை) பார்க்க; see *muṭṭu[2], 6.* 5. தீது (சூடா.); evil.

*[முட்டுப்படு→ முட்டுப்பாடு. முட்டு தடைசெய்கை.]*

முட்டுப்பாந்தை *muṭṭu-p-pāndai,* பெ.(n.) முட்டுச்சீலை (பரவ.) பார்க்க; see *muṭṭu-c-cīlai.*

*[முட்டு + பாந்தை. முட்டு = தீட்டு.]*

முட்டுப்பிடிப்பு *muṭṭu-p-piḍippu,* பெ.(n.) மூட்டுப் பகுதியில் ஏற்படும் ஊதை நோய் (கீல்வாயுநோய்) (M.L.); formation of a stiff joint, Anchylosis.

*[முட்டு + பிடிப்பு. முட்டு = முழங்கால்.]*

முட்டுமுடுகு *muṭṭu-muḍugu,* பெ.(n.) உட்சென்று கடத்தலருமை (நாஞ்.); difficulty, as in passing.

*[முட்டு + முடுகு. முட்டு = வழி இடுக்கம்.]*

முட்டுயுத்தம் *muṭṭu-yuttam,* பெ.(n.) கைக்குத்துச் சண்டை; boxing, pugilism.

மறுவ. முட்டிச்சண்டை

*[முட்டு + **Skt.** யுத்தம். **Skt.** yuddha > த. யுத்தம் = போர்.]*

முட்டுவலி *muṭṭu-vali,* பெ.(n.) பெண்களுக்கு மாதவிலக்குக் குற்றத்தால் ஏற்படும் ஒருவகைக் கருப்பப்பை நோய்; a disease of the uterus in females - *Dysmenorrhoea.*

*[முட்டு = மாதவிலக்கு. முட்டு + வலி.]*

**முட்டுவாள்** *muṭṭu-vāḷ,* பெ.(n.) கைவாள் (C.E.M.); hand saw.

*[முட்டு + வாள். முட்டுவாள் = நீளம் குறைவான வாள்.]*



**முட்டுவாதம்** *muṭṭu-vādam,* பெ.(n.) முட்டியில் காற்று பிடிப்பு ஏற்படுவதால் முடக்கவும் நீட்டவும் முடியாமல் சிறிது தூரம் நடந்தாலும் கவிழ்ந்து விழுவதைப் போல தோன்றும் ஒருவகைக் காற்று பிடிப்பு நோய்; a disease of the knee joint-*Rheumatism.*

*[முட்டு + வாதம். **Skt.** வாதம் > த. ஊதை நோய், வளிநோய்.]*

**முட்டுவாளை** *muṭṭu-vāḷai,* பெ.(n.) அடித் தொடையிற் புறப்படும் கட்டி வகை; abscess in the thigh or near the groin.

மறுவ. தொடை வாழைநோய்.

**முட்டுவீக்கம்** *muṭṭu-vīkkam,* பெ.(n.) 1. முழங்கால் வீங்குகை (M.L.); inflammation of the synovial membrane the knee - joint - *Synovitis.* 2. கணுக்களின் வீக்கம்; swelling the joints.

*[முட்டு + வீக்கம். முட்டு = முழங்கால், முழங்கை விரல்கள் இவற்றின் பொருத்து. வீக்கம் = உடல் உறுப்பு வீங்குகை, நீர்ச்சுரப்பால் உடல் வீங்கும் நோய்.]*

**முட்டுளசி** *muṭṭuḷaśi,* பெ.(n.) ஒருவகைத் துளசி (பதார்த்த.308); a kind of basil - *Acanthospexmum his pidum.*

*[முள் + துளசி. முள்ளுள்ள துளசி வகை.]*

**முட்டுளி** *muṭṭuḷi,* பெ.(n.) தச்சுக் கருவி வகை (கோவை); a kind of carpenter's instrument.

*[முட்டு + உளி.]*



**முட்டுற்றவன்** *muṭṭuṟṟavaṉ,* பெ.(n.) 1. குறைவுள்ளவன்; needy person. 2. அறிவீனன்; ignorant or foolish person.

*[முட்டு + உறு – முட்டுறு→ முட்டுற்றவன்.]*

**முட்டுறடு** *muṭṭuṟaḍu,* பெ.(n.) முட்டொறடு (பைபிள்) பார்க்க; see *muṭṭoṟaḍu.*

*[முள் + துறடு.]*

**முட்டை[1]** *muṭṭai,* பெ.(n.) 1. பறவைகளில், ஊர்வனவற்றில் பெண்ணினம் இடும், குஞ்சு வளர்வதற்கான கருவைக் கொண்ட நீள்

கோள அல்லது உருண்டை வடிவப் பொருள்; குறிப்பாக உண்பதற்குப் பயன்படுத்தும் கோழி முட்டை; egg, especially, egg of a hen. *"புலவுநாறு முட்டையை.....கிழங்கொடு பெறூஉம்" (புறநா.176). பறவைகள் மரங்களில் கூடுகட்டி முட்டை இடுகின்றன. முதலை மணலில் முட்டை இடுகிறது. முட்டைப் பொரியல், முட்டைக் குழம்பு.* 2. பாலூட்டிகளில், பெண்ணின் இனப் பெருக்க மண்டலத்தில் உருவாகும், விந்துவை ஏற்றுக் கருவாக மாறும் சிறு உருண்டை; ovum. 3. முட்டை வடிவ எண், சுழி; zero. *பையன் எல்லாப் பாடங்களிலும் முட்டை.* 4. முட்டை வடிவ சிறு கரண்டி அளவு; measure of a teaspoon (which is egg shaped). *"ஒரு முட்டை நெய்" (பதினொ. சேத்.16). "நெய்முட்டை யொன்று" (தெ.கல். தொ.2, 91, 115). ஒரு முட்டை எண்ணெய் ஊற்றித் தாளிக்கவும் வாங்கியுள்ளான்.* 5. முட்டை வடிவ உலகம் (உலக கோளம்); world as a globe. *"திசைமுகன செய்த முட்டை கீண்டிலது" (கம்பரா.திருவடி.66).* 6. உடம்பு; body. *"முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்" (திருமந்.163).* 7. சாணி யுருண்டையை வட்டமாகத் தட்டிக் காயவைத்த வறட்டி; dry cake of cowdung. *"நெருப்புக்கு முட்டையும்" (அருட்பா.i, திருவருள்.105). மண்ணுகுடம் கொண்டு போகும் மாமா நீ மச்சினிய பார்க்கணும்னா? முட்டை வறட்டிய தட்டனுமா.*

ம. முட்டை; க. முட்டெ.

*[முல் (வளைதல்)→முள்→முட்டு→முட்டை.]*

**முட்டை²** *muṭṭai,* பெ.(n.) தவிடு; bran.

**முட்டைக்கண்** *muṭṭai-k-kaṇ,* பெ.(n.) 1. பிதுங்கியுள்ள விழி; goggle eye. 2. உருண்டை விழி; large rolling eye.

*[முட்டை + கண் (வே.க.).]*

**முட்டைக்கண்ணீர்** *muṭṭai-k-kaṇṇīr,* பெ. (n.) 1. சொட்டுச் சொட்டாய் விழும் கண்ணீர்; dropping of tears. 2. கண்ணீர்ப் பெருந்துளி (வின்.); large drops of tears.

*[முட்டை + கண்ணீர்.]*

**முட்டைக்கத்தரி** *muṭṭai-k-kattari,* பெ. (n.) முட்டை போன்ற வடிவமுடைய கத்தரி; brinjal.

மறுவ. முட்டிக்கத்தரி

*[முட்டை + கத்தரி.]*

**முட்டைக்கார்** *muṭṭai-k-kār,* பெ.(n.) கார்காலத்தில் விளையும் நெல்வகை (C.G.); a kind of paddy.

*[முட்டை + கார்.]*

**முட்டைக்கால்** *muṭṭai-k-kāl,* பெ.(n.) முட்டை போன்ற சிறுகரண்டி; small spoon.

*[முட்டை + கால்.]*

**முட்டைக்காளான்** *muṭṭai-k-kāḷāṉ,* பெ. (n.) முட்டை வடிவத்தைப் போன்ற ஒருவகைக் காளான்; an ovaly shaped mush room.

மறுவ. குடைக்காளான்

*[முட்டை + காளான்.]*

**முட்டைக்கூடு** *muṭṭai-k-kūḍu,* பெ.(n.) முட்டையின் வெளிப்புறக் கூடு; egg shell.

*[முட்டை + கூடு.]*

**முட்டைக்கோங்கு** *muṭṭai-k-kōṅgu,* பெ.(n.) தணக்கு மரவகை (L.); whirling nut- *Gyrocarpus jacquini.*

*[முட்டை + கோங்கு.]*

**முட்டைக்கோசு** *muttai-k-kōšu,* பெ.(n.) வெளிர்ப் பச்சை நிற இலைகளை அடுக்கடுக்காகக் கொண்ட முட்டை வடிவுடைய இலை கறி தரும் செடி வகை; cabbage - *Brassica oleracea capitata.*

*[முட்டை + கோசு. H.cosh.]*

**முட்டைக்கோழி** *muttai-k-kōḻi,* பெ.(n.) 1. முட்டையிடும் கோழி; fowl. 2. பெட்டைக் கோழி; hen.

*[முட்டை + கோழி. முட்டை இடும் பெட்டைக் கோழி.]*

**முட்டைச்சாம்பல்** *muttai-c-cāmbal,* பெ. (n.) 1. வரட்டிச் சாம்பல் (வின்.); ash of burnt cowdung. 2. வரட்டிச் சாம்பலும் விளக்கெண்ணெயுங் குழைத்திடும் மருந்து; mixture of cowdung, ash and castrol oil, used medicinally.

*[முட்டை + சாம்பல்.]*

**முட்டைத்தகுத்தல்** *muttai-t-taguttal,* தொ. பெ.(vbl.n.) முள் தைத்தது போன்ற குத்தல் வலி; acute piercing pain, like the run of a thorn.

*[முள் + தைத்தல் + குத்தல்.]*

**முட்டைத்தயிலம்** *muttai-t-tayilam,* பெ. (n.) முசுட்டுமுட்டைத்தயிலம் (நாஞ்.) பார்க்க; see *mušuttu-muttai-t-tayilam.*

*[முட்டை + **Skt.** தயிலம்.]*

**முட்டைத்தோல்** *muttai-t-tōl,* பெ.(n.) முட்டைக் கருவின் மேலாக உரைபோல இருக்கும் மெல்லிய தோல்; a membrane lining inside the egg.

*[முட்டை + தோல்.]*

**முட்டைநாறி** *muttai-nāṟi,* பெ.(n.) 1. வெதுப்படக்கி (மூ.அ.); false nettle. 2. நீண்ட மரவகை; fetid - tree.

*[முட்டை + நாறி.]*

**முட்டைப்பாசி** *muttai-p-pāši,* பெ.(n.) ஒருவகை நீர்ப்பூடு (M.M.609); aquatic plants with inflated appendages to roots, especially - *Utricularia stellaris.*

*[முட்டை + பாசி. பாசி = நீர்ப்பாசி, கடற்பாசி.]*

**முட்டைப்பாரை** *muttai-p-pārai,* பெ.(n.) ஐந்து விரலம் நீளமுள்ள கடல்மீன் வகை (யாழ்ப்.); a sea fish, attaining 5 in. in length.

*[முட்டை + பாரை. பாரை = மீன் வகை.]*

**முட்டைப்பை** *muttai-p-pai,* பெ.(n.) சினைப்பை; ovarium.

*[முட்டை + பை.]*

**முட்டைமுடக்கெலும்பு** *muttai-muda-k-kelumbu,* பெ.(n.) முழங்காலெலும்பு; knee bone - *Patella.*

*[முட்டை + முடக்கு + எலும்பு. முட்டை வடிவ முழங்காலெலும்பு.]*

**முட்டையோடு** *muttai-ōdu,* பெ.(n.) 1. முட்டையின் மேலோடு; egg shell. 2. கோழி முட்டையோடு; fowl egg shell.

*[முட்டை + ஓடு. கோழி முட்டையின் ஓடு மாழைத்துகள்களைச் சுண்ணகமாக்கும் தன்மையுடையது.]*

**முட்டைவடிவு** *muttai-vadivu,* பெ.(n.) நீண்ட உருண்டை வடிவம் (வின்.); spheriod, elliptical shape.

*[முட்டை + வடிவு.]*

**முட்டைவெண்கரு** *muṭṭai-veṇ-karu,* பெ. (n.) முட்டைக்குள்ளிருக்கும் வெள்ளைக் கரு; white of an egg - the albumen.

*[முட்டை + வெண்கரு.]*

**முட்டைவெள்ளை** *muṭṭai-veḷḷai,* பெ. (n.) முட்டையின் வெண்கரு கலந்த சுதை; white lime mixed with the white of eggs.

*[முட்டை + வெள்ளை.]*

**முட்டொளை** *muṭṭoḷai,* பெ. (n.) வீணைத் தண்டின் நடுவே செல்லுந்தொளை; foramen spinale.

*[முள் + தொளை.]*

**முட்டொறடு** *muṭṭoṟaḍu,* பெ. (n.) இறைச்சியைத் தொங்கவிடும் முள் (வின்.); flesh - hook.

*[முள் + துறடு – முட்டுறடு→ முட்டொறடு.]*

**முட்பரம்பு** *muṭ-parambu,* பெ. (n.) முட்களுள்ள பரம்புப் பலகை (இ.வ.); harrow.

*[முள் + பரம்பு. முட்களுள்ள பரம்புப் பலகை.]*



**முட்பலா** *muṭ-palā,* பெ. (n.) ஆண்மையை உண்டாக்கும் ஒருவகைப் பலா, வேர்ப்பலா; a species of jack that promotes the potency of men.

*[முள் + பலா.]*

**முட்பலாசு** *muṭ-palāšu,* பெ. (n.) 1. முள் முருக்கு; a tree - *Erythrina indica.* 2. இலைப் புரசு; butea frondosa.

*[முள் + பலாசு.]*

**முட்பலுகு** *muṭ-palugu,* பெ. (n.) முட்பலுவு பார்க்க; see *puṭ-paluvu.*

*[முள் + பலுகு. பலுவு→ பலுகு. பலுவு = பரம்புப் பலகை.]*

**முட்பலுவு** *muṭ-paluvu,* பெ. (n.) முட்பரம்பு பார்க்க; see *muṭ-parambu.*

*[முள் + பலுவு. பலுவு = பரம்புப் பலகை.]*

**முட்பன்றி** *muṭ-paṉṟi,* பெ. (n.) முள்ளம் பன்றி; an animal porcupine - *Hedge hog - Echinus.*

*[முள் + பன்றி.]*

**முட்பாகல்** *muṭ-pāgal,* பெ. (n.) முள்ளுள்ள பாகற்காய்; a variety of bitter gourd.

*[முள் + பாகல்.]*

**முட்புளிச்சை** *muṭ-puḷiccai,* பெ. (n.) புளிச்சை வகை (L.); thorny hemp bendy - *Hibiscus surattensis.*

*[முள் + புளிச்சை. புளிச்சை = ஒருவகைச் செடி.]*

**முட்புறக்கனி** *muṭ-puṟa-k-kaṉi,* பெ. (n.) பலாப்பழம்; jack fruit. *"முட்புறக்கனி யின்றேனும்" (நைடத. நாட்டுப்.20).*

*[முள் + புறம் + கனி. புறத்தே முள்ளோடு இருக்கும் பழம்.]*

**முட்பூல்** *muṭ-pūl,* பெ.(n.) முட்பூலா பார்க்க; see *muṭ-pūlā.*

**முட்பூலா** *miṭ-pūlā,* பெ.(n.) பூலாச் செடி வகை; black berried feather foil - *Phyllanthus reticulatus.*

*[முள் + பூலா.]*

**முட்பூலாஞ்சி** *muṭ-pūlāñji,* பெ.(n.) முட்பூலா பார்க்க; see *muṭ-pūlā.*

**முடக்கடி** *muḍakkaḍi,* பெ.(n.) 1. தடை (வின்.); hindrance, objection, thwarting. 2. வருத்தம் (இ.வ.); straits, difficulties.

*[முடக்கு+ அடி.]*

**முடக்கத்தான்** *muḍakkattāṉ,* பெ.(n.) முடக்கொற்றான் பார்க்க; see *muḍa-k-koṟṟāṉ*(சா.அக.).

மறுவ. முடக்கறுத்தான் கொடி, இந்திர வல்லி.

**முடக்கம்[1]** *muḍakkam,* பெ.(n.) 1. தடை; restraint, hindrance, obstacle. *"எய்து மது முடக்கமானால்" (அரிச்.பு.நகர்நீங்.21).* 2. அடக்கம் (பிங்.); contraction. 3. கைகால் முடங்குகை; lameness, being crippled by paralysis. 4. வளைவு; bend, curve. *'வாளையினது பகுத்தவாயை யொக்க முடக்கத்தை உண்டாக்கி... விரலிடத்தேயிட்ட முடக்கென்னு மோதிரம்' (நெடுநல்.143-4, உரை).* 5. பணமுடை; want, as of money. 6. பணம் முதலியன தேங்கிக் கிடக்கை; lying idle, as money in a bank.

*[முடக்கு→ முடக்கம்.]*

**முடக்கம்[2]** *muḍakkam,* பெ.(n.) 1. தடை ஏற்பட்ட அல்லது தடுக்கும் நிலை; stoppage. *பணி முடக்கத்தால் பொருளாக்கம் நின்றுவிட்டது.* 2. பயனாகாத வகையில் தங்கிவிட்ட நிலை; freeze. *அரசு நடவடிக்கையால் அயல்நாட்டு வங்கியில் போட்டிருந்த பணம் முடக்கமாகிவிட்டது.*

*[முடக்கு → முடக்கம்.]*

**முடக்கம்செய்தல்** *muḍakkam-šeydal,* தொ.பெ.(vbl.n.) நொண்டியாகச் செய்கை; to cripple or mutilate or maim a person.

*[முடக்கம் + செய்தல்.]*

**முடக்கம்மை** *muḍakkammai,* பெ.(n.) முடக்குமாரி பார்க்க; see *muḍakku-māri.*

*[முடக்கு + அம்மை.]*

**முடக்கற்றான்** *muḍakkaṟṟāṉ,* பெ.(n.) முடக்கொற்றான் (தைலவ.தைல.93) பார்க்க; see *muḍakkoṟṟāṉ.*

**முடக்கறுத்தான்** *muḍakkaṟuttāṉ,* பெ.(n.) முடக்கொற்றான் பார்க்க; see *muḍak koṟṟāṉ.*

*[முடக்கு + அறுத்தான்.]*

**முடக்கறை** *muḍakkaṟai,* பெ.(n.) மறைந்து அம்பெய்தற்குரிய மதிலுறுப்பு; inner mound of a fortification, as cover for bowmen. *'பகழியினை யுடைய முடக்கறையாற் சிறந்த எயிலிடத்து' (பு.வெ.6:24, உரை).*

*[முடக்கு + அறை.]*

**முடக்கன்** *muḍakkaṉ,* பெ.(n.) தாழை; a fragrant screw pine.

*[முடங்கல்→ முடக்கன். முடங்கல் = தாழை.]*

**முடக்கு¹–தல்** *mudakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மடக்குதல்; to bend, as knee, arm, etc. *"முடக்கிச் சேவடி" (திவ்.பெருமாள்.7:2).* 2. சுற்றிக் கொள்ளுதல்; to wind round, wrap, as one's person. *"நாகங்கச்சா முடக்கினார்" (தேவா.955, 1).* 3. தடுத்தல் (அக.நி.); to prevent, hinder. 4. முடங்கச் செய்தல்; to cause to bend or contract, to disable, as one's limbs. *'வளிநோய் அவனை முடக்கி விட்டது' (வின்.).* 5. நிறுத்துதல்; to cease activity, to stop, discontinue. *பணமுடையால் சீட்டை முடக்கிவிட்டான்.* 6. வேய்தல்; to roof in, as a hut; to cover. *குடிசை முடக்கி வைத்தேன் (வின்.).*

*[முடங்கு–தல்→ முடக்கு–தல்.]*

**முடக்கு²–தல்** *mudakku-,* 5 செ.கு.வி.(v.i.) படுத்துக் கொள்ளுதல் (உ.வ.); to lie down.

*[முடங்கு–தல்→ முடக்கு–தல்.]*

**முடக்கு³** *mudakku,* பெ.(n.) 1. வளைவு; curve, bend. *'மகளிர் காலிற் பாடகம் ஒரு கம்பியாய்ப் பல முடக்காலே போக்கும் வரவும் உண்டானாற் போல' (சீவக.510, உரை).* 2. முடங்கும் நாக்கு; tongue. *"அண்ண மூடெழ முடக்கினை யழுத்தி" (தணிகைப்பு. அகத்தியனருள்.280).* 3. தெருவின் கோணம்; corner of a winding street. *அத்தெரு மூலை முடக்காயிருக்கிறது (வின்.).* 4. முடக்கு மோதிரம் (நெடுநல்.143–4, உரை); a kind of ring. 5. முடக்கறை (பு.வெ. 5: 1, கொளு.) பார்க்க; see *muda-k-karai.* 6. தடை (இ.வ.); hindrance. 7. சுணக்கம் (இ.வ.); delay. 8. வேலையின்மை; unemployment. 9. சீற்றம் (இ.வ.); anger, wrath. 10. நோய் வகை (வை.மு.); a disease. 11. மூலை; corner. 12. கோடித் திருப்பம்; last turning. *'முடக்குத் தூம்பினின்றும் வடக்கு நோக்கிப் போன வாய்க்கால்' (தெ.கல். தொ.7:137).* 13. நெரிந்த வளைவு; bend, curve.

க. முடுக்கு.

*[முடங்கு→ முடக்கு.]*

**முடக்கு⁴–தல்** *mudakku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. செயல்பாடு தொடர முடியாதபடி தடைப்படுத்துதல்; stop, so as not to proceed further, cripple. *சிக்கன நடவடிக்கையைக் கரணியம் காட்டி வேலை வாய்ப்புத் திட்டங்களை முடக்கிவிடுதல் கூடாது. போக்குவரத்து நெரிசல் கரணியமாக வழக்கமான பணி சிறிது நேரம் முடக்கப்பட்டது.* 2. பணத்தை, பயன்பாடு குறைவான ஒன்றில் முதலீடு செய்தல்; lock up capital, funds, etc, make a dead investment. *செயலாக்கத் திறன் இல்லாத திட்டத்தில் பல கோடி உருபாவை இந்த நிறுவனம் முடக்கிவிட்டது.* 3. நுழைவு ஆவணம் முதலியவற்றைப் பயன் படுத்தாதவாறு அல்லது வங்கியில் உள்ள பணத்தைப் பெறமுடியாதவாறு தடுத்தல்; confiscate, freeze an account. *இரு வங்கிகளில் அவர் கணக்கில் உள்ள பணத்தை முடக்கி வைக்க அரசு ஆணை பிறப்பித்தது.* 4. ஒருவரின் நடவடிக்கைகளைக் குறிப்பிட்ட இடத்துக்குள் இருக்கும் வகையில் ஒடுக்குதல்; confine one's activities. *இவ்வளவு படித்தவளை வீட்டிற்குள் முடக்கி வைப்பது மடமை.*

*[முடங்கு–தல்→ முடக்கு–தல்.]*

முடக்குக்காய்ச்சல் *muḍakku-k-kāyccal,* பெ.(n.) முடக்கம்மை (M.L.) பார்க்க; see *muḍakkammai.*

*[முடக்கு + காய்ச்சல்.]*

முடக்குக்குடர் *muḍakku-k-kuḍar,* பெ.(n.) முடக்குக்குடல் பார்க்க; see *muḍakku-k-kuḍal.*

*[முடக்கு + குடர். குடல்→குடர்.]*

முடக்குக்குடல் *muḍakku-k-kuḍal,* பெ.(n.) சிறுகுடல் (யாழ்.அக.); small intestines.

*[முடக்கு + குடல்.]*

முடக்குச்சரக்கு *muḍakku-c-carakku,* பெ.(n.) 1. விலைப்படாது, விற்கப்படாது கிடக்குஞ் சரக்கு (வின்.); dead stock, unsaleable goods. 2. பாழான சரக்கு; damaged goods.

*[முடக்கு+சரக்கு. சரக்கு = வணிகப் பண்டம்.]*

முடக்குச்சுரம் *muḍakku-c-curam,* பெ.(n.) முடக்குக்காய்ச்சல் பார்க்க; see *muḍakku-k-kāyccal.*

மறுவ. முடக்குமாரி

*[முடக்கு + சுரம். சுரம் = காய்ச்சல்.]*

முடக்குப்பனை *muḍakku-p-paṉai,* பெ.(n.) கோணலாக வளர்ந்த பனை (வின்.); crooked palmyra.

*[முடக்கு + பனை.]*

முடக்குமாரி *muḍakku-māri,* பெ.(n.) அம்மை நோயின் கரணியமாகக் கைகால்களை முடக்கிக் காய்ச்சலை உண்டாக்கும் ஊதை நோய் (வாதம்); fever causing pain in the joints and cripple the person.

மறுவ. முடக்கம்மை

*[முடக்கு + மாரி.]*

முடக்குமோதிரம் *muḍakku-mōdiram,* பெ.(n.) நெளி மோதிரம் (சிலப்.6: 95, அரும்); a kind of ring.

*[முடக்கு + மோதிரம். மோதிரம் = விரலணி – வளைந்த விரலணி.]*

முடக்குவாதம் *muḍakku-vādam,* பெ.(n.) முடக்கூதை பார்க்க; see *muḍakkūdai.* *"முடக்கு வாதத்தர்" (கடம்ப.பு.இலீலா.131).*

*[முடக்கு + **Skt.** வாதம். **Skt.** vāda > த. வாதம் = காற்று.]*

முடக்குவாயு *muḍakku-vāyu,* பெ.(n.) முடக்கூதை பார்க்க; see *muḍa-k-kūdai.*

*[முடக்கு + **Skt.** வாயு. **Skt.** vāyu > த. வாயு = காற்று.]*

முடக்குற்றான் *muḍakkuṟṟāṉ,* பெ.(n.) முடக்கொற்றான் (வின்.) பார்க்க; see *muḍa-k-koṟṟāṉ.*

முடக்கூதை *muḍakkūdai,* பெ.(n.) 1. கை கால் முதலிய உறுப்புக்களை முடங்கச் செய்யும் பக்கவூதை நோய்; paralysis. அவனுடைய தாத்தாவுக்கு முடக்கூதை வந்து ஒருகையும் ஒரு காலும் விழுந்து விட்டது. 2. மூட்டுக் கடுகடுத்ததைப் போலவும் முறிந்தது போலவும் நடக்க வொண்ணாமல் தவழ்ந்து போகும்படி செய்யும் காற்றுப்பிடிப்பு நோய்; a disease that cripples the person rheumatic and gout disease. 3. மூட்டு வீக்கம்; arthritis.

*[முடக்கு + ஊதை. ஊதை = வளிநோய்.]*

**முடக்கெடு–த்தல்** *muḍakkeḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வளைவை நேராக்குதல்; to straighten, as anything bent. 2. சீற்றத்தைத் தணித்தல்; to appease.

*[முடக்கு + எடு–த்தல்.]*

**முடக்கொத்தான்** *muḍa-k-kottāṉ,* பெ.(n.) முடக்கொற்றான் பார்க்க; see *muḍa-k-koṟṟāṉ.*

**முடக்கொற்றான்** *muḍa-k-koṟṟāṉ,* பெ.(n.) 1. கொடிவகை; balloon-vine-*Cardios permum halicacabam.* 2. கொடிவகை; lesser balloon - vine - *Cardiospermum canescens.*

மறுவ. முடக்குற்றான், முடக்கறுத்தான்.

**Tel.** Budda-boosara; **Mal.**ulinja; **Kan.** Kanakai; **Hind.** Kanphata.

*[முடம் + கொற்றான்–முடக்கொற்றான் = முடச்சூலையைப் போக்கும் கொடிவகை.]*

இப்பூண்டு இந்தியா முழுவதும் பயிராகின்றதெனினும் தமிழ்நாடு, வங்காளம், இலங்கை போன்ற இடங்களில் மிகுதியாய் வளருகின்றன. துவர்ப்பு, கார்ப்புச் சுவை மிக்கது. இதன் இலை, வேர் முதலியன கீல், சினைப்பு, புண் கரப்பான் ஆகிய நோய்களை நீக்கும் தன்மையுடையது என்பதை அகத்தியர் குண்பாடம் என்னும் நூலால் அறியலாம்.

*"சூலைப் பிடிப்பு சொரி சிரங்கு வன்கரப்பான்*
*காலைத் தொடுவாய்வுங் கன்மலமுஞ் – சாலக்*
*கடக்கத்தா னோடிலிடுங் காசினியை விட்டு*
*முடக்கொற்றான் றன்னை மொழி"*

*(அக.குண.)*

இதன் இலை, வேர் முதலியவைகளை குடிநீரிலிட்டு குடிக்க வளிமூலம், நாட்பட்ட இருமல் நீங்கும். மேலும் இதன் இலைகளை வதக்கி அடிவயிற்றில் கட்டச் சூதகத்தை மிகுதிப்படுத்தி சூலக அழுக்குகளை வெளிப்படுத்தும். இதன் இலைச் சாற்றைக் காதில் விட காதுவலி, சீழ் வடிதல் நீங்கும் (பொருட்பண்பு நூல் –குணபாடம்.1, பக்.600).



**முடங்கசாலி** *muḍaṅga-šāli,* பெ.(n.) காரைச்செடி; carri - a wild plant (சா.அக.).

**முடங்கர்** *muḍaṅgar,* பெ.(n.) ஈன்றணிமையில் உண்டாம் நலிவு; physical exhaustion, as in confinement. *"குருளை மூன்றுட னீன்ற முடங்கர் நிழத்த" (அகநா.147).*

*[முடங்கு → முடங்கர்.]*

**முடங்கல்[1]** *muḍaṅgal,* பெ.(n.) 1. வில்போல் மடங்குகை (சூடா.); being bent, as a bow. 2. பணம் முதலியன தேங்கிக் கிடக்கை (தாயு. சிற்சுகோதய.1); lying idle, as money in a bank. 3. தடைப்படுகை; being hindered. *"முயலுநோன்பு முடங்க லிலான்" (சேதுபு. முத்தீர்.6).* 4. முடக்கூதை பார்க்க; see *muḍa-k-kūdai.* 5. சுருளோலைக் கடிதம்; roll of palm-leaf used in letter-writing. *"மண்ணுடை முடங்கல்" (சிலப்.13:96).*

6. சிறுமை; smallness. *"முடங்கன் மனாலையமே யினிதாயிற்று" (திருநூற்.30).* 7. ஓர் அணா மதிப்புள்ள சிறுகாசு (இ.வ.); small coin, equivalent to 1 anna.

*[முடங்கு → முடங்கல்.]*

முடங்கல்² *muḍaṅgal,* பெ.(n.) 1. முடத்தாழை; fragrant screw-pine. 2. முள்ளி (மலை.); Indian nightshade. 3. மூங்கில்; spiny bamboo.

*[முடங்கு → முடங்கல்.]*

முடங்கன்முலை *muḍaṅgaṉ-mulai,* பெ.(n.) தாழை விழுது (தைலவ.தைல.); switch of the fragrant screw - pine.

*[முடங்கல் + முலை.]*

முடங்கி¹ *muḍaṅgi,* பெ.(n.) 1. நோயாற் கிடையாய்க் கிடப்பவன் (யாழ்.அக.); bed - ridden person. 2. முடவன் (பாண்டி.); lame person.

*[முடங்கு → முடங்கி.]*

முடங்கி² *muḍaṅgi,* பெ.(n.) நிலத்தின் மூலை நீட்டம் (நெல்லை.); elbow or jutting part of a piece of land.

*[முடங்கு → முடங்கி.]*

முடங்கிக்கிடந்தநெடுஞ்சேரலாதன் *muḍaṅgi-k-kiḍanda-neḍuñ-jēralādaṉ,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a *Śaṅgam* poet.

*[முடங்கி + கிடந்த + நெடுஞ்சேரலாதன்.]*

இவர் சேரர் குடியைச் சேர்ந்தவர். முடங்கிக் கிடந்த என்ற அடைமொழியால் நடக்கவியலாது இருந்தார் போலும். இவர் நெய்தலைப் புனைந்து பாடுவதில் வல்லவர். இவர் பாடிய பாடல் அகநானூற்றில் கிடைக்கிறது.

*"நெடுங்கயிறு வலந்தன குறுங்க
ணவ்வலைக்
கடல்பா டவிய வினமீன் முகந்து
துணைபுண ருவகையர் பரத மாக்க
ளிளையரு முதியருங் கிளையுடன் துவன்றி
யுப்பொ யுமண ரருந்துறை போக்கு
மொழுகை நோன்பக டொப்பக் குழீஇ
யயிர்திணி யடைகரை யொலிப்ப வாங்கிப்
பெருங்களந் தொகுத்த வுழவர் போல
விரந்தோர் வறுங்கல மல்க வீசிப்
பாடுபல வமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுயர் திணிமணற் றுஞ்சுந் துறைவ
பெருமை யென்பது கெடுமோ வொருநாண்
மண்ணா முத்த மரும்பிய புன்னைத்
தண்ணறுங் கானல் வந்து நும்
வண்ண மெவனோ வென்றனிர் செலினே"
(அகநா.30).*

முடங்கிறை *muḍaṅgiṟai,* பெ.(n.) கூரையின் கூடல்வாய்; valley of a roof. *"முடங்கிறைச் சொறிதரு மாத்திர எருவி" (முல்லைப்.87).*

*[முடங்கு + இறை. முடங்குதல் = சுருங்குதல். இறை = உடலுறுப்பின் மூட்டு வாய், கூரையின் கூடல்வாய்.]*

முடங்கு¹-தல் *muḍaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. சுருங்குதல்; to contract. *"இடங்குறை வாயிலின் முடங்கி யிருந்துழி" (பதினோ. திருவிடைமும்.22).* 2. கைகால் இயங்காமற் போதல், ஊனமாதல்; to become lame or maimed crippled at paralsed. *அவருக்கு அந்த நேர்ச்சி (விபத்து)க்குப் பின் கால் முடங்கி விட்டது. "கைகால் முடங்கு பொறியிலி" (பிரபுலிங். துதி.1).* 3. வளைதல்;

to bend. "அடங்கினன் முடங்கியலம் வந்து" (உத்திரரா. வரையெடுத்த.72). 4. கெடுதல்; to be spoiled. "சிறுமை பொருந்திப் பெருமை முடங்கி" (திருப்பு.372). 5. தங்குதல்; to abide, remain, stay. "அறுகாற் பறவை முடங்கிய செஞ்சடை முக்கண னார்க்கு" (பதினொ.பொன்வண்.64). 6. படுத்துக் கொள்ளுதல்; to lie down. "பசியட முடங்கிய பைங்கட் செந்நாய்" (நற்.103). 7. செயல் தொடராதபடி தடைப்படுதல்; to be hindred, be crippled. *வேலை நிறுத்தத்தால் மருத்துவமனைப் பணிகளும் முடங்கியுள்ளன. செயல் முடங்கி விட்டது.* 8. பயன்பாடு குறைவான ஒன்றில் முதலீடு செய்யப்படுதல், தேங்குதல்; get locked up. *என் பணம் முழுவதும் நூல் வெளியிட்டதினால் முடங்கி விட்டது.* 9. ஒருவரின் நடவடிக்கைகள் குறிப்பிட்ட இடத்துக்குள் இருக்கும் வகையில் ஒடுங்குதல்; be confined to something. *எனது அம்மா நோய்வாய்ப்பட்டு முடங்கி விட்டார். அவள் பட்டப் படிப்புப் படித்தும் மடப்பள்ளியில் முடங்கிவிட்டாள்.*

தெ., க. முடுகு.

*[முடம்→முடங்கு→ முடங்கு–தல்.]*

முடங்கு² *mudaṅgu,* பெ.(n.) 1. முடக்கூதை (திவா.) பார்க்க; see *mudakkūdai.* 2. தெருச் சந்து; lane. 3. தெருவளைவு; turning in a street.

*[முடம்→முடங்கு.]*

முடங்கு³ *mudaṅgu,* பெ.(n.) 1. நிலத்தின் மூலை நீட்டம்; elbow or jutting part of a field. "மேற்கு முடங்கு குழி" (தெ.கல்.தொ.4, 194). 2. வளைவு; corner, turning.

*[முடம்→முடங்கு.]*

முடங்குவாதம் *mudaṅgu-vādam,* பெ.(n.) முடக்கூதை பார்க்க; see *mudakkūdai.*

*[முடங்கு + வாதம். Skt. vāda> த. வாதம் = ஊதை நோய்.]*

முடங்குளை *mudaṅgulai,* பெ.(n.) 1. பிடரி மயிர் (சது.); mane, as of horse. 2. பிடரி மயிருடைய அரிமா; lion, as having a mane. "முடங்குளை முகத்து...... அவுணனொடு்ம்" (கல்லா.முருக. துதி.) (பிங்.).

முடங்கொன்றான் *mudaṅgonrāṉ,* பெ.(n.) முடக்கொற்றான் பார்க்க; see *muḍa-k-koṟṟāṉ.*

*[முடம் + கொன்றான்.]*

முடஞ்சம் *mudañjam,* பெ.(n.) நிலவேம்பு; a plant - the creat - *Andrographis paniculata alias justicia paniculata cures fevers* (சா. அக.).

முடத்தாமக்கண்ணியார் *muḍa-t-tāma-k-kaṇṇiyār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a *Śaṅgam* poet.

*[முடத்தாமம் + கண்ணியார்.]*

எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றான பொருநராற்றுப்படையை இயற்றியவர். "இயற் பெயர் முன்னர்" (தொல்.சொல்.இடை.22, சேனா.) என்னும் நூற்பாவினடியில் 'ஆர்' ஈறு (விகுதி) பன்மையொடு முடிதற்கு முடத்தாமக்கண்ணியார் வந்தாரென்பது எடுத்துக்காட்டாகக் காட்டப் பெற்றிருத்தலால் இவர் பெயர் முடத்தாமக்கண்ணி என்று தெரிகின்றது. இப்பெயர் உறுப்பால் வந்ததென்றும், இவர் பெண்பாலரென்றும் கூறுவாரும் உளர். 'ஆர்' ஈறு பெற்ற பல பெயர்கள் இருப்ப, இவர் பெயரை உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டியது இவரின் சிறப்பைப்

புலப்படுத்தும். காவிரின் பெருமையைப் பொருநராற்றுப்படையில் சிறப்பாகக் கூறுகின்றார்.

*"எல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்*
*குல்லை கரியவும் கோடெரி நைப்பவும்*
*அருவி மாமலை நிழத்தவு மற்றக்*
*கருவி வானம் கடற்கோண் மறப்பவும்*
*பெருவற னாகிய பண்பில் காலையும்*
*நறையு நரந்தமு மகிலு மாரமுந்*
*துறைதுறை தோறும் பொறையுயிர்த்*
*தொழுகி*
*நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம்*
*புகுதொறும்*
*புனலாடு மகளிர் கதுமெனக் குடையக்*
*கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து*
*சூடுகோ டாகப் பிறக்கி நாடொறுங்*
*குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை*
*கடுந்தெற்று மூடையி னிடங்கெடக்*
*கிடக்குஞ்*
*சாலி நெல்லின் சிறைகொள் வேலி*
*ஆயிரம் விளையுட் டாகக்*
*காவிரி புரக்கு நாடுகிழ வோனே"*
*(பொருந.233-248).*

முடத்தி *mudatti,* பெ.(n.) 1. முடமானப் பெண்; lame woman. 2. வளைவுள்ளது; anything bent.

*[முடவன் (ஆ.பா.)→ முடத்தி (பெ.பா.).]*

முடத்திருமாறன் *muda-t-tirumāṟaṉ,* பெ.(n.) இடைச் சங்கத்திறுதியில் வாழ்ந்த பாண்டியன் (இறை. 1:5); the last of the Pāṇḍyakings of the Middle Šaṅgam.

*[முடம் + திருமாறன்.]*

இவர் இடைக் கழக இறுதியில் பாண்டிய நாட்டை ஆண்டவர். இவர் காலத்துக் கழகமிருந்த கபாடபுரம் கடல் கொள்ளப்பட்டுக் கழகம் அழிந்தபோது, உடனே இப்பொழுது உள்ள மதுரையில் கடைக் கழகத்தை நிறுவினார். இவர் பாண்டிய மரபினர். சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் மகனாகிய குட்டுவன் சேரலைப் பாராட்டியுள்ளார். இவர் பாலைத் திணையையும், குறிஞ்சித் திணையையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் தாம் பாடியுள்ள செய்யுளில் சாபம் என்ற வடசொல்லைக் (நற்.228) கையாண்டுள்ளார். இவர் பாடியதாக நற்றிணையில் இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன.

*"என்னெனப் படுமோ தோழி மின்னுவசிபு*
*அதிர்குரல் எழிலி முதிர்கடன் தீரக்*
*கண்தூர்பு விரிந்த கனையிருள் நடுநாள்*
*பண்பில் ஆரிடை வரூஉம் நந்திறத்து*
*அருளான் கொல்லோ தானே கானவன்*
*சிறுபுறம் கடுக்கும் பெருங்கை வேழம்*
*வெறிகொள் சாபத் தெறிகணை வெரீஇ*
*யழந்துபட விடரகத் தியம்பும்*
*எழுந்துவீழ் அருவிய மலைகிழ வோனே*
*(நற்.228).*

முடத்தெங்கு *muda-t-teṅgu,* பெ.(n.) கோணலாக வளர்ந்த தென்னை; crooked coco-palm. *"முடத்தெங் கொப்பன" (நன்.31).*

*[முடம் + தெங்கு. வளைந்து பிறர் நிலத்துச் சென்று நிற்பது.]*

நல்லாசிரியர் இலக்கணத்தை நான்கு உவமைகளால் (நிலம், மலை, நிறைகோல், மலர்) காட்டிய நன்னூலார், ஆசிரியர் ஆகத் தகாதவர் இலக்கணத்தையும் நான்கு உவமைகளால் கூறுகின்றார். அவற்றுள் ஒன்று 'முடத்தெங்கு'. *"கழற்குடம், மடற்பனை, பருத்திக் குண்டிகை முடத்தெங்கொப்பன" (நன்.31).* நீரூற்றல் முதலிய பல்வகை உதவிகளையும் செய்து தன்னைப் பேணி வளர்க்காத இயல்புடைய பிறருக்குத் தன்னிடத்துள்ள காய்களைத் தரும் குற்றமுடையது

முடத்தெங்கு. அதாவது வளைந்து பிறர் நிலத்துச் சென்று பயன் தரும் இயல்புடையது முடத்தெங்கு.

கொடுத்தல் முதலிய பலவகை யுதவிகளையும் செய்து தமக்கு வழிபாடு செய்யும் இயல்பில்லாத மாணாக்கருக்கு தம்மிடத் திலுள்ள கல்விப் பொருளைத் தருங் குற்றமுடையவர் ஆசிரியராகாதார். ஆதலால் அவருக்குப் பிறர் நிலத்தில் வளைந்து சென்று பயன்தரும் முடத்தெங்கு உவமையாகியது.

**முடந்தை** *mudandai,* பெ.(n.) 1. முடம்; lameness. 2. வளைந்தது; anything bent. *"முடந்தை நெல்லின் கழையமல் கழனி" (பதிற்றுப்.32:13).* 3. மாதவிலக்குத் தடைபடும் நோய் (M.L.); failure or suspended flow of the menses - *Amenorrhoea.*

*[முடம்→ முடந்தை. முடம் = தடைபடுதல்.]*

**முடம்** *mudam,* பெ.(n.) 1. வளைவு; bent. *"முடத்தொடு துறந்த வாழா வன்பகடு" (புறநா.307).* 2. வளைந்தது; anything bent. *"முடத்தாழை" (கலித்.136).* 3. கை கால் ஊனமுடன் இருப்பது; leprosy. 4. ஆடல்பாடல் முதலியவற்றின் குற்றம்; defects in singing and dancing. *"பண்ணே பாணி தூக்கே முடமே" (சிலப்.3:46).* 5. கை அல்லது கால் செயல்படாத நிலை; crippled condition of leg or arm. *முடப்பிள்ளை யானாலும் மூத்தப் பிள்ளை. கோழி மிதித்துக் குஞ்சு முடமாவது இல்லை.* 6. உறுப்புக் குறை; defective limbs or organs. 7. நொண்டி; lameness. 8. கீழ் பிடிப்பு (கீல் பிடிப்பு); orthritic.

*[முடங்கு→ முடம். முள்→முண்→முணம்→ முடம். முள் (வளைவு)]*

**முடமயிர்** *muda-mayir,* பெ.(n.) 1. இரண்டு இமைகளும் ஒட்டிக் கொண்டு காயம் (விரணம்) உண்டாகி கருமணிகள் வெளுத்துக் காணும் ஒருவகைக் கண் நோய்; a disease affecting the pupil of the eye caused by the sticking of the eye lids togethers. 2. தொண்டையில் முடி முளைப்பதல் உண்டாவதாகக் கருதப்படும் நோய் வகை; a disease said to be caused by the growth of hairs in the throat (சா.அக.).

*[முடம் + மயிர்.]*

**முடமா** *mudamā,* பெ.(n.) காட்டுமா அதாவது சாரப் பருப்பு; wild mango seed - *Buchanania angustifolia* (சா.அக.).

**முடமுடெனல்** *muda-mudenal,* பெ.(n.) ஒலிக்குறிப்பு வகை (யாழ்.அக.); onom. expr. signifying cracking noise.

**முடமோசியார்** *muda-mōśiyār,* பெ.(n.) கழகப் புலவர்; *Śaṅgam*poet.

மறுவ. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

*[முடம் + மோசியார்.]*

இவர் சோழநாட்டு உறையூரை அடுத்த ஏணிச்சேரியைச் சார்ந்தவர். முட மோசியார் என்பது உறுப்பால் வந்த பெயராகலாம். இவர் பிறப்பால் அந்தணர் என்பதை தொல்காப்பிய மரபியல் நூற்பா 74–இல் நச்சினிர்க்கினியர் கூறியுள்ளார். சேரமான் அந்துவஞ் சேரலிரும்பொறையால் ஆதரிக்கப்பட்டவர். இவரால் பாடப்பட்டோர் சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி, ஆய். புறநானூற்றில் 13, 127, 128, 129, 130, 131, 132, 133, 134, 135, 241, 374, 375 ஆகிய எண்ணுள்ள பாடல்களைப் பாடியுள்ளார். போர்க்களத்திற் பகைவரது சேனையைப் பிளந்து

கொண்டு வாள் வீரர்க்கிடையே தன் தலைமை தோன்றச் செல்லும் சோழன் களிற்றிற்குக் கடலைக் கிழித்துச் செல்லும் நாவாயையும், விண் மீன்களுக்கு இடையே விளங்கும் திங்களையும் இவர் உவமை கூறியிருக்கின்றார் (புறநா.13). ஆய் என்னும் வள்ளலுடைய கொடைச் சிறப்பு, வீரச் சிறப்பு முதலியனவும் இவராற் பலவகைகளில் பாராட்டப் பெற்றுள்ளன. இதுபற்றியே, *"திருந்துமொழி மோசி பாடிய ஆயும்" (புறநா.158)* எனப் பெருஞ்சித்திரனார் இவரைப் பாராட்டியுள்ளார்.

*"இவனியா ரென்குவை யாயி னிவனே*
*புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய*
*எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்*
*மறலி யன்னகளிற்று மிசை யோனே*
*களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்*
*பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்*
*சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப*
*மரீஇயோர் அறியாது மைந்துபட் டன்றே*
*நோயில னாகிப் பெயர்கதி லம்ம*
*பழன மஞ்ஞை யுகுத்த பீலி*
*கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்*
*கொழுமீன் விளைந்த கள்ளின்*
*விழுநீர் வேலி நாடுகிழ வோனே" (புறநா.13).*

முடரோமம் *muḍa-rōmam,* பெ.(n.) முடமயிர், 2 பார்க்க; see *muḍa-mayir, 2.*

*[முடம் + Skt. ரோமம்.]*

முடலை¹ *muḍalai,* பெ.(n.) 1. உருண்டை (பிங்.); ball, globe. 2. முறுக்கு; twist in the fibre, as of firewood. *"முடலை விறகின்" (மணிமே. 16:26).* 3. முருடு (திவா.); roughness. 4. கழலை (அக.நி.); wen, tubercle, excrescence. 5. மனவன்மை; hardness of heart. *"நன்றுணரா ராய முடலை முழுமக்கள்" (பழ.25).* 6. பெருங் குறடு (அக.நி.); large pincers.

*[முடம்→ முடல்→முடலை.]*

முடலை² *muḍalai,* பெ.(n.) புலால் நாற்றம்; bad smell, as of flesh. *"முடலை யாக்கையின்" (ஞானா.23:5).*

*[முடை = புலால்நாற்றம். முடை → முடலை.]*

முடலை³ *muḍalai,* பெ.(n.) 1. வலிமை; strength. 2. பெருமை; greatness.

*[மிடல் = வலிமை. மிடல்→முடல்→முடலை.]*

முடவன் *muḍavaṉ,* பெ.(n.) 1. நொண்டி; lame person. *'காலான் முடவன்' (தொல்.சொல். 73, இளம்பூ.). "முடவரல்லீர்" (தேவா.919, 8). "முடவனுக்குக் கோபம் விட்ட இடத்திலே" (பழ.). "முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டாற் போல" (பழ.).* 2. அருணன் (அக.நி.); *Aruṇaṉ.* 3. காரிகோள் (சனி.) (பிங்.); the planet Saturn.

*[முடம் → முடவன்.]*

முடவன்முழுக்கு *muḍavaṉ-muḻukku,* பெ.(n.) காவிரியில் கடைமுகத்து முழுக்காட்டுப் பலனை அளிக்கும் நளி (கார்த்திகை) மாத முதல் நாள் முழுக்கு; bath in the Cauvery on the first day of *Naḷi (Kārthigai),* considered as meritorious as bath on *Kaḍai-mugam*day.

*[முடவன் + முழுக்கு.]*

முடவாட்டுக்கல்¹ *muḍa-vāṭṭukkal,* பெ.(n.) ஆட்டின் வயிற்றினின்று எடுக்கப்படும் மஞ்சணிறமுள்ள மணப்பண்டம் (ஆட்டு ரோசனை) (வின்.); bezoar found in sheep.

*[முடை + ஆட்டுக்கல். முடை = புலால், புலால் நாற்றம்.]*

**முடவாட்டுக்கால்**[2] *muda-vāṭṭu-k-kal,* பெ.(n.) ஆட்டுக்கால் மரம்; a tree (சா.அக.).

**முடவாண்டி** *muda-v-āṇdi,* பெ.(n.) கொங்கு நாட்டில் கொங்கு வேளாளர் கூட்டத்துட் பிறக்கும் பிறவிக் குருடு முடங்களான குழந்தைகளை வலிய எடுத்து வளர்த்து வரும் இரப்போர் (பிச்சைக்கார) வகையினர் (E.T.5: 84); a class of beggars in Koṅgu country, who voluntarily take and bring up all children born blind or lame in the *Koṅgu Vēḷāla* caste.

*[முடம் + ஆண்டி. ஆண்டி = இரப்போன், துறவி.]*

**முடவு–தல்** *mudavu-,* 5 செ.கு.வி. (v.i.) நொண்டுதல் (யாழ்ப்.); limp.

*[முடம் → முடவு → முடவு–தல்.]*

**முடனத்திமூலி** *mudanatti-mūli,* பெ.(n.) செம்பருத்தி; red cotton - *Gossypium* (சா.அக.).

**முடி**[1]**–த்தல்** *mudi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. முற்றுவித்தல்; to end, terminate. *"நின்னன்னை சாபமு முடித்தென் னெஞ்சத்திடர் முடித்தான்" (கம்பரா. மிதிலை.88). நூல் முழுவதையும் மும்மாதத்திற்குள் எழுதி முடித்துவிட்டார்.* 2. நிறைவேற்றுதல்; to effect, accomplish. *"அருந்தொழில் முடியரோ திருந்துவேற் கொற்றன்" (புறநா.171).* 3. அழித்தல்; to destroy. *"சேனையை... முடிக்குவன்" (கம்பரா.மிதிலை.98).* 4. கட்டுதல்; to fasten tie. *"பாஞ்சாலி கூந்தன் முடிக்க" திவ்.பெரியதி.6. 7:8).* 5. தலையில் பூவைச் சூட்டிக் கொள்ளுதல்; to decorate with, put on, as flowers. *"கூழையுளே திலாள் கைபுனை கண்ணி முடித்தான்" (கலித். 107:15). பூ முடித்து பொட்டுவைத்து அழகு செய்து கொள்ளுதல்.* 6. செயலை, நிகழ்ச்சியை நிறைவுக்குக் கொண்டு வருதல், நிறைவு பெறும்படி செய்தல்; complete or finish a work, one's studies, etc., end one's speech. *சமையலை முடித்து விட்டு வந்து பேசுகிறேன். முடிக்க வேண்டிய வேலைகள் நிறைய இருக்கின்றன. என்னுடைய பையன் இப்போதுதான் பள்ளிப் படிப்பை முடித்திருக்கிறார். அவர் பேச்சை முடிப்பது போல் தெரியவில்லை.* 7. குறிப்பிட்டவாறு இறுதி நிலை அமைத்தல்; conclude, end. *"கனவு நனவாகட்டும்" என்ற தொடரோடு கதையை முடித்திருக்கிறார்.* 8. ஒருவரை இல்லாதபடி ஆக்குதல், கொல்லுதல்; bump off some one, put an end to some one. *கெடுதி (அநீதி) செய்பவரை அவர்கள் முடித்து விடுவார்கள் போலிருக்கிறது.*

*[முல் → முள் → முண்டு → முண்டி → முடி → முடி–த்தல். முல் = வளைதல், சுற்றுதல். முட்டு → முட்டி → முடி → முடி–த்தல்.]*

**முடி**[2]**–தல்** *mudi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சேர்த்து முடிச்சிடுதல், சுற்றிக்கட்டுதல்; gather up something in to a knot; tie up, something keeping it in a cloth, etc. *கூந்தலை அழகாக முடித்திருந்தாள். தலையில் துணியை முடிந்து கொண்டாள். கீரை விற்பவள் காசை முந்தாணையில் முடிந்திருந்தாள்.* 2. தலையில் பூ முதலியவற்றை செருகுதல், அணிதல்; put flowers, etc, on some one's hair. *தலையில் பூ முடிந்து விடுகிறேன், வா.* 3. செயல், நிகழ்ச்சி முற்றுப் பெறுதல்,

முடிவுக்கு வருதல்; of an act, an event come to an end, come to a close. *"சொன்முறை முடியாது" (தொல்.சொல்.233). விழா இனிதே முடிந்தது. முதல் ஆட்டம் முடிய இன்னும் சிறிது நேரம் தான் இருக்கிறது.* 4. ஒருவருக்குக் குறிப்பிடப்படும் வயது முழுமை பெறுதல், நிறைவு அடைதல்; turn specified age complete. *அவனுக்கு இருபத்தியெட்டு வயது முடிந்து இருபத்தியொன்பது நடக்கிறது. குழந்தைக்கு மூன்று வயது முடிந்து விட்டது.* 5. குறிப்பிட்டதில், குறிப்பிடப்படுவதோடு இறுதி நிலை அமைதல்; end in or with something. *தேர்வில் இரண்டாம் எண்ணில் முடியும் அனைத்துத் தேர்வாளர்களும் வெற்றி பெற்றதாய்க் கூறப்படுகிறது. வாய்ப் பேச்சு கைகலப்பில் முடிந்தது.* 6. மூன்றாம் வேற்றுமை அல்லது நான்காம் வேற்றுமை உருபோடு கூடியதான தன்மையில் அமைதல், இயலுதல்; with instrumental or dative case be able to, have the ability to, can. *"என்னால் முடியாது" என்று சொல்லாதே. "முடியும்" என்று சொல்! யாராலும் மறுக்க முடியாத உண்மை! அவருக்கு முடிந்ததை அவர் செய்துவிட்டார்.* 7. எதிர்மறை வடிவங்களில் உடம்புக்கு ஆற்றல் இருத்தல்; have energy or health; feel fit. *உடம்புக்கு முடியவில்லை என்று அம்மா படுத்துவிட்டாள்.* 8. நிறைவேறுதல்; to be effected or accomplished. *"முட்டின்றி மூன்று முடியுமேல்" (நாலடி, 250).* 9. அழிதல்; to be destroyed, to perish. *மூவேந்தர் குலமும் 16ஆம் நூற்றாண்டோடு முடிந்து விட்டது.* 10. வாழ்நாள் முடிந்து சாதல்; to die. *"கயலேர் கண்ணி கணவனொடு முடிய" (பு.வெ.10, சிறப்பிற்.9, கொளு.).* 11. தோன்றுதல்; to appear. *"முடிந்தது முடிவது முகிழ்ப்பதுமவை மூன்றும்" (பரிபா. 13:46).* 12. இயலுதல்; to be possible, capable. *என்னால் அதனைச் செய்ய முடியும்.* 13. சண்டை மூட்டுதல்; to incite persons to a quarrel. *அவனுக்கும் இவனுக்கும் முடிந்து விட்டான்.* 14. தொடர்புபடுத்துதல்; to make a marriage alliance. *அவளுக்கும் இவனுக்கும் முடிந்துவிட்டார்கள்.*

ம. முடிக; க. முடி.

*[முட்டு→முட்டி→முடி →முடி–தல்.]*

'முடி' என்னுஞ் சொல் ஒரு பொருளின் முடிவான இறுதிப் பகுதியைக் குறித்தலால், ஒரு வினை முடிதலைக் குறிக்கும் வினைச் சொல்லாகவும் அஃது ஆளப்பட்டது (வே.க.).

முடி[3] *muḍi*, பெ.(n.) 1. தலை; head. *"அதுவே சிவன் முடிமேற்றான் கண்டு" (திவ். திருவாய்.2, 8:6) (திவா.).* 2. குடுமி (பிங்.); man's hair tuft. 3. பெண்டிர் கொண்டை போடும் வகை ஐந்தனுள் உச்சியில் முடிக்கும் மயிர்க்கட்டு வகை (திவா.); tuft or coil of hair on the head, one of ai-m-pāl. 4. உடம்பில் குறிப்பாகத் தலையில் வளரும் தொடுவுணர்வு இல்லாத மெல்லிய இழை, தலை மயிர்; head hair. *"முடிமுடியாய் நட்டால் பிடிபிடியாய் விளையுமா?" (பழ.அக.). "முடிவைத்த தலைக்குச் சுழிக் குற்றம் பார்க்கிறது, கொண்டு குலம் பேசுகிறது போலிருக்கின்றது" (பழ.அக.). "முடி வைத்த தலைமேலே சுழிக் குற்றம் பார்க்கிறதா?" (பழ.அக.). முடிக்காணிக்கை (உ,வ.)* 5. மயிர்; hair. *பன்றி முடி.* 6. தெய்வத் திருமேனிகட்கும், அரசர்கட்கும் தலையில் அணிவிக்கும், உயர் மணிகளால் ஒப்பனை செய்யப்பட்ட திருமுடி, மணிமுடி; crown.

*"ஞாயிற்றணி வனப்பமைந்த..... புனைமுடி" (பரிபா.13:2). "முடிசார்ந்த மன்னரும் முடிவில் ஒருபிடி சாம்பாராகிப் போகிறதுதான்" (பழ.அக.).* 7. மலை உச்சி; crown, as of a mountain. *"முடியை மோயின னின்றுழி" (கம்பரா.மீட்சி. 186).* 8. தேங்காயிற்பாதி (வின்.); half of a coconut. 9. முடிச்சு; knot, tie. *"கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்" (மதுரைக். 256).*10. முடிவு (வின்.); end. 11. நாற்றுமுடி; bundle, as of a paddy seedlings for transplantation. *"நிரை நிரை விளம்பி வழிமுடி நடுநரும்" (கல்லா.46:14).* 12. பறவை பிடிக்குங் கண்ணி, சுருக்குக் கண்ணி; noose. *"துறவாம் பறவை மயன் முடியிற் படுதல்" (பிரபுலிங். மாயையுற்.56).* 13. துளசி (பிங்.); sacred basil. 14. தேங்காய் குடுமி (யாழ்ப்.); tuft of fibre left on the upper part of the coconut.

*[முட்டு→முட்டி→முடி.முண்டு→முண்டி→முடி (வே.க.முல்5).]*

மாந்தரும் அஃறிணைப் பொருள்களும் மாந்தரை அல்லது அஃறிணைப் பொருள்களை முட்டுவது தலையாலேயே யாதலால், தலையும் தலைபோன்ற உச்சிப் பகுதியும் தலையிலுள்ள உறுப்பும் அணிகலமும் முடியெனப் பெயர் பெறும்.

விலங்கு மயிரையும் முடியென்றது, மயிர் என்பது இடக்கர்ச் சொல்லாகி மயிரை முடியென்னும் இடக்கரடக்கல் வழக்கொழிந்த பிற்காலத்ததாகும்.

நாற்றுமுடி, மூட்டை முடிச்சு முதலிய கூட்டுச் சொற்களிலுள்ள முடியென்னும் சொல் வளைத்தல் அல்லது சுற்றுதல் என்பதை வேர்ப் பொருளாகக் கொண்ட வேறொரு சொல்லினின்று தோன்றியதாகும்.

நட்டமாக நிற்கும் பொருள்களின் உச்சிப் பகுதி அவற்றிற்கு முடிபோன் றிருத்தலால் அது முடியெனப்பட்டது. மலையுச்சி வான் முகட்டை முட்டிக் கொண்டிருப்பதாகப் பாடவும் சொல்லவும் படுதல் காண்க. மலைமுடிகளுள் உயர்ந்தது கொடுமுடி (வே.க.முல்[4]).

**முடி**[4] *mudi*, து.வி.(aux.v.) 1. செய்வித்தல், தீர்த்தல் என்னும் பொருள் தரும்படியான வினைப்படுத்தும் வினை; verbalizer used in the sense of settle, perform, accomplish, etc. *பெண்ணுக்குக் கல்யாணம் முடிக்க வேண்டும். பழி முடிக்காமல் வாழப் போவதில்லை.* 2. முதன்மை வினையின் செயலை நிறைவுறச் செய்வதாகக் குறிப்பிடும் ஒரு துணை; an auxiliary verb used to indicate that the work, action indicated in the main verb has reached a state of completion. *இந்தப் புத்தகத்தை நான் படித்து முடித்து விட்டேன். ஆறே மாதத்தில் வீட்டைக் கட்டி முடித்தார்.*

*[முட்டு→ முட்டி→முடி.]*

**முடிக்கண்ணி** *mudi-k-kaṇṇi*, பெ.(n.) முடிமாலை பார்க்க; see *mudi-mālai*. *"கங்கை காணக் கொடார்முடிக் கண்ணியை" (தேவா.456:6).*

*[முடி + கண்ணி. கண்ணி = மாலை வகை.]*

**முடிக்கயிறு** *mudi-k-kayiṟu*, பெ.(n.) கண்ணேறு நீங்க மாட்டுக்குப் போடும் முடிசேர்த்து முடிந்த கறுப்புக் கயிறு (கோவை.); a black rope tied around the cow neck due to evil eyes.

*[முடி + கயிறு.]*

**முடிக்கலம்** *mudi-k-kalam,* பெ.(n.) மணிமுடி; crown. *'ஆண்டு அரசருடைய முடிக்கல முதலியவற்றை வாங்கிக் கொண்டு' (பெரும்பாண்.451, உரை).*

*[முடி + கலம்.]*

**முடிக்காணிக்கை** *mudi-k-kāṇikkai,* பெ.(n.) தெய்வத்திற்கு நேர்ந்துகொண்டு மயிர் முடியை வளர்த்து, மழித்துக் காணிக்கையாக இடுகை (உ.வ.); offering of the hair of a person's head which has been allowed to grow for a certain time, in fulfilment of a vow.

*[முடி + காணிக்கை. காணிக்கை = கடவுளர்கேனும் பெரியோர்க்கேனும் அளிக்கப்படும் பொருள்.]*

**முடிக்கீரை** *mudi-k-kīrai,* பெ.(n.) முளைக் கீரை (வின்.); young greens, tender potherbs.

*[முடி + கீரை.]*

**முடிக்கொத்துநோய்** *mudi-k-kottu-nōy,* பெ.(n.) வாழைப் பயிரில் ஏற்படும் நோய் (கோவை.); a kind of plantain disease.

*[முடிக்கொத்து + நோய்..]*

**முடிக்கோரை** *mudi-k-kōrai,* பெ.(n.) 1. ஒருவகைக் கோரைப் புல்; a variety nut grass. 2. தலை மயிர்; hair on the head (சா.அக.).

*[முடி + கோரை.]*

**முடிகத்தரிக்கிறவன்** *mudi-k-kattarik-kiṟavaṉ,* பெ.(n.) கத்திரி கள்வன் (வின்.); cut-purse, pick pocket.

*[முடி + கத்தரிக்கிறவன்.]*

**முடிகம்** *mudigam,* பெ.(n.) பெருச்சாளி; bandi coot (சா.அக.).

**முடிகயறுபோடல்** *mudi-kayaṟu-pōdal,* பெ.(n.) பூச்சிக்கடி, கக்குவான் முதலிய நோய்களுக்கு மந்திர ஆற்றலால் ஒருகயிறு முடிந்து உடம்பில் அணிவது; wearing of the magic thread to ward off or cure certain diseases-morbid conditions of infants, insect bites, whooping cough, etc. *குழந்தைக்கு முடிகயறுபோட மசூதிக்குச் சென்றான் (உ.வ.).*

மறுவ. முடிகயிறுபோடல்.

*[முடி + கயறு + போடல்.]*

**முடிகயிறுபோடல்** *mudi-kayiṟu-pōdal,* பெ.(n.) முடிகயறுபோடல் பார்க்க; see *mudi-kayaṟu-pōdal.*

**முடிகவி-த்தல்** *mudi-kavi-,* 4 செ.குன்றாவி. (v.t.) முடிசூட்டு-தல் பார்க்க; see *mudi-šūṭṭu-, "இன்னா னென வறியா வென்னை முடிகவித்து" (பாரத வெண்.315).*

*[முடி + கவி-த்தல். கவித்தல் = சூட்டுதல்.]*

**முடிகொண்டசோழப்பேராறு** *mudi-koṇḍa-cōḻa-p-pēṟāṟu,* பெ.(n.) முதல் இராசேந்திர சோழனால் பழையாறையில் வெட்டப்பட்ட ஆறு; a river digged in *Paḻayāṟai* by *Rajendra Chōḻā- I.* *பழையாறை இவன் காலத்தில் முடிகொண்ட சோழபுரம் என வழங்கப்பட்டது. (முதல் இராசேந்திரன் கி.பி.1012–1044 பிற்.சோழ. வர. சதாசிவபண். பக்.181).*

*[முடி + கொண்ட + சோழப்பேராறு.]*

**முடிகொண்டசோழபுரம்** *mudi-konda-cōḻa-puram,* பெ.(n.) திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள சோழர் தலைநகர் (I.M.P.Rd. 285); capital of *Cōḻā* in *Trichirāppaḻḻi* district.

மறுவ. முடிகுண்டம்.

*[முடிகொண்டசோழன் + புரம்.]*

**முடிகொண்டசோழமண்டலம்** *mudi-konda-cōḻa-mandalam,* பெ.(n.) எருமையூர் (மைசூர்) பகுதியின் தென் பகுதியும் சேலம் மாவட்டத்தின் வடபகுதியும் கொண்ட கங்கபாடி நாடு *(பிற்.சோழ.வர. சதாசிவபண். பக்.472); Kangapāḍi,* which includes the southern part of Mysore and northern part of Salem.

*[முடிகொண்டசோழன் + மண்டலம்.]*

**முடிகொண்டசோழன்** *mudi-konda-cōḻan,* பெ.(n.) முதல் இராசேந்திர சோழனது பட்டப் பெயர் (தெ.இ.கல். தொ. 2:107); a title of *Rajendra Cōḻā-I.*

*[முடிகொண்ட + சோழன்.]*

**முடிகொண்டநல்லூர்** *mudi-konda-nallūr,* பெ.(n.) சோழநாட்டு ஊர்ப்பெயர்; a village in *Cōḻa* country.

*[முடிகொண்ட + நல்லூர்.]*

**முடிச்சடைமுனிவன்** *mudi-cadai-munivan,* பெ.(n.) வீரபத்திரன்; *Vīrabattiran,* as wearing matted locks. *"முடிச்சடை முனிவனன்று வேள்வியிற் கொண்ட" (சீவக. 2285).*

*[முடி + சடை + முனிவன். சடைமுனிவன் = சடை முடியை யுடையவன்.]*

**முடிச்சவிழ்[1]-த்தல்** *mudiccaviḻ-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒன்றைத் திருடுதற்கு அதை முடிந்து வைத்துள்ள துணி முடிச்சை அவிழ்த்தல் (வின்.); to untie money knotted in a cloth, with a view to theft. 2. திருடுதல் (இ.வ.); to steal.

*[முடிச்சு + அவிழ்-த்தல்.]*

**முடிச்சவிழ்[2]-த்தல்** *mudiccaviḻ-,* 4 செ.குன்றாவி.(v.t.) சிக்கலான ஒன்றைத் தீர்ப்பதற்கு முயலுதல்; to find a solution for a problem.

*[முடிச்சு + அவிழ்-த்தல்.]*

முடிச்சை அவிழ்த்து அதனுள் உள்ள பொருள்களை வெளியாக்குதல் போல் சிக்கலான ஒரு செய்தியைப் பலரும் அறியும்படி செய்தல்.

**முடிச்சவிழ்க்கி** *mudiccaviḻkki,* பெ.(n.) 1. முடிச்சை அவிழ்ப்பவன் (வின்.), பணமூட்டையை அவிழ்த்துத் திருடுபவன்; one who secretly removes money tied in a cloth. 2. திருடன்; thief.

*[முடிச்சு + அவிழ்-. முடிச்சவிழ் → முடிச்சவிழ்க்கி.]*

**முடிச்சன்** *mudiccan,* பெ.(n.) சூழ்ச்சித் திறமுடையான் (இ.வ.); scheming fellow.

*[முடிச்சு → முடிச்சன்.]*

**முடிச்சாத்து** *mudi-c-cāttu,* பெ.(n.) தலைப் பாகை; turban. *"தனி முடிச்சாத்துஞ் சாத்தி" (திருவாலவா.54:14 (பி-ம்.)).*

*[முடி + சாத்து.]*

**முடிச்சு[1]** *mudiccu,* பெ.(n.) 1. கட்டு; tie. *இப்படியா முடிச்சுப் போடுவார்கள், கட்டைப் பிரிக்கவே முடியவில்லையே? தலைமயிர்*

*முடிச்சு முடிச்சாக இருந்தது.* 2. மயிர்முடி; tuft of hair. 3. கணு; knot in wood. 4. மகளிர் காதணி வகை (நெல்லை.); an ear-ring worn by women. 5. கண்டறிந்து தீர்த்தற்கரிய தந்திரம்; deep scheme, cunning plan, stratagem. *'அவன் போட்டது நல்ல முடிச்சு'.*

*[முடி → முடிச்சு =அவிழவோ பிரித்து வாரவோ முடியாதபடி ஒன்றோடு ஒன்றைச் சேர்த்து அல்லது ஒன்றைச் சுற்றிப் போடப்பட்டிருப்பது.]*

முடிச்சு² *mudiccu,* பெ.(n.) 1. மூட்டை என்பதோடு இணைந்து வரும் சொல்; a word which occurs in combination with *mūṭṭai. மூட்டை முடிச்சுடன் பேருந்தில் ஏற வேண்டும்.* 2. சிறு மூட்டை; small bundle.

*[முடி → முடிச்சு.]*

முடிச்சுக்கஞ்சி *mudiccu-k-kañji,* பெ.(n.) கொதிக்கும் கஞ்சிச் சோற்றில் சுக்கை சீவி, துணியில் முடிந்து அதில் போட்டு காய்ச்சி வடித்த கஞ்சியின் தெளிவு; rice gruel or porridge made by adding small cloth bundle containing dry ginger in addition to the usual ingredients.

*[முடி + சுக்குக்கஞ்சி→முடிச்சுக்கஞ்சி]*

முடிச்சுக்காரன் *mudiccu-k-kāraṉ,* பெ.(n.) 1. சிறுமூட்டைகளையுடையவன்; one who possesses small bundle. 2. பணமுள்ளவன்; one who has money. 3. சூழ்ச்சித் திறமுடையோன் (தந்திரி); scheming person.

*[முடிச்சு + காரன். காரன் – சொல்லாக்க ஈறு]*

முடிச்சுக்காறை *mudiccu-k-kāṟai,* பெ.(n.) பெண்களின் கழுத்தணி வகை (இ.வ.); a kind of gold necklet, worn by women.

*[முடிச்சு + காறை. காறை = கழுத்தணி வகை. முடிச்சுகளோடு செய்யப்பட்ட கழுத்தணி.]*

முடிச்சுக்கோரை *mudiccu-k-kōrai,* பெ.(n.) முடிக்கோரை பார்க்க; see *mudi-k-kōrai.*

*[முடிச்சு + கோரை.]*

முடிச்சுப்போடு-தல் *mudiccu-p-pōdu,-* 20 செ.கு.வி. (v.i.) 1. சண்டை மூட்டுதல்; to incite persons to a quarrel. *அவனுக்கும் இவனுக்கும் முடிச்சுப் போடுகிறான்.* 2. தொடர்புபடுத்துதல்; to connect the two various matters. *என்ன மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுகிறாய்.* 3. திருமணம் செய்து வைத்தல்; to make a marriage alliance. *அவளுக்கும் இவனுக்கும் முடிச்சுப் போட்டாச்சு.*

*[முடிச்சு + போடு–தல்.]*

முடிச்சுமாறி *mudiccu-māṟi,* பெ.(n.) முடிச்சவிழ்க்கி பார்க்க (வின்.); see *mudiccaviḻkki.*

*[முடிச்சு + மாறி. மாறி = இரண்டகஞ் செய்வோன்.]*

முடிச்சுவலை *mudiccu-valai,* பெ.(n.) முடிச்சு முடிச்சாக உள்ள மீன் பிடி வலை; a kind of fishing net.

*[முடிச்சு + வலை.]*

முடிச்சுற்று *mudi-c-cuṟṟu,* பெ.(n.) தலைப் பாகை; turban, as tied about the head. *"தொகுமுடிச்சுற்றுஞ் சுற்றி" (திருவாலவா.54: 14).*

*[முடி+ சுற்று. முடி = தலை. சுற்று = சுற்றிக்கட்டப்படுவது. தலையைச் சுற்றிக் கட்டப்படும் தலைப்பாகை.]*

முடிச்சு வகைகள்




கப்பல் முன்புறக் கயிறு



இருமடி கொளுவி முடிச்சு



சாரக்கட்டு





நெருக்கடி முடிச்சு



மீனவ முடிச்சு



இயல்பு முடிச்சு



இரட்டை முடிச்சு



கப்பற் பாய்க்
கயிற்று முடிச்சு



குறுக்கு முடிச்சு



ஒருமுனை
முடிச்சு



இருமுனை
முடிச்சு



மரச்சட்டத்துடன்
இணைக்கும் முடிச்சு

**முடிச்சுற்றுமாலை** *muḍi-c-cuṟṟu-mālai,* பெ.(n.) முடிச்சூட்டு பார்க்க (தக்கயாகப்.119, உரை); see *muḍi-c-cūṭṭu.*

*[முடி + சுற்று + மாலை = தலையில் அணியும் மாலை.]*

**முடிச்சூட்டு** *muḍi-c-cūṭṭu,* பெ.(n.) முடியில் (தலையில்) அணியும் மாலை; garland worn on the head. *"முடிச்சூட்டு முல்லையோ" (தக்கயாகப்.119).*

*[முடி + சூட்டு. முடியில் அணியும் மாலை.]*

**முடிசம்** *muḍišam,* பெ.(n.) முடிசரம் பார்க்க; see *muḍi-šaram.*

**முடிசரம்** *muḍi-šaram,* பெ.(n.) சரக்கொன்றை மரம்; a tree - *Cassia fistula.*

*[முடி + சரம்.]*

**முடிசாய்[1]-தல்** *muḍi-šāy-,* 1 செ.கு.வி.(v.i.) இறத்தல் (வின்.); to die, as having the head droop.

*[முடி + சாய்-தல் = தலைசாய்தல், இறத்தல்.]*

**முடிசாய்[2]-த்தல்** *muḍi-šāy-,* 1 செ.கு.வி. (v.i.) 1. படுத்துக்கொள்ளுதல்; to lie down; to rest, as lowering the head. *"முகுந்தனுடன் பாண்டவரு முடி சாய்த்து" (பாரத.முதற்.77).* 2. தலை வணங்குதல்; to pay homage, bow one's head in reverence. *"முனிந்தருள லென்று முடிசாய்த்து நின்றான்" (நள. கலிநீங்கு.63).* 3. ஒருபக்கமாகத் தலையைச் சாய்த்தல்; to incline the head sideways.

*[முடி + சாய்-த்தல்.]*

**முடிசுருளை எலும்பு** *muḍi-šuruḷai-elumbu,* பெ.(n.) மார்பெலும்பு; breast bone - *Sternum.*

**முடிசூட்டு[1]-தல்** *muḍi-šūṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) அரசுக்குரிய மணி முடியைச் சூட்டுதல்; to crown, as king. *"முன்றின் முரசமுழங்கமுடி சூட்டி" (கம்பரா. இரணிய.174).*

*[முடிசூடு-தல் → முடிசூட்டுதல். சூட்டுதல் = அணிவித்தல்.]*

**முடிசூட்டு[2]** *muḍi-šūṭṭu,* பெ.(n.) அரசன் மணிமுடி சூடுகை; coronation. *"முடிசூட்டு மங்கல நாள்" (தமிழ்நா.171, தலைப்பு).*

*[முடிசூடு → முடிசூட்டு.]*

**முடிசூட்டுவிழா** *muḍi-šūṭṭu-viḻā,* பெ.(n.) அரசக்குடி வழியில் வந்த ஒருவர் ஆட்சிப் பொறுப்பு ஏற்பதற்கு அடையாளமாக அவருக்கு மணி முடி சூட்டும் நிகழ்ச்சி; coronation.

*[முடிசூட்டு + விழா.]*

**முடிசூடு-தல்** *muḍi-šūḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அரசன் மணிமுடி சூடுதல்; to be crowned as king. 2. மகுடம் அணிதல்; to wear a crown. *"முடிசூடு முடியொன்றே" (கலிங். 525). அரசனுக்குப் பின் அவன் மகன் முடிசூடுதலே வழக்கம்.*

*[முடி + சூடு-தல்.]*

**முடித்தகேள்வி** *muḍitta-kēḷvi,* பெ.(n.) கரை கண்ட கேள்வி; complete learning. *"முடித்தகேள்வி முழுதுணர்ந்தோரே" (சிலப். 1:19).*

*[முடி → முடித்த + கேள்வி.]*

**முடித்தலைக்கொண்டசோழபுரம்** *muḍi-t-talai-k-koṇḍa-cōḻapuram,* பெ.(n.) மதுரை; Madurai city.

*[முடி + தலை + கொண்ட + சோழபுரம்.]*

3–ஆம் குலோத்துங்கச் சோழன் பாண்டி மண்டலத்திற்குச் சோழ பாண்டி மண்டலம் என்றும், மதுரைக்கு முடித்தலைக் கொண்ட சோழபுரம் என்றும், பாண்டியனது ஒலக்க மண்டபத்திற்குச் சேரபாண்டியர் தம்பிரான் என்றும் பெயர் மாற்றினான் (பழ.த.ஆ.பக்.87).

**முடித்தலைக்கோபெருநற்கிள்ளி** *muḍit talai-k-kō-perunaṟ-kiḷḷi,* பெ.(n.) சோழ அரசன்; Cōḻa king.

*[முடி + தலை + கோ + பெருநற்கிள்ளி.]*

இவன் அந்துவஞ் சேரலிரும்பொறையின் காலத்தவன் இவனை முடமோசியார் வாழ்த்திப் பாடியுள்ளார் (புறநா.13).

**முடித்துக்காட்டல்** *muḍittu-k-kāṭṭal,* பெ.(n.) உத்தி முப்பதிரண்டனுள் மேலோர் முடித்தவாறு முடித்துக் காட்டுவது (நன்.145, உரை); a literary device which consists in showing that the author's statements are in line with the ancient authorities, one of 32 utti.

*[முடித்து + காட்டல்.]*

**முடித்துக்கொடு–த்தல்** *muḍittu-k-koḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) நிறைவேற்றித் தருதல்; to accomplish, complete, as a piece of business.

*[முடித்து + கொடு–த்தல்.]*

**முடித்தேங்காய்** *muḍi-t-tēṅgāy,* பெ.(n.) குடுமியுள்ள தேங்காய் (வின்.); coconut with the husk removed, leaving a small part of the the fibre on the upper part of the nut.

*[முடி + தேங்காய்.]*



**முடித்தைலம்** *muḍi-t-tailam,* பெ.(n.) முடியெண்ணெய் பார்க்க; see *muḍi-y-eṇṇey.*

*[முடி + Skt.தைலம்.]*

**முடிதட்டு–தல்** *muḍi-taṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) வலைமுடியைக் களைதல் அல்லது அறுத்து நீக்குதல் (மீனவ.); remove or cut off of the fishing net.

*[முடி + தட்டு–தல். தட்டுதல் = அகற்றுதல், நீக்குதல்.]*

**முடிதலைச்சுன்னம்** *muḍitalai-c-cuṉṉam,* பெ.(n.) தலையின் முடியினின்று செய்யப்படும் ஒருவகைச் சுண்ணாம்பு; calcined powder prepared from the black hair of the head.

*[முடி + தலை + சுன்னம். சுன்னம் = சுண்ணாம்பு. தலைமுடியிலிருந்து செய்யப்படும் சுண்ணாம்பு.]*

**முடிதிருத்தகம்** *muḍi-tiruttagam,* பெ.(n.) மாந்தரின் தலையில் உள்ள முடியைக் குறைத்து அல்லது திருத்தி அழகுபடுத்தும் கடை; hair dressing saloon. *பள்ளி மாணவர்கள் முடிதிருத்தகம் சென்று*

*அழகாக முடிதிருத்தி வகுப்பறைக்குச் செல்ல வேண்டும்.*

*[முடி + திருத்தகம்.]*

**முடிதீட்டு–தல்** *muḍi-tīṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) தலை, காலில்படும்படி வணங்குதல்; to prostrate, as touching with one's head another's feet. *"பாதத் தெழின்முடி தீட்டினானே" (சீவக.2641).*

*[முடி+தீட்டு–தல். காலில் விழுந்து வணங்குதல்.]*

**முடிதும்பை** *muḍi-tumbai,* பெ.(n.) ஒரு வகைத் தும்பைச் செடி; white dead nettle-*Leucas* (சா.அக.).

*[முடி + தும்பை.]*

**முடிதுளக்கு[1]–தல்** *muḍi-tuḷakku-,* 5 செ.கு.வி. (v.i.) தலையசைத்தல்; to assent, show appreciation, as by a nod. *"திருமுடி துளக்கி நோக்கி" (சீவக.1881).*

*[முடி + துளக்கு–தல். துளக்குதல் = அசைதல். முடி = தலை.]*

**முடிதுளக்கு[2]–தல்** *muḍi-tuḷakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) முடிதீட்டு–தல் பார்க்க; see *muḍi-tīṭṭu-.* *"முனைவற் றொழுது முடிதுளக்கி" (சீவக.2357).*

*[முடி + துளக்கி. முடி = தலை. துளக்குதல் = வணங்குதல்.]*

**முடிந்தகணம்** *muḍinda-kaṇam,* பெ.(n.) நிகழ்காலம்; present time. *"முன்னைக் கணத்தி னிறந்தவனு முடிந்த கணத்து நின்றவனும் (மேருமந்.662).*

*[முடி[1] + கணம். கணம் = காலநுட்பம், காலம்.]*

**முடிந்தகொள்கை** *muḍinda-koḷgai,* பெ.(n.) முடிந்த முடிவு; final conclusion.

*[முடி →முடிந்த + கொள்கை. கொள்கை = முடிவு.]*

**முடிந்ததுமுடித்தல்** *muḍindadu-muḍittal,* பெ.(n.) உத்தி முப்பத்திரண்டனுள், முன்னர் விளக்கிக் கிடந்தவற்றைத் தொகுத்துக் கூறுவது (நன்.382, உரை); recapitulation, briefly restating the point discussed, one of 32 utti.

*[முடி →முடிந்தது + முடித்தல்.]*

**முடிந்ததுமுற்றும்** *muḍindadu-muṟṟum,* பெ.(n.) நூலிறுதியில் முடிவைக் குறிக்க எழுதப்படுந் தொடர் (வின்.); expression indicating conclusion, used at the end of a treatise, 'finis'. *இப்புதினம் முடிந்தது முற்றும்.*

*[முடிந்தது + முற்றும்.]*

**முடிந்தநூல்** *muḍinda-nūl,* பெ.(n.) முழுதுங் கூறும் நூல்; exhaustive treatise. *"முடிந்த நூலிற் கண்டு கொள்க" (இறை. 1, பக்.2).*

*[முடி → முடிந்த + நூல்.]*

**முடிந்தபொழுது** *muḍinda-poḻudu,* பெ.(n.) முதிர்ந்த அகவை; old age. *"முடிந்த பொழுதிற் குறவாண ரேனம் படிந்துழு சால் பைந்தினைகள் வித்த" (திவ்.இயற்.3: 89).*

*[முடி → முடிந்த + பொழுது.]*

**முடிநடை** *muḍi-naḍai,* பெ.(n.) தலையால் நடக்கை; walking on one's head. *"அங்க வுடலிழந்து முடி நடையா லேறி" (திருத். பு.சா.28).*

*[முடி + நடை. முடி = தலை.]*

முடிநர் *muḍinar,* பெ.(n.) கட்டுபவர்; those who tie knots. *"வம்புநிறை முடிநரும்" (மதுரைக்.514).*

*[முடி → முடிநர்.]*

முடிநாதம் *muḍinādam,* பெ.(n.) இந்திர கோபப் பூச்சி; cochineal insect.

முடிநாறு *muḍināṟu,* பெ.(n.) நாற்றுமுடி; sheaf or bundle of seedlings. *"முடிநாறழுத்திய நெடுநீர்ச்செறு" (பெரும் பாண்.212).*

*[முடி + நாறு. நாற்று →நாறு. இடைக்குறை.]*

முடிநீர் *muḍinīr,* பெ.(n.) 1. மூளை நீர்; liquid extracted from brain. 2. ஒளி (விந்து) நீர்; semen (சா.அக.).

*[முடி + நீர்.]*

முடிநீர்த்தான் *muḍinīrttāṉ,* பெ.(n.) சரக்கொன்றை மரம்; a kind of tree - *Cassia fistula* (சா.அக.).

முடிநீலம் *muḍinīlam,* பெ.(n.) மயிற்றுத்தம்; blue vitriol (சா.அக.).

மறுவ. துருசு.

முடிப்பானை *muḍi-p-pāṉai,* பெ.(n.) பொன் முதலிய அரும்பண்டங்களை வைக்கும் பெரிய பானை அல்லது பெரிய மட்கலம்; large earthen vessel for storing money or treasure.

*[முடி + பானை.]*

முடிப்பிசைக்குறி *muḍi-p-pišai-k-kuṟi,* பெ.(n.) சொற்றொடர் முடிவைக் காட்டும் முற்றுக்குறி (நான்.பால.169); full - stop.

*[முடிப்பு + இசை + குறி.]*

முடிப்பிரி *muḍi-p-piri,* பெ.(n.) முடிப்புரி பார்க்க; see *muḍi-p-puri.*

முடிப்பு *muḍippu,* பெ.(n.) 1. முடிபோடுகை; tying, fastening. 2. முடிச்சு; tie, knot. 3. கட்டு; bundle. 4. தலையில் அணியும் பொருள்; that which is worn on the head. 5. இருசாற்பணம்; remittance as kist into the treasury. *இன்று முடிப்புச் செலுத்தியாக வேணும்.* 6. சொத்து; money, wealth. *அவனுக்கு முடிப்பொன்று மில்லை.* 7. மொத்தத் தொகை (யாழ்.அக.); total amount. 8. தீர்ப்பு (யாழ்.அக.); decision. 9. பணம் நகை முதலியவற்றைத் தொகுத்து, துணி போன்றவற்றில் கட்டி வைப்பது; money, pieces of jewellery wrapped in a cloth or tied up. *கோவில் உண்டியலில் கிடந்த ஒரு முடிப்பில் ஓர் ஆயிரம் ரூபாய் இருந்தது. "ஒரு பொன்முடிப்பு வைத்தேன்" (விறலிவிடு.899).* 10. முடிவு (வின்.); end, result.

*[முடி →முடிப்பு.]*

முடிப்புக்கட்டு¹-தல் *muḍippu-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) முடிவு செய்தல் (யாழ். அக.); to conclude.

*[முடிப்பு + கட்டு-தல்.]*

முடிப்புக்கட்டு²-தல் *muḍippu-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) பணமுடிப்புச் சேர்த்து வைத்தல்; to set apart, as a provision for a future expenditure. *பெண் பிறந்திருப்பதனால் இனி முடிப்புக் கட்டி வைக்க வேண்டும். கோயிலுக்குச் செல்ல வேண்டியிருப்பதால் முடிப்புக் கட்டி வைக்க வேண்டும்.*

*[முடிப்பு + கட்டு-தல்.]*

**முடிப்புக்காரன்** *mudippu-k-kāraṉ,* பெ.(n.) 1. பண்டைக் காலத்து அரசிறை வாங்கும் அலுவலர்; collector of the revenue of a village, in ancient times. 2. பணமுள்ளவன்; one who keeps money.

*[முடிப்பு + காரன். காரன் சொல்லாக்க ஈறு.]*

**முடிப்புமாறி** *mudippu-māṟi,* பெ.(n.) முடிச்சுமாறி பார்க்க; see *mudiccu-māṟi.*

*[முடிச்சுமாறி → முடிப்புமாறி.]*

**முடிப்புரி** *mudippuri,* பெ.(n.) 1. அரசிறை வாங்குபவன்; receiver of rents and taxes. 2. வட்டி வாங்குபவன்; shroff.

*[முடிப்பு + உரி. உரி→உரிதல் = தானே எடுத்துக் கொள்ளல், வாங்குதல்.]*

**முடிபு** *mudibu,* பெ.(n.) முடிவு பார்க்க; see *mudivu.* *"முனிவரார் வெகுளியின் முடிபென்றார் சிலர்" (கம்பரா.மாரீச.34).*

*[முடி → முடிபு.]*

**முடிபெழுத்து** *mudipeḻuttu,* பெ.(n.) எழுத்து வகையுள் ஒன்று (நன்.256, மயிலை); a class of letters.

*[முடிபு + எழுத்து.]*

**முடிபொருட்டொடர்நிலை** *mudi-poruṭ-ṭoḍar-nilai,* பெ.(n.) பொருட்டொடர் நிலைச் செய்யுள்; epic or narrative poem. *'முடிபொருட் டொடர் நிலையுள் தானப் பயன்கூறும் வழி' (சிலப்.2:9, உரை).*

*[முடி + பொருள் + தொடர்நிலை.]*

முடிபொருட் டொடர் நிலை யென்றது அறம் முதலிய நாற்பயனையும் கூறும் நூல்களான சீவகசிந்தாமணி முதலியவை (சிலப்.2:9, அடியார்க்கு நல்லார் உரை).

**முடிபோடு[1]-தல்** *mudi-pōḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) ஒன்றோடொன்று மாட்டிப் புணைத்தல்; to tie into a knot.

*[முடி + போடு-தல்.]*

**முடிபோடு[2]-தல்** *mudi-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. கணவனும் மனைவியுமாதற்கு நெறி (விதி)யமைதல்; to be pre-destined or ordained to be married to each other. *அவனுக்கும் இவளுக்கும் முடிபோட்டிருக்கிறது.* 2. சண்டை மூட்டுதல்; to incite persons to a quarrel. *அவனுக்கும் இவனுக்கும் முடிபோடுவதே அவர் வேலை.*

*[முடி + போடு-தல்.]*

**முடிமயிர்[1]** *mudi-mayir,* பெ.(n.) 1. சேர்த்து முடித்த தலை மயிர் (வின்.); lock of hair. 2. மகளிர் தலைமயிரோடு சேர்த்து முடித்துக் கொள்ளும் கட்டுமயிர் (வின்.); switch.

மறுவ. இடிமயிர்

*[முடி + மயிர்.]*

**முடிமயிர்[2]** *mudi-mayir,* பெ.(n.) தெய்வத்துக்குக் காணிக்கையாக மழித்து இடும் தலைமயிர் (இ.வ.); hair offered to a deity in pursuance of a vow.

*[முடி + மயிர்.]*

**முடிமன்னன்** *mudi-maṉṉaṉ,* பெ.(n.) மணிமுடி சூடிய மன்னன்; crowned monarch. *'முடிமன்னர் மூவருங் காத்தோம்பும்' (சிலப்.29, பக்.575).*

*[முடி + மன்னன்.]*

முடிமாமிசம் *muḍi-māmišam,* பெ.(n.) தலையில் உள்ள நார் போன்ற நீண்ட மெல்லிய தோல்; an elastic membrane of the head.

*[முடி + **Skt.**மாமிசம்.]*

முடிமார் *muḍi-mār,* பெ.(n.) முடிப்பவர்; those who accomplish things. *"தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்" (திருமுரு.89).*

*[முடி →முடிமார்.]*

முடிமாலிகம் *muḍi-māligam,* பெ.(n.) மஞ்சள் கொன்றை; a cassia (சா.அக.).

முடிமாலை *muḍi-mālai,* பெ.(n.) தலையில் அணியும் மாலை (திவா.); garland for the head, chaplet.

*[முடி+ மாலை.]*

முடிமூளை *muḍi-mūḷai,* பெ.(n.) தலைக்குள் ளிருக்கும் மூளை; brain of the human head (சா.அக.).

*[முடி + மூளை. முடி = தலை.]*

முடிமேல்முடி *muḍi-mēl-muḍi,* பெ.(n.) மர வகை (மலை.); panicled golden - blossomed pear tree.

முடிமேலழகி *muḍi-mēl-aḻagi,* பெ.(n.) கோடக சாலை (மலை.); a very small plant.

முடிய *muḍiya,* கு.வி.எ.(adv.) முழுதும் (திவா.); unto the end finally. *'என்று முடியக் கட்டுரைப்பது' (தக்கயாகப்.728).*

*[முடி → முடிய.]*

முடியண்டம் *muḍi-y-aṇḍam,* பெ.(n.) தலை மண்டையோடு; cranial bone, human skull (சா.அக.).

*[முடி+ **Skt.**அண்டம். முடி = தலை.]*

முடியண்டசவ்வு *muḍi-y-aṇḍa-šavvu,* பெ.(n.) இழுத்தால் நாரைப் போல் நீளும்படியான தலையில் உள்ள மெல்லிய தோல்; a membrane covering the head (சா.அக.).

*[முடியண்டம்+ **Skt.**சவ்வு.]*

முடியரசன் *muḍi-y-arašaṉ,* பெ.(n.) முடி மன்னன் பார்க்க; see *muḍi-maṉṉaṉ.*

*[முடி + அரசன்.]*

முடியரசு *muḍi-y-arašu,* பெ.(n.) அரசரால் அல்லது அரசியால் நடத்தப்படும் ஆட்சி; monarchy. *இன்றும் சில நாடுகளில் பெயரளவில் முடியாட்சி இருக்கிறது.*

மறுவ. முடியாட்சி

*[முடி + அரசு. முடிசூடி நாட்டை ஆளுவது.]*

முடியல் *muḍiyal,* பெ.(n.) எல்லாம் (சது.); all, whole.

*[முடி →முடியல்.]*

முடியறுத்தல் *muḍi-y-aṟuttal,* பெ.(n.) குடுமி வைக்குஞ் சடங்கு (இ.வ.); the first shaving of a baby, ceremonially observed (செ.அக.).

*[முடி + அறுத்தல்.]*

முடியன் *muḍiyaṉ,* பெ.(n.) கழகக்காலக் குறுநில மன்னன்; a king in šaṅgam period.

முடியனூர் *muḍiyaṉūr,* பெ.(n.) தென்னார்க்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள ஊர்; a village in South arcot district in

*kallakkuricci* Taluk. *சங்ககாலக் குறுநில மன்னர்களில் ஒருவனான முடியன் என்பவரின் பெயரால் அமைந்த ஊர்.*

*[முடியன் + ஊர்.]*

**முடியாட்சி** *mudi-y-ātci,* பெ.(n.) முடிசூடி ஆட்சி புரிகை; monarchy.

மறுவ. முடியரசு.

*[முடி + ஆட்சி. முடி சூடி ஆளும் ஆட்சி.]*

தலைமுறை தலைமுறையாக நாட்டை ஆளுகை.

**முடியில்தரித்தான்** *mudiyil-tarittān,* பெ.(n.) சரக்கொன்றை; cassia fistula (சா.அக.).

*[முடியில் + Skt. தரித்தான்.]*

**முடியிறக்கு[1]-தல்** *mudi-y-irakku-,* 5 செ. கு.வி. (v.i.) நேர்ச்சிக் கடனாக தெய்வங்களுக்கு வேண்டிக்கொண்டு மயிர் மழித்தல் (இ.வ.); to shave the hair of the head in fulfilment of a vow.

*[முடி + இறக்கு-தல்.]*

**முடியிறக்கு[2]-தல்** *mudi-y-irakku-,* 5 செ. குன்றாவி.(v.t.) இழிவுபடுத்துதல் (யாழ்.அக.); to put to disgrace.

*[முடி + இறக்கு-தல்.]*

**முடியுப்பு** *mudi-y-uppu,* பெ.(n.) கல்லுப்பு (மூ.அ.); rock salt.

**முடியுயர்-தல்** *mudi-y-uyar-,* 2 செ.கு.வி. (v.i.) ஆட்சிச் செழிப்புடன் இருத்தல்; to grow prosperous as a king. *குடியுயர முடியுயரும்.*

*[முடி + உயர்-தல்.]*

**முடியுலகம்** *mudi-y-ulagam,* பெ.(n.) முடியுலகு பார்க்க; see *mudi-y-ulagu. "முடியுலக மூர்த்தி" (சீவக.1847).*

*[முடி+ உலகம்.]*

**முடியுலகு** *mudi-y-ulagu,* பெ.(n.) மேலுலகம்; Heaven, celestial world, as the highest world. *"வால்விளை முடியுலகுற" (சீவக. 1847).*

*[முடி + உலகு.]*

**முடியுறுப்பு** *mudi-y-uruppu,* பெ.(n.) மாலை (தாமம்), முகுடம், தாமரை (பதுமம்), கோடகம் கிம்புரி என ஐவகைப்பட்ட மகுடவுறுப்புகள் (திவா.); ornamental parts of a crown, five in number, viz., *mālai (tāmam), mugudam, tāmarai (padumam), kōdagam, kimburi.*

*[முடி + உறுப்பு.]*

**முடியூர்** *mudi-y-ūr,* பெ.(n.) பெண்ணை யாற்றங்கரையில் உள்ள ஊர்; a village name. *பெண்ணையாற்றங்கரையில் இந்நாளில் கிராமம் என்று வழங்கப்படும் இவ்வூர் முதல்பராந்தகன் காலத்தில் முடியூர் என்று அழைக்கப்பட்டது. பராந்தகனின் முதல் படைத் தலைவன் பெரும் படையுடன் இவ்வூரில் தங்கியிருந்தான் (பிற்கால. சோழர் வரலாறு சதாசிவபண்டாரத்தார், பக்கம்.48).*

*[முடி + ஊர்.]*

**முடியெடு-த்தல்** *mudi-y-edu-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. முடியிறக்கு-தல் பார்க்க; see *mudi-y-irakku-.* 2. தலையெடுத் தோங்குதல்; to become, prominent. *"மறையவர் முடியெடுத்தனர்" (கலிங்.251).*

*[முடி + எடு-த்தல்.]*

முடியெண்ணெய் *mudi-y-enney,* பெ.(n.) 1. தலைக்குத் தேய்த்துக் கொள்ளும் எண்ணெய் (தைலம்); bathing oil. 2. தலைக்கிட்டு முழுகும் எண்ணெய்; hair oil (சா.அக.).

*[முடி + எண்ணெய்.]*

முடியைப்பிய்த்துக்கொள்(ளு)-தல் *mudiyai-p-piyttu-k-kol-,* 13 செ.குன்றாவி. (v.t.) எளிதில் தீர்வு காண முடியாமல் அல்லல்படுதல்; rack one's brains to solve a problem, to driven mad. *மாணவன் முழு ஆண்டுத் தேர்வு எழுதிக் கொண்டு இருக்கும்போது ஒருசில கேள்விகளுக்கு விடை தெரியாமல் முடியைப் பிய்த்துக் கொண்டான்.*

*[முடியை + பிய்த்து + கொள்-தல்.]*

முடிவறி-தல் *mudi-vari-,* 2 செ.குன்றாவி. (v.t.) நன்றாக உணர்தல் (யாழ்.அக.); to be advanced in knowledge, to master completely.

*[முடிவு + அறி-தல்.]*

முடிவாங்கு-தல் *mudi-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) முடியிறக்கு-தல் பார்க்க; see *mudi-y-irakku-.*

*[முடி + வாங்கு-தல்.]*

முடிவாழை *mudi-vālai,* பெ.(n.) இலாமிச்சை (பிங்.); cuscus-grass.

*[முடி + வாழை.]*

முடிவிடங்கூறல் *mudi-vidaṅ-gūral,* பெ.(n.) உத்தி முப்பத்திரண்டனுள் தான் சொல்லும் இலக்கணத்திற்கு நெறி (விதி) கூறும் இடத்தைக் குறிப்பது (நன்.97, உரை); giving particular reference to the rule followed in the context one of 32 utti.

*[முடிவு + இடங்கூறல்.]*

முடிவிலாற்றல் *mudivil-ārral,* பெ.(n.) முடிவிலாற்றலுடைமை பார்க்க (திவா.); see *mudivil-ārral-udaimai.*

*[முடிவு + இல் (எ.ம.) + ஆற்றல்.]*

முடிவிலாற்றலுடைமை *mudivil-ārral-udaimai,* பெ.(n.) எண் குணத்துள் ஒன்று (குறள், 9, உரை); omnipotence, one of eight natures.

*[முடிவிலாற்றல் + உடைமை.]*

எண்குணங்களாவன : 1. தன்வயத்தன் ஆதல், 2. தூய உடம்பினன் ஆதல், 3. இயற்கை உணர்வினன் ஆதல், 4. முற்றும் உணர்தல், 5. இயல்பாகவே கட்டு (பாசம்)களில் இருந்து நீங்குதல், 6. பேரருள் உடைமை, 7. முடிவு இல் ஆற்றல் உடைமை, 8. வரம்பு இல் இன்பம் உடைமை.

முடிவினை *mudivinai,* பெ.(n.) கருமம் மூன்றனுள் இம்மையிற் பலனளிக்கும் பழவினை; past Karma whose effect has begun to operate. *ஆகாமிய வினையும் முடிவினையும் ஒத்தல் வேண்டும் (சி.பொ.பா. 8, 1 பக்.175 சுவாமிநா.).*

*[முடி[1] + வினை.]*

முடிவு *mudivu,* பெ.(n.) 1. தொடங்கியதற்கு இறுதி; end of something. *மாநாட்டின் முடிவில் சிறப்பு அறிக்கை வெளியிடப்பட்டது. இவர் எழுதும் கதைக்கு முடிவு என்பதே இல்லையா?* 2. போட்டிகள், தேர்வுகள் முதலியவை எவ்வாறு முடிந்தது என்பது பற்றிய விளத்தம்; result of a competition,

examination, etc. *பத்தாம் வகுப்பு தேர்வின் முடிவுகள் நாளை வெளியிடப்படும். மக்களவைத் தேர்தல் முடிவுகள் வெளியான பத்திரிகை இருக்கிறதா?* 3. இறுதி; that which is final. *இதுதான் உன் முடிவான கருத்து என்றால் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. முடிவாக நீ என்ன விலைச் சொல்கிறாய்? நான் அதை வாங்கியே தீரவேண்டும்.* 4. சட்டப்படியான தீர்ப்பு; அறிவான தீர்மானம்; verdict, decision. *முறை மன்றத்தின் முடிவை மதிக்காமல் காவல் துறையினர் நடந்து கொண்டதாகக் குறை கூறினர். தாத்தாவை மருத்துவ மனையில் சேர்த்துவிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். சரியா? தவறா? கேள்விகளுக்கு என்னால் சரியாக முடிவு எடுக்க முடியவில்லை.* 5. பயன்; issue, result. 6. தீர்மானம்; conclusion, decision. *முடிவென்ன சொல்கிறீர்?* 7. முடிவான உட்கோள்; resoluteness. *"அக்கணை..... முடுகிய முடிவை நோக்கி" (கம்பரா. நிகும்ப.177).* 8. இசைப் பாகுபாட்டினுள் ஒன்று (சிலப்.3:41–2, உரை, பக்.108); a kind of note in music. 9. இறப்பு; death. *முடிவு காலம்.* 10. எல்லை; limit. *"சூழ்ச்சி முடிவு துணிவெய்தல்" (குறள், 671).* 11. பண் (இராகம்) முடிவில் அமையும் இசைச் சுரம்; tonic at the conclusion of a piece.

*[முடி → முடிவு.]*

**முடிவுகட்டு–தல்** *muḍivu-kaṭṭu-*,5 செ.கு.வி. (v.i.) 1. ஒன்றைக் குறித்து முடிவு எடுத்தல், தீர்மானித்தல்; take a decision, decide on something, finalize. *நிருவாகத்தைச் சந்தித்துப் பேசுவதற்கு முன் என்னென்ன கோரிக்கைகளை முன் வைக்கப் போகிறோம் என்று முடிவு கட்டிக் கொள்வோம்.* 2. தொல்லை விளைவிக்கும் ஒன்று தொடர முடியாத இறுதி நிலையை அடையச் செய்தல்; put an end to something. *'அவனுடைய கொட்டத்திற்கு முடிவு கட்டுகிறேனா இல்லையா பார்' என்று சூளுரைத்தான். கொடுஞ் செயல்களுக்கு இனியும் முடிவுகட்டாவிட்டால் நாடு சிதறிவிடும்.* 3. எண்ணித்துணிதல்; to come to a conclusion.

*[முடிவு + கட்டு–தல்.]*

**முடிவுகாலம்** *muḍivu-kālam*, பெ.(n.) சாக்காடு; time of death.

*[முடிவு + காலம்.]*

**முடிவுசெய்–தல்** *muḍivu-šey-*, 1 செ.கு.வி. (v.i.) முடிவுகட்டு–தல், 1 பார்க்க; see *muḍivu-kaṭṭu-*,1. *உன்னை அயல்நாட்டில் படிக்க வைக்க முடிவு செய்திருக்கிறோம். இந்தப் புதியச் சிக்கலுக்குக் கரணியம் அவர்கள்தான் என்று கட்சி மேலிடம் முடிவு செய்தது.*

*[முடிவு + செய்–தல்.]*

**முடிவுசொல்(லு)–தல்** *muḍivu-col-*, 13 செ.கு.வி. (v.i.) தீர்ப்புச் சொல்லுதல்; to give a decision, to deliver, judgement.

*[முடிவு + சொல்(லு)–தல்.]*

**முடிவுபோ–தல்** *muḍivu-pō-*,8 செ.கு.வி. (v.i.) நிறைவேறுதல்; to be accomplished, fulfilled. *'முடிவு போகாமையின்' (குறள், 262, உரை).*

*[முடிவு + போ–தல்.]*

**முடிவுபோக்கு–தல்** *muḍivu-pōkku-*, 5 செ. குன்றாவி.(v.t.) நிறைவேற்றுதல்; to accomplish, fulfil. *'தான் சூளுற்ற காரியத்தினை முடிவு போக்காது' (கலித்.149 : 10, உரை).*

*[முடிவு + போக்கு–தல்.]*

**முடிவுரை** *muḍivurai*, பெ.(n.) 1. முடித்து வைக்கும் முறையில் பேசும் பேச்சு அல்லது எழுதும் எழுத்து; concluding speech or remark. *விழாவின் இறுதியில் தலைவர் முடிவுரை ஆற்றினார்.* 2. நூலிறுதியில் அமையும் கட்டுரை; epilogue, concluding section of a work. *கட்டுரையின் முடிவில் எழுதியிருப்பது படிப்பவரை உண்மையாகச் சிந்திக்கத் தூண்டும்.*

*[முடிவு + உரை.]*

**முடிவெட்டு-தல்** *muḍi-veṭṭu-*, 5 செ. குன்றாவி. (v.t.) தலைமுடியைக் கத்தரித்துச் சீர்செய்தல்; have or do a hair cut. *சிறுவர்களுக்கு முடிவெட்டக் கட்டணம் உருபாய் நான்கு.*

*[முடி + வெட்டு-தல்.]*

**முடிவெழுத்து** *muḍiveḻuttu*, பெ.(n.) முடிபெழுத்து பார்க்க; see *muḍibeḻuttu*.

*[முடிவு + எழுத்து.]*

**முடிவேந்தர்** *muḍi-vēndar*, பெ.(n.) முடி மன்னன் பார்க்க; see *muḍi-mannaṉ*. *'முடிவேந்தர் மன்னும் அரண்களை' (சிறுபாண். 247, உரை).*

*[முடி + வேந்தர்.]*

**முடிவேர்** *muḍi-vēr*, பெ.(n.) வெட்டிவேர்; khuskhus (சா.அக.).

**முடுக்கடி** *muḍukkaḍi*, பெ.(n.) நெருக்கடி; busy time; critical moment. *திருமண முடுக்கடியில் துணிகள் வாங்காதே.*

*[முடுக்கு + அடி. முடுக்குதல் = விரைவு படுத்துதல்.]*

**முடுக்கம்** *muḍukkam*, பெ.(n.) 1. விலை யேற்றம்; high price, dearness. 2. இறுகல் (நாஞ்.); tightness.

*[முடுக்கு→முடுக்கம்.]*

**முடுக்கர்** *muḍukkar*, பெ.(n.) 1. குறுந்தெரு; short street. *"முடுக்கரும் வீதியும்" (சிலப்.5 : 187).* 2. அருவழி; pathway difficult to pass. *"முட்டுடை முடுக்கரு மொய்கொள் குன்றமும்" (சீவக.1216).* 3. தெருச்சந்து; lane. *"முடுக்கர் தோறும் புகுந்த வல்லிருளின் பொம்மல்" (இரகு.இலவ.55).* 4. மலைக்குகை (பிங்.); mountain cavern. 5. நீர்க் குத்தான இடம்; place where water presses against a bank and erodes. *"குண்டுகய முடுக்கர்..... யாற்று" (மலைபடு.213).* 6. இடைவெளி; interstice, interspace. *"முடத்தாழை முடுக்கருள்" (கலித்.136).*

*[முடுக்கு →முடுக்கர் = குறுந்தெரு. (வே.க.)]*

**முடுக்கன்** *muḍukkaṉ*, பெ.(n.) வலியோன் (யாழ்.அக.); strong man.

*[மிடுக்கு →முடுக்கு →முடுக்கன்.]*

**முடுக்காணி** *muḍukkāṇi*, பெ.(n.) ஆணி வகை (இ.வ.); screw.

*[முடுக்கு + ஆணி.]*



**முடுக்கிவிடு–தல்** *muḍukki-viḍu-*, 20 செ.கு.வி. (v.i.) தீவிரமாக அல்லது வேகமாகச் செயல்படும்படி இயக்குதல்; to gear up, step up, accelerate. *தேர்தல் நெருங்கியதும் அனைத்துக் கட்சிகளும் தங்களின் கொள்கைகளைப் பரப்பும் பணிகளை முடுக்கிவிட்டன. போட்டி வேட்பாளருக்கு எதிராக அவதூறான மேடைப் பேச்சைப் பரப்ப ஆளும் கட்சி முடுக்கி விடப்பட்டிருக்கிறது.*

*[முடுக்கி + விடு–தல்.]*

**முடுக்கு[1]–தல்** *muḍukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. பாவை, பொறிகள் முதலியவற்றை இயங்குவதற்காக திருகுதல்; to set in motion, wind. *சீறுந்தில் திறவுகோலை நுழைத்து முடுக்கினான்.* 2. மாடு முதலியவற்றை விரட்டி ஒட்டுதல்; to drive away. *வேலிதாண்டி மேயும் மாட்டை முடுக்காமல் வேடிக்கையா பார்த்துக் கொண்டு இருக்கிறாய்?* 3. திருகாணி முதலியவற்றை உட்செலுத்துதல்; to screw something. *மரைதேய்ந்திருப்பதனால் ஆணியைச் சரியாக முடுக்க முடியவில்லை. "கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்து" (நெடுநல்.85).* 4. விரைவுபடுத்துதல் (வின்.); to urge, bring pressure on. 5. விரைவாகச் செலுத்துதல்; to drive, cause to run, as a horse; to set in motion, as a potter's wheel. *"கடுகி முடுக்கிலும்" (விநாயகபு.55 : 7).* 6. விரைந்து கடித்தல்; to bite off hurriedly. *"பிணவு நாய் முடுக்கிய தடியொடு" (மலைபடு.177).* 7. உழுதல்; to plough. *"மூரிதவிர முடுக்கு முதுசாடி" (பரிபா.20:54).* 8. தூண்டி விடுதல் (உ.வ.); to induce, urge on. *ஏன் அவனுடன் சண்டை செய்யும்படி முடுக்குகிறாய்?*

க. முடுக்கு.

*[முள் = முற்படு, விரை. முள்→முடு→முடுகு → முடுக்கு→முடுக்கு–தல் (சு.வி.42).]*

**முடுக்கு[2]–தல்** *muḍukku-*, 5 செ.கு.வி. (v.i.) 1. உணர்ச்சி மிகுதல்; to feel urgently, as the call of nature. *ஒன்றுக்கு முடுக்குகிறது.* 2. மிகுதியாதல்; to increase, as in price. *விலைமுடுக்கிப் போகிறது.* 3. விரைதல்; to hasten. *"முடுக்கிவந்து" (உத்திரரா. இலங்கை யழி. 20).*

*[முடுக்கு[1]–தல் →முடுக்கு[2]–தல்.]*

**முடுக்கு[3]** *muḍukku*, பெ.(n.) 1. விரைவுப் படுத்துகை; urging, pressing hard. 2. மூலை; corner. *தெருமுடுக்கில் ஒரு பெட்டிக் கடை உண்டு.* 3. கோணல் தெரு; narrow, winding street. *"முட்டுமுடுக்கு மிட்டிடை கழியும்..... வீதியும்" (பெருங். உஞ்சைக்.33 : 16).* 4. மிகுதி; increase, dearness, as of price. *தங்கம் விலை வெகு முடுக்கு.*

க. முடுக்கு.

*[முள் = விரை. முள்→முடு→முடுகு→முடுக்கு (சு.வி.42).]*

**முடுக்கு[4]** *muḍukku*, பெ.(n.) 1. வலிமை (வின்.); strength, power. 2. அகந்தை (இ.வ.); pride, arrogance, stiffness of manners.

**முடுக்குச்சந்து** *muḍukku-c-candu*, பெ.(n.) சிறு சந்து (உ.வ.); alley, narrow lane.

*[முல் → முள் → முண் → முண → முணுக்கு → முடுக்கு + சந்து.]*

**முடுக்குத்தெரு** *muḍūkku-t-teru,* பெ.(n.) ஒடுங்கிய சிறு தெரு; small, narrow street. *"நெடுந்தெருவே போகிறவர்கள் நான் இருந்த முடுக்குத் தெருத் தேடி வந்த போதே" (ஈடு, 1. 2:6).*

*[முடுக்கு + தெரு.]*

**முடுக்குவழி** *muḍukku-vaḻi,* பெ.(n.) முடுக்குச்சந்து பார்க்க; see *muḍukku-c-candu.*

*[முடுக்கு + வழி.]*

**முடுக** *muḍuga,* கு.வி.எ. (adv.) 1. விரைவாய்; swiftly, quickly. 2. கிட்ட (யாழ்.அக.); near.

**முடுகடி** *muḍugaḍi,* பெ.(n.) அண்மை (யாழ்.அக.); nearness.

*[முடுக்கடி→முடுகடி.]*

**முடுகல்** *muḍugal,* பெ.(n.) 1. விரைவு; quickness. 2. வலிமை; strength.

*[முடுகு→முடுகல்.]*

**முடுகியல்** *muḍugiyal,* பெ.(n.) கலிப்பா வகைகளின் உறுப்புக்களுள் ஒன்று (தொல். பொருள்.464); a part of *Kali* verse, characterised by rapid movement.

*[முடுகு→முடுகியல்.]*

**முடுகியல்வண்ணம்** *muḍugiyal-vaṇṇam,* பெ.(n.) முடுகியல் (பிங்.) பார்க்க; see *muḍugiyal.*

*[முடுகியல் + வண்ணம்.]*

**முடுகு[1]-தல்** *muḍugu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. விரைந்து செல்லுதல்; to hasten, to be in haste, to move quickly. *"முடுகழலின் முந்துறுதல்" (பு.வெ.3 : 6).* 2. நெருங்கி வருதல்; to become urgent; to come to a head; to throng and surge. *"வெம்மைக் கூற்ற முடுகாதே" (தேவா.116, 7).* 3. வலிமையாதல் (வின்.); to be strong.

தெ., க. மிடுகு; ம. முடுகு.

*[முடுக்கு→முடுகு→முடுகு-தல்.]*

**முடுகு[2]-தல்** *muḍugu-,* 5 செ.குன்றாவி.(v.t.) எதிர்தல் (பிங்.); to meet; to advance against.

*[முடுகு[1]-தல்→முடுகு[2]-தல்.]*

**முடுகு[3]** *muḍugu,* பெ.(n.) 1. முடுகிச் செல்லும் ஓசை வகை (வின்.); a rapid movement in verse. 2. நாற்றம்; bad odour, stench. *"முடுகு நாறிய வடுகர்" (தேவா.918, 1).* 3. அரக்காற் செய்யப்பட்ட கங்கணம் (நெல்லை.); bracelet made of lac. 4. அரக்குவளை செய்யுங் கட்டளை (இ.வ.); mould in which lac bracelets are made. 5. மோதிர வகை (நாஞ்.); a ring.

*[முடுக்கு→முடுகு.]*

**முடுகு[4]** *muḍugu,* பெ.(n.) கடமை விலங்கின் பெண் (வின்.); female elk.

**முடுகு[5]** *muḍugu,* பெ.(n.) தோணி வகை (குருகூர்ப்.19); a kind of boat.

**முடுகுவண்ணம்** *muḍugu-vaṇṇam,* பெ.(n.) அராகந் தொடுத்த அடியோடு பிற அடிசேர்ந்து தொடர்ந்தோடுஞ் சந்தம் (தொல்.பொருள்.545); a rhythm effected by mixing lines of short syllables in rapid succession with those of a different type.

*[முடுகு + வண்ணம்.]*

முடுகுவெண்பா *muḍugu-veṇbā*, பெ.(n.) ஓசை (சந்த) முடுகுள்ள வெண்பாவகை; a species of *veṇbā* verse composed either wholly or partly in quick rhythm.

*[முடுகு + வெண்பா.]*

முடுங்கனல் *muḍuṅgaṉal*, பெ.(n.) செங்குளவி; red wasp (சா.அக.).

முடுத்தார் *muḍuttār*, பெ.(n.) மூடுகை; act of covering. *அந்தப் பிணத்திற்கு முடுத்தார் பண்ணினீர்களா?*

*[மூடு →முடு→முடுத்தார்.]*

முடுதம் *muḍudam*, பெ.(n.) தலைமை (நாஞ்.); leadership.

முடுவல் *muḍuval*, பெ.(n.) 1. நாய் (பிங்.); dog. *"சினமுடுவல் நரி கழுகு" (திருப்பு.519).* 2. பெண்நாய் (பிங்.); bitch. *"முடுவறந்த பைந் நிணத் தடியொடு" (மலைடு.563).* 3. செந்நாய் (அக.நி.); a brown - coloured dog.

*[முடுகு→முடுவல் = விரைவாக ஓடும் இயல்புள்ள நாய்.]*

முடுவல்வெம்படையோன் *muḍuval-vem-paḍaiyōṉ*, பெ.(n.) நாய்ப்படை யுடையவனான வயிரவன் (சூடா.); Bhairava, as having an army of dogs.

*[முடுவல் + வெம்மை + படையோன்.]*

முடை[1]-தல் *muḍai-*, 2 செ.குன்றாவி. (v.t.) பாய், கூடை முதலியவை பின்னுதல்; to plait a basket; weave a mat. *கூடை முடைவோர்க்குக் குறைந்த கூலியே கிடைக்கிறது. எங்கள் பள்ளியில் பாய் முடையக் கற்றுக் கொடுக்கிறார்கள். 'உலர்ந்த பழுத்தலை முடைந்து வேய்ந்த தனிமனை' (பெரும்பாண்.353, உரை).*

*[மிடை →முடை →முடை-தல்.]*

முடை[2]-தல் *muḍai-*, 2 செ.கு.வி.(v.i.) மெலிதல் (வின்.); to become lean.

*[மிடை →முடை →முடை-தல்.]*

முடை[3] *muḍai*, பெ.(n.) 1. புலால்; flesh. *"முடைச் சாகாடு" (நாலடி, 48).* 2. கெட்ட மணம்; stench, offensive odour. *"முடையரைத் தலைமுண்டிக்கு மொட்டரை" (தேவா.423, 4).* 3. புளித்த மோர் முதலியவற்றின் வீச்சம்; smell of sour buttermilk or curds. *"இடைப்பேச்சு முடைநாற்றமுமாய் விட்டது" (திவ்.திருப்பா. வியா.அவ.).* 4. தவிடு (பிங்.); bran.

முடை[4] *muḍai*, பெ.(n.) 1. நெருக்கடி, தட்டுப்பாடு; financial straits, constraint, shortage, squeeze. *பணத்துக்கு இப்போது கொஞ்சம் முடையாக உள்ளது.* 2. பற்றாக்குறை; need not enough scarcity.

முடை[5] *muḍai*, பெ.(n.) 1. குடையோலை (திவா.); ola basket. 2. ஓலைக்குடை (வின்.); umbrella of palm leaves.

*[மிடை →முடை.]*

முடைச்சேரி *muḍai-c-cēri*, பெ.(n.) முல்லை நிலத்தூர் (யாழ்.அக.); village in the forest tracts.

முடைசல் *muḍaišal*, பெ.(n.) 1. முடைகை; plaiting, braiding. 2. முடையப்பட்டது; that which is plaited. 3. வெள்ளத்தால் கரை உடைந்து போகாதவாறு மூங்கில் முதலியவற்றால் இடும் அணைப்பு (இ.வ.);

screen of bamboo or palm leaves for protecting the banks of rivers from erosion by floods.

*[மிடை → முடை → முடைசல்.]*

முடைஞ்சல் *mudaiñjal,* பெ.(n.) 1. இடையூறு (நாமதீப.631); trouble, distress. 2. பொருளில்லாதத் திண்டாட்டம்; poverty.

*[முட்டு →முடை → முடைஞ்சல் (சு.வி.42).]*

முடைநாற்றம் *mudai-nāṟṟam,* பெ.(n.) 1. கெட்டுப்போன இறைச்சி, புளித்த மோர் முதலியவற்றில் இருந்து வரும் கெட்ட மணம்; foul smell of meat, sour milk, etc. 2. புலால்; flesh. *"முடைச் சாகாடு" (நாலடி, 48).*

*[முடை + நாற்றம்.]*

முடைநாறி *mudai-nāṟi,* பெ.(n.) கொடி வகை (L.); small downy-lobed vine, *Vitis linnaei.*

*[முடை + நாறி.]*

முடைப்படு-தல் *mudai-p-padu-,* 20 செ. கு.வி.(v.i.) நெருக்கடி உண்டாதல்; to be in straits.

*[முடை + படு-தல்.]*

முடைமா *mudaimā,* பெ.(n.) காட்டுமா; forest mango, *Buchanania lutifolia.*

முடையிருப்பு *mudai-y-iruppu,* பெ.(n.) எதிர்காலத்தில் பற்றாக்குறை ஏற்படும் சமயங்களில் பயன்படுத்துவதற்கான தவச சேமிப்பு; reserve of food grains, buffer stock. *நுகர் பொருள் வணிகக் கழகத்திடம் நான்கு ஆயிரம் மூட்டை அரிசி முடையிருப்பில் உள்ளது.*

*[முடை + இருப்பு.]*

முண்டக்கட்டை *munda-k-kattai,* பெ.(n.) மயிரில்லாத் தலைபோல் ஆடையில்லா வுடம்பு; nacked body.

*[முண்டம் + கட்டை.]*

முண்டக்கண்[1] *mundakkaṇ,* பெ.(n.) முண்டக்கண்கறவா பார்க்க; see *munda-k-kaṇ-kaṟavā.*

*[முண்டம் + கண்.]*

முண்டக்கண்[2] *mundakkaṇ,* பெ.(n.) வெளியில் பிதுங்கியுள்ள பருத்த விழி (உ.வ.); goggle eye. *அவனுக்கு முண்டக்கண்.*

*[முண்டம் + கண்.]*

முண்டகக்கண்கரவை *mundaga-k-kaṇ-karavai,* பெ.(n.) முண்டைக்கண்[1] பார்க்க; see *mundai-k-kaṇ.*

*[முண்டகம் + கண் + கரவை. கரவை = மீன் வகை.]*

முண்டக்கண்கறவா *mundakkaṇ-kaṟavā,* பெ.(n.) நீலமும் பழுப்பும் கலந்த நிறமுள்ள கடல்மீன் வகை; sea fish, violet - brown, *Pempheris malabarica.*

*[முண்டக்கண் + கறவா.]*

முண்டக்கண்காக்காச்சி *mundakkaṇ-kākkācci,* பெ.(n.) மஞ்சள் கலந்த பசுமை நிறமுள்ளதும் மூன்று விரலம் வளர்வதுமான கடல்மீன் வகை; sea-fish, yellowish green, attaining 3 in. in length, *Apogan glaca.* 2. செந்நிறமுள்ள கடல் மீன் வகை; sea-fish scarlet, *Myripristis botche.*

*[முண்டக்கண் + காக்காச்சி.]*

முண்டக்கண்பாரை *muṇḍa-k-kaṉ-pārai,* பெ.(n.) மீன் வகை; a kind of fish.

*[முண்டக்கண் + பாரை.]*



முண்டகத்துறை *muṇḍaga-t-tuṟai,* பெ. (n.) குளம்; pond.

*[முண்டகம் + துறை. துறை = நீர்த்துறை, கடல், தாமரை மலர் நிறைந்த குளம்.]*

முண்டகநாயகம் *muṇḍaga-nāyagam,* பெ.(n.) சூரிய காந்திபூ; sun flower (சா.அக.).

முண்டகம்[1] *muṇḍagam,* பெ.(n.) 1. முள்; thorn. *"முண்டக விறும்பி னுற்று" (அரிச்.பு. வேட்டஞ்.36).* 2. முள்ளுடைத்தூறு (பிங்.); thorn bush. 3. தாழை (பிங்.); fragrant screw - pine. *"கூன்முண் முண்டகக் கூர்ம்பனி மாமலர்" (குறுந்.51).* 4. தாமரை; lotus. *"முண்டக வதன மழகெழ" (திருவாலவா.37 : 58).* 5. நீர்முள்ளி (திவா.); water - thorn. *"முண்டகங் கரும்பெனத் துய்த்து" (கல்லா.62 : 14). "முண்டகம் கலித்த முதுநீர் அடைகரை" (அகநா.80).* 6. கழிமுள்ளி; Indian night-shade. *"மணிப்பூ முண்டகங் கொய்யே னாயின்" (நற்.191). "மணிப்பூ முண்டகத்து" (மதுரைக். 96).* 7. கருக்கு வாய்ச்சி (அக.நி.); jagged jujube. 8. பதநீர் (சங்.அக.); sweet toddy. 9. கள் (பிங்.); toddy. 10. கருப்புக்கட்டி; jaggery from palmyra. 11. தேன்; honey of flowers.

*[முள் + அகம்.]*

முண்டகம்[2] *muṇḍagam,* பெ.(n.) 1. நெற்றி (பிங்.); forehead. *"முண்டகக் கண்ணா போற்றி" (குற்றா. தல.திருமால்.141).* 2. தலை (அரு.நி.); head. 3. நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; an Upanisad one of 108. 4. வாழை (மலை.); plantain.

முண்டகம்[3] *muṇḍagam,* பெ.(n.) கடல் (அக.நி.); sea.

முண்டகம்[4] *muṇḍagam,* பெ.(n.) மார்பின் கீழ் 4 விரலம் வீங்கி வலி கொடுக்கும் நோய்; a disease marked by swelling and pain just, below the chest.

முண்டகவேணி *muṇḍaga-vēṇi,* பெ.(n.) பொன்னாவாரை; a plant - *Cassia auriculata* (சா.அக.).

முண்டகன் *muṇḍagaṉ,* பெ.(n.) தாமரையில் பிறந்ததாகக் கருதப்படும் நான்முகன் (இலக்.அக.); Brahma, as lotus born.

*[முண்டகம் →முண்டகன்.]*

முண்டகாசனன் *muṇḍagāšaṉaṉ,* பெ.(n.) முண்டகன் (யாழ்.அக.) பார்க்க; see *muṇḍagaṉ.*

*[முண்டகம் + **Skt.** ஆசனன்.]*

முண்டகாசனி *muṇḍagāšaṉi,* பெ.(n.) முண்டகாசனை (யாழ்.அக.) பார்க்க; see *muṇḍagāšaṉai.*

**முண்டகாசனை** *muṇḍagāšaṉai,* பெ.(n.) தாமரைப் பூவிலிருப்பவள் – திருமகள் (இலக்குமி); Lakshmi, as seated on a Lotus. *முண்டகாசனை கேள்வன் (சூடா.).*

*[முண்டகம் + Skt. ஆசனை. ஆசனம் → ஆசனை.]*

**முண்டச்சி** *muṇḍacci,* பெ.(n.) கைம்பெண் (முண்டை); widow.

*[முண்டை →முண்டைச்சி.]*

**முண்டப்பங்கி** *muṇḍa-paṅgi,* பெ.(n.) தன்னை உணரும் பொருட்டு செய்யும் பூசையில் (ஆன்மார்த்த பூசையில்) இலிங்கவுருவமாயுள்ள சிவனை ஐந்து முகங்களோடு கூடியவராக மனதில் எண்ணி வழிபடுதல் (தியானிக்கை); meditation of *Šiva-liṅgam* as having five faces in *āṉmārtta-pūšai.* *"முறைமை யிற்றண்டபங்கி முண்டபங்கியு மியற்றி" (சூத.சிவமான்.4:18) (தத்துவப்.64, 203).*

**முண்டப்பாட்டு** *muṇḍa-p-pāṭṭu,* பெ.(n.) மிறைக்கவிவகை (யாப்.வி.பக்.510); variety of metrical composition.

*[முண்டம் + பாட்டு.]*

**முண்டபலம்** *muṇḍa-palam,* பெ.(n.) தேங்காய் (யாழ்.அக.); coconut.

*[முண்டம் + பலம். முண்டம் = உருண்டை.]*

**முண்டம்¹** *muṇḍam,* பெ.(n.) 1. தலை; head. *"முண்டம் வெம்பு" (திருவாலவா.44:31).* 2. நெற்றி; forehead. *"முண்டத்துற்ற கண்ணெரியினான்" (இரகு. தேனுவ.86).* 3. மழித்த தலை; clean shaven head. *"சடையு முண்டமுஞ் சிகையும்" (அரிச். பு.விவாக.2).* 4. வழுக்கைத் தலை (வின்.); bald head. 5. மண்டையோடு (கபாலம்); skull. *"இறையான் கையினிறையாத முண்டந் நிறைத்த வெந்தை" (திவ்.பெரியதி. 5. 1:8).* 6. உடற்குறை (யாழ்.அக.); headless trunk. 7. உறுப்புக் குறை (யாழ்.அக.); limbless body. *கைமுண்டம், கால்முண்டம்.* 8. நிரம்பாக் கருப்பிண்டம்; undeveloped foetus. *முண்டம் விழுந்தது.* 9. மயிரில்லாத் தலைபோல் ஆடையில்லா அம்மண உடம்பு (உ.வ.); naked body. 10. அறிவில்லாதவன்; useless person, block head.

*[முள் →முண் →முண்டு → முண்டம்.]*

**முண்டம்²** *muṇḍam,* பெ.(n.) 1. திரட்சி (சூடா.); sphere, globe. 2. இரும்புக்கிட்டம் (அக.நி.); iron dross. 3. குற்றி (இலக்.அக.); stump, stake. 4. உபநிடதங்கள் 108ல் ஒன்று; an upanisad. 5. முண்டபங்கி பார்க்க; see *muṇḍapaṅgi.* *"நலத்த வுருவது காண்டல் முண்டம்" (தத்துவப். 64).* 6. சந்தனம் நீறு முதலியவற்றால் நெற்றியில் இடும் குறி; caste mark on the forehead. *"ஆட்கொண்டான்றிரு முண்டந் தீட்ட மாட்டாது" (திருவாச.35 : 9).* 7. பிட்டு (அக.நி.); a preparation of rice flour cooked in steam. 8. மரத்துண்டு; piece, as of timber. 9. கட்டி; mass. *பேராறு பெருகிவர பெருமுண்டம் மிதந்துவர.* 10. கணுக்காற் பொருத்து; ankle.

*[முள் →முண் →முண்டு → முண்டம்.]*

மொட்டைத் தன்மையைக் குறிக்கும் முண்டம் என்னும் சொல்லும், உருட்சியைக் குறிக்கும் முண்டம் என்னும் சொல்லும் வெவ்வேறென அறிக.

வடவர் காட்டும் முண்ட் (muṇḍ) என்னும் மூலம் செயற்கையென்பது தெளிவு.

"muṇḍ (prob. artificial, to serve as the supposed of the words below), cl, I.P. to cut (Khaṇḍave-chidi), Dhātup.IX, 40; to cursh, grind, IX, 38 (V.I.for muṭ); cl.I.A. to cleanse `or to sink' or `to shave' என்று மா.வி.அ. குறித்தல் காண்க (தேவநேயம் 11, பக்.297).

முண்டம்³ *muṇḍam*, பெ.(n.) சீட்டாட்டத்தில் ஒருவர் கையிலுள்ள ஒரு இனத்தைச் சார்ந்த ஒற்றைச் சீட்டு (உ.வ.); a single card of a suit, in the hands of a player.

முண்டன்¹ *muṇḍaṉ*, பெ.(n.) 1. மழித்த தலையன்; shaven headed person. *"கண்டராய் முண்டராகி" (தேவா.269, 3).* 2. கையில் மண்டையோடுடைய (கபால முடைச்) சிவன்; Šiva. *"முண்டனீறன்" (திவ். திருச்சந்.71).* 3. சிவனியன் (சைவன்) (திவ். திருமாலை, 8, வியா.); *Šaivite.* 4. சமணர் (திவ். திருமாலை. 8, வியா.); Jain. 5. மஞ்சிகன் (நாவிதர்) (யாழ்.அக.); barber. 6. கரும்பாம்பு (இராகு) ; ascending node.

*[முண்டம்→ முண்டன்.]*

முண்டன்² *muṇḍaṉ*, பெ.(n.) 1. வலியவன் (திவ். திருமாலை.8, வியா.); strong, powerful person. 2. கிழங்கின் இறுக்கமான பகுதி; hard portion of a tuber. *சேப்பம் முண்டன்.*

*[மிண்டு→முண்டு→முண்டன்.]*

முண்டன்³ *muṇḍaṉ*, பெ.(n.) விடாப்பிடியன் (உ.வ.); obstinate man.

*[முண்டன்² →முண்டன்³.]*

முண்டன்சுரா *muṇḍaṉ-šurā*, பெ.(n.) சுறா மீன் வகை; a species in fish.

*[முண்டன் + சுரா.]*

முண்டனம் *muṇḍaṉam*, பெ.(n.) தலை மழிக்கை; shaving of the head.

*[முண்டம் + அனம்.]*

முண்டனி *muṇḍaṉi*, பெ.(n.) 1. கொட்டாங்கரந்தை; a plant, *Spheranthes hirtus.* 2. நொச்சிவேர்; the root of vitex negundo (சா.அக.).

முண்டாகாரம் *muṇḍākāram*, பெ.(n.) 1. உடற்குறை; headless trunk. 2. உருவிளங்காத பொருள் (உ.வ.); shapeless mass.

*[முண்டு→முண்டம்→முண்டாகாரம்.]*

முண்டாணி *muṇḍāṇi*, பெ.(n.) மூன்றுவீசம் பார்க்க (நெல்லை.); see *mūṉṟu-vīšam.*

முண்டாரி *muṇḍāri*, பெ.(n.) வலிமையானவன்; strong, powerful person.

*[மிண்டு→முண்டு→முண்டாரி.]*

முண்டான் *muṇḍāṉ*, பெ.(n.) மஞ்சட்கிழங்கு; turmeric tuber.

முண்டி¹-த்தல் *muṇḍi-*, 4 செ. குன்றாவி. (v.t.) மொட்டையாய் மழித்தல்; to shave the head completely. *"தலை முண்டிக்கு மொட்டரை" (தேவா.423, 4).*

*[முண்டு→முண்டி→முண்டி-த்தல்.]*

முண்டி² *muṇḍi*, பெ.(n.) கல்லுளிமங்கன் (இ.வ.); pertinacious beggar.

தெ. முண்டி; க. மொண்டு.

முண்டி³ *muṇḍi*, பெ.(n.) 1. மழித்த தலையினன் (திருவாலவா.குறிப்பு); person with a clean - shaven head. 2. மஞ்சிகன் (நாவிதன்)

(இலக்.அக.);barber. 3. நெற்றியில் மதக்குறி (திரிபுண்டாரம்) அணிந்தவன்; one who wears a caste mark on his forehead. *"நீற்றுப் பூண்டகு முண்டியேடா" (திருவாலவா.13, 14).*

*[முண்டு → முண்டி.]*

முண்டி[4] *muṇḍi,* பெ.(n.) முண்டனி பார்க்க (நாமதீப.329); see *muṇḍaṉi.*

முண்டி[5] *muṇḍi-,*பெ.(n.) வளைவு; crooked ness, bend.

*[முள்→முண்டு→முண்டி (சு.வி.44).]*

முண்டிதம் *muṇḍidam,*பெ.(n.) 1. மொட்டை யடிக்கை; shaving the head clean. *முண்டிதப்படு சென்னியன் (கந்தபு. மார்க். 117).* 2. வரிக்கூத்து வகை (சிலப்.3: 18, உரை); a masquerade dance.

*[முண்டி → முண்டிதம்.]*

முண்டிதை *muṇḍidai,* பெ.(n.) உடலிளைத்துத் தோன்றும் தேவாங்கு (நாமதீப.); the Indian sloth.

முண்டியடி-த்தல் *muṇḍiyaḍi-,*4 செ.கு.வி. (v.i.) கூட்டத்தில் முன்னேற ஒருவரை ஒருவர் நெருக்கித் தள்ளுதல்; jostle against, push around. *பேருந்தில் முண்டியடித்து ஏறினார். நடிகரைப் பார்க்கக் கூட்டம் முண்டியடித்துக் கொண்டு வந்தது.*

*[முண்டி + அடி-த்தல்.]*

முண்டினி *muṇḍiṉi,* பெ.(n.) ஒரு வகை மரம்; a kind of tree useful in alchemy (சா.அக.).

முண்டீரம் *muṇḍīram,* பெ.(n.) கீரை வகை (சங்.அக.); a kind of greens.

முண்டு[1]-தல் *muṇḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. முரண்டு பண்ணுதல்; to be unruly, refractory; to act saucily. 2. முனைந்து நிற்றல்; to attack vehemently. *ஒரு முண்டு முண்டிப் பார்த்தான்.* 3. சண்டை செய்யும் முனைப்போடு இருத்தல்; be aggressive.

*[முள் →முண்டு →முண்டுதல் = முற்படுதல், முட்டுதல், தாக்குதல், துளைத்தல் (சு.வி.42).]*

முண்டு[2] *muṇḍu,*பெ.(n.) 1. முருட்டுத் தன்மை (யாழ்.அக.); petulance, obstinacy. 2. முனைந்து செய்யும் எதிர்ப்பு; vehement attack. 3. மடமை (யாழ்.அக.); stupidity. 4. மரம் முதலியவற்றின் கணு; knot, as in a tree. 5. திரட்சி; bulging or protuberance. 6. உருண்ட கட்டை (இ.வ.); short log; wooden prop. *முண்டும்முடிச்சும்.* 7. உடற்சந்து (உ.வ.); joint of the body. *முண்டிலே பட்டது.* 8. திமில் (இ.வ.); hump.

க. மொண்டு.

*[முண்டு[1] →முண்டு[2].]*

முண்டு[3] *muṇḍu,*பெ.(n.) சிறுவேட்டி (நாமதீப. 780); short-sized cloth.

க., ம. முந்டு.

முண்டுகொடு-த்தல் *muṇḍu-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) முட்டுகொடுத்தல்; give a support or prop. *சாய்ந்து கிடந்த வாழைமரத்திற்கு முண்டு கொடுத்து நிமிர்த்தியிருக்கிறார்கள்.*

*[முண்டு + கொடு-த்தல்.]*

**முண்டுபலகை** *muṇḍu-palagai,* பெ.(n.) கடலில் கட்டு மரத்தைச் செலுத்த உதவும் துடுப்பு (இ.வ.); paddle.

*[முண்டு[2]+ பலகை.]*



**முண்டை[1]** *muṇḍai,* பெ.(n.) முட்டை; egg. *"முண்டை விளை பழம்" (பதிற்றுப்.60 : 6).*

*[முண்டு → முண்டை.]*

**முண்டை[2]** *muṇḍai,* பெ.(n.) கண்ணின் கருவிழி (உ.வ.); apple of the eye.

*[மிண்டை → முண்டை.]*

**முண்டை[3]** *muṇḍai,* பெ.(n.) தலைமழித்த கைம்பெண்; widow, as having a shaven head. *"மொட்டை முண்டை" (தனிச்.சிந்.376 : 4).*

*[முண்டன் → முண்டை (பெ.பா.)]*

**முண்டைக்கட்டை** *muṇḍai-k-kaṭṭai,* பெ.(n.) முண்டக்கட்டை பார்க்க; see *muṇḍai-k-kaṭṭai.*

*[முண்டம் + கட்டை.]*

**முண்டைக்கண்** *muṇḍai-k-kaṇ,* பெ.(n.) முண்டக்கண் பார்க்க; see *muṇḍa-k-kaṇ.*

*[முண்டை[2] + கண்.]*

உருண்டு பெருத்த விழிகளை உடையதால் முட்டைக் கண் என்பது முண்டைக்கண் என வழங்குகின்றது.

**முண்டைச்சி** *muṇḍaicci,* பெ.(n.) முண்டை[3] பார்க்க; see *muṇḍai*[3]. *"முண்டைச்சிக்குக் சொந்தக்காரன் முன்னுக்கு வருவானா" (பழ). "முண்டைச்சி பெற்றது மூன்றும் அப்படியே" (பழ.).*

*[முண்டை[3] → முண்டைச்சி]*

**முண்டைமோப்பி** *muṇḍai-mōppi,* பெ.(n.) 1. கைம்பெண் (வின்.); widow. 2.கைம்பெண்ணுக்குப் பிறந்த பிள்ளை (சென்னை); son born to a widow.

*[முண்டை + மோப்பி.]*

**முண்ணாக்கு** *muṇṇākku,* பெ.(n.) முள் பாய்ந்த நாக்கு; tongue with inflamed papillae (சா.அக.).

*[முள் + நாக்கு.]*

**முண்ணாயகி** *muṇṇayagi,* பெ.(n.) பாம்பு தின்னி என்னும் மூலிகை (வின்.); a kind of poisonous herb.

*[முள் + நாயகி.]*

**முண்ணாவல்** *muṇṇāval,* பெ.(n.) நாவல் வகை; a species of rose- apple.

*[முள் + நாவல்.]*

**முண்மா** *muṇmā,* பெ.(n.) முள்ளம்பன்றி (யாழ்.அக.); porcupine.

*[முள் + மா. மா = விலங்கு.]*

**முண்முரண்டை** *muṇ-muraṇḍai,* பெ.(n.) கொடி வகை; necklace berried climbing caper, *Marua arenaria.*

**முண்முருக்கு** *muṇ-murukku,* பெ.(n.) முள்ளுமுருக்கு (மூ.அ.) பார்க்க; see *muḷḷu-murukku.*

*[முள் + முருக்கு]*

**முண்முருங்கை** *muṇ-muruṅgai,* பெ.(n.) முள்ளுமுருக்கு பார்க்க; see *muḷḷu-murukku.*

*[முள் + முருங்கை.]*

**முணக்கு-தல்** *muṇakku-,*5 செ.குன்றாவி. (v.t.) உள் வளைத்தல்; to contract, withdraw, bend. *"வள்ளுகிர் முணக்கவும்" (நற்.114).*

*[முணங்கு → முணக்கு →முணக்கு-தல்.]*

**முணங்கு[1]-தல்** *muṇaṅgu-,*5 செ.கு.வி. (v.i.) **1.** உள் வளைதல், உள்ளடங்குதல்; to be contracted, withdrawn, bent. **2.** அடங்குதல் (வின்.); to be subject to. **3.** தெளிவற்ற வகையில் மெல்லிய குரலில் பேசுதல், குரலையடக்கிப் பேசுதல் (வின்.); to speak in a suppressed tone, mutter in a low tone, murmur. *காய்ச்சலால் இரவு முழுவதும் முணங்கிக் கொண்டே இருந்தான்.*

*[முல் → முள் → முண் → முண → (முணவு → முணகு →)முணங்கு →முணங்கு-தல் (வே.க.).]*

**முணங்கு[2]** *muṇaṅgu,* பெ.(n.) **1.** அடக்கம் (சூடா.); withdrawing, contracting, bending. 2. சோம்பல் முறிப்பு; shaking off drowsiness or laziness by stretching one's limbs. *"முணங்கு நிமிர் வயமான்" (புறநா.52). "வியலறை சிவப்ப வாங்கி முணங்கு நிமிர்ந்து" (அகநா.357 : 5).* **3.** சோம்பலால் ஏற்படும் உடம்பு வளைவு, முடக்கம், சோம்பு (இலக்.அக.); idleness.

*[முல் → முள் → முண் → முண → (முணவு →முணகு →)முணங்கு (வே.க.).]*

**முணங்குநிமிர்-தல்** *muṇaṅgu-nimir-,* 2 செ.கு.வி.(v.i.) உடம்பை நீட்டிச் சோம்பல் முறித்தல்; to shake off drowsiness or laziness. *"முணங்குநிமிர்ந் தளைச் செறி யுழுவை யிரைக்குவந் தன்ன" (புறநா.78).*

*[முணங்கு + நிமிர்-தல்.]*

**முணமுண-த்தல்** *muṇa-muṇa-,* 4 செ. குன்றாவி. (v.t.) வாய்க்குள் மெல்லப் பேசுதல் (உ.வ.); to mutter, murmur.

*[முல் →முள் →முண் →முண →முணமுண-த்தல் (வே.க.).]*

**முணுக்குமுணுக்கெனல்** *muṇukku-muṇukkeṉal,* பெ.(n.) குழவி தாய்ப்பாலைச் சிறிது சிறிதாக உறிஞ்சிக் குடிக்கை; in a way that a child suck milk from its mother's breast.

*[முல் → முள் → முண் → முண → முணு → முணுக்கு →முணுக்குமுணுக்கெனல் (வே.க.).]*

**முணுமுணு-த்தல்** *muṇumuṇu-,* 4 செ. குன்றாவி. (v.t.) **1.** வெறுப்பு, நிறைவின்மை (அதிருப்தி) முதலியவற்றை வெளிப்படுத்தும் வகையில் தாழ்ந்த குரலில் பேசுதல்; grumble, mutter, talk in whispers. *எதற்கு முணுமுணுக்கிறாய்? கடைக்குப் போக முடியாது என்று சொல்லிவிடு. நான் வரும்போது அவன் காதில் ஏதோ முணு முணுத்துக் கொண்டிருந்தாயே.* **2.** வாய்க்குள்ளாகப் பேசுதல்; recite mantras, prayers softly. *ஏதோ மந்திரத்தை முணுமுணுத்தவாறே கூடத்தில் நடந்து கொண்டு இருந்தார்.*

*[முல் → முள் → முண் → முண → முணு → முணுமுணு →முணுமுணு-த்தல் (வே.க.1:3).]*

**முணுமுணுப்பு** *munumunuppu,* பெ.(n.) வெறுப்பு, நிறைவின்மை (அதிருப்தி) முதலியவற்றை வெளிப்படுத்தும் வகையில் முணுமுணுக்கை; grumbling. *மனைவியின் முணுமுணுப்புத் தாங்காமல் கணவர் மளிகைக் கடைக்குப் புறப்பட்டார். முணுமுணுப்பு இல்லாமல் கேட்ட போதெல்லாம் அப்பா பணம் கொடுத்திருக்கிறார்.*

*[முல் → முள் → முண் → முண → முணு → முணுமுணுப்பு (வே.க.).]*

**முணவல்** *munaval,* பெ.(n.) சினம் (நாமதீப. 637); anger.

*[முணவு → முணவல்.]*

**முணவு-தல்** *munavu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வெறுத்தல்; to dislike, feel aversion to. *'களிறு நிலை முணவுதற்குக் காரணம் இருஞ்சேறாடுதல்' (பதிற்றுப்.64 : 7, உரை).* 2. சினத்தல்; to be angry.

*[முள் → முண் → முண → முணவு → முணவு-தல்.]*

**முணை[1]-தல்** *munai-,* 2 செ.குன்றாவி. (v.t.) வெறுத்தல்; to dislike, feel aversion to. *"களிறுநிலை முணைஇய" (பதிற்றுப்.64 : 7).*

*[முண் → முண → முணை → முணை-தல்.]*

**முணை[2]** *munai,* பெ.(n.) 1. வெறுப்பு; aversion. *"முணையில் கொடை" (சிவப்.பிரபந். சிவஞான. பிள்.முத்தப்.5).* 2. மிகுதி; abundance. *"முணையினாற் கடலக முழக்க மொத்தவே" (சீவக.2222).*

*[முணை[1] → முணை[2]]*

**முத்தக்காசு** *mutta-k-kāšu,* பெ.(n.) 1. கோரை வகை (M.M.228); straight sedge. 2. கோரைக் கிழங்கு; straight sedge tuber. *முத்தக்காசை அமுது செய்விப்பது (ஈடு, 1. 6 : 1).*

**முத்தகம்[1]** *muttagam,* பெ.(n.) 1. தனித்து நின்று பொருள் முடியுஞ் செய்யுள் (தண்டி.2); a stanza which, by itself, is complete in sense. 2. இசைப் பாவகையுள் ஒன்று (சிலப்.6 : 35); a kind of literary composition adapted to singing. 3. ஏவுகணை (எறியாய்தம்) (யாழ்.அக.); missile.

**முத்தகம்[2]** *muttagam,* பெ.(n.) 1. குருக்கத்தி; common delight of the woods. 2. கருக்குவாய்ச்சி; jagged jujube.

**முத்தங்கி** *muttaṅgi,* பெ.(n.) முத்தாலாகிய தளர்ச்சியான மேல் சட்டை, முத்துச் சட்டை; cloak made of pearls.

*[முத்து[2] + **Skt.** அங்கி]*

**முத்தங்கொஞ்சு-தல்** *muttaṅ-goñju-,* 5 செ.கு.வி.(v.i.) முத்தமிடு-தல் பார்க்க; see *muttam-idu-.*

*[முத்தம்[1] + கொஞ்சு-தல்]*

**முத்தங்கொடு-த்தல்** *muttaṅ-godu-,* 4 செ. குன்றாவி.(v.t.) முத்தமிடு-தல் பார்க்க; see *muttam-idu-.*

*[முத்தம் + கொடு-த்தல்]*

**முத்தங்கொள்(ளு)-தல்** *muttaṅgol-,* 13 செ.குன்றாவி.(v.t.) 1. முத்தமிடு-தல் பார்க்க; see *muttam-idu-.* *"தாய் வாய் முத்தங் கொள்ள" (பெரியபு. கண்ணப்ப. 23).* 2. பொருந்துதல்; to touch, come in contact with. *"சிலை முத்தங் கொள்ளுந் திண்டோள்" (சீவக.2312).* 3. தழுவுதல்,

புல்லுதல்; to embrace. *"முலை முத்தங் கொள்ள" (சீவக.2312).*

*[முத்தம் + கொள்(ளு)-தல்]*

**முத்தடுப்பூசி** *muttaḍu-p-pūši,* பெ.(n.) தொண்டை அடைப்பான், கக்குவான் இருமல், தசை விறைப்பு இசிவு ஆகிய மூன்று நோய்களுக்கான தடுப்பு மருந்து; triple antigen.

*[முத்தடுப்பு + ஊசி.]*

**முத்தண்டு** *muttaṇḍu,* பெ.(n.) துறவிகள் வைத்திருக்கும் மூன்று பிரிவான தண்டம் (திரி தண்டம்); triple staff of an ascetic. *"முத்தண்டு தொட்டிமுத்தாய்" (உபதேசகா. உருத்திராக்.86).*

*[மூன்று + தண்டு.]*



**முத்தண்ணா** *muttaṇṇā,* பெ.(n.) 1. தமையன்; elder brother. 2. அசடன்; dullard, a term of abuse.

*[மூ + அண்ணா. அண்ணன் →அண்ணா. மூ மூத்தவன். மூத்தண்ணன்→ மூத்தண்ணா → முத்தண்ணா]*

**முத்தத்தீபம்** *mutta-t-tībam,* பெ.(n.) கோயிலிலுள்ள விளக்கு வகை (தமிழ்விடு. முகவுரை.பக்.12); a kind of temple lamp. ஒருகா. முற்றம்→முத்தம்.

*[முத்தம் + Skt. தீபம். த. தீ→தீவம்→வ. தீபம்]*

**முத்தந்தா-தல்** *muttan-tā-,* 18 செ.கு.வி. (v.i.) முத்தமிடுமாறு கன்னம் முதலியவற்றைக் காட்டுதல்; to offer one's cheek for a kiss. *"என் குட்டனே முத்தந்தா" (திவ்.பெரியாழ்.3.3: 2).*

*[முத்தம் + தா-தல்.]*

**முத்தப்பசெட்டியார்** *muttappa-ceṭṭiyār,* பெ.(n.) 20ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்; Tamil Poet.

இவர், கலித்துறை அந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி, நேமக் கலம்பகம், செயங்கொண்டார் சதகம், செயங்கொண்ட சோழீசர் பிள்ளைத் தமிழ், செயங்கொண்டார் வழக்கம், திருமுக விலாசம் போன்ற நூல்களை இயற்றியுள்ளார்.

**முத்தப்பருவம்** *mutta-p-paruvam,* பெ.(n.) பிள்ளைத் தமிழ்ப் பருவங்களுள் குழந்தையை முத்தந் தரும்படியாகப் பாடும் பகுதி; a section of *pillai-t-tamil* which describes the stage of childhood in which the child is asked to offer its cheek for a kiss.

*[முத்தம் + பருவம்.]*

**முத்தம்[1]** *muttam,* பெ.(n.) 1. உதடு (பிங்.); lip. 2. அன்பிற்கறிகுறியாக ஒருவகை யொலி யுண்டாக உதடுகளால் தொடுகை (சூடா.); kiss. *"மணிவாயிடை முத்தம் தருதலும்" (திவ்.பெருமாள்.7: 5). "முறிமேனிமுத்த முறுவல்" (குறள், 1113).* 3. முத்தப்பருவம் (இலக்.வி.806) பார்க்க; see *mutta-p-paruvam.* 4. மருதநிலம் (சூடா.); agricultural tract.

*[முல் → முது → முத்து → முத்தம். 'அம்' பெருமைப் பொருட் பின்னொட்டு.]*

**முத்தம்²** *muttam,* பெ.(n.) 1. முத்து; pearl. *"சீர்மிகு முத்தந் தைஇய" (பதிற்றுப்.39). "மண்ணாமுத்த மரும்பிய புன்னை" (அகநா. 30:13). "ஒலிபன் முத்தம் ஆர்ப்ப வலி சிறந்தது" (நற்.202, 2).* 2. பேராமணக்குக் கொட்டை (தைலவ. தைல.); castor bean. 3. பச்சைக்கல்லின் குணங்களுளொன்று (திருவிளை. மாணிக்.67); a superior quality of emerald. 4. முத்தாபலம், 2 பார்க்க; see *muttāpalam.*

வ. முக்த.

*[முத்து→முத்தம். முத்து + அம் - முத்தம். 'அம்' பெருமைப் பொருட் பின்னொட்டு. ஒ.நோ. விளக்கு→விளக்கம்.]*

**முத்தம்³** *muttam,* பெ.(n.) ஆண் குறி; penis. *"அச்சுதன் முத்த மிருந்தவா காணீரே" (திவ்.பெரியாழ்.1. 2 : 6).*

**முத்தம்⁴** *muttam,* பெ.(n.) 1. அன்பு (சூடா.); love, endearment. 2. மகிழ்ச்சி (அரு.நி.); joy.

*[முத்து →முத்தம்.]*

**முத்தம்⁵** *muttam,* பெ.(n.) 1. முத்தாசனம் பார்க்க; see *muttāšanam. "முத்தமென லிடப்பரட்டாற் சீவனியை யழுத்தி வலக்காலொத்த பரடப் பரட்டின் கீழழுந்த வைகுதல்" (பிரபோத.44 : 9).* 2. வீடுபேறு; salvation. *"எய்திய பெத்தமு முத்தமும்" (திருமந்.2256).* 3. விடுதலை (யாழ்.அக.); release.

**முத்தம்⁶** *muttam,* பெ.(n.) 1. கோரை (நாமதீப.); sedge. 2. முத்தக்காசு (பாலவா.761) பார்க்க; see *muttakkāšu.*

**முத்தம்⁷** *muttam,* பெ.(n.) முற்றம் என்ற சொல்லின் பேச்சுவழக்கு; correction of word `*murram*' the court yard of house.

**முத்தமாலை** *mutta-mālai,* பெ.(n.) முத்து மாலை; garland of pearl. *"முத்தமாலை முடிமுதல் வருட" (பெருங். இலாவண.4 : 136).*

*[முத்து + மாலை.]*

**முத்தமிடு-தல்** *muttam-iḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) அன்பிற்கறிகுறியாக ஒருவகை யொலி யுண்டாக உதடுகளாற் பயிறல்; to kiss.

*[முத்தம் + இடு-தல்.]*

**முத்தமிழ்** *muttamiḻ,* பெ.(n.) இயல், இசை, நாடகம் என்னும் மூவகையான தமிழ்; the three kinds of literature in Tamil viz., *iyal, išai, nāḍagam. "மும்முரசு முத்தமிழும்" (வள்ளுவ மா.10).*

*[மூன்று + தமிழ்.]*

**முத்தமிழ்க்கவிராயர்** *muttamiḻ-k-kavirāyar,* பெ.(n.) சுசீந்திரத் தலபுராணம் என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet, author of *šušindira-t-talapurāṇam.*

*[முத்தமிழ் + கவிராயர்.]*

**முத்தமிழ்க்கவிவீரராகவமுதலியார்** *muttamiḻ-k-kavi-vīrarāgava-mudaliyār,* பெ.(n.) பிற்காலத் தமிழ்ப் புலவர்; a Tamil poet who belongs to the later period.

*[முத்தமிழ்க்கவி + வீரராகவ + முதலியார்.]*

இவர் வரலாற்றைத் திருவேங்கடக் கலம்பகம் முகவுரையில் வை.மு.சடகோப ராமானுசாச்சாரியர் எழுதியிருக்கிறார். இவர் 500 ஆண்டுக்கு முன்பிருந்தவர். இவர் பொன் விளைந்த களத்தூரிற் பிறந்தவர். திருக்கழுக்குன்றப் புராணஞ் செய்தவர். ஈழம் போய் யானைக் கன்றும் வளநாடும் பெற்றவர்.

கண்டசுத்தி பாடுபவர். இவர் செய்த நூல்கள் 1. திருவேங்கடக் கலம்பகம், 2. திருக்கண்ண மங்கை மாலை, 3. கச்சிப் பெருந்தேவித் தாயார் பஞ்சரத்தினம், 4. பாலூர்க் கலம்பகம், 5. செய்யூர் பிள்ளைத் தமிழ்.

முத்தமிழ்முனிவன் *muttamiḻ-muṉivaṉ,* பெ.(n.) அகத்தியன்; Agastya as the exponent of *muttamiḻ. "முத்தமிழ் முனிவன் கேட்ப" (காஞ்சிப்பு.வீரராக.6).*

*[முத்தமிழ் + முனிவன்.]*

முத்தமிழுரியோன் *muttamiḻ-uriyōṉ,* பெ. (n.) 1. முத்தமிழ்முனிவன் (யாழ்.அக.) பார்க்க; see *muttamiḻ-muṉivaṉ.* 2. வயிரவன் (சது.); Bhairava.

*[முத்தமிழ் + உரியோன்.]*

முத்தமுண்(ணு)–தல் *muttam-uṇ(ṇu)-,* 13 செ.குன்றாவி. (v.t.) முத்தமிடு–தல் பார்க்க; see *muttamiḍu-. "தணிவற முத்த முண்டாள்" (திருவாலவா.45 : 15).*

*[முத்தம் + உண்(ணு)–தல்.]*

முத்தர் *muttar,* பெ.(n.) மேடு, திடர் (வின்.); mound, hillock.

முத்தரதி *muttaradi,* பெ.(n.) 1. கோரைக் கிழங்கு; a grass - *Cyperus rotundus.* 2. அமுக்கிராக் கிழங்கு; a shrub-*Withania coagulens.*

முத்தரை *muttarai,* பெ.(n.) அரையிலணியும் முத்துவடம்; waist band made of pearls. *"பிறங்கிய முத்தரை முப்பத் திருகாழ்" (சிலப்.6 : 87).*

*[முத்து + அரை.]*



முத்தரையர் *muttaraiyar,* பெ.(n.) வேளிரின் உறவு முறையினராகவும் பல்லவர் ஆட்சியில் சிற்றரசர்களாகவும் இருந்த மன்னர் குலமரபினர்; tutelary heritage of *Vēḷir* and the petty of Pallava king. *"பெருமுத்தரையர் பெரிதுவந் தீயும்" (நாலடி, 200).*

*[ஒருகால்: மூன்று + தரை – முத்தரை → முத்தரையர்.]*

தஞ்சைக்கு அருகில் உள்ள செந்தலையை தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தவர்கள். தஞ்சைக்கருகே உள்ள வல்லம் என்ற ஊரும் இவர்களுக்கு தலைநகராக இருந்தது. பல்லவர்களுக்குக் கீழ் சிற்றரசர்களாக இம்மரபினர் வாழ்ந்துள்ளனர். பெரும்பிடுகு, மாற்பிடுகு, விடேல் பிடுகு, பகாபிடுகு போன்ற பல்லவ மரபிற்குரிய பட்டங்களை இவர்களும் கொண்டிருந்தனர். இம்மரபினரின் வரையா வண்மை பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்றான நாலடியாரில் கூறப்பட்டுள்ளது (பிற்.சோழ.வர.சதாசிவப்பண்டார, பக்கம் 14).

முத்தலாபுரம் *muttalāpuram,* பெ.(n.) தூத்துக்குடி மாவட்டம் கோவில்பட்டி வட்டத்தில் வைப்பாற்றின் கரையில் எட்டையாபுரம் அருப்புக்கோட்டைச் சாலையிலுள்ள ஊர்; a city in Tuticorin

district in *Kovilpaṭṭi* taluk, on the way from *Aruppukkoṭṭai* to *Eṭṭaiya-puram*, situated on the banks of Vaipparu.

**முத்தலை** *muttalai*, பெ.(n.) முத்தலைக் கழு பார்க்க (திவா.); see *muttalai-k-kaḻu*.

*[மூன்று + தலை.]*

**முத்தலைக்கழு** *muttalai-k-kaḻu*, பெ.(n.) முக்கோல் (சூலம்) (பிங்.); the trident, as having three heads or spikes. *"முத்தலைக் கழுக்கள் வீசுவன" (திருவிளை. திருநகர.24).*

*[முத்தலை + கழு.]*

**முத்தலைவேல்** *muttalai-vēl*, பெ.(n.) முத்தலைக்கழு பார்க்க (பிங்.); see *muttalai-k-kaḻu*.

*[மூன்று + தலை + வேல்.]*

**முத்தலைவேலோன்** *muttalai-vēlōṉ*, பெ.(n.) வைரவன் (சது.); god of Bhairava.

*[மூன்று + தலை + வேலோன்.]*

மூன்று பிரிவாக உள்ள வேலை, படையாகக் கொண்டவன்.

**முத்தவள்ளி** *mutta-vaḷḷi*, பெ.(n.) முத்துக் கோத்த கொடிபோல் அமைந்த கழுத்தணி; a garland of pearls, as shaped like a creeper. *"முத்த வள்ளியொடு மும்மணி சுடர" (பெருங்.உஞ்சைக்.34:203).*

*[முத்தம் + வள்ளி.]*

**முத்தவி** *muttavi*, பெ.(n.) ஆமணக் கெண்ணெய் (சங்.அக.); castor oil.

*[முத்து[2] + அவி. அவி = அவித்தல், ஆமணக்குக் கொட்டையை அவித்துப் பெறும் எண்ணெய்.]*

**முத்தழல்** *muttaḻal*, பெ.(n.) முத்தீ பார்க்க; see *muttī*. *"முத்தழல் வேள்வி" (காசிக. சிவசன். தெய்.23).*

*[மூன்று + தழல். தழல் = நெருப்பு, தணல்.]*

**முத்தழலோர்** *muttaḻalōr*, பெ.(n.) பிராமணர்; Brahmins. *"முத்தழலோர் மனைகடொறும்" (தேவா.113, 2).*

**முத்தளகி** *muttaḷagi*, பெ.(n.) முருங்கை பார்க்க; see *muruṅgai*.

**முத்தன்[1]** *muttaṉ*, பெ.(n.) 1. முத்தி பெற்றவன்; one who has attained salvation, Jivan-mukta. *"முத்தனாய்ப் பிரகாச னாமே" (சி.சி. 4 : 19).* 2. இயல்பாகவே தளைகளிலிருந்து (பாசங்களிலிருந்து) நீங்கிய சிவன்; Siva, as being by nature free from bonds. *"அத்தன் முத்தன்" (திருக்கோ.358).* 3. திருமால் (வின்.); *Visṇu*. 4. வைரவன் (பிங்.); Bhairava. 5. அருகன் (பிங்.); Arhat. 6. புத்தன் (பிங்.); the Buddha.

*[முத்தி →முத்தன்.]*

**முத்தன்[2]** *muttaṉ*, பெ.(n.) 1. அன்பன் (பாரத. சூது.14); one who gives pleasure, as a child. 2. மூடன் (சது.); fool.

**முத்தன் ஆசாரியார்** *muttaṉ-āšāriyār*, பெ.(n.) 20ஆம் நூற்றாண்டில் பழனிக் குறவஞ்சி என்னும் நூலை இயற்றிய தமிழ்ப் புலவர்; a Tamil poet in 20th century, author of *paḻaṉi-k-kuṟavañji*.

*[முத்தன் + ஆசாரியார்.]*

**முத்தா** *muttā*, பெ.(n.) தமையன் (மாலியம்); elder brother.

*[முத்தண்ணா →முத்தா.]*

**முத்தாகாரம்** *muttākāram,* பெ.(n.) முத்துச் சிப்பி (வின்.); pearl-oyster.

*[முத்து + காரம் – முத்துகாரம் →முத்தாகாரம். **Skt.** கார→த. காரம்.]*

**முத்தாசனம்** *muttāšaṉam,* பெ.(n.) இருக்கை (ஆசனம்) ஒன்பதனுள் இடது கணுக்காலை மலவாயின் (குதத்தின்) கீழும், வலது கணுக்காலை இடது கணுக்காலின் கீழும் வைத்துத் தலை முதலியவை நேர் நிமிர இருக்கும் ஒக (யோக) இருக்கை வகை; a yogic posture which consists in placing the left ankle beneath the region of the anus and the right ankle under the left so placed, while the head and neck are held straight with the body, one of nine *āšaṉam.*

**முத்தாடு–தல்** *muttāḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) முத்தமிடுதல்; to kiss. *"முகத்தின் முத்தாடியும்" (காஞ்சிப்பு.திருக்கண்.பு.137).*

தெ. முத்தாடு

*[முத்து + ஆடு–தல்.]*

**முத்தாத்துக்கோல்** *muttāttu-k-kōl,* பெ. (n.) தூக்குக் கோல் ((G.Sm.D.I., 284); balance.

*[முள் + தாற்றுக்கோல்.]*



**முத்தாத்துமா** *muttāttumā,* பெ.(n.) வீடு பெற்ற உயிர் (வின்.); soul which has attained salvation.

*[முத்தி + **Skt.** ஆத்துமா. ஆத்துமா →த. ஆதன்.]*

**முத்தாதனம்** *muttādaṉam,* பெ.(n.) 1. முத்தாசனம் பார்க்க (வின்.); see *muttāšaṉam.* 2. காலிரண்டும் நீட்டி யிருக்கும் ஒகவகை (தத்துவப்.107, உரை); a yogic posture which consists in sitting with both legs stretched out.

*[முத்தாசனம் → முத்தாதனம்.]*

**முத்தாதி** *muttādi,* பெ.(n.) 1. முத்தக்காசு பார்க்க; see *mutta-k-kāšu.* 2. அமுக்கிரா; Indian winter cherry.

*[முத்தம் + ஆதி.]*

**முத்தாந்தம்** *muttāndam,* பெ.(n.) முத்தி யாகிய உயர் நிலை; salvation, as the highest state. *"அவமாகாச் சித்தர் முத்தாந்தத்து வாழ்வர்" (திருமந்.497).*

*[முத்தி + **Skt.** ஆந்தம்.]*

**முத்தாபலம்** *muttābalam,* பெ.(n.) 1. முத்து (இலக்.அக.); pearl. 2. சங்கஞ்செடி (திவா.); mistle-toe berry thorn.

*[முத்து + **Skt.** ஆபலம்.]*

**முத்தாபி** *muttābi,* பெ.(n.) மாட்டுத் தரகர் பேச்சு மொழி. இது ஒரு குழூஉக்குறி. நூற்றுக்கு மேல் வரும் எழுபத்தைந்தைக் குறிக்க கறவலில் வழங்கும் சொல்; a cant used by cow brokers, to indicate seventy five rupees, that counts after hundred.

**முத்தாமணக்கு** *muttāmaṇakku*, பெ.(n.) ஆமணக்கு வகை (சங்.அக.); a kind of castor plant.

*[முத்து[2] + ஆமணக்கு.]*

**முத்தாய்ப்பு** *muttāyppu*, பெ.(n.) தொடர்ந்து நிகழ்ந்தவற்றில் சிறப்பான, கச்சிதமான முடிவு; effective or precise end. *மாநாட்டுக்கே முத்தாய்ப்பாக இருந்தது தலைவரின் முடிவுரை.*

*[முத்து + ஆய்ப்பு.]*

**முத்தாரம்** *muttāram*, பெ.(n.) முத்து மாலை; garland of pearls. *"கவரியுங் கடகமுங் கதிர்முத் தாரமும்" (பெருங்.உஞ்சைக். 32 : 74).*

*[முத்து + ஆரம். ஆரம் = மாலை.]*



**முத்தாலத்தி** *muttālatti*, பெ.(n.) ஆலத்தி வகை (அன்னாலத்தி); waving balls of boiled rice coloured with saffron, as before an idol. *"முத்தாலத்திகொண் டெண்ணாயிர மடவார்சூழ" (தமிழ்நா.240).*

*[முத்து + ஆலத்தி.]*

**முத்தாலதை** *muttāladai*, பெ.(n.) முத்தாரம் பார்க்க (யாழ்.அக.); see *muttāram.*

**முத்தாவணம்** *muttāvaṇam*, பெ.(n.) சோழர் காலத்தில் வாங்கப்பட்ட வரி வகை (M.E.R.1916, P.119); a kind of tax.

**முத்தாவலி** *muttāvali*, பெ.(n.) முத்தாவளி பார்க்க (இலக்.அக.); see *muttāvaḷi.*

**முத்தாவளி** *muttāvaḷi*, பெ.(n.) 1. முத்து மாலை; garland of pearls. 2. பண் வகை; a musical mode.

*[முத்து + ஆவளி.]*

**முத்தாளம்** *muttāḷam*, பெ.(n.) 1. காலை; morning. 2. காலை யுணவு; morning meal dist. fr. *attāḷam.* 3. காலைப் படையல்; morning offerings. *"பூசை நமக்காரம் அத்தாளம் முத்தாளம் வச்சு" (T.A.S.5: 116).*

*[முன் + தாலம் – முன்தாலம் →முத்தாளம்.]*

**முத்தான்மா** *muttāṉmā*, பெ.(n.) முத்தாத்துமா பார்க்க (வின்.); see *muttāttumā.*

**முத்தானந்தர்** *muttāṉandar*, பெ.(n.) குறவஞ்சி நூலை எழுதிய புலவர்; a poet, author of *Kuṟavañji.*

இவர் 18ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். ஆற்றூரில் வாழ்ந்தவர்.

**முத்தானம்** *muttāṉam*, பெ.(n.) அடுப்பு (நாமதீப.496); oven.

**முத்தி[1]** *mutti*, பெ.(n.) முத்தம்; kiss. *"மணிவாயில் முத்தி தரவேணும்" (திருப்பு.183). " புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்கு " (புறநா.41:14).*

*[முல்→முது→முத்து→முத்தி.]*

**முத்தி²** *mutti,* பெ.(n.) 1. விடுபடுகை; release. 2. துறக்கம் (மோட்சம்); final beatitude or emanicipation, release of the soul from metempsychosis. *"முத்திக் குழன்று" (திருவாச.11 : 12).* 3. 'பதமுத்தி பரமுத்தி யென்ற இருவகை முத்திநிலை' (வேதா.சூ.56, உரை); stage in salvation, of two kinds, viz. *padamutti, paramutti.*

பிராக். முத்தி.

*[முத்துதல் = பொருந்துதல், சேர்தல். முத்து →முத்தி. ஆதன் இறைவனை அடையும் இறுதிநிலை.]*

**முத்தி³** *mutti,* பெ.(n.) திசை (யாழ்.அக.); direction.

**முத்தி⁴** *mutti,* பெ.(n.) 1. திருமகள்; Laksmi. 2. தேமல்; yellow spreading spots on the breasts of women.

**முத்திக்கை** *muttikkai,* பெ.(n.) அரண் வளைப்பு (யாழ்.அக.); siege.

க. முத்திகெ

*[முற்றுகை → முத்திக்கை.]*

**முத்திகம்** *muttigam,* பெ.(n.) 108ல் உபநிட தங்களுள் ஒன்று; an Upanisad one of 108.

**முத்திதசை** *mutti-tašai,* பெ.(n.) உலகத் தொடர் அனைத்தினின்றும் விடுபட்ட நிலை; a stage when one is free from all worldly attachments.

*[முத்தி + தசை.]*

**முத்திதாசாரியன்** *muttitāšāriyan,* பெ. (n.) கொள்கை பின்பற்றும் மாணாக்கனுக்கு வீடளிக்கவல்ல குரு (சைவச. ஆசா.31, உரை); guru, who is able to secure final beatitude for his disciple.

*[முத்து →முத்தி + தா + ஆசாரியன்.]*

**முத்திதிசை** *mutti-tišai,* பெ.(n.) முத்திதசை (வின்.) பார்க்க; see *mutti-tašai.*

*[முத்தி + திசை.]*

**முத்திநாடு** *mutti-nāḍu,* பெ.(n.) புத்தேளிர் வாழும் துறக்க உலகு; heaven. *"முத்திநாட்டின் முகத்தினை முட்டுற" (கம்பரா. முதற்போர்.41)*

*[முத்தி + நாடு.]*

**முத்திநெறி** *mutti-neṟi,* பெ.(n.) துறக்கநெறி; way to final beatitude. *"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு" (திருவாச. 51:1)*

*[முத்தி + நெறி.]*

**முத்திப்பழுது** *mutti-p-paḻdu,* பெ.(n.) மலம் முற்றும் நீங்கிய முத்திநிலை இல்லை யென்னுங் கொள்கை (சிவப்பிர.36); doctrine which holds that there is no absolute salvation.

*[முத்தி + பழுது.]*

**முத்திப்பேறு** *mutti-p-pēṟu,* பெ.(n.) துறக்க வாழ்வு (மோட்ச வாழ்வு) (யாழ்.அக.); attainment of final beatitude.

மறுவ. வீடுபேறு.

*[முத்தி + பேறு.]*

**முத்திபஞ்சாட்சரம்** *mutti-pañjāṭcaram,* பெ. (n.) 'ஓம்' சேர்ந்த ஐந்தெழுத்து மந்திரம் (பஞ்சாக்கர. 45, உரை); a form of *pañjākaram* with *praṇava.*

*[முத்தி + Skt.பஞ்சாட்சரம்.]*

முத்திபதம் *mutti-padam*, பெ.(n.) 1. வீடுபேறு (மோட்சபதவி); the state of final beatitude. 2. அறிவுநிலை (யாழ்.அக.); the state of spiritual knowledge.

*[முத்தி + பதம்.]*

முத்திமார்க்கம் *mutti-mārkkam*, பெ.(n.) 1. முத்திநெறி பார்க்க; see *mutti-neṟi*. 2. கருமநெறிவழி; the course of karma.

*[முத்தி + **Skt.** மார்க்கம். மார்க்கம்=வழி.]*

முத்திமுத்திரை *mutti-muttirai*, பெ.(n.) தாமிரபருணியாறு (நாமதீப.525); a river *Tāmiraparuṇi*.

முத்திமுதல் *mutti-mudal*, பெ.(n.) முத்தியைப் பெறுதற்கு முதலாகிய ஆதன்; soul, as eligible for salvation. *"முத்திமுதற்கே மோகக் கொடி படர்ந்து" (திருவுந்தி.41).*

*[முத்தி + முதல்.]*

முத்தியெறி-தல் *mutti-y-eṟi-*, 2 செ. குன்றாவி. (v.t.) கழித்தல்; to remove entirely, put away. *"முத்தியெறிந்து விடற்கு" (கலித்து. 64).*

*[முத்து + எறி-தல்.]*

முத்திரமம் *muttiramam*, பெ. (n.) இலவங்கப் பட்டை (சங்.அக.); cinnamon.

முத்திரா *muttirā*, பெ.(n.) சின்ன முள்ளங்கி; a kind of small radish.

முத்திராசர் *mutti-rāšar*, பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் கைலாய மாலை என்னும் நூலை இயற்றிய தமிழ்ப் புலவர்; a Tamil poet author of *Kailāya-mālai* in 18th century.

முத்திராசாலை *muttirā-sālai*, பெ.(n.) அச்சுக்கூடம்; printing press.

*[முத்திரைசாலை→முத்திராசாலை.]*

முத்திராதாரணம் *muttirā-tāraṇam*, பெ.(n.) சங்கு சக்கர முதலிய முத்திரைகளை உடம்பில் ஒற்றிக் கொள்ளுகை; wearing the emblems of *Visṇu* impressed on one's body.

*[முத்திரை + **Skt.** தாரணம்.]*

முத்திராதானம் *muttirā-tāṉam*, பெ.(n.) நெருப்பில் சூடேற்றப்பெற்ற சங்கு சக்கர முத்திரைகளைத் தோள்களில் ஒற்றும் சடங்கு; ceremony of initiation by branding the emblems of *Šaṅgu* and *Šakkaram* on a person's shoulders. *"சாத்திமேன் முத்திராதானம்" (பிரபோத.11 : 11).*

*[முத்திரை + **Skt.** தானம்.]*

முத்திராவதாரம் *muttirāvatāram*, பெ.(n.) காதணி வகை (MER.222 of 1921); an ear - ornament.

முத்திரி[1]-த்தல் *muttiri-*, 4 செ.குன்றாவி. (v.t.) முத்திரையிடுதல்; to seal.

*[முகம் + திரம்-முகத்திரம்→முகத்திரி. முத்திரி.]*

முத்திரி[2] *muttiri*, பெ.(n.) 1. உட்டுளை யமைந்த காதணிவகை; a kind of ear ornament, in the form of a hollow cylinder. 2. அடையாளம் (யாழ்.அக.); sign, seal.

*[முகம் + திரம்-முகத்திரம்→முகத்திரி→ முத்திரி.]*

**முத்திரிகை** *muttirigai,* பெ.(n.) எழுத்து வெட்டப் பெற்ற மோதிரம் (பிங்.); engraved signet or seal.

*[முகம் + திரம் – முகத்திரம்→ முகத்திரி →முத்திரி→முத்திரிகை.]*

**முத்திரிவள்ளம்** *muttiri-vaḷḷam,* பெ.(n.) ஒருவகை முகத்தல் அளவை; a kind of measure of capacity.

*[முத்திரை→முத்திரி + வள்ளம்.]*

நில உரிமையாளர்கள் குத்தகைப்படி வாங்கப் பயன்படுத்தும் சரியான அளவுள்ள முத்திரையிட்ட பழைய முகத்தல் அளவை (கோவை).

**முத்திருக்கஞ்செடி** *muttirukkañ-jeḍi,* பெ.(n.) செந்துருக்கஞ் செடி (யாழ்.அக.); safflower -*Spiny saffron.*

**முத்திருக்கன்** *muttirukkaṉ,* பெ.(n.) 1. இலைக் கள்ளி; leaf spurge-Euphorbia nirulia. 2. நிலக் கடம்பு; justicia acaulis (சா.அக.).

**முத்திருக்கன்செவி** *muttirukkaṉ-ševi,* பெ.(n.) 1. நிலக்கடம்பு (மூ.அ.); justicia acaulis. 2. ஓர் செடி; a plant - *Asara bucca, Asarum Europacum.* 3. எழுத்தாணிப்பூடு; launea pinnati fida.

**முத்திரை** *muttirai,* பெ.(n.) 1. அரசு, அமைப்பு முதலியவற்றின் சின்னம், ஒரு அலுவலகத்தை அல்லது அதிகாரியை முதன்மைப்படுத்தும் குறியீடு; seal, emblem. *சோழர் முத்திரை பொறித்த காசுகள். உதவித் தொகைக்கான விண்ணப்பத்தில் கல்லூரி முதல்வரின் கையெழுத்துடன் முத்திரையும் இருக்க வேண்டும்.* 2. நேரி (வாக்கு)ச் சீட்டு முதலியவற்றில் குறிப்பிட்ட வடிவத்தில் பதிக்கும் குறியீடு; mark that is to be placed on a ballot paper, etc. *நாற்காலிச் சின்னத்தில் முத்திரையிடுங்கள் என்று ஒலி பரப்பிக் கொண்டு வண்டி சென்றது.* 3. அஞ்சல் தலை; postage stamp. *ஐந்து உரூபாய் முத்திரை ஒட்டியது போதவில்லை.* 4. கடிதங்களின்மேல் ஒட்டப்பட்டுள்ள அஞ்சல் தலையைச் சரிபார்த்து அதன் மீதும் கடிதங்களைப் பிரித்துக் கொடுக்கும்போது கடிதங்களின் மேலும் அஞ்சலகங்களில் இடப்படும் நாளிட்ட சிறு அச்சு; a small date seal print laid in post offices, at that time of taken to verify the postal stamp and at the time of deliveries. *அஞ்சலக முத்திரையைப் பார்த்தால் அது என்றைக்கு அஞ்சல் செய்யப்பட்டது எனப்து தெரியும்.* 5. உறை முதலியவை பிரிக்கப்படாமல் இருப்பதற்கான அரக்குப் பதிவு; wax seal. *முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப் புள்ளிகள்.* 6. ஒருவரின் நடத்தை, தனித்தன்மை முதலியவற்றைத் தெரிவிக்கக் கூடிய அடையாளம்; mark or stamp, brand. *நாமாக உதவி செய்யப் போனால் இளிச்சவாயன் என்று முத்திரை குத்திவிடுவார்கள். திரைப்படத்தின் காதல் காட்சிகளில் இயக்குநரின் முத்திரை தெரிகிறது.* 7. ஒரு கருத்தைக் குறிப்பாகத் தெரிவிக்கும் கை அசைவு; stylized sign made with hands expressive of one's thoughts, feelings, etc. 8. அடையாளம்; impress, mark. *"அசாதாரண முத்திரை யோடே வரவேணு மென்கிறார்" (திவ். பெரியாழ்.1. 8 : 9, வியா.).* 9. இலச்சினை; seal signet. *"பொறித்த முத்திரையும் வேறாய்" (திருவாலவா.24:8).* 10. போர் வீரன் அல்லது அவனது ஏவலர்க்குரிய அடையாள வில்லை; badge of a soldier or peon. 11. பதிகம் சிற்றிலக்கியம் முதலியவற்றின் இறுதியில்

வரும் ஆக்கியோன் பெயர்ப்பதிவு; composer's name introduced at the end of a song or poem, as his mark. **12.** காதிலணியும் குண்டல வகை; ear ornament. *"காதின் மேற் செய்ய முத்திரையும்" (திருவாலவா.13 : 4).* **13.** பூசை செய்யும் போது காட்டும் கையடையாளம்; hand-pose in worship. *"திருந்த முத்திரை சிறப்பொடு காட்டி" (பதினொ.நக்கீர. திருக்கண் மறம். அடி.55).* **14.** கையாற் காட்டும் நாட்டியக் குறி; hand-pose. *'இறைவன் மோன முத்திரையத்தனாய்' (திருமுரு.112, உரை).* **15.** வங்கியம், (நாதசுரம்) வாசிக்கும்போது தொழிற்படாத துளை (சிலப்.17, 3, உரை); the hole in a flute or pipe which is not fingered while playing. *"முத்திரையே முதலனைத்து முறைத்தானஞ் சோதித்து" (பெரியபு. ஆனாய.24).*

*[முகம் + திரம். முகத்திரம் (முத்திரம்) →முத்திரை. ஒ.நோ.மாத்திரம்→மாத்திரை. வடவர் முத்ர (மகிழ்ச்சியான) என்னுஞ்சொல்லை மூலமாகக் காட்டுவர் (வ.மொ.வ.72).]*

முத்திரை யென்பது அரசனுடைய திருமுகத்தில் மையாலும் அரக்காலும் மண் என்னும் சாந்தாலும் பொறிக்கப்படும் அடையாள வடிவம். மூவேந்தர்க்கும் அவரவர் கொடியிலெழுதப்பட்ட வடிவமே முத்திரையாகவுமிருந்தது.

ஓர் அரசன் தன்னால் வெல்லப்பட்ட அரசரின் முத்திரைகளையும் தன் முத்திரையுடன் சேர்த்துப் பொறிப்பது வழக்கம். செங்குட்டுவன் மும்முத்திரைகளையும் அதிகமான் ஏழு முத்திரை களையும் உடையராயிருந்தனர் (பழ.த.ஆ. பக்.22).

**முத்திரைக்கடுதாசி** *muttirai-k-kaḍudāśi,* பெ.(n.) முத்திரையிட்ட ஆவணம் (C.G.); stamped paper.

*[முத்திரை + கடுதாசி.]*

**முத்திரைக்கணக்கர்** *muttira-k-kaṇakkar,* பெ.(n.) கோயிற்பணியாளருள் ஒரு வகையினர் (மீனாட்.சரித்.1 : 2); a class of temple servant.

*[முத்திரை + கணக்கர்.]*

**முத்திரைக்கம்பு** *muttirai-k-kambu,* பெ.(n.) முத்திரையச்சு (வின்.); seal.

*[முத்திரை + கம்பு.]*

**முத்திரைக்குத்திப்பார்ப்பார்** *muttirai-k-kutti-p-pārppār,* பெ.(n.) சங்கு சக்கர முதலிய அடையாளங்களை உடலில் சந்தனத்தாற் பதித்துக் கொள்வோரான மாத்துவப் பார்ப்பனர் (இ.வ.); *Mādhava* Brahmins who impress, with sandal paste, the marks of *pañjāyudam* of *Visṇu*on different parts of their persons.

*[முத்திரை + குத்து + பார்ப்பார்.]*

**முத்திரைக்கூடம்** *muttirai-k-kūḍam,* பெ.(n.) **1.** காவலறை (யாழ்.அக.); prison. **2.** பண்டங்களின் மேல் முத்திரையிடும் இடம் (வின்.); place where goods are stamped.

*[முத்திரை + கூடம்.]*

**முத்திரைக்கோல்** *muttirai-k-kōl,* பெ.(n.) **1.** முத்திரையச்சு (வின்.); seal. **2.** கூலக் குவியலிற் குறியிடுவதற்குதவும் மரத்தினா லியன்ற அடையாளக் கோல்; wooden seal for marking a heap of grain.

*[முத்திரை + கோல்.]*

**முத்திரைச்சங்கு** *muttirai-c-caṅgu,* பெ.(n.) சங்கு வகை; a kind of conch. *"முத்திரைச் சங்கொன் றூத" (தெ.இ.கல். தொ.ii, 275 : 11).*

*[முத்திரை + சங்கு.]*

**முத்திரைச்சூடு** *muttirai-c-cūḍu,* பெ. (n.) கால்நடைகளுக்கு இடும் குறியீடு (வின்.); branding of animals.

*[முத்திரை + சூடு.]*



**முத்திரைச்சேவகன்** *muttirai-c-cēvagaṉ,* பெ.(n.) முத்திரை வில்லையை அணியும் பணியாள்; peon wearing a badge.

*[முத்திரை + சேவகன்.]*

**முத்திரைத்தலை** *muttirai-t-talai,* பெ.(n.) அஞ்சற்கட்டணம் முதலிய கட்டணத் திற்காக ஏற்பட்ட தலை பதிக்கப்பட்ட முத்திரை; postage stamp; court fee stamp.

*[முத்திரை + தலை.]*

**முத்திரைத்தாள்** *muttirai-t-tāḷ,* பெ.(n.) விருப்பாவணம், ஒப்பந்தம், உடன்பாடுகள் முதலியவற்றை அதிகார முறையாக எழுதப் பயன்படுத்தும் குறிப்பிட்ட விலைமதிப்புடைய, அரசினுடைய முத்திரை அச்சிடப்பட்டத் தாள்; stamp-paper for writing deeds. *முத்திரைத்தாள் விற்பனையில் தவறான வழியில் பணம் சேர்த்தவர்கள் சிறைப்படுத்தப்பட்டனர்.*

*[முத்திரை + தாள்.]*

**முத்திரைப்படி** *muttirai-p-paḍi,* பெ.(n.) அரசு அடையாளமிடப்பட்ட படி; Madras measure, as stamped as the standard measure.

*[முத்திரை + படி.]*

**முத்திரைப்பல்லவம்** *muttirai-p-pallavam,* பெ.(n.) இசைப்பதத்தினடி தோறும் ஒட்டப் படிக்கும் பல்லவி (யாழ்.அக.); a Pallavi repeated at the end of each *paḍam.*

*[முத்திரை + பல்லவம். பல்லவம் = பல்லவியில் திரும்பத் திரும்ப பாடப்படும் முதலுறுப்பு.]*

**முத்திரைப்பல்லவி** *muttirai-p-pallavi,* பெ. (n.) முத்திரைப்பல்லவம் பார்க்க (வின்.); see *muttirai-p-pallavam.*

*[முத்திரை + பல்லவி.]*

**முத்திரைப்பலகை** *muttirai-p-palagai,* பெ.(n.) கூலக் குவியலில் முத்திரையிடுதற்கு உரிய எழுத்து அல்லது அடையாளமமைந்த பலகை (C.G.); plank with some writing or mark thereon, used as a seal on the heap of grain.

*[முத்திரை + பலகை.]*

**முத்திரைமண்** *muttirai-maṇ,* பெ.(n.) 1. கூலக் குவியலிலிடும் மண்குறி; seal of earth affixed to a grain heap. 2. முத்திரை யிடுவதற்குரிய மண் முதலிய பொருள்; any soft substance that will hold an impression, in sealing.

*[முத்திரை + மண்.]*

**முத்திரைமனிதன்** *muttirai-manidan,* பெ. (n.) அரசின் தூதுவர் (R.); King's ambassador.

*[முத்திரை + மனிதன்.]*

**முத்திரைமெழுகு** *muttirai-meḻugu,* பெ.(n.) முத்திரை வைக்கப் பயன்படும் அரக்கு (பாண்டி.); sealing wax.

*[முத்திரை + மெழுகு.]*

**முத்திரைமோதிரம்** *muttirai-mōdiram,* பெ.(n.) முத்திரை பதிக்கப்பட்ட கணையாழி (மோதிரம்); seal - ring.

*[முத்திரை + மோதிரம்.]*

**முத்திரையரக்கு** *muttirai-y-arakku,* பெ. (n.) முத்திரை பதித்தற்குரிய அரக்கு வகை (வின்.); sealing wax.

*[முத்திரை + அரக்கு.]*

**முத்திரையிலாஞ்சனை** *muttirai-y-ilāñjanai,* பெ.(n.) முத்திரைக்குறி (வின்.); impress of seal.

*[முத்திரை + இலாஞ்சனை. இலாஞ்சனை = குறி, முத்திரை, அடையாளம்.]*

**முத்திரையுட்சிக்கு** *muttiraiyuṭ-šikku,* பெ. (n.) காசு (நாணய) முத்திரையில் உள்ள கேடு வகை (பணவிடு.179); defect in the impress of a coin.

*[முத்திரை + உள் + சிக்கு.]*

**முத்திரைவித்து** *muttirai-vittu,* பெ.(n.) **1.** அக்கமணி (உருத்திராட்சம்); a sacred bead of a tree - *Elaeocarpus lanciolatus.* **2.** அறிவு (ஞானம்); wisdom.

*[முத்திரை + வித்து.]*

**முத்திரைவை-த்தல்** *muttirai-vai-,* 4 செ. குன்றாவி. (v.t.) அரிபின்னலில் ஈரமண் வைத்து அதன் மேல் முத்திரைப் பலகையை ஊன்றி எடுத்தல்; keep the wet sand in the heap and press the mark on it by a block of wood.

*[முத்திரை + வை-த்தல்.]*

**முத்திவிக்கினம்** *mutti-vikkinam,* பெ.(n.) முத்திக்கு இடையூறுகளான ஐயம், திரிபு, அறியாமைகள் (வின்.); obstacles to salvation, three in number, viz. *aiyam, tiribu, aṟiyāmai.*

*[முத்தி + Skt. விக்கினம்.]*

**முத்திவிலக்கு** *mutti-vilakku,* பெ.(n.) முத்திவிக்கினம் பார்க்க (வின்.); see *mutti-vikkinam.*

*[முத்தி + விலக்கு.]*

**முத்திளம்** *muttiḷam,* பெ.(n.) கக்கரிகாய் (சங்.அக.); kakkari-melon.

**முத்திற்கோத்தமுத்து** *muttiṟ-kōtta-muttu.* பெ.(n.) வட்டமான பருமுத்து ஒவ்வொன்றின் அடியிலும் குறுமுத்து ஒவ்வொன்றினைக் கோத்த அமைப்பில் உருவாக்கப்பட்ட முத்து மாலை; string of pearls which is threaded each connected in between a small pearl in coherent. *"முத்திற்கோத்த முத்து– தொளாயிரத் தெண்பத் தொன்றினால்" (தெ.கல்.தொ.2, கல்.1).*

*[முத்தில் + கோத்த + முத்து.]*

**முத்திறங்குதல்** *muttiṟaṅgudal,* பெ.(n.) அம்மை முத்துக்கள் பால் வடிந்து மறைகை (வின்.); waning of pustules, in small pox.

*[முத்து[2] + இறங்கு-தல்.]*

முத்திரமணி *muttira-maṇi,* பெ.(n.) பௌத்தர் வணங்கற்குரிய முத்திறப் பொருள்கள் (திரிமணி) (புத்தம்); the three objects of veneration. *"முத்திறமணியை..... வணங்கி" (மணிமே.30 : 4).*

*[மூன்று + திறமணி.]*

முத்தின்குற்றவகை *muttiṉ-kuṟṟa-vagai,* பெ.(n.) குறைபாடுகளுடன் உள்ள வகையில் ஒன்றான முத்து; blemish in a pearl.

*[முத்தி + இன் + குற்றவகை.]*

அக்குற்றங்கள் முறையே வரை, கறை, குரு, கறடு, அப்பிரம், திரங்கல், தோல் முதலியன (தெ.இ.கல்.தொ.2, கல்.3, 86, 93).

முத்தின்சலாபம் *muttiṉ-šalābam,* பெ.(n.) முத்துக் குளிக்கும் இடம்; place of pearl fishery. *"முத்தின் சலாபமு முத்தமிழ்ப் பொதியிலும்" (முதற்குலோத்துங்கன் – மெய்க்கீர்த்தி).*

*[முத்து + இன் + **Skt.** சலாபம்.]*

முத்தின்சிடுக்கு *muttiṉ-šiḍukku,* பெ.(n.) முத்தாலான காதணி; pearl ear-ring. *"முத்தின் சிடுக்கு, ஓரணையிற் கோத்த முத்து பதினெட்டும் பொன்னும் உட்பட" (தெ.கல். தொ.2 : 2, கல்.51).*

*[முத்து + இன் + சிடுக்கு. சிடுக்கு = காதணி வகை.]*

முத்தின்சூடகம் *muttiṉ-šuḍagam,* பெ.(n.) சிவப்புக்கல் மணி வைத்திழைக்கப்பட்ட பொன் வளையல்; golden bangles decorated and set up with gem. *"முத்தின் சூடகம் ஒன்றில் துண்டம் இரண்டிற் கறடிகை ஆறும் கேவணம் வைத்து விளக்கிக் கட்டின பளிங்கு எழுபத்தொன்பதும்" (தெ.இ.கல். தொ.2 : 2 கல்.51).*

*[முத்து + இன் + சூடகம். சூடகம் = கைவளை.]*

முத்தின்வளையல் *muttiṉ-vaḷaiyal,* பெ.(n.) முத்துக்கள் பதித்தும் கட்டியும் செய்யப்பெறும் பொன் வளையல்; golden bangles decorated and set up with pearls. *"பொன்கொடு செய்த முத்தின்வளையல் ஒன்று–கோத்த முத்து முன்னூறு ஐம்பத்து மூன்றினால்" (தெ.இ.கல். தொ.2, கல்.3).*

*[முத்து + இன் + வளையல்.]*

முத்தீ *muttī,* பெ.(n.) **1.** இல்லறத் தீ, தெய்வத்தீ, தென்புலத்தீ, (காருகபத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினி) என்ற மூவகைத் தீ; the three sacrificial fires, viz., *karugapattiyam, akavaṉīyam, daṭciṉākkiṉi. "இருபிறப்பாளர் முத்தீப் புரைய" (புறநா.367).* **2.** வயிற்றுத் தீ, காமத்தீ, சினத் தீயென்னும் மூவகைத் தீ (சூடா.); the three-fold fires of the body, viz. *vayiṟṟu-t-tī, kāma-t-tī, šiṉa-t-tī.* **3.** ஆயுர்வேதத் தீ; fire used in preparing medicines, of three kinds of degrees.

*[மூன்று + தீ.]*

முத்தீமரபினர் *muttī-marabiṉar,* பெ.(n.) வேள்வித்தீ (வேதாக்கினி) மூன்றையும் பேணும் குலத்தவரான பிராமணர் (பிங்.); Brahmins, as guardians of the sacrificial fires.

*[முத்தீ + மரபினர்.]*

**முத்தீரமம்** *muttīramam,* பெ.(n.) முத்திரமம் பார்க்க; see *muttiramam.*

**முத்து[1]-தல்** *muttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. சேர்தல்; to unite, join. *"திருமுத்தாரம்" (சீவக.504).* 2. முத்தமிடுதல்; to kiss. *"புதல்வர் பூங்கண் முத்தி" (புறநா.41).*

*[முல் (பொருந்துதல்) → முது → முத்து → முத்து-தல்.]*

**முத்து[2]** *muttu,* பெ.(n.) 1. சிப்பியில் இருந்து எடுக்கப்படும் விலை மதிப்பு உடைய உருண்டை வடிவ வெந்நிறப் பொருள்; pearl. *முத்துமாலை, முத்துப் பற்கள். முத்துமுத்தாக எழுதியிருக்கிறான். "முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்றுறை" (நற்.23). "பனைமருப் டடக்கையொடு முத்துப்பட முற்றிய" (புறநா.161). "முல்லை முகை முறுவல் முத்தென்று" (நாலடி, 45).* 2. சில வகை மரங்களின் செடிகளின் மேல்தோல் நீக்கப்பட்ட கொட்டை; seeds of certain trees without outer skin. *முத்துக்கொட்டை.* 3. வெண்மணி போன்ற கண்ணீர்த்துளி; pearl like tears. *"பருமுத் துறையும்" (சீவக. 1518).* 4. ஆமணக்கு வித்து; castor bean. *"முத்திருக்குங் கொம்பசைக்கும்" (தனிப்பா.1, 3:2).* 5. வெண்முத்துப் போன்ற அம்மை நோய்க் கொப்புளம் (உ.வ.); pock of small pox, pustule. *பிள்ளைக்கு உடம்பு முழுதும் முத்துப் போட்டிருக்கிறது.* 6. ஆமணக்கு விதை போன்ற நெய்யுள்ள விதை (நாமதீப. 373); oil seed, as rape, castor, etc. 7. கிளிஞ்சில் முத்துப் போன்ற மாதுளையின் விதை; succulent seed of pomegranate. 8. வெண்முத்துப் போன்ற வெள்ளரிசி; rice. 9. 7/8 பணவெடை கொண்டதோர் பொன்னிறை; a gold smith's weight= 7/8 *paṇa-v-eḍai.* 10. ஆட்டக் காய்கள் (இ.வ.); seeds, shells, etc. used in games. 11. சங்கு முதலியவற்றின் முட்டை; the egg of a conch. 12. பருப்பு; dhal, pulp. 13. சிப்பிமுத்து; oyster pearl. 14. பெண் காமக்களை; the semen of a female. 15. 120 வகையான இயற்கைப் பொருட்களில் இதுவும் ஒன்று; one of the 120 kinds of natural substances. 16. மேலானது (யாழ்.அக.); that which is excellent or praise worthy. *முத்தான பேச்சு.*

ம., தெ., க. முத்து; து. முத்த; பிரா. முத்தா.

*[முள்→முட்டு→முத்து (வ.மொ.வ.)]*

முத்துப் பற்றிய பழமொழிகள் : "முத்தளந்த கையால் முசப்பயறு அளக்க வந்தது", "முத்தளந்த கையாலே மோர் விற்கிறதா?", "முத்தால் நத்தை பெருமைப்படும் மூடர் எத்தாலும் பெருமைப்படார்", "முத்து அளக்கிறவளும் பெண்பிள்ளைதான், மூசப் பயறு அளக்கிறவளும் பெண்பிள்ளைதான்", "முகத்துக்கு முத்தா யிருக்கிறது", "முத்தும் பவளமும் முறை முறையாய்க் கோத்தது போல", "முத்தைத் தெளித்தாலும் கலியாணந்தான், மோரைத் தெளித்தாலும் கலியாணந்தான்". "முத்திலும் சொத்தை உண்டு; பவழத்திலும் பழுதுண்டு" (பழ.).

முத்துப் பிறக்கும் இடங்கள்: சிப்பி, மீன், முதலை, உடும்பு, தாமரை, வாழை, கமுகு, கரும்பு, பன்றிக்கொம்பு, ஆவின் பல், பாம்பு, கொக்கு, மங்கையர் கழுத்து.

ஆமணக்கு முத்து (கொட்டைமுத்து), குருக்குமுத்து, புளியமுத்து, வேப்பமுத்து என்பன ஓரளவு உருண்டை வடிவான விதைகள்.

முத்துச்சம்பா, முத்துச்சோளம், முத்து மாதுளை என்பனவும் அத்தகையனவே.

முத்துக்குளிப்பு மன்னார்குடாக் கடலில் தொன்றுதொட்டு நிகழ்ந்து வருகின்றது.

முத்தூர்க்கூற்றம் என்பது பாண்டி நாட்டின் கீழ்கரைப் பகுதி. உரோம நாட்டிற்கு ஏற்றுமதியான பாண்டிநாட்டு முத்து வரலாற்றுப் புகழ் பெற்றது.

*"வேழ முடைத்து மலைநாடு மேதக்க*
*சோழ வளநாடு சோறுடைத்து – பூழியர்கோன்*
*தென்னாடு முத்துடைத்து தெண்ணீர்*
*வயற்றொண்டை*
*நன்னாடு சான்றோ ருடைத்து"* என்பது பிற்காலத்து ஔவையா ரொருவரின் பாட்டு.

வடவர், முக்தா என்னும் சொல்லை ((முச்(C)) என்னும் வினை முதனிலையொடு தொடர்புபடுத்தி, சிப்பியினின்று விடுதலை பெற்றது என்று பொருட் காரணம் கூறுவது பொருந்தாது (வ.மொ.வ.2:72).

முத்து³ *muttu,*பெ. (n.) 1. அழகு; beauty. *"அடியாற் படியளந்த முத்தோ" (திவ்.இயற். பெரியதிருவந்.27).* 2. மகிழ்ச்சி (திவ்.இயற். பெரியதிருவந்.27, வியா.); joy, happiness. 3. அன்பு; love, endearment. *வேலை முத்தோ, பிள்ளை முத்தோ?*

முத்து⁴ *muttu,*பெ.(n.) முத்தம் (உ.வ.); kiss.

முத்து⁵ *muttu,*பெ.(n.) வெண்குருகு (அரு.நி.); a water - bird.

முத்து⁶ *muttu,*பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் 'ஞானக் கப்பல்' என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet, author of *'ñāṉa-k-kappal'.*

முத்துக்கடுக்கன் *muttu-k-kaḍukkaṉ,* பெ.(n.) முத்துக் கட்டிய கடுக்கனென்னுங் காதணி (வின்.); pearl ear-ring.

*[முத்து + கடுக்கன்.]*

முத்துக்கண்டி *muttu-k-kaṇḍi,*பெ.(n.) முத்தாலாகிய கழுத்தணி வகை; pearl necklace.

*[முத்து + கண்டி.]*

முத்துக்கணேசன் *muttu-k-kaṇēšaṉ,* பெ.(n.) 20ஆம் நூற்றாண்டில் 'நல்லுரை வெண்பா' என்னும் நூலினை இயற்றிய புலவர்; a poet, author of *'Nalluraivenbā'.*

முத்துக்கம்பயறு *muttu-k-kam-payaṟu,* பெ.(n.) கடலை; Bengal gram.

முத்துக்கம்பி *muttu-k-kambi,* பெ.(n.) முன்தானையில் செய்யப்படும் நெசவு முறை; a method of weaving in the outer and of a saree or cloth.

*[முத்து + கம்பி.]*

முத்துக்கற்கம் *muttu-k-kaṟkkam,* பெ.(n.) 1. முத்துக் கொட்டைப் பிண்ணாக்கு; oil cake of castor beans. 2 முத்தைப் புடமிட்டுச் செய்யும் மருந்து வகை; medicine prepared by calcining pearls.

*[முத்து + கற்கம்.]*

முத்துக்கறுப்பன் *muttu-k-kaṟuppaṉ,*பெ. (n.) ஊர்த் தெய்வம்; a village deity.

முத்துக்கறுப்பன்செட்டியார் *muttiu-k-kaṟuppaṉ-šeṭṭiyār,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்; a Tamil poet in 19th century.

இவர் உலகநாத சுவாமி பேரில் விருத்தம், குன்றக்குடி சுப்பிரமணியர் விருத்தம், தணிகை மலை வடிவேலர் விருத்தம், நெல்லையம்பதி உலகநாயகியம்மன் விருத்தம், பினாங்கு தண்ணிமலை வடிவேலர் விருத்தம், வங்காளம் தண்டாயுதபாணி விருத்தம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

முத்துக்குட்டிப்புலவர் *muttu-k-kuṭṭi-p-pulavar,* பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் கண்ணுடையம்மன் பள்ளு என்னும் நூலை

இயற்றிய புலவர்; a poet in 18th century, author of *kannudai-y-amman-pallu.*

முத்துக்குடை *muttu-k-kudai,* பெ.(n.) அருகனது மூன்று குடையுளொன்று (வின்.); one of the three umbrellas of Arhat.

*[முத்து + குடை.]*

முத்துக்குத்து–தல் *muttu-k-kuttu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. தாழ்ந்த முத்தை நீக்குதல்; to reject inferior pearls which may readily break. 2. கடவுட் பலிக்காக மந்திரஞ் சொல்லி அரிசி குத்துதல்; to pound rice, for using it for sacred purposes, chanting mantras.

*[முத்து + குத்து–தல்.]*

முத்துக்குமரக்கவிராயர் *muttu-k-kumara-k-kavirāyar,* பெ.(n.) 18–19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர் 'ஞானக்கும்மி' என்னும் நூலின் ஆசிரியர்; a poet, author of *ñāna-k-kummi* lived 18-19 century.

இவர் ஐயனாருஞ்சல், நடராசர் பதிகம், ஞானக்கும்மி போன்ற நூல்களை இயற்றியுள்ளார்.

முத்துக்குமரன் *muttu-k-kumaran,* பெ.(n.) முத்துக்குமாரன் பார்க்க; see *muttu-k-kumāran.*

முத்துக்குமாரசாமிபுலவர் *muttu-k-kumāra-šāmi-pulavar,* பெ.(n.) தமிழ்ப் புலவர்; a Tamil poet. *இவர் இயற்றிய நூல் திரிபுரசுந்தரி பிள்ளைத் தமிழ்.*

முத்துக்குமாரசுவாமிகள் *muttu-k-kumāra-šuvāmigal,* பெ.(n.) 19–20ஆம் நூற்றாண்டில் கதிர்காமத்தந்தாதி, கதிர்காம மாலை ஆகிய நூல்களை இயற்றிய புலவர்; a poet in 19-20th century, author of *kadir-kāmattandādi, kadir-kāmamālai.*

முத்துக்குமாரத்தம்பிரான் *muttu-k-kumāra-t-tambirān,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் போரூர் என்னும் ஊரில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்; a Tamil poet who lived *Pōrūr* in 19th century.

இவர் பூசாவிதி அகவல், திருப்போரூர்க் கலித்துறை அந்தாதி, சமரபுரி மாலை, பிரணவசைல மாலை ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

முத்துக்குமாரதாசர் *muttu-k-kumāra-dāšar,* பெ.(n.) 20ஆம் நூற்றாண்டில் வேளூர் முத்துக்குமாரசாமி அந்தாதி, கந்த புராண சதகம் ஆகிய நூல்களை இயற்றிய புலவர்; a poet author of *'muthu-k-kumārašamyAndādi'* and *Kandapurāna Šadakam.*

முத்துக்குமாரதேசிகர் *muttu-k-kumāra-dēšigar,* பெ.(n.) 20ஆம் நூற்றாண்டில் சூரியனார்க் கோயில் குரு தோத்திரப் பதிகம் என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet in 20th century, author of *Šuriyanār-k-kōyil-kuru-tōttira-p-padigam.*

முத்துக்குமாரர் *muttu-k-kumārar,* பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் வலைவீசு புராணம் என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet in 18th century, author of *Valai-višu-purānam.*

முத்துக்குமாரன் *muttu-k-kumāran,* பெ.(n.) முருகக் கடவுள்; God Murugan. *"முத்துக் குமாரனைத் தனிப்புரக்க" (குமர. பிர. முத்துக்குமார. பிள்.2).*

முத்துக்குளி[1]–த்தல் *muttu-k-kuli-,* 4 செ.கு.வி. (v.i.) முத்துச்சிப்பி எடுப்பதற்காகக் கடலுள் மூழ்குதல்; to dive for pearl-oysters.

*முத்துக் குளிப்பவர்களுக்கு நீண்ட நேரம் மூச்சடக்கத் தெரிந்திருக்க வேண்டும்.*

*[முத்து + குளி–த்தல்.]*

**முத்துக்குளி**[2] *muttu-k-kuḷi,* பெ.(n.) நீரில் மூழ்கி முத்தெடுக்கை (வின்.); pearl-fishery.

*[முத்து + குளி.]*

**முத்துக்குறி** *muttu-k-kuṟi,* பெ.(n.) கையிலுள்ள முத்துக்களைக் கணக்கிட்டுப் பலன் சொல்லுங் குறி; divination by means of a handful of pearls.

*[முத்து + குறி.]*

**முத்துக்கொட்டை** *muttu-k-koṭṭai,* பெ.(n.) ஆமணக்கு விதை; castor seed.

*[முத்து + கொட்டை.]*

**முத்துக்கொட்டைச்செடி** *muttu-k-koṭṭai-c-ceḍi,* பெ.(n.) ஆமணக்குச் செடி; castor plant.

*[முத்துகொட்டை + செடி.]*

**முத்துக்கொண்டை** *muttu-k-koṇḍai,* பெ.(n.) கடவுள் திருமேனியின் தலையில் அணியும் முத்தாலான தலையணி வகை; head-dress of pearls, as for idols.

*[முத்து[2] + கொண்டை.]*



**முத்துக்கொதி** *muttu-k-kodi,* பெ.(n.) முதற் கொப்புளங் கிளம்பும் அரிசிக் கொதி; stage in the boiling of rice, when bubbles begin to appear.

*[முத்து + கொதி. முத்துப்போல் கொப்புளம் கிளப்பும் கொதி.]*

**முத்துக்கொம்பன்** *muttu-k-kombaṉ,* பெ.(n.) 1. முத்துநிறக் கொம்புள்ள யானை; elephant with pearly white tusks. 2. கடல் மீன் வகை (யாழ்ப்.); a sea-fish.

*[முத்து + கொம்பன்.]*

**முத்துக்கொறித்தல்** *muttu-k-koṟittal,* பெ.(n.) பல்லி சத்தமிடுகை (நாஞ்.); chirp of a lizard.

*[முத்து + கொறித்தல்.]*

**முத்துக்கோவை** *muttu-k-kōvai,* பெ.(n.) முத்துமாலை (வின்.) பார்க்க; see *muttu-mālai.*

*[முத்து + கோவை.]*

**முத்துகம்** *muttugam,* பெ.(n.) கடலை; gram - Bengal - gram.

**முத்துச்சம்பா** *muttu-c-cambā,* பெ.(n.) ஐந்து மாதங்களில் விளையும் ஒருவகை நெல் (A.); a kind of paddy that matures in five months.

*[முத்து + சம்பா.]*

**முத்துச்சல்லி** *muttu-c-calli,* பெ.(n.) முத்துக் கோத்த தொங்கல் (சங்.அக.); ornamental hangings of strung pearls.

*[முத்து + சல்லி.]*

**முத்துச்சலாபம்** *muttu-c-calābam,* பெ.(n.) 1. முத்துக்குளிக்கை; pearl-fishery.

2. முத்துக் குளிப்பில் அடையும் பேறு (யாழ்.அக.); the out-turn in pearl - fishery.

*[முத்து + Skt.சலாபம்.]*

**முத்துச்சனிப்பு** *muttu-c-caṉippu,* பெ.(n.) முத்து உண்டாகும் இடம் (யாழ்.அக.); place where pearls are formed.

*[முத்து + Skt. சனிப்பு.]*

**முத்துச்சாமி** *muttu-c-cāmi,* பெ.(n.) சிற்றூர் தெய்வம் (கோவை.); village deity.

**முத்துச்சாமிஐயங்கார்** *muttu-c-cāmi-aiyaṅgār,* பெ.(n.) 19–20ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a Tamil poet lived in 19-20th century.

இவர் மணவாள மாமுனிகள் நூற்றந்தாதி குருகைக் கலம்பகம், நூற்றெட்டுத் திருப்பதித் திருப்பதிகங்கள் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

**முத்துச்சாமிஐயர்** *muttu-c-cāmi-aiyar,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a poet lived in 19th century.

இவர் மயூரநாதர் அந்தாதி, ஆசிரியர் துதிப்பாக் கோவை, முருகன் துதிப்பாக் கோவை, அன்புவிடு தூது, அலங்கார நாயகி பதிகம், கசாரணியேசுரர் பதிகம், காமாட்சியம்மைப் பதிகம், வரகூர் வேங்கடேசர் பதிகம், சிதம்பர விநாயகர் மாலை ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

**முத்துச்சாமிக்கவிராயர்[1]** *muttu-c-cāmi-k-kavirāyar,* பெ.(n.) 20ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a Tamil poet, who lived in 20th century.

இவர் காரணக்கும்மி, ஞானக்கும்மி முருகன் ஏயிற் கும்மிப்பாட்டு, சிங்காரவேலர் சதகம், வடிவேலர் சதகம் ஆகிய நூற்களை இயற்றியுள்ளார்.

**முத்துச்சாமிக்கவிராயர்[2]** *muttu-c-cāmi-k-kavirāyar,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a Tamil poet, lived in 19th century.

இவர் கருங்காலக்குடிக் காதல், புரவி பாளையத்தார் கும்பி, அன்னம்விடு தூது, சங்கிலி வீரப்பப் பாண்டியன் பள்ளு ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

**முத்துச்சாமிக்கோனார்(1858–1944)** *muttu-c-cāmi-k-kōṉār,* பெ.(n.) தமிழ்ப் புலவர்; a Tamil poet.

சேலம் மாவட்டம் திருச்செங்கோட்டைச் சார்ந்தவர். தெலுங்கு, சமற்கிருதம் பயின்றவர். திருச்செங்கோடு மான்மியம், திருப்பணிமாலை, கொங்கு மண்டல சதக உரை ஆகிய நூல்களை இயற்றியவர்.

**முத்துச்சாமிப்பிள்ளை[1]** *muttu-c-cāmi-p-piḷḷai,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a Tamil poet, who lived in 19th century.

தருமை சொக்கநாத மாலை, திருப்பனந்தாள் சிலேடை வெண்பா ஆகிய நூல்களை இயற்றிய புலவர்.

**முத்துச்சாமிப்பிள்ளை[2]** *muttu-c-cāmi-p-piḷḷai,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a Tamil poet, lived in 19th century.

சிவபெருமான் இரட்டை மணிமாலை, திருக்கழுகு மாமலை, சிவக்கொழுந்து மாலை ஆகிய நூல்களை இயற்றியவர்.

**முத்துச்சாமிமுதலியார்** *muttu-c-cāmi-mudaliyār,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a Tamil poet, belong to 19th century.

19ஆம் நூற்றாண்டில் திருவொற்றியூர் வடிவுடையம்மன் கலித்துறை அந்தாதி, இடும்பன் கவசம் ஆகிய நூல்களை இயற்றிய புலவர்.

**முத்துச்சிப்பி** *muttu-c-cippi,* பெ.(n.) 1. முத்துள்ள ஓட்டினையுடைய நீர்வாழ் உயிரி; pearl-oyster. 2. முத்துத் தங்கிய சிப்பியோடு; mother of pearl.

*[முத்து + சிப்பி.]*



**முத்துச்சிலாகம்** *muttu-c-cilāgam,* பெ.(n.) முத்துச்சலாபம் பார்க்க; see *muttu-c-calābam.*

*[முத்து + சிலாகம்.]*

**முத்துச்சிவிகை** *muttu-c-civigai,* பெ.(n.) முத்துக்களால் அழகூட்டப்பட்ட பல்லக்கு (வின்.); planquin adorned with pearls.

*[முத்து + சிவிகை.]*

**முத்துச்சுண்ணம்** *muttu-c-cuṇṇam,* பெ. (n.) முத்தை நீற்றிய சுண்ணம் (பதார்த்த. 135); lime obtained by calcining pearls.

*[முத்து + சுண்ணம்.]*

**முத்துச்சுண்ணாம்பு** *muttu-c-cuṇṇāmbu,* பெ.(n.) முத்துச்சுண்ணம் பார்க்க; see *muttu-c-cuṇṇam.*

**முத்துச்சொரிதல்**[1] *muttu-c-coridal,* பெ.(n.) சோற்றுப் படையல்; offering of boiled rice to a deity.

*[முத்து + சொரிதல்.]*

**முத்துச்சொரிதல்**[2] *muttu-c-coridal,* பெ.(n.) அழகொழுகப் பேசுகை (இ.வ.); talking in an excellent manner, rhetorical talk. *அவன் வாயிலிருந்து முத்துச் சொரிகிறது.*

*[முத்து + சொரிதல்.]*

**முத்துச்சோளம்** *muttu-c-cōḷam,* பெ.(n.) முத்தைப் போன்ற வெள்ளைச் சோளம் (யாழ்.அக.); Indian corn, maize - *Zca mays.*

மறுவ. கோடைச்சோளம்.

*[முத்து + சோளம்.]*

**முத்துடக்கன்** *muttuḍakkaṉ,* பெ.(n.) நிலக்கடம்புச் செடி (A.) ; a plant - *Justicia accaulis.*

**முத்துத்தம்பி** *muttu-t-tambi,* பெ.(n.) தமிழ்ப் பெரும்புலவர்; a great Tamil poet.

இலங்கையில் உள்ள யாழ்ப்பாணத்தைச் சார்ந்தவர். தந்தையார் ஆறுமுகம். 1880இல் இந்தியாவுக்கு வந்தார். பாரத சுருக்கம், அபிதான கோசம், நன்னூல் இலகுபோதம், தென்மொழி வரலாறு ஆகிய நூல்களை எழுதியவர்.

**முத்துத்தரியம்** *muttu-t-tariyam,* பெ.(n.) முத்தினால் ஒப்பனை செய்த மேலாடை; upper garment decorated with pearls. *"முத்துத் தரியமும் பவழப் பிணையலும்" (பெருங். இலாவண. 1: 5).*

*[முத்து + **Skt.** தரியம்.]*

**முத்துத்தாண்டவர்** *muttu-t-tāṇḍavar,* பெ. (n.) இசைத்தமிழ் வளர்த்தவர்களுள் ஒருவர்; a poet who foster Tamil verse set to music.

**முத்துத்தாமம்** *muttu-t-tāmam,* பெ.(n.) 1. முத்துமாலை பார்க்க; see *muttu-mālai.* *"கோலமாமணி யாரமு முத்துத்தாமமும்" (திவ்.அமலனாதி.9).* 2. முத்துச்சல்லி பார்க்க; see *muttu-c-calli.* *"முத்துத்தாம முறையொடு நாற்றுமின்" (மணிமே.1 : 49).*

*[முத்து + தாமம்.]*

**முத்துத்தாழ்வடம்** *muttu-t-tāḻvaḍam,* பெ. (n.) முத்துமாலை (வின்.)பார்க்க; see *muttu-mālai.*

*[முத்து + தாழ்வடம். தாழ்வடம் = நீண்டு தாழ்ந்த மாலை.]*

**முத்துநாயக்கன்பட்டி** *muttu-nāyakkaṉ-paṭṭi,* பெ.(n.) சேலம் மாவட்டம் ஓமலூர் வட்டத்தில் சேலத்திற்கு வடமேற்கே ஏறத்தாழ 15 கல்லன் மாத்திரியிலுள்ள ஊர்; a city in Salem district in *ōmalūr* Taluk in 15 k.m. away from Salem in North West direction.

*[முத்துநாயக்கன் + பட்டி.]*

நாயக்கர் ஆட்சி காலத்தில் ஆண்ட முத்து நாயக்கன் என்பவர் பெயரால் ஏற்பட்ட ஊராக இருக்கலாம்.

**முத்துநிரப்பம்** *muttu-nirappam,* பெ.(n.) ஒற்றைச்சரமாலை (தக்கயாகப்.340, உரை); necklace of a single string.

மறுவ. ஏகாவலி வடம்.

*[முத்து + நிரப்பம். நிரம்பு →நிரப்பு →நிரப்பம் = முழுமை.]*

**முத்துநீர்** *muttu-nīr,* பெ.(n.) பனிநீர்த் திவலை; dew drop. *"முத்து நீர்ச் சாந்தடைந்த மூஉய்த்தத்தி" (பரிபா.10 : 13).*

*[முத்து + நீர்.]*

**முத்துநெய்** *muttu-ney,* பெ.(n.) சிற்றாமணக்கு நெய் (பதார்த்த.162); castor oil.

*[முத்து + நெய்.]*

**முத்துப்பந்தர்** *muttu-p-pandar,* பெ.(n.) முத்துமாலைகளால் ஒப்பனை செய்யப்பட்ட கூரையையுடைய பந்தல் (தமிழ்நா.119); canopy decorated with strings of pearls.

*[முத்து + பந்தர்.]*

**முத்துப்பல்லக்கு** *muttu-p-pallakku,* பெ.(n.) முத்துச்சிவிகை பார்க்க; see *muttu-c-civigai.*

*[முத்து + பல்லக்கு. முத்துக்கள் பதித்து அழகு செய்யப்பட்ட பல்லக்கு.]*

**முத்துப்பற்பம்** *muttu-p-paṟbam,* பெ.(n.) உடலின் இயற்கையான வெப்பத்தினால் உண்டாகும் நெஞ்சத் துடிப்பு, விந்தணுக்கள் தொடர்பான நோய்கள், அரத்த காசம், முறையற்ற அரத்தப் போக்கு முதலிய நோய்களுக்கான மருந்து; the calcined white powder of pearl cures congenital heat, palpitation of the heat, due to the heat, seminal disorders, haemoptisis, aemorrhagic disorders etc.

*[முத்து + பற்பம். பற்பம் = பொடி.]*

**முத்துப்புரி** *muttu-p-puri,* பெ.(n.) முத்துச்சல்லி பார்க்க; see *muttu-c-calli.* *"முத்துப் புரிநாற்று" (பெருங்.வத்தவ. 5 : 48).*

*[முத்து + புரி.]*

முத்துப்பூவாழி *muttu-p-pū-vāḻi,* பெ.(n.) வெங்காயம்; onion - *Allium cepa* (சா.அக.).

முத்துப்பேட்டை *muttu-p-pēṭṭai,* பெ.(n.) ஓர் ஊர்; a village.

கடலில் மூழ்கி முத்தெடுக்கும் பரதவரின் ஊர். முத்து வேலை நிகழ்ந்த இடம். தற்போது முகமதியர் சங்கு வணிகம் செய்கின்றனர்.

முத்துப்பேய்ச்சி *muttu-p-pēycci,* பெ.(n.) ஊர் பெண் தெய்வம்; a village Goddess. *"முத்து ராக்கு முத்துப்பேய்ச்சி" (பஞ்ச. திருமுக.671).*

*[முத்து + பேய்ச்சி.]*

முத்துப்போட்டுப்பார்-த்தல் *muttu-p-pōṭṭu-p-pār-,* 4 செ.குன்றாவி.(v.t.) கணிய வகையுள் ஒன்று; a kind of astrology. *கொட்டை முத்தினைப் போட்டுப் பார்த்து ஒற்றையெண்வரின் நல்லது, இரட்டை யெண்வரின் தீயது (கெட்டது) என அறியும் கணிய வகை (கோவை).*

*[முத்து + போட்டு + பார்-த்தல்.]*

முத்துப்போடு-தல் *muttu-p-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) அம்மை நோயில் முத்துத் தோன்றுதல் (வின்.); to break out in pustules, as in small pox, or measles.

*[முத்து + போடு-தல்.]*

முத்துமணல் *muttu-maṇal,* பெ.(n.) மணல் போன்ற சிறிய முத்து; small pearl resembling a grain of sand. *"நற்பெரும் பந்தருள் முத்து மணல் பரப்பி" (பெருங். உஞ்சைக்.48 : 88).*

*[முத்து + மணல்.]*

முத்துமணிமாலை *muttu-maṇi-mālai,* பெ.(n.) முத்துமாலை பார்க்க; see *muttu-mālai.*

*[முத்து + மணி + மாலை.]*

முத்துமழை *muttu-maḻai,* பெ.(n.) பருவ மழை (இ.வ.); seasonal rain.

*[முத்து + மழை.]*

முத்துமழைபெய்-தல் *muttu-maḻai-pey-,* 1 செ.கு.வி.(v.i.) செல்வம் பொங்குதல் (உ.வ.); to prosper, to amass wealth.

*[முத்து + மழை + பெய்-தல்.]*

முத்துமாதுளை *muttu-māduḷai,* பெ.(n.) மாதுளை வகை (யாழ்.அக.); a species of pomegranate.

*[முத்து + மாதுளை.]*

முத்துமாலை *muttu-mālai,* பெ.(n.) முத்துக் கோத்த கழுத்தணி வகை (திவ். அமலனாதி. 9, வியா.); garland of pearls. *நாய்க்குத் தெரியுமா முத்து மாலை (பழ.).*

*[முத்து + மாலை.]*

முத்துமாலைக்குறுவை *muttu-mālai-k-kuṟuvai,* பெ.(n.) ஒருவகை நெல்; a kind of paddy. *"முத்துமாலைக் குறுவை" (பறாளை. பள்ளு.24).*

*[முத்து + மாலை + குறுவை. குறுவை = குறுகிய காலத்தில் விளையும் நெல்வகை]*

முத்துமுறி *muttu-muṟi,* பெ.(n.) முத்துப் போல் வெண்மையான உயர்ந்த வெண்கலம் (இ.வ.); bestbell-metal, as pearl - white.

*[முத்து + முறி.]*

முத்துமுறிவெண்கலம் *muttumuṟi-veṇgalam,* பெ.(n.) முத்துமுறி பார்க்க; see *muttu-muṟi.*

*[முத்துமுறி + வெண்கலம்.]*

முத்துரதம் *muttu-radam,* பெ.(n.) கோயிலைச் சுற்றி இழுக்கும் சிறுதேர் (கோவை.); small car, chariot.

*[முத்து + Skt. ரதம்.]*

முத்துராக்கு *muttu-rākku,* பெ.(n.) சிற்றூர் பெண் தெய்வம்; a village goddess. *"முத்துராக்கு முத்துப் பேய்ச்சி" (பஞ்ச. திருமுக.671).*

*[முத்து + ராக்கு. Skt. rākku > த. ராக்கு.]*

முத்துராசாக்கவிராயர் *mutturāšā-k-kavirāyar,* பெ.(n.) மயிலாசல மாலை என்னும் நூலை இயற்றிய புலவர்; Tamil poet, author of *mayilāšala-mālai.*

முத்துராமக்கவிராயர் *mutturāma-k-kavirāyar,* பெ.(n.) பிற்காலப் புலவர்; Tamil poet, belongs to the later period.

இவருடைய ஊர் திருப்போரூருக்கு வடக்கே ஆறு கல் தொலைவிலுள்ள கோவளம் என்பது. இவ்வூர் ஒரு துறைக் கோவையில் 'சென்றத்தை' என்னும் செய்யுளில் கூறப்பட்டுள்ளது. இவர் நூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்தவர். பெட்டுராசா இராமச்சந்திர கவிராசருடைய மாணாக்கர். இவருடைய தமையனாருள் ஒருவராகிய சண்முக முதலியார் பெரிய முறைமன்றத்தில் பணியாற்றியவர். இவர் செய்த தனிப்பாடல்கள் பல. பாரத கீர்த்தனம். திருத்தணி கை நொண்டி என்னும் நூல்களை எழுதியவர்.

முத்துராமலிங்கசேதுபதி *muttu-rāmaliṅga-sēdupati,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a poet in 19th century.

இவர் முருகர் அனுபூதி, நீதிபோத வெண்பா, சடாட்சர சாரப்பதிகம், சரசசல்லாப மாலை, பிரபாகரமாலை, வள்ளி மணமாலை என்னும் நூல்களை இயற்றியவர்.

முத்துருட்சிமணி *mutturuṭci-maṇi,* பெ.(n.) முத்துப்போலுருண்ட பொன்மணி (வின்.); pearl-like gold bead.

*[முத்து² + உருட்சி + மணி.]*

முத்துருவி *mutturuvi,* பெ.(n.) மகளிர் காதணி வகை (யாழ்.அக.); an ear-ornament for women.

முத்துருளைமணி *mutturuḷai-maṇi,* பெ.(n.) முத்துருட்சிமணி பார்க்க; see *mutturuṭci-maṇi.*

*[முத்து + உருளை + மணி.]*

முத்துலையிடு-தல் *muttulai-iḍu-,* 20 செ.கு.வி.(v.i.) ஒன்றுக்கு மூன்று கற்பித்தல்; to exaggerate three-fold. *"முத்துலை யிட்டுக் கொண்டு" (திருவிருத்.71, வியா. பக்.37)).*

*[மூன்று → மு + துலை + இடு-தல்.]*

முத்துவட்டம் *muttu-vaṭṭam,* பெ.(n.) 1. ஒருவகை யுருண்டை முத்து (தெ.இ.க. தொ.ii, 143, 3); a kind of round pearl. 2. முத்தெண்ணிக்கையின் வகை; unit consisting of a certain number of pearls.

*[முத்து + வட்டம்.]*

முத்துவடம் *muttu-vaḍam,* பெ.(n.) 1. முத்து மாலை பார்க்க; see *muttu-mālai. "முத்துவடமு முழுமணிக் காசும்" (பெருங். மகத.17 : 164).* 2. ஓர் புடவை வகை; a kind of saree.

*[முத்து + வடம். வடம் = சரம்]*

முத்துவண்ணச்சேலை *muttu-vaṇṇa-c-cēlai,* பெ.(n.) பழங்காலத்துப் புடவை வகை (பணவிடு.303); a kind of saree, of olden days.

*[முத்து + வண்ணம் + சேலை.]*

முத்துவண்ணம் *muttu-vaṇṇam,* பெ.(n.) வெண்ணிறம்; pearl - like colour, as of teeth.

*[முத்து + வண்ணம்.]*

முத்துவர்ணம் *muttu-varnam,* பெ.(n.) முத்துவண்ணம் பார்க்க; see *muttu-vaṇṇam. "முத்துவர்ண மூரனல்லாள்" (விறலிவிடு. 717).*

*[முத்து + வர்ணம். வண்ணம் →வர்ணம்]*

முத்துவீரக்கவிராயர் *muttu-vīra-k-kavirāyar,* பெ.(n.) 19ஆம் நூற்றாண்டில் சங்கர நாராயண கோயில் புராணம் என்னும் நூலை இயற்றிய புலவர்; author of *śaṅkara-nārāyaṇa-kōil-purāṇam.*

முத்துவீரவாத்தியார் *muttu-vīra-vāttiyār,* பெ.(n.) முத்துவீரியம் என்னும் இலக்கண நூலாசிரியர்; author of *muttu-vīriyam.*

முத்துவீரியம் *muttu-vīriyam,* பெ.(n.) ஐந்து வகை இலக்கணங்களையும் கொண்ட நூல்; the book a treatise which says about five kinds of grammar.

*[முத்து + வீரியம்.]*

இந்நூல் முத்துவீர (உபாத்தியாய)ர் இயற்றியது. இதில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங்களும் விளக்கப் பட்டுள்ளது.

முத்துவெள்ளை *muttu-veḷḷai,* பெ.(n.) 1. ஈய வெள்ளி; white lead, *Ceruse.* 2. நெல்வகை; a kind of paddy.

*[முத்து + வெள்ளை.]*

முத்துளம் *muttuḷam,* பெ.(n.) மூங்கில் (சங்.அக.); bamboo.

*[முத்து + உள் – முத்துள் →முத்துளம்.]*

மூங்கிலிலிருந்து முத்து தோன்றுவதாகக் கருதப்படுவதுண்டு.

முத்தூர் *muttūr,* பெ.(n.) பாண்டி மண்டலத்து ஊரின் பெயர்; name of the place. *"பாண்டி மண்டலத்து முத்தூற்றுக் கூற்றத்து" (A.R.E. 438/1913).*

முத்தூர்க்கூற்றம் *muttūr-k-kūṟṟam,* பெ.(n.) முத்தூற்றுக்கூற்றம் (சிலப்.11 : 22, உரை) பார்க்க; see *muttūṟṟu-k-kūṟṟam.*

*[முத்தூர் + கூற்றம்.]*

முத்தூற்றுக்கூற்றம் *muttūṟṟū-k-kūṟṟam,* பெ.(n.) வேளிர்க்குரியதாயிருந்த பாண்டி நாட்டின் பகுதியான நிலப்பிரிவு (புறநா.24, உரை); a tract of land belonging to the *Vēḷir* and annexed to the *Pāṇḍiya* kingdom later on.

*[முத்தூறு + கூற்றம்.]*

முத்தூறு *muttūṟu,* பெ.(n.) முத்தூற்றுக் கூற்றம் பார்க்க; see *muttūṟṟu-k-kūṟṟam. "முத்தூறு தந்த கொற்ற நீள்குடை" (புறநா. 24: 22).*

முத்தெட்டு *muttețțu,* பெ.(n.) பண்ணையாருக்குப் பண்ணையாட்கள் கூலியின்றிப் பயிரிடும் நிலம் (யாழ்ப்.); field cultivated free of wages for the proprietor by his farm labourers.

**முத்தெண்ணெய்** *muttenney*, பெ.(n.) ஆமணக்கெண்ணெய்; oil of castor seed.

*[முத்து + எண்ணெய்.]*

**முத்தெயில்** *mutteyil*, பெ.(n.) பழமையான மதில்; ancient fortress. *"முத்தெயின் மதுரைதன்னில்" (திருவாலவா.62 : 7).*

*[முதுமை + எயில்.]*

**முத்தெருக்கன்செவி** *mutterukkan-ševi*, பெ.(n.) நிலக்கடம்பு (பாலவா.886); a plant.

மறுவ. முத்திருக்கன்செவி.

**முத்தெழும்பு-தல்** *muttelumbu-*, 5 செ.கு.வி. (v.i.) முத்துப்போடு-தல் பார்க்க; see *muttu-p-pōḍu-*.

*[முத்து + எழும்பு-தல்.]*

**முத்தெறி-தல்** *mutteri-*, 2 செ.கு.வி.(v.i.) முத்துப்போடு-தல் (யாழ்.அக.); see *muttu-p-pōḍu-*.

*[முத்து + எறி-தல்.]*

**முத்தை**[1] *muttai*, பெ.(n.) முன்னிடம்; front. *"முத்தை வரூஉங் காலந் தோன்றின்" (தொல்.எழுத்து.164).*

*[முந்தை →முத்தை.]*

**முத்தை**[2] *muttai*, பெ.(n.) 1. திரட்சி (சூடா.); lump, large mass. 2. சோற்றுருண்டை (வின்.); boiled rice gathered into a ball.

தெ. முத்த.

*[முத்து →முத்தை (வே.க.).]*

**முத்தை**[3] *muttai*, பெ.(n.) பேதைப் பருவத்தாள் (யாழ்.அக.); innocent girl; girl between the ages of five and seven.

*[முந்தை →முத்தை.]*

**முத்தை**[4] *muttai*, பெ.(n.) முத்தக்காசு பார்க்க (சங்.அக.); see *mutta-k-kāšu*.

*[முந்தை →முத்தை.]*

**முத்தையன்** *muttaiyan*, பெ.(n.) முத்துக் குமாரன் (யாழ்.அக.) பார்க்க; see *muttu-k-kumāran*.

*[முத்து + ஐயன்.]*

**முத்தையா** *muttaiyā*, பெ. (n.) 19-20ஆம் நூற்றாண்டில் சுங்குரும்மை அந்தாதி, பதிற்றுப் பத்தந்தாதி ஆகிய நூல்களை இயற்றிய புலவர்; a poet, author of *šuṅgurummai-andādi, padirru-p-pattandādi.*

**முத்தொகைவினா** *mu-t-togai-vinā*, பெ. (n.) முதல் எண்ணுக்கும் இரண்டாம் எண்ணுக்குமுள்ள ஏற்றத்தாழ்வுக்கொத்தபடி மூன்றாவது எண் ஒன்றுக்குரிய மற்றோர் எண்ணைக் காணும் கணக்கு முறை (வின்.); rule of three, rule of proportion.

*[மூன்று + தொகைவினா.]*

**முத்தொருகன்** *muttorugan*, பெ.(n.) முத்தடக்கன் (சங்.அக.) பார்க்க; see *muttaḍakkan*.

**முத்தொழில்** *mu-t-tolil*, பெ.(n.) படைப்பு, காப்பு, அழிப்பு என்ற கடவுளின் மூவகைச் செயல் (பிங்.); the triple functions of God -head viz. *paḍaippu, kāppu, alippu.*

*[மூன்று + தொழில்.]*

**முத்தொழிலர்** *mu-t-tolilar*, பெ.(n.) 1. கடைமகன் (சூத்திரர்) (பிங்.); *Šūdras.* 2. உழவு வாணிகம் ஆநிரை காத்தலாகிய

மூன்று தொழில்கள் உடையவரான வணிகர் (வைசியர்) (வின்.); *Vaiśyas,* as engaged in three pursuits, viz. agriculture, trade, herding cattle.

*[மூன்று + தொழிலர்.]*

**முத்தொழிற்பகவன்** *muttoḻiṟ-pagavaṉ,* பெ.(n.) கடவுள் (யாழ்.அக.); God, the Supreme Being.

*[முத்தொழில் + பகவன்.]*

ஆக்கல், காத்தல், அழித்தல் எனும் முத்தொழிலைச் செய்வதாகக் கருதப்படும் கடவுள் என்றறிக.

**முத்தொள்ளாயிரம்** *mu-t-toḷḷāyiram,* பெ.(n.) சேரர், சோழர், பாண்டியர் ஒவ்வொருவருக்கும் 300 செய்யுட்களாக தொள்ளாயிரம் வெண்பாக்களாலியன்ற ஒரு பழைய நூல்; a poem of 900 *Veṇbā* in honour of the *Chēra, Chōḻā* and *Pāṇdiya*, kings having 300 each.

*[மூன்று→மூ→மு + தொள்ளாயிரம். மூன்று வகையானதாகிய தொள்ளாயிரம் பாடல்கள்.]*

பண்டைத் தொகை நூல்களான எட்டுத்தொகை பத்துப்பாட்டுகளுக்குப் பின்னர் இயற்றப்பட்டதாகக் கருதப்படுவது முத்தொள்ளாயிரம். இந்நூலின் பாடல் எண்ணிக்கை தொள்ளாயிரம் என்றும், இரண்டாயிரத்து எழுநூறு என்றும் இருவேறு கருத்துக்கள் இருந்தாலும் இன்று நூல் வடிவில் கிடைப்பது நூற்று முப்பது பாடல்கள் மட்டுமே. அவையும் இருவேறு வகையில் கிடைத்தவையே.

புறத்திரட்டு என்னும் தொகை நூலின் இடையிடையே நூற்றெட்டுப் பாடல்களும், பழைய உரைகளினிடையே இருபத்திரண்டு பாடல்களும் கிடைத்துள்ளன. ஆகவே இந்நூலின்கண் அமைந்து உரையொடு வருவனவாகிய நூற்றுமுப்பது பாடல்களும் படிப்பவர்க்கு இன்சுவை படைப்பனவாக அமைந்துள்ளன.

இந்நூலின் பெயர்ப்பொருள் ஆய்வுக்குரியது. மூன்று என்னும் சொல்லும் தொள்ளாயிரம் என்னும் சொல்லும் சேருங்கால் *"மூன்றும் ஆறும் நெடு முதல் குறுகும்", "மூன்றனொற்றே பகாரம் ஆகும்"* என்ற தொல்காப்பிய (தொல்.எழுத்து.140, 141) இயல்நூலின் முறைப்படி முதல் நெடில் குறுகி வருமொழியிலுள்ள தகரத்திற்கு இயைந்த தகரவொற்றும் பெற்று முத்தொள்ளாயிர மாயிற்று; மூன்று வகையினதாகிய தொள்ளாயிரம் பாடல்களை உடைய நூல் என்பது பொருள். மூன்று வகை யென்பது சேர, சோழ, பாண்டியன் என்ற மூவேந்தரைப் பற்றியது. இவ்வாறு கொள்ளாது மூவேந்தரைப் பற்றிய மூன்று தொள்ளாயிரம் பாடல்களை உடையது என்று பொருள் விரித்து இரண்டாயிரத்து எழுநூறு பாடல்களை உடையது என்று பொருள் கூறுவது பொருந்தாது.

இலக்கண விளக்க நூலுடையார் தாம் எழுதிய பாட்டியலினகத்து எண் செய்யுளாமாறு உணர்த்துவா னெடுத்துக் கொண்டு,

*"ஊரையும் பெயரையும் உவந்தெண்ணாலே சீரிதற் பாடலெண் செய்யு ளாகும்"* என்ற நூற்பா கூறி, "பாட்டுடைத் தலைவன் ஊரினையும் பெயரினையும் உவந்து எண்ணாலே பத்து முதல் ஆயிரமாகவும் பொருட் சிறப்பினாலே பாடுதல் அவ்வவ்வெண்ணாற் பெயர்பெற்று நடக்கும் எண்செய்யுளாம்; அவை முத்தொள்ளாயிரம், அரும்பைத் தொள்ளாயிரம் முதலியன " என்று உரையும் வரைந்துள்ளனராதலால் அதனைப் பின்பற்றித் தொள்ளாயிரம் பாடல்களே இந்நூலில் அமைந்திருத்தல் கூடும் என்று கருதுதல் வேண்டும்.

இந்நூலாசிரியர் யார் என தெரியவில்லை. இந்நூல் அமைந்துள்ள நூற்றுமுப்பது பாடல்களும் பயில்பவருக்கு இனிய சுவை தருவன. நினைக்குந் தோறும், நினைக்குந்தோறும்,

*"காமமிகு காதலன்தன் கலவியினைக் கருதுகின்ற ஏமமிகு கற்புடையாளின்"*
இன்பத்தினும் மிகுவதாய இன்பத்தினைத் திருவாசகம் நல்குவது போன்று இந்நூலும் நல்குமென்று கூறுவது மிகையாகாது.

இந்நூலில் அமைந்துள்ள பாடல்கள், பெரும்பாலும் விருந்து என்ற முறையினைப் பின்பற்றி அமைந்துள்ளன. பேராசிரியரும், நச்சினார்க் கினியரும் புதுவதாகத் தொடுக்கப்படுந் தொடர்நிலை மேலதாகிய விருந்து என்பதற்கு இந்நூலை எடுத்துக் காட்டுதலானும் அது நன்கு உணரப்படும். இந்நூல் வெண்பாக்கள் பெரும்பான்மை நான்கடியானும் சிறுபான்மை ஐந்து ஆறு அடிகளானும் வந்தன என்பதும் உணரக்கிடத்தலால் யாப்பருங்கலக் காரிகையி னுரையில் மேற்கோளாக வந்துள்ள, "பன்மாடக் கூடல்" என்ற ஆறடிச் செய்யுளாக விருத்தல் கூடுமென்று கருதி இதனகத்துச் சேர்த்தனர். இந்நூலில் சுட்டியொருவர் பெயர்கொண்ட பாடாண்திணைப் புறப்புறக் கைக்கிளைச் செய்யுள் பல அமைந்துள்ளன. கைக்கிளைப் பாடல்கள் பெரும்பாலும் பெண்பாற் கைக்கிளைப் பாடலாகவே அமைந்துள்ளன.

இந்நூலில் கடல் வாழ்த்துப்பாடல் ஒன்றும், சேரனைப் பற்றி இருபத்து மூன்று பாடல்களும், சோழனைப் பற்றி நாற்பத்து ஆறு பாடல்களும், பாண்டியனைப் பற்றி அறுபது பாடல்களும் உள்ளன.

இந்நூலில் அமைந்துள்ள சுவைமிக்கப் பாடல்கள் சில :

*"கொடிபாடித் தேர்பாடிக் கொய்தண்டார் மாறன்*
*முடிபாடி முத்தாரம் பாடித் – தொடியுலக்கை*
*கைம்மனையுள் ஒச்சப் பெறுவேனோ? யானுமோர்*
*அம்மனைக் காவல் உளேன்"* (34)

*"நந்தி னிளஞ்சினையும் புன்னைக் குவிமொட்டும்*
*பந்த ரிளங்கமுகின் பாளையும் – சிந்தித்*
*திகழ்முத்தம் போற்றோன்றுஞ் செம்மற்றே தென்னன்*
*நகைமுத்த வெண்குடையா னாடு"* (8)

*"நாணாக்கால் பெண்மை நலனழியும் முன்னின்று*
*காணாக்கால் கைவளையுஞ் சோருமால் – காணேனான்*
*வண்டெவ்வந் தீர்தார் வயமான் வழுதியைக்*
*கண்டெவ்வந் தீர்வதோர் ஆறு"* (28)

*"பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவில்*
*என்னோடு நின்றார் இருவர் அவருள்ளும்*
*பொன்னோடை நன்றென்றாள் நல்லளே பொன்னோடைக்*
*கியானைநன் றென்றாளும் அந்நிலையள் யானை*
*எருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்*
*திருத்தார்நன் றென்றேன் தியேன்"* (58)

**முதங்கி**[1] *mudaṅgi,* பெ.(n.) வெள்ளகத்தி; sesbania grandiflora, bearing white flowers (சா.அக.).

**முதங்கி**[2] *mudaṅgi,* பெ.(n.) கத்தரி வகை (சங்.அக.); a kind of brinjal.

**முதம்** *mudam,* பெ.(n.) உவகை; pleasure, delight. *"புந்தியின் முதமெய்தி" (கந்தபு. மீட்சிப்.11).*

**முதல்**[1] *mudal,* பெ.(n.) 1. தொடக்கம்; begining. *'முதலூழியிறுதிக் கண்' (சிலப்.8:1, உரை). "கழனி நெல்லின் கவைமுத லலங்க"*

*(அகநா.13:19) "கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி" (குறுந்.69:3). "சுரன்முதல் வந்த உரன்மாய் மாலை" (நற்.3:6).* 2. இடம் முதலியவற்றில் முதலாயிருப்பு; first, as in rank, place, etc. *"முதல் நீடும்மே" (தொல்.எழுத்து.458).* 3. கரணியம்; cause. *"நோய்முத னாடி" (குறள், 948).* 4. மூலக் கரணியனான கடவுள்; god, as the first cause. *"மூவா முதலாய் நின்ற முதல்வா" (திருவாச.27 : 10).* 5. முதலாவான்; one who is first or oldest. *"முதலாய நல்லானருளல்லால்" (திவ்.இயற்.1 : 5).* 6. தலைமை, வரிசை, மேன்மை, உயர்வு (சிலாக்கியம்) அல்லது ஏற்றம்; best, that which is superior. *முதன் மாணாக்கன்.* 7. அடைகொளி (விசேடியம்) (சைவப்.); that which is qualified. 8. செலவுக்குரிய வருவாயாக அமைத்துவைக்கும் பொன்னும் பொருளும் நிலமுமாகிய மூலவைப்பு, வைப்பு; principal, fund, capital, money yielding interest. *"முதலிலார்க் கூதியமில்லை" (குறள், 449).* 9. வேர்; root. *"முதலினூட்டு நீர்" (அரிச். பு.மீட்சி.17).* 10. கிழங்கு; tuber. 11. அடிப்பாகம்; base, foot, bottom or lowest part of anything. *"வாடிய வள்ளி முதலரிந் தற்று" (குறள், 1304).* 12. அடிமரம்; stump; lowest part of stem. *"வேங்கையைக் கறுவு கொண்டதன் முதற் குத்திய மதயானை" (கலித்.38).* 13. இடம்; place. *"சுரன்முதன் மராத்தவரி நிழல்" (சிறுபாண்.8).* 14. முதற்பொருள், 2 பார்க்க; see *mudaṟ-poruḷ,2. "முதலெனப்படுவது நிலம் பொழுதிரண்டின் னியல்பென மொழிப" (தொல்.பொருள்.4).* 15. பிண்டப் பொருள்; whole, integral thing. *"முதலுஞ் சினையும்" (தொல்.சொல்.89).* 16. செலவுக்காகச் சேமிக்கும் பொருள்; stock, store. *"திருப்பூ மண்டபத்துக்கு முதலாக அளக்கவும்" (தெ.இ.கல்.தொ.iii, 215 : 11).* 17. இசைப்பாட்டு வகையுள் ஒன்று (சிலப்.3 : 41–2, உரை); a variety of tune. 18. முதலெழுத்து (நன்.59) பார்க்க; see *mudaleḻuttu.* 19. சொத்தின் கொள்முதல் விலை; cost price. *"முதல் எழுத்திலே வெள்ளெழுத்தா?", "முதல் எடுக்கும்போதே தப்பட்டைக்காரன் செத்தான்", "முதல் இல்லார்க்கு ஊதியமில்லை", "முதலை வைத்துப் பெருக்காத வணிகரைப் போல", "முதற் கோணல் முற்றும் கோணல்", "முதற்பிள்ளை மூத்திரத்திற்கு அழும்போது இரண்டாம் பிள்ளை பாலுக்கு அழுகிறதாம்", "முதலில் பிறந்த பிள்ளை முத்துப் பிள்ளை பின்னே பிறந்த பிள்ளை பீப்பிள்ளை", "முதல்ல எடுத்து செலவிடாதே", "முதலுக்கு மோசமாக இருக்கிறபோது, இலாபத்துக்குச் சண்டை போடுகிறதா?" (பழ.).*

*[முன் → முந்து → முந்தல் → முதல் = முதன்மை, முதலி, முதலாளி (சு.வி.28). முந்து → முது → முதல் (வே.க.முல்.2).]*

முதல்[2] *mudal,* இடை.(prep.) 1. ஏழாம் வேற்றுமையுருபு (நன்.302); termination of the locative case. *"குணமுதற் றோன்றிய... மதியின்" (மதுரைக்.195).* 2. ஐந்தாம் வேற்றுமை யுருபு; termination of the ablative case, meaning 'from henceforth'. *அடிமுதல் முடிவரை (உ.வ.).*

க. முதல்

*[முதல்[1] → முதல்[2].]*

முதல்[3] *mudal,* பெ.(n.) ஆவணம்; document. *இந்த முதல் இற்றைநாள் முதலியான காட்டுகையில்" (தெ.இ.கல். தொ.ப.90).*

*[முதல்[1] → முதல்[3].]*

**முதல்**[4] *mudal,* கு.பெ.எ.(adj.) முதலான (வின்.); beginning with. *முதலாயிரம்.*

*[முதல்¹ →முதல்⁴.]*

**முதல்**[5] *mudal,* கு.வி.எ.(adv.) முதலில்; first. *முதல்வந்தவன்.*

*[முதல்¹ → முதல்⁵.]*

**முதல்**[6] *mudal,* பெ.(n.) உடம்பு; body. *முதலாயிரம்.*

*[முழு → (முது) → முதல் = உடம்பு.]*

**முதல்செயநீர்** *mudal-šeyanīr,* பெ.(n.) வழலையுப்பு செயநீர்; pungent liquid prepared from quint essence salt (சா.அக.).

**முதல்செலவு** *mudal-šelavu,* பெ.(n.) வரவு செலவு (நாஞ்சில்); income and expenditure.

*[முதல் + செலவு.]*

**முதல்தகவலறிக்கை** *mudal-tagaval-arikkai,* பெ.(n.) காவல் நிலையத்தில் முதன்முதலில் பெறப்பட்ட குற்ற நிகழ்வைப் பற்றிய விளத்தங்கள் அடங்கிய பதிவு அல்லது குறிப்பு; information of an offence first received and recorded by the police, abbreviated to F.I.R. *இந்தக் கொலைக் குற்றத்தின் முதல் தகவல் அறிக்கையைப் பார்வையிடக் கூட வழக்கறிஞர் அனுமதிக்கப் படவில்லை.*

*[முதல் + தகவல் + அறிக்கை.* **Arab.**dakhal > *த. தகவல்]*

**முதல்தாரம்** *mudal-taram,* பெ.(n.) முதற்றாரம் பார்க்க; see *madarraram.*

*[முதல் +தாரம்.]*

**முதல்தீர்த்தம்** *mudal-tīrttam,* பெ.(n.) திருமால் கோயிலில் முதன்முதற் பெறும் தூயநீர் உயர்மதிப்பு; honour of receiving holy water first in a congregation in a *Visnu* temple.

*[முதல் +* **Skt.** *தீர்த்தம்.]*

**முதல்நிலை** *mudal-nilai,* பெ.(n.) ஒரு சொல்லின் முதலில் நிற்கும் எழுத்துகள்; a letters stand first in a word.

*[முதல் + நிலை]*

தமிழ்மொழி அமைப்பின்படி பன்னிரண்டு உயிரும் க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ ஆகிய ஒன்பதும் முதல் நிலையாக வருவது, நன்னூலார் 'நு' கரத்தையும் முதல்நிலையாக கொள்வார்.

**முதல்நீட்சி** *mudal-nītci,* பெ.(n.) ஒரு சொல்லில் உள்ள முதல் உயிர் நீண்டு அந்தச் சொல்லின் இலக்கண நிலை மாற்றம் பெறுவது; grammatical change of lengethening a short vowel into a long vowel when it stands in the begining of a word.

*[முதல் + நீட்சி.]*

பொதுவாகச் சொன்னால் ஒரு சொல்லின் முதலுயிர் நீண்டு ஒலிப்பது; முதல் உயிர் குறிலாக இருந்து நெடிலாக மாறுவது.

(எ.கா.) உண் → ஊண்

விடு → வீடு

கெடு → கேடு (இலக்.கலை.கள.)

**முதல்நிலைத்தொழிற்பெயர்** *mudal-nilai-t-tolir-peyar,* பெ.(n.) முதனிலைத் தொழிற்பெயர் பார்க்க; see *mudanilai-t-tolirpeyar.*

*[முதல்நிலை + தொழிற்பெயர்.]*

**முதல்நிலைதிரிந்ததொழிற்பெயர்** *mudal-nilai-t-tirinda-tolirpeyar,* பெ.(n.) முதனிலைதிரிந்ததொழிற்பெயர் பார்க்க; see *mudanilai-tirinda-tolirpeyar.*

*[முதல்நிலை + திரிந்த + தொழிற்பெயர்.]*

**முதல்நூல்** *mudal-nūl,* பெ.(n.) 1. தொடக்கப் பாடநூல்; primer. *கூட்டுறவு முதல் நூல்.* 2. முதனூல் பார்க்க; see *mudanūl.*

*[முதல் + நூல்.]*

சிறந்த அறிவுடையவரால் இயற்றப்பட்டு அதன் வழியில் பல நூல்கள் எழுதப்படுவதற்கான அடிப்படை நூல்.

**முதல்பிடி** *mudal-pidi,* பெ.(n.) 1. சீட்டு நிறுவனம் நடத்துவோன் (நெல்லை.); conductor of a chit fund. 2. காசாளர்; treasurer.

*[முதல் + பிடி.]*

**முதல்மந்திரி** *mudal-mandiri,* பெ.(n.) முதலமைச்சர் பார்க்க; see *mudal-amaiccar.*

*[முதல் + **Skt.**மந்திரி.]*

**முதல்மரியாதை** *mudal-mariyādai,* பெ.(n.) கோயில் முதலியவற்றில் முதலாவதாகப் பெறும் மதிப்புரவு (மரியாதை); first preference in doing the honours, as at a temple.

*[முதல் + **Skt.** மரியாதை.]*

**முதல்முதலாக** *mudal-mudalāga,* பெ.(n.) முதன்முதலாக பார்க்க; see *mudan-mudalāga.*

**முதல்வஞ்சி** *mudal-vañji,* பெ.(n.) முதுமொழி வஞ்சி (புறநா.37, முதற்குறிப்பு) பார்க்க; see *mudal-vañji.*

*[முதல் + வஞ்சி.]*

**முதல்வடி** *mudal-vadi,* பெ.(n.) 1. முதலில் வடிக்கும் சாறு (இ.வ.); juice obtained in the first distillation. 2. முதலில் வடித்த சாராயம் (வின்.); alcohol obtained in the first distillation.

*[முதல் + வடி.]*

**முதல்வர்** *mudalvar,* பெ.(n.) 1. முதலாயினார் persons begining with. *"முந்தை முதல்வர்" (பு.வெ.1: 19). "நான்மறை முதல்வர் சுற்ற மாக" (புறநா.26:13).* 2. வானவர் (சது.); celestials.

*[முதல் → முதல்வர்.]*

**முதல்வள்ளல்கள்** *mudal-vallalgal,* பெ.(n.) வரையாது கொடுப்போராகிய செம்பியன், காரி அல்லது சகாரி (ஆ.நி.) விராடன், நிருதி, துந்துமாரி, சகரன், நளன் என ஏழு வள்ளல்கள் (சூடா.); the liberal chiefs of the first order whose bounty knows no limit seven in number, viz *Šembiyan, Kāri* or *Šakāri* according to *Aciriyanikandu, Virādan, Nirudi, Dandumāri, Šagaran, Nalan.*

*[முதல் + வள்ளல்கள்.]*

**முதல்வன்** *mudalvan,* பெ.(n.) 1. தலைவன்; one who is first, chief, head. *"மூவர்க்கு முதல்வ ரானார்" (தேவா. 453 : 2).* 2. எல்லாப் பொருட்கும் மூலமான இறைவன்; god, as the First Cause. *"ஞாலமூன் றடித்தாய முதல்வன்" (கலித்.124). "முதுமுதல்வன்*

*வாய்போகா" (புறநா.166:2).* 3. அரசன் (திவா.); king. 4. தந்தை; father. *"தன்முதல்வன் பெரும்பெயர்" (கலித்.75).*

*[முதல் → முதல்வன்.]*

**முதல்வன்சேய்** *mudalvan-šēy,* பெ.(n.) முருகன் (உரி.நி.); god Murugaṉ.

*[முதல்வன் + சேய்.]*

**முதல்வன்வாக்கு** *mudalvaṉ-vākku,* பெ. (n.) தோன்றியம் (ஆகமம்) (பிங்.); the *Agamas.*

*[முதல்வன் + வாக்கு.]*

**முதல்வாடாக்கடன்** *mudal-vāḍā-k-kaḍaṉ,* பெ.(n.) முதல் அழியாத நிலையில் வட்டி மட்டும் தொடர்ந்து செலுத்தும் கடன் தொகை; loan which is paid continuously only with interest not along with principal. *"இவர் பக்கல் நாங்கள் முதல் வாடாக் கடனாக பொரிசை இடகைக் கொண்ட காசு நாலாயிரம்" (தெ.இ.கல்.தொ.8, கல்.345).*

*[முதல் + வாடா + கடன். முதல் குறையாமல் வட்டி மட்டும் தொடர்ந்து செலுத்தும் கடன்.]*

**முதல்வாடை** *mudal-vāḍai,* பெ.(n.) முதன் முதலிற் நீர்ப்பாயும் வயல்கள் (W.G.); block of fields nearest the source of irrigation.

*[முதல் + வாடை. வாடை = வரிசை.]*

**முதல்வாதி** *mudal-vādi,* பெ.(n.) மாழை; metal (சா.அக.).

**முதல்வி** *mudalvi,* பெ.(n.) தலைவி (சூடா.); lady of first rank; mistress. *"மனுஷ்யப் பெண்களுக்கும் இவளே முதல்வி யென்றவாறு" (தக்கயாகப்.321, உரை).*

*[முதல்வன் →முதல்வி.]*

**முதல்வினை** *mudal-viṉai,* பெ.(n.) முதற் பெயருக்கு உரிய வினை; personal noun in the form of a finite verb or personal noun derived from a verbal root.

*[முதல் + வினை.]*

ஒரு முற்றுத்தொடரில் முதற்பெயரும் சினைப் பெயரும் பயன்படும் பொழுது அந்தப் பெயர்களுக்குத் தனித்தனியே வினைகள் அமைவதுண்டு. முதற்பெயருக்கு உரிய வினையை முதல்வினை என்றும் சினைப் பெயருக்கு உரிய வினையைச் சினைவினை என்றும் கூறுவர்.

(எ.டு.) யானை கால் ஒடிந்து விழுந்தது.

ஒடிந்து – சினைவினை

விழுந்தது – முதல்வினை (இலக்.கலை.கள.)

**முதல்வெண்குருத்து** *mudal-veṇ-kuruttu,* பெ.(n.) முதன்முதலில் தோன்றும் குருத்து (பிங்.); first sprout.

*[முதல் + வெண் + குருத்து.]*

**முதல்வேதம்** *mudal-vēdam,* பெ.(n.) முதல் மறையாகிய இருக்கு (பிங்.); Rig *Vēda,* as the first *Vēda.*

*[முதல் + Skt. வேதம்.]*

**முதல்வேர்** *mudal-vēr,* பெ.(n.) அடி வேர்; tap root.

*[முதல் + வேர்.]*

**முதலக்கரம்** *mudal-akkaram,* பெ.(n.) முதலெழுத்து பார்க்க; see *mudal-eḻuttu.*

*[முதல் + அக்கரம். **Skt.** a-ksara> த. அக்கரம் = எழுத்து.]*

**முதலடி** *mudal-aḍi,* பெ.(n.) 1. தொடக்கம் (இ.வ.); beginning. 2. ஆண்டின் முதல் விளைச்சல் (மகசூல்) (தஞ்சை.); first corp. of the year.

*[முதல் + அடி.]*

**முதலடிப்பருவம்** *mudalaḍi-p-paruvam,* பெ.(n.) உழுவதற்கேற்ற முதற் பருவம் (தஞ்சை.); first ploughing season.

*[முதலடி + பருவம்.]*

**முதலமைச்சர்** *mudal-amaiccar,* பெ.(n.) இந்தியாவில் மாநிலத்தை அல்லது நடுவண் அரசின் நேரடிப் பார்வைக் கீழ்வரும் பகுதியை ஆளும் அமைச்சரவையில், முதன்மைப் பொறுப்பு வகிக்கும் அமைச்சர்; in India chief minister of a state, etc.

*[முதல் + அமைச்சர்.]*

*"அறநிலை திரியா அன்பின் அவையத்துத்*
*திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து*
*மெலிகோ செய்தே னாகுக" (புறநா.71)*
*"நடுவிகந் தொரீஇ நயனில்லான்*
*வினைவாங்குகக்*
*கொடிதோர்த்த மன்னவன்" (கலித்.8)*

என்னும் பகுதிகள் முதலமைச்சன் அரசியலில் எவ்வளவு தனிப் பொறுப்பும் அதிகாரமும் வாய்ந்தவன் என்பதை உணர்த்தும். உயர்குடிப் பிறப்பும் ஒழுக்கமும் மதிநுட்பமும் இலக்கண இலக்கிய திறனும், நெஞ்சுரனும், அரசியல் வினைத் திட்பமும் அரசனது குறிப்பறிந்து ஒழுகும் ஆற்றலும், அரசன் சிறப்பாக நுகரும் பொருளை விரும்பா இயல்பும், அரசனிடத்துங் குடிகளிடத்தும் அன்பும் எவ்வகையினும் அறைபோகா உள்ளமும், அறவுணர்ச்சியும் சொல்வன்மையும், தோற்றப் பொலிவும், மகப்பேற்றுடன் சுற்றமும் உடையவனே, முதலமைச்சனாக அமர்த்தப் பெறுவான் (பழந்தமிழாட்சி பக்.33).

**முதலவன்** *mudalavaṉ,* பெ.(n.) குல முதல்வன்; patriarch. *"முதலவன் முதலிய முந்தையோர்" (கம்பரா.பள்ளிபடை 50).*

*[முதல்வன் →முதலவன்.]*

**முதலற்றுப்போ-தல்** *mudalaṟṟu-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) அடியோடழிதல் (வின்.); to be totally extinguished, as family; to be eradicated.

*[முதல் + அற்றுப்போ-தல். அற்றுப்போதல் = அழிந்து போதல்.]*

**முதலறவு** *mudalaṟavu,* பெ.(n.) முதலற்றுப்போ-தல் பார்க்க; see *mudal-aṟṟu-p-pō.* *"முற்பாற்கிழமை முதலறவின்றி" (பெருங். மகத.தருச.18, 25).*

**முதலனுமானம்** *mudal-aṉumāṉam,* பெ.(n.) முதற் காரணத்தைக் கொண்டு அனு மானிக்கை (வின்.); direct inference of an effect from a root-cause, as that the rain-clouds will rain.

*[முதல் + அனுமானம்.]*

**முதலாய்** *mudal-āy,* கு.வி.எ.(adv.) கூட; even. *தண்ணீர் முதலாய் இங்கே கிடையாது (வின்.).*

*[முதல் →முதலாய்.]*

**முதலாயிரம்** *mudal-āyiram,* பெ.(n.) நாலாயிரப் பனுவலில் (நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம்) முதலாவது பகுதி; the first of the four sections of *Nālāyira-p-pirabandam.*

*[முதல் + ஆயிரம்.]*

**முதலாழ்வார்கள்** *mudalāḻvārgaḷ,* பெ.(n.) மாலிய ஆழ்வார்களில் முதலில்

தோன்றியதாகக் கருதப்படும் பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்; *Vaisṇava* canonised saints.

*[முதல் + ஆழ்வார்கள்.]*

முதலாளி *mudalāḷi,* பெ.(n.) 1. ஆட்களை வேலைக்கு அமர்த்திச் சொந்தத் தொழிலோ வணிகமோ செய்பவர்; one who invests in and runs a business, industry, etc; proprietor; owner. *முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையே நல்லுறவு நிலவுகின்றது. தேயிலைத் தோட்ட முதலாளி.* 2. மூலவைப்புள்ளவன் (மூலதனம்); capitalist. 3. தொழிற்சாலை அல்லது வணிகநிலைய உரிமையாளர், சொந்தக்காரர்; proprietor. 4. பெருநிலக்கிழார்; land lord. 5. தலைவன்; chief, president, responsible person.

*[முதல் + ஆளி. ஆள் →ஆளி.]*

முதலாளித்துவம் *mudalāḷittuvam,* பெ.(n.) நாட்டின் பொருளியலை அளவிடும் உருவாக்கப் பொருள்கள் பெருமளவில் தனியார் உடைமைகளாக இருக்கும் அமைப்பு; capitalism. *முதலாளித்துவம் இல்லாத நாடு உலகினில் இல்லை.*

*[முதலாளி → முதலாளித்துவம்.]*

முதலான *mudal-āṉa,* கு.வி.எ.(adj.) தொடக்கமாகவுடைய; beginning with.

*[முதல் →முதலான.]*

முதலி[1] *mudali,* பெ.(n.) 1. தலைவன்; head, chief. *எங்கண் முன்பெருமுதலி யல்லை யோவென (பெரியபு.கண்ணப்.177).* 2. பெரியோன்; saint, religious teacher. *"மூவர் முதலிகளுந் தேவாரஞ்செய்த திருப்பாட்டும்" (ஏகாம். உலா, 78) (ஈடு, 6. 1: 1).* 3. முதலியார், 3 பார்க்க (E.T.I, 84); see *mudaliyār,* 3.

க.மொதலிக

*[முதல் → முதலி.]*

முதலி[2] *mudali,* பெ.(n.) 1. தாழை (பரி.அக.); fragrant screw pine. 2. சீமையிலுப்பை (இ.வ.); sapodilla.

*[முசலி → முதலி.]*

முதலி[3] *mudali,* பெ.(n.) அரசின் முதன்மை அலுவலர் (MER.1923-24, p,103); chief officer of the state.

*[முதல் → முதலி.]*

முதலிடைப்போலி *mudal-iḍai-p-pōli,* பெ. (n.) செந்தமிழ் வழக்கில் வழங்கிவரும் ஒரு சொல் அதே பொருளில் உருவில் சில மாற்றங்களோடு வழங்குவது; letter or syllable substituted for another different in sound as in ஐயர் – அய்யர்.

*[முதல் + இடை + போலி.]*

*வகை - 6*

1. முதல்போலி–ஐயர்–அய்யர்
2. இடைப்போலி–உடைமை–உடமை
3. கடைப்போலி–பந்தல்–பந்தர்
4. முதலிடைப்போலி–ஐந்தாறு –அஞ்ஞூறு
5. இடைகடைப்போலி–புலையச்சி–புலைச்சி
6. முற்றுப்(முழுவதும்) போலி-ஐந்து–அஞ்சு

(இலக்.கலை.கள.)

முதலிமை *mudalimai,* பெ.(n.) தலைமை (புதுக்.கல்.361); head-ship.

*[முதலி →முதலிமை. முதலி = தலைவன்.]*

முதலிய *mudaliya,* பெ.அ.(adj.) ஒரு தொகுப்பில் குறிப்பிடப்பட்டுள்ளவைத் தொடக்கமாக உடைய; beginning with. *புகையிலை, பொறிகள் (இயந்திரங்கள்), மருந்துப் பொருட்கள் முதலியவற்றின் மீது புதிய வரி சுமத்தப்பட்டுள்ளது. இந்தியா, இலங்கை முதலிய நாடுகள் இந்தப் போட்டியில் கலந்து கொள்ளும்.*

*[முதல் → முதலிய.]*

முதலியாண்டான் *mudali-y-āṇḍāṉ,* பெ.(n.) 1. இராமானுசரின் முதன் மாணாக்கருள் ஒருவரான திருமாலடியார் (அஷ்டப். திருமரங்க .ஊச.21); a Vaisṇava *Acārya* the chief disciple of *Rāmāṉuja.* 2. வழிபடுவோர் தலையில் வைக்கப்படுவதும் இராமனுசரின் திருவடி நிலையுள்ளதுமான மகுடம்; a crown bearing the image of *Rāmāṉuja's* sandals, used in temples of *Rāmāṉuja* for blessing worshippers by placing it on their heads.

*[முதலி + ஆண்டான்.]*

முதலியார் *mudaliyār,* பெ.(n.) 1. தலைவன்; head, chief. *முதலியார் என்னவும் பண்ணி (ஈடு, 4. 1:7) (I.M.P. Tj.1634).* 2. இலங்கையரசால் வழங்கப்படும் பட்டப் பெயர்; a honorific tittle bestowed by the Ceylon Government. 3. வேளாளருள் ஒரு பிரிவினர்க்கும், செங்குந்தருக்கும், தஞ்சை மாவட்டத்திலுள்ள சமணருள் ஒரு பிரிவினருக்கும் உரிய குலப் பட்டப் பெயர்; a caste title of a sect of *Vēḷaḷar*, of *Šeṅgundar* and of a sect of Jains in the Tanjore District.

*[முதலி → முதலியார்.]*

முதலியோர் *mudaliyōr,* கு.வி.எ.(adv.) முதலிய பிறர்; and such other. *கட்டாய இந்தியை எதிர்த்துத் தமிழைக் காத்தவர், மறைமலை யடிகள், சோமசுந்தர பாரதியார் முதலியோ ராவர்.*

*[முதல் → முதலியோர்.]*

முதலிரவு *mudal-iravu,* பெ.(n.) மணமகனும் மணமகளும் திருமணம் முடிந்தபின் முதன்முதலில் கலந்து கொள்ளும் இரவு; the night fixed for consummation of marriage.

*[முதல் + இரவு.]*

முதலில் *mudalil,* வி.அ.(adv.) ஆரம்பிப்பதற்கு முன், தொடக்கமாக; at first, first of all; to begin with. *நான் முதலில் உங்களுக்கு வணக்கம் தெரிவித்துக் கொள்கிறேன். நாம் முதலில் எங்குச் செல்ல வேண்டும்.*

*[முதல் → முதலில்.]*

முதலில்வருஞ்சனி *mudalil-varuñ-jaṉi,* பெ.(n.) பத்தாவது விண்மீனான கொடுநுகம் (மகம்); the 10th naksatra.

முதலிற்கூறும்சினையறிகிளவி *mudaliṟ-kūṟum-šiṉai-y-aṟi-kiḷavi,* பெ.(n.) தொல்காப்பியரின் கோட்பாட்டின்படி முதலுக் குரிய பெயர் சினையை உணர்த்தும் வகையில் ஆளப்படும் சொல்; a kind of metonymy, where the whole is put for its part.

*[முதலில் + கூறும் + சினையறி + கிளவி.]*

நன்னூலார் இதனை முதலாகுபெயர் என்பர். 'இப்பூ தாமரை' என்ற வழி தாமரை என்ற முதலின் பெயர் 'பூ' என்ற சினையை உணர்த்தினமையால் இது முதலிற் கூறும் சினையறி கிளவி (கிளவி – சொல்) (இலக்.கலை.கள.).

முதலீடு *mudal-īḍu,*பெ.(n.) 1. முதலி லிடுகை; placing first. 2. முதலிலிட்ட பொருள்; that which is placed first. 3. முதலில் செலுத்துந் தொகை (இ.வ.); the first instalment. 4. ஆண்டின் முதலறுவடை (இ.வ.); the first crop of the year. 5. வணிக முதல் (சிலப்.9 : 74, அரும்); capital invested in trade. 6. அசல் கடன் தொகைக்குப் பணஞ் செலுத்துகை; repayment of principal amount of a loan. *கொடுப்பதை முதலீடாக வைத்துக் கொள்ளலாம்.*

*[முதல் + ஈடு.]*

முதலீற்று *mudal-īṟṟu,* பெ.(n.) 1. முதன் முதலாக ஈனுகை; first calving. 2. தலையீற்றுக் கன்று; first born calf, firstling.

*[முதல் + ஈற்று.]*

முதலு[1]–தல் *mudalu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. முதலாதல்; to commence, begin, come first. *"முதலா வேன தம்பெயர் முதலும்" (தொல்.எழுத்து.66).* 2. தொடக்க முடையதாதல்; to have a beginning. *"மூவா முதலா வுலகம்" (சீவக.1).*

*[முதல் → முதலு–தல். முதலில் தோன்றுவது அல்லது முதலாக வருதல்.]*

முதலு[2]–தல் *mudalu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தலைமை உடைத்தாதல்; to have as the origin; to begin with. *"அகரமுதல வெழுத்தெல்லாம்" (குறள், 1).*

*[முதல் → முதலு–தல்.]*

முதலுதவி *mudal-udavi,* பெ.(n.) காய முற்றவருக்கு அல்லது திடீரென நோயுற்றவருக்கு மருத்துவரிடம் காட்டும் வரை பயனளிக்கக் கூடியதாக அளிக்கப்படும் உடனடி மருத்துவம்; first aid. *தற்கால மாணவர்கள் மற்றும் இளைஞர்கள் முதலுதவி செய்வதற்குத் தாமாகவே முன் வர வேண்டும் என முதலமைச்சர் கூறினார்.*

*[முதல் + உதவி.]*

முதலூழி *mudal-ūḻi,* பெ.(n.) ஊழிமுதல்; first yuga. *"முதலூழி யின்பம்வர" (தஞ்சைவா. 286).*

*[முதல் + ஊழி. ஊழி = கடற்கோளால் உலகம் முடியுங் காலம்.]*

முதலெழுஞ்சனி *mudal-eḻuñ-jaṉi,* பெ.(n.) முதலில்வருஞ்சனி பார்க்க; see *mudalil-varuñjaṉi.*

*[முதல் + எழும் + சனி.]*

முதலெழுத்து *mudal-eḻuttu,*பெ.(n.) தமிழ் மொழியின் பயன்பாட்டிற்கு முதலாக உள்ள உயிரெழுத்துப் பன்னிரண்டும் மெய்யெழுத்து பதினெட்டும் ஆகிய முப்பது எழுத்துகள்; the primary letters comprising the twelve vowels and the eighteen consonants.

*[முதல் + எழுத்து.]*

முதலை[1] *mudalai,* பெ.(n.) நீரில் வாழும் நீணாள் உயிரி; crocodile. *"நெடும் புனலுள் வெல்லு முதலை" (குறள், 495). "இருங்கழி முதலைமே எந்தோ லன்ன" (அகநா.3:1), "கொடுங்கால் முதலைக் கோள்வ லேற்றை" (குறுந்.324). "முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா", "முதலைவாய் பிள்ளை மீண்டுவருமா" (பழ.).*

ம. முதல.

*[முதல் → முதலை = திரண்ட மர அடி போன்ற நீருயிரி.]*

முதலை வகை : 1. முதலை (gavial) = தென்னாசியாவிற் பெரும்பான்மையாகக் காணப்படும் முதலை. 2. இடங்கர் (Crocodile) = வட ஆப்பிரிக்காவில் பெரும்பான்மையாகக் காணப்படும் முதலை. 3. கராம் (allegator) = தென் அமெரிக்காவில் பெரும்பான்மையாகக் காணப்படும் முதலை (சொ.ஆ.க.38).



**முதலை[2]** *mudalai,* பெ.(n.) 1. இறகின் அடிக்குருந்து; quill of a feather. 2. செங்கிடை; prickly sesban.

*[முதல் → முதலை.]*

**முதலை[3]** *mudalai,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டம் நாங்குநேரி வட்டத்திலுள்ள ஊர்; a village in Tirunelveli district in *Nāṅgunēri* Taluk. *முதலைக் குளம் என்ற ஊர்ப் பெயரே முதலை என்று குறுகி வழங்குகிறது.*

*[முதல் → முதலை.]*

**முதலைக்கண்** *mudalai-k-kaṇ,* பெ.(n.) முன் தள்ளிய விழி (இ.வ.); protuberant eye, as of a crocodile, goggle eye.

*[முதலை[1] + கண்.]*

**முதலைக்கண்ணீர்** *mudalai-k-kaṇṇīr,* பெ.(n.) இரக்கப்பட வேண்டிய ஒரு செய்தியால் வருத்தம் இல்லாமல், வருந்துவதாகக் காட்டி வெளிப்படுத்தும் போலிக் கண்ணீர் அல்லது செய்கை; crocodile tears. *அவனுக்குக் கெடுதி செய்துவிட்டு முதலைக் கண்ணீர் வடிக்கிறான். அவரது பேச்சு வெறும் முதலைக் கண்ணீர் தான், நம்பி விட வேண்டாம்.*

*[முதலை + கண்ணீர்.]*

முதலைக்கு இமைகள் கிடையாது. அதன் கண்கள் காய்ந்து போகாவண்ணம் அதன் கண்ணில் நீர் சுரந்து வழிந்து கொண்டிருக்கும். அதைக் கண்டு முதலை அழுவதாகக் கொள்ளக் கூடாது. அதுபோல் யாராவது போலியாகக் கண்ணீர் வடித்தால் அதை முதலையின் கண்ணீர்க்கு ஒப்பிடுவது உலக வழக்கு.

**முதலைக்கோரை** *mudalai-k-kōrai,* பெ.(n.) கோரை வகை (வின்.); a tall sedge - *Cyperusdubius.*

*[முதலை + கோரை.]*

**முதலைதள்ளு-தல்** *mudalai-taḷḷu-,* 5 செ.கு.வி.(v.i.) கண் வெளிப் பிதுங்குதல் (இ.வ.); to have bulging eyes.

*[முதலை + தள்ளு-தல்.]*

**முதலைநெய்** *mudalai-ney,* பெ.(n.) முதலையினின்று எடுக்கும் நெய், இது இழுப்பு மற்றும் காற்று பிடிப்பு (சன்னி, வாதம்) நோய்களுக்கு மருந்தாகப் பயன்படுகிறது; fat extracted from crocodile, used for delirium and rheumatism (சா.அக.).

*[முதலை + நெய்.]*

**முதலைப்பூண்டு** *mudalai-p-pūṇḍu,* பெ.(n.) 1. நீரரளி; red shanks - *Polygonum genus.* 2. ஆற்றலரி; alligators' nose -

முதலை வகைகள்












*polygonum barbatum*, leaves used in infusion in colic, seeds carminative, another species is glaborum (சா.அக.).

*[முதலை + பூண்டு.]*

**முதலையார்** *mudalaiyār*, பெ.(n.) வன்மீன் பிடிப்பவர்; one who catches dangerous fishes.

*[முதலை → முதலையார்.]*

**முதலைவாதக்காய்ச்சல்** *mudalai-vāda-k-kāyccal*, பெ.(n.) காற்று பிடிப்பினால் (வாதம்) உண்டாகும் காய்ச்சல்; a kind of rheumatic fever.

*[முதலை + **Skt.** வாதம் + காய்ச்சல்.]*

**முதலோன்** *mudalōṉ*, பெ.(n.) கடவுள்; god, as the First Cause. *"செஞ்சடை முதலோன்" (கம்பரா.நிகும்பலை.142).*

*[முதலவன் → முதலோன்.]*

**முதள்** *mudaḷ*, பெ.(n.) மொக்கு (சங்.அக.); bud.

மறுவ. போது, மொட்டு, அரும்பு.

*[முகிழ் → முதள்.]*

**முதளை** *mudaḷai*, பெ.(n.) ஆற்றலரி (வின்.); alligator's nose - *Polygonum barbatum*.

**முதற்கடவுள்** *mudaṟ-kaḍavuḷ*, பெ.(n.) முதல் தெய்வம்; the Supreme Being.

*[முதல் + கடவுள்.]*

**முதற்கடன்** *mudaṟ-kaḍaṉ*, பெ.(n.) 1. தலைமையான கடமை; prime duty. 2. உழவுத் தொழிற்காக முன் கொடுக்கும் பணம்; advance of money to ryots, agricultural loan.

*[முதல் + கடன்.]*

**முதற்கண்** *mudaṟkaṇ*, கு.வி.எ.(adv.) முதலில்; at first, at the outset, first of all. *அவையில் இருப்போருக்கு முதற்கண் எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். குறைகளை எவ்வாறு நீக்குவது என்பது பற்றி முதற்கண் ஆராய்வோம்.*

*[முதல் + கண்.]*

**முதற்கரு**[1] *mudaṟ-karu*, பெ. (n.) நஞ்சுக் கொடி; அதாவது பிண்டத்தில் சேர்ந்து நின்ற (சவ்வு) கொடி; placental cord.

*[முதல் + கரு.]*

**முதற்கரு**[2] *mudaṟ-karu*, பெ.(n.) மூளை (அரு.அக.); brain-matter.

*[முதல் + கரு.]*

**முதற்கருவி** *mudaṟ-karuvi*, பெ.(n.) 1. முதற்காரணம் பார்க்க; see *mudaṟ-kāraṇam*. 2. ஆடல் பாடல்களின் தொடக்கத்தில் இசைக்கும் மத்தளம் (சிலப். 3:27, உரை); a kind of drum used to introduce music and dancing.

*[முதல் + கருவி.]*

**முதற்கற்பம்** *mudaṟ-karbam*, பெ.(n.) 1. வங்கச் செந்தூரம்; calcined red powder of white lead. 2. அயக்காந்தச் செந்தூரம்; calcined red powder of iron and lead stone.

**முதற்காரணகாரியம்** *mudaṟ-kāraṇa-kāriyam*, பெ.(n.) செயற்படும் காரணப் பொருள் (வின்.); primary or material cause.

*[முதல் + காரணகாரியம்.]*

**முதற்காரணம்** *mudar-kāraṇam,* பெ.(n.) காரிய நிகழ்ச்சிக்கு இன்றியமையாத காரணம் (நன்.296, மயிலை); primary or material cause.

*[முதல் + காரணம்.]*

**முதற்காரன்** *mudar-kāraṉ,* பெ.(n.) முதலாளி (வின்.); capitalist.

*[முதல் + காரன்.]*

**முதற்காலம்** *mudar-kālam,* பெ.(n.) 1. இசையின் விளம்ப காலம்; slow measure in beating time, as the first or starting measure of a song. 2. கோயிலிற் காலையிற் செய்யும் முதற் பூசை; first pooja in a temple in the morning.

*[முதல் + காலம்.]*

**முதற்குட்டம்** *mudar-kuṭṭam,* பெ.(n.) உடம்பில் சொறியுண்டாகி மயிர் சிலிர்த்து திமிருண்டாகி நிறம் மாறும் ஒருவகைக் குட்டம்; a kind of leprosy in its first stage causing itches all over the body with benumbing (சா.அக.).

*[முதல் + குட்டம்.]*

**முதற்குறிப்புமொழி** *mudar-kurippu-moḻi,* பெ.(n.) முதல் நூல் முதற் செய்யுளைக் குறிப்பது; mention, first book and first poem.

*[முதல் + குறிப்பு + மொழி.]*

**முதற்குறை** *mudar-kurai,* பெ.(n.) 1. சொன் முதலில் எழுத்துக் குறைந்து வரும் செய்யுள் உறழ்ச்சி (விகார.) வகை (நன்.156. உரை); poetic licence which consists in the shortening of a word by one or more letters at the beginning as *marai* for *tāmarai.* 2. காரிய தொடக்கத்திற்றானே யுள்ள குறை; Initial defect or mistake. *முதற்குறை முற்றுங்குறை.* 3. முதலாவதாயுள்ள தேவை; primary need.

*[முதல் + குறை.]*

**முதற்கைகொடு-த்தல்** *mudar-kai-kodu-,*4 செ.கு.வி.(v.i.) கையால் தழுவி அன்புகாட்டுதல் (புறநா.24, உரை) (திருமுரு. 216, உரை); to show one's great love by taking in one's arms.

*[முதல் + கைகொடு-த்தல்.]*

**முதற்கொடி** *mudar-koḍi,* பெ.(n.) இளந்தளிர் (வின்.); the first sprout of a creeper.

*[முதல் + கொடி.]*

**முதற்கொண்டு** *mudar-koṇḍu,* இடை. (part.) குறிப்பிடுவது தொடங்கி வரிசையாக அல்லது தொடர்ச்சியாக; from some thing on words to. *இந்தக் கடையில் 'கடுகு' முதற்கொண்டு அனைத்தையும் வாங்க முடியும். புதிய பாடத்திட்டம் இவ்வாண்டு முதற்கொண்டு நடைமுறைக்கு வருகிறது.*

*[முதல் + கொண்டு.]*

**முதற்சங்கம்** *mudar-caṅgam,* பெ.(n.) முக்கழகங்களில் முதலாவது கழகம்; the first of the three *Śaṅgams.*

*[முதல் + சங்கம்.]*

**முதற்சீர்** *mudar-cīr,* பெ.(n.) ஈரசைச்சீர் (வீரசோ.யாப்.2); metrical foot of two syllables.

*[முதல் + சீர்.]*

முதற்தூசு *mudar-tūšu*, பெ.(n.) முதற்பூப்பு; the first menses.

*[முதல் + தூசு.]*

முதற்பட்சம் *mudar-paṭcam,* பெ.(n.) முதலில் வைத்து எண்ணத் தக்கது (உ.வ.); first thing to be considered.

முதற்பா *mudarpā,* பெ.(n.) முற்பா (பிங்.); see *murbā.*

முதற்பாதம் *mudar-pādam,* பெ.(n.) 1. கோள்கள் (கிரகங்கள்), விண்மீனின் (நட்சத்திரங்கள்) நான்கு பாதங்களுள் முதற்காலில் செல்லுங் காலம்; time taken by a heavenly body to pass the first quarter of a naksatra. 2. வலது முன்னங் கால்; foreleg of cattle. 3. முதல்தர போக்கிலி (உ.வ.); rogue of the first order.

*[முதல் + பாதம்]*

முதற்பாவாடை *mudar-pāvāḍai,* பெ.(n.) வேலைக்காரர் தலைவன் (I.M.P. Cg.146); chief servant.

*[முதல் + பாவாடை.]*

முதற்பிண்டம் *mudar-pinḍam,* பெ.(n.) தலைப்பிண்டம்; the first foetus.

*[முதல் + பிண்டம்.]*

முதற்பெயர் *mudar-peyar,* பெ.(n.) முழுப் பொருளைக் குறிக்கும் பெயர் (நன்.281); name which denotes the whole object.

*[முதல் + பெயர்.]*

முதற்பேர் *mudar-pēr,* பெ.(n.) தலைமை வேலைக்காரன் (நாஞ்.); head peon.

ம. முதற்பேர்

*[முதல் + பேர்.]*

முதற்பேறு *mudar-pēṟu,* பெ.(n.) 1. தலைப் பிள்ளை; first-born child. 2. முதற்பலன்; first fruits.

*[முதல் + பேறு.]*

முதற்பொருள் *mudar-poruḷ,* பெ.(n.) 1. கடவுள்; god. 2. அகப்பொருட்குரிய நிலம் பொழுதுகளின் இயல்பு (தொல்.பொருள்.4); nature of land and seasons. 3. முதலீடு (சங்.அக.); capital invested in a business. 4. முதற்பெயர் (தொல்.சொல்.59, தெய்வச்.) பார்க்க; see *mudar-peyar.*

*[முதல் + பொருள்.]*

முதற்போலி *mudar-pōli,* பெ.(n.) மூவகைப் போலிகளுள் பொருள் வேறுபாடின்றி ஒத்து நடப்பது (இலக்.); one of the three kinds of *`pōli'* (gramm.).

சொல்லுக்கு முதலிலும் சகர ஞகர யகரங்களுக்கு முன்னும் அகரமும் ஐகாரமும் ஒத்து நடப்பது (நன்னூல்.123, உரை).

பசல் – பைசல்; மஞ்சு மைஞ்சு, மயல் – மையல்.

முதற்றரம் *mudarraram,* பெ.(n.) 1. முதற்றடவை; first time. 2. முதன்மை யானது; first class or grade; that which is first rate.

*[முதல் + தரம்.]*

முதற்றிரமம் *mudarriramam,* பெ.(n.) சோழர் காலத்தில் வாங்கிய வரி வகை (சோழ.ii : 334); a tax.

முதற்றிருவந்தாதி *mudarriru-v-andādi,* பெ.(n.) நாலாயிரத் தெய்வப் பனுவில் உள்ளதும் பொய்கையாழ்வாரால்

இயற்றப்பட்டதுமான அந்தாதி நூல்; a poem in *Nālāyira-p-pirapandam* by *poygai-āḻvār.*

*[முதல் + திருவந்தாதி.]*

**முதன்மடை** *mudaṉ-maḍai,* பெ.(n.) 1. தலை வாய்க்கால்; head of a water channel. 2. முதன்மடை பாயும் நிலம்; field near the head of an irrigation source.

*[முதல் + மடை.]*

**முதன்மரியாதை** *mudaṉ-mariyādai,* பெ.(n.) முதலிற் செய்யும் சிறப்பு, மதிப்புரவு; first honours.

*[முதல் + Skt. மரியாதை.]*

**முதன்மறிநிலை** *mudaṉ-maṟi-nilai,* பெ.(n.) சினைப் பெயர் முதற்கும் முதற்பெயர் சினைக்கும் வரும் அணி வகை (யாழ்.அக.); a figure of speech which consists in applying *Šiṉai-p-peyar* instead of *mudaṟ-peyar* and vice versa.

*[முதல் + மறிநிலை.]*

**முதன்முதல்** *mudaṉ-mudal,* பெ.(n.) தொடக்க காலம்; the very first time.

*[முதல் + முதல்.]*

**முதன்முதலாக** *mudaṉ-mudalāga,* வி.அ. (adv.) இதற்கு முன் இல்லாமல் முதல் முறையாக; at first, for the first time. *இந்தக் கலை முதன் முதல் எங்கு உருவானது? கிராமத்தில் இருந்து வந்த எனது தாத்தா இப்போது தான் முதன்முதலாக வானூர்தியைப் பார்க்கிறார்.*

*[முதல் + முதலாக.]*

**முதன்முன்னம்** *mudaṉ-muṉṉam,* பெ.(n.) தொடக்கம்; the very beginning. *"அடியே னடைந்தேன் முதன் முன்னமே" (திவ். திருவாய்.2. 3 : 6).*

*[முதல் + முன்னம்.]*

**முதன்மை** *mudaṉmai,* பெ.(n.) 1. முன்னுரிமை பெற்று முதலிடம் வகிப்பது அல்லது குறிப்பிடத்தக்கதாக அமைவது; primary importance. *நம் நாட்டில் உழவுத் தொழிலே முதன்மைத் தொழிலாக உள்ளது. இன்றையக் கல்வியில் அறிவியல் முதன்மையாக உள்ளது.* 2. பதவியில், அலுவலகத்தில் தலைமை; officials chief, one who is in a high designation in a office. *முதன்மைப் பொறியாளர் வந்தார். அவர்தான் முதன்மை வழக்குறைஞர். இதுதான் வங்கியின் முதன்மை அலுவலகம்.* 3. தலைமை; priority; superiority; supremacy. *"கணித மாக்களை முடிவுற நோக்கியோர் கூறி முதன்மை" (கம்பரா. மந்தரை.1).*

*[முதல் → முதன் →முதன்மை.]*

**முதன்மைவினை** *mudaṉmai-viṉai,* பெ.(n.) தொடர் நிலையிலும் பொருள் நிலையிலும் தனித்து இயங்கக் கூடியதும் வினை யடையையும் துணை வினையையும் ஏற்கக் கூடியதுமான வினைச்சொல்; main verb.

*[முதன்மை + வினை.]*

**முதனடை** *mudaṉaḍai,* பெ.(n.) இயக்கம் நான்கனுள் மிகத் தாழ்ந்த செலவினை யுடைய பாடல் (சிலப்.3 : 67, உரை); slow-measured song, one of the four varieties of *iyakkam.*

*[முதல் + நடை.]*

இயக்கம் நான்கு = முதனடை, வாரம், கூடை, திரள்.

முதனா *mudaṉā,* பெ.(n.) நாக்கின் அடிப்பகுதி; base or innermost part of the tongue. *"நகார முதனா அண்ணம்" (தொல். எழுத்து.89).*

*[முதல் + நா[2].]*

முதனாள் *mudaṉāḷ,* பெ.(n.) 1. முதல் விண்மீனான இரலை (அசுவினி); the first naksatra. 2. முதல் நாள்; the first day. 3. முந்தின நாள் (சங்.அக.); previous day.

*[முதல் + நாள்.]*

முதனிலை *mudaṉilai,* பெ.(n.) 1. முதலில் நிற்பது; that which stands first. *"முதனிலை மூன்றும்" (தொல்.சொல்.230).* 2. பகுதி (நன்.144, சங்கர); root form. 3. காரணியம்; cause. *"ஆ யெட் டென்ப தொழின் முதனிலையே" (தொல்.சொல்.112).* 4. தலைவாயில்; outer door.

*[முதல் + நிலை.]*

முதனிலைத்தீவகம் *mudaṉilai-t-tivagam,* பெ.(n.) ஒரு சொல் செய்யுளின் முதலில் நின்று குணமுதலிய பொருள் குறித்து ஏனையிடத்துஞ் சென்று பொருள் விளக்கும் அணி வகை; a figure of speech in which a word used in the begining of a sentence is understood in other parts also. *"குணந் தொழில் சாதி பொருள்குறித் தொருசொல் ஒருவயி னின்றும் பலவயிற் பொருடரிற் றீவகஞ் செய்யுண் மூவிடத்தியலும்" (தண்டி.38).*

*[முதனிலை + தீவகம்.]*

ஓரிடத்து வைக்கப்பட்ட விளக்கானது பலவிடங்களில் பரவி பொருள்களை விளக்குதல் போல் தீவகவணி செய்யுளின் ஓரிடத்து நின்று, குணத்தானும், தொழிலானும், இனத்தானும் (சாதியானும்), பொருளானும் பலவிடத்து நின்ற சொற்களோடு பொருந்திப் பொருள் விளக்கும் தன்மையது. அது முதனிலைத் தீவகம், இடை நிலைத் தீவகம், கடைநிலைத் தீவகம் என மூன்று வகைப்படும்.

முதனிலைத் தீவகம், முதனிலைக் குணத் தீவகம், முதனிலை தொழிற்றீவகம், முதனிலை இனத்தீவகம் (சாதித் தீவகம்), முதனிலை பொருட்டீவகம் என நால்வகையாக வரும்.

முதனிலைக் குணத் தீவகம் : எ–டு.

*"சேந்தன் வேந்தன் திருநெடுங்கண் டெவ்வேந்தர்*

*ஏந்து தடந்தோ ளிழிகுருதி – பாய்ந்து*

*திசையனைத்தும் வீரச் சிலைபொழிந்த வம்பும்*

*மிசையனைத்தும் புட்குலமும் வீழ்ந்து" (தண்டி.38)*

அரசனது அழகிய நீண்ட கண்கள் சினத்தால் சிவந்தன; அவை சிவந்த அளவில் பகைவேந்தர்களினுடைய உயர்ந்த பெரிய தோள்கள் அம்புகள்பட்டு அரத்தங் குழம்பிச் சிவந்தன; அத்தோள்களினின்று பெருகிவருகின்ற அரத்தம் பாய்தலால் திசைகள் சிவந்தன; அந்த அரத்தத்திற் படிதலால் வலிமையினையுடைய வில்லினாற் சொரியப்பட்ட அம்புகள் சிவந்தன; அந்த அரத்தம் மேலே வீழ்தலால் பறவைக் கூட்டங்கள் யாவும் சிவந்தன.

இச்செய்யுளின் முதலில் உள்ள சேந்தன என்னும் பண்புச்சொல் கண், தோள், திசை முதலியவற்றோடுஞ் சென்று சேர்ந்து பொருள் விளைத்தலால் முதனிலைக் குணத் தீவகமாம். சேந்தன என்பது வினைச் சொல்லாயினும்

அதனாற் பெறும் பொருள் செந்நிறமாகிய பண்பாகலின் அது பண்பெனப்பட்டது. சேந்தன என்பது செம்மை என்னும் பண்புப் பெயரினடியாகப் பிறந்த வினையாதலையும் நோக்குக.

**முதனிலைத்திரிந்ததொழிற்பெயர்** *mudanilai-t-tirinda-tolirpeyar,* பெ.(n.) வினையடி முதலெழுத்துத் திரிந்து வருவதனால் தொழிற் பெயராய் நிற்பது; verbal noun formed by modifying the initial letter of a verbal root as *kēḍu*, from *keḍu.*

*[முதனிலை + திரிந்த + தொழிற்பெயர். வினையடிச் சொற்கள் சற்றுத் திரிந்து பெயராகவும் ஆளப்படுவதுண்டு. எ.டு. உண் → ஊண், படு →பாடு.]*

**முதனிலைத்தொழிற்பெயர்** *mudanilai-t-tolirpeyar,* பெ.(n.) தன்னியல்பின் மாறாத வினையடியே தொழிற் பெயராக நிற்பது (குறள், 117, உரை); verbal noun formed from a verbal root without any suffix and without any variation of the root form, as *kuri.*

*[முதனிலை + தொழிற்பெயர். வினையடிச் சொற்கள் மட்டுமே பெயராக அமைவது. எ.டு.அடி, பிடி, உதை.]*

**முதனிலைவிளக்கு** *mudanilai-viḷakku,* பெ.(n.) முதனிலைத்தீவகம் பார்க்க (வின்.); see *mudanilai-t-tīvagam.*

*[முதனிலை + விளக்கு.]*

**முதனிறம்** *mudaniram,* பெ.(n.) மாங்கிசச் சிலை (யாழ்.அக.); a kind of block stone.

**முதனினைப்பு** *mudaninaippu,* பெ.(n.) நூல் அல்லது எடுத்துக் காட்டுப் பாடல்களை நினைப்பூட்டும் அப்பாடல்களின் முதற் குறிப்புச் செய்யுள்; mnemonic formed of initial syllables of stanzas of a poem or work. *"பாட்டின் முதனினைப் பாகுமன்றே" (காரிகை, ஒழிபி. ஈற்றுச் செய்யுள்).*

*[முதல் + நினைப்பு.]*

**முதனூல்** *mudanūl,* பெ.(n.) 1. நூல் வகை மூன்றனுள் பிற நூலைப் பின்பற்றாது தானே விளங்கியவழி இயற்றப்பட்டது (தொல். பொருள்.649); original or primary work regarded as divine, one of three kinds of *nūl.* 2. வழிநூலுக்கு மூலமாகவுள்ள நூல் (நன்.7, விருத்.); source of a *vaḻi-nūl.*

*[முதல் + நூல்.]*

புலமை சான்ற ஆசிரியன் ஒருவன் ஒரு துறையில் முதன் முதலாகப் படைக்கும் நூல்.

நூல் வகை மூன்று : 1. முதன்நூல், 2. வழி நூல், 3. சார்பு நூல்.

நமது இலக்கண நூல்கள், நூல் என்ற சொல்லால் பொதுவாக இலக்கணங்களையே சுட்டுகின்றன. வினையின் நீங்கி விளங்கிய அறிவினை உடைய முனைவனால் படைக்கப்பட்டது முதனூல். இதனைத் தொடர்ந்து எழுந்த நூல் வழி நூல்.

**முதார்மாடு** *mudār-māḍu,* பெ.(n.) பால் மறுக்கு நிலையிலுள்ள ஆன் (மாடு) (இ.வ.); milk cow almost dry.

*[முது→ முதார்→முதார்மாடு = பால் முற்றிய ஆன்.]*

**முதாரி[1]** *mudāri,* பெ.(n.) 1. முதுமை; being old or ancient. *"முதாரிப் பாண" (புறநா.138).* 2. பால் மறக்குங் கன்று (வின்.); calf almost weaned. 3. முதார்மாடு பார்க்க; see

*mudār-māḍu.* 4. முற்றியது; that which is ripe. *'முதாரிக் காய்' (சிலப்.16 : 24,* அரும்).

*[முது + ஆரி. ஆர் →ஆரி.]*

முதாரி² *mudāri,* பெ.(n.) முன்கை வளையல்; bracelet. *"முன்கை முதாரியு மொளிகால" (முத்துக்.பிள்.17).*

*[முது→முதார்→முதாரி.]*

முதாரு *mudāru,* பெ.(n.) 1. பால் மறக்குங் கன்று (வின்.); calf almost weaned. 2. பால் மறுக்கு நிலையிலுள்ள ஆன் (பசு); milk cow, almost dry.

*[முதாரி →முதாரு.]*

முதாருப்பால் *mudāruppāl,* பெ.(n.) கறப்பதற்கு மறுக்கு நிலையிலுள்ள ஆவின் பால் (வின்.); milk of a cow that is almost dry.

*[முதாரு + பால்.]*

முதிகம் *mudigam,* பெ.(n.) வேம்பு; margosa tree.

முதிசம் *mudišam,* பெ.(n.) மூதாதையர் சொத்து (யாழ்ப்.); ancestral property.

*[முதுசொம் → முதிசம்.]*

முதிசல் *mudišal,* பெ.(n.) அரத்தை; galangal.

முதிதபாவனை *mudida-pāvaṉai,* பெ.(n.) தணியாத சினத்தை (செற்றம்) நீக்கும் பொருட்டு புத்தமதத்தைச் சார்ந்தவர்களால் செய்யப்படும் ஊழ்கம் (மணிமே.30:256); a set mode of meditation practised by Buddhist asectics to free themselves from anger.

முதிதம் *mudidam,* பெ.(n.) முதம் (சங்.அக.) பார்க்க; see *mudam.*

முதிதை *mudidai,* பெ.(n.) 1. மகிழ்ச்சி; joy, delight, happiness. *"அறிவருண் முதிதை" (ஞானவா.வீதக.62).* 2. மனத்தூய்மை (பரிபா.4:1, உரை); a virture which cleanses the mind, one of four citta-parikarmam. 3. செற்றத்தை நீக்கும் பொருட்டுப் புத்தர்களாற் செய்யப்படும் ஊழ்கம்; a set of meditation practised by Buddhist ascetics to free themselves from anger. *"மைத்திரி கருணா முதிதை" (மணிமே.30 : 256).*

முதியகுழல் *mudiya-kuḻal,* பெ.(n.) குதிரைவாலிப் புல் (தைலவ.தைல.76); a species of grass.

முதியம் *mudiyam,* பெ.(n.) நாய்வேளை (மலை.); a sticky plant that grows best in sandy places.

முதியவன் *mudiyavaṉ,* பெ.(n.) 1. மூத்தோன்; elder, senior. *"மக்களுள் முதியவன்" (கலித்.25).* 2. அகவை முதிர்ந்தவன்; aged man. 3. நான்முகன்; Brahma. *"தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக" (கலித்.2).*

க. முதுக

*[முது → முதியவன்.]*

முதியன் *mudiyaṉ,* பெ.(n.) முதியவன் பார்க்க; see *mudiyavaṉ. "இளையரு முதியருங் கிளையுடன் றுவன்றி" (அகநா.30), "செல்வுழி யெழாஅ நல்லேர் முதிய" (புறநா.389:12).*

*[முது → முதியன்.]*

முதியாக்கிழங்கு *mudiyā-k-kiḻaṅgu,* பெ. (n.) மஞ்சட்கிழங்கு; turmeric.

முதியார்குழல் *mudiyār-kuḻal,* பெ. (n.) முதியார்கூந்தல் பார்க்க; see *mudiyār-kūndal.*

*[முதியார் + குழல்.]*

முதியார்கூந்தல் *mudiyār-kūndal,* பெ. (n.) கொடியார் கூந்தலென்னும் பூண்டு (சங். அக.); a kind of plant called *koḍiyārkūndal.*

*[முதியார் + கூந்தல்.]*

முதியாரிகம் *mudiyārigam,* பெ. (n.) மஞ்சள்; turmeric.

முதியாள் *mudiyāḷ,* பெ. (n.) 1. மூத்தவள்; elderly woman. 2. தேவராட்டி; woman possessed by a spirit. *"தெய்வ நிகழ் குறமுதியாள் சென்ற பின்பு" (பெரியபு. கண்ணப்ப.52).*

க. முதுகி.

*[முது → முதியாள்.]*

முதியான் *mudiyāṉ,* பெ. (n.) 1. முதியவன் பார்க்க; see *mudiyavaṉ.* 2. பறவை வகை (சங்.அக.); a bird. 3. முதுகன்று (யாழ்.அக.); full grown calf.

முதியோர் *mudiyōr,* பெ. (n.) அறிஞர்; persons of ripe wisdom.

*[முது–மை →முதியோர்.]*

முதியோர்கல்வி *mudiyōr-kalvi,* பெ. (n.) அகவை முதிர்ந்தோர்க்கு அளிக்கப்படும் கல்வி; adult education. *தமிழகத்தில் முதியோர் கல்வி வளர்ச்சி யடைந்துள்ளது.*

*[முதுயோர் + கல்வி.]*

முதியோள் *mudiyōḷ,* பெ. (n.) 1. கிழப் பருவமடைந்தவள்; old woman. 2. பெண் தெய்வம்; Goddess. *"முதியோள் கோட்டம்" (மணிமே.17:88), "முளரி மருங்கின் முதியோள் சிறுவன்" (புறநா.278:2).*

*[முது →முதியோள்.]*

முதிர்[1]–தல் *mudir-,* 2 செ.கு.வி. (v.i.) 1. மரம், காய் முதலியவை இளமைத் தன்மை நீங்கி முற்றுதல்; to grow old, to have the qualities of age. *முதிர்ந்த மரங்களை வெட்டுவார். "முதிராக் கிளவியள்" (மணிமே. 22:181).* 2. பதமாதல், கருநிரம்புதல்; to become mature, to grow ripe. *"கொண்மூ.... சூன் முதிர்பு" (புறநா.161).* 3. நிறைதல்; to excel, surpass, to become satiated, to be saturalted. *"உறைமுதிரா நீரால்" (திணைமாலை.103).* 4. முற்படுதல்; to procede. *"முதிர்வினை" (சிலப்.பதி).* 5. ஒழிதல்; to end, cease. *"கதிரொழி காறும் கடவுட் டன்மை முதிராது" (சிலப்.30:66).* 6. உலர்தல்; to become dry.

தெ. முதுரு; க. முது; L. maturar; F. maturer; M.E. maturus (ripe); E. mature (வே.க. முல்[2]).

*[முது →முதிர் →முதிர்–தல் (சு.வி.).]*

முதிர்[2]–தல் *mudir-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. சூழ்தல்; encompass, surround. *"தீவினை முதிர்வலை" (சிலப்.16:156).* 2. அகவை நிரம்புதல்; old; advance-in years. *அவர் வயதிலும் அறிவிலும் முதிர்ந்தவர் என்றே நினைக்கிறேன்.*

*[முது →முதிர் →முதிர்–தல் (சு.வி.).]*

முதிர்காடு *mudir-kāḍu,* பெ. (n.) பழங்காடு (சூடா.); wild jungle, ancient forest.

*[முதிர் + காடு.]*

முதிர்காய் *mudiṟ-kāy,* பெ.(n.) கனி; riped fruit.

*[முதிர் + காய்.]*

முதிர்காற்று *mudiṟ-kāṟṟu,* பெ.(n.) கடுங் காற்று (வின்.); gale, strong wind.

*[முதிர் + காற்று.]*

முதிர்ச்சி *mudircci,* பெ.(n.) 1. பழுத்த பருவம்; maturity, ripened condition. 2. அகவை முதுமை; great age, old age. 3. முதுக்குறைவு (திவா.); excellence in learning or experience. 4. செருக்கு (யாழ்ப்.); arrogance.

*[முதிர் → முதிர்ச்சி.]*

முதிர்ச்சிக்காரன் *mudircci-k-kāraṉ,* பெ. (n.) செருக்குள்ளவன் (வின்.); arrogant man.

*[முதிர்ச்சி + காரன்.]*

முதிர்ந்தகுறிஞ்சி *mudirnda-kuṟiñji,* பெ. (n.) பண்வகை (திவ்.திருவாய்.1:1 தலைப்பு); a melody type of the *Kuṟiñji* class.

*[முதிர்→(முதிர்ந்த) + குறிஞ்சி.]*

முதிர்ந்தநீர் *mudirnda-nīr,* பெ.(n.) சிறுநீர் (அமுரி); urine (சா.அக.).

முதிர்ந்தவிந்தளம் *mudirnda-v-indaḷam,* பெ.(n.) குறிஞ்சியாழ்த்திறவகை (பிங்.); a secondary melody type of the *kuṟiñji* class.

*[முதிர்ந்த + விந்தளம்.]*

முதிர்ந்தோர்கல்வி *mudirndōr-kalvi,* பெ.(n.) முதியோர்கல்வி பார்க்க; see *mudiyōr-kalvi.*

*[முதிர்ந்தோர் + கல்வி.]*

முதிர்ப்பு *mudirppu,* பெ.(n.) 1. மனக் கலக்கம் (திவா.); perturbation. *"சினைப் பசும்பாம்பின் சூன் முதிர்ப் பன்ன" (குறுந். 35:2).* 2. முதிர்ச்சி, 1, 2 (யாழ்.அக.) பார்க்க; see *mudircci,* 1, 2.

*[முதிர் → முதிர்ப்பு.]*

முதிர்பாகு *mudir-pāgu,* பெ.(n.) முதிர்ந்த வெல்லப்பாகு; over heated jaggery syrup.

*[முதிர் + பாகு.]*

முதிர்பிறை *mudir-piṟai,* பெ.(n.) காருவாவிற்குப் பின்வரும் நான்காம் நாள் முதல் எண்ணாள் வரையான வளர்பிறைத் திங்கள் (வின்.); the second quarter of the waxing moon.

*[முதிர் + பிறை.]*

முதிர்பு *mudirbu,* பெ.(n.) முதிர்வு (சங்.அக.) பார்க்க; see *mudirvu.*

ம. முதிர்ப்பு

*[முதிர் → முதிர்பு.]*

முதிர்வு *mudirvu,* பெ.(n.) 1. முதிர்ச்சி 1, 2 பார்க்க; see *mudircci* 1, 2. *"கைக்கொண்டு முற்றிய முதிர்வும்" (தொல்.பொருள்.68). "பெருங்களிற்று மருப்பின் அன்ன வரும்பு முதிர்பு" (நற்.19:3). "பெருமலை யன்ன தோன்றல சூன்முதிர் புருமுரறு கருவியொடு பெயல்கட னிறுத்து" (புறநா.161:3, 4).* 2. மிகுதி; excess, plenty. *"மான்மத முதிர்வுறக் கமழ்வன" (கம்பரா.நகரப். 60).* 3. சேமிப்புத் தொகை குறிப்பிட்டக் காலத்திற்குப் பின் அடையும் அதிக அளவு; date of maturity of a deposite. *ஐந்து ஆண்டுகளக்குப் பிறகு இந்தத் தொகை இருமடங்காக முதிர்வு அடையும்.*

*[முதிர் →முதிர்வு.]*

**முதிர்மரம்** *mudir-maram,* பெ.(n.) பட்டை யுரிக்கக் கூடிய மரம்; tree aged enough to peal off the bark.

*[முதிர் + மரம்.]*

**முதிர்வாதக்கட்டு** *mudir-vāda-k-kaṭṭu,* பெ.(n.) உடம்பில் ஓர் இடத்தில் நில்லாது ஓடிக்கொண்டிருந்து ஆங்காங்கு வீக்கத்தை ஏற்படுத்தும் நோய்; swelling that traverses the whole body.

*[முதிர் + **Skt.** வாதம் + கட்டு.]*

**முதிர்வேனில்** *mudir-vēṉil,* பெ.(n.) முதுவேனில் (சங்.அக.) பார்க்க; see *mudu-vēṉil.*

*[முதிர் + வேனில்.]*

**முதிரம்**[1] *mudiram,* பெ.(n.) முகில் (பிங்.); cloud.

**முதிரம்**[2] *mudiram,* பெ.(n.) குமணனுக்குரிய மலை; a mountain belonging to the ancient chief *kumaṇaṉ.* *"நல்லிசைக் குமணன்..... முதிரத்தோனே" (புறநா.160:13).*

**முதிரன்** *mudiraṉ,* பெ.(n.) 1. தாந்தோன்றி (யாழ்.அக.); libertine. 2. போக்கிலி (வின்.); vile or wicked person.

**முதிராச்செவ்வந்தி** *mudirā-c-ce-v-vandi,* பெ.(n.) மஞ்சள் செவ்வந்தி; yellow chryanthum.

**முதிராப்பிண்டம்** *mudirā-p-piṇḍam,* பெ.(n.) முற்றாத கரு (வின்.); embryo.

*[முதிர் + ஆ + பிண்டம்.]*

**முதிரி** *mudiri,* பெ.(n.) அவரை வகை; dolichos lab.

**முதிரிமை** *mudirimai,* பெ.(n.) முதுமை (யாழ்.அக.) பார்க்க; see *mudumai.*

*[முதிர் →முதிரி →முதிரிமை.]*

**முதிரை** *mudirai,* பெ.(n.) 1. அவரை, துவரை முதலிய பயறுகள்; pulse or other leguminous plant. *"முதிரை வாலுான் வல்சி மழவர்" (பதிற்றுப்.55:7).* 2. துவரம் பருப்பு; pigeon - pea, dholl. *"முதிரையின் முழுத்த நெய்யில்" (கம்பரா.நாட்டுப். 19).* 3. மரவகை (வின்.); East Indian satin-wood, chloroxylon swietenia.

*[முதிர் →முதிரை.]*

**முதிரைப்பில்லை** *mudirai-p-pillai,* பெ.(n.) கண்ணுக்குள் வரும் நோய்; a chronic eye diseases (சா.அக.).

**முதிரைமண்டம்** *mudirai-maṇḍam,* பெ.(n.) பல்லி; lizard (சா.அக.).

**முதினி** *mudiṉi,* பெ.(n.) ஒட்டை மரம்; a tree (சா.அக.).

**முது** *mudu,* பெ.(n.) 1. பேரறிவு; vast knowledge. *"முதுவா யிரவல" (சிறுபாண். 40). "முருக யர்ந்து வந்த முதுவாய் வேல சினவ லோம்பு மதி" (குறுந்.362:1).* 2. முதுமை; oldness.

*[முதல்→முது (சு.வி.).]*

இளமையில் அறிவின்மையும் முதுமையில் அறிவுண்மையும், பட்டறிவின்மை யுண்மையால் ஏற்படும் இயற்கை நிலைமை யென்பதை மடம், முது என்னுஞ் சொற்கள் உணர்த்தும்.

**முதுக்கங்காய்** *mudukkaṅkāy,* பெ.(n.) தும்மட்டிக்காய் (இ.வ.); country cucumber.

**முதுக்கள்** *mudukkaḷ,* பெ.(n.) முன்னோர்; ancestors. *"எங்கள் முதுக்கள் ஒற்றி வைக்கையில்" (புதுக்.கல்.317).*

*[முதல்→முது→முதுக்கள்.]*

**முதுக்கு** *mudukku,* பெ.(n.) 1. அறிவு; knowledge. 2. தெருட்சி; wisdom. 3. பேரறிவு; great wisdom.

*[முது→முதுக்கு.]*

**முதுக்குடி** *mudukkuḍi,* பெ.(n.) முதுகுடி பார்க்க; see *mudukuḍi. "முரசு கடிப்பிகூஉ முதுக்குடிப் பிறந்தோன்" (மணிமே.1:31).*

*[முது–மை + குடி.]*

**முதுக்குறை[1]–தல்** *mudukkuṟai-,* 2 செ.கு.வி. (v.i.) அறிவு மிகுதல்; to become ripe in wisdom. *"முகத்தின் முதுக்குறைந்த துண்டோ" (குறள், 707). "முதுக்குறைக் குரீஇ முயன்றுசெய் குடம்பை" (நற்.366:9).*

*[முது→முதுக்கு + உறை – முதுக்குறை →முதுக்குறை–தல் (சு.வி.).]*

**முதுக்குறை[2]** *mudukkuṟai-,* பெ.(n.) முதுக்குறைவு பார்க்க; see *mudu-k-kuṟaivu. "முதுக்குறை நங்கை" (சிலப். 15:202).*

*[முது→முதுக்கு + உறை. உறைதல் = தங்குதல்.]*

**முதுக்குறைமை** *mudukkuṟaimai,* பெ.(n.) முதுக்குறைவு பார்க்க; see *mudu-k-kuṟaivu. "போற்றாய்களை நின் முதுக்குறைமை" (கலித்.62). "கழிமுதுக் குறைமையும் பழியுமென் றிசினே" (குறுந். 217:7).*

*[முது→ முதுக்கு + உறைமை.]*

**முதுக்குறைவி** *mudukkuṟaivi,* பெ.(n.) பேரறிவுள்ளவள்; wise woman. *"சிறுமுதுக் குறைவி..... சேயிழைக் காற்றி" (பெருங். மகத.22:68). "சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி" (அகநா.17:9).*

*[முதுக்குறை →முதுக்குறைவி.]*

**முதுக்குறைவு[1]** *mudukkuṟaivu,* பெ.(n.) 1. பேரறிவு (பிங்.); great wisdom. *"ஏதிலார் யாதும் புகல விறைமகள் கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு" (குமர.பிர. நீதிநெறி.33).* 2. மகளிர் பருவமடைதல் (வின்.); pubescence of girls.

*[முதுக்குறை →முதுக்குறைவு.]*

**முதுக்குறைவு[2]** *mudukkuṟaivu,* பெ.(n.) பேதைமை (சூடா.); innocence.

*[முது + குறைவு.]*

**முதுகண்[1]** *mudu-kaṇ,* பெ.(n.) 1. முதன்மைப் பற்றுக்கோடு; chief support. *"முற்றிழை மகளிர்க்கு முதுக ணாமென" (பெருங். உஞ்சைக்.36:198).* 2. பேரறிவுரைஞன்; wiseman.

*[முந்து→முது→ முதுகண் (வே.க.)..]*

**முதுகண்[2]** *mudu-kaṇ,* பெ.(n.) காப்பாளர்; guardian. *"சுந்தரபட்டனையே முதுகண்ணாக வுடைய" (தெ.இ.கல்.தொ: 5:272).*

*[முது + கண்.]*

**முதுகண்[3]** *mudu-kaṇ,* பெ.(n.) வழியுரிமை (வாரிசு); property rights of the legal heridity. *"ஸ்ரீ மூலத்தான முடையார்க்கு நொட்டூர், திரு வாண்டாள் சாநியேன், எந் மகந் தாமோதிரப்பட்ட நாந வீரகத்திரபிள்ளையை முதுகண்ணாக*

*கொண்டு - தண்ணீர்ப்பட்டி ஒரு மாவரையும், தலைப்பாடகம் அரைமாவும் களர் ஒரு மாவரையும் கீழைத் தெருவில் மனை அமையும் தேவர்க்கு தேவதாநமாகக் குடுத்தேன்" (தெ.இ.கல்.தொ.12, கல்.184).*

முதுகயம் *mudu-kayam*, பெ.(n.) கடல்; sea. *"முதுகயந் தீப்பட" (திவ்.பெரியதி.8. 5:6).*

முதுகலை *mudukalai*, பெ.(n.) பல்கலைக் கழகத்தில் இளங்கலைப் பட்டம் பெற்றவர்கள் படிக்கும் மேல் பட்டப் படிப்பு; master of arts, course leading to the degree of master of arts.

*[முது + கலை.]*

முதுகன்றிருமல் *mudu-kanrirumal*, பெ. (n.) கன்றுகட்கு வரும் நோய் வகை (M.L.); hoose, a disease incident to cattle, especially calves.

*[முது + கன்று + இருமல்.]*

முதுகன்று *mudu-kanru*, பெ.(n.) பால்குடி மறந்த கன்று (வின்.); weaned calf.

*[முது + கன்று.]*

முதுகாஞ்சி *mudu-kañji*, பெ.(n.) 1. அறிவின் மிக்க மூத்தோர் அறிவில்லாத இளையோர்க்கு இளமை நிலையாமை முதலியவற்றை எடுத்து மொழியும் புறத்துறை (தொல்.பொருள்.79, உரை); theme of admonition and instruction by men of ripe wisdom to inexperienced youths. 2. முதுகாஞ்சித் துறை பற்றிய சிற்றிலக்கிய வகை (சது.); a poem on the *mudukāñji* theme.

*[முது + காஞ்சி.]*

முதுகாட்டுத்தரிசு *mudu-kāṭṭu-t-tarišu*, பெ.(n.) 1. பதினைந்து ஆண்டுக்கு மேலாக சாகுபடி செய்யப்படாத நிலம் (வின்.); land left waste for over 15 years. 2. சுடுகாட்டுக்காக விடப்பட்ட நிலம் (இ.வ.); waste land used as a burial or cremation ground.

*[முதுகாடு + தரிசு.]*

முதுகாடு *mudu-kāḍu*, பெ.(n.) 1. முதையல் பார்க்க (திவா.); see *mutaiyal*. 2. சுடுகாடு (திவா.); cremation or burial ground. *"முதுகாட்டிடை.... நடமாடி" (தேவா.773, 1). "அஞ்சுவந் தன்றிம் மஞ்சுபடு முதுகாடு" (புறநா.356:4).*

*[முது + காடு.]*

முதுகால்[1] *mudu-kāl*, பெ.(n.) ஓராண்டுக்கு மேற்பட்ட வெற்றிலைக் கொடிகளையுடைய தோட்டம் (யாழ்.அக.); garden of betel vines more than a year old.

*[முது + கால்.]*

முதுகால்[2] *mudu-kāl*, பெ.(n.) வெற்றிலைக் கொடியின் நடுவிலுள்ள இலை (மதி.க.ii.55); leaves at the middle of the betel wine.

*[முது + கால்.]*

முதுகால்வெற்றிலை *mudu-kāl-verrilai*, பெ.(n.) முதிர்ந்த கொடியி னின்று பறித்த வெற்றிலை (C.G.); betel leaf plucked from a full-grown creeper.

*[முதுகால் + வெற்றிலை.]*

முதுகிடு-தல் *mudugiḍu-*, 20 செ.கு.வி.(v.i.) புறங்காட்டுதல்; to be defeated and flee. *"முகில் வண்ணன் றனக்கஞ்சி முதுகிட்டோடி" (கம்பரா.உத்தர. இராவணன். பிறப்.39).*

*[முதுகு + இடு-தல்.]*

**முதுகில்குத்து-தல்** *mudugil-kuttu,* 5 செ.கு.வி.(v.i.) இனிமை காட்டி ஏய்த்தல்; stab some one in the back. *முதுகில் குத்துதல் மற வேந்தர்க்கு அழகல்ல.*

*[முதுகு →முதுகில் + குத்து-தல்.]*

**முதுகு**[1] *mudugu,* பெ.(n.) 1. மனித உடலில் பின் கழுத்தில் இருந்து இடுப்புவரை உள்ள பக்கம், விலங்கின் உடலில் கழுத்திலிருந்து வால்வரை உள்ள மேல் பகுதி; back, the region of the spine. *"முதுகிற் றைத்த வாளிகள்" (கம்பரா. யுத்த.மந்திர.116.). அணிலின் முதுகில் மூன்று கோடுகள் உண்டு. "முதுகிலே புண் உண்டானால் செடியிலே நுழைய பயம்", "முதுகிலே புண் இருந்தால் குனியப் பயம்", "முதுகில் அடித்தால் ஆறும், வயிற்றில் அடித்தால் ஆறுமா?".* 2. நாற்காலி முதலியவற்றில் சாய்ந்து கொள்வதற்குரிய பகுதி; back portion; back, as of a chair. 3. முதுகு ஒடிந்த நாற்காலி, நடுவிடம்; middle place. *"தவள மாடத்தகன் முதுகு பற்றி" (கல்லா.19 : 22).* 4. வரப்பு மேடு; ridge, mound. *"மிடைந்து வயல் திரிந்து முதுகு சரிந்துடைந்து" (கல்லா.53:33).* 5. பொத்தகத்தின் பக்கங்கள் ஒன்று சேர்ந்து அமைந்திருக்கும் தட்டையான நீண்ட பக்கவாட்டுப் பகுதி; spine of a book.

ம. முதுகு.

**முதுகு**[2] *mudugu,* பெ.(n.) முருடு (வின்.); coarseness grossness.

தெ. முதுகு

**முதுகுகாட்டு-தல்** *mudugu-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) முதுகிடு-தல் பார்க்க; see *mudugiḍu-.*

*[முதுகு + காட்டு-தல்.]*

**முதுகுகாண்(ணு)-தல்** *mudugu-kāṇ-,* 16 செ.குன்றாவி.(v.t.) தோல்வியுறச் செய்தல்; to defeat. *"இந்திரன் முதுகுகண்ட விராவணற் கேயச் சொன்னான்" (கம்பரா. இலங்கை காண்.5).*

*[முதுகு + காண்(ணு)-தல்.]*

**முதுகுகொடு-த்தல்** *mudugu-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. முதுகிடு-தல் பார்க்க; see *mudugiḍu-. "போர்க்களத்தே சென்று முதுகு கொடாமல்" (பட்டினப்.பக்.538, உரை).* 2. துணை செய்தல் (வின்.); to help, assist. 3. குதிரை, யானை முதலியன தன்மேலேற இடங் கொடுத்தல் (இ.வ.); to allow one to mount, as a riding horse, etc. 4. விளையாட்டாகவும் தண்டனையாகவும் முதுகிற் பிறரைத் தூக்கிச் சுமத்தல் (இ.வ.); to carry a person on one's back, as a punishment or in a game.

*[முதுகு + கொடு-த்தல்.]*

**முதுகுச்சுண்ணாம்பு** *mudugu-c-cuṇṇāmbu,* பெ.(n.) மணல் மிகுதியாய்ச் சேர்த்த சுண்ணாம்பு (C.E.M.); coarse chunnam.

*[முதுகு + சுண்ணாம்பு.]*

**முதுகுடி** *mudu-kuḍi,* பெ.(n.) கற்றோன்றி மண்டோன்றாக் காலத்து வாளொடு முற்றோன்றிய மூத்த குலம்; ancient and respectable family as of warriors. *"முதுகுடி மகட் பாடஞ்சிய மகட் பாலானும்" (தொல். பொருள்.79).*

மறுவ. மூத்தகுடி.

*[முது + குடி.]*

**முதுகுத்தண்டு** *mudugu-t-taṇḍu,* பெ.(n.) தண்டுவடம்; spinal-cord. *ஒவ்வொருவருக்கும் முதுகுத் தண்டு நன்றாக இரு ந்தால் மட்டுமே அவர்களால் வலியில்லாமல் உட்கார, நடக்க, படுக்க முடியும்.*

*[முதுகு + தண்டு.]*



**முதுகுத்துணி** *mudugu-t-tuṇi,* பெ.(n.) முருட்டுச் சீலை (C.E.M.); coarse cloth.

*[முதுகு + துணி.]*

**முதுகுதாங்கி** *mudugu-tāṅgi,* பெ.(n.) சார்மணை (வின்.); support to lean back on, as in a planquin, in a chair or on a pial.

*[முதுகு + தாங்கி.]*

**முதுகுநீர்குத்தல்** *mudugu-nīr-kuttal,* பெ.(n.) முதுகுநீர்ச்சடங்கு பார்க்க; see *mudugu-nīr-c-caḍaṅgu.*

*[முதுகு + நீர் + குத்தல்.]*

**முதுகுநீர்ச்சடங்கு** *mudugu-nīr-c-caḍaṅgu,* பெ.(n.) முதுகில் நீரூற்றிச் செய்யுஞ் சீமந்தச் சடங்கு (வின்.); a purificatory ceremony of pouring water upon the back of a woman in her first pregnancy.

*[முதுகு + நீர் + சடங்கு.]*

**முதுகுநூல்** *mudugu-nūl,* பெ.(n.) முருட்டு நூல் (வின்.); coarse yarn.

*[முதுகு + நூல்.]*

**முதுகுநெளி-த்தல்** *mudugu-neḷi-,* 3 செ.கு.வி.(v.i.) வேலைக்குச் சோம்புதல் (உ.வ.); to shirk work; to be indolent.

*[முதுகு + நெளி-த்தல்.]*

**முதுகுப்பிடிப்பு** *mudugu-p-piḍippu,* பெ.(n.) முதுகில் வலியுண்டாக்கும் ஊதை (வாயு) நோய் வகை (M.L.); sprain of the back.

*[முதுகு + பிடிப்பு.]*

**முதுகுப்பிளவு** *mudugu-p-piḷavu,* பெ.(n.) முதுகுப்பிளவை (M.L.) பார்க்க; see *mudugu-p-piḷavai.*

*[முதுகு + பிளவு.]*

**முதுகுப்பிளவை** *mudugu-p-piḷavai,* பெ.(n.) முதுகிலுண்டாம் அரச பிளவை (வின்.); carbuncle appearing on one's back.

*[முதுகு + பிளவை.]*

**முதுகுமண்காட்டு-தல்** *mudugu-maṇ-kāṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மற்போரில் தோல்வியுறச் செய்தல் (இ.வ.); to defeat in wrestling.

மறுவ. புறமுதுகுக்காட்டுதல்

*[முதுகு + மண்காட்டு-தல்.]*

**முதுகுமண்கொடு-த்தல்** *mudugu-maṇ-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) மற்போரில் தோல்வியுறுதல் (இ.வ.); to be defeated in wrestling.

*[முதுகு + மண்கொடு-த்தல்.]*

முதுகுமுள் *mudugu-muḷ*, பெ.(n.) முதுகெலும்பு (வின்.) பார்க்க; see *mudugelumbu.*

*[முதுகு + முள்.]*

முதுகுமுள்ளணைதசை *mudugu-muḷ-ḷ-aṇai-tasai*, பெ.(n.) முதுகெலும்பினை யடுத்துள்ள தசை (வின்.); a muscle-*semispinalis dorsi.*

*[முதுகு + முள்ளணை + தசை.]*

முதுகுரவர் *mudu-kuravar*, பெ.(n.) தாய் தந்தையர்; parents. *"எம்முது குரவ ரென்னுற் றனர் கொல்" (சிலப்.16:60).*

*[முது + குரவர்.]*

முதுகுருகு *mudu-kurugu*, பெ.(n.) தலைக் கழகத்து இறந்துபட்ட நூல்களுள் ஒன்று (இறை.1, உரை, 4); an ancient poem of the first *Šaṅgam*-not now extant.

*[முது + குருகு.]*

முதுகுவாளை *mudugu-vāḷai*, பெ.(n.) முதுகில் உண்டாகும் ஒருவகைக் கழலை; deep abscess on the back.

*[முதுகு + வாளை.]*

முதுகுளத்தூர் *mudu-kuḷattūr*, பெ.(n.) இராமநாதபுரம் மாவட்டம், முதுகுளத்தூர் வட்டத்தில் அவ்வட்டத்தின் தலைநகராய் விளங்கும் ஊர்; a town in Ramnad district in *Mudukuḷattur* Taluk, 25 k.m. away from Paramakkudi.

*[முது + குளத்தூர்.]*

முதுகுன்றம் *mudu-kuṉṟam*, பெ.(n.) கடலூர் (தென்னார்க்காடு) மாவட்டத் திலுள்ள சிவ தலம்; a Siva shrine in the *Kaḍalūr.* *தற்போது விருத்தாசலம் என்று அழைக்கப்படுகிறது. திரு என்னும் அடைமொழி சேர்த்துத் திருமுதுகுன்றம் என்றும் அழைக்கப்படுகிறது. "முத்தாறு.... நித்திலம் வாரிக்கொழிக்கு முதுகுன்றமே" (தேவா.981, 1).*

*[முது + குன்றம்.]*

முதுகுன்று *mudu-kuṉṟu*, பெ.(n.) முதுகுன்றம் பார்க்க; see *mudu-kuṉṟam.* *"முத்தாறு வந்தடி வீழ்தரு முது குன்றடை வோமே" (தேவா.978:1).*

*[முது + குன்று.]*

முதுகூற்றனார் *mudu-kūṟṟaṉār*, பெ.(n.) கழகக்காலப் புலவர்; ancient *Šaṇgam* poet.

*[முது + கூற்றனார்.]*

முதுகெலும்பு *mudu-kelumbu*, பெ.(n.) முதுகின் நடுவில் அமைந்திருப்பதும் உடலைத் தாங்கிநிற்பதுமான, ஒன்றன் கீழ் ஒன்றாக, வரிசையாக முள் எலும்புகளால் ஆன நீண்ட உறுதியான எலும்புத் தண்டு; back bone, spine, vertebral column. *உழவர்கள் தான் நாட்டின் முதுகெலும்புகள்.*

மறுவ. தண்டெலும்பு, முள்ளந்தண்டு, வீணாத்தண்டு தண்டுவடம்.

*[முதுகு + எலும்பு.]*

முதுசம் *mudušam*, பெ.(n.) மரபு வழியாக வரும் சொத்து; inherited property. *இது எனக்கு முதுசமாகக் கிடைத்த வீடு.*

*[முதுசொம் → முதுசம்.]*

**முதுசாயம்** *mudu-šayam,* பெ.(n.) அழுத்தமான சாயம் (வின்.); deep dye.

*[முது + சாயம்.]*

**முதுசார்வு** *mudu-šārvu,* பெ.(n.) இளஞ் சார்வையடுத்திருக்கும் பனையோலை (யாழ்ப்.); palmyra or talipot leaves next to *ilañ-jārvu.*

*[முது + சார்வு.]*

**முதுசூரியர்** *mudu-šūriyar,* பெ.(n.) இரட்டைப் புலவருள் ஒருவர் (தமிழ்நா.113, தலைக்குறிப்பு); one of the two poets known as *iraṭṭai-p-pulavar.*

*[முது + சூரியர்.]*

**முதுசொம்** *mudu-šom,* பெ.(n.) முதுபொருள் பார்க்க; see *mudu-poruḷ.*

*[முது + சொம்.]*

**முதுசொல்** *mudu-šol,* பெ.(n.) முதுமொழி, 1 பார்க்க; see *mudumoḻi, 1.* *"தம்பானை சாய்ப்பற்றா ரென்னு முது சொல்லும்" (திருவிசை.வேணாட்.2) (திவா.). "முது நெல்லிக்கனியும், மூத்தோர் சொல்லும் முன்னே கசக்கும் பின்னே இனிக்கும்" (பழ.).*

*[முது + சொல்.]*

**முதுதரிசு** *mudu-tarišu,* பெ.(n.) முதுகாட்டுத் தரிசு, 2 பார்க்க; see *mudukāṭṭu-t-tarišu,* 2.

*[முது + தரிசு.]*

**முதுதலை** *mudu-talai,* பெ.(n.) மரத்தின் முற்றிய அடிப்பாகம்; lower end of the trunk or stem of a tree, as hardened by growth. *"மரமிசைக்கும்போது முதுதலை கீழாகவும் இளந்தலை மேலாகவும்" (சர்வா.சிற்.68).*

*[முது + தலை.]*

**முதுதவம்** *mudu-tavam,* பெ.(n.) முற் பிறப்பிலோ இப்பிறப்பில் முன்போ செய்த தவம் (வின்.); penance performed in previous birth or long ago in this birth.

*[முது + தவம்.]*

**முதுதறை** *mudu-daṟai,* பெ.(n.) பாழ்நிலம்; barren ground. *"நீர்நிலமும் முதுதறையும்" (புதுக்.கல்.361. பக்.233).*

*[முது + தறை.]*

**முதுநாரை** *mudu-nārai,* பெ.(n.) தலைக் கழகத்து (தலைச் சங்கத்து) இறந்துபட்ட நூல்களுள் ஒன்று (இறை.1, உரை.4); an ancient poem of the first Šaṅgam, not now extant.

*[முது + நாரை.]*

**முதுநிலம்** *mudu-nilam,* பெ.(n.) 1. களர் நிலம்; brackish ground. 2. பெரும் பாழ் நிலம் (வின்.); large extent of barren ground. 3. பாலை (யாழ்.அக.); desert tract. 4. இயற்கை மாறாமல் காடும் மேடுமாக உள்ள நிலம்; waste land, uncultivated land.

*[முது + நிலம்.]*

**முதுநிலை** *mudu-nilai,* பெ.(n.) 1. பல நிலைகளைக் கொண்ட பதவி வரிசையில் உயர்நிலை; senior grade. *முதுநிலை மேலாளர். முதுநிலைப் பொறியாளர்.* 2. பள்ளிகளில் முதுகலைப் பட்டம் பெற்று அடைந்திருக்கும் தகுதி; post graduate

grade. *மேனிலைப் பள்ளி முதுநிலை ஆசிரியர்.*

*[முது + நிலை.]*

முதுநீர் *mudu-nīr,* பெ.(n.) முன்னீர் பார்க்க; see *munnīr. "சுடர்படு முது நீரில்" (திவ். பெரியதி.8. 5:5). "முதுநீர் முன்றுறை முசிறி முற்றி" (அகநா.57:15).*

*[முது + நீர்.]*

முதுநீர்மலையாளர் *mudu-nīr-malaiy āḷar,* பெ.(n.) மலையில் வாழும் ஒருவகைப் பழங்குடி இனத்தார்; a sect of hill-men.

*[முதுநீர் + மலையாளர்.]*

முதுப்போக்கன் *mudu-p-pōkkan,* பெ.(n.) மடைத்தொழிலாளர்; cook person skilled in culinary.

முதுபயிர் *mudu-payir,* பெ.(n.) 1. முற்றிய பயிர் (வின்.); full - grown crop. 2. கனி தரக்கூடிய மரம் (வின்.); tree full-grown and ready to bear fruit. 3. முதுகால் பார்க்க; see *mudu-kāl.*

*[முது + பயிர்.]*

முதுபாலை *mudu-pālai,* பெ.(n.) கணவனை இழந்த தலைவி மூங்கில் ஓங்கி வளர்ந்த காட்டில் தனி நின்று புலம்புவதைக் கூறும் புறத்துறை; theme of a lonely woman bewailing the loss of her husband in a desert. *"நனிமிக சுரத்திடைக் கணவனை யிழந்து தனிமகள் புலம்பிய முதுபா லையும்" (தொல்.பொருள்.79).*

*[முது + பாலை.]*

முதுபாழ் *mudu-pāḻ,* பெ.(n.) முதுநிலம் பார்க்க; see *mudu-nilam. "முதுபாழ் பெயல்பெய்தன்ன" (புறநா.381).*

*[முது + பாழ்.]*

முதுபுண் *mudu-puṇ,* பெ.(n.) நெடு நாட்களாக குணமாகாதப் புண்; festering sore. *"மெய்ப்படு முதுபுண் டீர்ப்பான்" (சீவக.2881).*

*[முது + புண்.]*

முதுபெண்டு *mudu-peṇḍu,* பெ.(n.) 1. மகளிரின் எழுவகைப் பருவங்களுள் 32 முதல் 40 அகவை வரையுள்ள பேரிளம் பெண்; woman between the ages of 32 and 40. 2. மாதவிடாய் நீங்கிய பெண்; woman past menstruation. 3. அகவை முதிர்ந்தவள்; old woman.

*[முது + பெண்டு.]*

எழுவகைப் பருவம் : 1. பேதை, 2. பெதும்பை, 3. மங்கை, 4. மடந்தை, 5. அரிவை, 6. தெரிவை, 7. பேரிளம் பெண்.

முதுபொருள் *mudu-poruḷ,* பெ.(n.) முன்னோர் தேட்டு (மூதாதையர் சொத்து); ancestral property. *"ஒரு முதலாகி முதுபொருளாயிருந்த தனங்களும்" (பட்டினத். உடற்கூற்றுவ.11).*

*[முது + பொருள்.]*

முதுபோத்து *mudu-pōttu,* பெ.(n.) முதிய ஆண் ஓணான் (ஓந்தி); old blood - sucker - calotes verisicotor. *"வேதின வெரிநின் ஓதிமுது போத்து" (குறுந்.140:1).*

*[முது+போத்து. போத்து = ஓணான்.]*

முதுமக்கட்சாடி *mudumakkaṭ-šāḍi,* பெ. (n.) முதுமக்கட்டாழி பார்க்க; see *mudu makkaṭ-ṭāḻi. "முதுமக்கட் சாடி வகுத்த தராபதியும்" (விக்கிரம.உலா), (தக்கயாகப். 376, உரை).*

*[முதுமக்கள் + சாடி.]*

**முதுமக்கட்டாழி** *mudu-makkaṭṭāḻi,* பெ.(n.) 1. முற்காலத்தில் இறந்த வீரர் உடல்களை அடக்கம் செய்யப் பயன்படுத்திய மட்பாண்டம் (புறநா.256, உரை); a large earthen jar where in corpses of warriors were interred in ancient times. 2. ஆசீவக முனிவர் புக்கிருந்து நோற்கும் பெருந்தாழி வகை; a large pot into which *Aśivaga* ascetics enter for performing penance. 3. மிகவும் அகவை முதிர்ந்தவர்களை வைத்துப் பாதுகாக்குஞ் சாடி வகை; a large earthen jar in which persons were kept and looked after in their extreme old age.

*[முதுமக்கள் + தாழி.]*

**முதுமக்கள்** *mudu-makkaḷ,* பெ.(n.) அகவை முதிர்ந்தோர்; elders, aged persons. *"நரை முதுமக்க ளுவப்ப" (பழ.).*

*[முது + மக்கள்.]*

**முதுமகள்** *mudu-magaḷ,* பெ.(n.) முது பெண்டு பார்க்க; see *mudu-peṇḍu. "பார்ப்பன முதுமகள்" (பெருங்.இலாவாண. 3:30).*

*[முது + மகள்.]*

**முதுமகன்** *mudu-magaṉ,* பெ.(n.) 1. அகவை முதிர்ந்தவன்; man of advanced years. *"முந்து புள்ளுரைத்த முதுமகன்" (பெருங். உஞ்சைக் 56:234).* 2. முப்பதுக்கு மேற்பட்ட அகவையுடையவன் (பன்னிருபா. 232); man past the age of thirty. 3. காரி (சனி.) (பிங்.); the planet Saturn. *"முதுமகனு நீளரவு மொன்பா னிற்கில்" (சினேந்.272).*

*[முதுமை + மகன்.]*

**முதுமரம்** *mudu-maram,* பெ.(n.) ஆலமரம்; banyan. *"பறவை..... பகலுறை முதுமரம்" (குறுந். 352).*

*[முது + மரம்.]*

**முதுமாணி** *mudu-māṇi,* பெ.(n.) கல்லூரிப் பட்டப் படிப்பில் முதுகலை; post graduate.

மறுவ. முதுகலை, முதுநிலை.

*[முது + மாணி.]*

**முதுமுறை** *mudu-muṟai,* பெ.(n.) மூத்த முறைமை; seniority in age. *"முதல்வற்கு முதுமுறைப் பாலன்ன மேனியான்" (கலித்.124).*

*[முது + முறை.]*

**முதுமூப்பு** *mudu-mūppu,* பெ.(n.) மிக முதிர்ந்த அகவை; ripe old age. *"முதுமூப்பாய மக்களை" (திருவிளை. எல்லாம்வல்ல.9).*

*[முது + மூப்பு.]*

**முதுமை** *mudumai,* பெ.(n.) 1. பழமை (பிங்.); antiquity, oldness. 2. அகவை முதிர்ந்து உடல் பலமும் தோற்றக் கவர்ச்சியும் இழந்த கூட்டம், மூப்பு; old age. *"இளமை நாணி முதுமை யெய்தி" (மணிமே.4 : 107), "முதுமை யெள்ளலஃதமைகுந் தில்ல" (அகநா.6:15), "முதியை என்போர்க்கு முதுமை தோன்றலும்" (பரிபா.2:23).* 3. முதுமொழி, 1 (சூடா.) பார்க்க; see *mudu-moḻi, 1.* 4. முற்றின நிலை (பிங்.); maturity. 5. முதுகாஞ்சி பார்க்க; see *mudu-kāñji. "கழிந்தோ ரொழிந் தோர்க்குக் காட்டிய முதுமையும்" (தொல்.பொருள்.79).*

தெ. முதிமி; ம. முதும.

*[மூ → முதுமை.]*

முதுமொழி *mudu-moḻi,* பெ.(n.) 1. பழமொழி (தொல்.பொருள்.489); proverb, old saying. 2. பெரியோர் வாக்கு, அறிவுரை; words of wisdomaxiom. *"முதுமொழி கூற முதல்வன் கேட்டு" (மணிமே.25:119).* 3. சான்றோர் செய்யுள்கள்; poems of ancient poets. *"செவி செறுவாக முதுமொழி நீரா" (கலித்.68).* 4. மறைநூல்; the *Vēdas. "முன்னை மரபின் முதுமொழி முதல்வ" (பரிபா.3:42).* 5. திருக்குறள் (வள்ளுவமா.31); *T iru-k-kuṟaḷ.*

*[முது + மொழி.]*

முதுமொழிக்காஞ்சி *mudu-moḻi-k-kāñji,* பெ.(n.) 1. அறிவுடையோர் அறம் பொருளின்பங்களைப் பலரும் அறியச் சொல்லும் புறத்துறை (பு.வெ.10, காஞ்சிப்.1); theme of wise men giving instruction on *aṟam, poruḷ* and *iṉbam* to the people at large. 2. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றானதும் கூடலூர் கிழார் இயற்றியதுமான அறநூல் (நீதி நூல்); an ancient didactic poem of 100 verse by *Kūḍalūr-kiḻār,* one of *patiṉeṉ-kīḻ-k-kaṇakku.*

*[முதுமொழி + காஞ்சி.]*

முதுமொழிவஞ்சி *mudu-moḻi-vañji,* பெ.(n.) மகன் தந்தையினுடைய வீரச் செயலைக் கூறும் புறத்துறை (பு.வெ.3:13); theme of a son describing the heroic acts of his father.

*[முது + மொழி + வஞ்சி.]*

பழைய வரலாற்றினையும், வாளினையும் உடைய மறக்குடியில் பிறந்த தந்தையின் நிலைமையை மகன் சொல்லும் புறத்துறை.

முதுவர்[1] *muduvar,* பெ.(n.) 1. மூத்தோர்; elders, old persons. *"தமராகிய முதுவர்" (கந்தபு.வள்ளியம்.43).* 2. அறிவாற்றல் (ஞான) மிக்கோர்; persons of ripe wisdom; men of experience. *"முதுவருண் முந்து கிளவாச் செறிவு" (குறள், 715) (பிங்.).* 3. அமைச்சர், அறிவுரைஞர் (பிங்.); counsellors. 4. புலவர் (திவா.); poets. 5. மலைவாழ் பழங்குடி (E.T.5:86); a hill tribe.

*[முது → முதுவர்.]*

முதுவர்[2] *muduvar,* பெ.(n.) உழவர்; a cultivator, farmer pesant.

*[முது → முதுவர்.]*

கோவை, திருவாங்கூர் மலையை அடுத்த நிலத்தில் வேளாண் பயிர் தொழிலைச் செய்பவர்களை முதுவர் என்பர்.

முதுவல் *muduval,* பெ.(n.) பழமையாற் பழுதானது (இ.வ.); that which is time-worn.

*[முது → முதுவல்.]*

முதுவானாள் *muduvāṉāḷ,* பெ.(n.) மலையில் வாழும் ஒருவகைப் பழங்குடியினர் (E.T.5, 86); a hill tribe.

முதுவு *muduvu,* பெ.(n.) முதுகு[2] பார்கக; see *mudugu*[2].

முதுவுழிஞை *mudu-v-uḻiñai,* பெ.(n.) 1. இரை கண்ட பறவை பாய்வது போல, எதிரிகளைக் கண்டு பாயும் வீரர்களைக் குறித்துக் கூறும் துறை; a theme, says about the warrior who attack the enemies, like the bird that tantivy when seeing its prey. *"வேய் பிணங்கிய மிளையரணம் பாய்புள்ளிற் பரந்திழிந்ததன்று"*

*(பு.வெ.6:20).* 2. போரைச் செய்யும் எயிலினுள்ளோருடைய மிகுதியைக் கூறுவதும் வெல்லுதற்குரிய மாறுபாட்டைக் கூறுவதுமான உழிஞைத்துறை; a kind of *uḻiñjai-t-tuṟai.* *"செருமதிலோர் சிறப்புரைத்தலும் அரு முரணான அத் துறையாகும்" (பு.வெ.6:21).*

*[முது + உழிஞை.]*

முதுவெழுத்து *mudu-v-eḻuttu,* பெ. (n.) தேறின எழுத்து (வின்.); settled, well-formed handwriting.

*[முது + எழுத்து.]*

முதுவேனில் *mudu-vēṉil,* பெ. (n.) பருவம் ஆறனுள் ஆடவை (ஆனி), கடக(ஆடி)த் திங்களடங்கிய கடுங்கோடைக் காலம் (பிங்.); summer, the month of Aṉi and āḍi as the season of extreme heat, one of *āmparuvam* (six season).

*[முது + வேனில்.]*

பருவம் : 1. கார்காலம், 2. கூதிர் காலம், 3. முன்பனிக்காலம், 4. பின்பனிக் காலம், 5. இளவேனில் காலம், 6. முதுவேனில் காலம்.

முதுவோர் *muduvōr,* பெ. (n.) 1. முதுவர் 1, 2, 3 பார்க்க; see *muduvar, 1, 2, 3.* 2. அரசன், ஆசிரியர், தாய், தந்தை, அண்ணன் முதலிய பெரியோர்; the great; the noble; the elders, as king, teacher, mother, father, elder brother. *"முதுவோர்க்கு முகிழ்த்த கையினை" (சிறுபாண்.231).* 3. புலவர் (திவா.); poets.

*[முது →முதுவோர்.]*

முதூசன் *mudūšaṉ,* பெ. (n.) கொட்டைப் பாக்கு; areca-nut (சா.அக.).

முதை *mudai,* பெ. (n.) 1. முதைப்புனம் (பிங்.) பார்க்க; see *mudai-p-puṉam.* *"முதைச் சுவற்கலித்த முற்றா இளம்புல்" (குறுந்.204).* 2. சங்கஞ் செடி (பரி.அக.); mistle toe berry-thorn.

*[முது →முதை (வே.க.).]*

முதைப்புனம் *mudai-p-puṉam,* பெ. (n.) 1. பழங்கொல்லை (திவா.); ground long under cultivation, dist. fr. *idai-p-puṉam.* *"முதைப் புனங் கொன்ற ஆர்கலி உழவர்" (குறுந்.155:1).* 2. பயிரிடுவதற் குரித்தான பண்பட்ட நிலம் (வின்.); ground cleared and prepared for tillage.

*[முது→முதை + புனம்.]*

முதையல் *mudaiyal,* பெ. (n.) 1. பழங்காடு (சூடா.); wild jungle; ancient forest. *"விதையர் கொன்ற முதையற் பூமி" (நற்.121).* *"முளிந்த வோமை முதையலங் காட்டு" (அகநா.5:8).* 2. கடுகு (சங்.அக.); mustard.

*[முது→முதை→முதையல்.]*

முந்தண்டுக்கால் *mundaṇḍu-k-kāl,* பெ. (n.) நெசவில் முன்தண்டைத் தாங்கும் கால்; stand which bears the front pole in weaver's instrument.

*[முன்தண்டு + கால்.]*

முந்தல்[1] *mundal,* பெ. (n.) 1. முற்படுகை (உ.வ.); being first or before. 2. முனை (வின்.); projection, promontory.

*[முந்து → முந்தல்.]*

முந்தல்[2] *mundal,* பெ. (n.) முச்சந்தி (யாழ். அக.); junction of three roads.

முந்தல்³ *mundal,* பெ.(n.) முகவை மாவட்டக் கடற்புறத்து அலைவாய் துருத்தியிலுள்ளதோர் ஊர்; a name of a seashore village in Ramanad District.

முந்தன் *mundaṉ,* பெ.(n.) கடவுள்; God, as the First Being *"முந்தனை யான்மா வென்றும்" (சி.சி.4 : 28).*

*[முந்து →முந்தன்.]*

முந்தாங்கி *mundāṅgi,* பெ.(n.) 1. நீளத்திற் கோடிட்ட மகளிர் சீலை வகை; a kind of saree striped lengthwise. 2. விரலாழிக்கு முன்னிடும் வளையம்; keeper, ring that keeps another on the finger or toe. 3. வண்டிச் சக்கரங் கழலாமல் இருப்பதற்காக அதன் முன் இடும் வளையம்; axle-ring of a cart.

*[முன்[1] + தாங்கி.]*

முந்தாணி *mundāṇi,* பெ.(n.) முந்தானை (வின்.) பார்க்க; see *mundāṉai.*

*[முந்தானை →முந்தாணி.]*

முந்தாநாள் *mundā-nāḷ,* பெ.(n.) நேற்றெனச் சொல்லப்படுவதற்கு முந்திய நாள்; day before yesterday. *"முந்தா நாளிரவு கண்ட கனா" (விறலிவிடு.501).*

*[முந்து + ஆ + நாள்.]*

முந்தானை *mundāṉai,* பெ. (n.) முன்றானை பார்க்க; see *muṉṟāṉai. சேலை முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.*

*[முன்றானை →முந்தானை.]*

முந்தானைபோடு-தல் *mundāṉai-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) முன்றானைவிரி-த்தல் பார்க்க; see *muṉṟāṉai-viri-.*

*[முந்தானை + போடு-தல்.]*

முந்தானைவிரி-த்தல் *mundāṉai-viri-,* 4 செ.கு.வி.(v.i.) 1. முன்றானைவிரி-த்தல் பார்க்க; see *muṉṟāṉai-viri-.* 2. முந்தி விரி-த்தல், 2 பார்க்க; see *mundi-viri-, 2.*

*[முந்தானை + விரி-த்தல்.]*

முந்தி¹ *mundi,* பெ.(n.) 1. முன்னிடம்; front. 2. முன்றானை பார்க்க; see *muṉṟāṉai.* *"பொதுமாதர் முந்தியே தொடு மிடங்கள்" (குற்றா.தல.மந்தமா.21).*

*[முந்து → முந்தி.]*

முந்தி² *mundi,* கு.வி.எ.(adv.) 1. காலத்தில் முன்பு, முன்னால்; of time earlier. *இரண்டு நாள் முந்தி வந்திருக்கக் கூடாதா? இது முந்தியே பார்த்த திரைப்படம் தான்.* 2. வேகமாக; faster. உன் கடிகாரம் அரை மணி நேரம் முந்திப் போகிறது. 3. முற்காலம்; some time before. *"முந்தி வானோர்கள் வந்து" (தேவா.477, 8).*

*[முந்து →முந்தி.]*

முந்திசினோர் *mundiśiṉōr,* பெ.(n.) முன்னோர்; the ancients. *"இலங்குகதிர்த் திகிரி முந்திசினோரே" (பதிற்றுப்.69:17).*

*[முந்தி + ஈயினோர் = முந்தியீயினோர் →முந்தீயினோர் →முந்தீசினோர் →முந்திசினோர் (வே.க.).]*

முந்திய *mundiya,* பெ.அ.(adj.) காலத்தில் முற்பட்ட, முன்னிருந்த; previous; pre-. *முந்திய தலைமுறையைச் சேர்ந்த எழுத்தாளர். இதற்கு முந்திய கருத்தரங்கம்*

*சென்னையில் நடந்தது. வரலாற்றுக்கு முந்திய காலம்.*

*[முந்து → முந்திய.]*

**முந்தியவட்டி** *mundiya-vaṭṭi,* பெ.(n.) கடன் கொடுக்கும்போது முன்னதாகப் பிடித்துக் கொள்ளும் வட்டி (C.G.); interest taken in advance at the time of the loan.

*[முந்து + வட்டி.]*

**முந்திரி**[1] *mundiri,* பெ.(n.) 1/320 என்ற குறியுள்ள பின்னயெண்; the fraction 1/320. *"முந்திரிமேற் காணி மிகுவதேல்" (நாலடி, 346).*

ம. முந்திரி.

*[முந்து + இரி = முந்திரி. இரிதல் = விலகுதல், பிளத்தல், கெடுதல். இரிசல் = பிளவு. ஒ.நோ. = பின்னம் = 1. பின்னம், 2. கீழ்வாயிலக்கம். E. fraction, f.l. frang, break. கீழ்வாய் இலக்கங்களுள் முந்தியது முந்திரி எனப்பட்டது (வே.க.முல்.[2]]*

மேல்வாய்ச் சிற்றிலக்கத்தில் அடிமட்ட எண் மேல் முந்திரி என்னும் முந்திரி (1/320)யும் கீழ்வாய்ச் சிற்றிலக்கத்தில் அடிமட்ட எண் கீழ்முந்திரி (1/102, 1/400)யும் ஆகும் (பழந்த.ஆ.பக்.72).

**முந்திரி**[2] *mundiri,* பெ.(n.) 1. அகன்ற இலை உடையதும் மஞ்சளும் சிவப்பும் கலந்த நிறத்தில் பழத்தைக் கொடுக்கக் கூடியதுமான ஒரு மரம், அண்டிமா; cashew tree, *Anacardium occidentale*. 2. முந்திரிப் பருப்பு; cashew nut. 3. முந்திரிகை[2],1 பார்க்க; see *mundirigai*[2]*,1.*

தெ. முந்தமாமிதி; ம. முந்திரி.

*[முன் + துரி – முந்துரி→முந்திரி. துருத்தல் = முன் தள்ளுதல் (த.வி.). துருத்துதல் = முன் தள்ளுதல் (பி.வி.). முந்திரிக் கொட்டை பழத்திற்கு வெளியே முன்தள்ளிக் கொண்டிருத்தலால், அதன் பழமும் மரமும் முந்திரியெனப்பட்டன. அண்டிமா என்பதும் இப் பொருளதே. அண்டியில் கொட்டை யுடைய பழம் அண்டிமா.]*

வகைகள் : 1. கொடிமுந்திரி, 2. காட்டு முந்திரி, 3. கொட்டை முந்திரி, 4. மலாக்கா முந்திரி, 5. சிறிய கொடி முந்திரி (சா.அக.).

**முந்திரிக்கொட்டை** *mundiri-k-koṭṭai,* பெ.(n.) 1. முந்திரிப் பழத்தின் கீழ்ப் பகுதியிலிருந்து வெளியே நீண்டு இருக்கும் கொட்டை; cashew-nut which protrudes from the fleshy party of the stalk. 2. தேவையில்லாமல் அடுத்தவர் கருத்துப் பரிமாற்றத்தில் தலையிட்டு பேசுபவர்; one who talks or acts presumptuously. *அந்த முந்திரிக் கொட்டையைக் கூப்பிடாதே.*

*[முந்திரி + கொட்டை.]*



**முந்திரிகை**[1] *mundirigai,* பெ.(n.) முந்திரி[1] பார்க்க; see *mundiri*[1]. *'காணியே முந்திரிகை' (தொல்.எழுத்து.164, உரை).*

*[முந்திரி →முந்திரிகை.]*

**முந்திரிகை[2]** *mundirigai,* பெ.(n.) 1. கொடி முந்திரி (திராட்சை); common grape vine. *"முந்திரிகைப் பழச்சோலைத் தேன்" (சீவக. 3063).* 2. முந்திரி[2], 1 பார்க்க; see *mundiri[2], 1.*

*[முந்திரி →முந்திரிகை.]*

**முந்திரிகைக்கள்(ளு)** *mundirigai-k-kal,* பெ.(n.) முந்திரிகை மது; wine brandy (சா.அக.).

*[முந்திரிகை + கள்.]*

**முந்திரிப்பருப்பு** *mundiri-p-paruppu,* பெ.(n.) முந்திரிக் கொட்டையில் இருந்து எடுக்கப்படும் பருப்பு; cashew kernel. *சுவையில் முந்திரிப் பருப்பை முந்தும் பருப்பு ஏதுமில்லை.*

மறுவ. அண்டிப்பருப்பு

*[முந்திரி + பருப்பு.]*

**முந்திரியணா** *mundiri-y-aṇā,* பெ.(n.) ஓர் அணா (செட்டிநாடு); one anna.

*[முந்திரி[1] + அணா.]*

**முந்திவிரி–த்தல்** *mundi-viri-,*4 செ.கு.வி. (v.i.) 1. முன்றானைவிரி–த்தல் பார்க்க; see *munrāṇai-viri-. முந்தி விரித்தவள் சீதேவி, முலைப்பால் கொடுத்தவள் மூதேவியா?* 2. பிச்சை வாங்க துணி விரித்தல்; to unfold or spread one's cloth to receive alms.

*[முந்தி + விரி–த்தல்.]*

**முந்தின** *mundina,* இடை.(part.) முந்திய பார்க்க; see *mundiya. "முந்தினோர் பிந்தினோராவர், பிந்தினோர் முந்தினோராவர்", "முந்தி வந்த செவியைப் பிந்தி வந்த கொம்பு மறைத்ததாம்" (பழ.), "முந்தின சோற்றைத் தட்டினால் பிந்தின சோறு பீயும் சோறும்" (பழ.).*

*[முந்திய →முந்தின.]*

**முந்து[1]–தல்** *mundu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. காலம், இடம் முதலியவற்றால் முற்படுதல்; to be prior in time, place, etc. *"முதுவருண் முந்துகிளவாச் செறிவு" (குறள், 715), "முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி" (நற்.22:2).* 2. எதிர்ப்படுதல்; to come in front; to advance; to meet. *"முந்தின னருமறைக் கிழவன்" (கம்பரா. தாடகை.28).* 3. விரைதல்; to go fast. *"முந்தா நின்ற வேட்கை" (ஞானவா.சுக்கி.7).* 4. மேலெழுதல்; to rise up. *"உந்தி முதலா முந்துவளி தோன்றி" (தொல்.எழுத்து.83).* 5. முதன்மையாதல்; to take precedence; to take the lead; to be first. *"அவையத்து முந்தி யிருப்பச் செயல்" (குறள், 67).* 6. சிறத்தல்; to surpass, excel. 7. பழமையாதல்; to be old; to be long-standing. 8. வண்டி முதலியவற்றைக் கடந்து செல்லுதல், கடந்து முன் செல்லுதல்; go past, over take. *பேருந்தை முந்தும் போது சீறுந்து இடி மோதலுக்கு உள்ளானது. முன்னால் ஓடிக்கொண்டு இருந்தவரையும் கடைசி நிமயத்தில் முந்திவிட்டார்.* 9. ஒன்றைப் பெறவோ செய்யவோ பிறரைக் காட்டிலும் விரைதல்; over take some one, rush to get, to do something. *எனக்குத்தான் அந்த வேலை கிடைத்து இருக்க வேண்டும்; ஆனால் அவர் முந்திக் கொண்டார். முந்துங்கள், இன்னும் சில மனைகளே விற்பனைக்கு உள்ளன என்று விளம்பரத்தில் குறிப்பிடப்பட்டு இருந்தது.*

க. முந்து

*[முல்→முன்→முன்று→முந்து→முந்து–தல்.]*

**முந்து**[2] *mundu,* பெ.(n.) 1. முற்காலம்; antiquity. *"முந்துறை சனகனாதி" (கந்தபு. மேருப்.10).* 2. முன்பு; priority. 3. தொடக்கம் (ஆதி); beginning. *"முந்துநடுவு முடிவு மாகிய....... சேவடியானை" (திருவாச.18:5).*

*[முந்து[1]→முந்து[2].]*

**முந்து**[3] *mundu,* பெ.(n.) வெண்ணாரை (அக.நி.); a kind of white heron.

**முந்துநீர்ப்போக்கு** *mundu-nīr-p-pōkku,* பெ.(n.) மிகை சிறு நீர்; passing excess of urine - *Nocturia.*

*[முந்து + நீர்ப்போக்கு.]*

**முந்துநூல்** *mundu-nūl,* பெ.(n.) 1. முன்னூல்; original treatise as distinguished from subsequent works or commentaries. *"முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" (தொல்.சிறப்புப்.).* 2. மறைநூல்; the Vedas. *"முந்துநூலு முப்புரிநூலு முன்னீந்த வந்தணாளன்" (திவ்.பெரியதி.6 : 5, 7).*

*[முந்து + நூல்.]*

**முந்துறு**[1]**-தல்** *munduṟu-,*20 செ.கு.வி.(v.i.) 1. முன்னிலையாதல்; to be in front, as of a person. *"மொய்வளைத் தோளி முந்துற மொழிந்தன்று" (பு.வெ.12, பெண்பாற்.1, கொளு.).* 2. முற்படுதல்; to be first; to be in advance. இல்லைகனா முந்துறாத வினை (பழமொ.12). *"யாமுந் துறுதல் செல்லேம் ஆயிடை" (அகநா.261:11).*

*[முந்து + உறு[1]-தல்.]*

**முந்துறு**[2]**-த்தல்** *munduṟu-,* 18 செ. குன்றாவி. (v.t.) 1. தோற்றுவித்தல்; to cause to appear. *"நோய் முந்துறுத்து நொதுமன் மொழியல்" (அகநா.39).* 2. காட்டிக் கொள்ளுதல்; to show, assume. *"பற்றா மாக்களிற் பரிவு முந்துறுத்து" (புறநா.29).* 3. ஒருவன் முன்னிலையில் அறிவித்தல்; to disclose in one's presence. *"வேட்கை முந்துறுத்தல்" (பு.வெ. 12, பெண்பாற்.1).*

*[முந்து + உறு-த்தல்.]*

**முந்துறு**[3]**-த்தல்** *munduṟu-,* 20 செ.கு.வி. (v.i.) முதலாதல்; to begin with. *"அச்சமு நாணு மடனு முந்துறுத்த" (தொல். பொருள். 99).*

*[முந்து + உறு-த்தல்.]*

**முந்தூழ்**[1] *mundūḻ,* பெ.(n.) மூங்கில் (திவா.); spiny bamboo. *"முந்தூழ் வேலிய மலை கிழவோற்கே" (குறுந்.239:6).*

மறுவ. முந்தூழ்கம், முந்தூள், முந்தூளம்.

**முந்தூழ்**[2] *mundūḻ,* பெ.(n.) பழவினை (வின்.); fate, destiny.

*[முந்து + ஊழ்.]*

**முந்தூழகம்** *mundūḻagam,* பெ.(n.) மூங்கில்; bamboo.

*[முந்தூழ் + அகம்.]*

**முந்தூள்** *mundūḷ,* பெ.(n.) முந்தூழகம் பார்கக; see *mundūḻagam.*

*[முந்தூழ் → முந்தூள்.]*

**முந்தூளம்** *mundūḷam,* பெ.(n.) முந்தூழகம் பார்க்க; see *mundūḻagam.*

**முந்தை**[1] *mundai,* பெ. (n.) 1. முற்காலம்; the past, former time. *"முந்தைத் தான் கேட்டவாறே" (சீவக.545).*2. பழைமை (பிங்.); antiquity. 3. முன்னோன்; ancestor.

*"அந்தணர்.... தந்தை தாயென் றிவர்க்கு.... முந்தைவழி நின்று" (பு.வெ.9:33).*

தெ. முந்துகி; க. முந்தெ.

*[முந்து →முந்தை.]*

**முந்தை**[2] *mundai*,கு.வி.எ.(adv.) முன்; in front of. *"வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்" (புறநா.10). "தேர்வண் மலையன் முந்தைப் பேரிசை" (நற்.100:9), "முந்தை யுணர்ந்தோர் வந்து நினக் குரைப்ப" (பெருங்.உஞ்சை. சாங்கி.36:169).*

*[முந்து →முந்தை.]*

**முந்தை**[3] *mundai*,பெ.(n.) சிறு ஏன வகை (வின்.); a small vessel.

தெ. முந்த; க. முந்தெ.

*[மொந்தை→முந்தை.]*

**முந்தைநாள்** *mundai-nāḷ*, பெ.(n.) 1. முந்தாநாள் (வின்.); day before yesterday. 2. முந்தை[1], 2 பார்க்க; see *mundai*[1], 2.

*[முந்தை[1] + நாள்.]*

**முந்தைய** *mundaiya*, கு.பெ.எ.(adj.) முந்திய பார்க்க; see *mundiya*.

*[முந்திய →முந்தைய.]*

**முந்நாடி** *mu-n-nāḍi*,பெ.(n.) வளி, பித்தம், கோழைக்குரிய நாடிள்; the three pulses.

*[மூன்று + நாடி.]*

**முந்நிரை** *mun-nirai*,பெ.(n.) ஆடு, மாடு, எருமை என்னும் மூன்றன் மந்தை அல்லது கூட்டம்; a flock of cattle.

*[மூன்று + நிரை.]*

**முந்நீர்**[1] *mu-n-nīr*,பெ.(n.) ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் என்ற மூன்று நீர்களை உடைய கடல்; sea, as consisting of three waters, viz., river water, spring water and rain water. *"முந்நீர் விழவி னெடியோன்" (புறநா.9). முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை (தொல்.அகத்.34).*

க. முந்நிர்; தெ. முந்நீரு.

*[மூன்று + நீர்.]*

**முந்நீர்**[2] *mu-n-nīr*,பெ.(n.) இளநீர், சருக்கரை நீர், கன்னலினீர்; the three kinds of liquids, viz., milk of tender coconut, sugared water and juice of sugarcane. *"முந்நீ ரடைக்காயும் படைத்து" (ஞானதீக்ஷை. 4).*

*[மூன்று + நீர்.]*

**முந்நூல்** *mu-n-nūl*,பெ.(n.) 1. ஆண்கள் மார்பில் அணியும் மூன்று பிரிவான நூல் (பூணூல்); the sacred thread, as containing three strands. *"மார்மிடை முந்நூல் வனையா முன்னர்" (மணிமே.13:23).* 2. மகளிர் கழுத்தணி வகை (இ.வ.); woman's necklace, as having three strands.

*[மூன்று + நூல்.]*

**முந்நூற்றுநாலு** *mu-n-nūṟṟu-nālu*,பெ.(n.) சீட்டாட்டத்தில் ஒருவகை; a game of cards.

*[முந்நூறு + நாலு. நான்கு→நாலு (பே.வ.)]*

**முந்நூறு** *mu-n-nūṟu*,பெ.(n.) மூன்று நூறு; the number 300. *"முந்நூறூர்த்தே தண்பறம்பு நன்னாடு" (புறநா.110:3).*

*[மூன்று + நூறு.]*

**முப்பகை** *mu-p-pagai,* பெ.(n.) 1. ஆதனைக் (ஆன்மாவைக்) கெடுக்கின்ற மூன்று குற்றங்களாகிய காமம், வெகுளி, மயக்கம்; the three evil qualities of the soul, viz., *kāmam, vekuḷi, mayakkam. "முப்பகை வென்றார்" (கம்பரா. கார்மு.26).* 2. பேய் (பிசாசு), உலகு, உடலாகிய மாந்தனின் மூன்று பகைவர்கள் (சது.); the three enemies of mankind, viz. *pēy (piśāšu), ulagu, uḍal.*

*[மூன்று + பகை.]*

**முப்பட்டகம்** *mu-p-paṭṭagam,* பெ.(n.) கண்ணாடி போன்றவற்றால் முக்கோண வடிவில் செய்யப்பட்டதும் தன்னுள் பாயும் ஒளியை நிறமாலையாகப் பிரிக்கக் கூடிய தன்மை உடையதுமான பொருள்; prism.

*[மூன்று + பட்டகம்.]*



**முப்பட்டையரம்** *mu-p-paṭṭai-y-aram,* பெ.(n.) மூன்று பட்டைகள் அமைந்த அரம் (இ.வ.); corner file.

*[மூன்று + பட்டை + அரம்.]*

**முப்படலம்** *muppaḍalam,* பெ.(n.) ஒருவகைக் கண்ணோய்; an eye disease.

**முப்படை** *mu-p-paḍai,* பெ.(n.) ஒரு நாட்டின் தரைப்படை, கப்பல் படை, வான்படை ஆகிய மூன்று படை; the armed forces comprising of army, navy and air force. *முப்படைத் தளபதி யார்?*

*[மூன்று + படை.]*

**முப்பணி** *muppaṇi,* பெ.(n.) மூன்று வகை வேலை; three kinds of work. *"முப்பணியிட்ட பெண்ணுக்குக் கொப்பு ஒன்றுதான் குறை" (பழ.).*

*[மூன்று + பணி.]*

**முப்பத்தாறாயிரப்படி** *muppattāṟāyira-p-paḍi,* பெ.(n.) ஈடு முப்பத்தாறாயிரம்; a commentary on *Tiruvāymoḷi.*

*[முப்பது + ஆறு +ஆயிரப்படி.]*

**முப்பத்திமண்டபம்** *mu-p-patti-maṇḍabam,* பெ.(n.) மூன்று பத்திகளுள்ள மண்டபம்; pillared hall containing four rows of pillars, as having three vestibules.

*[மூன்று + பத்தி +மண்டபம்.]*

நான்கு வரிசையாக உள்ள தூண்களுக்கு இடைப்பட்ட மூன்று பத்திகளையுடைய மண்டபம்.

**முப்பத்திரண்டறம்** *mu-p-pattiranḍāṟam,* பெ.(n.) ஆதுலர்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத்தோர்க்குணவு, ஆவுக்கு (பசுவுக்கு) வாயுறை, சிறைச்சோறு, ஐயம், நடைத் தின்பண்டம், மகச்சோறு, மகப்பெறுவித்தல், மகவளர்த்தல், மகப்பால், அறவைப் பிணஞ்சுடல், அழிந்தோரை நிறுத்தல், வண்ணார், முடிதிருத்துவோர் (நாவிதர்), வதுவை, பூணூல், நோய் மருந்து, கண்ணாடி, நாளோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்ணுகர்வு, அட்டூண், பிறரறங்காத்தல், தண்ணீர்ப்பந்தர், மடம், தடம், கா, ஆவுரிஞ்சு நடுதறி,

ஏறுவிடுத்தல், விலையுயிர் கொடுத்துக் கொலையுயிர் மீட்டல் என்னும் முப்பத்திரண்டு வகையான அறம் (திவா.Mss.); thirty two kinds of charity.

*[முப்பது + இரண்டு + அறம்.]*

**முப்பத்துமுக்கோடிதேவர்** *mu-p-pattu-mukkōḍi-tēvar,* பெ.(n.) முப்பத்து மூன்று கோடியாகக் கணக்கிடப்படும் தேவர் (தக்கயாகப்.183, உரை); celestials numbering thirty-three crores. 2. முப்பத்துமூவர் பார்க்க; see *mu-p-pattu-mūvar. "செருக்கொண்ட முப்பத்து முக்கோடி தேவருஞ் சேனையுமே" (அஷ்டப். திருவரங்கத்துமா.64).*

*[முப்பது + மூன்று + கோடி + தேவர்.]*

**முப்பத்துமுத்தேவர்** *mu-p-pattu-muttēvar,* பெ.(n.) முப்பத்துமூவர் (திவா.) பார்க்க; see *muppattu-mūvar. "அதிதி புதல்வராய முப்பத்து முத்தேவர்" (தக்கயாகப்.16).*

*[மூன்று + பத்து + முத்தேவர்.]*

**முப்பத்துமூவர்** *mu-p-pattu-mūvar,* பெ.(n.) முப்பத்துமூன்று தேவர் (பிங்.); the 33 celestials in four groups viz, *asṭa-vašukkaḷ, ēkātaša-ruttirar, tuvāta-šātittar, ašuviṉi-tēvar. "முப்பத்து மூவரமரர்க்கு" (திவ். திருப்பா.20).*

*[மூன்று + பத்து + மூவர்.]*

**முப்பதம்** *mu-p-padam,* பெ.(n.) 'அது நீயாயிருக்கிறாய்' என்னும் பொருளுடைய மூன்று வடசொல் (தத்துவமசி); *tat-tuvam-aši,* as comprising three words. *"முப்பதப் போதாந்தமான பிரணவத்துள்" (திருமந். 225).*

*[மூன்று + Skt. பதம்.]*

**முப்பதாம்பூசை** *mu-p-padām-pūšai,* பெ.(n.) பண்டார இனத்தவரின் சடங்குகளில் ஒரு வகை (கோவை.); a rite of *paṇḍāra* caste.

*[முப்பதாம் + பூசை.]*

பிணக் குழிக்குப் பந்தலிட்டு உட்கார்ந்து மந்திரம் சொல்லிப் பின் வீட்டிலும் மந்திரம் சொல்லிச் செய்யும் சடங்கு.

**முப்பது** *muppadu,* பெ.(n.) மூன்று பத்து (திவ்.திருப்பா.30); thirty. *"முப்பது செருப்புத் தின்றவனுக்கு மூன்று செருப்பு பணிகாரம்" (பழ.), "முப்பது பணம் கொடுத்தாலும் மூளிபட்டம் போகாது" (பழ.), "முப்பதும் போய் மூன்றும் தள்ளினவள் போலப் பேசுகிறாள்" (பழ.), "முப்பது ஆண்டு வாழ்ந்தவனும் இல்லை முப்பது ஆண்டு தாழ்ந்தவனும் இல்லை" (பழ.அக.).*

*[மூன்று + பத்து.]*

**முப்பதுநோன்பு** *mu-p-padu-nōṉbu,* பெ.(n.) 1. முகமதியர் நாளும் நோற்கும் நோன்பு (உ.வ.); fast observed by Muhammadans daily in the month of *Ramzāṉ.* 2. தமிழ்நாட்டில் வாழும் தெலுங்கரில் மணம் செய்துகொண்ட பெண்கள் மணநாள் முதல் முப்பது நாள் நோற்கும் நோன்பு (இ.வ.); ceremonial observance practised by newly married Telugu girls in Tamil districts, as lasting for thirty days from the date of marriage.

*[முப்பது + நோன்பு.]*

**முப்பதெருப்புடம்** *muppateruppuḍam,* பெ.(n.) 30 வரட்டிகளால் போடும் புடம்; cowdung fire with 30 cakes for calcination.

*[முப்பது + எரு + புடம்.]*

முப்பலம் *mu-p-palam,* பெ.(n.) முப்பலை (வின்.) பார்க்க; see *mu-p-palai.*

முப்பலை *mu-p-palai,* பெ.(n.) திரிபலை (யாழ். அக.); three myrobalans.

முப்பழம் *mu-p-paḻam,* பெ.(n.) 1. முக்கனி (சிலப்.6. 76. உரை.) பார்க்க; see *mu-k-kaṉi.* 2. திரிபலை; the three myrobalans. *"முப்பழ நீர்ப்பளிங்களைஇ" (சீவக.2356).*

*[மூன்று + பழம்.]*

முப்பறமுந்நாழி *muppaṟa-munnāḻi,* பெ.(n.) வரி வகை (T.A.S., iii.216); a tax.

முப்பாட்டன்¹ *mu-p-pāṭṭaṉ,* பெ.(n.) பாட்டனுக்குத் தந்தை (வின்.); great-grand father. *உன்னுடைய முப்பாட்டனுடைய பெயர் என்ன?*

*[முன் + பாட்டன்.]*

முப்பாட்டன்² *mu-p-pāṭṭaṉ,* பெ.(n.) பாட்டனுக்குப் பாட்டன் (வின்.); grand father's grand father. *எங்கள் முப்பாட்டன் காலத்திருந்தே இந்தச் சொத்து எங்களிடமே உள்ளது.*

*[முன் + பாட்டன்.]*

முப்பாட்டி *mu-p-pāṭṭi,* பெ.(n.) பாட்டியின் தாய்; great-grand mother.

*[முன் + பாட்டி. முப்பாட்டன்² (ஆ.பா.) → முப்பாட்டி (பெ.பா.).]*

முப்பாட்டி² *mu-p-pāṭṭi,* பெ.(n.) பாட்டனுக்குப் பாட்டி (யாழ்.அக.); grand father's grand-mother.

*[முப்பாட்டன்² → முப்பாட்டி².]*

முப்பாத்துக்காரர் *muppāttu-k-kārar,* பெ.(n.) தாழ்ந்த இனத்தவர்களின் தலைவன் (கோவை.); a headmanship of low caste people.

முப்பாரிதம் *muppāridam,* பெ.(n.) மிளகு; pepper-*Pipernigrum.*

முப்பால்¹ *mu-p-pāl,* பெ.(n.) 1. அறம், பொருள், இன்பமெனும் மூன்று பகுப்புகள்; the three division, *aṟam, poruḷ, iṉbam.* 2. முப்பாலை விரித்துக் கூறும் திருக்குறள்; *Tiru-k-kuṟaḷ,* as dealing with *mu-p-pāl.* *"வள்ளுவர் முப்பாலாற் றலைக்குத்துத் தீர்வு சாத்தற்கு" (வள்ளுவமா.11).* 3. ஆண்பால், பெண்பால், அலிப்பால் என்பன; the three genders, viz., *āṉ-pāl, peṇ-pāl, ali-p-pāl.* *"அத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே" (தொல்.சொல்.212).* 4. காய்ச்சுப் பால், திரட்டுப்பால், குழம்புப்பால் என்ற மூன்று வகைப்பட்ட பால் (யாழ்.அக.); the three preparations of milk, viz., *kāyccu-p-pāl, tiraṭṭu-p-pāl, kuḻambu-p-pāl.* 5. தாய்ப் பால், ஆவின் பால், ஆட்டுப்பால் என்னும் மூவகைப் பால் (தமிழ்விடு.25, உரை); the three kinds of milk, viz., mother's milk, cow's milk, goat's milk.

தெ. முப்பாலு

*[மூன்று + பால்.]*

முப்பால்² *muppāl,* பெ.(n.) வன்பால், மென்பால், சமப்பால் என்ற மூவகை நிலங்கள்; the three kinds of land, viz., *vaṉpāl, meṉpāl,* and *Šama-p-pāl.*

*[மூன்று + பால். பால் = நிலம்]*

**முப்பாலகர்** *mu-p-pālagar,* பெ.(n.) பால் குடிப்பவர், பாலும் சோறும் உண்பவர், சோறுமட்டு முண்பவரென மூவகைப்பட்ட குழந்தைகள் (தைலவ.தைல,117. உரை); children of three kinds, viz., those who drink milk alone, those who take milk and rice and those who take rice only.

*[மூன்று + பாலகர். பாலகன் → பாலகர்.]*

**முப்பாலர்** *mu-p-pālar,* பெ.(n.) முப்பாலகர் (தைலவ.தைல,117) பார்க்க; see *mu-p-pālagar.*

*[மூன்று + பாலர். பாலன் → பாலர்.]*

**முப்பாழ்** *mu-p-pāḻ,* பெ.(n.) 1. நிலத்திற் குண்டாம் வெயிற்பாழ், வெள்ளப்பாழ், குடிப்பாழ் என்ற மூவகைக் கேடுகள்; the three forms of ruin which a land is subject to viz., *veyiṟ-pāḻ, veḷḷa-p-āḻ, kuḍi-pāḻ.* 2. உள்பொருள் (சீவேசுவர ஜகத்துக்கள்) (சங்.அக.); the three entities, viz., *Šivaṉ, Išuvaraṉ, Šakam.* 3. உடம்புக்குள் வெறுமையான மூன்றிடம் (வின்.); the three vacant regions believed to exist in the body.

*[மூன்று + பாழ்.]*

**முப்பாற்புள்ளி** *mu-p-pāṟ-puḷḷi,* பெ.(n.) 1. ஆய்தவெழுத்து (தொல்.எழுத்து.2); the letter ஃ, as having three dots. 2. குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் என்ற புள்ளியுள்ள மூன்றெழுத்துகள் (தொல். விருத்.பக்.26); the three letters *kuṟṟiyalugaram, kuṟṟiyaligaram* and *āydam,* as written with dots.

*[முப்பால் + புள்ளி.]*

**முப்பான்** *mu-p-pāṉ,* பெ.(n.) முப்பது; thirty.

**முப்பிடாரி** *mu-p-piḍāri,* பெ.(n.) சிற்றூர் பெண் தெய்வம்; a village goddess.

*[மூன்று + பிடாரி. பிடாரி = சிற்றூர்த்தெய்வம்]*

**முப்பிணி** *mu-p-piṇi,* பெ.(n.) வளி, பித்தம், கோழையாகிய மூன்று குற்றத்தினால் உண்டாகும் நோய்கள்; disease caused by the three kinds of human system (vatham) wind humours, (pittham) bile humour, (kapam) phlegm humour.

*[மூன்று + பிணி.]*

**முப்பிரண்டை** *mu-p-piraṇḍai,* பெ.(n.) மூன்று முகப் பிரண்டை; vitis with three faced stem (சா.அக.).

*[மூன்று + பிரண்டை. மூன்று பிரிவாக இருக்கும் பிரண்டை.]*

**முப்பிரி** *mu-p-piri,* பெ.(n.) மூன்று கயிறை ஒன்றாகத் திரிக்கும் கருவி (கோவை.); an instrument used for three coir ramble.

*[மூன்று + பிரி.]*

**முப்பிள்ளைப்பேறு** *mu-p-piḷḷai-p-pēṟu,* பெ.(n.) மூன்று குழந்தைகளைக் குறிப்பிட்ட காலத்தில் ஈனுகை; giving birth to triplets at a time.

*[மூன்று + பிள்ளை + பேறு.]*

**முப்பிறைக்காண்பான்** *mu-p-piṟai-k-kāṇbāṉ,* பெ.(n.) கக்குவான்; whooping cough (சா.அக.).

**முப்பிறைச்சுமை** *mu-p-piṟai-c-cumai,* பெ.(n.) முப்பிறைக்காண்பான் பார்க்க; see *mu-p-piṟai-k-kāṇbāṉ.*

*[மூன்று + பிறை + சுமை.]*

முப்பு *muppu,* பெ.(n.) 1. முப்பூ பார்க்க; see *muppu.* 2. அகத்தியர் இயற்றிய வாகடநூல் (மூ.அ.); a medical treatise by Agattiyar..

முப்புக்குரு *muppu-k-kuru,* பெ.(n.) கரைப்பான்; quint essence salt - *universal solvant* (சா.அக.).

முப்புடம் *mu-p-puḍam,* பெ.(n.) மூன்றுபுடம்; submitting thrice to the cowdung fire (சா.அக.).

முப்புடி *mu-p-puḍi,* பெ.(n.) 1. திரிபுடி (வின்.); the three factors of knowledge. 2. முக்குணம் (யாழ்.அக.) பார்க்க; see *mukkuṇam.*

முப்புடைக்கனி *mu-p-puḍai-k-kaṉi,* பெ. (n.) முப்புடைக்காய் பார்க்க; see *mu-p-puḍai-k-kāy.* *"முப்புடைக்கனிசிந்த மோதி" (மீனாட். பிள்ளைத்.55).*

*[மூன்று + புடை + கனி.]*

முப்புடைக்காய் *mu-p-puḍai-k-kāy,* பெ.(n.) மூன்று பிரிவுகளுடைய தேங்காய் (பெரும்பாண்.364); coconut as having three vertical sections.

*[மூன்று + புடை + காய். தேங்காய் மூன்று பிரிவுகளையுடையது.]*

முப்புநூல் *muppu-nūl,* பெ.(n.) பதினெண் வகையான குட்ட நோய்களையும் அவற்றைக் குணமாக்கும் மருத்துவ முறைகளையும் சொல்லும் அகத்தியர் இயற்றிய ஒரு தமிழ் மருத்துவ நூல்; a Tamil treatise of Agattiyar on 18 kinds of leprosy and their cures (சா.அக.).

*[மூன்று + நூல்.]*

முப்புரக்கனி *muppura-k-kaṉi,* பெ.(n.) பலாப்பழம்; jack fruit.



முப்புரம் *mu-p-puram,* பெ.(n.) திரிபுரம்; the three aerial cities burnt by Śiva. *"ஒக்க முப்புர மோங்கெரி தூவ" (தேவா.485, 5).*

*[மூன்று + புரம்.]*

முப்புரமாலி *muppura-māli,* பெ.(n.) சிவனார் வேம்பு; siva's neem - *Indigofera asphalathi folia alias asphalathoides indicus* (சா.அக.).

முப்புரமெரித்தான் *muppuram-erittāṉ,* பெ.(n.) 1. சிவன்; Śiva. 2. சிவனார் வேம்பு; wiry indigo. 3. ஆடுதின்னாப்பாளை; worm killer.

*[முப்புரம் + எரித்தான்.]*

முப்புரி¹ *mu-p-puri,* பெ.(n.) முப்புரம் (வின்.) பார்க்க; see *mu-p-puram.*

முப்புரி² *mu-p-puri,* பெ.(n.) மூன்று நூல் சேர்த்துத் திரித்த கயிறு; cord of three strands. *'முந்நூல்கொண்டு முப்புரி யாக்குதலின்' (திருமுரு.183, உரை).*

தெ. முப்பிரி; க. முப்புரி.

*[மூன்று + புரி.]*

**முப்புரிச்சவுக்கம்** *muppuri-c-cavukkam,* பெ.(n.) முப்புரிநூலாலமைந்த சிறிய ஆடை (இ.வ.); cloth woven from yarn of three strands.

*[முப்புரி + (Skt. catuska > த.) சவுக்கம்.]*

**முப்புரிநூல்** *muppuri-nūl,* பெ.(n.) பூணூல்; thread with three strands worn by men of certain castes. *"முப்புரி நூலொடு மானுரி யிலங்கு மார்வினின்" (திவ்.இயற். திருவெழு.வரி. 7).*

*[மூன்று + புரி + நூல்.]*

**முப்புரிநூலோர்** *muppurinūlōr,* பெ.(n.) பிராமணர் (திவா.); Brahmins, as wearing the sacred thread.

*[முப்புரி + நூலோர்.]*

**முப்புரிமுண்டு** *muppuri-muṇḍu,* பெ.(n.) முப்புரிச்சவுக்கம் (இ.வ.) பார்க்க; see *muppuri-c-cavukkam.*

*[முப்புரி[1] + முண்டு.]*

**முப்புவனம்** *mu-p-puvaṉam,* பெ.(n.) துறக்கவுலகம், நிலவுலகம், பாதாளவுலகம் ஆகிய மூன்று உலகங்கள் (திருவிளை. தலவிசேட.2); the three worlds *Šuvarkkam, pūmi, pātāḷam.*

*[மூன்று + (Skt. bhuvana > த.) புவனம்.]*

**முப்புள்ளி** *mu-p-puḷḷi,* பெ.(n.) ஆய்த வெழுத்து (இலக். அக.); the letter ஃ, as having three dots.

*[மூன்று + புள்ளி.]*

**முப்பூ[1]** *mu-p-pū,* பெ.(n.) ஒருவகை உப்பு; a kind of salt.

*[மூன்று + உப்பு.]*

காரமான பூநீற்றைப் பனி நீரில் கரைத்து வைத்து மூன்றாம் நாள் தெளிவெடுத்து பரிதியில் பத்துமுறை காய வைத்து, கல்லுப்பு, கற்சுண்ணாம்பு, மண்டையோட்டு உப்பு, கற்பூரம் ஆகியவற்றை முட்டையின் வெள்ளைக் கருவில் ஆட்டிப் புடமிட உண்டான உப்பு (அபி.சிந்.).

**முப்பூ[2]** *mu-p-pū,* பெ.(n.) இரும்பு முதலியவற்றைப் பொன்னாக்கவும் ஒரிலக்க மாண்டுகள் உயிர்வாழச் செய்யும் என நம்பப்படுவதான ஒருவகையுப்பு; a salt believed to have the power of transmiting baser metals into gold, and to enable one to live 1,00,000 years.

*[மூன்று + உப்பு.]*

**முப்பூநீறு** *mu-p-pū-nīṟu,* பெ.(n.) முப்புச் சுண்ணம்; calcined powder prepared from muppu consisting of three salts (சா.அக.).

*[முப்பு + நீறு.]*

**முப்பூப்புடம்** *mu-p-pūppuḍam,* பெ.(n.) மணவைப்பூப்புடம், குழிப்பூப்புடம், பூபதனப் பூப்புடம் என்ற மூவகைப் பூப்புடங்கள் (தைலவ.தைல); the three modes of calcining medicines, viz., *maṇavai-p-pūppuḍam, kuḻi-p-pūppuḍam, pūpadaṉa-p-pūppuḍam.*

*[மூன்று + பூப்புடம்.]*

**முப்பூரம்** *mu-p-pūram,* பெ.(n.) கணை, முற்குளம், முற்கொழுங்கால் (பூரம், பூராடம், பூரட்டாதி) என்னும் மூன்று விண்மீன்கள்; the three naksatras viz., *pūram, pūrāḍam, pūraṭṭādi. "ஆயில் முப்பூரஞ் சோதி" (சூடா. உள்.165).*

*[மூன்று + (Skt. pūrva-phalguni >pūra> த.) பூரம்.]*

**முப்பேர்நாகனார்** *muppēr-nāgaṉār*, பெ. (n.) கழக காலப் புலவர்; an ancient Šaṅgam poet.

[முப்பேர் + நாகனார். முப்பேர் என்பது ஊரின் பெயர்.]

ஒழிந்த இளமையை முதிர்ந்தோர் எய்தாரெனவும், வாழ்நாள் வகையறிந்த அறிஞரும் இல்லையெனவும் நற்றிணை 314ஆம் பாடலில் கூறுகின்றார்.

"முதிர்ந்தோர் இளமை ஒழிந்தும் எய்தார்
வாழ்நாள் வகையளவு அறிஞரும் இல்லை

மாரிப் பித்திகத்து ஈரிதழ் அலரி
நறுங்காழ் ஆரமொடு மிடைந்த மார்பிற்
குறும் பொறிக் கொண்ட கொம்மையம்
புகர்ப்பிற்
கருங்கண் வெம்முலை ஞெமுங்கப் புல்லிக்
கழிவ தாக கங்குல் என்றுதாம்
மொழிவன் மையிற் பொய்த்தனர் வாழிய
நொடிவிடு வன்ன காய்விடு கள்ளி
அலங்கலம் பாவை ஏறிப் புலம்புகொள்
புன்புறா வீழ்பெடைப் பயிரும்
என்றூழ் நீளிடைச் சென்றிசி னோரே"

(நற்.314).

**முப்பேன்** *mu-p-pēṉ*, பெ.(n.) மனிதர் தலைமுடியில் வாழும் சிற்றுயிர்; louse. "முப்பேன் பிடிப்பது மூதேவி உறவுக்கு அடையாளம்" (பழ.).

**முப்பொருள்** *mu-p-poruḷ*, பெ.(n.) கடவுள், உயிர், தளை (பதி, பசு, பாசம்) என்னும் மூன்று முதற்பொருள்கள் (சி.போ.பா.6:2, பக்.328); the three fundamental entities, *kaḍavuḷ, uyir, taḷai (padi, pašu, pāšam).*

[மூன்று + பொருள்.]

**முப்பொழுது** *mu-p-poḻudu*, பெ.(n.) முப்போது பார்க்க; see *mu-p-pōdu*. "முப்பொழு தேத்திய நால்வர்க்கு" (தேவா.திருவெழுகூற. 142, வரி.7).

[மூன்று + பொழுது.]

**முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்** *mup poḻudun-tiru-mēṉi-tīṇḍuvār*, பெ.(n.) தொகையடியாருள் காலை, உச்சி, மாலை என்ற மூன்று பொழுதுகளிலும் சிவனது திருமேனியைத் தொட்டுப் பூசனை செய்தற்குரிய ஆதிசைவப் பிராமணர் (தேவா.378. 10); *Adi-Šaiva* Brahmins, as entitled to touch the sacred idol of *Šiva* morning, noon and evening for anointing and decorating, one of *togai-y-aḍiyār.*

[முப்பொழுது + திருமேனி + தீண்டுவார்.]

**முப்பொறி** *mu-p-poṟi*, பெ.(n.) மனம், வாக்கு, காயம்; the three organs refersing to mind, mouth and body thought speech and action (சா.அக.).

[மூன்று + பொறி.]

**முப்போகம்** *mu-p-pōgam*, பெ.(n.) ஆண்டில் மூன்று முறை விளைவு (மகசூல்) பெறுகை (கோவை.); three time crop in a year.

[மூன்று + போகம்.]

**முப்போது** *mu-p-pōdu*, பெ.(n.) காலை, உச்சி, மாலை என்ற மூன்று வேளைகள்; the three portions of a day, viz., *kālai, ucci, mālai.* "முப்போதுங் கடைந்தீண்டிய வெண்ணெயி னோடு" (திவ்.பெரியாழ்.3.1: 5).

[மூன்று + போது.]

**முப்போதுந்திருமேனிதீண்டுவார்** *muppōdun-tirumēṉi-tīṇḍuvār,* பெ.(n.) முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார் பார்க்க; see *muppoḻudun-tirumēṉi-tīṇḍuvār.*

*[முப்போது + திருமேனி + தீண்டுவார்.]*

**மும்** *mum,* பெ.(n.) முருங்கைப்பட்டை; bark of drum stick tree - *Moringa obeitera* (சா.அக.).

**மும்பாடெபிம்பாடெ** *mumbāḍē-pimbāḍē,* பெ.(n.) மாடுகளுக்கு உள்ள இரண்டு சுழிகள் (கோவை); two curl-marks of cows. *அரச (இராச) சுழிக்கும் மந்திரச் சுழிக்கும் குறுக்கே உள்ள சுழிகள் (கோவை.).*

**மும்பாரம்** *mumbāram,* பெ.(n.) முன்பாரம் பார்க்க; see *muṉ-pāram.*

*[முன்பாரம் → மும்பாரம்.]*

**மும்மடங்கு** *mu-m-maḍaṅgu,* பெ.(n.) மூன்று பங்கு; three times over, three-fold. *"மும்மடங்கு பொலிந்த முகத்தினன்" (கம்பரா. காட்சிப்.19).*

தெ. மும்மடுகு

*[மூன்று + மடங்கு.]*

**மும்மடி** *mu-m-maḍi,* பெ.(n.) 1. மும்மடங்கு பார்க்க; see *mu-m-maḍaṅgu. "பதாதி மும்மடி சேனா முகமே" (பிங்.6:540).* 2. அழகின் குறியாக மகளிர் வயிற்றிற் காணப்படும் மூன்று மடிப்பு (இ.வ.); three creases in a woman's abdomen, considered as a sign of beauty.

க. மும்மடி

*[மூன்று + மடி.]*

**மும்மடியாகுபெயர்** *mummaḍi-y-āgupeyar,* பெ.(n.) கருமையென்று பொருள்படுங் கார் என்பது முகிலை (மேகத்தை)யுணர்த்திப் பின் மழைக்காலத்தை யுணர்த்திப் பின் மழைக்காலத்துப் பயிரை யுணர்த்துவதுபோல ஒன்றன் மேலொன்றாக மும்முறை சென்று பொருளுணர்த்தும் ஆகுபெயர் வகை (நன்.290, உரை); an *āgu-peyar* of treble transference, as kār which literally means black and figuratively means first cloud, secondly rainy season and thirdly the crop of the rainy season.

*[மும்மடி + ஆகுபெயர்.]*

**மும்மண்டலம்** *mu-m-maṇḍalam,* பெ. (n.) 1. கதிரவ (சூரிய) மண்டலம், திங்கள் (சந்திர) மண்டலம், நெருப்பு (அக்கினி) மண்டலமென்ற மூன்று பகுதிகள்; the three regions viz., *šūriyamaṇḍalam, šandira maṇḍalam, akkiṉi maṇḍalam.* 2. நிலம், வானம், மேலுலகம் (பூமி அந்தரம், சுவர்க்கம்) என்ற மூன்று பகுதிகள்; the triple regions viz., *pūmi, andaram, šuvarkkam.*

*[மூன்று + மண்டலம்.]*

**மும்மணி** *mu-m-maṇi,* பெ.(n.) 1. புருடராகம், வயிடூரியம், கோமேதகம் எனும் மூவகை மணி; the three gems, viz., *puruḍa-rāgam, vayiḍūriyam, kōmēdagam. "மும்மணி யாவன சொன்ன புருடராக முறுவயிடூரியங் கோமேதகமே" (திருவாலவா. 25:22).* 2. மும்மணிக்காசு பார்க்க; see *mu-m-maṇi-k-kāšu. "முத்தவள்ளியொடு மும்மணி சுடர" (பெருங்.உஞ்சை.34 : 203).* 3. திரிமணி (மணிமே.அரும்.); the three objects of veneration.

*[மூன்று + மணி.]*

**மும்மணிக்காசு** *mu-m-maṇi-k-kāšu,* பெ. (n.) அணிகலன் வகை; an ornament. *"மும்மணிக்காசும் பன்மணித் தாலியும்" (பெருங்.நரவாண.9 : 49).*

*[மும்மணி + காசு.]*

**மும்மணிக்கோவை** *mummaṇi-k-kōvai,* பெ.(n.) 1. மூன்று கொத்துள்ள கழுத்தணி வகை (வின்.); necklace of three strings of beads. 2. சிற்றிலக்கியம் 96-இல் அகவலும் வெண்பாவும் கலித்துறையும் முறையே மாறிவர அந்தாதித் தொடையாகப் பாடப்பெறும் முப்பது பாடல்களையுடைய இலக்கிய வகை (இலக்.வி.815); a poem of 30 stanzas, in which agaval, *veṇ-bā* and *kali-t-tuṟai* occur serially one after another in *andāti-t-toḍai,* one of 96 *pirapandam.*

*[மும்மணி + கோவை.]*

மும்மணிக்கோவை என்னும் சிற்றிலக்கிய வகையில் பல நூல்கள் உள்ளன. முனைவர் ந.வீ. செயராமன் தொகுத்த சிற்றிலக்கிய அகராதியில் 38 மும்மணிக்கோவை நூல்கள் இடம்பெற்றுள்ளன. மும்மணிக் கோவை என்பது விருந்து என்னும் வனப்பு வகையைச் சார்ந்தது. 8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சேரமான் பெருமாள் நாயனார் திருவாரூர் மும்மணிக் கோவை என்னும் நூலை இயற்றியுள்ளார். பெரும்பான்மையான, மும்மணிக்கோவை நூல்கள், ஊர்ப்பெயருடன் சேர்ந்து வருகின்றன. சில ஆசிரியர் பெயருடன் வருகின்றன. எ-டு: சிதம்பர மும்மணிக்கோவை, குமரகுருபரர் மும்மணிக்கோவை.

**மும்மணிமண்டலம்** *mummaṇi-maṇḍalam,* பெ.(n.) மும்மண்டலம் (பொருட்.நி.) பார்க்க; see *mu-m-maṇḍalam.*

*[மும்மணி + மண்டலம்.]*

**மும்மணிமாலை** *mummaṇi-mālai,* பெ.(n.) சிற்றிலக்கியம் 96-இல் வெண்பாவும் கலித் துறையும் அகவலும் முறையே மாறிவர அந்தாதித் தொடையாகப் பாடப் பெறும் முப்பது பாடல்களைக் கொண்ட இலக்கிய வகை (இலக்.வி.820); a poem of 30 stanzas in which *veṇbā, kali-t-tuṟai* and agaval occur serially one after another in *andāti-t-toḍai,* one of 96 *pirapandam.*

*[மும்மணி + மாலை.]*

இதன் ஆசிரியர் த.செய்யப்பர். இவர் 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் (சிற்றிலக்கிய அகராதி).

**மும்மதக்கோடு** *mummada-k-kōḍu,* பெ.(n.) செயற்கையாகக் கனிச்சாரங்களைக் கலந்த நஞ்சு (யாழ்.அக.); a mineral poison.

**மும்மதத்தன்** *mummadattaṉ,* பெ.(n.) பிள்ளையார்; *Gaṇēšaṉ. "மும்மதத்த னால்வாயைங்கரத்தன்" (சி.சி.காப்பு).*

*[மும்மதம் →மும்மதத்தன்.]*

**மும்மதம்** *mu-m-madam,* பெ.(n.) மத யானையின் கன்னமதம், கைமதம், கோசமதம் என்ற மூவகைப்பட்ட மதநீர்; exuation of a must elephant, as from three places, viz., *kaṉṉa-madam, kai-madam, kōša-madam. "பொழிந்திழி மும்மதக் களிற்றின் மருப்பும்" (தேவா.184, 5).*

*[மூன்று + மதம்.]*

**மும்மதன்** *mummadaṉ,* பெ.(n.) மும்மதத்தன் (பிங்.) பார்க்க; see *mummadattaṉ.*

**மும்மதில்** *mu-m-madil,* பெ.(n.) முப்புரம் (பிங்.) பார்க்க; see *mu-p-puram.*

*[மூன்று + மதில்.]*

**மும்மரம்** *mummaram,* பெ.(n.) 1. கடுமை; impetuosity, severity, vehemence, fierceness. *நோய் மும்மரமாயிருக்கிறது.* 2. விரைவு; swiftness. *மும்மரமாய்ப் போனான்.* 3. பகட்டாரவாரம்; pomp. *திருமணம் மும்மரமாய் நடக்கிறது.* 4. கவனம்; attentiveness, concentration of mind, eagerness. *மும்மரமாய்ப் படிக்கிறான்.*

தெ. மும்மர.

**மும்மரி-த்தல்** *mummari,* 4 செ.கு.வி.(v.i.) மும்முரி-த்தல் பார்க்க; see *mummuri-.*

*[மும்மரம் → மும்மரி-த்தல்.]*

**மும்மலக்கரு** *mum-mala-k-karu,* பெ.(n.) பன்றி மலம், மனிதர் மலம், தீட்டுச் சீலை; excreta of pig, man and menses cloth (சா.அக.).

*[மூன்று + மலம் + கரு.]*

**மும்மலத்தார்** *mummalattār,* பெ.(n.) 1. பிறவிப் பிணியர் (சகலர்); souls of the lowest class. 2. மலம் ஐந்துள் (ஆணவம், மாயேயம், திரோதானம் என்னும்) மூன்று மலமுடையவர் (விஞ்ஞானகலர்) (தத்துவப்.21, உரை); *viññāṉakalar,* as having three of the *aindu malam,* viz., *āṇavam, māyēyam, tirōdāṉam.*

*[மூன்று + மலத்தார்.]*

**மும்மலம்** *mu-m-malam,* பெ.(n.) ஆணவ மலம், கன்மமலம், மாயாமலம் என்ற மூவகை மலங்கள்; the three impurities of the soul which cling to it until it attains final liberation viz *āṇava-malam, kaṉma-malam, māyā-malam.* "மயக்கமாயதோர் மும்மலப் பழவல் வினைக்குள்" (திருவாச. 30:7). 2. ஐம்மலத்துள் ஆணவம், மாயேயம், திரோதானம் என்ற மூவகை மலங்கள்; the three out of the five impurities of the soul, viz., *āṇavam, māyēyam, tirōtāṉam.* 3. முக்குற்றம் பார்க்க (சீவக.96, உரை); see *mu-k-kuṟṟam.*

*[மூன்று + மலம்.]*

**மும்மறை** *mu-m-maṟai,* பெ.(n.) இருக்கு, எசூர், சாமம் எனும் மூன்று மறை; the three *vedās,* viz., *irukku, ecūr, šāmam.*

*[மூன்று + மறை.]*

**மும்மா** *mu-m-mā,* பெ.(n.) 8/20 என்ற பின்னவெண்; the fraction 8/20 as three *mās.*

*[மூன்று + மா.]*

**மும்மாங்காய்** *mu-m-māṅgāy,* பெ.(n.) மூன்று ஆண்டு வரை வெளிப்படாது இருக்கும் கருப்பம் (சீவரட்.); rare cases of pregnancy, believed to extend to three years.

*[மும்மா → மும்மாங்காய்.]*

**மும்மாமுக்காணி** *mummā-mukkāṇi,* பெ.(n.) 8/16 என்ற பின்னவெண்; the fraction 8/16 as a sum of *mummā* and *mukkāṇi.*

*[மும்மா + முக்காணி.]*

**மும்மாமுந்திரி** *mummā-mundiri,* பெ.(n.) 40/820 என்ற பின்னவெண்; the fraction 40/820 as a sum of *mummā* and *muṉdiri.*

*[மும்மா + முந்திரி.]*

**மும்மாரி** *mu-m-māri,* பெ.(n.) திங்க ளொன்றிற் பெய்யும் மூன்று மழை; three showers in a month. *"வான மும்மாரி பொழிக" (மணிமே. 1: 33).*

*[மூன்று + மாரி.]*

**மும்மீன்** *mu-m-mīṉ,* பெ.(n.) ஐந்தாவது விண் மீனான மாழ்கு (மிருக சீரிடம்) (திவா.); the fifth naksatra.

*[மூன்று + மீன்.]*

**மும்முக்காணி** *mu-m-mukkāṇi,* பெ.(n.) மும்மாமுக்காணி பார்க்க; see *mummā-mukkāṇi.*

*[மூன்று + முக்காணி.]*

**மும்முட்டி** *mu-m-muṭṭi,* பெ.(n.) சிற்றாமுட்டி பேராமுட்டி நாக முட்டி யெனும் செடிகள் (தைலவ.தைல76); the three plants whose names end in *muṭṭi*, viz *ciṟṟāmuṭṭi, pērāmuṭṭi, nākamuṭṭi.*

*[மூன்று + முட்டி.]*

**மும்முடிச்சோழன்** *mu-m-muḍi-c-cōḻaṉ,* பெ.(n.) தமிழ்நாட்டு வேந்தர் மூவருக்குமுரிய முடிகளை அணிந்த சோழன் முதல் இராசராசன் (கல்.); *Rājarāja* I, as wearing the crowns of the three kings of the Tamil country.

*[மூன்று + முடி + சோழன்.]*

**மும்முரசு** *mu-m-murašu,* பெ.(n.) 1. நாயமுரசு (நியாய முரசு), வீர முரசு, ஈக (தியாக) முரசாகிய மூன்று முரசுகள்; the three drums, viz., *niyāya-murašu, vīra-murašu, tiyāga-murašu. "மும்முரசு முத்தமிழும்" (வள்ளுவமா. 10) (கலித்.132, உரை).* 2. வீரமுரசு, நாய (நியாய) முரசு, மணமுரசாகிய மூன்று முரசுகள்; the three drums, viz. *vīra-murašu, niyāya-muracu, maṇa-murašu.* 3. சேர, சோழ பாண்டியர்க்குரிய மூன்று முரசுகள் (கலித். 132, உரை); the drums of *Cēraṉ, Cōḻaṉ* and *Pāṇḍiyaṉ.*

*[மூன்று + முரசு.]*

**மும்முரம்** *mummuram,* பெ.(n.) 1. செயல் செய்தல், செயல் நடைபெறுதல் முதலியவற்றில் விரைவு, கவனம், ஆகியவற்றுடன் கூடியவை; excitement, briskness. *வேலை மும்முரத்தில் சாப்பிடக் கூட மறந்துவிட்டேன். தேர்தலுக்கான ஏற்பாடு மும்முரமாக நடந்து வருகிறது.* 2. மும்மரம் பார்க்க; see *mummaram.*

**மும்முரி-த்தல்** *mummuri-,* 4 செ.கு.வி.(v.i.) கடுமை (உக்கிரம்) கொள்ளுதல்; to rage, storm, to be violent, vehement or impetuous.

தெ. மும்மரின்சு.

*[மும்முரம் → மும்முரி-த்தல்.]*

**மும்முறை** *mu-m-muṟai,* பெ.(n.) மூன்று முறை; three times. *'திருந்தடி மும்முறை வணங்கி' (மணிமே.12:6, உரை).*

*[மூன்று + முறை.]*

**மும்முறைகுதித்துத்தாண்டுதல்** *mummuṟai-kudittu-t-tāṇḍudal,* பெ.(n.) ஓடி வந்து காலால் உந்தி மூன்று முறைத் தாண்டிக் குதித்து முடிக்கும் ஒரு வகை விளையாட்டுப் போட்டி; tripple jump.

*[மூன்று + முறை + குதித்து + தாண்டுதல்.]*

**மும்மூடம்** *mu-m-mūḍam,* பெ.(n.) மூவகை அறிவின்மை, மடமை; the three kinds of folly.

*[மூன்று + மூடம்.]*

1. கனிம மூடம் (உலோக மூடம்), 2. தேவதா மூடம், 3. பாசண்ட மூடம்.

**மும்மூடர்** *mu-m-mūḍar,* பெ.(n.) முழுமூடர் (திருநூற்.53, உரை); downright fools.

*[மும்மூடம் → மும்மூடர்.]*

**மும்மூர்த்தி** *mu-m-mūrtti,* பெ.(n.) 1. திரிமூர்த்தி; the Hindu triad. *"பொற்பூடணர் மும்மூர்த்திகளாம் விமலனார்க்கே" (சிவரக. கணபதிவந்தனை.15).* 2. திரிகடுகம் (தைலவ. தைல.); three medicinal stuffs.

*[மூன்று + மூர்த்தி.]*

**மும்மூலி** *mu-m-mūli,* பெ. (n.) 1. மூன்று வகை மூலிகைகள்; the three kinds of herbs. 2. ஒரு தசையின் பெயர்; triceps.

*[மூன்று + மூலி.]*

**மும்மூன்று** *mu-m-mūṉṟu,* பெ.(n.) 1. ஒன்பது; three times three. 2. தனித்தனி மூன்று; three by three, threes.

*[மூன்று + மூன்று.]*

**மும்மை** *mummai,* பெ.(n.) 1. மூன்றாயிருக்குந் தன்மை (யாழ்.அக.); the state of being three. 2. மூன்று; three, three fold. *'தெரிமாண் டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' (குறள், 23, உரை).* 3. உம்மை, இம்மை மறுமையாகிய மூவகை நிலைபேறு (திவா.); the three states of existence, viz., *ummai, immai, maṟumai.* 4. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூன்று காலங்கள்; the three tenses, viz., *iṟappu, nigaḻvu, edirvu. "எதிர்மறை மும்மையு மேற்கும்" (நன்.145).*

க. மூமெ

*[மூன்று → மும்மை.]*

**மும்மைத்தமிழ்** *mummai-t-tamiḻ,* பெ.(n.) 1. முத்தமிழ் பார்க்க; see *mu-t-tamiḻ.* 2. எழுத்து, சொல், பொருள் என்னும் முக்கூறுடைய தமிழிலக்கணம் (மாறனலங். சிறப்புப்பாயிரம்); the three sections of Tamil grammar, viz., *eḻuttu, šol, poruḷ.*

*[மும்மை + தமிழ்.]*

**மும்மையணு** *mummai-y-aṇu,* பெ.(n.) காணக்கூடிய நிறையளவில் மிக நுண்ணியதெனக் கருதப்படுவதும் சாளர வாயிலில் கதிரொளியில் தோன்றும் துகள் வடிவானதும் ஆகிய அணு (சி.போ.பா.1 : 1, பக்.30, சுவாமிநா.); mote in a sunbeam.

*[மும்மை + அணு.]*

**மும்மொழி** *mu-m-moḻi,* பெ.(n.) பழி கூறல், புகழ் கூறல், மெய்கூறல் ஆகிய மூன்று வகைப்பட்ட மொழி (சூடா.); the three kinds of speech, viz., *paḻi-kūṟal, pugaḻ kūṟal, mey-kūṟal.*

*[மூன்று + மொழி.]*

**முமுக்கு** *mumukku,* பெ.(n.) முமுட்சு, 1 (நாமதீப.134) பார்க்க; see *mumuṭšu, 1.*

**முமுட்சு** *mumuṭšu,* பெ.(n.) 1. வீடுபேறடைய விழைவோர்; one who is eager for salvation. *"முத்தனா மவனே நாடரிய முமுட்சு" (வேதா.சூ.14).* 2. துறவு (யாழ்.அக.); renunciation.

**முமுடம்** *mumuḍam,* பெ.(n.) முழுத்துறவு (வின்.); total or complete renunciation.

**முமூட்சு** *mumūṭšu,* பெ.(n.) முமுட்சு, 1 (வின்.) பார்க்க; see *mumuṭšu, 1.*

**முயக்கம்** *muyakkam,* பெ.(n.) 1. தழுவுகை; embrace. *"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்" (குறள், 913).* 2. புணர்ச்சி; copulation. *'முயக்கம் பெற்றவழி' (ஐங்குறு. 93, உரை).* 3. தொடர்பு; connection; uniting, joining. *"ஆணவத்தின் முயக்கமற்று" (தணிகைப்பு.நந்தி.110).*

*[முயக்கு →முயக்கம்.]*

**முயக்கிடைமலைவு** *muya-k-kiḍai-malaivu,* பெ.(n.) தழுவுதற்கு இடையே உள்ள மாறுபாடு; variation of embrace. *"எனைத்தென் றெண்ணுகோ முயக்கிடை மலைவே" (குறுந்.237:7).*

*[முயக்கு + இடை + மலைவு.]*

**முயக்கு** *muyakku,* பெ.(n.) முயக்கம் பார்க்க; see *muyakkam. "வளியிடை போழப் படாஅ முயக்கு" (குறள், 1108). "முன்பு மாதவப் பயத்தினாலவன் முயக்கமர்வார்" (தணிகைப்பு. நாட்டுப்.48).*

*[முயங்கு →முயக்கு.]*

**முயங்கிக்கொள்(ளு)-தல்** *muyaṅgi-k-kol(lu)-,* 16 செ.கு.வி.(v.i.) கணவனு மனைவியுமாய் வாழ்தல் (வின்.); to live together as husband and wife.

*[முயங்கு + கொள்(ளு)-தல்.]*

**முயங்கு-தல்** *muyaṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பொருந்துதல்; to join, to cling to. *"முலையு மார்பு முயங்கணி மயங்க" (பரிபா.6:20).* 2. தழுவுதல்; to embrace. *'முயங்கிய கைகளை யூக்க" (குறள், 1238).* 3. புணர்தல்; to copulate with. 4. செய்தல்; to do, perform. *"மணவினை முயங்க லில்லென்று" (சூளா.தூது.100).*

*[முள் →முய் →முய →முயங்கு →முயங்கு-தல்.]*

**முயல்¹(லு)-தல்** *muyl-,* 14 செ.குன்றாவி. (v.t.) 1. விடாதுபற்றி ஊக்கத்தோடு செய்தல்; to practise, persevere, make continued exertion. *"செய்தவ மீண்டு முயலப்படும்" (குறள், 265).* 2. வருந்துதல்; to take pains. *"தவங்கள் முயன்று செய்தாலும்" (தஞ்சைவா.19).* 3. தொடங்குதல் (வின்.); to begin, undertake.

**முயல்²** *muyal,* பெ.(n.) நீண்ட காதுக ளுடையதும் வேகமாக ஓடக் கூடியதும் கிழங்கு முதலியவற்றை உண்டு வாழ்வதுமான சிறு விலங்கு; hare, rabbit, *Lepus nigricollis. "காண முயலெய்த வம்பினில்" (குறள், 772). முயல் வேகத்தை ஆமை வென்றது.*

க. மொல.

புல் நிறைந்த இடங்களில் வாழும் சிறிய விலங்கு, தண்ணீர் கிடைக்காவிடின் பனிநீரை உண்ணும்.



**முயல்³** *muyal,* பெ.(n.) போர் (சது.); war.

**முயல்கண்டன்** *muyal-kaṇḍaṉ,* பெ.(n.) முயல்வலி பார்க்க; see *muyal-vali.*

**முயல்காதுக்கீரை** *muyal-kādu-k-kīrai,* ஒருவகைக் கொடி; a kind of creeper - *Ipomoea biloba.*

*[முயல் + காது + கீரை. முயல் காதைப் போன்ற நீண்ட இலையையுடைய கீரை.]*

**முயல்கிறுக்கு** *muyal-kiṟukku,* பெ.(n.) குணப்படுத்த முடியாத நாட்பட்ட நோய்; an incurable chronical, disease.

**முயல்புல்** *muyal-pul,* பெ.(n.) ஒருவகைப் புல்; hare's grass.

*[முயல் + புல்.]*

**முயல்புழுக்கைக்களிம்பு** *muyal-puḻukkai-k-kaḷimbu,* பெ.(n.) கண்ணோய் மருந்து; a medicine for eye diseases.

*[முயல் + புழுக்கை + களிம்பு.]*

**முயல்மீன்** *muyal-mīṉ,* பெ.(n.) கடல்மீன் வகை; a sea fish.

*[முயல் + மீன்.]*



**முயல்வலி** *muyal-vali,* பெ.(n.) வாயால் மண்ணைக் கவ்வி நுரை தள்ளி துள்ளத் துள்ள வலிக்கும் ஒரு வகை வலிப்பு; a kind of rhegmatic disease. *"பெருவியாதி முயல்வலி பீனசம்" (குற்றா. தல.மந்தமா.102).*

ம. முயல்வலிப்பு

*[முயல் + வலி.]*

இந்த வலிப்புத் தண்ணீரைக் கண்டாலும், தண்ணீரைத் தலையில் தெளித்தாலும், நெருப்பைக் கண்டாலும் நெருப்பின் சூடுபட்டாலும் மற்றும் மக்கள் கூட்டத்தைக் கண்டாலும் அடிக்கடி உண்டாகும் ஒருவகை நோய்.

**முயல்வாதம்** *muyal-vādam,* பெ.(n.) முயல் வலி (இ.வ.) பார்க்க; see *muyal-vali.*

*[முயல் + வாதம். Skt. vāta > த. வாதம்.]*

**முயல்வு** *muyalvu,* பெ.(n.) முயலுகை; endeavouring, persevering, exercising, effort. *"முயல்வா லளித்த நின்னருளால்" (ஞானவா.இட்சு.10).*

*[முயல் →முயல்வு.]*

**முயலகநோய்** *muyalaga-nōy,* பெ.(n.) முயல்வலி பார்க்க; see *muyal-vali.*

**முயலகன்¹** *muyalagaṉ,* பெ.(n.) கெந்தக நஞ்சு; a kind of arsenic.

**முயலகன்²** *muyalagaṉ,* பெ.(n.) 1. நடவரசப் பெருமான் ஏறி நடிக்கும் பூதம்; a *Būta* over whose body *Naḍarājā* dances. *"மூடாய முயலகன்" (தேவா.878, 3).* 2. முயல்வலி பார்க்க; see *muyal-vali. "மன்னு பெரும் பிணியாகும் முயலகன் வந்தணைவுற" (பெரியபு.திருஞான.311).*

*[முயல்¹ → முயலகன்.]*

**முயலடி** *muyal-aḍi,* பெ. (n.) கலவியில் நிகழும் நகக்குறி ஆறனுள் மகளிரின் உடம்பில் முயலடிபோன்று ஆடவர் நகத்தினாற் பதிக்கும் அடையாளம்; nail mark resembling a hare's foot, made on the body of a woman, during sexual union, one of six *naga-k-kuṟi. "முயலடி யென்னவே மொழிய வேண்டுமால்" (கொக்கோ. 5:61).*

*[முயல் →முயலடி.]*

**முயலாக்கிரம்** *muyalākkiram,* பெ. (n.) உலக்கைத்தலை (யாழ்.அக.); head of pestle.

**முயலின்கூடு** *muyaliṉ-kūḍū,* பெ. (n.) முயற்கூடு (சூடா.) பார்க்க; see *muyaṟ-kūḍu.*

*[முயல் + கூடு.]*

**முயலுப்பு** *muyal-uppu,* பெ. (n.) வளையலுப்பு (மூ.அ.); glass-gall.

*[முயல் + உப்பு.]*

**முயலை** *muyalai,* பெ. (n.) முசலை (யாழ்ப்.) பார்க்க; see *mušalai.*

**முயற்களங்கம்** *muyaṟ-kaḷaṅgam,* பெ. (n.) முயற்கறை பார்க்க; see *muyaṟ-kaṟai.*

*[முயல் + களங்கம்.]*

**முயற்கறை** *muyaṟ-kaṟai,* பெ. (n.) நிலவி னிடத்துள்ள களங்கம்; spots on the moon, as like a hare. *"முயற்கறை மதிதவழ் முன்றிற் குன்றுகள்" (கம்பரா.சேது.10).*

*[முயல் + கறை.]*

நிலவில் காணப்படும் முயல்போன்ற உருவம்.

**முயற்காதிலை** *muyaṟ-kādilai,* பெ. (n.) முயலின் காதைப் போன்ற இலை; a plant having leaves resembling the ears of hare.

*[முயற்காது + இலை.]*

**முயற்காது** *muyaṟ-kādu,* பெ. (n.) இரு பக்கமும் காதுள்ள மரை வகை; fly-nut (செ.அக.).

**முயற்கூடு** *muyaṟ-kūḍu,* பெ. (n.) நிலவு (பிங்.); moon. *"முயற்கூடு கண்டு சாலத்தாம் பனிக்கும் பொய்கைத் தாமரை" (சீவக. 2284).*

*[முயல் + கூடு.]*

**முயற்கொம்பு** *muyaṟ-kombu,* பெ. (n.) உலகில் இல்லாத பொருள்; non-existing as the horns of rabbit. *"கான்முயற் கொம்பே யென்கோ" (தாயு.தேன்முகம்.1).*

*[முயல் + கொம்பு.]*

இல்லாதனவற்றிற்கு இப்பொருளை ஏற்றிச் சொல்வது, முயலுக்கு கொம்பில்லாதது போல் இன்மையைக் காட்டும்.

**முயற்கோடு** *muyaṟ-kōḍu,* பெ. (n.) முயற்கொம்பு (வின்.) பார்க்க; see *muyaṟ-kombu.*

*[முயல் + கோடு.]*

**முயற்சாதி** *muyaṟ-šāti,* பெ. (n.) உடற்கூற்றை வைத்துப் பிரிக்கப்படும் ஆண் இனத்தி லொன்று; one of the four divisions of men.

**முயற்சி[1]** *muyaṟci,* பெ. (n.) 1. விடாமுயற்சி; effort, exertion, activity, application. *"முயற்சி மெய்வருத்தக் கூலி தரும்" (குறள், 619). முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்.*

*மருத்துவர் எவ்வளவோ முயற்சி செய்தும் நோயாளியைக் காப்பாற்ற முடியவில்லை.* 2. ஊக்கம் (சூடா.); perseverence, diligence, industry. 3. வேலை; employment. *உனக்கு முயற்சி என்ன?* 4. குறிப்பிட்டநேரத்தில் முனைப்புடன் மேற்கொண்ட செயல்; attempt. *பேருந்தைக் கடத்த மேற்கொண்ட முயற்சி முறியடிக்கப்பட்டது.*

*[முயல்→முயற்சி= ஒன்றிற்காக மேற்கொள்ளும் உழைப்பும் செயல்பாடும்.]*

முயற்சி²–த்தல் *muyarci-,*4 செ.குன்றாவி. (v.t.) முயலுதல், முயற்சி செய்தல்; try hard. *எவ்வளவோ முயற்சித்தும் அவனுக்கு வேலை வாங்கிக் கொடுக்க முடியவில்லை.*

*[முயல் →முயற்சி →முயற்சி–த்தல்.]*

முயற்செவி *muyar-cevi,* பெ.(n.) செடி வகை (M.M.339); hare's-ear, shrub, *Emilia sonchifolia.*

ம. முயல்செவி

*[முயல் + செவி. முயற்செவியைப் போன்ற இலைகளையுடைய செடிவகை.]*

முயற்செவிக்கள்ளி *muyar-cevi-k-kalli,* பெ.(n.) இலைக்கள்ளி; five - tubercled spurge.

*[முயல் + செவி + கள்ளி.முயற்செவியைப் போன்ற இலைகளையுடைய செடிவகை.]*

முயற்சேவிதம் *muyar-cēvidam,* பெ.(n.) மயிற்கொன்னை; caesal pinia pulcherrima alias poinciana regia.

முயற்சை *muyarcai,* பெ.(n.) முயற்சி, 1, 2 பார்க்க; see *muyarci1, 2.*

*[முயற்சி →முயற்சை.]*

முயற்புல் *muyar-pul,* பெ.(n.) 1. மூவகைப் புல்; creeping panic grass, couch grass, harialli grass - *Cynodon dact ylon* (சா.அக.). 2 அறுகம் புல் (மூ.அ.) (M.M.349); harialli grass.

*[முயல் + புல்.]*

முயற்புழுக்கைக்களிம்பு *muyar-pulukkai-k-kalimbu,* பெ.(n.) கண்புகைச்சல் நோயைத் தீர்க்கும் மருந்து; an eye medicine for eye disease (சா.அக.).

*[முயற்புழுக்கை + களிம்பு. முயற்புழுக்கைப் போல் இருக்கும் களிம்பு மருந்து.]*

முயற்பேலகம் *muyar-pēlagam,* பெ.(n.) முயற்செவிக்கள்ளி பார்க்க; see *muyar-cevi-k-kalli* (சா.அக.).

முயற்றி *muyarri,* பெ.(n.) முயற்சி, 1, 2 பார்க்க; see *muyarci, 1, 2. "முயற்றியா லிடர்கள் வந்தால்" (தேவா.1104, 9).*

*[முயற்சி →முயற்றி.]*

முயற்றிசை *muyarrišai,* பெ.(n.) வடகீழ்த் திசை (வின்.); the north-eastern quarter, as the region, of the hare.

முயற்று *muyarru,* பெ.(n.) முயற்சி, 1, 2 பார்க்க; see *muyarci, 1, 2. "முயற்றின்மை யின்மை புகுத்தி விடும்" (குறள், 616).*

*[முயற்சி →முயற்று.]*

முயன்மார்க்கம் *muyan-mārkkam,* பெ.(n.) குதிரை நடை வகை ஐந்தனுள் முயலின் ஓட்டம் போன்ற நடை (சசகதி) ; a pace of horse.

*[முயல்+மார்க்கம். மார்க்கம்=குதிரையின் நடை.]*

**முயனோய்** *muyaṉōy,* பெ.(n.) முயல்வலி (கூர்மபு.நித்தியகன்ம, 10) பார்க்க; see *muyal-vali.*

*[முயல் + நோய்.]*

**முயிற்றுப்புல்** *muyiṟṟu-p-pul,*பெ.(n.) புல் வகை (மூ.அ.); ant-grass - *Pommereulla.*

*[முயிறு + புல் – முயிறுபுல்→முயிற்றுப்புல்]*

**முயிற்றுமுட்டை** *muyiṟṟu-muṭṭai,* பெ.(n.) முயிறுமுட்டை பார்க்க; *muyiṟu-muṭṭai* (சா.அக.).

**முயிற்றெறும்பு** *muyiṟṟeṟumbu,* பெ.(n.) முசிறு, 1 பார்க்க; see *mušiṟu,* 1.

*[முயிறு + எறும்பு.]*

**முயிறு** *muyiṟu,*பெ.(n.) முசிறு, 1 பார்க்க; see *mušiṟu. "முயிறுமூசு குடம்பை" (நற்.180).*

*[முசிறு →முயிறு.]*

**முயிறுமுட்டை** *muyiṟu-muṭṭai,*பெ.(n.) முயிற்றெறும்பு முட்டை; the egg of a red ant (சா.அக.).

*[முயிறு + முட்டை.]*

**முரகரி** *murakari,*பெ.(n.) முராந்தகன் (சங்.அக.) பார்க்க; see *murāndagaṉ.*

**முரங்கினம்** *muraṅgiṉam,*பெ.(n.) மிளகு; pepper - *Pipernigrum* (சா.அக.).

**முரச்சு-தல்** *muraccu-,*5 செ.குன்றாவி. (v.t.) முற்றுவித்தல்; to accomplish, make ready. *"முரசுசெய முரச்சி" (பதிற்றுப்.44:16)*

*[முரஞ்சு-தல் → முரச்சு-தல்.]*

**முரசக்கொடியோன்** *muraša-k-koḍiyōṉ,* பெ.(n.) முரசத்தைக் கொடியிலுடைய தருமன் (பிங்.); Dharmaputra, as having the emblem of a drum on his banner.

*[முரசம் + கொடியோன்.]*

**முரசகேது** *muraša-kēdu,*பெ.(n.) முரசக் கொடியோன் பார்க்க; see *muraša-k-koḍiyōṉ. "கேட்டிநீ முரசகேது" (பாரத. அருச்சுனன்றவ.16).*

*[முரசம் + Skt. கேது.]*

**முரசபந்தம்** *muraša-bandam,*பெ.(n.) மிறைக்கவி வகை (தண்டி, 96, உரை); a kind of cittira-kavi.

**முரசபலம்** *muraša-balam,*பெ.(n.) பலா மரம் (யாழ்.அக.); jack-tree.

*[முரசம் + பலம். பழம்→பலம்.]*

**முரசம்** *murašam,*பெ.(n.) 1. பறைப் பொது (சூடா.); drum, tabour. *"ஆனக முரசஞ் சங்க முருட்டொடு மிரட்டவாடி" (கம்பரா. களியாட்டு.3).* 2. மருத நிலப்பறை வகை (பிங்.); a drum of the agricultural tracts. 3. பெருமுரசு, போர்ப்பறை; war drum. *"முரச மிடைப்புலத் திரங்க வாரமர் மயங்கிய ஞாட்பில்" (புறநா.288)., "இரங்கிசை முரசம் ஒழியப் பரந்தவர்" (அகநா.116:17).*

வ. முரஜ.

*[முரசு →முரசம் = பெருமுரசு.]*

**முரசல்** *murašal,*பெ.(n.) ஒடியக்கூடிய, முருடுள்ளது; that which is brittle. *இந்த வெற்றிலை முரசல் (இ.வ.).*

*[முரஞ்சு-தல்→முரசல்.]*

**முரசவாகை** *muraša-vāgai,* பெ.(n.) அரசனது மாளிகையில் ஆடுவெட்டிப் படையல் செய்திடும் வீரமுரசினது தன்மையைக் கூறும் புறத்துறை (பு.வெ.8:4); theme describing the ceremony of offering oblations to the *vira-murašu* in a king's palace.

*[முரசம் + வாகை.]*

**முரசவுழிஞை** *muraša-v-uḷiñai,* பெ.(n.) பொன்னாலே செய்த உழிஞைமாலை யணிந்து ஆடுவெட்டியிடும் காவுதனை நுகரும் வீரமுரசின் நிலைமையைக் கூறும் புறத்துறை (பு.வெ.6:4); theme describing the *vira-murašu* being decorated with a garland of *uḷiñai* flowers made of gold and being offered goat-sacrifice.

*[முரசம் + உழிஞை.]*

**முரசறை-தல்** *murašaṟai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. செய்தியை யாவரும் அறிய பறையடித்துச் சொல்லுதல்; to announce by beat of drum. 2. வெளியிடுதல்; to proclaim. *"அருமறைகள் முரசறையவே" (தாயு. திருவருள்.3).*

*[முரசு + அறை-தல்.]*

**முரசன்** *murašaṉ,* பெ.(n.) கந்தக நஞ்சு; a kind of arsenic.

**முரசு[1]** *murašu,* பெ.(n.) 1. பல்லினீறு; gum. 2. பல்லை இணைத்திருக்கும் உறத்த தோல்; the hard fleshy substance which invests the teeth (சா.அக.).

**முரசு[2]** *murašu,* பெ.(n.) முற்காலத்தில் வேந்தர்கள் தங்கள் ஆணையை மக்களுக்கு அறிவிக்கப் பயன்படுத்திய அரைகோள வடிவத்தில் பெரிதாக இருக்கும் ஒருவகைத் தோற் கருவி; a kind of drum formely used for royal proclamations etc. *"முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு" (அகநா.156:1), "ஆண்டலை மதில ராகவும் முரசுகொண்டு" (நற்.39:8), "முரசுமுழங்கு நெடுநக ரரசுதுயி லியாது" (பதிற்றுப்.12:7). "இடியென முழங்கு முரசின்" (புறநா.17).*

*[முருள்→முருடு→(முருசு)→ முரசு (வ.மொ.வ.). முருடு = பறைப்பொது.]*

முரசாவது ஏதேனமொன்றை அறிவிப்பதற்கோ அல்லது யாரேனும் ஒரு சாரரை அழைப்பதற்கோ அடிக்கப்படும் பேரிகை என்னும் பெரும்பறையாகும். அது கொடை (தியாக) முரசு, முறை (நியாய) முரசு, போர் (வீர) முரசு என மூவகைப்பட்டதாகக் கூறப்படும். இவற்றுள் சிறந்தது போர்முரசாகும். அதற்குத் தனியாக ஒரு கட்டில் உண்டு. இதை முரசுகட்டில் என்றழைப்பர்.

போர்முரசு, படை திரட்டுவதற்கு நகரத்திலும் பொருநரை ஊக்குவதற்குப் போர்க்களத்திலும், வெற்றி குறித்து இரண்டு இடங்களிலும் இடியோசை போல் முழக்கப்படும். இம் முரசாவது புலியை வென்ற கொல்லேற்றின் சீவாத தோலால் போர்க்கப் பெறுவது மரபாகும். இதனை,

*"புனைமருப் பழுந்தக் குத்திப் புலியொடு*
*பொருது வென்ற*
*கனைகுர லுருமுச் சீற்றக் கதழ்விடையுரிவை*
*போர்த்த*
*துணைகுரல் முரசம்" (சீவக.2899)* எனும் பாடல் வரியிலும்.

*"கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த*
*மாக்கண் முரசம்" (மதுரை.732-3)* எனும் பாடல் வரியிலும் அறியலாம்.

போர்முரசு தெய்வத்தன்மை யுள்ளதாகவும், வெற்றியைத் தருவதாகவுங் கருதுவதால் அதற்கு மாலையும் பீலியும் அணிந்து பலியிட்டும் நீராட்டுவதும் வழக்கமாம் (பழ.த.ஆ.பக்.23).



**முரசு³** *murašu*, பெ.(n.) இருபத்தாறாவது விண் மீனான முற்கொழுங்கால் (உத்திரட்டாதி); the 26th naksatra.

*[முரசம் → முரசு.]*

**முரசுகட்டில்** *murašu-kaṭṭil*, பெ.(n.) அரசர்க்குரிய முரசு வைக்கும் இருக்கை (புறநா.50, தலைப்பு); dais for the royal drum.

*[முரசு + கட்டில்.]*

**முரசுயர்த்தோன்** *murašuyarttōṉ*, பெ.(n.) முரசக்கொடியோன் பார்க்க; see *muraša-k-koḍiyōṉ*. *"முரசுயர்த்தோ யுனதருளுக் கஞ்சினேனே" (பாரத.கிருட்டிணன்றூ.13).*

*[முரசு + உயர்ந்தோன்.]*

**முரசுவெட்டி** *murašu-veṭṭi*, பெ.(n.) பல்லீறைப் பிளக்க உதவும் ஆய்தம்; a knife for incising the gums - Gum ancet (சா.அக.).

*[முரசு + வெட்டி.]*

**முரசுவைத்தல்** *murašu-vaittal*, பெ.(n.) பேரிகையுடன் செல்லும் மதிப்புயர்வு டைமை (வின்.); possessing or being allowed to keep drums, as a paraphernalia.

*[முரசு + வைத்தல்.]*

**முரசை** *murašai*, பெ.(n.) குபேரன் மனைவி (அபி.சிந்.); wife of Kubera.

**முரஞ்சியூர்முடிநாகராயர்** *murañji-y-ūr-muḍi-nāgarāyar*, பெ.(n.) தலைக்கழகப் புலவர்; first *Šaṅgam* poet (அபி.சிந்.).

*[முரஞ்சி + ஊர் + முடி + நாகராயர்.]*

**முரஞ்சு¹-தல்** *murañju-*, 5 செ.கு.வி.(v.i.) 1. முதிர்தல்; to mature, to be old, ancient. *"முரஞ்சன் முதிர்வே" (தொல்.சொல்.333).* 2. வலி பெறுதல்; to gain strength. *"நோயுடல் முன்செயல் முரஞ்சியதெவண்" (ஞானா.59).* 3. நிரம்புதல்; to be full or abundant. *"பூண்களெல்லா முரஞ்சொளி கான்று மின்ன" (காஞ்சிப்பு. தீர்த்த.89).*

**முரஞ்சு²** *murañju*, பெ.(n.) 1. முதிர்கை; maturing. *"முரஞ்சுகொண் டிறைஞ்சின வலங்குசினைப் பலவே" (மலைபடு.144).* 2. பாறை (சூடா.); rock, ledge.

**முரட்கை** *muraṭkai*, பெ.(n.) *முரற்கை, 3* (சது.) பார்க்க; see *muraṟkai, 3*.

**முரட்டடி** *muraṭṭaḍi*, பெ.(n.) இணக்கமற்ற குணம்; rough, rude, reckless, lawless behaviour. *"முரட்டடித் தவத்தக் கன்றன் வேள்வி" (தேவா.710, 5).*

*[முரடு + அடி.]*

**முரட்டாட்டம்** *muraṭṭāṭṭam*, பெ.(n.) முரட்டடி (யாழ்.அக.) பார்க்க; see *muraṭṭaḍi*.

*[முரடு + ஆட்டம்.]*

**முரட்டுக்கழுத்து** *murattu-k-kaluttu,* பெ. (n.) 1. நுகம்பூணா எருத்தின் கழுத்து (வின்.); stiff neck, as of an ox not broken to the yoke. 2. முரட்டடி (யாழ்.அக.)பார்க்க; see *murattadi.*

*[முரடு + கழுத்து.]*

**முரட்டுக்குணம்** *murattu-k-kunam,* பெ.(n.) முரட்டடி (வின்.) பார்க்க; see *murattadi.*

*[முரடு + குணம்.]*

**முரட்டுத்தனம்** *murattu-t-tanam,* பெ.(n.) முரட்டடி பார்க்க; see *murattadi.*

*[முரடு + தனம்.]*

**முரட்டுப்பாட்டு** *murattu-p-pāttu,* பெ.(n.) 1. இனிமையற்ற இசைப்பாட்டு; music harsh to the ear. 2. அரிதிற்பாடும் பாட்டு; melody difficult to be sung.

*[முரடு + பாட்டு.]*

**முரட்டுப்பெண்** *murattu-p-pen,* பெ.(n.) பிடிகொடாப் பெண்; obstinate, unyielding woman. முரட்டுப் பெண்ணும் சுருட்டுப் பாயும் (பழ.).

*[முரடு + பெண்.]*

**முரட்டுமயிர்** *murattu-mayir,* பெ.(n.) பருமயிர்; coarse hair.

*[முரட்டு + மயிர்.]*

**முரட்டோலை** *murattōlai,* பெ. (n.) வளைந்திருக்கும் ஓலைமுறி (வின்.); uneven strip of palm-leaf.

*[முரடு + ஓலை.]*

**முரட்பயம்பு** *murat-payambu,* பெ.(n.) ஏற்றிழிவையுடைய நிலத்திலுள்ள குழி; pit or trench in an uneven tract. *"பரண்முரட் பயம்பிடை" (சீவக.1900).*

*[முரண் + பயம்பு.]*

**முரடன்** *muradan,* பெ.(n.) 1. பண்பு தெரியாதவன்; rude man. *சிறுவனாயிருந்த போதே முரடன் என்று பெயர் வாங்கியவன்.* 2. ஒட்டாரம்பிடித்தவன் (பிடிவாதக்காரன்); obstinate man. 3. முருடன், 3 பார்க்க; see *murudan, 3.*

க. மொரட

*[முரடு →முரடன் = மென்மையும் நளினமும் இல்லாமல் சினமுடன் நடந்து கொள்பவன்.]*

**முரடு¹** *muradu,* பெ.(n.) 1. உறுதியும் கடினத் தன்மையும் கொண்டது, கரடு; roughness, unevenness; ruggedness. *முரட்டுக் கட்டை, முரட்டுக்கை, முரட்டுத்துணி.* 2. மரக்கணு; knob or knot, as in timber. 3. உடம்பின் மூட்டு (வின்.); joint of the body. 4. மதிப்புரவு (மரியாதை) இன்மை; ill-temper, wildness, rudeness. 5. ஒட்டாரம் (பிடிவாதம்); obstinancy. 6. பருமை; largeness, bigness. முரட்டுப்பாம்பு. 7. அறிவின் வழி இல்லாத, மடத்தனம்; unreasonableness. *முரட்டு வலிமையில் அவன் குதிக்கிறான்.* 8. சினமுடன் நடந்து கொள்ளும் ஆள்; rough and tough person. *அவன் சரியான முரடு.*

*[முருடு→முரடு.]*

**முரடு²** *muradu,* பெ.(n.) பெரியது, திரண்டது; that which is big, cumulative.

*[முள்→முர→முரள்→முரண்→முரடு.]*

**முரண்¹–தல்** (**முரண்டல்**) *muraṇ-,* 12 செ.கு.வி.(v.i.) பகைத்தல்; to be at variance; to be opposed. *"முரண்டு மாய்க்கவே" (பாரத.குரு.49).*

*[முள் → முர → முரள் → முரண் → முரண்–தல்.]*

**முரண்²** *muraṇ,* பெ.(n.) 1. எதிரானதாகவோ மாறுபட்டதாகவோ அமைவது, மாறுபாடு; variance, opposition; perversity. *"கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சி" (புறநா.37), "பரல்மட் சுவல முரணில முடைத்த" (அகநா.21:21), "அரண்பல கடந்த முரண்கொள் தானை" (நற்.150:3). சட்டத்திற்கு முரணாகச் செய்யக் கூடாது.* 2. பகைமை (திவா.); spite, hatred. *"முரணியோர் முரண்டப" (கலித்.132).* 3. போர் (திவா.); fight, battle. 4. முரண்டொடை (தொல்.பொருள்.407) பார்க்க; see *muraṇdoḍai.* 5. வலிமை (திவா.); strength. 6. பெருமை (மாறனலங். 265, உதா.749); greatness. 7. முருட்டுக் குணம் (வின்.); roughness, stubbornness. 8. கொடுமை (வின்.); fierceness. 9. மாணிக்கக் குற்றங்களுளொன்று (திருவாலவா.25 : 14); a flaw in rubies.

ம. முரண்.

*[முள் → முர → முரள் → முரன் → முரண்.]*

**முரண்³** *muraṇ,* பெ.(n.) திண்ணமான சிப்பி; strength shell.

*[முள் → முர → முரள் → முரண்.]*

**முரண்களரி** *muraṇ-kaḷari,* பெ.(n.) குத்துச்சண்டைக் களம்; boxing stadium.

*[முரண் + களரி.]*

**முரண்டன்** *muraṇḍaṉ,* பெ.(n.) 1. மாறுபாடுள்ளவன் (சங்.அக.); cross-tempered, quarrelsome person. 2. ஒட்டாரம் பிடித்தவன் (பிடிவாதக்காரன்) (இ.வ.); obstinate person. 3. பொறுமையில்லாதவன் (யாழ்.அக.); impatient person. 4. பரபரப்புடையவன், துடுக்குக்காரன் (அவசரக்காரன்) (யாழ்.அக.); hasty, impetuous person.

*[முரண் → முரண்டு → முரண்டன்.]*

**முரண்டு¹–தல்** *muraṇḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. விடாப்பிடியாதல்; to be obstinate, persistent. 2. மாறுபடுதல்; to be opposed, cross-grained.

*[முரண் → முரண்டு–தல்.]*

**முரண்டு²** *muraṇḍu,* பெ.(n.) 1. விடாப்பிடி (உ.வ.); persistence, obstinancy. *பள்ளிக்குச் செல்ல முடியாது என்று முரண்டு பிடித்தான்.* 2. மாறுபாடு (நாமதீப.628) (யாப். வி.3, உரை, பக்.38); variance, opposition. 3. அமையாமை (யாழ்.அக.); disagreement. 4. வளையாமை (யாழ்.அக.); unyielding nature.

*[முள் → முர → முரள் → முரண் → முரண்டு. பெரும்பாலும் பிறர் கூறும் அல்லது எதிர்பார்க்கும் ஒன்றைச் செய்ய எதிர்ப்புக் காட்டுவது.]*

**முரண்டொடை** *muraṇ-ḍoḍai,* பெ.(n.) தொடையைந்தனுள் மொழியானும் பொருளானும் மறுதலைப்படப் பாடல் தொடுப்பது (இலக்.வி.723, உரை); a mode of versification in which there is antithesis of words or ideas, one of five *toḍai.*

*[முரண் + தொடை.]*

*இருள்பரந் தன்ன மாநீர் மருங்கில்*
*நிலவுக்குவித் தன்ன வெண்மண*
*லொருசிறை*
*இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை*
*பொன்னி னன்ன நுண்டா துறைக்கும்*
(யா.கா.மேற்கோள்.)

இப்பாடலில் இருள், நிலவு, இரும்பு, பொன் என்று அடிதோறும் பொருள் மாறுபட வந்திருப்பதால் இது முரண்தொடை எனப்படும்.

**முரண்படு-தல்** *muraṇ-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) எதிராக இருத்தல், மாறுபடுதல்; to contradict, to be opposed. *நூலில் தெரிவித்திருக்கும் கருத்துக்களோடு முரண்படுகிறேன். ஒன்றிற்கொன்று முரண்பட்ட நிலை.*

*[முரண் + படு-தல்.]*

**முரண்பாடு** *muraṇ-pāḍu*, பெ.(n.) மாறுபாடு; contradiction, difference. *எங்களுக்குள் ஏற்பட்ட கருத்து முரண்பாடு எங்கள் நட்பைப் பாதிக்கவில்லை. உன்னுடைய முந்தியப் பேச்சுக்கும் இப்போதைய பேச்சுக்கும் நிறைய முரண்பாடுகள் இருக்கின்றன.*

*[முரண் + பாடு. படு→பாடு..]*

**முரண்மொழி[1]** *muraṇ-moḻi*, பெ.(n.) 1. பொருள் மாறுபடும் சொல்; contrast, antithesis. 2. எதிர்மொழி (யாழ்.அக.); contradictory statement.

*[முரண் + மொழி.]*

**முரண்மொழி[2]** *muraṇ-moḻi*, பெ.(n.) செய்யுட் குற்றங்களுளொன்று (யாப்.வி. பக்.525); a defect in versification.

*[முரண் + மொழி.]*

**முரண்விளைந்தழிவணி** *muraṇ-viḷainda ḻivaṇi*, பெ.(n.) மேனோக்கில் மாறுபாடு தோன்றக் கூறும் அணி; a figure of speech in which there is an apparent contradiction.

*[முரண் + விளைந்தழிவணி. இரண்டு வகை அறங்களையும், தோன்றி அழியும் பகைமையையும் பற்றிக் கூறுவது.]*

**முரண்வினைச்சிலேடை** *muraṇ-viḷai-c-cilēḍai*, பெ.(n.) மொழியப்பட்ட வினைப் பொருள் முரண இரட்டுறப்படுத்தும் அணி வகை (மாறனலங்.152); a figure of speech which consists in *śilēḍai* in verbs relating to persons or objects of opposite characteristics.

*[முரண்வினை + சிலேடை.]*

**முரணணி** *muraṇ-aṇi*, பெ.(n.) சொல்லேனும் பொருளேனும் முரண அமையும் ஓர் அணி (வீரசோ.அலங்.12); a figure of speech in which words or ideas are used in antithesis.

*[முரண் + அணி.]*

**முரணமணல்** *muraṇa-maṇal*, பெ.(n.) வெள்ளி மணல்; silver ore.

**முரணர்** *muraṇar*, பெ.(n.) பகைவர்; enemies. *"அரணையுறு முரணர் பலர்" (தேவா.148:7).*

*[முரண் → முரணர்.]*

**முரணு[1]-தல்** *muraṇu-*, 12 செ.கு.வி.(v.i.) மாறுபடுதல்; to be at variance. *"தீ முரணிய நீரும்" (புறநா.2).*

*[முரண் → முரணு-தல்.]*

**முரணு[2]–தல்** *muraṇu-*, 13 செ.குன்றாவி. (v.t.) பெருக்குதல்; to multiply. *'இரு திணையும் பொதுவுமான மூன்றினானும் முரணப் பதினெட்டாம்' (நன்.269, உரை).*

*[முரண் → முரணு–தல்.]*

**முரணை** *muraṇai*, பெ.(n.) இலை சுருட்டை விழுந்து முரட்டுக் குணம் அடைவது (கோவை.); roughness leaves.

*[முரண் → முரணை.]*

**முரப்பு** *murappu*, பெ.(n.) கைக்கு மென்மை யற்றுத் தோன்றுந் தன்மை; roughness. *"தோல் முரப்பேறி" (அசுவசா. 66).*

*[முரம்பு → முரப்பு = கடினமான சொர சொரப்புத் தன்மை.]*

**முரம்** *muram*, பெ.(n.) கருங்கற் பொடி (C.E.M.) granite crushed to dust for road-making.

*[முரம்பு → முரம்.]*

**முரம்பு** *murambu*, பெ.(n.) 1. பருக்கைக் கல்லுள்ள மேட்டு நிலம்; mound of gravel or stone. *"முரம்பு கண்ணுடைந்த நடவை" (மலைபடு.432).* 2. மேடு (சூடா.); mound, elevation. 3. பாறை (பிங்.); rock. 4. வன்னிலம்; rough hard ground. *"பரன்முரம்பாகிய பயமில் கானம்" (அகநா.5). "முரம்பு கன்உடைய வேகிக் கரம்பை" (குறுந்.400 : 4).* 5. கழி (சூடா.); backwater, creek, small arm of the sea. 6. உப்பளம் (யாழ்.அக.); salt-pan. 7. கற்பாங்கான மேட்டு நிலத்தூர்; a village.

தெ. மொரமுர்

மறுவ. கரம்பு நிலம்

**முரமுரவெனல்** *muramura-veṉal*, பெ.(n.) முரமுரெனல் பார்க்க; see *muramureṉal*.

**முரமுரெனல்** *muramureṉal*, பெ.(n.) 1. நுரைத்தற் குறிப்பு; onom. expr. of foaming, effervescing. *"முரமுரெனவே புளித்த மோரும்" (தனிப்பா.i, 103:34).* 2. வாய்க்குள் கரகரப்பாயிருத்தற் குறிப்பு; cracking in the mouth. 3. தூய்மையாயிருத்தற் குறிப்பு; being clean and neat.

**முரரை** *murarai*, பெ.(n.) மரத்தின் முருட்டரை; hard, stout trunk of a tree. *"முரரை முழுமுத றுமியப் பண்ணி" (பதிற்றுப்.5ஆம் பத்.பதி.).*

*[முரடு + அரை.]*

**முரல்[1](லு)–தல்** *mural-*, 13 செ.கு.வி.(v.i.) 1. ஒலித்தல்; to make sound. *"மதுகர முரலுந் தாரோயை" (திருவாச. 5:16).* 2. கதறுதல்; to cry. *"குடுமிக் கூகை குராலொடு முரல" (மதுரைக்.170).*

க. மெரல்

**முரல்[2](லு)–தல்** *mural-*, 14 செ.குன்றாவி. (v.t.) பாடுதல்; to sing. *"ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை" (கலித்.9).*

**முரல்[3]** *mural*, பெ.(n.) மீன் வகை (கொக்கு மீன்) (நாமதீப.271); needle-fish *Syngnathus*.

**முரல்வு** *muralvu*, பெ.(n.) யாழின் மெல்லோசை; soft sound, as of a lute. *"வண்டின் றொழுதி முரல்வு" (பரிபா.8:36).*

*[முரல் → முரல்வு.]*

முரலல் *muralal*, பெ.(n.) 1. ஒலிக்கை (வின்.); sounding. 2. கலப்போசை (சது.); confused noise. 3. எடுத்தலோசை (சூடா.); high pitch.

தெ. மொர; க. மொரெகி; ம. முரலு.

*[முரல் →முரலல்.]*

முரவம் *muravam*, பெ.(n.) 1. பறைவகை; a drum. *"முரவ மொந்தை" (தேவா.385, 5).* 2. முழக்கம்; noise, reverberation, resonance. *"முரவம்படு மண்ணாமலை" (தேவா.1025, 5).*

*[முரல் →முரவம்.]*

முரவு[1] *muravu*, பெ.(n.) முரிவு; break; broken condition, as of the mouth of a pot. *"முரவுவாய்க் குழிசி" (பெரும்பாண்.99). "மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்" (அகநா.72:3).*

*[முரி →முரவு.]*

முரவு[2] *muravu*, பெ.(n.) 1. முரவம், 1 பார்க்க; see *muravam*, 1. *"முரவுந் தூம்பு முழங்குபு துவைப்ப" (பெருங்.மகத.25:16).*

முரவை *muravai*, பெ.(n.) கைக்குத்தல் அரிசியிலுள்ள வரி; streaks in unpolished rice. *"முரவை போகிய முரியா வரிசி" (பொருந.113).*

*[முரி → முரவை].*

முரள் *mural*, பெ.(n.) சிப்பிவகை (தொல். பொருள்.584); a shell-fish.

*[முரல் → முரள்.]*

முரற்கை *murarkai*, பெ.(n.) 1. ஒலி; sound. *"பாணர் நரம்புளர் முரற்கைபோல" (ஐங்குறு.402). "நின்ற முரற்கை நீக்கி நன்றும்" (புறநா.376).* 2. முரற்சி, 2 பார்க்க; see *murarci*, 2. *"பாணர் நயம்படு முரற்கையின்" (ஐங்குறு.407).* 3. கலிப்பா (தொல். பொருள். 382); *Kali* verse. 4. தாளவகை; a time - measure. *"இன்புறு முரற்கை நும்பாட்டு" (மலைபடு.390).*

*[முரல் →முரற்கை.]*

முரற்சி[1] *murarci*, பெ.(n.) 1. ஒலி; sound. *"கொன்றைத் தீங்குழன் முரற்சியர்" (கலித்.106).* 2. பாட்டு; song. *"நரம்பின் முரலும் நயம்வரு முரற்சி" (மதுரைக்.217).*

*[முரல் →முரற்சி.]*

முரற்சி[2] *murarci*, பெ.(n.) கயிறு; cord. *"பெண்டிர் கூந்தன் முரற்சியால்" (பதிற்றுப். 5ஆம் பத்.பதி.), "வடுக்கொளப் பிணித்த விடுமுரி முரற்சி" (நற்.222:2).*

*[முரண் →முரற்சி.]*

முரற்று-தல் *murarru-*, 5 செ.கு.வி.(v.i.) 1. ஒலித்தல்; to make sound. *"கிடப்பதோ முரற்றலின்றி" (கம்பரா.மீட்சி.308).* 2. கதறுதல்; to cry. *"அரற்றியு மயர்ந்து முரற்றியு முயிர்த்தும்" (பெருங். இலாவண. 19:208). (பிங்.).*

*[முரல் →முரற்று →முரற்று-தல்.]*

முரற்றுமம் *murarrumam*, பெ.(n.) குடம் (அக.நி.); water-pot.

முரன்றுபாடு-தல் *muranru-pādu-*, 5 செ. குன்றாவி.(v.t.) இன்னொலி செய்தல் (ஆலாபனஞ் செய்தல்); to elaborate a musical note or melody. *"களிவண்டு முரன்றுபாட" (சீவக.1959).*

*[முரல் →முரண் →முரன் →முரன்று+பாடு-தல்.]*

**முரி¹–தல்** *muri-*, 2 செ.கு.வி.(v.i.) 1. வளைதல்; to bend. *"முரிந்து கடைநெரிய வரிந்த சிலைப்புருவமும்" (மணிமே.18:161).* 2. கரும்பு கம்பு முதலியவை வளைந்து ஒடிதல் (சூடா.); to break off, snap off. *"மூத்துவினை போகிய முரிவாய் அம்பி" (நற்.315:3), "நல்லெழி னெடும்புதவு முருக்கிக் கொல்லு பேன மாகிய நுனைமுரி மருப்பிற்" (பதிற்றுப்.16:6,7).* 3. கெடுதல்; to perish, to be ruined. *"இடைக்கண் முரிந்தார் பலர்" (குறள், 473).* 4. தோல்வியுறுதல்; to be defeated. *"முற்றிய வமரர்சேனை முரிந்தன" (விநாயகபு.34:15).* 5. சிதறுதல்; to be scattered. *"பஞ்சினம் பகைமுரிந் தெழுந்தன விண்ணத் தலமர" (கல்லா.7).* 6. தளர்தல்; to lack in strength, to be gentle, as in gait. *"முரிந்தநடை மடந்தையர் முழங்கொலியும் வழங்கொலியும்" (திருவிசை. கருவூ.5:10).* 7. தவறுதல்; to go wrong. *"முரியுங்காலைத் தெரிய மற்றதிற் றட்டினள்.... எழுப்பி" (பெருங்.வத்தவ.12:99).* 8. நீங்குதல் (சீவக.172); to separate, leave. 9. நிலைகெடுதல்; to lose one's position. *"இடைமுரிந்து வேந்தனும் வேந்து கெடும்" (குறள், 899).* 10. குணங்கெடுதல்; to be spoiled. *"ஒழுகுபால் கதிர்வெயிற் படமுரிந்து" (திருச்செந்தூர். பிள்ளைத். செங்கீரை.1).*

ம., க. முரி.

*[முரு →முரி →முரி–தல் (வே.க.).]*

**முரி²–த்தல்** *muri-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. வளைத்து ஒடித்தல்; to break off, snap off. *"நன்சிலை முரித்திட்டம்பை வாடினன் பிடித்துநின்றான்" (சீவக.2185).* 2. அழித்தல்; to ruin. *"மதிலொடு வடவாயிலை முரித்து" (திருவாலவா.24:4).* 3. தோற்கச் செய்தல் (யாழ்.அக.); to defeat. 4. திறமையாக நடத்துதல் (வின்.); to manage, as a business. *வெட்டி முரித்தல் என்னும் வழக்கை நோக்குக.*

தெ. முரியு; ம. முரிக்க.

*[முரு →முரி →முரி–த்தல்.]*

**முரி³** *muri*, பெ.(n.) 1. வளைவு; curve, bend. *"முரியா ரளகத் தடாதகை" (திருவிளை. பயகர.8).* 2. துண்டு; piece, bit, half. 3. நொய்யரிசி; broken rice, semolina. *"குத்திய வரிசியெல்லா முரியறக் கொழிக்க வாரீர்" (தக்கயாகப்.736).* 4. முழுதிற் குறைவானது; anything short or dwarfish. *"மக்கண் முரியே" (கலித்.94).* 5. சிதைவு (சிலப்.25:146, அரும்.); scratch, blemish. 6. எழுதிய ஓலை நறுக்கு, முறி (இ.வ.); written bond. 7. இசைப்பாவின் இறுதிப் பகுதி (சிலப்.6:35, உரை); the closing section of a musical composition. 8. நாடகத் தமிழின் இறுதியில் வருஞ் சுரிதகம் (தொல்.பொருள். 144, உரை); the *Śuridagam* at the close of a poem in *nāḍaka-t-tamiḻ*.

ம., தெ., க., து. முரி.

*[முரு →முரி.]*

**முரிகம்** *murigam*, பெ.(n.) மயிர்ப்படாம் (சூடா.); woollen blanket.

தெ. முரி.

*[முரி →முரிகம்.]*

**முரிகிரந்தி** *muri-kirandi*, பெ.(n.) பத்தியம் முறிந்ததால் தீராததாகும் நோய் (வின்.); disease becoming incurable because of the non-observance of the prescribed diet.

*[முரி + கிரந்தி. Skt. granthi > த. கிரந்தி.]*

**முரிகிரந்திப்படு–தல்** *muri-kirandi-p-paḍu-*, 20 செ.கு.வி.(v.i.) பத்தியக் குறைவால் நோய் மிகுதல் (வின்.); to grow worse from neglect of the prescribed diet.

*[முரிகிரந்தி + படு–தல்.]*

**முரிச்சார்த்து** *muri-c-cārttu*, பெ.(n.) சார்த்துவரிப் பாட்டுவகை (சிலப்.கானல். அரும். பக்.205); a kind of *cārttu-vari.*

*[முரி + சார்த்து.]*

பாட்டுடைத் தலைவன் பதியொடும் பேரோடுஞ் சார்த்திப் பாடும் வரிப்பாட்டு வகை.

சார்த்துவரி மூன்று வகைப்படும். முகச்சார்த்து, முரிச்சார்த்து, கொச்சகச்சார்த்து.

முகச்சார்த்து : மூன்றடி முதல் ஆறடி ஈறாக வரும். இடை நான்கடியானும் ஐந்தடியானும் வரும்.

முரிச்சார்த்து : அடித்தொகை மூன்றும் இரண்டும் வரும்.

கொச்சகச் சார்த்து : கொச்சகம் போன்று முடியும்.

*மறையில் மணந்தாரை வன்பரதர் பாக்கத்து*
*மடவார் செங்கை*
*இறைவளைகள் தூற்றுவதை ஏழையம்*
*எங்ஙனம் யாங்கு அறிகோம் ஐய*
*நிறைமதியும் மீனும் என அன்னம்*
*நீள்புன்னை அரும்பிப் பூத்த*
*பொறைமலி பூங்கொம்பேற வண்டாம் பல்*
*ஊதும் புகாரே எம்மூர்*
*(சிலப்.7:29ஆம் பாடல்).*

**முரித்தல்** *murittal*, பெ.(n.) 1. நகை; laughter. 2. இலங்குகை; shining.

**முரித்தாளை** *murittāḷai*, பெ.(n.) பட்டாசுத் தொழிலில் பயன்படுத்தும் வாணகெந்தி; a kind of sulphur used in fire works (சா.அக.).

**முரிநிலை** *muri-nilai*, பெ.(n.) இயற்பாவின் இறுதியில் பாடுந் தரவு (சிலப்.6 : 35, உரை); closing part of a song.

*[முரி + நிலை.]*

**முரிப்பு**[1] *murippu*, பெ.(n.) 1. முரிக்கை (வின்.); breaking, bruising, cracking from external force. 2. திமில் (திவா.); hump of an ox.

தெ. மூப்பு

*[முரி→ முரிப்பு.]*

**முரிப்பு**[2] *murippu*, பெ. (n.) நேர் திருப்பம், ஒடிந்த வளைவு, கட்டடங்களின் மூலைத் திருப்பம்; bend curve, corner turning in the building. *"திருநந்தாவனத்துக்கு எல்லையாவது நள்ளாற்று முரிப்புக்கு மேற்கும்" (தெ.இ.கல்.தொ.5, கல்.251).*

*[முறி→முரி→ முரிப்பு.]*

**முரிமுரி**[1]**–தல்** *muri-muri-*, 2 செ.கு.வி. (v.i.) வளைதலைச் செய்தல்; to bend, curve. *"புருவமும் முரிமுரிந்தவே" (சீவக. 2310).*

*[முரி + முரி – முரிமுரி→ முரிமுரி–தல்.]*

**முரிமுரி**[2] *muri-muri*, பெ.(n.) எட்டி (சங்.அக.); nūx vomica.

**முரியல்** *muriyal*, பெ.(n.) 1. துண்டு (யாழ். அக.); bit, fragment. 2. எளிதில் முரிவது; that which is brittle.

*[முரி→ முரியல்.]*

**முரிவரி** *muri-vari,* பெ.(n.) வரிப்பாட்டு வகை (சிலப். 3 :16, அரும்.); closing part of a dance song.

*[முரி + வரி.]*

*"எடுத்த வியலு மிசையுந் தம்மில், முரித்துப் பாடுதன் முரியெனப்படுமே" (சிலப்.7:14. அரும்.).*

எ–டு:

*"பொழில்தரு நறுமலரே புதுமணம் விரிமணலே*
*பழுதறு திருமொழியே பணைஇள வனமுலையே*
*முழுமதி புரைமுகமே முரிபுரு வில்இணையே*
*எழுதரும் மின்னிடையே எனையிடர்*
*செய்தவையே"*

*"திரைவிரி தருதுறையே திருமணல் விரியிடமே*
*விரைவிரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே*
*மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே*
*இருகயல் இணைவிழியே எனையிடர்*
*செய்தவையே" (சிலப்.7:14, 15)*

**முரிவாய்** *muri-vāy,* பெ.(n.) 1. இடித்து உண்டாக்கின வாசல்; opening made in a wall, used as entrance. *"கண்டவெயின் முரிவாயாற் கொண்டு புக்கான்" (திருவாலவா.24 : 4).* 2. கன்னவாயில்; opening made in house - breaking. *"களவுபோகின்ற வென்றுந் தப்பிய முரிவாயில்லை" (திருவாலவா. 55 : 5).* 3. முரிந்த குறடு; pitted pial. *"முரிவாய் முற்றம்" (புறநா.261).*

*[முரி + வாய்.]*

**முரிவு** *murivu,* பெ.(n.) 1. மடிப்பு (யாழ்.அக.); fold. 2. வளைந்து ஒடிகை (யாழ்.அக.); breaking, snapping. 3. சுருங்குகை; contracting. *"புருவமுரிவு கண்டஞ்சி" (முத்தொள்.களம்.).* 4. நீங்குகை; leaving, separation. *"இளையர் மார்ப முரிவில ரெழுதி வாழும்" (சீவக.372).* 5. வருத்தம்; trouble, difficulty. *"பாவைமார் முரிவுற்றார்களின் மூர்ச்சனை செய்பவால்" (சீவக.1627).* 6. சோம்பு (அரு.நி.); laziness. 7. ஊழ் (அரு.நி.); fate. 8. பெருமை (அரு.நி.); greatness.

க. முரிவு

*[முல் → முர் → முரு → முரி → முரிவு.]*

**முருக்கஞ்சேரி** *murukkañjēri,* பெ.(n.) செங்கல்பட்டு மாவட்டம் மதுராந்தகம், திருவாரூர் ஆகிய வட்டங்களில் இருக்கும் ஊர்ப்பெயர்கள்; name of this village is found in *Cheṅgalpaṭṭu* district, *Madurāndagam* and *Thiruvārūr.* *முருங்கை மரங்கள் மிகுதியாக இருந்ததால் இப்பெயர் பெற்றிருக்கலாம்.*

*[முருங்கை + சேரி– முருங்கைச்சேரி → முருக்கஞ்சேரி.]*

**முருக்கதாபம்** *murukka-tābam,* பெ.(n.) ஒருவகை இசிவு (சன்னி) நோய்; a kind of delirium.

**முருக்கம்** *murukkam,* பெ.(n.) கலியாண முருக்க மரம்; bastard teak-rootch wood tree-Red been - *Erythrina indica.*

*[முருக்கு → முருக்கம்.]*

இதன் பூ சிவப்பாகவும், நறுமண மில்லாததாகவும் இருக்கும். மரம் முட்களை உடையது. இது மருத்துவத்திற்கு மிகையாகப் பயன்படுகிறது. பழம், பூ போன்றவை ஒரு வகை நாற்றமுடையவை, உண்பதற்குப் பயன்படாது. பூ முயல் இரத்தத்தைப் போல் இருக்கும். இதன் பட்டைச் சாறு மருத்துவத்தில் பயன்படுகிறது. இதன் பூவை, திருவள்ளுவர் "இனரூழ்த்து நாறா மலர்" என்று கூறியுள்ளார் (சா.அக.).

**முருக்கம்பிசின்** *murukkam-pišiṉ,* பெ.(n.) முருக்க மரத்தின் பிசின்; gum of the tree *Butea frondosa - B.superba Bengal kino.*

*[முருக்கம் + பிசின்.]*

**முருக்கம்புளி** *murrukkam-puḷi,* பெ.(n.) எலுமிச்சம் புளிப்பு (அமுதாகரம்); citric acid.

*[முருகு→முருக்கம் + புளி.]*

**முருக்கம்விரை** *murukkam-virai,* பெ.(n.) முருக்க மரத்தின் கொட்டை; the seed of *Butea-frondosa.* It is anthel-mentic (சா.அக.).

*[முருக்கம் + விரை.]*

**முருக்கல்** *murukkal,* தொ.பெ.(verbn.) 1. அழிக்கை; destroying. *"முன்யானிவனை முருக்கலும் வேண்டினென்" (பெருங். உஞ்சை. விழா.37:199).* 2. கொல்லுகை; killing (சா.அக.).

*[முருக்கு→முருக்கல்.]*

**முருக்கவரை** *murukkavarai,* பெ.(n.) கோழியவரை; a kind of bean (சா.அக.).

*[முருக்கு + அவரை.]*

**முருக்கள்ளி** *muru-k-kaḷḷi,* பெ.(n.) துறட்டிச் செடி; prickly climbing cockspur, *Pisonia aculeata* (சா.அக.).

மறுவ. காரிண்டு.

**முருக்கன்மரம்** *murukkaṉ-maram,* பெ.(n.) மரவகை; Bengal kino tree, *Butea frondoso.*

*[முருக்கு→முருக்கன் + மரம்.]*

**முருக்கி** *murukki,* பெ.(n.) சதுரக்கள்ளி; square spurge-*Euphorbia antiquorum* (சா.அக.).

**முருக்கிதழ்** *murukkidaḻ,* பெ.(n.) சிவந்த உதடு; red lip.

*[முருக்கு + இதழ். முருக்கம் மலர் போன்ற சிவந்த உதடு.]*

**முருக்கு[1]-தல்** *murukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அழித்தல்; to destroy, crush, ruin. *"விறல்வேன் மன்னர் மன்னெயில் முருக்கி" (சிறுபாண்.247).* 2. கொல்லுதல் (திவா.); to kill. *"எற்றி முருக்குவ ரரக்கர் முன்பர்" (கம்பரா.மகரக்.12).* 3. முறித்தல்; to break in pieces. *"காப்புடைய வெழுமுருக்கி" (புறநா. 14).* 4. உருக்குதல் (வின்.); to melt. 5. கரைத்தல் (வின்.); to dissolve.

*[முருங்கு-தல்→முருக்கு-தல்.]*

**முருக்கு[2]** *murukku,* பெ.(n.) கொலை (அரு. நி.); killing.

*[முருக்கு[1]→முருக்கு[2].]*

**முருக்கு[3]** *murukku,* பெ.(n.) 1. முள்ளு முருக்கு, 1 பார்க்க; see *muḷḷu-murukku,1.* 2. புரசமரம்; palas-tree, *Butea frondoso. "முருக்குத்தாழ் பெழிலிய நெருப்புற ழடைகரை" (பதிற்றுப்.23 : 20), "முருக்கரும் பன்ன வள்ளுகிர் வயப்பிணவு" (அகநா. 362:5).* 3. எலுமிச்சை (தைலவ. தைல.); sour lime. 4. கொடியெலுமிச்சை (வின்.); Italian lemon. 5. குருகு (குறிஞ்சிப்.73, உரை); white fig. 6. அகில்; a fragrant wood tree-*Agallochum.*

**முருக்குக்கள்ளி** *murukku-k-kaḷḷi,* பெ. (n.) ஒருவகைக் கள்ளி (கோவை.); a kind of square spurge.

*[முருக்கு + கள்ளி.]*

**முருக்குத்தடி** *murukku-t-taḍi,* பெ.(n.) பனையேறிகள் பனைமூட்டிற் சார்த்தி மிதித்தேறுவதற்கு வைக்குந் தடி (நாஞ்சில்.); a wooden stand used to climb palm-tree.

*[முருக்கு + தடி.]*

**முருக்குமித்திரி** *murukku-mittiri,* பெ. (n.) அழகுக்காக வளர்க்கும் தோட்டச் செடியின் விதை (நேர்வாளம்); croton seed (சா.அக.).

**முருகக்கடவுள்** *muruga-k-kaḍavuḷ,* பெ. (n.) குறிஞ்சி நிலத் தெய்வமான முருகன்; Murugan, god of *Kuriñji* tract.

*[முருகன் + கடவுள்.]*

**முருகநாயனார்** *muruga-nāyaṉār,* பெ.(n.) 63 நாயன்மார்களுள் ஒருவர் (பெரியபு.); a canonized *Śaiva* saint one of sixty three.

*[முருகன் + நாயனார்.]*

சோழ நாட்டில் திருப்புகலூரைச் சேர்ந்தவர். பிராமணர் குலத்தில் பிறந்தவர். சிவன் மீது ஆழ்ந்த பற்றுள்ளவர். திருஞானசம்பந்தரின் நண்பர்.

**முருகபம்** *murugabam,* பெ.(n.) உயர்ந்த முத்து; a superior pearl.

**முருகயர்-தல்** *murugayar-,* 4 செ.கு.வி. (v.i.) 1. முருகக் கடவுளுக்குப் பூசை செய்தல்; to offer worship to *Kandan.* 2. வெறியாடுதல்; to dance while under possession by *Kandan. "முருகயர்ந்து வந்த முதுவாய் வேந்தன்" (குறுந்.362).* 3. விருந்திடலாகிய வேள்வி செய்தல்; to give feast, as in sacrifice. *"படையோர்க்கு முருகயர" (மதுரைக்.38).*

*[முருகு + அயர்-தல்.]*

**முருகவுருட்டிசுறா** *murugavuruṭṭi-šuṟā,* பெ.(n.) கடல்மீன் வகை (யாழ்ப்.); a sea - fish.

**முருகவேள்** *muruga-vēḷ,* பெ.(n.) 1. சிவனுடைய மகன்; *Śiva's* son. 2. முருகக்கடவுள் (பட்டினப். 158, உரை) பார்க்க; see *muruga-k-kaḍavuḷ.*

*[முருகன் + வேள்.]*

**முருகன்** *murugaṉ,* பெ. (n.) 1. கட்டிளைஞன் (திவா.); youth buck. 2. குமரன் என்னும் குறிஞ்சி நிலத் தெய்வம்; *Kumaraṉ,* god of *kuriñji* tract. *"முருக னற்போர் நெடுவே ளாவி" (அகநா.1:3), "முருகற் சீற்றத் துருகெழ குருசில்" (புறநா.16:12).* 3. வெறியாடும் வேலன் (பிங்.); one possed by *Vēlaṉ. "முதியாளோடு முருகனை முறையிற் கூவி" (கந்தபு. வள்ளி.155).* 4. பாலைநிலத் தலைவன் (அரு.நி.); chief of the desert tract.

க. முருக; ம. முருகன்.

*[முருகு→முருகன்.]*

குறிஞ்சி நிலத் தேவனை இளைஞனென்று கருதியே குறிஞ்சி நில மக்கள் முருகன் என்றனர். ஒ.நோ. குமரன் = இளைஞன், முருகன்.

**முருகன்மரம்** *murugaṉ-maram,* பெ.(n.) புரசு; a kind of tree - *Butea frondosa.*

மறுவ. முருக்கன் மரம்.

**முருகனாடல்** *muruga-ṉāḍal,* பெ.(n.) துடி குடை என்ற இருவகைக் கூத்து (பிங்.); Kanda's dance, of two kinds, viz., *tuḍi* and *kuḍai.*

*[முருகன் + ஆடல்.]*

முருகா *murugā*, பெ.(n.) 1. அகில்; a kind of fragrant wood-*Agallochum*. 2. எலுமிச்சை; lime. 3. அழகு; beauty. 4. இளமை; tender age. 5. கள்; toddy. 6. மணம் (வாசனை); smell (சா.அக.).

*[முருகு→முருகா.]*

முருகாநோய் *murugā-nōy*, பெ.(n.) மிளகாய்ச் செடிக்கும், காய்க்கும் வரும் ஒருவகை நோய் (கோவை.); a kind of disease that attacks chilly plant.

முருகியம் *murugiyam*, பெ.(n.) குறிஞ்சி நிலத்தில் முருகனுக்குரிய வெறியாட்டுப் பறை (தொல்.பொருள்.18, உரை); drum played in the worship of Kanda, in hilly tracts.

*[முருகு→முருகியம்.]*

முருகியல் *murugiyal*, பெ.(n.) அழகியல்; aesthetic.

*[முருகு→முருகியல்.]*

முருகு[1] *murugu*, பெ.(n.) 1. இளமை (திவா.); tenderness, tenderage, youth. 2. அழகு (பிங்.); beauty. 3. குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகன்; Kandan, god of *kuriñji* tract. *"அருங்கடி வேலன் முருகொடு வளைஇ" (மதுரைக்.611).* 4. தெய்வம்; divinity, god. *"முருகு மெய்ப்பட்ட புலத்திபோல" (புறநா.259). "முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநா" (அகநா.22:11). "மடவை மன்ற வாழிய முருகே" (நற்.34:11).* 5. வேலன் வெறியாட்டு; dancing while under possession by Kanda. *"முருகயர்ந்து வந்த முதுவாய் வேலன்" (குறுந். 362).* 6. மணம்; fragrance. *"முருகமர்பூ முரண்கிடக்கை" (பட்டினப்.37).* 7. திருவிழா (திவா.); festival. *"முருகயர் பாணியும்" (சூளா.நாட்.7).* 8. படையல் விருந்து (வேள்வி); sacrificial feast. *"படையோர்க்கு முருகயர" (மதுரைக். 38).*

*[முல்→முள்→முரு→முருகு (வே.க.).]*

இளமை என்பது ஓர் உயிரியின் பிறப்பிற்கும் முழுவளர்ச்சிக்கும் இடைப்பட்ட நிலைமை அல்லது காலம். இளமைப் பருவத்திலேயே உருவச் சிறுமையும் உடல் மென்மையும் அழகு நிறைவும் மறவுணர்ச்சியும் வலிமை மிகுதியும் பொதுவாக அமைந்திருத்தலால் இளமைக் கருத்திற் சிறுமை, மென்மை, அழகு, மறம், வலிமை முதலிய கருத்துகளும் தோன்றும் (வே.க.).

முருகு[2] *murugu*, பெ.(n.) 1. பூத்தட்டு (நாமதீப.429); flower-salver. 2. தேன்; honey. *"முருகு வாய்மடுத்துண்டளி மூசும்" (நைடத. மணம்புரி.23).* 3. கள் (பிங்.); toddy. 4. எலுமிச்சை (பிங்.); sour lime. 5. எழுச்சி (திவா.); elevation, height. 6. நறுமண மரம் (திவா.); eagle wood. 7. விறகு (திவா.); fuel. 8. திருமுருகாற்றுப்படை; *Tirumurugāṟṟu-p-paḍai. முருகு பொருநாறு" (பத்துப்பாட்டு. தனிப்பா.).*

*[முருகு¹→முருகு².]*

முருகு³–தல் *murugu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. முதிர்தல்; to be ripe or mature. *"முருகு காதலின்" (கம்பரா.அகலிகை.54).* 2. காய்ச்சுதலிற் பக்குவம் மிஞ்சுதல்; to exceed the proper limit in heating. *நெய் முருகிவிட்டது.*

*[முறுகு–தல்→முருகு–தல்.]*

வெல்லம், சருக்கரை ஆகியவற்றைக் காய்ச்சும் பொழுது, இளங் கம்பிப்பதம், கம்பிபதம் என்று ஒவ்வொரு இனிப்புப் பண்டத்தின் நிலைக்குத் தக்கவாறு காய்ச்சுவர். இதையெல்லாம் தாண்டி இறுகி விடும் பதத்தை முற்றிய பதம் என்பர்.

**முருகு[4]** *murugu,* பெ.(n.) பிறைபோல் வளைந்த காதணிவகை; an ornament worth in the helix of the ear. *"வச்ர முருகை யெந்தக் கோனான்றன் கையிற் கொடுத்தானோ" (விறலிவிடு.703).*

தெ., க. முருகு.

*[முல்→முர்→முரு→முருகு.]*

**முருகுகாது** *murugu-kādu,* பெ.(n.) காதின் எதிர்ப்புறம் உள்ள சிறுமடல் (முருகாது) (கோவை.); ear lobe.

**முருகுகாந்தி** *murugu-gāndi,* பெ.(n.) மல்லிகை; jasmine flower (சா.அக.).

**முருகேசன்** *murugēšaṉ,* பெ.(n.) முருகக் கடவுள் பார்க்க; see *muruga-k-kaḍavuḷ.*

*[முருகு + ஈசன்.]*

**முருகை** *murugai,* பெ.(n.) ஒருவகைக் கல் (யாழ்ப்.); a kind of stone.

**முருகைக்கல்** *murugai-k-kal,* பெ.(n.) பவளம்; coral (சா.அக.).

*[முருகை + கல்.]*

**முருகைநண்டு** *murugai-naṇḍu,* பெ.(n.) நண்டுவகை (யாழ்ப்.); a kind of crab.

**முருங்கக்கீரை** *muruṅga-k-kīrai,* பெ.(n.) முருங்கைக்கீரை பார்க்க; see *muruṅgai-k-kīrai.*

*[முருங்கை + கீரை.]*

**முருங்கச்சார்** *muruṅga-c-cār,* பெ.(n.) முருங்கை மரப் பட்டையின் சாறு; juice of the bark of Moringa oleifer.

*[முருங்கை + சார். சாறு→சாரு→சார்.]*

**முருங்கன்** *muruṅgaṉ,* பெ.(n.) மடங்கல் மாதத்தில் (ஆவணி)யில் விதைக்கப்பட்டு நான்கு மாதங்களில் விளைவாகும் கார்நெல் வகை; a coarse kind of *kār* paddy sown in *Avaṇi* and maturing in four months.

**முருங்கு[1]-தல்** *muruṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. அழிதல்; to perish; to be destroyed. *"அமரு ளேற்றார் முரண் முருங்க" (பு.வெ.1:7).* 2. முறிதல்; to break. *"கூம்பு முதன் முருங்க" (மதுரைக்.377).* 3. அடங்கியெரிதல்; to simmer. *"முருங்கெரியிற் புக" (கம்பரா. கார்முக.29).*

தெ. முருகு

**முருங்கு[2]** *muruṅgu,* பெ.(n.) முருக்கு[3], 1, 2 பார்க்க; see *murukku[3], 1, 2.*

**முருங்கை[1]** *muruṅgai,* பெ.(n.) உணவில் பயன்படுத்தும் இலைகளையும் காய்களையும் உடைய, எளிதில் ஒடியக் கூடிய ஒரு மரம்; horse radish tree-*Moringa pterygosperma. வெண்ணெய் உருக்கும் போது முருங்கைக் கீரை போடுவதுண்டு. "முருங்கா வென்னுஞ் சிங்களச் சொல் முருங்கையென வந்தவாறும்" (வீரசோ. தத்.8). "நாரின் முருங்கை நவிரல் வான்பூ" (அகநா.1:16), "முருங்கைப்பூ சிவந்ததினால் கூந்தலில் முடிப்பார்களா?", "முருங்கைக்காய் என்றதும் முறிந்ததாம் பத்தியம்" (பழ.).*



தெ. முநக; ம. முரிஞ்ஞு.

**Sinh.** muruṅga.

முருங்கை வகை : 1) காட்டு முருங்கை, 2) தவசு முருங்கை, 3) பூனை முருங்கை, 4) கலியாண முருங்கை, 5) புனல் முருங்கை, 6) முள் முருங்கை, 7) செம்முருங்கை, 8) நல்முருங்கை (சா.அக.).

**முருங்கை[2]** *muruṅgai,* பெ.(n.) 1. புன்னை மரம்; a tree - *Alexandrian laurel.* 2. அழிஞ்சில்; sage - leaved alangium - *Alangium lamareck.*

**முருங்கைக்காய்** *muruṅgai-k-kāy,* பெ.(n.) குச்சி போன்று நீண்டதும் உட்பகுதியில் சதைப் பற்றுள்ளதுமான, முருங்கை மரத்தின் காய்; fruit of the horse-radish tree which looks like a small stick in India drum stick. *காய்கறிகளில் முருங்கைக்காய் போல் சத்தானது எதுவும் இல்லை.*

*[முருங்கை + காய்.]*

**முருங்கைக்கீரை** *muruṅgai-k-kīrai,* பெ.(n.) முருங்கை மரத்தின் கீரை; greens of the drumstick tree - *Moringa oleifera* (சா.அக.).

*[முருங்கை + கீரை.]*

**முருங்கைப்பிஞ்சு** *muruṅgai-p-piñju,* பெ.(n.) 1. முருங்கைக் காயின் இளமைப் பிஞ்சு; tender drumstick. 2. குழந்தைக் கணை, எலும்புருக்கிக் காய்ச்சல் மேலும் ஒளிநீர் (விந்து) இழப்பு முதலியவை நீங்கும் என்பர்; tender drumstick, it is useful in rickets, bone fever, loss of semen nausea etc.

*[முருங்கை + பிஞ்சு.]*

**முருங்கைப்பூ** *muruṅgai-p-pū,* பெ.(n.) முருங்கை மரத்தின்பூ; flowers of drumstick tree. It aphrodisiac.

*[முருங்கை + பூ.]*

**முருங்கையீர்க்கு** *muruṅgai-y-īrkku,* பெ.(n.) முருங்கைக் கீரையின் காம்பு; the rip of the tripinnate of Moringa Oleifera.

*[முருங்கை + ஈர்க்கு.]*

**முருங்கைவித்து** *muruṅgai-vittu,* பெ.(n.) முருங்கைக் காயின் விதை; drumstick seeds.

*[முருங்கை + வித்து.]*

நீற்றுப்போன ஒளிநீரை (விந்தை) இறுக்கிப் பிசின் போலாக்கும் குணமுடையது முருங்கை வித்து.

**முருங்கைவேர்** *muruṅgai-vēr,* பெ.(n.) முருங்கை மரத்தின் வேர்; pungeant root of drumstick tree - used as a substitute for horse radish.

*[முருங்கை + வேர்.]*

**முருட்டுக்கையர்** *muruṭṭu-k-kaiyar,* பெ.(n.) அடங்கா வொழுக்க முள்ளவர்; persons of rude behaviour. *"முருட்டுக்கையர் புறப்பட்டார் புரட்டுப் பேசி" (திருவாலவா.38 : 14).*

*[முருடு + கையர்.]*

**முருட்டுத்தன்மை** *muruṭṭu-t-taṉmai,* பெ.(n.) ஓராது செய்யுங் குணம் (குறள், 1063, உரை); recklessness.

*[முருடு + தன்மை.]*

**முருடன்** *muruḍaṉ,* பெ.(n.) 1. முரட்டுக் குணமுள்ளவன்; obstinate person. *"முருடரான ராவணாதிகளை" (ஈடு, 2. 7 : 10).*

2. முன்பின் ஆராயாதவன்; reckless person. 3. மூடன்; ignorant, foolish person. *"கல்லா முருடரும்" (அஷ்டப். அழக.30).* 4. வேடன் (சூடா.); hunter. 5. நாகரிகமற்றவன்; rude person, savage.

க. மொரட

*[முருடு→முருடன்.]*

**முருடு** *murudu,* பெ.(n.) 1. கரடுமுரடு; coarseness, roughness. *"முருட்டுச் சிரமொன் றுருட்டினை" (சங்கற்ப. ஈசுவர விவகார. வரி.26).* 3. கொடுமை; cruelty. *"அரக்கர் குலம் முருடு தீர்த்தபிரான்" (திவ். திருவாய்.2. 7 : 10).* 4. முடிச்சுள்ள மரக்கணு (திருவாலவா.23:4); knot in wood. 5. வெட்டிய மரத்தினடி (சங்.அக.); stump. 6. விறகு (பிங்.); fire wood. 7. உருண்ட மரக்கட்டை; piece of wood. *"வன்பராய் முருடொக்கு மென் சிந்தை" (திருவாச.23: 40).* 8. பறைப்பொது (பிங்.); drum. *"முரசுஞ் சங்கு முருடு மொலிப்ப" (பெருங்.மகத. படைதலை. 19:195).* 9. பெரு மத்தளம்; hand drum with two faces. *"முருடதிர்ந்தன" (சிலப்.மங்கல.).* 10. பத்தல் (சங்.அக.); a kind of bucket. 11. பருமை; largeness. *"முருட்டு மோத்தைத் தலை பெற்றமை" (தக்கயாகப். 47).* 12. பெருங்குறடு (வின்.); large tongs.

க. மெரடு; வ. முரஜ.

*[முரண்→முருடு.]*

**முருதகுசம்** *muruda-kušam,* பெ.(n.) சேங்கொட்டை; marking nut - *Semicarpus anacardium* (சா.அக.).

**முருதல்** *murudal,* பெ.(n.) நாக நஞ்சு; a kind of arsenic (சா.அக.).

**முருதாறு** *murudāṟu,* பெ.(n.) பன்றி (கோவை.); pig.

**முருந்தபாலி** *murundapāli,* பெ.(n.) 1. குந்திரிக்கம்; vateri indica. 2. குங்கிலி மரம்; boswbllia glabra (சா.அக.).

**முருந்தம்** *murundam,* பெ.(n.) முருந்து, 5 (சூடா.) பார்க்க; see *murundu, 5. "குருந்த நின்றரும்பின முருந்தம்" (கம்பரா. வனம்புகு. 45).*

*[முருந்து→முருந்தம்.]*

**முருந்தழற்சி** *murundaḻaṟci,* பெ.(n.) குருத்தெலும்பினுடைய அழற்சி; inflam mation of cartilage.

*[முருந்து + அழற்சி.]*

**முருந்தன்** *murundaṉ,* பெ.(n.) 1. திறமுடையான்; person of ability. *"பெருந்தகைப் பெரியோனைப் பிணித்த போர் முருந்தன்" (கம்பரா.பிணிவீட்.37).* 2. புகழுடையான் (இலக்.அக.); famous person.

*[முருந்து→முருந்தன்.]*

**முருந்து[1]** *murundu,* பெ.(n.) 1. இறகினடிக் குருத்து (பிங்.); quill of a feather. 2. மயிலிறகின் அடிக்குருத்து; root of peacock's feather. *"முருந்தேய்க்கு முட்போ லெயிற்றினாய்" (ஏலா.7). "முருந்தெனத் திரண்ட முள்ளெ யிற்றுத் துவர் வாய்" (அகநா.179:11), "முருந்தேர் வெண்பல் முகிழ்நகை திறந்தே" (நற்.179:10).* 3. தென்னை முதலியவற்றின் அடிவெண் குருத்து (சூடா.); white and fresh sprout of a palm. 4. கொழுந்து (சங்.அக.); tendril. 5. இளந்தளிர் (அரு.நி.); tender leaf. 6. வேரின் மேற்றண்டு; stalk of plant just

above the roots. "பைஞ்சாய்க் கோரையின் முருந்தினன்ன" (அகநா.62). 7. எலும்பு; bone. "முருந்தின் காறுங் கூழையை" (சீவக. 1661). 8. வெண்மை (சூடா.); whiteness. 9. முத்து (அரு.நி.); pearl. 10. வெண்மையும் அழுத்தமும் கொண்டு எலும்பின் தலைப்புகளை மூடும் குருத்தெலும்பு; a white elastic substance forming the tissue from which bone is formed by calcification - *Cartilege* (சா.அக.).

முருந்து[2] *murundu,*பெ.(n.) பூவின் தாள்; stalk of flower. "பூமுருந்துங் குருந்துஞ் செருந்தும் பொருந்து மூட்டுடன்" (குருகூர்ப்.6).

முருந்துசாலங்கள் *murundu-šālangal,* பெ.(n.) குருத்தெலும்பு உயிர்மங்கள்; cartilagenous cells (சா.அக.).

முருந்துத்தாபிதம் *murundu-t-tābidam,* பெ.(n.) குருத்தெலும்புக்கு உண்டாகும் அழற்சி; inflammation of the cartilage.

[முருந்து + **Skt.** தாபிதம்.]

முருந்துநார் *murundu-nār,*பெ.(n.) குருத் தெலும்பின் இழைநார் தோற்றம்; fibro cartilage.

[முருந்து + நார்.]

முருந்தெலும்பு *murundelumbu,* பெ.(n.) குருத்தெலும்பு; cartilage bone.

[முருந்து + எலும்பு.]

முருநடைப்பூதி *murunadai-p-pūdi,* பெ.(n.) கருங்குளவி; a black wasp (சா.அக.).

முருமுரு–த்தல் *murumuru-,*4 செ.குன்றாவி. (v.t.) முறுமுறு–த்தல் பார்க்க; see *murumuru-.*

முருவிலி *muru-vili,*பெ.(n.) 1. முருவிளிக் கொடி பார்க்க; see *muruvili-k-kodi.* 2. ஊதை (வாதம்)யடக்கி (சங்.அக.); wind killer.

க. முரிகில்; ம. முரல்.

[முருகு + வல்லி–. முருகுவல்லி →முருவிலி.]

முருவிளிக்கொடி *muruvili-k-kodi,* பெ.(n.) துறட்டிச் செடி (காரிண்டு); prickly climbing cock-spur.

[முருவிலி→ முருவிளி + கொடி.]

முருவு *muruvu,*பெ.(n.) ஆடவர் காதணி (கோவை.); men's ear ornament.

முரைசு *muraišu,*பெ.(n.) முரசு பார்க்க; see *murašu.* "முரைசு மூன்றாள் பவர்" (கலித். 132)., "உரைசால் சிறப்பின் முரைசொழிந் தனவே" (புறநா.62:9).

[முரசு →முரைசு.]

முல்லங்கிமோகரா *mullangi-mōgarā,* பெ.(n.) பழைய நாணய வகை (சரவண. பணவிடு.62); an ancient coin.

முல்லை[1] *mullai,*பெ.(n.) 1. பச்சைநிறக் காம்பில் சிறிய வெண்ணிற இதழ்களைக் கொண்ட நறுமணம் மிகுந்த பூ; Arabian jasmine, *Jasminum sambac.* "முல்லை வைந்நுனை தோன்ற" (அகநா.4). "பாசிலை முல்லை முகைக்கும்" (புறநா.117:9), "கோடல் எதிர்முகைப் பசுவீ முல்லை" (குறுந்.62:1), "உள்ளினள் உறைவோள் ஊரை முல்லை" (நற்.59:8). 2. கொடிவகை (L.); trichotomus-flowering smooth jasmine, *Jasminum trichotomum.* 3. காட்டு மல்லிகை; wild jasmine. 4. ஊசிமல்லிகை; eared jasmine. 5. கொடிவகை; pointed leaved wild jasmine, *Jasminum malabaricum.*

6. ஈசுரமூலி; Indian birthwort. 7. ஐந்திணையுள் ஒன்றான காடும் காடு சார்ந்த முல்லைநிலம் (தொல்.பொருள்.5); forest, pastoral tract, one of *ai-n-diṇai.* 8. முல்லைநிலப் பண்வகை; a melody type of the forest tracts. 9. சாதாரிப்பண் (பிங்.); a secondary melody type. 10. உரிப் பொருளில் ஒன்றாகிய இருத்தல்; patient endurance of a lady during the period of separation from her lover. *"முல்லைசான்ற புரவு" (மதுரைக். 285).* 11. கற்பு; chastity. *"தானுடை முல்லை யெல்லாந் தாதுகப் பறித்திட்டானே" (சீவக.686).* 12. சிறப்பியல்பு (பு.வெ.8 : 17, உரை); chief characteristic. 13. வெற்றி; victory. *"முல்லைத்தார்ச் செம்பியன்" (பு.வெ.9 : 34).* 14. முல்லைப் பாட்டு பார்க்க; see *mullai-p-pāṭṭu. "பாணிரண்டு முல்லை" (பத்துப்பாட்டு, தனிப்பா.) (தக்கயாகப்.54, உரை).* 15. முல்லைக்குழல் பார்க்க (சிலப்.17, பாட்டு 3); see *mullai-k-kuḻal.*

தெ. முல்ல; க. முல்லெ; ம.முல்ல.

*[முல் → முல்லை. முல் = மென்மை.]*

**முல்லை²** *mullai,* பெ.(n.) குத்தகை (யாழ்ப்.); contract of lease.

*[முல் → முல்லை.]*

ஒருபொருள் முழுவதையும் குறித்த காலத்திற்குப் பயன்படுத்தச் செய்துகொள்ளும் ஒப்பந்தமே குத்தகை.

**முல்லைக்கருப்பொருள்** *mullai-k-karu-p-poruḷ,* பெ.(n.) முல்லை நிலத்தில் இருக்கும் பொருள்கள்; men beasts and other living creatures and other things peculiar to wood land districts such as mullai *nīr* etc. *முல்லை நீர், முல்லைப்புள், முல்லை நில மாக்கள், முல்லை யாழ், முல்லைப் பூ.*

முல்லைக்குரியகருப்பொருள் : தெய்வம்–மால்; உயர்ந்தோர் – குறும்பொறை நாடன், தோன்றல்; தாழ்ந்தோர் – இடையர் இடைச்சியர்; புள் – காட்டுக் கோழி; விலங்கு – மான், முயல்; ஊர் – பாடி; நீர் – குறுஞ்சுனை, கான்யாறு; பூ – முல்லை. கொன்றை, காயா; மரம் – குருந்து; உணவு – வரகு, சாமை; பறை – ஏற்றுப்பறை; யாழ் – முல்லையாழ்; பண் – சதாரி; தொழில் – சாமை, வரகு விதைத்தல், கடாவிடுதல், விடைதழுவல், குரவையாடல் முதலாயின (அகநா.).

**முல்லைக்காரன்** *mullai-k-kāraṉ,* பெ.(n.) 1. குத்தகைக்காரன் (யாழ்ப்.); lessee. 2. பண்ணை வேலை பார்ப்பவன்; one who cultivates the land and looks after the cattle, etc., of a land - owner.

*[முல்லை + காரன்.]*

**முல்லைக்காலம்** *mullai-k-kālam,* பெ.(n.) மடங்கல், கன்னி (ஆவணி, புரட்டாசி) மாதமாகிய மழைக் காலம்; the two rainy months of August and September.

*[முல்லை + காலம்.]*

**முல்லைக்குழல்** *mullai-k-kuḻal,* பெ.(n.) முல்லைக்கொடியால் அமைத்த வளையத்தை வாயினிடத்தே செறித்த இசைக் குழல் (சிலப்.17, பாட்டு, 3, உரை); a flute or pipe with mouth - piece made of *mullai* creeper.

*[முல்லை + குழல்.]*

**முல்லைச்சிலந்தி** *mullai-c-cilandi,* பெ.(n.) முலைச்சிலந்தி (இராசவைத்.98, உரை) பார்க்க; see *mulai-c-cilandi.*

*[முலைசிலந்தி → முல்லைச்சிலந்தி.]*

**முல்லைச்சூட்டு** *mullai-c-cūṭṭu,* பெ.(n.) கற்பிற்கறிகுறியாக தலையிலணியும் முல்லைப் பூவாலான மாலை; chaplet of *mullai* flowers, as the emblem of chastity. *"பனிமுல்லைச் சூட்டு வேய்ந்தார்" (சீவக. 624).*

*[முல்லை + சூட்டு.]*

**முல்லைநிலப்பயிர்** *mullai-nila-p-payir,* பெ.(n.) காராமணி, சாமை, வரகு; important pulses and millets grown in wood tracts (சா.அக.).

*[முல்லை + நிலம் + பயிர்.]*

**முல்லைநிலப்புள்** *mullai-nila-p-puḷ,* பெ.(n.) காட்டுக் கோழி; a bird jungle bowl (சா.அக.).

*[முல்லை + நிலம் + புள்.]*



**முல்லைநிலமரம்** *mullai-nila-maram,* பெ.(n.) முல்லை நிலத்து மரம்; plants growing in wood or silvan tracts.

*[முல்லை + நிலம் + மரம். கொன்றை, துளசி, காந்தள் முதலிய மரம்.]*

**முல்லைநிலவிலங்கு** *mullai-nila-vilaṅgu,* பெ.(n.) மான், முயல் போன்ற விலங்குகள்; deer, rabbit etc. animals that live in silvan tracts.

*[முல்லை + நிலம் + விலங்கு.]*

**முல்லைப்பண்** *mullai-p-paṇ,* பெ.(n.) முல்லை நிலத்துக்குரிய பெரும்பண் வகை (திவா.); primary melody - type of the forest tract.

*[முல்லை + பண்.]*

**முல்லைப்பாட்டு** *mullai-p-pāṭṭu,* பெ.(n.) பத்துப்பாட்டினுள் நப்பூதனார் பாடிய பாட்டு; a poem in *Pattu-p-pāṭṭu* by *Nappūdaṉār.*

*[முல்லை + பாட்டு.]*

பதினெண் மேற் கணக்கில், தலைவனைப் பிரிந்து இருக்கும் தலைவியின் இயல்பைக் கூறும் நூல்.

பத்துப்பாட்டிலே மிகச் சிறிய அடியளவை உடைய பாடல் இது; 103 அடிகளையுடையது; ஆசிரியப்பாவால் இயன்றது. ஆசிரியர் பொன் வாணிகனார் மகனார் நப்பூதனார் ஆவர். இது முல்லைத் திணைக்கு உரிய இருத்தல் ஒழுக்கத்தைச் சிறப்பித்துக் கூறுகிறது. போர்மேற் சென்ற தலைவன் திரும்பி வருமளவும் அவன் கூறிய சொல் திறம்பாது ஆற்றியிருந்த தலைவியின் செயலைக் கூறுகிறது. இடையே அகத்திணையான முல்லைக்குத் தொடர்பான புறவொழுக்கமாகிய வஞ்சினையும் கூறுகிறது. முல்லைத் திணையை வருணிக்கும் மற்றப் பாடல்கள் எல்லாவற்றினும் இம் முல்லைப்பாட்டு நுட்ப மிகவுடையதாய்க் காணப்படுகிறது.

பாட்டின் தொடக்கத்தில் கார்கால வருணனையும், இறுதியில் முல்லை நிலத்தின் இயல்பும், இடையில் அரசனின் பாசறை அமைப்பும் நுவலப்படுகின்றன. 'கானம் நந்திய செந்நிலப் பெருவழி'யின் அழகு சுவைபடக் கூறப்படுகிறது.

மன்னன் பாசறையில், இடையில் வாளேந்திக் கையில் விளக்கேந்தி, அணையும் விளைக்கை அணையாது காக்கும் மங்கையர் உள்ளனர். கண்ணைக் காக்கும் இமை போல அரசனுக்குப் பாதுகாவலராய்ப் பெருமூதாளர் உள்ளனர். நாழிகை வட்டில் கொண்டு நாழிகை அறியும் நாழிகைக் கணக்கர் உள்ளனர். அடுத்து யவனர்களும் உள்ளார்கள்.

*'மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை*
*மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து*
*வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்'*

*–முல்லை : 59–61*

யவணர் இயற்றிய புலித்தொடர் சங்கிலியும், பாவை விளக்கும் முல்லைப்பாட்டில் இடம் பெறுகின்றன.

*'உடம்பின் உரைக்கும் உரையா நாவின்*
*படம்புகு மிலேச்சர்'* என மிலேச்சர்கள் வருணிக்கப்படுகிறார்கள்.

இப் பாட்டு கருத்தாழம் மிகுந்து, முல்லையின் முதல், கரு, உரிப்பொருள்களைத் திறம்பட வருணிக்கிறது. முல்லைப் பாட்டின் தலைவி, நெஞ்சை ஆற்றி நிற்பதால், 'நெஞ்சாற்றுப்படை' என்றும் பிறிதொரு பெயர் கூறுவர் சிலர் (சி.பா. இலக்கிய வரலாறு).

முல்லைப்பல் *mullai-p-pal,* பெ.(n.) முல்லை யரும்பு போன்ற பல்; teeth resembling the jasmine bud (சா.அக.).

*[முல்லை + பல்.]*

முல்லைமாறி *mullai-māṟi,* பெ.(n.) 1. கற்பு நிலை பிறழ்ந்த–வன்–வள்; a person not stable with chastity. 2. முடிச்சுமாறி (இ.வ.); pickpocket.

*[முல்லை + மாறி.]*

முல்லை, கற்புக்குக் குறியீடாக மக்கள் வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் குறிப்பிடப் பெறும் மலர்.

முல்லையர் *mullaiyar,* பெ.(n.) முல்லையாளர் (திவா.) பார்க்க; see *mullai-y-āḷar* .

*[முல்லை → முல்லையர்.]*

முல்லையாழ் *mullai-yāḻ,* பெ.(n.) 1. முல்லைப் பண் (பிங்.); primary melody type of the forest tract. 2. முல்லை நில மக்களால் இசைக்கப்படும் இசைக் கருவி; a musical instrument played by the people of the mullai-tract called penta-chord. *ஐந்து நரம்புகளுள்ள யாழ் முல்லை நிலத்தில் இசைக்கப்பட்டது (சென்னைப் பல்கலைக் கழக ஆங்கில–தமிழ்ச் சொற்களஞ்சியம், பக்.723).*

*[முல்லை + யாழ்.]*

முல்லையாழ்த்திறம் *mullai-yāḻ-t-tiṟam,* பெ.(n.) செவ்வழிப் பண்ணினம் (பிங்.); secondary melody type of *cevvaḻi* class.

*[முல்லையாழ் + திறம்.]*

முல்லையாளர் *mullai-y-āḷar,* பெ.(n.) முல்லைநிலமக்கள் (திவா.); herdsmen and shepherds, as inhabitants of the forest tract.

*[முல்லை + ஆளர்.]*

முல்லையுரிப்பொருள் *mullai-y-uri-p-poruḷ,* பெ.(n.) முல்லை[1], 10 பார்க்க; see *mullai* [1], *10.*

*[முல்லை + உரி + பொருள்.]*

முல்வயன் *mulvayaṉ,* பெ.(n.) முல்வாயன் (யாழ்.அக.) பார்க்க; see *mul-vāyaṉ.*

முல்வாயன் *mul-vāyaṉ*, பெ.(n.) கறையான் வகை (யாழ்.அக.); a kind of white ant.

*[முள் + வாயன் – முள்வாயன் →முல்வாயன்.]*

முலங்கம்[1] *mulaṅgam*, பெ.(n.) சல்லிக்கொடி, சல்லிக்குடல்; mesentry.

முலங்கம்[2] *mulaṅgam*, பெ.(n.) அதிமதுரம், பூடு வகை; liquorice - plant, *Glycy rrhiza glabra.*

முலத்தி *mulatti*, பெ.(n.) இலந்தை; a small thorny tree jujubatree - *Zizyphus jujuba* (சா.அக.).

முலமுலெனல் *mula-muleṉal*, பெ.(n.) ஒரொலிக் குறிப்பு (வின்.); onom. expr. signifying humming buzzing, as of flies.

முலவை *mulavai*, பெ.(n.) நாய் (சங்.அக.); dog.

*[முவ்வை → முலவை.]*

முலாகலம் *mulākalam*, பெ.(n.) பொடுதலை; a prostate plant - *Lippia nadiflora* (சா.அக.).

முலாங்காய் *mulāṅgāy*, பெ.(n.) கும்மட்டிக் காய்; a kind of fruit of melon variety.

*[முலாம் + காய்.]*

முலாங்கொடிவேர் *mulāṅ-goḍi-vēr*, பெ. (n.) முலாங்கொடியினுடைய வேர்; root of the *mulām* creeper.

*[முலாங்கொடி + வேர்.]*

முலாம்பழம் *mulām-paḻam*, பெ.(n.) சந்தன நிறத்தோலையும் நீர்ச்சத்து மிகுந்த சதைப் பகுதியையும் உடைய, அளவில் சிறிய பூசணி போன்ற பழம்; musk - melon.

E. melon



முலாம்பன்னி *mulām-paṉṉi*, பெ.(n.) பன்றி வகைகளுள் ஒன்று; a kind of pig.

முலாயம் *mulāyam*, பெ.(n.) ஒருவகைப்பூடு; a kind of herb (சா.அக.).

முலை *mulai*, பெ.(n.) 1. பெண்ணின் மார்பகம்; woman's breast. *"முலையு முகனுஞ் சேர்த்திக் கொண்டேன்" (தொல். பொருள். 77). "முலையிடை முனிநர் சென்ற ஆறே" (குறுந்.39:4), "சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி" (நற்.9:6), "முலைபொலியாக மருப்ப நூறி" (புறநா.25:10).* 2. பெண் விலங்குகளின் உடலில் பாலுண்டாகுமிடம்; beast's dug.

க. மேலெ; ம. முல; துளு. முரிரெய்.

முலைக்கச்சு *mulai-k-kaccu*, பெ.(n.) பெண்களணியும் மார்புச் சட்டை; bodice, stays for the breast.

*[முலை + கச்சு.]*

முலைக்கட்டி *mulai-k-kaṭṭi*, பெ.(n.) முலையிலுண்டாகுங் கட்டி; mammary abscess.

*[முலை + கட்டி.]*

முலைக்கட்டு *mulai-k-kaṭṭu*, பெ.(n.) 1. முலைக்கச்சு பார்க்க (வின்.); see *mulai-k-kaccu*. 2. முலையிற் திரண்டு நிற்கும்

பாற்கட்டு; accumulation of milk in the breast.

*[முலை + கட்டு.]*

முலைக்கடுப்பு *mulai-k-kaḍuppu,* பெ. (n.) குழந்தை பால் குடிக்காமல் பால் அதிகம் தங்குவதால் முலையிலேற்படும் வலி; pain in the breast or udder, due to excessive secretion of milk. *'முலைக்கடுப்புக் கெடக் கறந்து' (திவ். திருப்பா.11, உரை).*

*[முலை + கடுப்பு.]*

முலைக்கண் *mulai-k-kaṇ,* பெ.(n.) முலைக்காம்பு பார்க்க; see *mulai-k-kāmbu. "துணைமுலைக் கண்கடோய் சுவடு" (திருவாச.29:5).*

ம. முலக்கண்

*[முலை + கண்.]*

முலைக்கருத்தல் *mulai-k-karuttal,* தொ.பெ.(vbl.n.) கருப்பக்குறி; blacking or pigmentation of the areola and nipple - a sign of pregnancy.

*[முலை + கருத்தல்.]*

முலைக்கருப்பு *mulai-k-karuppu,* பெ.(n.) முலையின் முன்னுள்ள கருப்பு பாகம்; the black or brownish space surrounding the nipple of the female breast, this is called *Areola papillaris.*

*[முலை + கருப்பு.]*

முலைக்காம்பு *mulai-k-kāmbu,* பெ.(n.) முலை முகம், கொங்கையின் நுனிப் பகுதி (C.G.); nipple, teat - *Acromastrum.*

*[முலை + காம்பு.]*

முலைக்காம்புவாதம் *mulai-k-kāmbu-vādam,* பெ.(n.) முலைக்காம்பை வாளால் அறுப்பது போல் வலியை உண்டாக்கும் ஒருவகைக் காற்று பிடிப்பு (வாத) நோய்; a disease of the breast marked by intense pain as if cut by a saw (சா.அக.).

*[முலைக்காம்பு + Skt.வாதம்.]*

முலைக்காம்புவிரணம் *mulai-k-kāmbu-viraṇam,* பெ.(n.) முலைக்காம்புவீக்கம் பார்க்க; see *mulai-k-kāmbu-vīkkam.*

*[முலைக்காம்பு + Skt.விரணம்.]*

முலைக்காம்புவீக்கம் *mulai-k-kāmbu-vīkkam,* பெ.(n.) முலைக்காம்பு வெடித்துப் புண்ணாகும் ஒருவகை நோய்; inflammation of the nipple - *Acromastitis.*

மறுவ. முலைக்காம்புவிரணம்

*[முலைக்காம்பு + வீக்கம்.]*

முலைக்கால்[1] *mulai-k-kāl,* பெ.(n.) முலை பார்க்க; see *mulai. "தடமுலைக் கால்கள்சாய" (சீவக.2542).*

*[முலை + கால்.]*

முலைக்கால்[2] *mulai-k-kāl,* பெ.(n.) ஆட்டுக்கல் (யாழ்.அக.); grinding stone.

முலைக்கிரந்தி[1] *mulai-k-kirandi,* பெ.(n.) முலைப்புண் பார்க்க; see *mulai-p-puṇ.*

*[முலை + கிரந்தி.]*

முலைக்கிரந்தி[2] *mulai-k-kirandi,* பெ. (n.) பூடுவகை; a plant, *Barleria vitida.*

*[முலை + கிரந்தி.]*

**முலைக்குத்து** *mulai-k-kuttu,* பெ.(n.) 1. முலைக்கடுப்பு பார்க்க; see *mulai-k-kaḍuppu.* 2. முலையில் ஊசியினால் குத்தினாற்போல் வலி உண்டாகும் நோய் வகை; piercing pain or lancinating pain in the breast - Mammary neuralgia - or may occur before the abscess is formed. *"முலைக்குத்து சவலைப் பிள்ளைக்குத் தெரியுமா?" (பழ.)* (சா.அக.).

*[முலை + குத்து. முலையில் ஊசி குத்தினாற் போன்று வலியுண்டாக்கும் நோய் வகை.]*

**முலைக்கோள்** *mulai-k-kōḷ,* பெ.(n.) முலைப் பால் உண்ணுகை; suckling. *"முலைக்கோள் விடாஅ மாத்திரை" (பொருந.141), "முலைக்கோண் மறந்த புதல்வனொடு" (புறநா.211:21).*

*[முலை + கோள்.]*

**முலைகுடி** *mulaikuḍi,* பெ.(n.) 1. முலை குடிப்பிள்ளை (வின்.) பார்க்க; see *mulai-kuḍi-p-piḷḷai.* 2. பேதையன் (இ.வ.); simpleton, inexperienced person.

ம. முலகுடி.

*[முலை + குடி.]*

**முலைகுடிப்பிள்ளை** *mulai-k-kuḍi-p-piḷḷai,* பெ.(n.) 1. கைக்குழந்தை; infant. 2. பெண்ணின் மார்பில் பால் குடிக்கும் பிள்ளை; suckling child.

*[முலைகுடி + பிள்ளை.]*

**முலைகுயன்மீன்** *mulai-kuyaṉ-mīṉ,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன் (யாழ்ப்.); a kind of sea - fish.

*[முலை + குயன் + மீன்.]*



**முலைகொடு-த்தல்** *mulai-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) குழந்தைக்கு முலைப்பால் ஊட்டுதல் (C.G.); to suckle a child.

*[முலை + கொடு-த்தல்.]*

**முலைச்சிலந்தி** *mulai-c-cilandi,* பெ.(n.) கொங்கையில் உண்டாகும் புண்கட்டி வகை (வின்.); a kind of tumour in the breasts.

*[முலை + சிலந்தி. சிலந்தி = புண், புண் கட்டி.]*

**முலைசப்பல்** *mulai-šappal,* பெ.(n.) முலைகுடிப்பிள்ளை பார்க்க; see *mulai-kuḍi-p-piḷḷai.*

**முலைசூப்பல்** *mulai-šūppal,* பெ.(n.) குழந்தை தாய் முலையுண்ணல்; to suck the breast (சா.அக.).

**முலைத்தடம்** *mulai-t-taḍam,* பெ.(n.) ஒரு வகை மார்பணி (M.E.R.720 of 1916-B); a kind of chest ornament.

மறுவ. முலைத்தளம்

*[முலை + தடம்.]*

**முலைத்தாசி** *mulai-t-tāši,* பெ.(n.) இலைக் கள்ளி; leaf spurge - *Euphorbia nerifolia* (சா.அக.).

**முலைத்தளம்** *mulai-t-taḷam,* பெ.(n.) கோவில் சிலைகளுக்கு அணிவிக்கும் பொன் முதலிய மாழைகளால் செய்த முலைக்கச்சு (நாஞ்.); a kind of metal stays for the breast, used for images in temples.

*[முலை + தளம்.]*

**முலைத்தாய்** *mulai-t-tāy,* பெ.(n.) ஐவகைத் தாயரில் குழந்தைக்குப் பால் தருபவள்; wet nurse, one of *ai-vagai-t-tāyar.* *"பல்வினைக்கும் முலைத்தாய் பயந்தார்" (சீவக. 3096) (பிங்.).*

*[முலை + தாய்.]*

ஐவகைத் தாயர் : 1. ஈன்ற தாய், 2. ஊட்டுந்தாய், 3. முலைத்தாய், 4, செவிலித்தாய், 5. கைத்தாய் (சா.அக.).

**முலைப்பரிசம்** *mulai-p-parišam,* பெ.(n.) முலைப்பாற்கூலி (இ.வ.) பார்க்க; see *mulai-p-pāṟ-kūli.*

*[முலை + பரிசம். பரிசு→பரிசம்.]*

**முலைப்பால்** *mulai-p-pāl,* பெ.(n.) தாய்ப் பால்; mother's milk. *"முலைப்பாற் காலத்து முடிமுறையெய்தி" (பெருங்.உஞ்சைக்.33:52).*

*[முலை + பால்.]*

**முலைப்பால்கூலி** *mulai-p-pāl-kūli,* பெ.(n.) முலைப்பாற்கூலி பார்க்க; see *mulai-p-pāṟ-kūli.*

*[முலைப்பால் + கூலி.]*

**முலைப்பால்மீன்** *mulai-p-pāl-mīṉ,* பெ. (n.) ஒருவகைக் கடல்மீன் (யாழ்ப்.); a kind of sea-fish.

*[முலைப்பால் + மீன்.]*

**முலைப்பால்விரை** *mulaippāl-virai,* பெ.(n.) கருப்புக்கொள்(ளு) (M.M.658); black horse - gram.

**முலைப்பாலி** *mulai-p-pāli,* பெ.(n.) புற்றிலுள்ள கறையான் திரள் (யாழ்.அக.); termites in an ant-hill.

*[முலை + பாலி.]*

**முலைப்பாலெண்ணெய்** *mulai-p-pāl-eṉṉey,* பெ.(n.) 1. தாய்ப்பாலுடன் கலந்து பச்சைக் குழந்தைகளுக்கு ஊட்டும் ஆமணக்கெண்ணெய் (வின்.); mixture of mother's milk and castor oil, given to babies. 2. தலையில் தேய்த்துக் கொள்ளும் மருந்து கலந்த எண்ணெய் (இ.வ.); a medicinal oil used for the head.

*[முலைப்பால் + எண்ணெய்.]*

**முலைப்பாற்கூலி** *mulai-p-pāṟ-kūli,* பெ.(n.) மணப்பெண்ணின் தாய்க்கு, அவளை வளர்த்ததன் பொருட்டு மணமகன் கொடுக்கும் பரிசப்பணம் (G.Tj.D.I,73); bride - price, money presented by the bride - groom to the bride's mother as compensation for having nourished her during her infancy.

*[முலைப்பால் + கூலி.]*

**முலைப்புண்** *mulai-p-puṇ,* பெ.(n.) கொங்கையில் உண்டாகும் புண் (கிரந்தி); venereal eruption in the breasts.

*[முலை + புண்.]*

சிற்றின்ப ஒழுக்கக் கேட்டினால் முலையில் உண்டாகும் புண். இது முலைச் சிலந்தியின் வேறானது.

முலைப்புற்று *mulai-p-puṟṟu,* பெ.(n.) கொங்கையில் வரும் புற்று நோய்; cancer breast (சா.அக.).

முலைமற–த்தல் *mulai-maṟa-,* 4 செ.கு.வி. (v.i.) குழந்தை, பால்குடி மறத்தல் (வின்.); to be weaned.

மறுவ. பால்மறத்தல்

*[முலை + மற–த்தல்.]*

முலைமறு–த்தல் *mulai-maṟu-,* 4 செ.கு.வி. (v.i.) ஆ(ன்) முதலியன பால் கொடுக்க மறுத்தல் (இ.வ.); to cease to give milk, as a cow.

*[முலை + மறு–த்தல்.]*

முலைமார்பு *mulai-mārbu,* பெ.(n.) 1. இதயம்; heart. 2. மார்பு; breast.

*[முலை + மார்பு.]*

முலைமுகம் *mulai-mugam,* பெ.(n.) 1. முலைக்காம்பு (C.G.) பார்க்க; see *mulai-k-kāmbu.* 2. கொங்கை; woman's breast. *"முத்தார மார்பின் முலை முகந்திருகி" (சிலப். பதிக.34).*

*[முலை + முகம்.]*

முலைமூக்கரிவாள் *mulaimūkkarivāḷ,* பெ.(n.) வெற்றிலைக் காம்பை அரிய உதவும் இலை மூக்கரிகத்தி (நாமதீப.421); a knife for cutting the stems of betel leaf.

*[முலை + மூக்கரிவாள்.]*

முலையமுது *mulai-y-amudu,* பெ.(n.) முலைப்பால்; mother's milk.

*[முலை + அமுது.]*

முலையழற்சி *mulai-y-aḻaṟci,* பெ.(n.) பால் மடியிலுண்டாகும் வலி (M.L.); inflammation of the udder, garget.

*[முலை + அழற்சி.]*

முலையெழு–தல் *mulai-y-eḻu-,* 2 செ.கு.வி. (v.i.) பெண் பருவமடைதல்; to become an adolescent girl. *"பிராட்டி முலையெழுந்தாப் போலேயோ நான் முலையெழுந்தபடி" (திவ்.நாய்ச்.8:4, வியா.)*

*[முலை + எழு–தல்.]*

முலைவித்திரதி *mulai-vittiradi,* பெ.(n.) பிள்ளை பெற்ற பெண்களுக்கு பாலிருந்தாலும் இல்லா விட்டாலும் முலையின் நரம்புகளில் உண்டாகும் ஒருவகையான சீழ்க்கட்டி; a kind of abscess in the breast of woman (சா.அக.).

*[முலை + **Skt.** வித்திரதி.]*

முலைவிலை *mulai-vilai,* பெ.(n.) முலைப் பாற்கூலி பார்க்க; see *mulai-p-pār-kūli.* *"வரைந் தெய்துதற்கு முலைவிலையோடு புகுந்து பொன்னணிவா னின்றாரு முளர்" (இறை. களவி.23, பக்.715), "முலைவிலையும் பள்ளியாரே கொள்ளப் பெறுவார்".* (T.A.S.ii, 81).

*[முலை + விலை.]*

முலைவெடிப்பு *mulai-veḍippu,* பெ.(n.) முலைக்காம்பு புண்படுகை; sore teats.

மறுவ. முலைக்காம்பு வீக்கம்

*[முலை + வெடிப்பு.]*

முவ்வை *muvvai,* பெ.(n.) நாய் (பரி.அக.); dog.

**முவட்டிபண்டு** *muvaṭṭipaṇḍu,* பெ.(n.) எட்டிப்பழம் (பரி.அக.); fruit of nux vomica.

தெ. முஷ்டிபண்டு

**முவலம்** *muvalam,* பெ.(n.) அவுபல செய் நஞ்சு (யாழ்.அக.); a mineral poison.

**முழ** *muḻa,* பெ.(n.) முழவு, 1, 2 3 பார்க்க; see *muḻavu, 1, 2, 3. "தின்வளி விசித்த முழவொடா குளி" (மலைபடு.3).*

**முழக்கட்டை** *muḻa-k-kaṭṭai,* பெ.(n.) நீளக் குறைவானது (வின்.); anything short of the full meausre, as a piece of cloth.

*[முழம் + கட்டை.]*

சட்டை, சேலை, வேட்டி.... முதலியவை உடுப்பதற்குப் போதிய நீளம் இல்லாமல் இருக்கை.

**முழக்கம்** *muḻakkam,* பெ.(n.) 1. பேரொலி; loud sound, as of thunder or of drums. *"துருமிடி சேர்ந்த முழக்கம் புரையும்" (பரிபா.7:82).* 2. ஆரவாரம்; clamour, hubbub, roar.

*[முழங்கு → முழக்கு → முழக்கம்.]*

**முழக்கு[1]-தல்** *muḻakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பேரொலி எழுப்புதல்; roar. *இடி முழங்கியது.* 2. நீட்டி முழக்கமிடுதல் (கோசமிடுதல்); shout slogans; thunder. *தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளை முழங்கினார்கள்.* 3. இசைக் கருவியை ஒலிப்பித்தல்; to sound, to beat a sounding instrument. *"குணில் வலத் தேந்தி முழக்கினாலென" (கம்பரா. கும்பக. 346).* 4. பெருஞ்சிறப்பு (விமரிசை) பெறச் செய்தல்; to do a thing pompously.

*[முழங்கு → முழக்கு → முழக்கு-தல்.]*

**முழக்கு[2]** *muḻakku,* பெ.(n.) ஒலி (வின்.); sound noise.

க. முழகு

*[முழங்கு → முழக்கு.]*

**முழக்குழி** *muḻa-k-kuḻi,* பெ.(n.) மருந்து புடம் போடுவதற்காகத் தோண்டும் ஒருமுழ ஆழக்குழி; a pit one cubic deep dug up for purpose of calcining medicines (சா.அக.).

*[முழம் + குழி.]*

**முழக்கோல்** *muḻa-k-kōl,* பெ.(n.) 1. அளவு கோல்; measuring rod. 2. எட்டு முழங் கொண்ட அளவுகோல்; a measuring rod of eight cubits. 3. இரண்டு தச்சு முழமுள்ள அளவுகோல்; mason's rule of two cubits, about 33 inches.

*[முழம் + கோல்.]*

**முழங்கால்[1]** *muḻaṅ-gāl,* பெ.(n.) 1. தொடைக்குக் கீழே காலை மடக்கி நீட்டக் கூடிய மூட்டு அமைந்திருக்கும் பகுதி; knee part of the leg from knee to ankle. *'முழங்கால் தெரியும்படி அவன் அரைக்கால் சட்டை அணிந்திருந்தான்', 'முழங்காலில் சரியான அடி'.* 2. முட்டிக்காற் பின்னல்; knock-knee.

தெ. மோகாலு; க. மொழகாலு; ம. முழக்கால்.

*[முழம் + கால் – முழங்கால் = நடுப்பொருத்தி னின்று அடிவரைப்பட்ட அல்லது முழ அளவான கால். முழங்கால் மூட்டுக்கும் கணுக்காலுக்கும் இடையிலுள்ள உறுப்பு.]*

**முழங்கால்படியிடு-தல்** *muḻaṅgāl-paḍi yiḍu-,* 20 செ.கு.வி.(v.i.) முழங்காலிடு-தல் பார்க்க; see *muḻaṅ-kāliḍu-.*

*[முழங்கால் + படியிடு-தல்.]*

**முழங்கால்பிடிப்பு** *muḻaṅgāl-piḍippu,* பெ.(n.) பால்வினை நோய் தாக்கப்பட்டதால் உண்டான முழங்கால் பிடிப்பு வலிநோய்; a painful disease affecting the knee from venereal causes - *Gout* (சா.அக.).

*[முழங்கால் + பிடிப்பு.]*

**முழங்கால்பொருத்து** *muḻaṅgāl-poruttu,* பெ.(n.) முழங்காலின் மூட்டு; knee joint (சா.அக.).

*[முழங்கால் + பொருத்து. பொருத்து = முழங்கால் மூட்டு.]*

**முழங்கால்முட்டி** *muḻaṅgāl-muṭṭi,* பெ.(n.) 1. முட்டிக்கால், 2 பார்க்க; see *muṭṭi-k-kāl;* 2. 2. முழங்காற் சில்லைத் தரையிலூன்றிப் போடுவதாகிய தோப்புக் கரணத் தண்டனை (இ.வ.); coming down heavily on the knees as a punishment.

*[முழங்கால் + முட்டி.]*

**முழங்கால்முட்டு** *muḻaṅgāl-muṭṭu,* பெ.(n.) 1. தொடையும் காலும் சேருமிடம் (M.L.); knee. 2. முழங்கால்முட்டி, 1 பார்க்க; see *muḻaṅgāl-muṭṭi, 1.*

*[முழங்கால் + முட்டு.]*

**முழங்கால்வலி** *muḻaṅgāl-vali,* பெ.(n.) முழங்கால் முட்டில் உண்டாகும் வலி (M.L.); arthritis, inflammation of the knee.

*[முழங்கால் + வலி.]*

**முழங்கால்வாதம்** *muḻaṅgāl-vādam,* பெ.(n.) முழங்காற்பிடிப்பு பார்க்க; see *muḻaṅgāṟ-piḍippu.*

*[முழங்கால் + **Skt.** வாதம்.]*

**முழங்கால்வீக்கம்** *muḻaṅgāl-vīkkam,* பெ.(n.) முழங்காலில் உண்டான வீக்கம்; swelling of the knee joint through inflammation - *House maid's knee* (சா.அக.).

*[முழங்கால் + வீக்கம்.]*

**முழங்காலிடு-தல்** *muḻaṅ-gāliḍu-,* 20 செ.கு.வி.(v.i.) முழங்காற்படியிடு-தல் பார்க்க; see *muḻaṅgāṟ-paḍi-y-iḍu.*

*[முழங்கால் + இடு-தல்.]*

**முழங்காற்கரப்பான்** *muḻaṅgāṟ-karappāṉ,* பெ.(n.) கரப்பானோய்வகை (தஞ்.சர.iii:92); a kind of *karappāṉ*disease.

*[முழங்கால் + கரப்பான். முழங்காலில் ஏற்படும் கரப்பான் நோய்.]*

**முழங்காற்சிப்பி** *muḻaṅgāṟ-cippi,* பெ.(n.) முழங்காற்சில் (வின்.) பார்க்க; see *muḻaṅgāṟ-cil.*

*[முழங்கால் + சிப்பி.]*

**முழங்காற்சில்** *muḻaṅgāṟ-cil,* பெ.(n.) காலையும் தொடையையும் சேர்க்கும் எலும்புப் பூட்டின் மேற்பாகம் (வின்.); knee - cap-*patella.*

*[முழங்கால் + சில்.]*

**முழங்காற்சில்லி** *muḻaṅgāṟ-cilli,* பெ.(n.) முழங்காற்சில் பார்க்க; see *muḻaṅgāṟ-cil.*

**முழங்காற்சில்லு** *muḻaṅgāṟ-cillu,* பெ.(n.) முழங்காற்சில் பார்க்க; see *muḻalṅgāṟ-cil.*

*[முழங்கால் + சில்லு. சில் → சில்லு.]*

**முழங்காற்படியிடு-தல்** *mulaṅgāṟ-paḍi-y-iḍu-,* 20 செ.கு.வி.(v.i.) முழந்தாளைக் கீழிட்டு வணங்குதல் (வின்.); to kneel down.

*[முழங்கால் + படி + இடு-தல்.]*

**முழங்காற்பிடிப்பு** *mulaṅgāṟ-piḍippu,* பெ.(n.) 1. முழங்கால் வீங்கிக் கடுத்து நடக்க முடியாமற் போகை; rheumatism affecting the knee joint swelling of the knee joint due to gonorrheal rheumatism. 2. முழங்காலில் கெட்ட நீர் வந்து தங்குவதாலேற்பட்ட ஒரு வகையானக் காற்றுப் பிடிப்பு நோய்; collection of morbid fluid in synovial cavity of the knee - *Synovitis* (சா.அக.).

*[முழங்கால் + பிடிப்பு.]*

**முழங்கு-தல்** *mulaṅgu-,*5 செ.கு.வி.(v.i.) 1. இடி, பீரங்கி போன்றவை அல்லது வாச்சியங்கள் பேரொலி எழுப்புதல்; thunder, cannon, etc. roar, rumble, of an ensemble sound loudly. *இடி முழங்கி மின்னல் வெட்டிப் பலத்த மழை பெய்தது. பீரங்கிகள் முழங்கத் தரப்பட்ட அணிவகுப்பு மதிப்புரவை இந்திய முதன்மை அமைச்சர் ஏற்றுக் கொண்டார். மேளம் முழங்க மிகவும் அழகாக நடந்தது ஊர்வலம். "எழிலி முழக்குந் திசையெல்லாம்" (நாலடி.392), "முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்றுறை" (அகநா.70:14), "முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்" (புறநா.18:1), "நொதுமல் வானத்து முழங்கு குரல் கேட்ட" (குறுந்.251:7), "முழங்குதிரை கொழீஇய மூரியெக்கர்" (நற்.15:1).* 2. உரக்க மேடையில் பேசுதல்; thunder out a speech. *நிருவாகத்திற்கு எதிரான செய்திகளைத் தொழிலாளர்கள் முழங்கினார்கள். கூட்டத்தில் முழங்கி என்ன பயன்? "தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார் முன்றினு முழங்கும்" (இலக். கொத்.7).*

க. முழகு.

*[முழா→முழ→முழங்கு→ முழங்கு-தல்.]*

**முழங்கை** *mulaṅ-gai,* பெ.(n.) 1. கையில் மணிக்கட்டுக்கும் தோளுக்கும் இடையிலுள்ள பாகம்; forearm. *"முழங்கைப் புண்போல முனை குலைந்த நிற்கிறது" (பழ.), "முழங்கையிற் பட்ட சுகம் போல" (பழ.).* 2. கையின் மேற்பாகமும் அதன் கீழ்ப்பாகமும் கூடுமிடம் (வின்.); elbow.

க. மொழகை.

*[முழம்+கை-முழங்கை = கையின் நடுப் பொருத்தினின்று நுனி வரைப்பட்ட அல்லது முழு அளவான கை.]*



**முழங்கைப்பிடிப்பு** *mulaṅgai-p-piḍippu,* பெ.(n.) முழங்கையில் ஏற்படும் காற்றுப்பிடிப்பு நோய்; arthrtic pain at the elbow - *Anconagra* (சா.அக.).

*[முழங்கை + பிடிப்பு.]*

**முழத்தின்கீழளவை** *mulattiṉ-kīḻ aḷavai,* பெ.(n.) நீட்டலளவையுள் ஒன்று. முழம் என்ற அளவைக்குக் கீழ்ப்பட்ட சாண், விரல், தோரை முதலிய அளவைகள்; a measurement in linear measurement, which is below the measurement of cubit as *Sāṇ, viral, tōrai.*

*[முழம் + அத்து + இன் + கீழ் + அளவை. முழத்திற்குக் கீழ்ப்பட்ட அளவுகள்.]*

முழந்தாட்கச்சு *muḻantāṭ-kaccu,* பெ.(n.) 1. முழங்காலிற் கட்டும் கச்சை; garter. 2. சல்லடம்; short drawers; half pantaloons.

*[முழந்தாள் + கச்சு.]*

முழந்தாள் *muḻan-tāḷ,*பெ.(n.) முழங்கால் (சூடா.) பார்க்க; see *muḻaṅgāl. "முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி" (குறு.394:1).*

முழந்து *muḻandu,* பெ.(n.) முழங்கால் (சூடா.) பார்க்க; see *muḻaṅ-gāl.*

*[முழந்தாள் (முழம் + தாள்) → முழந்து = முழங்கால் (சூடா.) (வே.க.).]*

முழம் *muḻam,*பெ.(n.) இருசாண் கொண்டதான முழங்கை நீள அளவு; cubit, measure from the elbow to the tip of the middle finger = 2 span. *இரண்டு முழம் மல்லிகைப்பூக் கொடு. "உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்" (நல்வழி.28).*

தெ. முர; க. மொழ; ம., து. முழம்.

*[முள் → முழி → முழம் = கைந்நடுப் பொருத்தினின்று அதன் நுனிவரையுள்ள நீட்டளவு.]*

முழம்போடு¹-தல் *muḻam-pōḍu,* 19 செ. குன்றாவி.(v.t.) 1. கையால் முழவளவாக அளத்தல் (வின்.); to measure with the fore arm. 2. ஆழம் பார்த்தல்; to sound a person. 3. ஆளின் தன்மையை ஆய்ந்து மதிப்பிடுதல்; to measure a person's quality.

*[முழம் + போடு-தல்.]*

முழம்போடு²-தல் *muḻam-pōḍu-,* 20 செ.கு.வி.(v.t.) பொருந்தாப் பொய் பேசுதல் (இ.வ.); to utter baseless falsehood.

*[முழம் + போடு-தல்.]*

முழமிடு-தல் *muḻam-iḍu,*18 செ.குன்றாவி. (v.t.) முழம்போடு¹-தல், 1 (வின்.) பார்க்க; see *muḻam-pōḍu-*¹, *1.*

*[முழம் + இடு-தல்.]*

முழல் *muḻal,*பெ.(n.) 1. புதர்கள் செறிந்த இடத்தில் உள்ள முட்கொடி; a thorny bushy creeper - *Caesalpina bonducella.* 2. கெச்சக்காய்; nut of bond ucella - fever nut. 3. கழற்சிக்காய்; bondue-nut.

முழவம் *muḻavam,* பெ.(n.) 1. முழவு, 1 (பிங்.) பார்க்க; see *muḻavu. "மண்கனை முழவம் விம்ம" (சீவக.628).* 2. முழவு, 2 பார்க்க; see *muḻavu. "தண்ணுமைப்பின்வழி நின்றது முழவே" (சிலப்.3:141). "நாறுகமழ் வீயும் கூறுமிசை முழவமும்" (பரிபா.8:99).*

*[முழா → முழவு → முழவம். ஒ.நோ. முரசு → முரசம். 'அம்' பெருமைப் பொருட்பின்னொட்டு.]*

முழவரிசை *muḻavariśai,* பெ.(n.) சோழர் காலத்தில் வாங்கிய வரிவகை (தெ.இ.கல். தொ.7: 51); a kind of tax in Chōḻāperiod.

முழவு¹ *muḻavu,* பெ.(n.) 1. முரசு; drum. *"முழவின் முழக்கீண்டிய"(சீவக.2399). "முழவுறழ் திணிதோள் நெடுவே ளாவி" (அகநா.61:15), "முழவிசைப் புணரி எழுதரும்" (நற்.67:11), "மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென" (புறநா.50:12).* 2. குடமுழா (பிங்.); large loud-sounding drum, hemispherical in shape. 3. தம்பட்டம் (பிங்.); tomtom. 4. பால்கறத்தற்குரிய ஏனம்; vessel for milk. *"முழவிற் பிழிந்த பால்வழிநுரை" (கம்பரா. கார்கால.47).* 5. ஏனம் முதலியன வார்த்தற்குரிய கரு; mould for casting a vessel.

ம. முழாவு.

*[முழா→முழவு.]*

**முழவு²–தல்** *mulavu-,* 5 செ.கு.வி.(v.i.) நெருங்கிப் பழகுதல் (இ.வ.); to move on intimate terms.

*[முழுவு→முழவு→முழவு–தல்.]*

**முழவு³** *mulavu,* பெ.(n.) பனைமரத்தின் அடிப்பகுதி; bottom of the palmara tree. *"முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணை" (குறுந்.301:1).*

*[முழவு¹ →முழவு³.]*

**முழவுக்கனி** *mulavu-k-kani,* பெ.(n.) திரண்ட பலாப்பழம் (சங்.அக.); jack-fruit.

*[முழவு¹ + கனி.]*

**முழவுகட்டு–தல்** *mulavu-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ஏனஞ் செய்யக் கருகட்டுதல் (இ.வ.); to prepare mould for casting vessels.

*[முழவு + கட்டு–தல்.]*

**முழவுமண்** *mulavu-man,* பெ.(n.) 1. இனிது ஒலிக்க முழவில் வாய்ப் பூச்சிடும் கரிய சாந்து (யாழ்.அக.); black paste smeared on the head of a drum. 2. கருக்கட்டுங் களிமண்; clay used in making moulds.

*[முழவு + மண்.]*

**முழவுமேளம்** *mulavu-mēlam,* பெ.(n.) 1. முழவு முதலிய கருவிகளின் கூட்டம் (இ.வ.); band of musical instruments, including *mulavu.* 2. பறைவகை (வின்.); kettle - drum.

*[முழவு + மேளம்.]*

**முழா¹** *mulā,* பெ.(n.) முழவு பார்க்க; see *mulavu.*

*[முழு→ முழா.]*

**முழா²** *mulā,* பெ.(n.) திரட்சி; accumulation.

*[முள்→முழு→முழா = திரட்சி.]*

**முழாசு¹–தல்** *mulāšu-,* 5 செ.கு.வி.(v.i.) கொழுந்துவிட்டெரிதல் (சுவாலித்தல்) (யாழ்ப்.); to burst into a flame, blaze up.

*[முழா→முழாசு→முழாசு–தல் = பெருநா விட்டு எரிதல்.]*

**முழாசு²** *mulāšu,* பெ.(n.) தீக்கொழுந்து (சுவாலை) (யாழ்ப்.); blaze, conflagration.

*[முழா→முழாசு = பெருநா தீநா..]*

**முழால்** *mulāl,* பெ.(n.) தழுவுகை; embracing. *"சிறார் முலை முழாலிற் பில்கி" (சீவக.2541).*

*[முழுவல்→முழால்.]*

**முழாவு¹–தல்** *mulāvu-,* 5 செ.கு.வி.(v.i.) முழவு–தல் (இ.வ.) பார்க்க; see *mulavu-.*

**முழாவு²–தல்** *mulāvu-,* 5 செ.கு.வி.(v.i.) நெருங்கிப் பழகுதல் (இ.வ.); familiarity.

*[முழவு→முழாவு→முழாவு–தல் (வே.க.)]*

**முழாவுசால்** *mulāvy-šāl,* பெ.(n.) நிறை உழவு சால் (யாழ்ப்.); the last or exterior furrow in ploughing.

*[முழாவு + சால்.]*

**முழாள்** *mulāl,* பெ.(n.) 1. வளர்ச்சியடைந்த பெரிய ஆள்; adult person. 2. வயது வந்த வேலையாள் (வின்.); adult workman.

*[முழு + ஆள்.]*

**முழி[1]–தல்** *mul̤i-*, 4 செ.குன்றாவி.(v.t.) உமிழ்தல்; to spit.

**முழி[2]** *mul̤i*, பெ.(n.) 1. எலும்புப்பூட்டு; joint, as of the body. 2. கரும்பு, மூங்கில் முதலியவற்றின் கணு; joint of bamboo, sugarcane node.

தெ.மேட; க., து. முடி; ம. முளி

*[மொழி→முழி.]*

**முழி[3]** *mul̤i*, பெ.(n.) விழி; eye, eye-ball. *சும்மா முழிக்கவே கண்ணெக் காணோம் சிமிட்டி முழிக்கிற தெங்கே (கோவை.).*

**முழி[4]–த்தல்** *mul̤i-*,4 செ.கு.வி.(v.i.) 1. கண் திறத்தல்; to open the eyes. 2. தூக்கத்திலிருந்து எழுதல்; to wake up from sleep.

*[விழி–த்தல்→முழி–த்தல்.]*

**முழிக்குருடு** *mul̤i-k-kuruḍu*, பெ.(n.) முழுக்கண் குருடு; complete blindness (சா.அக.).

**முழித்துக்கொள்ளு–தல்** *mul̤ittu-k-koḷḷu-*, 13 செ.கு.வி.(v.i.) விழித்துக் கொள்ளுதல்; to wake up.

**முழிப்பு** *mul̤ippu*, பெ.(n.) விழிப்பு; waking up.

*[முழி→முழிப்பு.]*

**முழியாங்கண்ணன்** *mul̤iyāṅ-kaṇṇaṉ*, பெ. (n.) பெரிய கண்களையுடையவன் (கோவை.); one who has got large eyes.

மறுவ. முண்டக்கண்ணன்

**முழு[1]–த்தல்** *mul̤u-*, 4 செ.கு.வி.(v.i.) 1. முழுமையாதல் (இலக்.அக.); to be whole, entire. *"முழுவலி முள்ளெயி றழுத்திய கதவிற்" (நற்.18:3), "முணங்குநிமிர் வயமான் முழுவலி யொருத்தல்" (புறநா.52:2).* 2. திரளுதல், பருத்தல்; conglomeration.

*[முள்→முழு→முழு–த்தல்.]*

**முழு[2]** *mul̤u*, கு.பெ.எ.(adj.) 1. பிரிக்கப்படாத, குறைக்கப்படாத நிலையில் உள்ள அனைத்தும், எல்லாம்; all, entire, whole. *"முழுவலி முதலை" (திவ்.பெரியதி.5.8:3). குழந்தை முழுப் பழத்தையும் சாப்பிட்டு விட்டது. தேர்தல் நேர்மையான முறையில் நடைபெற மக்களின் முழு ஒத்துழைப்பும் தேவை. அவர்தன் முழுப்பலத்தையும் பயன்படுத்தித் தூக்கினார்.* 2. பருத்த; large. *"முழுமத றொலைந்த கோளி யாலத்து" (புறநா.58), "முழுமுதல் துமிய உருமெறிந் தன்றே" (அகநா.68:7), "கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சி" (குறுந்.80:1), முழுமூடன், முழுத்தொகை, முழுமதி, முழுப் பூசினிக்காயைச் சோற்றோடு மறைப்பது போல, "முழுமணிப் பூணுக்குப் பூண் வேண்டுமா?"* 3. குறையே இல்லாத, நிறைவான; complete. *வேலை நிறுத்தம் முழுவெற்றி. செயல்முறை அறிவுபெற்ற பின்புதான் மருத்துவக்கல்வி பயின்ற மாணவன் முழு மருத்துவன் ஆகிறான்.* 4. விடுபடுதல் இல்லாத; total. *இதற்கு முழு விற்பனை வரி உண்டு. நாளை நாடு முழுவதும் கடை அடைப்புக் கடைபிடிக்கப்படும்.*

*[முள்→முழு. முல்→முள். முல் = பொருந்துதல்.]*

**முழுக்க** *mul̤ukka*, கு.வி.எ.(adv.) முழுதும்; wholly, entirely, altogether, completely. *'உயிரை முழுக்க சுடுதலின்' (சீவக.1966, உரை). நான் மழையில் முழுக்க நனைந்துவிட்டேன். ஊர் முழுக்க உன்னைப்*

*பற்றித்தான் பேசுகிறார்கள். குடம் சாய்ந்ததில் சமையல் அறை முழுக்கத் தண்ணீர்!*

*[முழு→முழுக்க.]*

முழுக்கட்டி *muḷu-k-kaṭṭi,* பெ.(n.) 1. உடையாத ஓர் உருண்டை வடிவம்; thing that unbreakable globally form. 2. பனி, பால், தயிர் முதலியவை கல்லைப் போல் இறுகிய நிலை; stone like formation of mist, milk and curd. *"முழுக்கட்டி பெயர்க்கிற பன்றிக்கு கொழுக் கட்டி விட்டதுபோல" (பழ.).*

*[முழு + கட்டி.]*

முழுக்கமுழுக்க *muḷukka-muḷukka,* வி.அ. (adv.) வேறு யாரையும் எதையும் சார்ந்து இருக்காமல் முழு அளவில்; entirely not depending others for anything, complete self-dependent. *இந்தத் தொழிற்சாலை முழுக்க முழுக்க இந்தியாவில் தயாரிக்கும் பொருட்களைக் கொண்டே உருவாக்கப்பட்டது. கல்யாணச் செலவு முழுக்கமுழுக்க என்னையே சார்ந்தது.*

முழுக்கருப்புப்பனிநீர் *muḷukkaruppu-p-paṉiṉīr,* பெ.(n.) சேங்கொட்டையிட்டுப் பதப்படுத்திய நிலத்தில் 8 மாதம் சென்ற பிறகு அவுரிச் செடியை விளைத்து நான்காம் தரத்தில் விளைந்த பயிரின் மேல் தங்கிய நீர்; இப்பனி நீரில் கொக்கினுடைய இறகைப் போட காக்கையின் இறகைப்போல கருப்பாகும் கழுவினாலும் நிறம் போகாது; dew water obtained by certain method dyes the white feather of the stork into permanent black, the method of obtaining the dew is given above (சா.அக.).

*[முழு + கருப்புப்பனிநீர்.]*

முழுக்களவாளி *muḷu-k-kaḷavāḷi,* பெ.(n.) பெருந்திருடன்; great thief, robber.

*[முழு + களவாளி.]*

முழுக்காட்டு[1]-தல் *muku-k-kāṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) எண்ணெய்க் குளிப்பு செய்வித்தல்; to take oil bathe. *"கடல்வேந்தை யவன்புனலான் முழுக்காட்டு முறைமை யென்கோ" (சௌந்த.103).*

*[முழுக்கு + ஆட்டு-தல்.]*

முழுக்காட்டு[2]-தல் *muḷu-k-kāṭṭu-,* 5 செ. கு.வி.(v.i.) குளிக்கச் செய்தல்; to bathe some one. *குழந்தைக்கு எண்ணெய் தேய்த்து முழுக்காட்டினேன்.*

*[முழுக்கு + ஆட்டு-தல்.]*

முழுக்காடு-தல் *muḷu-k-kāḍu,* 5 செ.கு.வி. (v.i.) எண்ணெய் தேய்த்துக் குளித்தல்; oil bathing. *"எண்ணெய் சேர்த்தே முழுக்காடுவார்" (அறப்பளீச்.50).*

க. முழுகாடு

*[முழுக்கு + ஆடு-தல்.]*

முழுக்காப்பு *muḷu-k-kāppu,* பெ.(n.) கோயில்களில் கடவுட் திருமேனியின் மீது சந்தனஞ்சாத்தி ஒப்பனை செய்யுஞ் சடங்கு (இ.வ.); ceremony of daubing the idol completely with sandal paste, in temples.

*[முழு + காப்பு.]*

முழுக்காய் *muḷu-k-kāy,* பெ.(n.) பழுக்கும் பருவத்தின் காய் (வின்.); fruit almost ripe; ripening stage of a fruit.

*[முழு + காய்.]*

முழுக்காளி *mul̠u-k-kāl̠i,* பெ.(n.) 1. முத்துக் குளிப்போன் (வின்.); diver for pearls. 2. இழவுக்குக் குளிக்க வேண்டிய நெருங்கிய உறவினன் (இ.வ.); a near relation of a person, as one who is under obligation to bathe on his death.

*[முழுக்கு + ஆளி.]*

முழுக்கு[1]-தல் *mul̠ukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) முழுத்து-தல் பார்க்க; see *mul̠uttu-.* *"அயில்களும் வாளுந் தோள்களின் முழுக்கினர்" (கம்பரா. அதிகாய.98).*

க. முழுகிசு.

*[முழுகு→முழுக்கு→ முழுக்கு-தல்.]*

முழுக்கு[2] *mul̠ukku,* பெ.(n.) 1. நீரில் தலை அமிழக் குளிக்கை; bath, bathing. *பல தீட்டுக்கு ஒரு முழுக்கு.* 2. மாதவிடாய் (இ.வ.); menses.

தெ. முனுகு; க. முழுகு; ம. முலுகு; து. முலு.

*[முழுகு→முழுக்கு.]*

முழுக்குநிற்பாடு *mul̠ukku-niṟpāḍu,* பெ.(n.) 45ஆவது வயதில் பெண்களுக்கு மாதவிடாய் நிற்றல்; stoppage of menses at the age of 45 - Menopause.

*[முழுக்கு + நிற்பாடு.]*

முழுக்குப்போடு-தல் *mul̠ukku-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) இதுவரை இருந்து வந்த தொடர்பைத் துண்டித்துக் கொள்ளுதல்; sever one's connection, bid farewell to something, leave something one for all. *தன் பேச்சை யாரும் கேட்கவில்லை என்ற சினத்தின் காரணமாக கழகத்திற்கு முழுக்குப் போட்டு விட்டார். படிப்புக்கு முழுக்குப் போட்டு விட்டுத் தந்தையின் தொழிலில் இறங்கிவிட்டான்.*

*[முழுக்கு + போடு-தல்.]*

முழுக்குமுறை *mul̠ukku-muṟai,* பெ.(n.) 1. பிள்ளைப்பேற்றின்பின் ஒன்றுவிட்டொரு நாள் முறையாக குளிக்குங் காலம்; the period soon after child-birth, during which the mother takes baths on alternate days. 2. பிள்ளைப் பேற்றின்பின் முறையாகக் குளிக்கும் நாள்; the alternate days when a woman after child-birth takes baths.

*[முழுக்கு + முறை.]*

முழுக்குழவி *mul̠u-k-kul̠avi,* பெ.(n.) முது கன்று; full-grown or weaned calf. *"மோட்டெருமை முழுக்குழவி" (பட்டினப்.14).*

*[முழு + குழவி.]*

முழுக்கூழ் *mul̠u-k-kūl̠,* பெ.(n.) கலக்கம்; utter confusion. *"செய்தாய் முழுக்கூழ்" (நீலகேசி.399).*

*[முழு + கூழ்.]*

முழுக்கெண்ணெய் *mul̠u-k-keṇṇey,* பெ.(n.) தலைமுழுகும் நெய்மம் (தைலம்); bathing oil (சா.அக.).

*[முழுக்கு + எண்ணெய்.]*

முழுக *mul̠uga,* கு.வி.எ.(adv.) முழுவதும்; wholly, entirely. *"மதிலுமாடமு மாடகச்செய் குன்று முழுகக் குழாமீண்டி" (திருவாரூ.142).*

*[முழுகு→ முழுக (வே.க.முல்[6]).]*

முழுகல் *muḷugal,* தொ.பெ.(vbl.n.) 1. தலை முழுகல்; oil bath after menses. 2. குளித்தல்; bathing (சா.அக.).

*[முழுகு→முழுகல்.]*

முழுகவிடு–தல் *muḷuga-viḍu-,* 18 செ. குன்றாவி.(v.t.) 1. பொருள் முதலியன தொலையும்படி விடுதல்; to let a thing go to ruin. 2. அடைவு வைத்த பொருளை மீட்க முடியாதிருத்தல் (இ.வ.); to be unable to redeem, as a pledged thing.

*[முழுகு + விடு–தல்.]*

முழுகாமலிரு–த்தல் *muḷugāmal-iru-,* 3 செ.கு.வி.(v.i.) கருவுற்றிருத்தல்; to be pregnant. *அவன் மனைவி மூன்று மாதமாய் முழுகாமலிருக்கிறாள்.*

மறுவ. உண்டாயிருத்தல், மாதமாயிருத்தல், பிள்ளையாண்டிருத்தல்.

*[முழுகாமல் + இரு–த்தல்.]*

முழுகிக்கிட–த்தல் *muḷugi-k-kiḍa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. முழுவதும் முடங்கிக் கிடத்தல்; to be involved completely. *அவன்சொத்து முழுவதும் வணிகத்தில் முழுகிக் கிடக்கிறது.* 2. ஆழ்ந்து ஈடுபட்டிருத்தல்; to be absorbed, engrossed. *அவன் காமக் களியாட்டில் முழுகிக் கிடக்கிறான்.* 3. நீரில் அமிழ்ந்திருத்தல்; to be under water. *அடைமழையினாற் பயிர் முழுகிக் கிடக்கிறது.*

*[முழுகு→ முழுகி + கிட–த்தல்.]*

முழுகிப்போ–தல் *muḷugi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. அமிழ்ந்து போதல்; to sink, founder; to be drowned. *நேற்று வந்த பெருவெள்ளத்தில் ஊர் முழுவதும் முழுகிப் போயிற்று (உ.வ.).* 2. அடியோடு கெடுதல்; to be ruined, swallowed up. *சூதாட்டினால் அவன் குடி முழுகிப் போயிற்று.* 3. அடைவு வைத்த சொத்து மீட்கமுடியாது கடனுக்கு உட்பட்டுவிடுதல் (இ.வ.); to be entirely lost beyond redemption. *அவன் அடைவு வைத்த நகை முழுவதும் முழுகிப் போய்விட்டது (உ.வ.).*

*[முழுகு→முழுகி + போ–தல்.]*

முழுகு–தல் *muḷugu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. குளித்தல்; to bathe the entire body by dipping or pouring. 2. வினை முயற்சித்தல், அழுந்தியிருத்தல்; to be entirely immersed, as in business. 3. அமிழ்ந்து போதல்; to sink. *கப்பல் முழுகிவிட்டது.* 4. மாதவிடாயடைதல் (வின்.); to be in menses. 5. தீர்க்க முடியாத அளவு கடன் மிகுந்ததால் சொத்து மீட்க முடியாமல் கடனுள் அமிழ்து போதல் (இ.வ.); to be irretrievably involved in debts. *அவன் கடனில் முழுகி விட்டான்.*

தெ. முனுகு; க. முழு; ம. முழுகுக.

முழுகு = L. mergo, mergere, F. merger, E. merge. இதினின்று emerge, submerge முதலிய சொற்கள் பிறக்கும். L. mers. இதினின்று immerse, submerse முதலிய சொற்கள் பிறக்கும் (வே.க.முல்[6]).

*[முள் → முழு → முழுகு → முழுகு–தல் (வ.மொ.வ.).]*

முழுங்கல் *muḷuṅgal,* தொ.பெ.(vbl.n.) விழுங்குகை; to swallow (சா.அக.).

*[முழு→முழுகு→முழுங்கு→ முழுங்கல்.]*

முழுங்கித்தொலை–த்தல் *mulungi-t-tolai-*, 4 செ.கு.வி.(v.i.) சினத்துடன் சாப்பிடச் சொல்லுதல் (கோவை.); abusing word, used in anger, to command a person to eat.

*[முழுங்கு→முழுங்கி + தொலை–த்தல்.]*

முழுங்கு[1]–தல் *mulungu-*, 5 செ.கு.வி. (v.i.) முழுகுதல்; to sink. *குடம் தண்ணீரில் முழுங்கி விட்டது.*

*[முழுகு→முழுங்கு→முழுங்கு–தல்.]*

முழுங்கு[2]–தல் *mulungu-*, 5 செ.குன்றாவி. (v.t.) தொண்டைக்குள் அல்லது வயிற்றிற்குள் முழுகச் செய்தல், விழுங்குதல்; to swallow, gulp, as food. *மாத்திரை முழுங்கினான்.*

தெ. மிங்கு

*[முழுகு→முழுங்கு→முழுங்கு–தல்.]*

முழுச்சவரம் *mulu-c-cavaram*, பெ.(n.) மயிர் முற்றுமாக மழிக்கை (உ.வ.); shaving the body and not merely the head.

*[முழு + **Skt.** சவரம் > த. மழி–த்தல்.]*

முழுச்செம்பு *mulu-c-cembu*, பெ.(n.) தென்னிந்தியாவில் வழங்கிய பழைய நாணய வகை (பணவிடு.140); an ancient South Indian coin.

*[முழு + செம்பு.]*

முழுச்செவிடு *mulu-c-cevidu*, பெ.(n.) சிறிதும் ஓசை கேளாமை; complete deafness - *Anacusia* (சா.அக.).

*[முழு + செவிடு.]*

முழுச்சோம்பேறி *mulu-c-cōmbēri*, பெ.(n.) மிகுந்த சோம்பலுள்ளவ–ன்–ள்; great sluggard. *"முழுச்சோம்பேறி முள்ளுள்ள வேலி" (பழ.).*

*[முழு + சோம்பேறி.]*

முழுச்சௌரம் *mulu-c-cauram*, பெ.(n.) முழுச்சவரம் (வின்.) பார்க்க; see *mulu-c-cavaram.*

*[முழு + **Skt.** சௌரம்.]*

முழுசு[1]–தல் *mulusu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. முட்டுதல்; to rub, strike against. *"பிள்ளைகள் முலைக்கீழ் முழுசினவாறே பால்சுரக்கும்" (ஈடு, 5. 3 : 3).* 2. முத்தமிடுதல்; to kiss. *"அழுத்தந் தழுவாதே முழுசாதே" (திவ்.பெருமாள்.9 : 6).*

*[முல் (பொருந்தல்)→முள்→முழு→முழுவு. முழுவு→முழுசு→முழுசு–தல். ஒ.நோ. பரவு→பரசு; விரவு→விரசு.]*

முழுசு[2]–தல் *mulusu-*, 5 செ.கு.வி.(v.i.) உட்புகுதல்; to dive, dip, get in, entire. *"முழுசி வண்டாடிய தண்டுழாயின்" (திவ். பெரியதி.2.8:7).*

*[முல்(துளைத்தல்)→முள்→முழு→முழுசு →முழுசு–தல் (வே.க.முல்.[6]).]*

முழுசு[3] *mulusu*, பெ.(n.) முழுமை, 1 (உ.வ.) பார்க்க; see *mulumai, 1.*

*[முழுது→முழுசு.]*

முழுசு[4] *mulusu*, பெ.எ.(adj.) முழுமை; whole, entireness. *எல்லாப் பணியாரத்தையும் முழுசாய்த் தின்று விட்டான் (உ.வ.).*

*[முழுது→முழுசு.]*

முழுத்த[1] *mulutta*, பெ.எ.(adj.) முதிர்ச்சி பெற்ற; fully developed. *"முழுத்த வின்பக்கடல்" (திருக்கரு.கலித்.அந்.).*

*[முழு→முழுத்த.]*

**முழுத்த²** *muḻutta,* வி.எ.(adv.) முழுதும் பார்க்க; see *muḻudum.* *"ஏத்தி வந்த தெல்லா முழுத்த" (புறநா.372:2).*

*[முழு→முழுத்த.]*

**முழுத்தக்கம்பு** *muḻutta-k-kambu,* பெ.(n.) முழுத்தக்கால் (இ.வ.) பார்க்க; see *muḻutta-k-kāl.*

*[முழுத்தம் + கம்பு.]*

**முழுத்தக்கால்** *muḻutta-k-kāl,* பெ.(n.) மணப்பந்தர்க்கு நல்வேளையில் முதலாக நாட்டும் கால் (வின்.); first post fixed at an auspicious moment for erecting a pandal for a marriage.

*[முழுத்தம் + கால்.]*

மணமனையில், மணநாளுக்கு முன் 3, 5, 7, 9 ஆகிய ஒற்றித்த நாட்களுள் ஒன்றில், நல்ல வேளையில் முழுத்தக் கால் நாட்டிப் பந்தல் அல்லது கொட்டகை போடப்படும்.

**முழுத்தசுரம்** *muḻutta-šuram,* பெ.(n.) சுரநோய் வகை (யாழ்.அக.); a kind of fever.

*[முழுத்த + சுல் = வெப்பப்பொருள். சுல்→சுர் →சுரம். த.சுரம் > **Skt.** jvara.]*

**முழுத்தநாடி** *muḻutta-nāḍi,* பெ.(n.) நல்லோரை (வின்.); auspicious time.

*[முழுத்தம் + நாடி.]*

**முழுத்தநாள்குறி-த்தல்** *muḻutta-nāḷ-kuṟi-,* 4 செ.கு.வி.(v.i.) திருமணச் சடங்கிற்காக நல்ல நாள் பார்த்தல்; fix an auspicious day for marriage.*மகளுக்கு இன்று முழுத்த நாள் குறித்தல் விழா நடைபெற்றது.*

மறுவ. மணவுறுதி நாள்.

*[முழுத்தம் + நாள் + குறி-த்தல்.]*

**முழுத்தநெல்போடு-தல்** *muḻuttanel-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) இரண்டு புதுப் பானைகளில் ஒன்றில் நெல்லையும் மற்றொன்றில் நீரையும் இடுதல் (கோவை.); just two days before the marriage its the custom of Senthalai Kounder caste the priest to take two pots, and place paddy in one and water in another. *செந்தலைக் கவுண்டர் இனத்தில் திருமணத்திற்கு இரண்டு தினங்களுக்கு முன்பு காலையில் சீர்க்காரர்கள் இரண்டு புதுப் பானைகளில் ஒன்றில் நெல்லையும் மற்றொன்றில் நீரையும் இடுவர்.*

*[முழுத்தம் + நெல் + போடு-தல்.]*

**முழுத்தம்** *muḻuttam,* பெ.(n.) 1. திருமணத்தில் குறித்த நல்வேளையில் நடத்தும் தாலிகட்டும் நிகழ்வு; the main event of tying the *tāli,* in a wedding ceremony in an auspicious hour. *முழுத்தம் முடிந்த பிறகு வருகிறாயே!* 2. நல்ல சடங்கு நிகழ்த்துவதற் குரிய நேரம்; auspicious hour. *நாளைக் காலை எட்டு மணிக்கு நல்ல முழுத்தம் இருக்கிறது.* 3. நேரம்; moment, time. 4. ஒன்றரை மணி அல்லது மூன்றே முக்கால் நாழிகை நேரங் கொண்ட ஒரு காலவளவை; a division of time = 3 3/4 *nāḻigai* = 1 1/2 hours. 5. இரண்டு நாழிகை கொண்ட காலப்பகுதி; a division of time of two nāḻigai. 6. திருமணம்; marriage, wedding.

**முழுத்தம்பார்-த்தல்** *muḻuttam-pār-,* 4 செ.கு.வி.(v.i.) 1. திருமணம் முதலிய நல்நிகழ்வுகளுக்கு நல்ல நேரம் ஆய்ந்தறிதல்; to find out an auspicious time,

like marriage, house-warning etc. 2. முழுத்தம்வை–த்தல் பார்க்க; see *mu|uttam-vai-*.

*[முழுத்தம் +ண் பார்–த்தல்.]*

முழுத்தம்வை–த்தல் *mu|uttam-vai-,* 4 செ.கு.வி.(v.i.) மணவிழா முதலிய நற் செயல்களுக்கு நேரங்குறித்தல்; to fix an auspicious time, as for a wedding.

*[முழுத்தம் + வை–த்தல்.]*

முழுத்து–தல் *mu|uttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அமிழ்த்துதல்; to plunge, dip in, drown. *"துதிக்கை முழுத்திற்று" (ஈடு, 3.5: 1).*

*[முல் (துளைத்தல்)→முள்→முழு→முழுகு→ முழுசு→முழுது→முழுத்து→முழுத்து–தல் (வே.க.).]*

முழுத்தும் *mu|uttum,* வி.எ.(adv.) முழுதும் பார்க்க; see *mu|udum. "முழுத்தும் பழுதற்ற முத்தமிழின்" (சிலப்.உரைச்சிறப்.பக்.1).*

முழுத்துவரை *mu|u-t-tuvarai,* பெ.(n.) உடைக்கப்படாத முழுத்துவரை; redgram pulse-*Cajamuscajan*.

*[முழு + துவரை.]*

முழுத்துவி–த்தல் *mu|uttuvi-,* 4 செ. குன்றாவி.(v.t.) முழுத்து–தல் பார்க்க; see *mu|uttu-. "மன்னவரை..... முழுத்து விப்பன் செங்குருதிமுன்" (பாரதவெண்.126).*

*[முழுத்து → முழுத்துவி → முழுத்துவி–த்தல் (வே.க.முல்[6]).]*

முழுத்தேங்காய் *mu|u-t-tēṅgāy,* பெ.(n.) உடைபடாத தேங்காய் (வின்.); unbroken coconut.

*[முழு + தேங்காய்.]*

முழுத்தொகை *mu|u-t-togai,* பெ.(n.) 1. வட்டியுடன் கூடிய முதல்; capital and interest. 2. மொத்தம்; total.

*[முழு + தொகை.]*

முழுது[1] *mu|udu,* பெ.(n.) எஞ்சாமை; all, whole, entirely. *"வேர்முழு துலறி நின்ற புழற்காற்" (அகநா.145:1), "முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ" (குறுந்.210:3), "சுடர்முழு தெறிப்பத் திரங்கிச் செழுங்காய்" (நற்.26:5), "திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி" (புறநா.2:19). கனவு முழுதும் நினைவில் வைத்துக் கொள்ள முடியாது.*

*[முழு→முழுது.]*

முழுது[2] *mu|udu,* வி.எ.(adv.) முழுதும் (தொல்.சொல்.326) பார்க்க; see *mu|udum. "முழுதும் நனைந்தவருக்கு முக்காடு எதற்கு?" (பழ.).*

*[முழு→முழுது.]*

முழுதுகண்டராமன் *mu|udu-kaṇḍa-rāmaṉ,* பெ.(n.) ஒரு பாண்டிய மன்னன் பெயர்; name of a *Pāṇḍiyā* king.

முழுதும் *mu|udum,* வி.எ.(adv.) எஞ்சுதலின்றி; wholly, entirely. *"முழுதும் வெண்ணெ யளைந்து தொட்டுண்ணும்" (திவ்.பெருமாள். 7:8).*

முழுதொருங்குணர்ந்தோன் *mu|udoruṅg -uṇarndōṉ,* பெ.(n.) 1. அருகன் (திவா.); Arhat. 2. கடவுள் (யாழ்.அக.); God. 3. சிவன் (யாழ்.அக.); *Śiva*.

*[முழுது + ஒருங்கு + உணர்ந்தோன்.]*

முழுதோன் *muḻudōṉ,* பெ.(n.) கடவுள்; God. *"முழுதோன் காண்க" (திருவாச.3 : 29).*

*[முழுவது →முழுது→முழுதோன் = கடவுள்.]*

முழுந்து[1] *muḻundu,* பெ.(n.) முழுமை, 1 பார்க்க; see *muḻumai, 1. "முழுந்து சுகவடிவாம்" (ஞானவா.சனக.14).*

*[முழுது →முழுந்து.]*

முழுந்து[2]–தல் *muḻundu-,* 5 செ.குன்றாவி. (v.t.) விழுங்குதல்; to swallow. *"முத்திப் பராமிழ்த முழுந்திட" (பாடு.92 : 7).*

*[முழுகு →முழுங்கு→முழுந்து→ முழுந்து–தல்.]*

முழுநாயகம் *muḻunāyagam,* பெ.(n.) கொடி வகை (சங்.அக.); a creeper.

முழுநாள் *muḻu-nāḷ,* பெ.(n.) ஓர் ஓரைக்குள்ளாகவே முழுதும் அமையும் விண்மீன் (சங்.அக.); naksatra falling entirely within a zodiacal sign.

*[முழு + நாள். நாள் = விண்மீன்.]*

முழுநீள *muḻu-nīḷa,* பெ.அ.(adj.) கதை, திரைப்படம், முதலியவை குறித்து வருகையில் வழக்கமாக எதிர்பார்க்கப்படும் நீளத்திலும் குறிப்பிடப்படும் தன்மையிலும் உள்ள; ful length of story, film, etc. *காதல் கதைகளை மட்டும் எழுதிக் கொண்டிருந்தவர் இப்போது முழுநீளத் துப்பறியும் கதை எழுத தொடங்கி யிருக்கிறார். முழு நீள நகைச் சுவைப்படம்.*

*[முழு + நீள. நீளம்→ நீள.]*

முழுநீறுபூசியமுனிவர் *muḻu-nīṟu-pūśiya-muṉivar,* பெ.(n.) தொகையடி யாருள் ஒருசாராரும் உடல் முழுவதும் திருநீற்றை அணிபவருமான சிவனடியார் (தேவா.738, 10); *Śaiva* devotees who besmear sacred ashes all over their bodies, one of *togai-y-aḍiyār.*

*[முழு + நீறு + பூசியமுனிவர்.]*

இறைவனுடைய அடியவர்களின் மேனியில் அழகு செய்யும் சிவச் சின்னங்கள் திருவெண்ணீறும், அக்கமணியும் (உருத்திராட்சமும்) ஆகும்.

திருநீறு (கற்பகம், அநுகற்பகம், உபகற்பகம் என்று) மூன்று வகைப்படும்.

இம்மூன்று வகையான திருநீற்றையும் அணிவதினால் பிறவிப் பிணியைப் போக்கி நலம் பெற வழி உண்டாகிறது.

நோயின்றியும் கன்றையுடையதுமான ஆவின் சாணத்தை ஐந்தெழுத்து (பஞ்சாக்ஷர) மறைமொழியைச் சொல்லி ஏற்று ஆனைந்து (பஞ்சகவ்யம்) விட்டுப் பிசைந்து உலர்த்தி எடுத்துக் கொள்ள வேண்டும். சிவனிரா (சிவராத்திரி) அன்று சிவ மறைமொழியில் வேள்விகள் நடத்தி நெருப்பில் இட வேண்டும்.

கொழுந்துவிட்டு எரியும் ஓமத்தீயில் சாணம் வெள்ளைப் பொடியாக – நீராக எரிந்து விடுகின்றது.

இத்திருநீற்றை சிவபெருமானார் திருவடிகளை வாழ்த்தி வணங்கி, பயபக்தியுடன் எடுத்தல் வேண்டும். இத்தகைய திருவெண்ணீறு 'கற்பகம்' என உரைக்கப்படும்.

காட்டிலே உலர்ந்து கிடக்கும் ஆவின் சாணத்தைப் பொடி செய்து, ஆவின்நீரை ஊற்றி, நன்றாக பிசைந்து உலர்த்த வேண்டும். திருஓமம் வளர்த்துக் கொழுந்து விட்டு எரியும் ஓமத்தீயில் இட்டு எரிக்க வேண்டும். இத்திருவெண்ணீறு இரண்டாம் வகை (அநுகற்பகம்).

ஆக்கள் மேயும் காட்டில் மரங்கள் பற்றி எரிந்து அதனால் உண்டான நீறும், ஆக்கள் கட்டி வைத்த இடங்களில் தீப்பற்றி வெந்துபோன நீறும், செங்கல் சுட்ட காளவாயிலில் உண்டான நீறும், ஆகிய இவற்றைத் தனித்தனியே ஆவின் நீரினால் நன்றாகப் பிசைந்து உலர்த்த வேண்டும். அவற்றை மறைமொழி ஓதி உருண்டை உருண்டையாக உருட்டி வைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

இவ்வாறு செய்யப்பட்ட உருண்டைகளை மடங்களில் உள்ள நெருப்பில் (சிவாக்கினியில்) இட்டு வேக வைத்தல் வேண்டும். இப்படித் தீயில் இட்டு எடுத்த திருநீறு மூன்றாம் வகைத் திருநீராகும் ('உபகற்பம்').

இவற்றுள் எந்த வெண்ணீற்றையாயினும் உடல் முழுவதும் பூசிக் கொள்ளலாம். ஆனால் திருநீற்றை பூசிக் கொள்வதற்கென்று சில நெறிமுறைகள் உண்டு. அதைத் தட்டாமல் கடைப்பிடித்தல் வேண்டும்.

தூய்மையில்லாத இடங்களில் நடக்கும் போது திருநீறு அணியவே கூடாது. திருநீற்றை அணியும் போது அவற்றைக் கீழே சிந்தாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு முழுநீறு பூசிய முனிவர்களைச் சுந்தர மூர்த்தி நாயனார் தொகையடியார்களில் ஒருவராக்கிச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

**முழுநெறி** *muḻu-neṟi,* பெ.(n.) 1. இதழொடிக்கப்படாத முழுப்பூ (சிலப்.2:14, உரை); full flower with the calyx. 2. புறவிதழொடிக்கப்பட்ட முழுப்பூ; full flower without the calyx. *"குவளைக் கூம்பவிழ் முழுநெறி" (புறநா.116 : 2).* 3. முற்றிய இலைகளால் நெருக்கமாகக் கட்டப்பட்ட தழையுடைய பூ; a dress made of dry leaves with dense cumulative. *"கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சி" (குறுந்.80:1).*

*[முழு + நெறி.]*

**முழுநோக்கு** *muḻu-nōkku,* பெ.(n.) 1. ஒன்றை அனைத்துக் கோணங்களிலும் நோக்குதல்; viewing the thing by all angle and aspect. 2. கோளொன்று முழுமையாக நோக்குகை; full aspect of a planet, one of four *Kiraga-nōkku. "கன்னிமதி முழுநோக் கெய்தி" (பிரபுலிங். மாயையினுற்பத்தி.58).*

மறுவ. முழுப்பார்வை

*[முழு + நோக்கு.]*

**முழுப்பங்கு** *muḻu-p-paṅgu,* பெ.(n.) நிலத்துரிமையில் உட்பிரிவில்லாத தனிப்பங்கு (வின்.); whole or undivided share, as in land owned in definite shares. *"முழுப் பங்குக்காரனுக்கு முந்திரிப் பங்குக்காரன் மிண்டன்" (பழ.).*

*[முழு + பங்கு.]*

**முழுப்பாய்சுருட்டி** *muḻu-p-pāy-šuruṭṭi,* பெ.(n.) ஏமாற்றுக்காரன் (பெரு மோசக்காரன்); swindler, great cheat, traitor.

*[முழு + பாய்சுருட்டி.]*

**முழுப்பார்வை** *muḻu-p-pārvai,* பெ.(n.) முழுநோக்கு (மங்கஜே.3 : 32, உரை) பார்க்க; see *muḻu-nōkku.*

மறுவ. முழுநோக்கு.

*[முழு + பார்வை.]*

**முழுப்புரட்டன்** *muḻu-p-puraṭṭaṉ,* பெ.(n.) 1. முழுப்புளுகன் பார்க்க; see *muḻu-p-puḻugaṉ.* 2. முழுப்பாய்சுருட்டி பார்க்க; see *muḻu-p-pāy-šuruṭṭi.*

*[முழு + புரட்டன்.]*

**முழுப்புளுகன்** *muḻu-p-puḷugaṉ,* பெ.(n.) பெரும்பொய்யன் (வின்.); downright liar.

*[முழு + புளுகன்.]*

**முழுப்பொய்** *muḻu-p-poy,* பெ.(n.) பெரும் பொய்; downright lie.

*[முழு + பொய்.]*

**முழுப்பொருள்** *muḻu-p-poruḷ,* பெ.(n.) கடவுள்; the Supreme being. *"மனவாக்கினுக்கு மெட்டாத முழுப்பொருளா முதல்வா" (சிவரக.கணபதிகுமர.7).*

*[முழு + பொருள்.]*

**முழுமக்கள்** *muḻu-makkaḷ,* பெ.(n.) அறிவிலார்; fools, as barely satisfying the definition of human beings. *"முழுமக்கள் காதலவர்" (திரிகடு.9).*

*[முழு + மக்கள்.]*

**முழுமகன்** *muḻu-magaṉ,* பெ.(n.) அறிவிலி (திவா.); fool.

*[முழு + மகன்.]*

**முழுமணி** *muḻu-maṇi,* பெ.(n.) 1. துளையிடாத மணி; unpierced gem. 2. குற்றமற்ற மணி (இரத்தினம்); flawless gem. *"முற்ற முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா" (நீதிநெறி.13).*

*[முழு + மணி.]*

**முழுமதி** *muḻu-madi,* பெ.(n.) முழுநிலவு, உவா; full moon. *"முழுமதி புரைமுகமே" (சிலப்.7, பாட்டு.14).*

மறுவ. நிறைமதி, முழுநிலா, வெண்ணிலா.

*[முழு + மதி.]*

**முழுமன்[1]** *muḻu-maṉ,* பெ.(n.) முழுமகன் பார்க்க; see *muḻu-magaṉ. "சனகியைக் கவர்ந்துபோய முழுமனை" (அரிசமய. குலசேகர.143).*

*[முழு → முழுமன்.]*

**முழுமன்[2]** *muḻu-maṉ,* பெ.(n.) அரைக்கும் பொழுது சிதைபடாது விழும் முழுக்கூலமணி (இ.வ.); grain escaping unbroken in the process of grinding.

*[முழு → முழுமன்.]*

**முழுமனசு** *muḻu-maṉašu,* பெ.(n.) முழு வொப்புதல் (உ.வ.); entire willingness, full accord, whole-heartedness.

*[முழு + மனசு.]*

**முழுமனத்தோடு** *muḻu-maṉattōḍu,* வி.அ. (adj.) தயக்கமோ, நிறைவின்மையோ இல்லாமல் முழு விருப்பத்தோடு; whole heartedly. *இந்தத் திட்டத்தை முழு மனத்தோடு வரவேற்கிறோம்.*

*[முழு + மனத்தோடு.]*

**முழுமனதாக** *muḻu-maṉadāga,* வி.அ. (adj.) முழுமனத்தோடு, முழு ஒப்புதலோடு; whole heartedly, whole hearted. *முழு மனதாகச்சொல்.*

*[முழு + மனதாக.]*

**முழுமனதான** *muḻu-maṉadāṉa,* பெ.அ. (adj.) முழு ஒப்புதலோடு; whole hearted. *முழுமனதான ஒத்துழைப்பு.*

*[முழு + மனதான.]*

முழுமனை *mulu-manai,* பெ.(n.) 2400 ச.அடி கொண்ட நிலப்பகுதி (வின்.); ground measuring 2400 sq.ft.

*[முழு + மனை.]*

முழுமிடறுசெய்–தல் *mulu-midaru-cey-,* 1 செ.குன்றாவி.(v.t.) வாய்நிறையக் குடித்தல்; to drink in large mouthfuls. *"முழுமிடறு செய் தனுபவித்து" (ஈடு, 2. 3 : 9).*

*[முழு + மிடறு + செய்–தல்.]*

முழுமுதல் *mulu-mudal,* பெ.(n.) 1. கடவுள்; God, as the Sole Cause. *"பொன்னம்பலத்தெம் முழுமுதலே" (திருவாச. 21: 3).* 2. மரத்தின் அடிப்பகுதி; stem, as of a tree. *"யாஅத்து..... முழுமுதல்" (குறுந்.255), "நல்லரை முழுமுதல் அவ்வயின் தொடுத்த" (நற்.354:6), "நொன்னிலை முழுமுத றுமியப் பண்ணி" (அகநா.145:10).*

*[முழு + முதல்.]*

முழுமுற்றும் *mulu-murrum,* கு.வி.எ.(adv.) முழுதும் பார்க்க; see *muludum. "முழு முற்றுந் தானே விளக்காய்" (சீவக.1870).*

*[முழு + முற்றும்.]*

முழுமூச்சாக *mulu-mūccāga,* வி.அ.(adv.) ஆற்றலை எல்லாம் ஒன்று திரட்டி ஒன்றினுள் செலுத்தி; doing a thing with full involvement. *வணிகத்தில் முழுமூச்சாக இறங்கிவிட்டார்.*

*[முழு + மூச்சாக.]*

முழுமூச்சு *mulu-mūccu,* பெ.(n.) 1. முழுத் திறனுடன் செய்யும் முயற்சி (உ.வ.); utmost effort, as with full breath. 2. விடாத் தீர்மானம் (இ.வ.); inflexible determination. 3. மூச்சுத் திணறுகை (வின்.); breathlessness.

*[முழு + மூச்சு.]*

முழுமூச்சுடன் *mulu-mūccudan,* வி.அ. (adv.) முழுமூச்சாக பார்க்க; see *mulu-mūccāga.*

முழுமூடன் *mulu-mūdan,* பெ.(n.) பெரு முட்டாள் (திருவேங்.சத.49); great fool.

*[முழு + மூடன்.]*

முழுமை *mulumai,* பெ.(n.) 1. குறைகளோ தடங்கலோ இல்லாத இயல்பான இறுதி, நிறைவு; completion, wholeness. *ஓவியத்தை முழுமையாக வரைந்து விடு, பாதியில் நிறுத்திவிடாதே. நூல் முழுமை பெறவில்லை.* 2. எல்லாம் அமைந்த மொத்தம், எதுவும் விட்டுப் போகாத தன்மை; completeness, totality. *இசையைப் போல முழுமையான கதை வேறு எதுவும் இல்லை. புரட்சியை முழுமையாக ஒடுக்க முடியாது.* 3. எல்லாம் (பிங்.); entireness. 4. பருமை; great size. *"துங்க முழு வுடற்சமணச் சூழ்ந்து மகிழ்வார்" (பெரியபு.திருநாவு.39).*

*[முழு → முழுமை.]*

முழுவதற்கும் *muluvatarkum,* வி.அ.(adv.) மொத்த அளவிற்கும், முழுமைக்கும்; to the whole or entire. *இந்தச் சட்டம் நாடு முழுவதற்கும் பொருந்தும்.*

*[முழு → முழுவதற்கும்.]*

முழுவது *muluvadu,* பெ.& கு.வி.எ.(n. & adv.) முழுவதும் பார்க்க; see *muluvadum. "அகலாச் செல்வ முழுவதுஞ் செய்தோன்" (புறநா.34:15).*

*[முழு → முழுவது.]*

முழுவதும்[1] *mu!uvadum*, பெ.(n.) முழுமை; whole. *"முழுவதும் படைப்போற் படைக்கும் பழையோன்" (திருவாச.3:12).*

*[முழு → முழுவதும்.]*

முழுவதும்[2] *mu!uvadum*, கு.வி.எ.(adv.) முழுமையாக; wholly, totally, completely. *"நின்னையேத்த முழுவதுமே" (திருவாச.5:6), "முருங்கக் கலிங்க முழுவதும் வளைஇப்" (அகநா.136:20). நான்கு கிழமையாகப் பூட்டிக்கிடந்ததில் வீடு முழுவதும் தூசி. சாலை முழுவதும் கூட்டம். இரவு முழுவதும் தூங்கவில்லை.*

*[முழு→முழுவதும்.]*

முழுவல்[1] *mu!uval*, பெ.(n.) நீர்ப்பறவை வகை; an aquatic bird. *"ஒடுங்கு சிறை முழுவலும்" (மணிமே.8:29).*

*[முழுகு → முழுவல்.]*

முழுவல்[2] *mu!uval*, பெ.(n.) விடாது தொடர்ந்த அன்பு; perfect love. *"முழுவற்கடல் பெருத்தான்" (தணிகைப்பு. நந்தியு.6).*

*[முள்→முழு→முழுவு→முழுவல்.]*

முழுவலயம்[1] *mu!u-valayam*, பெ.(n.) முழுமையான வட்டம் (யாழ்.அக.); full circle.

*[முழு + வளையம் - முழுவளையம் → முழுவலயம்.]*

முழுவலயம்[2] *mu!u-valayam*, பெ.(n.) வெற்றி (யாழ்.அக.); victory.

*[முழுவலம் → முழுவலயம்.]*

முழுவலி *mu!u-vali*, பெ.(n.) 1. மிக்க வலிமை; great strength. *"முழுவலி வயவர்" (பு.வெ.7:17).* 2. நிறைந்த வலிமையுள்ளவ-ன்-ள்; powerful person, person of great strength.

*[முழு + வலி.]*

முழுவன் *mu!uvan*, பெ.(n.) முழுது; whole. *கடன் முழுவனும் தீர்த்து விட்டான் (உ.வ.).*

*[முழுமன்→முழுவன் (வே.க.).]*

முழுவாசி *mu!u-vāśi*, பெ.(n.) 1. முழுமை (வின்.); whole. 2. முற்றின நென்மணி (இ.வ.); fully developed grain.

*[முழு + வாசி. வாய் = இடம். வாய்→வாயி→வாசி.]*

முழுவாசியும் *mu!u-vāśiyum*, கு.வி.எ. (adv.) பெரும்பகுதியும்; to a great extent, almost completely. *வீட்டு வேலை முழுவாசியுந் தீர்ந்து விட்டது (உ.வ.).*

*[முழுவாசி →முழுவாசியும்.]*

முழுவீச்சில் *mu!u-viccil*, வி.அ.(adv.) ஒரு செயல் வேகமாகவும் மும்முரமாகவும்; in full swing. *தேர்தலுக்கான தேதிகள் அறிவிக்கப் பட்டவுடன் செய்தி பரப்புதல் பணி முழு வீச்சில் நடந்து வருகிறது.*

*[முழு + வீச்சில். வீச்சு→வீச்சில் = வலிமை.]*

முழுவு-தல் *mu!uvu-*, 5 செ.கு.ன்றாவி.(v.t.) 1. முத்தமிடுதல்; to kiss. *"வந்தென் முலை முழுவித் தழுவி" (திருக்கோ.227).* 2. பொருந்தித் தொடுதல்; to touch. 3. தழுவுதல்; entwine.

*[முள்→முழு→முழுவு→முழுவு-தல்.]*

முழுவெலும்பு *mu!u-v-elumbu*, பெ.(n.) முழுவென்பு பார்க்க; see *mu!u-v-enbu.*

*[முழு + எலும்பு.]*

**முழுவென்பு** *mulu-v-eṉbu,* பெ.(n.) எலும்புக் கூடு (திவா.); skeleton.

*[முழு + என்பு. எலும்பு→என்பு.]*

**முழை[1]–த்தல்** *mulai-,* 4 செ.குன்றாவி. (v.t.) துளைத்தல்; to pierce, bore. *"முழைத்த வான்புழை" (பாரத. காண்டவ.17).*

*[முழு→முழை→முழை–த்தல்.]*

**முழை[2]–தல்** *mulai-,* 2 செ.கு.வி.(v.i.) நுழைதல் (இ.வ.); to enter.

*[முழு→முழை→முழை–தல்.]*

**முழை[3]** *mulai,* பெ.(n.) 1. குகை; large mountain cave, cavern, den. *"அவ்விசை முழை யேற்றழைப்ப" (பரிபா.19:63), "வாள்வரி வயப்புலி கன்முழை யுரற" (அகநா.168:12), "கன்முழை யருவிப் பன்மலை நீந்தி" (புறநா.147:1).* 2. துளை; bore. 3. துளைத்தல் போல் துழாவும் துடுப்பு (வின்.); spatula ladle.

*[முழு→முழை (வே.க.).]*

**முழைஞ்சு** *mulaiñju,* பெ.(n.) 1. துளை; hole. *"குழன் முழைஞ்சு களினூடு குமிழ்த்து" (திவ். பெரியாழ்.3. 6 : 11).* 2. குகை; den. *"மாரிமலை முழைஞ்சில் மன்னி" (திவ்.திருப்பா.23).*

*[முழை[3] → முழைஞ்சு.]*

**முழைத்தல்** *mulaittal,* பெ.(n.) 1. எழுத்திலா வோசை (சது.); inarticulate sound, vocal sound having no corresponding written character. 2. எழுத்தில்லா மொழி (வின்.); language not possessing a written alphabet or characters.

**முள்[1]** *mul,* பெ.(n.) 1. மரஞ்செடி, கொடிகளில் கூர்மையுடையதாய்ச் சிறுகுச்சி போற் காணப்படும் பகுதி; thorn, brier, thistle, bristle, spine. *"இளைதாக முண்மரங் கொல்க" (குறள், 879), "முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்" (அகநா.6:19), "முழுவலி முள்ளெயி றழுத்திய கதவி" (நற்.18:3). காலில் முள் குத்திவிட்டது.* 2. குத்தக் கூடிய கூர்மையுடைய பொருள்; anything sharp or pointed, as fish - bone, porcupine's quill, etc. *மீன் முள் தொண்டையில் சிக்கிக் கொண்டுவிட்டது.* 3. தாற்றுக்கோல்; goad, spur. *"முள்ளிட் டூர்மதி வலவ" (ஐங்குறு.481).* 4. கடிவாளம்; bit. *"முள்ளுறீஇச் செய்கயி றாய்ந்தன" (சீவக. 2214).* 5. இறகினடி; quill or springing point of feather. *"இதன் முட் செந்நனை" (அகநா.23).* 6. பலாக்காய்மேற் காணப்படும் கூரிய முனைகள் (வின்.); the rough points on the rind of the jack fruit. 7. முள் வடிவாகச் செய்யப்பட்ட கருவி; fork; sharp-pointed instrument. 8. துலாக் கோலின் நடுவில் சம நிலையைக் காட்டும் ஊசி; index of a balance. 9. கடிகாரத்தில் காலத்தைக் காட்டும் ஊசி; hand of a clock or time-piece. 10. கூர்மை; sharpness. *"முள்வாய்ச் சங்கம்" (சிலப்.4:78).* 11. நுண்மை (சூடா.); minuteness. 12. புறாவின் ஆண்குறி (இ.வ.); male organ of a pigeon.

தெ., க., ம. முள்ளு; து. முள்.

*[முல் = கூர்மை. முல்→முள்.]*

*"முள்ளுமேல் சீலை போட்டால் மெல்ல மெல்ல தான் எடுக்க வேண்டும்", "முள்ளுக்குக் கூர்மையும் துளசிக்கு மணமும் இயற்கை" (பழ.), "முள்ளுக்கு முனை சீவி விடுவார்களா?" (பழ.).*

**முள்கரண்டி** *muḷ-karaṇḍi,* பெ.(n.) உணவுப் பொருளைக் குத்தி எடுத்துச் சாப்பிடுவதற்குப் பயன்படக் கூடிய வகையில் முன்பகுதியில் கூரிய முனைகளை உடைய கருவி; fork.

*[முள் + கரண்டி.]*



**முள்கா-த்தல்** *muḷkā-,*6 செ.கு.வி.(v.i.) குந்தியிருத்தல்; to sit with arms and legs folded. *"சான்றோர் முசுப்போல முள்காந்திருப்பர்"* (நன்.96, விருத்.)

*[முள்கு + ஆ-த்தல்.]*

**முள்கு-தல்** *muḷgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. முயங்குதல்; to embrace. *"இளமுலை முகிழ்செய முள்கிய" (கலித்.125).* 2. உட்செல்லுதல்; to enter, pierce. *"அமர்க்க ணாமா னருநிற முள்காது" (நற்.165).*

தெ. மெலிகொநு, மெலகு.

**முள்கொடிச்சி** *muḷ-koḍicci,* பெ.(n.) கண்டங்கத்திரி; thorny plant - *Solanum jacquini* (சா.அக.).

**முள்சீதா** *muḷ-šītā,* பெ.(n.) முள்ளுச்சீத்தா பார்க்க; see *muḷḷu-c-cīttā.*

*[முள்ளுச்சீத்தா → முள்சீதா.]*

**முள்பட்டறை** *muḷ-paṭṭaṟai,* பெ.(n.) வார்படக் கருவிகள் செய்யும் பட்டறை (முள்ளுப் பட்டறை) (கோவை.); factory where, casting metals, and manufacturing, instrument from it.

**முள்மகிழ்** *muḷ-magiḻ,* பெ.(n.) ஒருவகை மரம் (L.); a kind of woolly ironwood, *Sideroxylon tomentosum.*

*[முள் + மகிழ்.]*

**முள்முரண்டை** *muḷ-muraṇḍai,* பெ.(n.) கொடிவகை (L.); necklace berried climbing caper, *Muma arenaria.*

*[முள் + முரண்டை.]*

**முள்மூவிதழ்** *muḷ-mūvidaḻ,* பெ.(n.) சப்பாத்துக் கற்றாழை; இலைக்கற்றாழை; prickly aloe - *Spiked aloe* (சா.அக.).

*[முள் + மூவிதழ்.]*

**முள்வறையன்** *muḷ-vaṟaiyaṉ,* பெ.(n.) மரத்தை அரிக்கும் கறையான் வகை (யாழ்ப்.); termite that gnaws the wood.

**முள்வாங்கி** *muḷ-vāṅgi,* பெ.(n.) முள்ளெடுக்குங் கருவி; thorn pincers.

*[முள் + வாங்கி. வாங்கு → வாங்கி.]*



முள்வாங்கி. கால் பாதங்களில் தைத்த முள்ளை எடுக்கப் பயன்படுத்தும் ஒரு சிறு கருவி.

முள்வாயன் *muḷ-vāyaṉ*, பெ.(n.) முள் வறையன் பார்க்க; see *muḷ-vaṟaiyaṉ* (சா.அக.).

*[முள் + வாய் – முள்வாய் → முள்வாயன்.]*

முள்வாழ்வேலி *muḷ-vāḻ-vēli*, பெ.(n.) உயிர் வேலி; fence made by thorny plants.

முள்வாளி *muḷ-vāḷi*, பெ.(n.) முள்வேலி (நாஞ்.) பார்க்க; see *muḷ-vēli.*

முள்வாளை *muḷ-vāḷai*, பெ.(n.) நீலங் கலந்த பச்சை நிறமுடையதும் 12 அடி வரை வளர்வதுமான வாளை மீன் வகை; large herring - like fish, bluish green, attaining 12 ft. in length, *Chirocentrus dorab*.

முள்வெண்டை *muḷ-veṇḍai*, பெ.(n.) சுணையுள்ள வெண்டைக்காய்; hairy lady's finger - *Hibicus esculentus* (சா.அக.).

*[முள் + வெண்டை.]*

முள்வெள்ளரி *muḷ-veḷḷari*, பெ.(n.) கொடிவகை (சூடா.); kakri - melon.

*[முள் + வெள்ளரி.]*

முள்வேங்கை *muḷ-vēṅgai*, பெ.(n.) மலை வேங்கைமரம் (L.); spinous kino tree.

*[முள் + வேங்கை.]*

முள்வேல் *muḷ-vēl*, பெ.(n.) 1. நீருடை குடைவேல் மரம்; buffalo thorn cutch. 2. முள்ளுடைய வேல மரவகை; entire leaved staff - tree, *Gymnosporia emarginata*.

*[முள் + வேல்.]*

முள்வேலி *muḷ-vēli*, பெ.(n.) 1. முள்ளால் செய்யப்பட்ட அடைப்பு; fence of thorn. *"அமரினிட்ட வரு முள்வேலி" (புறநா.301).* 2. முட்களை யுடைய இரும்புக் கம்பியாலான வேலி; fence of barbed wire. 3. முள் நிறைந்த கிளைகளால் ஏற்படுத்திய தடுப்பு; fence made of thorny branches of trees. *அரசுக்குச் சொந்தமான இடத்தில் முள்வேலி அமைத்தது யார்?* 4. வேளாண்மை செய்த நிலத்திற்குப் பாதுகாப்புக்காக அமைக்கப்படும் முள்ளால் ஆன வேலி (கோவை.); thorny fence made to protect the farm.

*[முள் + வேலி.]*

முள்ளங்கத்தரி *muḷḷaṅ-kattari*, பெ.(n.) கத்தரி வகை (L.); woolly sinuate bluish-flowered prickly nightshade, *Solanum melongena*.

*[முள் + அம் + கத்தரி.]*

முள்ளங்கி *muḷḷaṅgi*, பெ.(n.) சமையலில் பயன்படுத்தும் வெள்ளை நிறத்தில் அல்லது வெளிர்ச் சிவப்பு நிறத்தில் கூம்பு போன்ற வடிவத்தில் உள்ள கிழங்கு; a kind of radish, *Raphanus sativus*. *முள்ளங்கிக் குழம்பு.*

தெ. முள்ளங்கி; க. மூலங்கி; ம. முள்ளங்கி.

வேர்ப்பகுதியில் உணவைச் சேர்த்து வைக்கும், சமையலுக்குப் பயன்படும் காய்கறி வகை.

முள்ளங்கி வகைகள்: 1) முள்ளங்கி, 2) வெள்ளை முள்ளங்கி, 3) மஞ்சள் முள்ளங்கி, 4) சிவப்பு முள்ளங்கி, 5) சுவற்று முள்ளங்கி அல்லது ஆற்று முள்ளங்கி, 6) பெரிய முள்ளங்கி, 7) சின்ன முள்ளங்கி, 8) சதுர முள்ளங்கி, 9) வன முள்ளங்கி (சா.அக.).

**முள்ளங்கிழங்கு** *mullaṅ-kiḻaṅgu,* பெ.(n.) 1. முள்ளங்கிக் கிழங்கு; root tuber of radish. 2. ஒரு வகை வள்ளிக் கொடி (வின்.); thorny yam, *Dioscorea tomentosa.*

*[முள்ளங்கி + கிழங்கு.]*

**முள்ளங்கீரை** *mullaṅ-kīrai,* பெ.(n.) முட்கீரை (வின்.) பார்க்க; see *muṭ-kīrai.*

*[முள் + அம் + கீரை.]*

**முள்ளஞ்சங்கு** *mullañ-jaṅgu,* பெ.(n.) முட்களை யுடைய சங்குவகை (வின்.); a conch armed with spikes.

*[முள் + அம் + சங்கு.]*

**முள்ளடி** *mul-l-aḍi,* பெ.(n.) துப்பு (இ.வ.); clue; trace.

*[முள் + அடி.]*

**முள்ளடிக்கூலி** *mullaḍi-k-kūli,* பெ.(n.) துப்புக்கூலி (இ.வ.); payment for furnishing clue, as to a theft.

*[முள்ளடி + கூலி.]*

**முள்ளந்தண்டு** *mullan-taṇḍu,* பெ.(n.) முதுகிலுள்ள நடு எலும்பு (C.G.); vertebral column, backbone, spine.

மறுவ. தண்டுவடம்

*[முள் + அம் + தண்டு.]*

**முள்ளந்தண்டுக்கொடி** *mulla-n-taṇḍu-k-koḍi,* பெ.(n.) முள்ளந்தண்டிற்குள் ஓடும் ஒரு வெண்மையான கயிறு போன்ற நரம்புக் கொடி; a long cord or column of nervous matter contained in the canel of the spine - Spinal cord (சா.அக.).

*[முள்ளந்தண்டு + கொடி.]*

**முள்ளந்திருக்கை** *mullan-tirukkai,* பெ.(n.) 1. பச்சை நிறமுடையதும் குறுக்கில் 2 அடியும் நெடுக்கில் 5 அடியும் வளர்வதான திருக்கை வகை; sting-ray, greenish, attaining 5 ft. in length and 2 ft. across the disc, *Urogymnus asperrimus.* 2. வெண் சிவப்பு நிறமும் 8 விரலம் வரை வளர்ச்சியுமுடைய கடல் மீன்; sea - fish, pinkish, attaining 8 inch. in length, *Halieutea stellata.*

*[முள் + அம் + திருக்கை.]*

**முள்ளம்பலாச்சை** *mullam-palāccai,* பெ.(n.) 1. வெளிறின பழுப்பு நிறமும் இரண்டு அடி வரை வளர்வதுமான கடல் மீன் வகை; sea-fish, light brown, attaining 2 feet in length, *Dioden hystrix,* as covered with spines. 2. பழுப்பு அல்லது கறுப்பு நிறமுடையதும் 13 விரலம் (அங்குலம்) வரை வளர்வதுமான கடல் மீன் வகை; sea-fish, brown or black, attaining 13 inch in length, *Tetrodon patoca.*

*[முள் + அம் + பலாச்சை. பலாச்சை = மீன்வகை.]*

**முள்ளம்பன்றி** *mullam-panri,* பெ.(n.) தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கு ஏற்றவாறு உடலின் மேல் பகுதி முழுவதும் முள் போன்ற கூர்மையான மயிர்கள்





முள்ளங்கி



முரளம்



மூங்கில்



மூவிலை

நிறைந்ததும் குட்டையான கால்களை உடையதுமான ஒரு சிறிய காட்டு விலங்கு; porcupine, *Hystrix hirsutirostris*. *அவனுடைய தலைமுடி முள்ளம்பன்றி போல உள்ளது.*

தெ. முள்ளம்பந்தி; ம. முள்ளம்பந்நி.

*[முள் + அம் + பன்றி.]*

**முள்ளரிகொக்கி** *mu*!!*ari-kokki,* பெ.(n.) தூண்டிலில் புழுவை மாட்டப் பயன்படும் கொக்கி (கோவை.); fist-hook.

*[முள்ளரி + கொக்கி.]*

**முள்ளருகல்** *mu*!!*arugal,* தொ.பெ.(vbl.n.) சிறுநீர்க் குழாயில் முள் குத்துவதுபோல் வலிக்கை; a disease inflammation in the tip of the penis.

*[முள் + அருகல். முள்ளருகல் போல் வலிக்கை.]*

**முள்ளல்** *mu*!!*al,* பெ.(n.) 1. கருவாடு; dry fish. 2. மீன் வகை (கோவை.); a kind of fish.

**முள்ளழுவேணை** *mu*!!*a*!*u-vēṇai,* பெ.(n.) அழுவணை மரம்; law sonia spinosa.

*[முள் + அழுவேணை. அழுவணை → அழுவேணை.]*

**முள்ளன்பலாச்சை** *mu*!!*aṉ-palāccai,* பெ.(n.) முள்ளம்பலாச்சை பார்க்க; see *mu*!!*am-palāccai.*

*[முள்ளம்பலாச்சை → முள்ளன்பலாச்சை.]*

**முள்ளாங்கத்தரி** *mu*!!*āṅ-gattari,* பெ.(n.) முள்ளங்கத்தரி (மூ.அ.) பார்க்க; see *mu*!!*aṅ-kattari.*

*[முள்ளங்கத்தரி → முள்ளாங்கத்தரி.]*

**முள்ளாணி** *mu*!!*āṇi,* பெ.(n.) 1. பாதத்தில் குத்திய முள் உள்ளே தங்கி அந்த இடம் கருப்பாக மாறுகை; Blackening of the skin in the sole, where the thorn is priched. 2. பாதத்தில் தானாகவே ஆணி வருகை; callosity of the sole caused by the frequent pricking of thorns and sharp edged stones.

**முள்ளாம்பன்னிச்செடி** *mu*!!*ām-paṉṉi-c-ceḍi,* பெ.(n.) முட்செடி வகைகளுள் ஒன்று (கோவை.); a kind of plant.

*[முள்ளம் + பன்னிசெடி.]*

**முள்ளாறு** *mu*!!*āṟu,* பெ.(n.) வெள்ளை நிறமுடைய ஒருவகைக் கடல் மீன் (இராமமுழியன்); silvery sea-fish.

**முள்ளி[1]** *mu*!!*i,* பெ.(n.) 1. முள்ளுள்ள செடி (நன்.62, உரை); thorny plant. *"கள்ளி யேய்ந்த முள்ளியம் புறங்காட்டு" (புறநா. 363:20).* 2. கத்தரி வகை; Indian nightshade. *"முள்ளுச் செழுமல ரோன்" (திவ்.இயற். சிறிய.ம. தனியன்).* 3. மருதோன்றி (L.); nail dye, *Barleria.* 4. கழுதை முள்ளி; holly - leaved bear's-breech. 5. தாழைச் செடிவகை; fragrant screw-pine. *"கூர்முண் முள்ளி" (அகநா.26).* 6. கள் (பரி.அக.); toddy.

தெ. முலக; க., ம. முள்ளி.

*[முள் → முள்ளி.]*

வகைகள்: 1) அடுக்கு முள்ளி, 2)ஆற்றுமுள்ளி (அ) கழுதைமுள்ளி, 3) செம்முள்ளி, 4) வெள்ளை முள்ளி, 5) நீர் முள்ளி, 6) கறிமுள்ளி, 7) பப்பர முள்ளி (சா.அக.).

முள்ளி² *muḷḷi,* பெ.(n.) வற்றிய பொருள்; that which is dry.

முள்ளிக்காய் *muḷḷi-k-kāy,* பெ.(n.) ஒரு வகைச் செடி; a plant - *Solanum xanthocarpum.*

முள்ளிக்கீரை *muḷḷi-k-kīrai,* பெ.(n.) முட்கீரை (மூ.அ.) பார்க்க; see *muṭ-kīrai.*

முள்ளிச்சங்கு *muḷḷi-c-caṅgu,* பெ.(n.) புறப்பரப்பு முழுவதும் கூரான முட்கள் போன்ற அமைப்புடைய சங்கு; conch which has thorn like structure on its top.

*[முள்ளி + சங்கு.]*

முள்ளிடுக்கி *muḷ-ḷ-iḍukki,* பெ.(n.) முள் வாங்கி (வின்.) பார்க்க; see *muḷ-vāṅgi.*

*[முள் + இடுக்கி.]*

முள்ளித்தலாதி *muḷḷi-t-talāti,* பெ.(n.) வெங்காயம்; onion - *Alliumcepa.*

முள்ளிப்பிஞ்சு *muḷḷi-p-piñju,* பெ.(n.) பிஞ்சு முள் கத்திரி; tender thorned brinjal - *Solonum melongena* (சா.அக.).

முள்ளிப்பூ *muḷḷi-p-pū,* பெ.(n.) வரிக்கூத்து வகை (சிலப்.3:13, உரை); a masquerade dance.

முள்ளியார் *muḷḷiyār,* பெ.(n.) ஆசாரக் கோவை நூலின் ஆசிரியரான பெருவயின் முள்ளியார்; author of *āšāra-k-kōvai.*

முள்ளியூர்பூதி *muḷḷiyūr-pūti,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; *Šaṅgam* poet.

முள்ளில்லாக்கற்றாழை *muḷḷillā-k-kaṟṟāḻai,* பெ.(n.) நாகபடக் கற்றாழை; snake hood aloe.

முள்ளிலவம் *muḷ-ḷ-ilavam,* பெ.(n.) முள்ளிலவு பார்க்க; see *muḷ-ḷ-ilavu.*

*[முள்ளிலவு → முள்ளிலவம்.]*

முள்ளிலவம்பட்டை *muḷḷilavam-paṭṭai,* பெ.(n.) இலவமரத்தின் பட்டை; bark of silk cotton tree, *Bombax malabaricum* (சா.அக.).

*[முள் + இலவம் + பட்டை.]*

முள்ளிலவு *muḷ-ḷ-ilavu,* பெ.(n.) ஒருவகை இலவமரம் (சீவக.788); a kind of red flowered silk - cotton tree.

*[முள் + இலவு.]*

முள்ளிலைச்சாறு *muḷḷilai-c-cāṟu,* பெ.(n.) எட்டிச்சாறு; juice of the leaves of nux vomica tree (சா.அக.).

முள்ளிவேர் *muḷḷi-vēr,* பெ.(n.) நீர் முள்ளி வேர்; root of hygrophila auricalata alias *Astercantha longifolia* (சா.அக.).

*[முள்ளி + வேர்.]*

முள்ளிழைப்புளி *muḷ-ḷ-iḻai-p-puḷi,* பெ.(n.) இழைப்புளி வகை; plane with serrated bit.

*[முள் + இழைப்பு + உளி.]*

முள்ளிற்கச்சிகம் *muḷḷiṟ-kaccigam,* பெ.(n.) கொழுமிச்சை, நாரத்தை; bitter orange (சா.அக.).

முள்ளிறால் *muḷ-ḷ-iṟāl,* பெ.(n.) பாரையிறால்; spiny lobster (சா.அக.).

*[முள் + இறால்.]*

முள்ளியூர்ப்பூதியார் *mu*ḻ*ḻiyūr-p-pūdiyār,* பெ.(n.) கழக காலப் புலவர்; *Šaṅgam*poet.

*[முள்ளியூர் + பூதியார்.]*

நன்னனுடைய நவிர மலையைச் சிறப்பித்துத் தம் செய்யுளில் பாடியுள்ளார் (அகநா.173). இச்செய்யுளைப் பாடியவர் முன்னியூர் வழுதியார் எனவும் பாட வேறுபாடு உண்டு.

*"அறந்தலைப் பிரியா தொழுகலுஞ் சிறந்த*
*கேளிர் கேடு பல வூன்றலும் நாளும்*
*வருந்தா வுள்ள மொடிருந்தோர்க் கில்லெனச்*
*செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதன்*
*மையீ ரோதியரும் பட ருழத்தல்*
*சின்னாட் டாங்கல் வேண்டுமென்று நின்*
*நன்மா ணெல்வளை திருத்தினராயின்*
*வருவர் வாழி தோழி பலபுரி*
*வார் கயிற் றொழுகை நோன் சுவற்கொளீஇப்*
*பகடுதுறை யேற்றத் துமண்விளி வெரீஇ*
*உழைமா னம்பிணை யினனிரிந்தோடக்*
*காடுகவி னழிய வுரைஇக் கோடை*
*நின்றுதின விளிந்த வம்பணை நெடுவேய்க்*
*கண்விடத் தெறிக்கு மண்ணா முத்தங்*
*கழங்குறழ் தோன்றல் பழங்குழித் தாஅம்*
*இன்களி நறவி னியறோர் நன்னன்*
*விண்பொரு நெடுவரைக் கவாஅற்*
*பொன் படு மருங்கின் மலையிறந்தோரே"*

*(அகநா.173).*

முள்ளுக்கடம்பு *mu*ḻ*ḻu-k-kaḍambu,* பெ.(n.) ஒருவகைச் செடி (L.); Nepal berberry.

*[முள் + கடம்பு.]*

முள்ளுக்கடம்பை *mu*ḻ*ḻu-k-kaḍambai,* பெ.(n.) முள்ளுக்கடம்பு பார்க்க; see *mu*ḻ*ḻu-k-kaḍambu.*

*[முள்ளுக்கடம்பு → முள்ளுக்கடம்பை.]*

முள்ளுக்கத்திரி *mu*ḻ*ḻu-k-kattiri,* பெ.(n.) முள்ளங்கத்தரி (இ.வ.) பார்க்க; see *mu*ḻ*ḻaṅ-kattari.*

*[முள்ளங்கத்தரி → முள்ளுக்கத்தரி.]*

முள்ளுக்கரப்பன் *mu*ḻ*ḻu-k-karappaṉ,* பெ.(n.) முள்ளுக்கரப்பான் (வின்.) பார்க்க; see *mu*ḻ*ḻu-k-karappāṉ.*

*[முள்ளுக்கரப்பான் → முள்ளுக்கரப்பன்.]*

முள்ளுக்கரப்பான் *mu*ḻ*ḻu-k-karappāṉ,* பெ.(n.) மேல் தோலில் படரும் நோய் வகை (உ.வ.); a kind of eruption with pimples.

*[முள் + கரப்பான் – முள்கரப்பான் → முள்ளுக்கரப்பான்.]*

முள்ளுக்களா *mu*ḻ*ḻu-k-kaḷā,* பெ.(n.) 1. ஒரு வகைக் களாச் செடி (நெல்லை.); fascicled leaved spinous berberry. 2. முள்ளுக் கடம்பு (L) பார்க்க; see *mu*ḻ*ḻu-k-kaḍambu.*

*[முள் + களா →முள்ளுக்களா..]*

முள்ளுக்கற்றாழை *mu*ḻ*ḻu-k-kaṟṟāḻai,* பெ.(n.) முள்ளுடைய கற்றாழை. இதன் இரு பக்கத்திலும் முனையிலும் முட்கள் பொருந்தியிருக்கும்; prickly aloe, spiked aloe (சா.அக.).

முள்ளுக்காரை *mu*ḻ*ḻu-k-kārai,* பெ.(n.) சிறு மரவகை (வின்.); common emetic nut, *Randia dumetorum.*

*[முள் + காரை→முள்ளுக்காரை.]*

முள்ளுக்கீரை *mu*ḻ*ḻu-k-kīrai,* பெ.(n.) முட்கீரை (வின்.) பார்க்க; see *muṭ-kīrai.*

*[முட்கீரை → முள்ளுக்கீரை.]*

முள்ளுக்குப்பை *mullu-k-kuppai,* பெ.(n.) கொட்டையிலந்தை; seed jujube - *Zizyphus zylopyra* (சா.அக.).

முள்ளுக்கூலி *mullu-k-kūli,* பெ.(n.) முள்ளடிக் கூலி பார்க்க; see *mullaḍi-k-kūli.*

*[முள் + கூலி→முள்ளுக்கூலி.]*

முள்ளுக்கொடிச்சி *mullu-k-koḍicci,* பெ. (n.) தூதுவளை; a climber - *Solanum trilobatum.*

*[முள் + கொடிச்சி →முள்ளுக்கொடிச்சி.]*

முள்ளுச்சங்கு[1] *mullu-c-caṅgu,* பெ.(n.) சங்கஞ்செடி (L.); mistletoe berry thorn.

*[முள் + சங்கு → முள்ளுச்சங்கு.]*

முள்ளுச்சங்கு[2] *mullu-c-caṅgu,* பெ.(n.) முள்ளஞ்சங்கு பார்க்க; see *mullañ-jaṅgu.*

*[முள்ளஞ்சங்கு →முள்ளுச்சங்கு.]*

முள்ளுச்சம்பா *mullu-c-cambā,* பெ.(n.) ஒருவகை நெல் (நாமதீப.351, குறிப்பு); a kind of paddy.

*[முள் + சம்பா→முள்ளுச்சம்பா.]*

முள்ளுச்சிரங்கு *mullu-c-ciraṅgu,* பெ.(n.) நாய்முள் (M.L.); urticoria.

*[முள் + சிரங்கு→முள்ளுச்சிரங்கு.]*

முள்ளுச்சீங்கை *mullu-c-cīṅgai,* பெ.(n.) முள்ளுச் சீயக்காய் மரம்; soap nut tree - *Acacia pinnata* (சா.அக.).

முள்ளுச்சீத்தா *mullu-c-cīttā,* பெ.(n.) புளிப்பலா; a plant, *Anona muricata* (சா.அக.).

*[முள் + சீத்தா.]*

முள்ளுச்சீயக்காய் *mullu-c-cīyakkāy,* பெ.(n.) சீயக்காய்; soap-nut tree, *Acacia pinnata* (சா.அக.).

*[முள் + சீயக்காய்.]*

முள்ளுச்சுண்டெலி *mullu-c-cuṇḍeli,* பெ. (n.) முட்போன்ற மயிருள்ள வயற் சுண்டெலி வகை; spiny mouse, a kind of field mouse, as having fine spinous fur.

*[முள் + சுண்டெலி → முள்ளுச்சுண்டெலி.]*

முள்ளுச்சுறா *mullu-c-curā,* பெ.(n.) சுறா மீன் வகை; a kind of shark fish.

*[முள் + சுறா.]*

முள்ளுச்சூலி *mullu-c-cūli,* பெ.(n.) சதுரக் கள்ளி; a spurge, *Euphorbia quadrangularis* (சா.அக.).

முள்ளுடுப்பை *mulluḍu-p-pai,* பெ.(n.) கொட்டையிலந்தை (L.); woody - fruited jujube.

முள்ளுடைமூலம் *mulluḍai-mūlam,* பெ.(n.) 1. முட்செடிப் பொது (பிங்.); thorny plant. 2. முட்கள் பொருந்திய வேர் (வின்.); spiked root.

*[முள் + உடை + மூலம்.]*

முள்ளுநங்கை *mullu-naṅgai,* பெ.(n.) பாம்பு கடிக்குப் பயன்படுத்தும் ஒருவகை வேர்; a kind of root used as an antidote in snake poisons.

முள்ளுநாயகம் *mullu-nāyagam,* பெ.(n.) தைத்த முள்ளை வெளிப்படுத்துங் குணமுள்ள இலைகளை யுடைய கொடி வகை; a creeper whose leaves are used in extracting thorns.

முள்ளுப்பபடுகளம் *mu!!u-p-padukalam,* வேண்டுதலை நிறைவேற்றுதற்கு மக்கள் படுக்கும் முள்ளாலான படுக்கை (இ.வ.); bed of thorns or spikes on which people lie in fulfilment of vows.

*[முள் + படுகளம்.]*

முள்ளுப்பலகை *mu!!u-p-palagai,* பெ.(n.) கொத்துப் பலகையின் மறுபெயர்; other name for the wooden plank which helps to grub salt from the salt - pan.

*[முள் + பலகை.]*

முள்ளுப்பலா *mu!!u-p-palā,* பெ.(n.) பலா மரவகை (யாழ்.அக.); a kind of jack-fruit tree.

*[முள் + பலா.]*

முள்ளுப்பலாச்சி *mu!!u-p-palācci,* பெ.(n.) வெளிறின பழுப்பு நிறமுள்ளதும் 25.5 விரலம் (அங்குலம்) நீளம் வளர்வதுமான கடல் மீன் வகை; sea - porcupine, light brown, attaining 25.5 inch in length.

முள்ளுப்போட்டடை-த்தல் *mu!!u-p-pōttadai-,* 4 செ.குன்றாவி.(v.t.) முட்கள் நிறைந்த பூண்டுகளைக் கொண்டு வேலி வைத்தல் (வின்.); to hedge with thorny shrubs.

*[முள் + போடு + அடை-த்தல்.]*

முள்ளுப்போடு-தல் *mu!!u-p-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) இடையூறு செய்தல்; to throw obstacles in one's way.

*[முள் + போடு-தல்.]*

முள்ளுமுருக்கு *mu!!u-murukku,* பெ.(n.) 1. ஒருவகை மரம்; East Indian coral tree, *Erythrina indica.* 2. வெள்ளைக் கலியாண முருக்கு (L.); coral tree of the Eastern Ghats. 3. முண் முருக்கு (L.); coral tree of the Western Ghats. 4. புரசமரம்; palas tree. 5. மரவகை; holly leaved berberry.

*[முள் + முருக்கு.]*

முள்ளுமுருங்கை *mu!!u-muruṅgai,* பெ.(n.) 1. முள்ளுமுருக்கு பார்க்க; see *mu!!u-murukku.* 2. மரவகை; holly - leaved berberry, *Berberis nepalensis.*

*[முள் + முருங்கை.]*

முள்ளுவாங்கி *mu!!u-vāṅgi,* பெ.(n.) முள் வாங்கி பார்க்க; see *mu!-vāṅgi.*

*[முள் + வாங்கி →முள்ளுவாங்கி.]*

முள்ளுவாடி *mu!!u-vādi,* பெ.(n.) தர்மபுரி மாவட்டத்தில், தர்மபுரியிலிருந்து ஏறத்தாழ 30 கல்லண்மாத்திரி (கிலோ மீட்டர்) தொலைவிலுள்ள ஊர்; a city in Tarmapuri district, 30 k.m. away from Tarmapuri. *அக்காலத்தில் முட்செடிகள் நிறைந்த காடாக இருந்தமையால் இப்பெயர் பெற்றிருக்கலாம்.*

முள்ளுவாயு *mu!!u-vāyu,* பெ.(n.) முள் குத்தினால் உண்டாகும் வலியைப் போல, வலியை உண்டாக்கும் ஒரு வகைக் காற்றுப் பிடிப்பு நோய்; a kind of rheumatism attended with shooting pin prick pain.

*[முள் + **Skt.** வாயு.]*

முள்ளுவாளை *mu!!u-vā!ai,* பெ.(n.) மீன் வகை; a kind of fish.

முள்ளுவெள்ளரி *mu!!u-ve!!ari,* பெ.(n.) முள்வெள்ளரி பார்க்க; see *mu!-ve!!ari.*

ஆண் உறுப்புக்கு பெருஞ்சுரப்பியை உண்டாக்கும் காய் (சா.அக.).

**முள்ளுவேங்கை** *muḷḷu-vēṅgai,* பெ.(n.) மலைவேங்கை மரம் (L.); spinous kino-tree.

*[முள் + வேங்கை.]*

**முள்ளுளி** *muḷ-ḷ-uḷi,* பெ.(n.) கற்றச்சரின் உளி வகை; stone - cutter's smoothing chisel.

*[முள் + உளி.]*

**முள்ளூர்க்கானம்** *muḷḷūr-k-kāṉam,* பெ.(n.) முள்ளூர் என்னும் ஊரையடுத்த காடு; a forest near *Muḷḷūr. "முள்ளூர்க் கான நாற வந்து நள்ளென் கங்குல்" (குறுந்.312:3).*

**முள்ளூர்மலை** *muḷḷūr-malai,* பெ.(n.) மலையமான் திருமுடிக்காரியின் மலை; a mountain belonging to *Malayamāṉ Tirumuḍi-k-kāri. "முள்ளூர் மன்னன் கழல் தொடிக்காரி" (அகநா.209:12), "பயன்கெழு முள்ளூர்" (புறநா.123).*

*[முள்ளூர் + மலை.]*

இம்மலை தற்போது செஞ்சி வட்டத்தில் உள்ளது. கடையேழு வள்ளல்களில் ஒருவரான மலையமான் திருமுடிக்காரியின் மலை. சோழன் இராயசூயம்வேட்ட பெருநற்கிள்ளி பகைவர்க்கஞ்சி இம்மலையில் பல நாள் மறைந்திருந்தான் என்று புறநானூறு கூறுகிறது.

**முள்ளெடுக்கி** *muḷ-ḷ-eḍukki,* பெ.(n.) முள்வாங்கி பார்க்க; see *muḷ-vāṅgi.*

*[முள் + எடுக்கி.]*

முள் எடுக்கும் சிறிய இடுக்கியும், காதில் அழுக்கு எடுக்கும் குச்சி போன்ற தகடும் இணைந்த கருவி (முள் இடுக்கி).

**முள்ளெலி** *muḷ-ḷ-eli,* பெ.(n.) எலிவகை (M.M.290); a hedge-hog, *Erinaceus micropus.*

*[முள் + எலி.]*

**முள்ளெலும்பு** *muḷ-ḷ-elumbu,* பெ.(n.) முள்ளந்தண்டின் எலும்பு; vertebra.

மறுவ. தண்டுவடம்.

*[முள் + எலும்பு.]*

நடுவில் துளை உடையதும் ஒன்றன் கீழ் ஒன்றாக அடுக்கி அமைந்து இருப்பதுமான வளைய வடிவிலான எலும்பு.

**முளகரணை** *muḷakaraṇai,* பெ.(n.) மிளகு கரணை (வின்.); lopez root.

தெ. மொளககூர.

*[மிளகுகரணை → முளகரணை.]*

**முளகரியம்** *muḷakariyam,* பெ.(n.) அகத்தி (சங்.அக.); West Indian pea- tree.

**முளகாய்** *muḷa-kāy,* பெ.(n.) மிளகாய்; chilly (சா.அக.).

*[மிளகாய்→முளகாய் (கொ.வ.).]*

**முளகி** *muḷagi,* பெ.(n.) மிளகுச்சம்பா நெல் வகை; a Šambā paddy of superior quality (சா.அக.).

*[மிளகி → முளகி.]*

**முளகு** *muḷagu,* பெ.(n.) கருப்பு மிளகு; black pepper (சா.அக.).

*[மிளகு → முளகு (கொ.வ.).]*

**முளச்சூரிச்சி** *muḷa-c-cūricci,* பெ.(n.) தூதுவளை; a prickly Climber - *Solanum trilobatum* (சா.அக.).

**முளராவள்ளி** *muḷarā-vaḷḷi,* பெ.(n.) மர வள்ளி; tapioca - *Mani hot utilissima* (சா.அக.).

முளரி *muḷari*, பெ.(n.) 1. தாமரை; lotus. *"முளரிமுக நாகம்" (சீவக.2870), "முளரி மருங்கின் முதியோள் சிறுவன்" (புறநா. 278:2).* 2. கோடாகோடி; ten million crores. *"கடாமுகத்த முளரிக் கணக் கவால்" (கம்பரா.வானரர்க.32).*3. நான்முகனு லகம் (தக்கயாகப்.240, உரை); Brahma's world. 4. முட்செடி (பிங்.); bramble. 5. காடு (பிங்.); jungle. 6. முட்கள்ளி; thorny twig, used by birds in building nests. *"முளரியங் குடம்பை"* (நற்.384). 7. விறகு; firewood. *"தகரமுளரி நெருப்பமைத்து" (நெடுநல்.55).* 8. வேள்வி விறகு (யாழ்.அக.); sacrificial fuel. 9. நெருப்பு (பிங்.); fire. 10. கடைக் கொள்ளி (பிங்.); firebrand. 11. காய்ச்சல் (இராசவைத்.163); fever. 12. நுண்மை (சூடா.); subtletly.

தெ. முளலரு; க., ம. முளலர்.

*[முள் + அலரி.]*

முளரிநாளம் *muḷari-nāḷam*, பெ.(n.) தாமரை வளையம்; the coil of the stalk of the lotus.

*[முளரி + நாளம்.]*

முளரிப்பகை *muḷari-p-pagai*, பெ.(n.) நிலவு; moon, as the enemy of the lotus.

*[முளரி + பகை.]*

முளரிப்பாவை *mulari-p-pāvai*, பெ.(n.) செந்தாமரை மலரில் இருக்கும் அலைமகள் (இலக்குமி); Laksmi, as seated on a lotus. *"பவளவாய் முளரிப்பாவை" (பாகவத.i, பரிட்சித்துவின்.64).*

*[முளரி + பாவை.]*

முளரியான் *muḷariyāṉ*, பெ.(n.) தாமரை மலரில் இருக்கும் நான்முகன்; *Brahmā*, a seated on a lotus.

*[முளரி → முளரியான்.]*

முளவு[1] *muḷavu*, பெ.(n.) 1. முள்ளம் பன்றி; porcupine, *Hystrix leucura*. *"முளவுமாத் தொலைச்சிய" (புறநா.325:5).* 2. முட்கோல்; goad. *"முளவுகோல் கயிறுபற்றி" (கந்தபு. சூர. வதை.45).*

*[முள் → முளவு.]*

முளவு[2] *muḷavu*, பெ.(n.) 1. முள்; thorn. 2. முட்புதர்; thorn shrub. 3. முண் முருங்கை; East Indian coral tree. *"முளவு முருக்கு முருங்க வொற்றி" (பெருங். உஞ்சை. நரும.51:44).*

*[முள் → முளவு.]*

முளா *muḷā*, பெ.(n.) முள்ளம் பன்றி (நாமதீப. 221); porcupine.

மறுவ. முளவு

*[முள் → முளா.]*

முளா[2] *muḷā*, பெ.(n.) முள்ளங்கி (மலை.) பார்க்க; see *muḷḷaṅgi.*

முளி[1]–தல் *muḷi-*,2 செ.கு.வி.(v.i.) 1. உலர்தல்; to dry. *"முளிமுதல் மூழ்கிய வெம்மை" (கலித்.16), "முளிபுற் கானங் குழைப்பக் கல்லென" (புறநா.160:2), "முளியிலை கழித்தன முகிழிணை ரொடுவரு" (நற்.53:7).* 2. வேதல்; to burn; to be scorched. *"ஆரெயி லோரழ லம்பின் முளிய" (பரிபா.5:25).* 3. கெடுதல்; to perish. *"முளிந்த தீவினையான்" (விநாயகபு. 22:2).* 4. முற்றுதல்; to mature. *"முளிபுல்லுங் கானமுஞ் சேரார்" (ஆசாரக்.57).* 5. தோய்தல்; to curdle. *"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்" (குறுந்.167).*

க. முளி.

**முளி[2]–த்தல்** *muḷi-*, 4 செ.கு.வி.(v.i.) 1. உலர்தல் (நாமதீப.757); to dry. 2. வறத்தல் (யாழ்.அக.); to become dried. 3. காய்தல் (யாழ்.அக.); to become scorched.

**முளி[3]–தல்** *muḷi-*, 2 செ.கு.வி.(v.i.) பொங்குதல்; to boil up. *சோறு முளிந்து வருகிறது (உ.வ.).*

*[மிளிர் →மிளி →முளி →முளி–தல்.]*

**முளி[4]** *muḷi*, பெ.(n.) 1. உலர்ச்சி; dryness. *"முளிவெள்ளெலும்பும்" (தேவா.326, 6).* 2. வாட்டம் (பிங்.); faded condition. 3.வற்றிய பொருள்; that which is dry. *நெல்லிமுளி.*

**முளி[5]** *muḷi*, பெ.(n.) 1. உடல் மூட்டு; joint of the body. *"திகழ்முச் சாணென்பு முளியற" (தத்துவப்.133).* 2. மரக்கணு (யாழ்.அக.); knot in trees. 3. கணுக்கால் (வின்.); ankle.

*[முழி → முளி[5].]*

**முளி[6]** *muḷi*, பெ.(n.) செம்முள்ளிச் செடி வகை (தைலவ. தைல.72); thorny nail-dye.

*[முள் → முளி[6].]*

**முளிதயிர்** *muḷi-tayir*, பெ.(n.) இறுகிய கட்டித்தயிர்; thick curd. *"முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்" (குறுந்.167:1).*

*[முளி + தயிர்.]*

**முளிவெதிர்** *muḷi-vedir*, பெ.(n.) உலர்ந்த மூங்கில்; tried bamboo. *"முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ் தாங்கரு நீர்ச்சுரத் தெறிந்து வாங்குவிசை" (குறுந்.304:2).*

*[முளி + வெதிர். வெதிர் = மூங்கில்.]*

**முளு–தல்** *muḷu-*, 2 செ.கு.வி.(v.i.) முளி[3]–தல் பார்க்க; see *muḷi[3]-*. *சோறு முளுந்து வருகிறது (இ.வ.).*

*[முளி →முளு→ முளு–தல்.]*

**முளை[1]–த்தல்** *muḷai-*, 4 செ.கு.வி.(v.i.) 1. பயிரில் முளை முதலியன தோன்றுதல்; to spring, to sprout, as shoots; to germinate as seeds. *நிலத்தில் போட்ட விதை முளைத்துவிட்டது (உ.வ.). "ஒன்றாய் முளைத்தெழுந்து" (திருவாச.10: 8).* 2. கதிரவன் தோன்றுதல்; to rise, appear, come to light. *"காலை ஞாயிறு கதிர்விரித்து முளைப்ப" (மணிமே.8:18). வெள்ளி முளைத்துவிட்டது.* 3. உடலில் புதிதாக உறுப்புகள் வளர்தல்; to grow as teeth, horns, hair. *மாட்டுக்குக் கொம்பு முளைத்து விட்டது (உ.வ.), பையனுக்கு மீசை முளைக்க ஆரம்பித்துவிட்டது (உ.வ.).*

ம. முளை; க. மொளெ; தெ. மொலத்சு.

*[முல் →முள் →முளை →முளை–த்தல்.]*

**முளை[2]–தல்** *muḷai*, 2 செ.கு.வி.(v.i.) முளை[1]–த்தல் பார்க்க; see *muḷai[1]-*. *போட்ட விதை இன்னும் முளையவில்லை (உ.வ.).*

*[முல் →முள் →முளை →முளை–த்தல்.]*

**முளை[3]** *muḷai*, பெ.(n.) 1. வித்தினின்று முளைத்த சிறு வெளிப்பாடு; shoot, tender shoot of trees or plants, seed - leaf. *"வித்திய வெண்முளை" (ஐங்குறு.29). "முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்" (அகநா.85:8). "இருவெதிர் ஈன்ற ஏற்றிலைக் கொழுமுளை" (நற்.116:4). "வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்" (புறநா. 73:10). பயறு முளைவிட்டுள்ளது. வயலில் போட்ட உளுந்து முளைத்துவிட்டது. அந்த இடத்தில் புல்கூட முளைக்கவில்லை.* 2. மரக்கன்று; young tender plant, seedling. *"அதன்றாள் வழியே*

முளையோங்குபு" (சீவக.223). 3. மூங்கில் (பிங்.); bamboo.

தெ. மொலக; க. மொளெ; ம. முள; து. முளெ.

E. shoot, to dart; to thrust forward; to send forth new parts, as a plant (சு.வி.42).

*[முள்→முளை = முற்படும் அல்லது முட்டும் வேர் (சு.வி.42).]*

**முளை**[4] *muḷai*, பெ.(n.) 1. தண்டாயுதம் (பிங்.); club with knobs. *"முசுண்டியு முளையும்" (கம்பரா.பிரமாத்.108).* 2. குறுந்தறி; peg, stake. *"குத்து முளை செறித்த விதானத்து" (பெருங்.இலாவாண.5:24). கன்றை முளை அடித்துக்கட்டு.* 3. திரிகையின் அச்சு (இ.வ.); pivot, as of a millstone. 4. திரிகையின் கைப்பிடி (இ.வ.); handle, as of a millstone. 5. பிளப்பில் அடிக்க உதவும் கூர்மையான சிறிய மரத்துண்டு; wedge-shaped piece of wood used for tightening or securing. *மரப்பிளப்பில் ஒரு முளையை அடித்துப் பையை மாட்டு.* 6. முனை; sharp end or point. *"முள் ளுறழ் முளை யெயிற்று" (கலித்.4).*

*[முளை³→முளை⁴.]*

**முளை**[5] *muḷai*, பெ.(n.) 1. தோலில் எழும் கட்டியின் முளை; core of a boil. *கட்டி உடைந்தாலும் முளை வெளிவரவில்லை.* 2. மூலமுளை; piles.

*[முளை³→முளை⁵.]*

**முளை**[6] *muḷai*, பெ.(n.) 1. கதவு முதலியவற்றின் குடுமி; pivot, pin of a door. 2. நாதாங்கி மாட்ட உதவும் கதவுறுப்பு (வின்.); staple of a padlock. 3. முத்திரையச்சு (யாழ்.அக.);die. 4. ஒரு பழைய நாணயம்; an ancient coin.

*[முளை³→முளை⁶.]*

**முளை**[7] *muḷai*, பெ.(n.) 1. இளமை; tenderness. *"முளையமை திங்கள்" (கம்பரா.கும்பக.16).* 2. சிறுகுழந்தை; little child. 3. மகன் (பிங்.); son.

ம.முள; து.முளெ; க.மொளெ; தெ. மொலக்க.

*[முல்→முள்→முளை. முல் – இளமைக் கருத்துவேர்.]*

**முளைக்கட்டு-தல்** *muḷai-k-kaṭṭu-*, 5 செ. குன்றாவி.(v.t.) 1. செம்மண்ணால் துவரை முதலிய பயறுவகைகளைப் பதம் செய்தல்; to season pigeon - pea by mixing it with wet red loam, in preparing dholl. 2. ஊறவைத்த விதையை நீரில்லாமல் மூடி வைத்து முளை வரும்படி செய்தல்; process pulses by making them sprout. *முளைக்கட்டிய கொத்துக் கடலையில் புரதச் சத்து அதிகம்.*

*[முளை³ + கட்டு-தல்.]*

**முளைக்காசரி** *muḷai-k-kāšari*, பெ.(n.) மரக்காளான்; mushroom growing on a tree (சா.அக.).

**முளைக்காம்பு** *muḷai-k-kāmbu*, பெ.(n.) சிறு தடி; pole or stake set up on the ground to tie the cow, and other cattles, yoke. *கொட்டகையில் மாடு கட்டுவதற்காகத் தரையில் அறையப் பட்டிருக்கும் சிறுதடி. தறி முள்ளங் குச்சி என்றும் கூறுவர். தரையில் மாடுகட்ட முளைக்காம்பு அடிச்சிட்டியா?*

*[முளை + காம்பு.]*

**முளைக்காற்கோதை** *muḷai-k-kāṟ-kōdai*, பெ.(n.) நெல் முளைகளால் தொடுக்கப்பட்ட மாலை; a garland of

paddy-sprouts. *"முளைக்காற் கோதை துயல்வர" (பெருங். இலாவாண.5:23).*

*[முளை³ + கால் + கோதை.]*

**முளைக்கீரை** *muḷai-k-kīrai,* பெ.(n.) உணவுக்குப் பயன்படும் கீரை வகை; a kind of edible greens.

தெ. மொலக்கீர

*[முளை³ + கீரை.]*

இது இளஞ்சிவப்பு நிறக்காம்புகளையும் சிறு சிறு இலைகளையும் உடைய கீரை வகை.

**முளைக்குச்சி** *muḷai-k-kucci,* பெ.(n.) நுகத்தடியில் பூட்டுங்கோல் (உ.வ.); pin, as of a yoke.

*[முளை + குச்சி.]*

**முளைக்குச்சு** *muḷai-k-kuccu,* பெ.(n.) முளைக்குச்சி பார்க்க; see *muḷai-k-kucci.*

*[முளை + குச்சு.]*

**முளைக்குடம்** *muḷai-k-kuḍam,* பெ.(n.) திருமணம் போன்ற விழாக்களில் வைக்கப்படும் முளைவிட்ட ஒன்பான் தவசங்கள் நிறைந்த மட்பாண்டம்; pot in which nine kinds of pulses are sown and allowed to sprout on auspicious occasions. *"முளைக்குடந் தூபம்... வைம்மின்" (திருவாச.9:1).*

*[முளை + குடம்.]*

**முளைக்கூச்சு** *muḷai-k-kūccu,* பெ.(n.) முளைக்குச்சி (யாழ்.அக.) பார்க்க; see *muḷai-k-kucci.*

*[முளைக்குச்சி → முளைக்கூச்சு.]*

**முளைக்கூர்ச்சு** *muḷai-k-kūrccu,* பெ.(n.) முளைக்குச்சி (வின்.) பார்க்க; see *muḷai-k-kucci.*

*[முளைக்குச்சி → முளைக்கூர்ச்சு.]*

**முளைக்கேசிகம்** *muḷai-k-kēšigam,* பெ.(n.) வெண்துத்திப் பூக்கள்; abutilon with white flowers (சா.அக.).

**முளைக்கொட்டு¹-தல்** *muḷai-k-koṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) முளைக் கட்டு-தல் பார்க்க; see *muḷai-k-kaṭṭu-.*

*[முளை + கொட்டு-தல்.]*

**முளைக்கொட்டு²** *muḷai-k-koṭṭu,* பெ.(n.) 1. கரகமெடுத்தல் போன்ற விழாக்களின் இறுதியில் மகளிர் முளைப் பாலிகையை எடுத்துக் கொண்டு போய் நீரில் விடுஞ்செயல் (இ.வ.); ceremony of women taking the muḷai-k-kuḍam to a river or tank and casting it away, as at the close of a *karagam* festival. 2. மகளிர் முளைப் பாலிகையைச் சுற்றி ஆடும் கும்மிக் கூத்து (வின்.); singing and dancing by women around pots of growing sprouts (w.).

மறுவ. முளைப்பாலிகை கொட்டு

*[முளை + கொட்டு.]*

**முளைக்கோடு** *muḷai-k-kōḍu,* பெ.(n.) மூங்கில் முளை போன்ற கொம்பு; horn as like a bamboo bud. *"நாகுபிடி நயந்த முளைக்கோட்டிளங்களிறு" (குறுந்.346: 1).*

*[முளை + கோடு.]*

**முளைக்கோல்** *muḷai-k-kōl,* பெ.(n.) நிலத்தில் அடித்த கோல்; pole or stake set

up on the ground. *"முளைக்கோற் பெருந்திரை வளைத்த வட்டத்து" (பெருங். உஞ்சைக். 47:45).*

*[முளை + கோல்.]*

**முளைகட்டல்** *mulai-kattal,* பெ.(n.) திருமணம் முதலிய நிகழ்வின் போது ஒன்பான் தவசங்களைப் பாலிகைளில் விதைக்கும் ஒரு சடங்கு; ceremony of sowing nine kinds of seeds in pots and allowing them to sprout, as in weddings, festivals, etc.

*[முளை + கட்டல். கட்டல் = முளை தோன்றுவதற்காக தவசத்தை விதைத்தல்.]*

**முளைகட்டு-தல்** *mulai-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) முளைக்கட்டு-தல் பார்க்க; see *mulai-k-kattu-.*

**முளைகடாவு[1]-தல்** *mulai-kadāvu-,* 5 செ.கு.வி. (v.i.) ஆப்படித்தல்; to drive a wedge.

*[முளை + கடாவு-தல்.]*

**முளைகடாவு[2]-தல்** *mulai-kadāvu-,* 5 செ. குன்றாவி.(v.t.) அடக்கி வைத்தல்; to restrain, restirct.

*[முளை + கடாவு-தல்.]*

**முளைச்சாறுமூலி** *mulai-c-cāru-mūli,* பெ.(n.) பாலூட்டி வகைகளில் ஆண்பால் உறுப்புக்கு இணையான சுரப்பிக் கூட்டத்தால் ஆன பெருஞ்சுரப்பிச் செடி; a prostate plant - *Gratiola moniera* (சா.அக.).

**முளைத்தண்டு** *mulai-t-tandu,* பெ.(n.) முளைக்கீரை (இ.வ.) பார்க்க; see *mulai-k-kīrai.*

*[முளை + தண்டு.]*

**முளைத்தண்ணீர்** *mulai-t-tannīr,* பெ. (n.) 1. நெல் முளைக்குப் பாய்ச்சிய நீர்; water for seedings. 2. முளை கிளம்பியதும் வயலினின்று வடிக்கும் நீர் (இ.வ.); water drained from fields after the sprouting of the seeds.

*[முளை + தண்ணீர்.]*

**முளைத்தவசம்** *mulai-t-tavašam,* பெ.(n.) 1. ஒன்பான் தவசம் (நவதானியம்); the nine kinds of grain. 2. ஊற வைத்து முளையுண்டான பின் உலர்த்தி வறுத்த தவசம்; malt; grain steeped in water and dried in a kiln.

*[முளை + தவசம்.]*

**முளைத்தாலி** *mulai-t-tāli,* பெ.(n.) 1. கழுத்தணியிற் கோக்கும் முளைபோன்ற பொன்னகை (திவ்.திருப்பா.7, வியா. பக்.99); a kind of gold bead for stringing in a necklace, shaped like tender shoots. 2. சிறுமியர் கழுத்திலணியப் பெறும் சிறுமணி மாலை; a kind of neck-lace worn by girl-child.

*[முளை + தாலி.]*

**முளைத்தாழ்வு** *mulai-t-tālvu,* பெ.(n.) விதை முளையாமை (வின்.); failure of seeds to sprout.

*[முளை + தாழ்வு.]*

தரம் தாழ்வான, குறைவான விதையாகையால் முளைப்பதில்லை.

**முளைத்தானியம்** *mulai-t-tāniyam,* பெ.(n.) முளைத்தவசம் பார்க்க; see *mulai-t-tavašam.*

*[முளை + Skt. தானியம்.]*

**முளைத்திங்கள்** *muḷai-t-tiṅgaḷ,* பெ.(n.) பிறை நிலவு; crescent moon. *"முளைத் திங்கள் சூடி" (தேவா.257, 2).*

*[முளை + திங்கள்.]*

**முளைத்தேங்காய்** *muḷai-t-tēṅgāy,* பெ. (n.) முளைவிட்ட தேங்காய் (உ.வ.); coconut that has sprouted before planting.

*[முளை + தேங்காய்.]*

**முளைதெளி-த்தல்** *muḷai-teḷi-,*4 செ.கு.வி. (v.i.) 1. திருமணம் போன்ற விழாக்களில் பாலிகைகளில் ஒன்பான் தவசங்களை விதைத்தல் (இ.வ.); to perform the ceremony of sowing nine kinds of seeds in pots, as at wedding, festivals, etc. 2. முளைத்த விதையை வயலில் விதைத்தல் (வின்.); to sow a field with grains that have been allowed to sprout.

*[முளை + தெளி-தல்.]*

**முளைப்பயறு** *muḷai-p-payaṟu,* பெ.(n.) முளையுடன் கூடிய பயறு; pulses which have just sprouted.

*[முளை + பயறு.]*

**முளைப்பருப்பு** *muḷai-p-paruppu,* பெ.(n.) செம்மண் கொண்டு முளைகட்டிய பருப்பு; dholl prepared from pigeon - pea seasoned by mixing it with wet red loam.

*[முளை + பருப்பு.]*

**முளைப்பாரி** *muḷai-p-pāri,* பெ.(n.) 1. முளைப் பாலிகை பார்க்க; see *muḷai-p-pāligai.* 2. வீட்டில் யாராவது இறந்தபின் ஒன்பான் தவசங்களை (நவதானியங்களை) விதைத்து, அது வளரும் செழிப்பை பொருத்து, குடும்ப நன்மை தீமைகள் கணிக்கப்படும்; a custom of sowing the nine pulses in a pot, after one's death in a house and foretell the good or bad times that come's to the following years by its growth.

*[முளை + பாரி.]*

**முளைப்பாலிகை** *muḷai-p-pāligai,* பெ. (n.) திருமணம் போன்ற விழாவுக்காக ஒன்பான் தவசங்கள் (நவதானியம்) முளைக்க வைத்த மட்பாண்டம்; pot in which nine kinds of seeds are sown, as at weddings, festivals, etc. *"வெண்டாமரை முளைப் பாலிகை" (வெங்கைக்கோ.97).*

மறுவ. முளைப்பாரி

*[முளை + பாலிகை.]*

சிற்றூர்த் தெய்வங்களுக்குக் குறிப்பாகப் பெண் தெய்வங்களுக்கு கன்னி (புரட்டாசி) மாதத்தில் மழை வேண்டி மட்பாண்டங்களில் ஒன்பான் தவசங்களை முளையிட்டு வழிபடும் பழக்கம் இன்றும் கிராம மக்களிடம் காணப்படுகிறது.

**முளைப்பு** *muḷaippu,* பெ.(n.) விதைகள் முளைக்கும் செயல்; seeds germination. *புழுதியாக உழுதால் எள் முளைப்புச் சிறப்பாக இருக்கும். வேளாண் அலுவலகம் மூலமாக நல்ல முளைப்புத் திறன் உள்ள விதைகளைப் பெற வேண்டும்.*

*[முளை → முளைப்பு.]*

**முளைப்புழுதிச்செய்** *muḷai-p-puḻudi-c-cey,* பெ.(n.) நாற்றங்கால் நிலம்; seedling bed. *"இத்தேவர் திருமுளைப்புழுதி செய்க்குத் தெற்கும்" (தெ.இ.கல்.தொ.8, கல்.585).*

*[முளை + புழுதி + செய். நாற்றங்கால் விழுவதற்கு ஏற்ற வகையில் பண்படுத்திய நிலம்.]*

முளைமால் *muḷai-māl,* பெ.(n.) 1. ஏரியில் நீர்பெருகும் அளவைக் குறித்தற்கு முளையடித்த எல்லைக் கட்டு (இ.வ.); boundary fixed by pegs, marking the utmost spread of water in a tank. 2. ஏரியின் உள்வாயில் விளைச்சல் செய்யக் கூடாதென வரையறுத்த எல்லை (R.T.); a certain limit in the bed of a tank within which cultivation is prohibited.

*[முளை + மால்.]*

முளைமூலம் *muḷai-mūlam,* பெ.(n.) மலவாயில் முளையோடு கூடிய மூல நோய் (பதார்த்த.416, உரை); piles, fistula in ano.

*[முளை + மூலம்.]*

முளையடி-த்தல் *muḷai-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. முளையை அடித்து உட்செலுத்துதல்; to nail, to drive pegs. 2. காசில் (நாணயத்தில்) முத்திரை பதித்தல் (வின்.); to coin; to stamp metal.

*[முளை + அடி-த்தல்.]*

முளையரில் *muḷai-y-aril,* பெ.(n.) மூங்கிற்றூறு; thicket of bamboos. *"முளையரிற் பிணங்கிய முள்ளுடை யிலவத்து" (பெருங்.உஞ்சைக்.56:9).*

*[முளை + அரில்.]*

முளையாணி *muḷai-y-āṇi,* பெ.(n.) 1. கதவு நின்றாடும் இரும்புக் குடுமி (யாழ்.அக.); iron pin of a door. 2. தாழ்ப்பாள் விழும் இரும்புக் கூடு (வின்.); staple.

*[முளை + ஆணி.]*

முளையான் *muḷai-y-āṉ,* பெ.(n.) சிறு குழந்தை; little child. *'இந்த முளையான் பேச்சை யார் கேட்கிறது' (வின்.).*

*[முளை → முளையான் (வே.க.).]*

முளையுருளி *muḷai-y-uruḷi,* பெ.(n.) 1. வாடி யழிந்த பயிர்; withered crops. 2. இளமையிற் கேடடைந்தவன்; person spoilt even in his boyhood.

*[முளை + உருள் - முளையுருள் → முளையுருளி.]*

முளையெறி-தல் *muḷai-y-eṟi-,* 2 செ.கு.வி. (v.i.) முளைத்த விதையை வயலில் விசிறுதல்; to sow grain that has been allowed to sprout.

*[முளை + எறி-தல்.]*

முளைவாளெயிற்றள் *muḷai-vāḷeyiṟṟaḷ,* பெ.(n.) நாணல் முளை போன்ற ஒளியுடைய பல்லினள்; brightness of teeth as like kaus spilt. *"இளையள் முளைவாள் எயிற்றள்" (குறுந்.119:3).*

*[முளை + வாள் + எயிற்றள்.]*

முளைவிடு-தல் *muḷai-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) விதை போன்றவற்றில் இருந்து முளை கிளம்புதல்; germinate, put forth shoots. *அவரைவிதை முளைத்து விட்டது.*

*[முளை + விடு-தல்.]*

முற்கட்டு *muṟ-kaṭṭu,* பெ.(n.) பாட்டின் தொடக்கத்தில் உள்ள எடுப்பு; the opening section of a song. *"முற்கட்டும் பாகமுஞ் சீர்மோனைகளும்" (விறலிவிடு.493).*

*[முள் + கட்டு - முற்கட்டு.]*

முற்கந்தெறி-த்தல் *muṟkan-deṟi-,* 4 செ. கு.வி.(v.i.) 1. பல்லி கொட்டுதல்; to cluck, as a lizard. 2. நாவாற் கொட்டுதல் (வின்.); to make a sound with the tongue, like the

cluck of a lizard. 3. உடன்பாடின்மை (சம்மதமின்மை)க் குறிப்பாக ஒசை யெழுப்புதல் (யாழ்.அக.); to express disapprobation by a clucking sound.

*[முற்கம்[1] + தெறி-த்தல்.]*

முற்கம்[1] *murkam,* பெ.(n.) 1. பல்லி யெழுப்பும் ஒலி; the cluck of a lizard. 2. பல்லியின் ஓசைப் போல் நாவாற் கொட்டும் ஒலி (வின்.); a sound made with the tongue, like the cluck of a lizard. 3. பெருங்குரல் ஓசை (யாழ்.அக.); loud noise.

*[முற்கு → முற்கம். முற்கு = எழுத்தில்லாஒலி.]*

முற்கம்[2] *murkam,* பெ.(n.) 1. அவரை, துவரை முதலிய பருப்பு வகை; pulse or other leguminous plant. 2. பச்சைப் பயறு, சிறுபயறு; green gram. *"முற்கந் தருவாரும்" (உத்தரரா.அசுவ.30).*

முற்கரம் *murkaram,* பெ.(n.) 1. முசுண்டி என்னும் ஆய்த வகை; sledge - like weapon of war. *"முற்கரங்களு முசலமும்" (கம்பரா. பிரமாத்திர.108).* 2. பெரிய தடி (இலக்.அக.); large club. 3. சம்மட்டி (யாழ்.அக.); hammer.

முற்கரவன் *murkaravan,* பெ.(n.) குபேரன் (திவா.Mss.); Kubera.

முற்கலம் *murkalam,* பெ.(n.) 108 உபநிடதங்களுள் ஒன்று (யாழ்.அக.); an Upanisad, one of 108.

மறுவ. முத்கலை.

முற்காசு *murkāšu,* பெ.(n.) கோரைக் கிழங்கு (சங்.அக.); sedge - tuber a fragrant root of a grass - *Cyperous rot andus.*

முற்கார் *murkār,* பெ.(n.) மடங்கல் மாதத்தில் (ஆவணியில்) விதைக்கும் கார்ப்பயிர் (G.Sm.D.I, i.213); a kār paddy sown in *Avani.*

*[முன் + கார் – முன்கார் → முற்கார்.]*

முற்கான்னம் *murkānnam,* பெ.(n.) அரிசியும் சிறுபயறும் தேங்காய்த் துருவலுங் கூட்டிச் செய்த சோறு (இலக்.அக.); a kind of preparation made of rice, green-gram and coconut - scrapings.

*[முற்கார் + அன்னம்.]*

முற்கு *murku,* பெ.(n.) 1. எழுத்திலா ஒலி; inarticulate sound. *'முற்கு வீளை முதலியன' (தொல்.சொல்.1, உரை).* 2. நாவால் கொட்டும் ஒலி (வின்.); a sound made with the tongue, like the cluck of a lizard.

*[முக்கு → முற்கு.]*

முற்குலத்தோர் *mur-kulattōr,* பெ.(n.) பிராமணர் (பிங்.); Brahmins.

*[முன் + குலத்தோர்.]*

முற்குளம் *mur-kuḷam,* பெ.(n.) 20வது விண்மீன் (பூராடம்); the 20th naksatra.

*[முள் + குளம்.]*

முற்கூறு *mur-kūru,* பெ.(n.) 1. முன்பகுதி; earlier part. *"முற்கூற்றால்.... உபாயமாகப் பற்றுகிறது" (அட்டாதச.முமுட்சுப்.திவ்ய.6).* 2. தொடக்கம் (யாழ்.அக.); beginning.

*[முன் + கூறு.]*

முற்கொழுங்கால் *mur-koḷuṅgāl,* பெ.(n.) 25வது நாண்மீன் (பூரட்டாதி) (சூடா.); the 25th naksatra.

மறுவ. முற்கொளுங்கால்

*[முன் + கொழுங்கால்.]*

**முற்கொழுங்கோல்** *muṟ-koḻuṅgōl,* பெ. (n.) முற்கொழுங்கால் (யாழ்.அக.) பார்க்க; see *muṟ-koḻuṅgāl.*

மறுவ. முற்கொளுங்கால்

*[முன் + கொழுங்கால்.]*

**முற்கொள்(ளு)–தல்** *muṟ-koḷ-,* 10 செ. குன்றாவி. (v.t.) முந்துதல்; to go ahead of; to anticipate. *"முற்கொண்டா னரக்க னென்னா" (கம்பரா.நாகபாச.116). "இவரென் மேல் விடாமுன் முற்கொள்வேன்" (கம்பரா. பிரமாத்.85).*

*[முன் + கொள்(ளு)–தல்.]*

**முற்கொளுங்கால்** *muṟ-koḷuṅgāl,* பெ.(n.) முற்கொழுங்கால் (இலக்.அக.) பார்க்க; see *muṟ-koḻuṅgāl.*

*[முற்கொழுங்கால் → முற்கொளுங்கால்.]*

**முற்கோபம்** *muṟ-kōbam,* பெ.(n.) முன் கோபம் பார்க்க; see *muṉ-kōbam.*

**முற்சனி** *muṟ-caṉi,* பெ.(n.) பத்தாவது விண்மீன் (மகம்) (நாமதீப.107); the 10th naksatra.

*[முன் + சனி.]*

**முற்சீர்** *muṟ-cīr,* பெ.(n.) முதற்சீர் பார்க்க; see *mudaṟ-cīr. "அசையிரண்டொன்றின் முற்சீர்" (வீரசோ.யாப்.1).*

*[முதற்சீர் → முற்சீர்.]*

**முற்பக்கம்** *muṟ-pakkam,* பெ.(n.) 1. முன் பகுதி; the front part. 2. வளர்பிறை (பரிபா.11:31, உரை); bright fortnight, as the earlier part of a lunar month.

*[முன் + பக்கம்.]*

**முற்பகல்** *muṟ-pagal,* பெ.(n.) 1. பகற் காலத்தின் முற்பகுதி; forenoon. *"பிறர்க்கின்னா முற்பகற் செய்யின்" (குறள், 319).* 2. முன்னாள் (வின்.); the preceding day. 3. முற்காலம் (வின்.); former time. *முற்பகல் 10.00 மணிக்குத் தேர்வு நடைபெறும். "முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்" (பழ.).*

தெ.முந்பகலு

*[முன் + பகல்..]*

**முற்பட்ட** *muṟpaṭṭa,* பெ.அ.(adj.) காலத்தில் முந்திய; prior in time. *தொல்காப்பியம் கழகக்காலத்துக்கு முற்பட்ட நூல் எனக் கூறலாம்.*

**முற்பட்டவகுப்பு** *muṟpaṭṭa-vaguppu,* பெ. (n.) கல்விக்கும் பொருளியல் முன்னேற்றத்துக்கும் அரசின் சிறப்புக் கவனம் தேவை இல்லை என்று குறிப்பிடப்பட்ட இனம்; the communities not included in the list of backward communities, scheduled castes and tribes; other communities.

*[முற்பட்ட + வகுப்பு.]*

**முற்படர்–தல்** *muṟ-paḍar-,* 2 செ.கு.வி. (v.i.) 1. முன்னே செல்லுதல்; to go before. 2. மேம்படுதல்; to become exalted. *"முற்படர்ந்த மொழி மிகுத்தன்று" (பு.வெ. 9:32).*

*[முன் + படர்–தல்.]*

**முற்படிரம்** *muṟ-paḍiram,* பெ.(n.) சந்தனம்; sandal wood.

**முற்படு–தல்** *muṟ-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. ஒரு செயலைச் செய்ய முயலுதல் அல்லது

தொடங்குதல்; attempt or begin to do something. *கையை ஓங்கிக் கொண்டு அடிக்கப் போனவனைத் தடுக்க முற்பட்டார். எரிபொருள் பற்றாக்குறை என்பதற்காகக் காடுகளை அழிக்க முற்படக் கூடாது.* 2. காலத்தில் முன்னதாக அமைதல்; precede in time. *இந்த இலக்கண நூல் பதினெட்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகக் கருதப் படுகிறது.* 3. முந்துதல்; to precede, go ahead. 4. முன் அமைதல்; to come before. *"பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்" (தொல். சொல்.286).* 5. எதிர்ப்படுதல்; to meet. *"சிறுமந்தி முற்பட்ட தந்தையை" (நாலடி, 237).*

*[முன் + படு–தல்.]*

**முற்பணம்** *mur̤-paṇam*, பெ.(n.) எதையும் வாங்கியதற்கு அடையாளமாகக் கொடுக்கும் முன்பணம் (அச்சாரம்); advance, earnest money. *"முற்பணந் தாரும்" (திருப்பு.730).*

*[முன் + பணம்.]*

**முற்பவம்**[1] *mur̤-pavam*, பெ.(n.) முற்பிறப்பு; past birth. *"முற்பவத்திற் செய்த வினை" (வாக்குண்.20).*

*[முன் + **Skt.** பவம்.]*

**முற்பவம்**[2] *mur̤-pavam*, பெ.(n.) 1. இப்பிறப்பில் முன்செய்த தீவினை; past sins of the present birth. 2. முற்பிறவியில் செய்த தீவினை; sins of past birth.

*[முன் + **Skt.** பவம்.]*

**முற்பழி** *mur̤-paḻi*, பெ.(n.) முற்பவம்[2] (யாழ்.அக.) பார்க்க; see *mur̤-pavam*[2].

*[முன் + பழி.]*

**முற்பனி** *mur̤-paṉi*, பெ.(n.) முன்பனி (பிங்.) பார்க்க; see *muṉ-paṉi.*

*[முன்பனி → முற்பனி.]*

**முற்பா** *mur̤-pā*, பெ.(n.) செய்யுளியற்றும் நான்கு வகைப் பாவினுள் முதலாவதாகிய வெண்பா (சூடா.); *Veṇpā* as the first of the four main metres in Tamil.

மறுவ. வெண்பா.

*[முன் + பா.]*

**முற்பாடன்** *mur̤-pāḍaṉ*, பெ.(n.) முற்பட்டவன்; one who is ahead of others or first. *"ஆர்த்திக்கு முற்பாடனாய்" (திவ்.திருப்பா.4, வியா.பக்.73).*

*[முற்பாடு → முற்பாடன்.]*

**முற்பாடு** *mur̤-pāḍu*, பெ.(n.) 1. முற்படுகை; being first or in advance. *'இன்பனா மிடத்தில் முற்பாடு இங்கேயாய்' (ஈடு, 4. 5:8).* 2. முன்னிடம்; front. *'பகைவர்நாட் டெல்லையின் முற்பாடு சென்றுவிட்ட தூசிப்பெரும்படை' (பதிற்றுப்.33:5, உரை).*

*[முன் + படு – முற்படு → முற்பாடு.]*

**முற்பாடை** *mur̤-pāḍai*, பெ.(n.) மாட்டுக் குற்றம் (பெ.மாட்.21); a defect in cattle.

**முற்பாதி** *mur̤-pādi*, பெ.(n.) முந்திய பகுதி (வின்.); the first or earlier half.

*[முன் + பாதி. பகுதி →பாதி.]*

**முற்பார்** *mur̤-pār*, பெ.(n.) முற்பாதி (யாழ். அக.) பார்க்க; see *mur̤-pādi.*

**முற்பால்** *mur̤-pāl*, பெ.(n.) முன்பு பார்க்க; see *muṉbu. "முற்பானிகழ்ந்தவும்" (பெருங். இலாவாண.11:162).*

*[முன் + பால்.]*

**முற்பாற்கிழமை** *muṟ-pāṟ-kiḻamai,* பெ. (n.) பழமையான நட்புரிமை; long standing attachment, enduring friendship. *"முற்பாற் கிழமை முதலற வின்றி" (பெருங். மகத.18:25).*

*[முற்பால் + கிழமை.]*

**முற்பிறப்பு** *muṟ-piṟappu,* பெ.(n.) இந்து மத நம்பிக்கையின்படி இப்போதைய பிறவிக்கு முந்தைய பிறவி; previous birth. *அவன் முற்பிறப்பில் செய்த நல்வினை. "முற்பிறப்பில் செய்தவினை இப்பிறப்பில் மூண்டது" (பழ.).*

*[முன் + பிறப்பு.]*

**முற்பிறவி** *muṟ-piṟavi,* பெ.(n.) இந்து மத நம்பிக்கையின்படி இப்போதைய பிறவிக்கு முந்தைய பிறவி; past birth.

*[முன் + பிறவி.]*

**முற்பூண்** *muṟ-pūṉ,* பெ.(n.) திருமங்கல நாண்; marriage-badge. *"தெம்மாதர் முற்பூண்கவர் மன்னன்" (பாரத. திரௌபதி. 87).*

*[முன் + பூண்.]*

**முற்பெரியான்** *muṟ-periyāṉ,* பெ.(n.) நான்முகன்; *Brahmā. "முற்பெரியானை யாகத்திருப்பை யான்முடிந்து" (சீவக.2464).*

*[முன் + பெரியான்.]*

**முற்போக்கு** *muṟ-pōkku,* பெ.(n.) முன்னேற்றத்திற்குத் தேவையான மாற்றங்களை ஏற்கத் தயங்காத போக்கு; being progressive. *முற்போக்கான எண்ணம். அரசின் முற்போக்குக் கொள்கைகள்.*

*[முன் + போக்கு.]*

**முற்ற** *muṟṟa,* கு.வி.எ.(adv.) 1. முழுதும்; entirely, fully, totally. *"முற்ற மண்ணிடந்தாவி" (திவ்.நாய்ச்.2:9).* 2. மிகவும்; exceedingly. *"முற்ற மூத்து" (திவ். பெரியதி. 1. 3:1).* 3. முடிய; unto the end.

தெ. முட்ட.

*[முற்று → முற்ற.]*

**முற்றகப்படு-தல்** *muṟṟaga-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) முற்றுகையில் அகப்படுதல்; to be caught in a siege. *'முற்றகப்பட்டோனை முற்றுவிடுத்தலும்' (தொல்.பொருள்.181, உரை).*

தெ. முட்டதிபடுத.

*[முற்று + அகப்படு-தல்.]*

**முற்றத்திற்குப்போ-தல்** *muṟṟattirku-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) சிறுநீர் போதல் (பிராமணர் வழக்கு); to pass urine.

*[முற்றம் + போதல் – முற்றம்போ-தல் → முற்றத்திற்குப்போ-தல்.]*

**முற்றத்துற-த்தல்** *muṟṟa-t-tuṟa-,* 3 செ. குன்றாவி.(v.t.) முழுதுந்துறத்தல்; to renounce completely. *'முற்றத்துறந்தார் வீட்டினைத் தலைப்பட்டார்' (குறள், 348, உரை).*

*[முற்ற + துற-த்தல்.]*

**முற்றம்** *muṟṟam,* பெ.(n.) 1. வீட்டுள் முன்னிடம்; courtyard of a house. *"மணன் மலிமுற்றம் புக்க சான்றோர்" (புறநா.178).* 2. தொட்டி முற்றம், வீட்டின் நான்கு கட்டுகளுக்கு நடுவில் கூரையில்லாமல் இருக்கும் பகுதி; inner yard of a house without roof. 3. ஊரின் வெளியிடம்; esplanade, open space.

*"வஞ்சி முற்றம் வயக்கள னாக" (புறநா.373).* 4. பரப்பு; expanse. *"ஏந்து முலைமுற்றம் வீங்க" (அகநா.51).*

*[முன்றில் →முற்றில்→ முற்றம் (வே.க.)]*

**முற்றமுடிய** *murra-mudiya,* கு.வி.எ.(adv.) முழுதும் முடியும் வரை, கடைசிவரை (வின்.); to the very end.

*[முற்ற + முடிய. முடி →முடிய]*

**முற்றரநாதம்** *murrara-nādam,* பெ.(n.) பெண்களுக்கு முதல் பூப்பின் போது வரும் அரத்தம்; menstrual fluid obtained on the day of puberty, the first menses.

**முற்றல்** *murral,* பெ.(n.) 1. மூப்பு (சூடா.); old age. 2. முதிர்ச்சி; maturing. 3. முற்றியது; anything that is fully grown or developed. *"முற்றன் மூங்கில்" (திவ்.திருச்சந்.52), "இறுகுபுல் மேய்ந்த அறுகோட்டு முற்றல்" (நற்.265:1).* 4. வயிரம்; hardness, as of the core of a tree. 5. பழுக்கும் நிலையிலுள்ள முற்றினகாய்; fruit almost ripe. *"முற்றற் சிறுமந்தி.... குற்றிப் பறிக்கும்" (நாலடி, 237).* 6. முடிகை (சூடா.); completing; ending. 7. திண்மை; strength. *"முற்றல் யானை" (திவ்.திருச்சந்.52).* 8. முற்றுகை பார்க்க; see *murrugai. "அரண முற்றலும்" (தொல். பொருள்.65).* 9. வளைவு (யாழ்.அக.); surrounding, encircling. 10. வெறுக்கை (யாழ்.அக.); hating. 11. நெற்று; dried nut.

க. முய்து.

*[முற்று →முற்றல்.]*

**முற்றவிடு-தல்** *murra-vidu-,* 18 செ. குன்றாவி. (v.t.) 1. முதிரும்படிவிடுதல் (உ.வ.); to allow to mature or ripen, as fruits. 2. முற்றத்துற-த்தல், பார்க்க; see *murra-t-tura-. "மற்றவன் பாசங்கள் முற்றவிட்டு" (திவ்.திருவாய்.8. 2:11).*

*[முற்ற + விடு-தல்.]*

**முற்றவும்** *murravum,* கு.வி.எ.(adv.) முழுவதும்; entirely, fully. *"வீடுமின் முற்றவும்" (திவ். திருவாய். 1. 2:1).*

*[முற்று →முற்றவும்.]*

**முற்றவெளி** *murra-veli,* பெ.(n.) வெளியிடம்; open space; esplanade. *திருமுற்றவெளி.*

மறுவ. வெட்டவெளி

*[முற்றம் + வெளி.]*

**முற்றவை**[1] *murravai,* பெ.(n.) அறிவால் முதிர்ந்தோர் கூடிய அவை; assembly of wise men. *"கற்றோர் மொய்த்த முற்றவை நடுவண்" (பெருங்.உஞ்சைக்.36:245).*

*[முற்று + அவை.]*

**முற்றவை**[2] *murravai,* பெ.(n.) பாட்டி; grand mother. *"நற்றவை யென்னைப் பெற்ற முற்றவை" (தேவா.186, 7).*

க. முத்தவ்வெ

*[முற்று + அவ்வை.]*

**முற்றளபெடை** *murralabedai,* பெ.(n.) அடியின் எல்லாச் சீர்க் கண்ணும் அளபெடை வரத்தொடுப்பது (யாப்.வி.48); lengthening of sound by *alapedai* in all the feet of a line.

*[முற்று + அளபெடை.]*

எ.டு. ஆஅ னாஅ நீஇ ணீஇர்.

முற்றறிவன் *muṟṟaṟivaṉ*, பெ.(n.) எல்லாமறிந்த கடவுள்; God, as the omniscient.

மறுவ. முழுமுதற்பொருள்

*[முற்று + அறிவன்.]*

முற்றறிவு *muṟṟaṟivu*, பெ.(n.) முழுதுணரும் அறிவு; omniscience.

*[முற்று + அறிவு.]*

முற்றன் *muṟṟaṉ*, பெ.(n.) முழுமையானவன் (பூர்ணன்); perfect being. *"முற்றிலாதானை முற்றனே யென்று மொழியினும்" (தேவா. 648:9).*

*[முற்று → முற்றன் = முழுநிறைவானவன்.]*

முற்றாக *muṟṟāga*, வி.அ.(adj.) முற்றிலும்; entirely; in its entirety. *எந்த நாகரிகத்தையும் முற்றாக அழித்துவிட முடியாது. இப்படிப்பட்டக் கருத்துக்கள் மக்களைவிட்டு முற்றாக நீங்க வேண்டும்.*

*[முற்று → முற்றாக.]*

முற்றாமை *muṟṟāmai*, பெ.(n.) **1.** முடிவு பெறாமை (சங்.அக.); incompleteness. **2.** ஏலாமை (உ.வ.); impossibility.

*[முற்று + ஆ – முற்றா → முற்றாமை.]*

முற்றாய்தம் *muṟṟāydam*, பெ.(n.) தன் மாத்திரையில் குறையாமல் ஒலிக்கும் ஆய்தவெழுத்து; the letter 'k' in its full quantity. *"முற்றாய்த மெட்டு" (நன்.90, விருத்.).*

*[முற்று + ஆய்தம்.]*

எ.டு. எஃகு, கஃசு, அஃகான்.

முற்றாவுரு *muṟṟā-v-uru*, பெ.(n.) குழந்தை; child. *"ஓர் முற்றாவுருவாகி யாலம் பேரிலை யன்னவசஞ்செய்யு மம்மானே" (திவ். திருவாய்.8.3:4).*

*[முற்று + ஆ + உரு.]*

முற்றி-த்தல் *muṟṟi-*, 4 செ.குன்றாவி.(v.t.) முடித்தல்; to complete, finish. *"முடியாக் கருமமாயினும் முடியும் வாயின் முற்றித்து" (பெருங்.மகத.1:69).*

*[முற்று → முற்றி→முற்றி-த்தல்.]*

முற்றிக்கை *muṟṟikkai*, பெ.(n.) முற்றுகை, 1 (வின்.) பார்க்க; see *muṟṟugai, 1*.

தெ. முத்ததி; க. முத்திகெ (g.).

*[முற்றுகை→முற்றிக்கை.]*

முற்றிகரம் *muṟṟikaram*, பெ.(n.) முற்றிய லிகரம் பார்க்க; see *muṟṟiya-ligaram*.

*[முற்று + இகரம்.]*

முற்றிகை *muṟṟigai*, பெ.(n.) முற்றுகை, 1 (இ.வ.) பார்க்க; see *muṟṟugai, 1*.

*[முற்றிக்கை→முற்றிகை.]*

முற்றிமை *muṟṟimai*, பெ.(n.) முதிர்ந்த அறிவு (ஞானம்); mature wisdom. *"முற்றிமை சொல்லின்" (சீவக.2511).*

*[முற்று→முற்றி→முற்றிமை.]*

முற்றியலிகரம் *muṟṟiyal-igaram*, பெ.(n.) தன்மாத்திரையிற் குறையாத இகரம் (யாழ்.அக.); the letter 'i' in its full quantity or sound value.

எ.டு. வேலி, செடி, கூலி.

*[முற்று + இயல் + இகரம்.]*

குற்றியலிகரம் அல்லாதென எல்லாம் முற்றியலிகரம்.

**முற்றியலுகரம்** *murriyal-ugaram,* பெ.(n.) தனது மாத்திரை ஓசையில் குறையாத உகரம் (நன்.164, விருத்.); the letter 'u' in its full quantity or sound value.

எ.டு. அது, இது, எது.

*[முற்று + இயல் + இகரம்.]*

குற்றியலுகரம் அல்லாதென எல்லாம் முற்றியலுகரம்.

*[முற்று + இயல் + உகரம்.]*

**முற்றியார்** *murriyār,* பெ.(n.) முற்றுகை செய்தவர்; besiegers. *"முற்றியார் முற்றுவிட" (பு.வெ.6:25).*

தெ. முத்ததீந்சுவாரு

*[முற்று→முற்றியார்.]*

**முற்றியைபு** *murriyaipu,* பெ.(n.) அடியின் எல்லாச் சீரிலும் இயைபு வரத் தொடுப்பது (யாப்.வி.48); rhyming of the last letter in all the feet of a line.

எ.டு. புயலே குழலே மயிலே யியலே.

*[முற்று + இயைபு.]*

**முற்றில்**[1] *murril,* பெ.(n.) 1. சிறுமுறம்; small winnow. *"முற்றில் சிற்றிலுண்ணொ ந்து வைத்து" (சீவக.1099).* 2. முறம் போன்ற பதினாறாவது விண்மீன் (விசாகம்) (திவா.); the 16th naksatra, as resembling a winnow. 3. சிப்பி வகை (தொல். பொருள். 584, உரை); a kind of shell - fish.

*[முற்று→முற்றில்.]*

**முற்றில்**[2] *murril,* பெ.(n.) முற்றம், 1 பார்க்க; see *murram, 1.*

*[முன்றில்→முற்றில்.]*

**முற்றிலும்** *murrilum,* கு.வி.எ.(adv.) 1. முழுவதும்; entirely, fully, totally. *நான் சொல்வது முற்றிலும் உண்மை. சில வகை மீன் இனங்கள் முற்றிலும் அழிந்துவிட்டன. அவருடைய இலக்கிய நோக்கு முற்றிலும் மாறுபட்டது.* 2. எல்லா வகையிலும்; wholly, completely. *அவருடையக் கோரிக்கை முற்றிலும் மறுக்கப்பட்டது.*

*[முற்று→ முற்றிலும்.]*

**முற்றிழை** *murrilai,* பெ.(n.) 1. வேலைப் பாடுடன் கூடிய அணிகளை அணிந்த பெண்; lady, as bedecked with ornaments of finished work-manship. *"பெற்றிலேன் முற்றிழையை" (திவ்.பெரியதி.3.7:8).* 2. வேலைப்பாடு திருந்திய அணிகலன்; bedecked ornaments.

*[முற்று + இழை.]*

**முற்றின** *murrina,* பெ.எ.(adj.) நன்றாக விளைந்து காய்த்தது; which is well fertilited became callous. *"முற்றின தேங்காய்".*

*[முற்று→முற்றி→முற்றின.]*

**முற்றினநோய்** *murrina-nōy,* பெ.(n.) நாட்பட்ட நோய்; chronic diseases.

*[முற்றின + நோய்.]*

**முற்றினவெள்ளை** *murrina-vellai,* பெ.(n.) தோல் (மேக) நோய் வகை (M.L.); gleet.

*[முற்றின + வெள்ளை.]*

**முற்று[1]–தல்** *muṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. முதுமையடைதல் (பிங்.); to be advanced in age. 2. முதிர்தல்; to become mature, to ripen. *"முற்றி யிருந்த கனியொழிய" (நாலடி.19). கத்தரிக்காய் முற்றினால் கடைத் தெருவுக்கு வந்து தானே ஆக வேண்டும் (பழ.).* 3. முழுவளர்ச்சி யுறுதல்; to be fully grown. *"ஓர் முற்றா வுருவாகி" (திவ். திருவாய். 8.3:4).* 4. வயிரங் கொள்ளுதல் (சூடா.); to become hardened, as the core of a tree. 5. முடிதல்; to come to an end, to be finished. *"தங்கரும முற்றுந் துணை" (நாலடி, 231).* 6. இறத்தல்; to die. *"மாற்றமுந் தாரானா லின்று முற்றும்" (திவ்.பெரியாழ்.2.10:1).*

தெ. முதுரு; க. முது; ம. முத்துக.

*[முது→(முத்து)→முற்று→முற்று–தல்.]*

**முற்று[2]–தல்** *muṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மூண்டெழுதல், பெருகுதல்; to abound, increase. *"முற்றெரிபோற் பொங்கி" (பு.வெ.8:16).* 2. தங்குதல்; to abide, dwell. *"குடகடன் முற்றி" (மதுரைக்.238).* 3. நிறைவேறுதல்; to be fulfilled, as one's desire. *"இமையோர்க் குற்ற குறைமுற்ற" (கம்பரா.கடல்காண்.11).* 4. போலுதல்; to be similar. *"எழுமுற்றுந் தோளார்" (சீவக. 1870).*

*[முற்று[1]–தல்→முற்று[2]–தல்.]*

**முற்று[3]–தல்** *muṟṟu-,* 5 செ.கு.ன்றாவி.(v.t.) 1. செய்து முடித்தல்; to complete, finish. *"வேள்வி முற்றி" (புறநா.15).* 2. அழித்தல்; to destroy, kill. *"முற்றினன் முற்றின னென்று முன்புவந்து" (கம்பரா.கும்பகர்.311).* 3. மேற் கொள்ளுதல்; to get upon. *"களிமுகத் துவாவின் முற்றி" (ஞானா.26).* 4. தேர்ச்சி பெறுதல்; to become expert in. *"புரவிப் போருங் கரப்பறக் கற்று முற்றி" (சீவக.1678).*

*[முற்று[1]–தல்→முற்று[3]–தல்.]*

**முற்று[4]–தல்** *muṟṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. சூழ்தல்; to surround. *"பாண்முற்றுக நின்னாண்மகி ழிருக்கை" (புறநா.29).* 2. கோட்டையைச் சூழ்ந்து பொருதல், வளைத்தல்; to besiege, blockade. *"முற்றிய வகத்தோன் வீழ்ந்த நொச்சியும்"* (தொல்.பொருள்.68). 3. அடைதல்; to approach, reach. *'அணிகிள ரடுக்கன் முற்றிய வெழிலி' (இலக்.வி.754, உரை).*

க. முத்து

*[முறு→முற்று→முற்று–தல்.]*

**முற்று[5]–தல்** *muṟṟu-,*5 செ.கு.வி.(v.i.) 1. சில மரங்கள், காய்கள் மிகுதியான வளர்ச்சி அடைதல்; certain vegetables become over ripe, of coconut, become ripe. *முருங்கைக் காய் முற்றுவதற்கு முன்பே பறித்துவிடு. முற்றிய தேங்காயாகப் பார்த்து வாங்கிவா.* 2. நோய் குணப்படுத்த முடியாத நிலையை அடைதல்; of illness get to an advanced state. *நோயை முற்றவிட்டு விடாதே.* 3. சண்டை முதலியவை உச்சக்கட்ட நிலையை அடைதல்; of issues, problem, etc., get aggravated, reach a critical stage. *அவர்களுக்குள் ஏற்பட்ட வாய்ச்சண்டையானது முற்றிக் கை கலப்பில் முடிந்தது. வேலை நிறுத்தம் செய்யும் அளவுக்கு தொழிலாளர் கோரிக்கை எப்படி முற்றியது?* 4. முடிவுக்கு வருதல், முடிதல்; come to an end, be finished. *கதை இந்த இதழோடு முற்றிற்று. அடுத்த ஆண்டோடு படிப்பு முற்றும்.*

*[முற்று[1]–தல்→முற்று[5]–தல்.]*

முற்று[6] *muṟṟu*, பெ.(n.) 1. முழுமை; perfection, completeness. *"முற்றிலாதானை முற்றனே யென்று மொழியினுங் கொடுப்பாரிலை" (தேவா.648, 9).* 2. முழுமையானது (அக.நி.); that which is complete. 3. முதிர்ச்சி; ripeness, maturity. *"கற்றை யீந்தின் முற்றுக்குலை யன்ன" (நற்.174), "கோடுமுற் றிளந்தகர் பாடுவிறந் தியல" (அகநா.378: 7).* 4. முடிவு (சூடா.); end.

*[முற்று[1]→முற்று[5].]*

முற்று[7] *muṟṟu*, பெ.(n.) வினைமுற்று; finite verb. *"வினையொடு முடியினும் விளம்பிய முற்றே" (நன்.333).*

முற்று[8] *muṟṟu*, பெ.(n.) முற்றுகை பார்க்க; see *muṟṟugai*. *"முற்றியார் முற்று விட" (பு.வெ.6:25).*

*[முறு→முற்று.]*

முற்றுகரம் *muṟṟugaram*, பெ.(n.) முற்றிய லுகரம் (நன்.94, உரை) பார்க்க; see *muṟṟiyal-ugaram*.

எ.டு. அது, இது, எது.

*[முற்று + உகரம்.]*

முற்றுகை *muṟṟugai*, பெ.(n.) 1. கோட்டையைப் பகைவர் படை வளைக்கை; blockade, siege. 2. சூழ்கை; surrounding. 3. நிறைவேறுகை; completion. 4. நெருக்கடி (வின்.); distress, want.

*[முற்று→முற்றுகை.]*

முற்றுச்சொல் *muṟṟu-c-col*, பெ.(n.) வினை முற்றாகிய சொல் (பதம்) (திருமுரு.102, உரை); finite verb. *(எ–டு.) வந்தான்.*

*[முற்று + சொல்.]*

முற்றுணர்வு *muṟṟuṇarvu*, பெ.(n.) எல்லா மறியுந்தன்மை; omniscience. *'முற்றுணர்வி னனாதல்' (சூடா.).*

*[முற்று + உணர்வு.]*

முற்றுத்தொடர் *muṟṟu-t-toḍar*, பெ.(n.) வினை முற்றினை முதலாகக் கொண்டு அமையும் சொற்றொடர்; a complete sentence, as consisting of a finite verb.

மறுவ. வினைமுற்றுத் தொடர். (எ.கா.) வந்தான் கண்ணன் (தெரிநிலைவினை முற்றுத் தொடர்). நல்லன் கண்ணன் (குறிப்பு வினை முற்றுத் தொடர்).

*[முற்று + தொடர்.]*

முற்றுத்தொடர்மொழி *muṟṟu-t-toḍar-moḻi*, பெ.(n.) எழுவாயும் பயனிலையுங் கொண்டு பொருள் முடிவுபெற்று வரும் தொடர் (யாழ்.அக.); a complete sentence, as consisting of a subject and a predicate.

எ.டு. கண்ணன் வந்தான். கந்தன் அழகன்.

*[முற்று + தொடர்மொழி.]*

முற்றுத்தொடை *muṟṟu-t-toḍai*, பெ.(n.) அளவடி நான்குசீர்களிலும் மோனை முதலாயின வரத்தொடுப்பது (இலக்.வி.723, உரை); versification in which *mōṉai* etc., occur in all the feet of an *aḷavaḍi* verse.

*[முற்று + தொடை.]*

முற்றுப்புள்ளி *muṟṟu-p-puḷḷi*, பெ.(n.) 1. பொருள் நிறைவான தொடரின் இறுதியில் இடப்படும் புள்ளி; a punctuation full stop.

2. இறுதி, முடிவு; end. *இந்தச் சிக்கலுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும். படிப்புக்கு முற்றுப்புள்ளி வைக்க முடிவு செய்து விட்டாயா?*

*[முற்று + புள்ளி.]*

**முற்றுப்பெறு-தல்** *murru-p-peru-,* 13 செ.கு.வி.(v.i.) முடிவடைதல்; to be finished. *மக்கட் தொகைக் கணக்கெடுக்கும் பணி முற்றுப்பெற்றுவிட்டது.*

*[முற்று + பெறு-தல்.]*

**முற்றும்[1]** *murrum,* பெ.(n.) 1. முழுதும், முற்றிலும்; wholly, entirely. *"இன்று முற்று முதுகுநோவ" (திவ்.நாய்ச்.2:2). முற்றும் நனைந்தபின் முக்காடு எதற்கு? (பழ.). முற்றும் துறந்த முனிவர்.* 2. எல்லாம் (சூடா.); all.

*[முற்று → முற்றும்.]*

**முற்றும்[2]** *murrum,* வி.அ.(adv.) சுற்றும் என்பதோடு இணைந்து வரும் சொல்; a word which occurs in combination with *šurrum. சுற்றும் முற்றும் நன்றாகப் பார்.*

**முற்றும்மை** *murrummai,* பெ.(n.) பெரும் பான்மையும் எச்சப் பொருளில்லாமல் வரும் உம்மிடைச் சொல்; connective particle. *எல்லாரும் வந்தார் என்பதில் எஞ்சாப் பொருள் தருதலால் முற்றும்மை. "முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்" (நன்.426).*

*[முற்று + உம்மை.]*

**முற்றுமடக்கு** *murru-madakku,* பெ.(n.) ஒரு செய்யுளின் முதலடி முழுதும், பின் மூன்றடியாக மடங்கி வேறுவேறு பொருளைத் தரும் சொல்லணி வகை (தண்டி.சொல்.4, உரை); repetition of the whole of the first line of a stanza, as the second, third and fourth lines, though conveying different meanings.

எ.டு. *பிரம புரத்தவன் பெம்மான் எம்மான்*
*பிரம புரத்தவன் பெம்மான் எம்மான்*
*பிரம புரத்தவன் பெம்மான் எம்மான்*
*பிரம புரத்தவன் பெம்மான் எம்மான்*

*[முற்று + மடக்கு.]*

**முற்றுமுடுகுவெண்பா** *murru-mudugu-venbā,* பெ.(n.) நான்கடியும் முடுக்கு ஓசையாக வரும் வெண்பா (சங்.அக.); a *venbā,* which has a quick flowing rhythm in all the four lines.

*[முற்று + முடுகு + வெண்பா.]*

எ.டு.
*கடலை பயறொடு துவரையெள் அவல்பொரி*
*சுகியன் வடைகனல் கதலியின் அமுதொடு*
*கனியு முதுபல கனிவகை நலமிவை இனிதாகக்*
*கடல்கொள் புவிமுதல் துளிர்வொடு வளமுற*
*அமுது துதிகையில் மனமது களிபெற*
*கருணை யுடனளி திருவருள் மகிழ்வுறநெடிதான*

*(திருப்புகழ்)*

**முற்றுமுணர்தல்** *murrum-unardal,* பெ.(n.) சிவனுடைய எண்குணத் தொன்றாகிய எல்லாம் அறியுந்தன்மை (குறள், 80, உரை); being omniscient, one of *Šivan-en-kunam.*

*[முற்றும் + உணர்தல்.]*

**முற்றுமுதிர்வு[1]** *murru-mudirvu,* பெ.(n.) மதிற்குள்ளிருந்த நொச்சி மன்னனின் முரசம் காலையிலேயே முழங்கக் கேட்ட மதிற்கு வெளியே இருந்த உழிஞை மன்னனின் வெகுளியைக் கூறும் புறத்துறை (பு.வெ.

உழி.23); a theme in puram which shows the fury of the *Uḷiñai* king, who was outside the fortress, when he hears the early morning pealing of drums from the Nocchi king fortress.

*[முற்று + முதிர்வு.]*

**முற்றுமுதிர்வு²** *muṟṟu-mudirvu,* பெ.(n.) இளமையிலேயே கேள்வி, கல்வி அறிவு மிகையாக பெற்று இருக்கை; a person who has youth knowledge of literate question, one who is pedantic at youth. *அவன் முற்றும் முதிர்வு பெற்றவன்.*

*[முற்று + முதிர்வு.]*

**முற்றுமுரண்** *muṟṟu-muraṉ,* பெ.(n.) அளவடியின் சீர்முழுவதும் முரண்வரத் தொடுப்பது (யாப்.வி.48); versification in which *muraṉ* occurs in all the feet of an *aḷavaḍi* verse.

எ.டு. துவர்வாய்த் தீஞ்சொலு முவந்தெனை முனியாது.

*[முற்று + முரண்.]*

**முற்றுமோனை** *muṟṟu-mōṉai,* பெ.(n.) அளவடியின் எல்லாச்சீர்களிலும் மோனை வரப்பாடுவது (யாப்.வி.48); versification in which alteration of the initial letter occurs in all of feet of an aḷavaḍi verse.

*[முற்று + மோனை.]*

எ.டு. *"அயில்வேல் அனுக்கி யம்பலைத் தமர்ந்த".*

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு.

**முற்றுருவகம்** *muṟṟuruvagam,* பெ.(n.) உவமான உவமேயங்கள் முழுவதும் உருவகம் செய்யப்படும் அணி (தண்டி.35:13); complete metaphor; metaphor in which there is similarity in all respects between the objects of comparison.

எ.டு.

*"விழியே களிவண்டு மென்னகையே தாது*
*மொழியே முருகுலாந் தேறல் – பொழிகின்ற*
*தேமருவு கோதைத் தெரிவை திருமுகமே*
*தாமரையென் னுள்ளத் தடத்து"*

தேன் மருவிய கூந்தலை யுடைய தெரிவையின் திருமுகமே தாமரை; விழிகளே களிக்கப் படாநின்ற வண்டு; மெல்லியவாகிய நகையே தாது; மொழியே நறுநாற்ற முலாவுகின்ற மது என்று உவமான உவமேயங்கள் முழுவதும் உருவகம் செய்யப்பட்டதால் முற்றுருவகம்.

*[முற்று + உருவகம்.]*

**முற்றுவமை** *muṟṟuvamai,* பெ.(n.) எல்லா வகையாலும் உவமையும் பொருளும் ஒத்துவர அமைக்கும் உவமை; simile, in which comparison holds good in all respects.

*[முற்று + உவமை.]*

**முற்றுவிடு-த்தல்** *muṟṟu-viḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) முற்றுகையை நீக்குதல்; to cause a siege to be raised. *'முற்றகப்பட்டோனை முற்றுவிடுத்தலு' (தொல்.பொருள்.181, உரை).*

*[முற்று + விடு–த்தல்.]*

**முற்றுவினை** *muṟṟu-viṉai,* பெ.(n.) வினை முற்று; finite verb. *"முற்றுவினைப் பதமொன்றே" (நன்.324). 'அவன் வந்தான்'.*

*[முற்று + வினை.]*

**முற்றுவினைப்பதம்** *murru-vinai-p-padam,* பெ.(n.) வினைமுற்றுச் சொல்; finite verb. *"முற்றுவினைப்பதம் ஒன்றே மூவொன்பானாம்" (நன்.324).*

*[முற்று + வினை + பதம்.]*

நன்னூலார் கருத்துப்படி வினை முற்றுச் சொற்கள் 27. படர்க்கையில் – 5 பால். தன்மையில் ஒருமை, பன்மை–2 பால், முன்னிலையில் ஒருமை பன்மை 2–பால். இவ்வொன்பது பாலினையும் மூன்று காலத்தினும் முரண இருபத்தேழு.

**முற்றுழிஞை** *murruḷiñai,* பெ.(n.) முப்புரங்களை சிவன் அழித்த போது அணிந்திருந்த உழிஞைப் பூமாலையின் சிறப்புரைக்கும் புறத்துறை (பு.வெ.6:8); a theme describing the excellence of the *uḷiñai* garland which *Śivā* wore when He destroyed *tiri-puram.*

*[முற்று + உழிஞை.]*

உழிஞை ஒழுக்கம் இறைவனாலும் மேற்கொள்ளப்பட்ட தெனஅவ்வொழுக்கத்தினைப் பாராட்டுதலே கருத்தாகக் கொள்க.

**முற்றூட்டு**[1] *murrūṭṭu,* பெ.(n.) 1. முழுமையும் நுகர்வுடைய நிலம்; land in the exclusive possession and enjoyment of the owner. *இவ்விடம் எந்தையது முற்றூட்டு (திருக்கோ. 252, உரை).* 2. வரியில்லாநிலம் (சர்வ மானியம்); land given in endowment, free of tax. *'இவ்வரைமா நிலமும் இறையிலி முற்றூட்டாக இந்நாயனார்க்குத் தேவதான மாவதாகவும்' (தெ.இ.கல்.தொ.3:45).* 3. முழுமையும் நுகர்வுடையது; anything which is exclusively enjoyed, as of right. *"அப்புகரை எனக்கு முற்றூட்டாக் கினவன்" (ஈடு,1. 7:3).* 4. புலவர், கணியன், கலைஞர் ஆகிய முத்திறத் தோர்க்கும் இறையிலியாக அளிக்கப் பெறும் நிலம்; tax free land, donated for pandit, astrologer, and artist. *"பூம்புலியூர் நாடகஞ்செய் நாவலன் பெற்ற நிலம்" (முதற் குலோத்துங்கன். தெ.இ.கல். தொ.7, கல்.753).*

*[முற்று + ஊட்டு.]*

அரசியல் வினைஞர், பொருநர் (போர் மறவர்) பொதுநலவூழியர், புலவர், கலைஞர், வணிகர், மறையோர் முதலியோர்க்கும் அறைச்சாலை, மடம், கோயில் முதலியவற்றுக்கும் அளித்த நிலம் நிலக் கொடையாகும். அது முற்றூட்டு, இறையிலி, இறை நிலம், நிலவிறை ஆகிய நால்வகை நிலைமையிலும், நிலம் ஊர் நாடு என்னும் மூவகையளவிலும் கொடுக்கப்பட்டது. ஒருவகை வரியுமில்லாதது முற்றூட்டு அது உறாவரை, காசுகொள்ளா, இறையிலி எனவும் படும். அரசிறை மட்டும் நீங்கியது இறையிலி. இறையிறுக்கும் நிலம் இறைநிலம். நிலத்தில் வரும் இறையை மட்டும் நுகர்வது நிலவிறை (பழ.த.ஆ.பக்.90).

**முற்றூட்டு**[2] *murrūṭṭu,* பெ.(n.) அறுவடை முடிவில் தவசமாகச் செலுத்தும் குத்தகை; lease paid as grains after reaing. *கார், சம்பா, நவிரை ஆகிய பட்டங்களின் முடிவில், குத்தகைக்குரிய நெல்லளவை அவ்வக் காலங்களில் செலுத்துதல். "இந்நிலம் அடைகொண்டோனே, இந்நிலம் உழுது பயிர் ஏற்றி முற்றூட்டும் கொண்டு வந்து திருமுற்றத்து அளப்பதாகவும்" (முதல் இராசேந்திரன்.தெ.கல்.தொ.5, கல்.678).*

**முற்றெச்சம்** *murreccam,* பெ.(n.) எச்சப் பொருளில் வரும் முற்று (நன்.351); finite verb, used participially. *வினைமுற்றே எச்சப் பொருளில் ஆளப்படுவது. "கண்டனன் மகிழ்ந்தனன்"* என்னும் தொடர்

*முற்றெச்சத்தில், "கண்டு மகிழ்ந்தான்" என வருவது.*

*[முற்று + எச்சம்.]*

**முற்றெதுகை** *muṟṟedugai,* பெ.(n.) அளவடியின் எல்லாச்சீர்க் கண்ணும் எதுகைவரத் தொடுப்பது (யாப்.வி.48); rhyming of the second letter in all the feet of an *aḷavaḍi* verse.

எ.டு. தன்னியம் புன்னை யின்னிழல் துன்னிய.

*[முற்று + எதுகை.]*

**முற்றெருத்தின்செவி** *muṟṟeruttiṉ-ševi,* பெ.(n.) எழுத்தாணி போன்ற பூவுள்ள ஒருவகைப் பூண்டு (யாழ்.அக.); style plant, having a style - like flower.

**முற்றை** *muṟṟai,* கு.வி.எ.(adv.) முன்பு; formerly, before. *"முற்றையு முடையமோ மற்றே" (நற்.374).*

ம. முத்த.

*[முன் → முற்றை.]*

**முற்றொண்டை** *muṟṟoṇḍai,* பெ.(n.) முள்ளுள்ள ஒரு வகைப் பூடு; thorny creeper - *Capparis horrida alias c. quadriflora* (சா.அக.).

**முற்றொப்பு** *muṟṟoppu,* பெ.(n.) முழுவதும் ஒத்திருக்கை (சிவசமவா.55); complete resemblance.

*[முற்று + ஒப்பு.]*

**முறக்கன்னன்** *muṟa-k-kaṉṉaṉ,* பெ.(n.) முறம் போன்ற காதுடைய பிள்ளையார் (நாமதீப.27); *Piḷḷaiyār,* as having winnow-like ears.

*[முறம் + கன்னன்.]*

**முறண்டு** *muṟaṇḍu,* பெ.(n.) முரண்டு (யாழ்.அக.) பார்க்க; see *muraṇḍu.*

**முறண்டுகம்** *muṟaṇḍugam,* பெ.(n.) ஒரு வகையான நஞ்சு (அவுபல பாடாணம்) (யாழ்.அக.); a kind of arsenic, a mineral poison.

**முறப்பா** *muṟappā,* பெ.(n.) இஞ்சி முதலியவைக் கூட்டிக் காய்ச்சிய சருக்கரைப் பாகு; a preserve in honey or sugar syrup. *இஞ்சி முறப்பா சாப்பிட பித்தம் போகும் (சா.அக.).*

**முறபம்** *muṟabam,* பெ.(n.) செங்கழுநீர்ப் பூ; a kind of flower, water lily (சா.அக.).

**முறம்** *muṟam,* பெ.(n.) தவசங்களைப் புடைக்கப் பயன்படுங் கருவி; winnow. *"முறஞ்செவியானை" (புறநா.339). "முறஞ் செவி யானைத் தடக்கையில் தடைஇ" (நற்.376:1).* 2. 16வது விண்மீன் (விசாகம்) (சிலப்.3:123, உரை); the 16th naksatra as resembling a winnow. *'முறத்தடி பட்டாலும் முகத்தடி படக்கூடாது' (பழ.).*

மறுவ. சொளகு

க. மொர; ம. முரம்.



**முறமுற-த்தல்** *mur̠a-mur̠a-*,4 செ.கு.வி. (v.i.) 1. தூய்மையாக இருத்தல்; to be neat. 2. முறுமுறுப்பாதல்; to be rough or stiff; to be crisp.

**முறமுறக்க** *mur̠a-mur̠akka,* கு.வி.எ.(adv.) தூய்மையாக (இ.வ.); neatly, cleanly.

[முறமுற → முறமுறக்க.]

**முறமுறப்பு** *mur̠a-mur̠appu,* பெ.(n.) 1. தூய்மை; cleanliness. 2. முறுமுறுப்பு; roughness, stiffness, as of washed cloth; crispness.

[முறமுற → முறமுறப்பு.]

**முறவளைவு** *mur̠a-val̤aivu,* பெ.(n.) கட்டட நிலை, பலகணி முதலியவற்றின் மீது முறம்போல் வளைவாய்க் கட்டும் கட்டட வேலை (C.E.M.); elliptcal arch.

[முறம் + வளைவு.]

**முறளச்சிப்பி** *mur̠al̤a-c-cippi,* பெ.(n.) சிப்பி வகை (வின்.); a kind of shell.

[முரல் + சிப்பி - முரல்சிப்பி → முறளச்சிப்பி.]

**முறாக்கத்தலை** *mur̠ākkattalai,* பெ.(n.) கடல்மீன்வகை (யாழ்ப்.); a sea-fish.

[முறால் + கத்தலை.]

**முறால்** *mur̠āl,* பெ.(n.) கடல்மீன் வகை (யாழ்ப்.); a sea - fish.

**முறி¹-த்தல்** *mur̠i-,*4 செ.குன்றாவி.(v.t.) 1. ஒடித்தல்; to break, as a stick. *"பொருசிலை முறித்த வீரன்" (பாரத. கிருட்டிண.141).* 2. தன்மை மாற்றுதல்; to change the nature of, as milk, medicine. *"ஆசைப்பிணி பறித்தவனை யாவர் முறிப்பவர்" (கம்பரா. அங்கத.18).*

க. முரி

[முறி³-தல் → முறி¹-த்தல்.]

**முறி²-த்தல்** *mur̠i-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கிழித்தல், வெட்டுதல்; to cut. *வேட்டியை இரண்டாக முறி.* 2. நிறுத்திவிடுதல்; to close, to discontinue. *ஏலச்சீட்டை முறித்துவிட்டான்.* 3. நெசவுத் தறியில் உண்டை மறித்தல்; to fold, turn back, as the warp in a loom.

[முறி³-த்தல் → முறி¹-த்தல்.]

**முறி³-தல்** *mur̠i-,* 2 செ.கு.வி.(v.i.) 1. வளைந்து ஒடிதல்; to break, give way, as a branch. *"அச்சு முறிந்ததென் றுந்தீபற" (திருவாச.14: 2).* 2. நிலை கெடுதல்; to be discomfited. *"அரக்க னெடுத்து முறிந்து" (பெரியபு. திருஞா.77).* 3. அழிதல்; to perish, cease to exist. *"வீரமுறிந்த நெஞ்சினர்" (விநாயகபு. 79:66).* 4. தன்மை கெடுதல்; to change in one's nature; to be spoiled. *பால் முறிந்து போயிற்று.* 5. பதந்தப்புதல்; to exceed the proper stage, as in boiling or heating. *நெய் முறியக் காய்ந்ததனாற் கசக்கின்றது.* 6. பயனறுதல்; to become ineffectual, as medicine. *விட முறிய மருந்து சாப்பிட்டான் (வின்.).* 7. குலைதல் (உ.வ.); to fail, as a business concern.

ம. முரிக்; தெ. முரிக்கொனு; க. முரி.

[முரு → முறு → முறி → முறி-தல் (வே.க.).]

**முறி⁴-தல்** *mur̠i-,* 2 செ.கு.வி.(v.i.) 1. தோற்றல்; to be defeated, as an army. 2. அருள்மாறுதல் (இ.வ.); to be ungracious.

[முறி³-தல் → முறி⁴-தல்.]

முறி[5] *muṟi*,பெ.(n.) 1. துண்டு; piece. *"கீண்ட வளையின் முறியொன்று கிடப்ப" (ஞானவா. சிகித்.107).* 2. உடைத்த தேங்காயிற் பாதி; broken half of a coconut. *தேங்காய் முறி.* 3. பாதி; half. 4. துணி; piece of cloth. *"கொள்ளி முறிப் பாதியேது" (அரிச்சந். மயான.41).* 5. முருட்டுத் துணி (G.Tn.D.I, 216); rough cloth.

தெ., க., ம. முறி.

*[முறு→முறி.]*

முறி[6] *muṟi*, பெ.(n.) 1. ஆவணம் (பத்திரம்); deed, written bond. *"மோக வாசை முறியிட்ட பெட்டியை" (தாயு.சிறப்.1).* 2. ஓலையில் எழுதிய பற்றுச்சீட்டு (R.F.); receipt written on a piece of ola.

*[முறு→முறி.]*

முறி[7] *muṟi*, பெ.(n.) 1. தளிர்; sprout, shoot. *"முறிமேனி முத்தம் முறுவல்" (குறள், 1113). "பொரிப்பூம் புன்கி னெழில்தகை யொண்முறி" (நற்.9:5). "கவைமுறி யிழந்த செந்நிலை" (அகநா.33:3). "வாழைப் பூவின் வளைமுறி சிதற" (புறநா.237:11).* 2. கொழுந்திலை; tender leaf. *"இலையே முறியே தளிரே தோடே" (தொல். பொருள். 642).* 3. இலை (யாழ்.அக.); leaf.

*[முல் →முள்→முரு→முறு →முறி(வே.க.).]*

முறி[8]-தல் *muṟi-*, 2செ.கு.வி.(v.i.) 1. துண்டாதல்; break, snap, fracture. *புயலில் மரம் முறிந்து சாய்ந்தது. கை எலும்பு முறிந்து படுக்கையில் இருக்கும்படி ஆகிவிட்டது.* 2. பேச்சுத் தொடர்பு, உறவு தொடராமல் நிற்றல்; அறுபடுதல்; break up. *அவர்களிடையே இருந்த நல்லுறவு முறியக் கரணியம் என்ன?*

*[முறு→முறி →முறி-தல்.]*

முறி[9]-த்தல் *muṟi-*,4 செ.கு.வி.(v.i.) சில்லறை மாற்றுதல்; change the rupees into coins. *ஐந்து ரூபாய்க்கு சில்லறை முறித்துக் கொண்டுவா!*

*[முறு→முறி →முறி-த்தல்.]*

முறி[10] *muṟi*,பெ.(n.) 1. நகர் பகுதி, சேரி (பிங்.); part of a village or town. 2. அறை (நாஞ்.); room. 3. மூலையிடம் (யாழ்.அக.); corner.

*[முறு→முறி.]*

முறி[11] *muṟi*,பெ.(n.) முறிதிரிசூலை (மூ.அ.) பார்க்க; see *muṟi-tiri-šūlai.*

*[முறு→முறி.]*

முறி[12] *muṟi*,பெ.(n.) உயர்ந்த வெண்பொன் (வெண்கலம்) (யாழ்.அக.); alloy of a superior quality, especially bell - metal. *"தழையும் தட்டையும் முறியுந்தந்திவை" (குறுந்.223).*

*[முறு→முறி.]*

முறி[13]-தல் *muṟi-*, 2 செ.கு.வி.(v.i.) துளிர்த்தல்; to sprout. *"முறிந்தகோல முகிழ் முலையார்" (சீவக.2358).*

*[முல் →முள்→ முரு →முறு→முறி→முறி-தல் (வே.க.).]*

முறிக்கட்டி *muṟi-k-kaṭṭi*,பெ.(n.) உயர்ந்த வெண்பொன் (வெண்கலம்) (யாழ்.அக.); bell - metal of superior quality.

*[முறி[12] + கட்டி.]*

முறிக்கலைச்சுருக்கு *muṟi-k-kalai-c-curukku*, பெ.(n.) துறவியின் முக்கோலிற் சுருக்கிக் கட்டிய சிறு துணி (கல்லா.கண.); a piece of cloth usually kept tied to the trident - staff of an ascetic.

*[முறி + கலை + சுருக்கு.]*

முறிகதவு *muṟi-kadavu,* பெ.(n.) மேற்பகுதி தனியாகவும் கீழ்ப்பகுதி தனியாகவும் திறந்து மூடும்படி அமைந்த கதவு (நாஞ்.); half - doors.

*[முறி + கதவு.]*

முறிகரை *muṟi-karai,* பெ.(n.) இடிந்த கரை (யாழ்.அக.); broken bank or dam.

*[முறி + கரை.]*

முறிகிரந்தி *muṟi-kirandi,* பெ.(n.) முரிகிரந்தி (வின்.) பார்க்க; see *muri-kirandi.*

முறிகுளம் *muṟi-kuḷam,* பெ.(n.) 1. கரையுடைந்த குளம் (பிங்.); a tank with a broken bund. 2. வடிகால் நீர் தேங்கும் குளம்; drainage tank. 3. 20வது நாண்மீன் (பூராடம்) (பிங்.); the 20th naksatra.

தெ. முருகு.

*[முறி + குளம்.]*

முறிச்சல் *muṟiccal,* பெ.(n.) 1. முறிகை; breaking. 2. குறைவு; indigence, want. *"எனக்கு இப்போது முறிச்சலா யிருக்கிறது" (வின்.).*

*[முறி →முறிச்சல்.]*

முறிச்சாதனம் *muṟi-c-cādaṉam,* பெ.(n.) முறிச்சீட்டு, 1 (யாழ்.அக.) பார்க்க; see *muṟi-c-ciṭṭu,1 .*

*[முறி + **Skt.**சாதனம்.]*

முறிச்சி *muṟicci,* பெ.(n.) அடிமைப் பெண் (வின்.); female slave.

*[முறியன் (ஆ.பா.)→முறிச்சி (பெ.பா.).]*

முறிச்சீட்டு *muṟi-c-ciṭṭu,* பெ.(n.) 1. உடன்படிக்கைச் சீட்டு (வின்.); written bond or agreement. 2. அடிமையோலை; bond of slavery.

*[முறி + சீட்டு.]*

முறிச்சூலை *muṟi-c-cūlai,* பெ.(n.) ஆண் குறியிலும் மலவாய் (குதம்)க்கு மேலும் அடிக்குடலிலும் ஓடிஓடி குத்தலும் கீழ் வயிற்றில் தொப்புளைச் சுற்றி சுற்றி இழுத்தலுமாகிய இக்குணங்களோடு கூடிய ஒருவகைச் சூலை நோய்; a kind of rheumatism affecting the penis abdomen and the navel causing intense pin prick pain.

மறுவ. முறிதிரிசூலை

*[முறி + சூலை.]*

முறிச்சேலை *muṟi-c-cēlai,* பெ.(n.) 1. நெசவில் உண்டை மறித்த சேலை (இ.வ.); a kind of chequered saree. 2. நேர்த்தியான வெண்ணிறப் புடவை வகை (வின்.); a kind of fine white cloth for women.

*[முறி + சேலை.]*

முறிசாதனம் *muṟi-šādaṉam,* பெ.(n.) 1. முறிச்சீட்டு, 1 பார்க்க; see *muṟi-c-ciṭṭu,*1. 2. முறிச்சீட்டு, 2 பார்க்க; see *muṟi-c-ciṭṭu,* 2.

*[முறி + **Skt.** சாதனம்.]*

முறிசெய்-தல் *muṟi-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) அடிமையாக்குதல்; to enslave. *"ஆண்ட பிரான் குணம்பரவி முறிசெய்து நம்மை" (திருவாச.13:8).*

*[முறி + செய்-தல்.]*

**முறித்தற்கள்ளி** *murittar-kalli,* பெ.(n.) சதுரக்கள்ளி; square spurge - *Euphorbia ant, quorum* (சா.அக.).

**முறித்துவெட்டு-தல்** *murittu-vettu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வாய்க்காலின் நீரைத் தடுத்து வேற்றிடத்திற் பாயும்படி செய்தல்; to divert the water of a channel. *வாய்க்காலை முறித்து வெட்டி முழு நிலத்திற்கும் பாயும்படி செய்தான்.* 2. வாய்க்காலின் வளைவை நேராக்குதல்; to straighten the course of a channel.

*[முறித்து + வெட்டு-தல்.]*

**முறித்தேன்** *muri-t-tēn,* பெ.(n.) தெளிந்த தேன் (யாழ்ப்.); clarified honey.

*[முறி + தேன்.]*

**முறிதிரிசூலை** *muri-tiri-šūlai,* பெ.(n.) 1. சூலை நோய் வகை (வின்.); a disease of the spinal nerves. 2. ஒருவகை வயிற்றுவலி; a kind of rheumatism.

*[முறி + திரிசூலை.]*

**முறிந்தஎலும்புக்கூட்டி** *murinda-elumbu-k-kūtti,* பெ.(n.) முறிந்த எலும்பை மீண்டும் ஒட்ட வைக்கும் ஒரு வகை மருந்து எண்ணெய்; the preparation of an oil which can be applied for fractures burns and rheumatic affections is given above.

*[முறிந்த + எலும்பு + கூட்டி.]*

செருபடை யிலைச் சாறு; தேள் கொடுக்கி; வெண்பூவுள்ள வட்டமான கிலுகிலுப்பை இலை, ஊமத்தன் இலை, துளசி இலை இவற்றின் சாறு, சம எடையுடன் ஆல், அரசு, இச்சி, பாலை மருதோன்றி, முருங்கை கல்லிச்சி மைக் கொன்றை, பொன் முருங்கை இவற்றின் பட்டைகளை இடித்து நீர் விட்டுக் காய்ச்சி இறுத்து மேற்படி சாறுகளுடன் கலந்து இத்துடன் காசுக் கட்டி, களிப்பாக்கு பொடித்துப் போட்டு பிறகு பூதக்கரப்பான் பட்டை நற்சங்கம் வேர்பட்டை இடித்துக் காய்ச்சி முன் குறிப்பிட்டச் சாறுகளுடன் கலந்து விளக் கெண்ணெய் இலுப்பெண்ணெய், புங்கெண்ணெய், நல்லெண்ணெய், வேப் பெண்ணெய் இவைகளைச் சேர்த்து 3 நாள் ஒரு பானையில் வைத்து பிறகு இலவங்கத்தைப் பொடி செய்து போட்டுக் காய்ச்சி திரளும் பதத்தில் வடிகட்டி வெள்ளைத் துணியில் நனைத்துப் போட்டு சுடுநீர் விட்டுறுவ எலும்பு பொருந்தும். முழங்கால் காற்றுபிடிப்பு நோய் (வாதம்), நெருப்புச் சுட்ட புண்ணுக்கும் போட குணமாகும் (சா.அக.).

**முறிப்பட்டையம்** *muri-p-pattaiyam,* பெ. (n.) 1. முறிச்சீட்டு, 1 பார்க்க; see *muri-c-cittu.* 2. முறிச்சீட்டு, 2 (W.G.) பார்க்க; see *muri-c-cittu.*

*[முறி + பட்டையம்.]*

**முறிப்பத்திரம்** *muri-p-pattiram,* பெ.(n.) 1. முறிச்சீட்டு, 2 பார்க்க; see *muri-c-cittu, 2.* 2. ஓலை ஆவணம் (வின்.); ola document.

*[முறி + Skt. பத்திரம்.]*

**முறிப்பு** *murippu,* பெ.(n.) 1. மாற்று மருந்து; antidote. 2. கடுமை; harshness. 3. செருக்கு (கர்வம்); pride. *"முறிப்பான பேசி மலையெடுத்தான்" (தேவா.684, 10).* 4. தோழமை மாறுகை (வின்.); estrangement, breach of friendship. 5. முரிப்பு (யாழ்.அக.) பார்க்க; see *murippu.*

*[முறி → முறிப்பு.]*

**முறிப்பெட்டி** *muri-p-petti,* பெ.(n.) ஆவணம் வைக்கும் பெட்டி (இவ); box for documents.

*[முறி + பெட்டி.]*

**முறிபலகை** *muri-palagai,* பெ.(n.) போர்வை நெய்யும் கருவி; an instrument for weaving carpet.

**முறியடி-த்தல்** *muri-y-adi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒருவரின் கெட்டத் திட்டத்தை தோல்வியடையச் செய்தல், நடக்கவிடாமல் செய்தல்; outman work, to rout, break, crush. *தங்கக் கடத்தல் முயற்சி வெற்றிகரமாக முறியடிக்கப்பட்டது. எதிர்க் கட்சிகளின் பொய்யான செய்தி பரப்பும் வேலையை முறியடிப்போம்.* 2. விரட்டியடித்தல்; beat off; break down. *நாட்டைப் பிரிக்கும் ஆற்றல்கள் முறியடிக்கப்பட்டன. கொள்ளைக் கூட்டத்தை முறியடித்தனர்.* 3. புதிய முயற்சி (சாதனை) செய்து முந்திய முயற்சியை (சாதனையை) பின்னடையச் செய்தல்; break old records. *இந்தப் போட்டித் தொடரில் பல பழைய முயற்சிகள் முறியடிக்கப்பட்டன.*

*[முறி + அடி-த்தல்.]*

**முறியல்** *muriyal,* பெ.(n.) முறிவு (வின்.) பார்க்க; see *murivu.*

*[முறி → முறியல்.]*

**முறியன்** *muriyan,* பெ.(n.) 1. ஆண் அடிமை (வின்.); male slave. 2. பயிரிற்காணும் ஒருவகை நோய்; a disease of crops.

தெ. முரிக்கது; க. முறுவ; ம. முரியன்.

*[முறி → முறியன்.]*

**முறியெழுது-தல்** *muri-y-eludu-,* 5 செ.கு.வி.(v.i.) ஆவணம் எழுதுதல்; to write a bond or document.

*[முறி + எழுது-தல்.]*

**முறியோலை** *muri-y-ōlai,* பெ.(n.) முடங்கின பனையோலை (வின்.); uneven palm - leaf.

*[முறி + ஓலை.]*

**முறிவு**[1] *murivu,* பெ.(n.) 1. மக்கள் குடிக்கும் மருந்து வகைகளுள் ஒன்று; a kind of medicine causing reaction. 2. நஞ்சுக்கு மாற்று மருந்து; antidode (சா.அக.).

மறுவ. முறிமருந்து

*[முறி → முறிவு.]*

**முறிவு**[2] *murivu,* பெ.(n.) 1. எலும்பு உடைகை; bone fracture. *இதற்குக் காரணம் எலும்பு முறிவுதான்.* 2. பேச்சு ஒப்பந்தம், உறவு நீடிக்காமல் போகும் நிலை; break down of negotiations, etc. *இந்தப் பேச்சு ஒப்பந்த முறிவுக்கு யார் கரணியம்?* 3. பிளப்பு (வின்.); breach; rupture. 4. பிணக்கம்; enmity, misunderstanding.

ம. முரிவு

*[முறி→முறிவு.]*

**முறிவுமருந்து** *murivu-marundu,* பெ.(n.) மாற்று மருந்து (M.L.); antidote.

*[முறிவு + மருந்து.]*

**முறிவுரை** *muri-v-urai,* பெ.(n.) மருந்தை முறிக்கும் பொருள்; antagonist medicine (சா.அக.).

**முறிவெட்டியான்** *muri-vettiyān,* பெ.(n.) கடற்காளான் வகை (யாழ்.அக.); a kind of sea - fungus resembling sponge.

**முறுக்கச்சு** *muru-k-kaccu,* பெ.(n.) முறுக்குக்குழல் பார்க்க; see *murukku-k-kulal.*

*[முறுக்கு + அச்சு.]*

**முறுக்கடி–த்தல்** *muṟu-k-kaḍi-,* 4 செ. குன்றாவி. (v.t.) மறுத்தல் (வின்.); to oppose, disobey, as a command.

*[முறுக்கு + அடி–த்தல்.]*

**முறுக்கம்** *muṟukkam,* பெ.(n.) 1. திருகல்; twist. 2. முடுக்கு; pressing hard. 3. கடுமை; rigour.

*[முறுக்கு→முறுக்கம்.]*

**முறுக்கம்பாகம்** *muṟukkam-bāgam,* பெ. (n.) மிகத் தொல்லைப்பட்டுப் புரிந்து கொண்ட பின்பே சுவைக்கும்படியாக செய்யுள் நடை வகை; ; difficult style of composition.

மறுவ. நாரிகேளபாகம் (கம்பரந்.93)

*[முறுக்கு → முறுக்கம் + பாகம்.]*

**முறுக்கரவு** *muṟukkaravu,* பெ.(n.) முறுக்கரா (சங்.அக.); பார்க்க; see *muṟukkarā.*

*[முறுக்கு + அரவு.]*

**முறுக்கரா** *muṟukkarā,* பெ.(n.) பாம்பு வகை (நாமதீப.261); a kind of snake.

*[முறுக்கு + அரா.]*

**முறுக்கல்**[1] *muṟukkal,* பெ.(n.) வளைந்து வளைந்து மடங்குதல், திருப்புதல்; twisting, distorting (சா.அக.).

**முறுக்கல்**[2] *muṟukkal,* பெ.(n.) பொல்லாங்குக் குற்றம்; tort (சா.அக.).

**முறுக்கவரை** *muṟukkavari,* பெ.(n.) வளையம் வளையமாக இருக்கும் அவரை; Goa bean, *Psophocarpus tetra gonolobus.*

*[முறுக்கு + அவரை.]*

**முறுக்கவிழ்–தல்** *muṟukkaviḻ-,* 2 செ.கு.வி. (v.i.) 1. அரும்பு மலர்தல்; bloom as a flower. 2. முறுக்காறு பார்க்க; see *muṟukkāṟu.*

*[முறுக்கு + அவிழ்–தல்.]*

**முறுக்காணி** *muṟukkāṇi,* பெ.(n.) வீணை முதலியவற்றின் நரம்பை முறுக்குங் கருவி (வின்.); peg of stringed musical instruments, as of violin, or veeṇai.

*[முறுகு→முறுக்கு + ஆணி.]*

**முறுக்காற்று–தல்** *muṟukkāṟṟu-,* 5 செ. குன்றாவி.(v.t.) கூடுதலாக முறுக்கிய நூற்புரியை நெகிழ்த்தல் (வின்.); to loosen or unwind what is over - twisted.

*[முறுக்கு + ஆற்று–தல்.]*

**முறுக்காறு–தல்** *muṟu-k-kāṟu-,* 5 செ.கு.வி. (v.i.) கயிற்றின் புரி ஒருநிலைப்பட்டு நேராதல்; to be straightened, smoothed out, as a twisted rope.

*[முறுக்கு + ஆறு–தல்.]*

**முறுக்கான்** *muṟukkāṉ,* பெ.(n.) 1. முறுக்கிய புகையிலை (இ.வ.); tobacco. 2. புகையிலையுடன் போட்டுக் கொள்ளும் வெற்றிலைப் பாக்கு (நாஞ்.); betel leaves chewed with tobacco.

ம. முறுக்கான்

*[முறுக்கு → முறுக்கான்.]*

**முறுக்கி** *muṟukki,* பெ.(n.) முறுக்குங் கருவி; spanner.

*[முறுக்கு→முறுக்கி.]*

**முறுக்கிக்கொள்(ளு)¹–தல்** *muṟukki-k-koḷ-*, 16 செ.கு.வி. (v.i.) 1. கயிறு முதலியன திரித்தல்; to twist, as a rope. 2. திருகுதல்; to wirl. 3. ஒடித்தல்; to break.

*[முறுக்கு + கொள்(ளு)–தல்.]*

**முறுக்கிக்கொள்(ளு)²–தல்** *muṟukki-k-koḷ-*, 13 செ.குன்றாவி.(v.t.) வெற்றிலை யுண்ணுதல்; to chew betel.

*[முறுக்கு + கொள்–தல்.]*

**முறுக்கித்தாபம்** *muṟukki-t-tābam*, பெ.(n.) நரம்புகளை முறுக்கும் ஒரு வகை இசிவு (சன்னி) நோய்; a kind of delirium marked by twitching of the nerves (சா.அக.).

*[முறுக்கு + Skt. தாபம்.]*

**முறுக்கியபால்** *muṟukkiya-pāl*, பெ.(n.) பிழிந்த பால்; squeezed juice or milk (சா.அக.).

*[முறுக்கி + பால்.]*

**முறுக்கிவிடு–தல்** *muṟukki-viḍu-*, 18 செ. குன்றாவி. (v.t.) 1. சுழற்றிவிடுதல்; to spin, as a potter his wheel, to wind, to cause to rotate. *"முறுக்கி விட்ட குயமகன் றிகிரிபோல" (சீவக.786).* 2. திருகிவிடுதல்; to twirl, as the moustache. *மீசையை முறுக்கிவிட்டான்.* 3. தூண்டிவிடுதல் (வின்.); to induce, instigate. 4. பகை யுண்டாக்குதல் (இ.வ.); to create ill-feeling between, to set one against another.

மறுவ. முடுக்கி விடுதல், சீண்டி விடுதல்.

*[முறுக்கு + விடு–தல்.]*

**முறுக்கிழைச்சேலை** *muṟukkiḻai-c-cēlai*, பெ.(n.) முறுக்கு நூலாலான புடவை (வின்.); saree of twisted thread.

*[முறுக்கு + இழை + சேலை.]*

**முறுக்கு¹–தல்** *muṟukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கயிறு, நார் முதலியவற்றைத் திரித்தல்; to twist, as a rope. *"வாய்மடித் திரண்டு கையு முறுக்கி" (கம்பரா.மருத்து.10). "ஐதுணங்கு வல்சி பெய்துமுறுக் குறுத்த" (அகநா.224:12).* 2. முறுக்காணியைத் திருகுதல்; to twirl. 3. மிகைபட முறுக்கி ஒடித்தல்; to break. *"பிடிபடி முறுக்கிய பெருமரப்பூசல்" (அகநா.8).* 4. சுழற்றுதல்; to spin, as a potter his wheel. *"முறுக்கிவிட்ட குயமகன் றிகிரிபோல" (சீவக.786).* 5. வெற்றிலையுண்ணுதல் (நாஞ்.); to chew betel. 6. கை கால்களைப் பிசைந்து தேய்த்தல் (வின்.); to chafe, as the hands and legs. 7. துணி முதலியவற்றைச் சுருளும்படி திரும்புதல்; wring clothes, twist. *முழுக்கால் சட்டையை நன்றாக முறுக்கி பிழிந்து காயப் போடு. மீசையை முறுக்கிக் கொண்டே பேசினார்.* 8. பிறர் தன் அருமை தெரிந்து மதிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிற வகையில் ஒருவகை இறுக்கத்துடன் நடந்து கொள்ளுதல்; get in an affected manner be stiff. *புது மாப்பிள்ளை கொஞ்ச நாள் அப்படித்தான் முறுக்கிக் கொள்வார்!*

தெ. முரகட்டு; க., ம. முருக்கு.

*[முறுகு → முறுக்கு → முறுக்கு–தல்.]*

**முறுக்கு²–தல்** *muṟukku-*, 5 செ.கு.வி.(v.i.) 1. செருக்குதல் (உ.வ.); to be proud, haughty, arrogant. 2. மாறுபடுதல்; to disagree. 3. சினத்தல் (யாழ்.அக.); to be angry.

*[முறுகு → முறுக்கு → முறுக்கு–தல்.]*

முறுக்கு[3] *muṟukku,* பெ.(n.) 1. திரிக்கை; twisting. 2. திருகாணியின் சுற்று (இ.வ.); turn or thread of a screw. 3. மாறுபாடு (வின்.); disagreement, discord, rancour. 4. நூலுருண்டை (இ.வ.); ball of thread.

தெ. முரிகாது; க. முறுகு.

*[முறுகு → முறுக்கு.]*

முறுக்கவரை, முறுக்காணி, முறுக்குமீசை, முறுக்கு வட்டம், முறுக்கு விரியன் முதலிய கூட்டுச் சொற்கள் முறுக்கவியல் பற்றியன.

முறுக்கு[4] *muṟukku,* பெ.(n.) 1. செருக்கு; arrogance, impertinence. 2. மிடுக்கு; stiffness of manners. *வாலிப முறுக்கில் பேசுகிறான். "கிழமாய் நரைத்து முகந்திரைந்து மிந்தமுறுக்கேன்" (தனிப்பா.1, 88 : 173).* 3. இதழ் முறுக்குள்ள அரும்புத் தன்மை; compact, unblown condition of bud. *"முறுக்குடைந் தலர்ந்த மலர்களும்" (காஞ்சிப்பு. திருக்கண்.180).* 4. கடுமை (இலக்.அக.); vehemence. 5. வலிப்பு (இலக்.அக.); convulsion. 6. நெறிப்பு (வின்.); stiffness, as of a person in full dress. 7. முறுக்கப்பட்ட நிலை; twisted state. *முறுக்கு மீசை. முறுக்குக் கயிறு.* 8. உடல் வலிமைக்கு உரிய இறுக்கம்; robustness of body. *வயதாகி விட்டாலும் உடல் முறுக்கு இன்னும் தளரவில்லை.*

*[முறுகு → முறுக்கு.]*

முறுக்கு[5] *muṟukku,* பெ.(n.) ஒரு வகையான வலிப்பு; a kind of twisting pain.

*[முறுகு → முறுக்கு.]*

முறுக்கு[6] *muṟukku,* பெ.(n.) மாவைப் பிசைந்து நெளிவு வரும்படி கையால் சுற்றிப் பொரித்துச் செய்யப்படும் ஒரு தின்பண்டம்; a kind of snack prepared from rice dough twisted by hand to form a ring and fried in oil.

*[முள் → முறு → முறுகு → முறுக்கு: திருகலாகவுள்ள பலகாரம் (மு.தா.).]*

முறுக்குக்கட்டை *muṟukku-k-kaṭṭai,* பெ.(n.) 1. நரம்புகள் முறுக்கேறிய உடம்பு; robutness of body. 2. வலியுள்ள உடம்பு; painful body.

*[முறுக்கு + கட்டை.]*

முறுக்குக்குழல் *muṟukku-k-kuḻal,* பெ.(n.) முறுக்குச் செய்யப் பயன்படும் குழல்; an instrument that helps to squeeze the batter as '*muṟukku*'.

*[முறுக்கு + குழல்.]*

முறுக்குக்கொம்பு *muṟukku-k-kombu,* பெ.(n.) திருகிய கொம்பு (வின்.); twisted horn.

*[முறுக்கு + கொம்பு.]*

முறுக்குக்கொலுசு *muṟukku-k-kolušu,* பெ.(n.) பெண்கள் காலில் அணியும் ஒரு வகை அணிகலன்; twisted form of anklets worn in the ankle.

*[முறுக்கு + கொலுசு.]*

முறுக்குச்சர்ப்பம் *muṟukku-c-carppam,* பெ.(n.) ஒரு வகை நச்சுப் பாம்பு; a poisonous snake.

*[முறுக்கு + Skt. சர்ப்பம்.]*

முறுக்குடை–த்தல் *muṟukkuḍai-,* 4 செ.குன்றாவி.(v.t.) முறுக்குவாங்கு–தல் (வின்.) பார்க்க; see *muṟukku-vāṅgu-.*

*[முறுக்கு + உடை–த்தல்.]*

**முறுக்குத்தட்டை** *muṟukku-t-taṭṭai,* பெ. (n.) முறுக்குப் பிடியின் உள்ளே போட்டுப் பிழிய உதவும் தகடு (கோவை.); an instrument for making twisted cake.

*[முறுக்கு + தட்டை.]*

**முறுக்குத்திருப்பு** *muṟukku-t-tiruppu,* பெ. (n.) 1. சினம்; anger. 2. புறக்கணிப்பது போல் (அலட்சியமாக) உடலை முறுக்கிக் கொண்டு முகமெடுத்துப் பாராது திரும்புகை (இ.வ.); twisting one-self and averting one's face, as in contempt.

*[முறுக்கு + திருப்பு.]*

**முறுக்குத்திருவட்டம்** *muṟukku-t-tiru-vaṭṭam,* பெ. (n.) முறுக்குவட்டம் பார்க்க; see *muṟukku-vaṭṭam.*

*[முறுக்கு + திருவட்டம்.]*

**முறுக்குநூல்** *muṟukku-nūl,* பெ. (n.) இரு இழைகளைச் சேர்த்து முறுக்கி உண்டாக்கிய நூல்; twisted yarn.

*[முறுக்கு + நூல்.]*

**முறுக்குநோய்** *muṟukku-nōy,* பெ. (n.) வயிற்றிலுண்டாகும் ஒரு வகை வலி; griping pain in the stomach.

*[முறுக்கு + நோய். வயிற்றிலுள்ள உறுப்புக்களை முறுக்கி வலியை உண்டாக்கும் நோய்.]*

**முறுக்குப்பண்ணு-தல்** *muṟukku-p-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) செருக்குக் காட்டுதல்; to be stiff in manners, to be haughty.

*[முறுக்கு + பண்ணு-தல்.]*

**முறுக்குப்பணிகாரம்** *muṟukku-p paṇigāram,* பெ. (n.) மாவினால் செய்த தின்பண்ட வகை; a kind of cake, made of flour.

*[முள் → முறு → முறுகு → முறுகல். முறுகு → முறுக்கு = திருகலாகவுள்ள பலகாரம் (மு.தா.). முறுக்கு + பணிகாரம்.]*

**முறுக்குப்புடி** *muṟukku-p-puḍi,* பெ. (n.) முறுக்குக்குழல் பார்க்க; see *muṟukku-k-kuḻal.*

*[முறுக்கு + புடி.]*

**முறுக்குபீன்சு** *muṟukku-pīṉšu,* பெ. (n.) சதுரமான திருகலான அவரை வகை; square bean, tursted bean psophocarpus teragonolobus, a large plant with blue flowers - 6-8 inches long and 1/2 in wide.

*[முறுக்கு + Eng.பீன்சு.]*

**முறுக்கும்கள்ளி** *muṟukkum-kaḷḷi,* பெ. (n.) ஒருவகைச் செடி; a plant - *Pisonia ciculata.*

**முறுக்குமீசை** *muṟukku-mīšai,* பெ. (n.) முறுக்கிவிட்ட மீசை (வின்.); twisted moustache.

*[முறுக்கு + மீசை.]*

**முறுக்குவட்டம்** *muṟukku-vaṭṭam,* பெ. (n.) நூலை முறுக்குங் கருவி; revolving frame for spinning threads.

*[முறுக்கு + வட்டம்.]*

**முறுக்குவலி** *muṟukku-vali,* பெ. (n.) சூலை, கடும் வயிற்று வலி; torminia (சா.அக.).

*[முறுக்கு + வலி. வயிற்றில் ஏற்படும் வலி.]*

முறுக்குவளையல் *muṟukku-vaḷaiyal,* பெ. (n.) வளைவு வளைவாக உள்ள வளையல் வகை; a kind of bangle in twisted form.

*[முறுக்கு + வளையல்.]*



முறுக்குவாங்கு[1]–தல் *muṟukku-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) புரி (முறுக்கை) நெகிழ்த்துதல்; to untwine.

*[முறுக்கு + வாங்கு–தல்.]*

முறுக்குவாங்கு[2]–தல் *muṟukku-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) உடல் கட்டுவிடுதல்; to be weakened in body; loosened body.

*[முறுக்கு + வாங்கு–தல்.]*

முறுக்குவாயு *muṟukku-vāyu,* பெ.(n.) உடலில் வளைந்து வளைந்து சென்று வலியை உண்டாக்கும் ஒருவகை ஊதை நோய்; a disease which causes twisting pain in the body (சா.அக.).

*[முறுக்கு + **Skt.** வாயு.]*

முறுக்குவிடல் *muṟukku-viḍal,* பெ.(n.) எழும்போது கைகால்களை நீட்டி வளைக்கை; the action made while yawning.

மறுவ. சோம்பல் முறித்தல்

*[முறுக்கு + விடல். விடுதல்→விடல்]*

முறுக்குவிரியன் *muṟukku-viriyaṉ,* பெ.(n.) விரியன் பாம்பு வகை; a kind of viper.

*[முறுக்கு + விரியன்.]*

முறுக்கெடு–த்தல் *muṟu-k-keḍu-,* 4 செ. குன்றாவி.(v.t.) முறுக்குவாங்கு[1]–தல் (இ.வ.) பார்க்க; see *muṟukku-vāṅgu-.*

*[முருக்கு + எடு–த்தல்.]*

முறுக்கேற்றல் *muṟu-k-kēṟṟal,* தொ.பெ. (vbl.n.) நரம்பை வலுவுள்ளதாகச் செய்கை; stimulating the nerves (சா.அக.).

*[முறுக்கு + ஏற்றல்.]*

முறுக்கேறல் *mūṟu-k-kēṟal,* தொ.பெ. (vbl.n.) நரம்பு வலுவுடையதாகை; nerves becoming strong (சா.அக.).

*[முறுக்கு + ஏறல்.]*

முறுகல் *muṟugal,* பெ.(n.) 1. தோசை போன்ற சில உணவுப் பொருள்கள் சூட்டால் அடையும் மொரமொரப்புத் தன்மை; the condition of being roasted crisp. *முறுகலான இரண்டு தோசை.* 2. காய்ந்து கரிந்தது; that which is scorched or over-heated. 3. திருகல்; twist. *திருகல் முறுகல். பிரண்டைபோல திருகல் முறுகலானது (உ.வ.).*

*[முறுகு → முறுகல்.]*

முறுகனாற்றம் *muruganāṟṟam,* பெ.(n.) காந்தின (கருகின) மணம் (உ.வ.); smell of being scorched, charred or scalded.

*[முறுகல் + நாற்றம்.]*

**முறுகு[1]–தல்** *murugu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. திருகுதல் (பிங்.); to wriggle, twist. 2. விரைதல்; to accelerate, to hasten. *"முறுகிய விசையிற்றாகி" (சீவக.796).*

ம. முருக்கு

*[முரு→முறு→முறுகு→முறுகு–தல்.]*

**முறுகு[2]–தல்** *murugu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. முதிர்தல்; to ripen, mature. *"கனி முறுகி விண்டென" (சூளா. சீய.7).* 2. மிகுதல்; to increase. *"வேட்கையின் முறுகி யூர்தர" (சீவக.1183).* 3. கடுமையாதல்; to become vehement or intense. *"வெயின் முறுக" (நாலடி, 171).* 4. சுண்டிப் போதல் (கருகிப் போதல்) (உ.வ.); to be scorched or charred, as in frying. 5. செருக்குதல்; to be haughty or insolent, to bluster. *"வரையெடுக்கலுற்று முறுகினான்" (தேவா. 289, 10).*

*[முரு→முறு→முறுகு→முறுகு–தல்.]*

**முறுகு[3]–தல்** *murugu-*, 5 செ.குன்றாவி.(v.t.) மீறுதல் (பிங்.); to violate or infringe, as a right.

ம. முறுகு

*[முரு→முறு→முறுகு→முறுகு–தல்.]*

**முறுகு[4]–தல்** *murugu-*, 5 செ.கு.வி.(v.i.) பாகு சூட்டினால் நீர்த்தன்மை குறைந்து இறுகுதல்; to become thick when over heated of treacle, etc. *சருக்கரைப் பாகு முறுகாமல் பார்த்துக்கொள்!.*

*[முரு→முறு→முறுகு→முறுகு–தல்.]*

**முறுகு[5]** *murugu*, பெ.(n.) திண்மை, வன்மை; firmness, hardness, as the core of tree. *"மீளாதபடி முறுகு கொளுந்துகை" (திருவிருத்.88, வியா.பக்.426). "முறுகினபுரி அறும்" (பழ.).*

*[முரு→முறு→முறுகு.]*

**முறுகுகஞ்சா** *murugu-kañjā*, பெ.(n.) சடைக்கஞ்சா வகை; variety of Bangal hemp.

*[முறுகு + கஞ்சா. கஞ்சா = செடிவகை.]*

**முறுகுகொளுந்து–தல்** *murugu-kolundu-*, 5 செ.கு.வி.(v.i.) வலிமை பெறுதல்; to become firm, to gain strength. *"காதல் முறுகு கொளுந்தினார்க்கும்" (திருவிருத்.97, வியா. பக்.459).*

*[முறுகு + கொளுந்து–தல்.]*

**முருகுசடை** *murugu-šaḍai*, பெ.(n.) சிக்கலுள்ள தலைமயிர்; matted or entangled curls of hair. *முறுகுசடை முடிய வியலாது (வின்.).*

*[முறுகு + சடை.]*

**முறுகுநெய்** *murugu-ney*, பெ.(n.) பதங்கெடக் காய்ந்த நெய்; ghee spoiled by over - heating.

*[முறுகு + நெய்.]*

**முறுகுபதம்** *murugu-badam*, பெ.(n.) மருந்தெண்ணெய்ப்பதம் ஐந்தனுள் அதிகமாகக் காய்ச்சும் பக்குவநிலை (யாழ். அக.); excessive heating, a stage in the preparation of medicinal oils, one of five *marundenney-p-padam.*

*[முறுகு + பதம்.]*

மருந்தெண்ணெய்ப்பதம் ஐந்து: 1) குழம்பு பதம், 2) கடுகு பதம், 3) மந்த பதம், 4) மெழுகு பதம், 5) முறுகுபதம்.

**முறுகுவெல்லம்** *murugu-vellam,* பெ.(n.) பதங்கெடும் வண்ணம் மிகக் காய்ச்சிய வெல்லம்; jaggery spoiled by over - heating.

*[முறுகு + வெல்லம்.]*

**முறுமுறு–த்தல்** *muru-muru-,* 4 செ.கு.வி. (v.i.) முணுமுணுத்தல் (யாழ்.அக.); to murmur, grumble.

மறுவ. முணங்குதல்.

தெ., ம. முருமுரு

**முறுவஞ்சி** *muruvañji,* பெ.(n.) முத்து (மூ.அ.); pearl.

**முறுவல்[1]** *muruval,* பெ.(n.) 1. புன்முறுவல், புன்னகை; smile. *"புதியதோர் முறுவல் பூத்தாள்" (கம்பரா.சூர்ப்ப.5). "முள்ளெயிற்றுத் துவர்வாய் முறுவ லழுங்க" (அகநா.39:3). "சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை" (குறுந். 162 : 4). "குறியா நோக்கமொடு முறுவல் நல்கி" (நற்.44:3).* 2. மகிழ்ச்சி; happiness. *"பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்" (தொல்.பொருள். 111).* 3. பல்; tooth. *"முத்த முறுவல்" (குறள், 1113).*

தெ.முருபு; க. முருவ.

**முறுவல்[2]** *muruval,* பெ.(n.) முறுகல், 1 பார்க்க; see *murugal, 1.*

**முறுவல்[3]** *muruval,* பெ.(n.) இறந்து பட்டதொரு பழைய நாடகத்தமிழ் நூல் (சிலப்.உரைப்பாயிரம், பக்.9); an ancient treatise on dancing, not extant.

**முறுவல்[4]** *muruval,* பெ.(n.) முறுவற்செடி பார்க்க; see *muruvar-cedi.*

**முறுவலித்தல்** *muruvalittal,* தொ.பெ.(vbl.n.) புன்னகை செய்கை; to smile. *'அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலும் என மூன்றென்ப' (தொல்.பொருள்.251, உரை).*

*[முறுவல் → முறுவலி–த்தல்.]*

**முறுவற்செடி** *muruvar-šedi,* பெ.(n.) சுண்டி மரம்; lettuce - tree.

**முறுவிலி** *muruvili,* பெ.(n.) வவ்வாலோட்டி (பாலவா.400); cock's spur.

**முறுவெங்கண்ணனார்** *muru-veṅgaṇṇaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a *Šaṅgam* poet.

இவர் வெங்கண்ணனார் எனவும் அழைக்கப்படுவர். குறிஞ்சித்திணையைப் பாடுவதில் வல்லவர். இவர் பாடியதாக நற்றிணையில் ஒன்றும், அகநானூற்றில் ஒன்றுமாக இரண்டு பாடல்கள் கிடைக்கின்றன.

*சிறுகண் யானைப் பெருங்கை ஈரினம்*
*குளவித் தண்கயங் குழையத் தீண்டிச்*
*சோலை வாழை முணைஇ அயலது*
*வேரல் வேலிச் சிறுகுடி அலறச்*
*செங்கால் பலவின் தீம்பழ மிசையும்*
*மாமலை நாட தாமம் நல்கென*
*வேண்டுதும் வாழிய எந்தை வேங்கை*
*வீயுக விரிந்த முன்றில்*
*கல்கெழு பாக்கத்து அல்கினை செலினே"*
*(நற்.232).*

**முறை[1]–த்தல்** *murai-,* 9 செ.கு.வி.(v.i.) 1. இப்படி இத்தன்மையில் இருக்க வேண்டும் என்ற ஒழுங்கு; பொருத்தமான வரையறையோடு கூடியது; proper manner, propriety, normal course. *ஒருவனுக்கு ஒருத்தி என்ற முறை குமுகாயத்தில்*

*(சமுதாயத்தில்) தொன்று தொட்டு இருந்து வருகிறது. முறையாக இசை கற்றுக் கொள்ள வேண்டும் என்று அவருக்கு நெடுநாளாக ஆசை. புதிய மருத்துவமனை முறைப்படி நாளை தொடக்கப்படும்.* 2. ஒன்று நடைபெறும் தன்மை; way, manner. *பொருளியல் அமைப்பு மாறும்போது வாழ்க்கை முறையும் மாறும். மனதுக்கு ஆறுதல் அளிக்கும் முறையில் அன்புடன் பேசினார்.* 3. இத்தனையாவது எனக்கூறும் வரிசை ஒழுங்கு, தடவை; times. *நகரத்தையே இப்போது தான் முதன் முறையாகப் பார்ப்பது போல் பார்த்தான். எத்தனை முறை படித்தாலும் கொஞ்சம் கூட வெறுப்புத் தட்டாத கதை.* 4. ஒன்றையடுத்து ஒன்று, ஒருவரையடுத்து ஒருவர் என வரையறுத்து அமைக்கும் வரிசை, வரிசையில் ஒன்றின் அல்லது ஒருவரின் தடவை; turn. *வயல்களுக்கு முறை வைத்துத்தான் தண்ணீர் விடப்படும். மருத்துவமனையில் மருத்துவரைப் பார்க்க வரிசையில் தன் முறைக்காகக் காத்திருந்தார்.* 5. இருவருக்கும் இடையில் இப்படிப்பட்டது என்று வரையறுக்கும் உறவு; relationship. *அவர் எனக்கு மாமா முறை.*

*[முறு→முறை→ முறை–த்தல்.]*

**முறை[2]–த்தல்** *murai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நெறித்து நிமிர்தல்; to become stiff, hard. 2. செருக்குறுதல் (உ.வ.); to be stiff-necked, haughty. 3. ஏறவிழித்து நோக்குதல்; to stare.

தெ. முரி; க. முரித்து.

**முறை[3]** *murai,* பெ.(n.) 1. குணம்; deposition. 2. முறைமை; system as in. 3. மருத்துவ முறை; medicine methode. 4. மறத்துப் போகை; becoming stiff (சா.அக.).

*[முறு→முறை.]*

**முறை[4]** *murai,* பெ.(n.) 1. அடைவு; order, manner, plan, arrangement. *"முறை முறை... கழியு மிவ்வுலகத்து" (புறநா.29).* 2. நியமம்; regularity, system, routine. 3. ஆள்மாறி மாறி வேலை செய்யும் நியமம்; turn by which work is done. *"பணிமுறை மாற முந்துவார்" (கம்பரா.ஊர்தேடு. 49).* 4. தடவை; time, as once, twice. *"எழுமுறை யிறைஞ்சி" (சீவக.3052).* 5. ஒரு வரிசையில் ஒருவனுக்கு ஒழுங்குப்படி ஒரு வினை நிகழும் தடவை; turn. *இருமுறை.*

தெ. மொர; க.முரெ; ம.முர.

*[முறு→முறை.]*

**முறை[5]** *murai,* பெ.(n.) 1. பிறப்பு; birth. *"மறுமுறை யமையத்தும்" (பரிபா.11:139).* 2. உறவு; relationship by blood or marriage. *"பொருட்டுமுறை யாதியி னிதற்கிதெனல் பொருளே" (நன்.298). "எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்" (குறுந்.40:12).* 3. உறவுமுறைப்பெயர்; term of relationship. *"பெரியாரையென்று முறைகொண்டு கூறார்" (ஆசாரக்.91).*

*[முறு→முறை.]*

**முறை[6]** *murai,* பெ.(n.) 1. ஒழுக்கம்; manners. *"முறையிலோயைத் தென்புலத் துய்ப்பன்" (கம்பரா.வாலிவதை.117).* 2. செங்கோல் நெறி; justice. *"முறைகோடி மன்னவன் செய்யின்" (குறள், 559).* 3. பழமை; antiquity. 4. ஊழ்; fate. *"ஆருயிர் முறைவழிப் படூஉம்" (புறநா.192).* 5. தன்மை; nature. *"முத்தீப் பேணு முறையெனக் கில்லென" (மணிமே. 22:48).* 6. கற்பு; chastity. *"முகிழ்மயங்கு முல்லை முறைநிகழ்வு காட்ட" (பரிபா.15:39).*

*[முறு→முறை.]*

முறை[7] *murai,* பெ.(n.) 1. நூல்; treatise. *"இளைய பாலகன் முறைவரை வேனென முயல்வது" (கந்தபு.அவைய.1).* 2. கூட்டு (பிங்.); things gathered together.

*[முறு→முறை.]*

முறை[8] *murai,* பெ.(n.) எழுத்திலக்கண வகையில் ஒன்று; a kind of orthography. *நன்னூலாரின் எழுத்திலக்கணத்தில் எண், பெயர், முறை, பிறப்பு, உருவம், மாத்திரை, முதல்நிலை, ஈற்றுநிலை, இடைநிலை, போலி, பதம், புணர்ப்பு என்னும் 12 வகையில் ஒன்று. தமிழில் 'அ'கரம் முதல் 'ன'கரம் ஈறாக எழுத்துக்கள் அமைந்துள்ள முறையினைப் பற்றிப் பேசும் பகுதி (இலக்.கலை.கள.).*

முறைக்கட்டு *murai-k-kaṭṭu,* பெ.(n.) மரபு வழக்கத்திலுள்ள உறவுமுறைப்படி செய்யும் திருமணம் (யாழ்ப்.); marriage between persons of specific relationship, as being in accordance with the caste rules.

*[முறை + கட்டு.]*

முறைக்காய்ச்சல் *murai-k-kāyccal,* பெ.(n.) இடைவிட்டு முறையாக வரும் காய்ச்சல்; intermittent fever. *"முறைக்காய்ச்சற ப்பாதவிடமாய்" (அறப்பளீச். 49).*

*[முறை + காயச்சல்.]*

முறைக்காரன் *murai-k-kāraṉ,* பெ.(n.) முறைகாரன் பார்க்க; see *murai-kāraṉ.*

முறைக்காற்று *murai-k-kāṟṟu,* பெ.(n.) பருவக்காலங்களில் வீசும் பருவக் காற்று (யாழ்ப்.); trade winds; monsoon.

*[முறை + காற்று.]*

முறைகாரன் *murai-kāraṉ,* பெ.(n.) 1. முறைப்படி வேலை பார்ப்போன் (கோயிலொ.78); one employed to attend to a job, by turns. 2. முறைமாப்பிள்ளை (உ.வ.) பார்க்க; see *murai-māppiḷḷai.* 3. கோயில் முதலியவற்றில் வேலை செய்யும் உரிமையுடையவன் (சங்.அக.); one who is entitled to an office, as in a temple.

*[முறை + காரன்.]*

முறைகேடு *murai-kēḍu,* பெ.(n.) 1. நேர்மைத் தவறு; injustice. 2. தகுதியற்ற செயல் (வின்.); unbecoming act. 3. ஒழுங்கின்மை (இ.வ.); irregularity, disorder. 4. கெட்ட நடத்தை (வின்.); depravity, indecency.

*[முறை + கேடு.]*

முறைச்சடங்கு *murai-c-caḍaṅgu,* பெ.(n.) 1. பிராமணர்கள் நோன்பிருந்து நீரில்நின்று மறையோத திருவிதாங்கூர் அரசாங்கத்தார் ஆறு ஆண்டுக்கு ஒருமுறை நாற்பத்தொன்று அல்லது ஐம்பத்தொரு நாள் நடத்தும் ஒரு பெருஞ்சடங்கு; a religious ceremony lasting for 41 or 51 days, celebrated by the Travancore State once in six years, with fasting and recitation of the *vēdas* by Brahmins standing in water. 2. மழை வேண்டி வருணனைக் குறித்துச் செய்யும் தெய்வ வணக்கம்; a prayer invoking *Varuṇa* for rain in times of drought.

*[முறை + சடங்கு.]*

முறைச்சுரம் *murai-c-curam,* பெ.(n.) முறைக்காய்ச்சல் பார்க்க; see *murai-k-kāyccal.*

*[முறை + சுரம்.]*

**முறைசபம்** *murai-šabam*, பெ.(n.) முறைச் சடங்கு பார்க்க; see *murai-c-cadangu.*

[*முறை* + **Skt.** *சபம்.*]

**முறைசாரா** *murai-šārā*, பெ.அ.(adj.) பல்கலைக் கழகத்திலும் பள்ளிக் கூடத்திலும் கற்பிக்கும் முறையிலிருந்து வேறுபட்டது; non-formal. *முறைசாரா கல்விமுறை தமிழ் நாட்டில் நடைமுறைப்படுத்தப்படுகிறது.*

[*முறை + சாரா.*]

**முறைசிறத்தல்** *murai-širattal*, தொ.பெ. (vbl.n.) ஒன்று மற்றொன்றனிற் சிறந்து வருதல், மேம்படுகை; to excel. *"நுவலுங் காலை முறைசிறந் தனவே" (தொல். பொருள்.3).*

[*முறை + சிற-த்தல்.*]

**முறைசெய்-தல்** *murai-šey-*, 1 செ. குன்றாவி.(v.t.) 1. செங்கோல் நெறி (இராச நீதி) அளித்தல்; to do justice. *"முறைசெய்து காப்பாற்று மன்னவன்" (குறள், 388).* 2. தண்டித்தல்; to punish, as the guilty. *"கழுவிலேற்றி முறைசெய்க வென்று கூற" (பெரியபு.திருஞான.853).*

[*முறை + செய்-தல்.*]

**முறைசெய்வோர்** *murai-šeyvōr*, பெ.(n.) கட்டளை நிறைவேற்றும் ஏவலாளர்; executive officers. *"வேந்தன்.... விட்டனன் முறைசெய் வோரை" (திருவாலவா.13:10).*

[*முறை + செய்வோர்.*]

**முறைத்தண்ணீர்** *murai-t-tannīr*, பெ.(n.) முறைநீர் (இ.வ.) பார்க்க; see *murai-nīr.*

[*முறை + தண்ணீர்.*]

**முறைத்து** *muraittu*, வி.எ.(adv.) 1. கடுமையாக; severely, frowningly. *நீ முறைத்துப் பார்க்கிறாய் என்பதற்காக நான் பேசாமல் இருந்து விடுமுடியுமா?* 2. கூர்ந்து, உற்று; intently. *அந்தக் கடையையே ஏன் முறைத்துப் பார்த்துக் கொண்டு நிற்கிறாய்? பட்டிக்காட்டான் இனிப்புக் கடையை முறைத்துப் பார்த்ததுபோல் (பழ.).*

[*முறை→முறைத்து.*]

**முறைத்துக்கொள்ளு-தல்** *muraittu-k-kollu-*, 16 செ.குன்றாவி.(v.t.) பகைத்தல்; make an enemy of some one, antagonize. *நீ எல்லாரையும் முறைத்துக் கொண்டு வாழ முடியாது.*

[*முறைத்து + கொள்-தல்.*]

**முறைத்துப்பார்[1]-த்தல்** *muraittu-p-pār*, 4 செ.குன்றாவி. (v.t.) ஏற விழித்து நோக்குதல்; to stare.

[*முறைத்து + பார்-த்தல்.*]

**முறைத்துப்பார்[2]-த்தல்** *muraittu-p-pār*, 4 செ.கு.வி. (v.i.) 1. குதிரை முதலியன வெகுண்டு நோக்குதல் (வின்.); to stare in bewilderment, as cattle, horses. 2. செருக்குறுதல்; to be stiff-necked, haughty.

[*முறைத்து + பார்-த்தல்.*]

**முறைநிரனிறை** *murai-niranirai*, பெ.(n.) பெயர்களை நிறுத்த முறைக்கேற்ப அவற்றிற்குரிய வினை முதலியவற்றை அடைவே நிறுத்துகை (மாறனலங்.172); arrangement of a series of verbs in the same order as their respective nouns, opp. to *edir-niranirai.*

[*முறை + நிரனிறை.*]

முறைநிலைப்பெயர் *murai-nilai-p-peyar,* பெ.(n.) முறைப்பெயர் (தொல். சொல். 165) பார்க்க; see *murai-p-peyar.*

*[முறை + நிலைப்பெயர்.]*

முறைநீர் *murai-nīr,* பெ.(n.) வயலுக்கு முறைப்படிவிடப்படும் பாய்ச்சல்நீர் (C.G.); water allowed to irrigate fields, in turn or in a regulated manner.

*[முறை + நீர்.]*

முறைப்படு-தல் *murai-p-padu-,*20 செ.கு.வி.(v.i.) 1. அடைவுசெய்தல்; to be in order; to be systematised. *"முறைப்படச் சூழ்ந்து" (குறள்,640).* 2. முறையிடுதல்; to complain. *"அழியச் செய்யா நின்றார்களென்று... முறைப்பட்டால்" (திவ். திருப்பா.11, வியா. பக்.127).*

*[முறை + படு-தல்.]*

முறைப்படுத்து-தல் *murai-p-paduttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வரிசைப்படுத்துதல், ஒழுங்குபடுத்துதல்; to arrange, put in an order. *நடந்த நிகழ்ச்சிகளை முறைப்படுத்தி எழுதிக் கொடுங்கள்.* 2. நெறிமுறைக்கு உட்பட்டதாக்குதல்; systematize, regulate. *தனியார் பொறியியல் கல்லூரிகளில் மாணவர்களைச் சேர்ப்பது இன்னும் முறைப்படுத்தப்படவில்லை.*

*[முறை + படுத்து-தல்.]*

முறைப்பாடு *murai-p-pādu,* பெ.(n.) 1. முறையீடு பார்க்க; see *murai-īdu.* *"பேய்முறைப்பாடு" (தக்கயாகப்.7-ஆம் உறுப்பு).* 2. அரசிறை (கல்.); duty, tax.

தெ. முர.

*[முறைபடு→முறைபாடு.]*

முறைப்பாடுதீர்-த்தல் *muraippādu-īr-,* 4 செ.கு.வி.(v.i.) இருவர் தமக்குள்ள பகையைத் தெய்வத்தின் முன் தீர்த்துக் கொண்டு நட்பாதல் (இ.வ.); to become reconciled to each other and resume friendly relations in the presence of a deity.

*[முறைப்பாடு + தீர்-த்தல்.]*

முறைப்பு *mūraippu,* பெ.(n.) 1. கடுமை நிறைந்த பார்வை; stern look; glower. *தம்பியின் முணுமுணுப்பை ஒரு முறைப்பில் அடக்கினான். உன் முறைப்பை வேறு யாரிடமாவது வைத்துக் கொள் என்று என் அக்கா சொன்னாள்.* 2. வளைது கொடுக்காமல் இருக்கும் தன்மை, விறைப்பு; stiffness, as of a corpse. *முறைப்பு ஏறவில்லை (உ.வ.). உன் முறைப்பு என்னை என்ன செய்யும்.* 3. விலையின் ஏற்றம் (இ.வ.); high price, as of goods. 4. செருக்கு (வின்.); haughtiness, impudence.

தெ., க. முரி; ம. முரை; து.முரெய்.

*[முறை → முறைப்பு.]*

முறைப்பெண் *murai-p-pen,* பெ.(n.) 1. தான் திருமணம் செய்து கொள்வதற்குக் குடும்ப மரபுப்படி தகுதி உள்ள நெருங்கிய உறவுடைய பெண்; a girl on whom a boy has a customary claim to marry. 2. அத்தை அல்லது அம்மான் மகள்; the daughter of a maternal uncle or paternal aunt. *அத்தை மகளும் முறைப்பெண் தான். மாமன் மகளும் முறைப்பெண் தான்.*

*[முறை + பெண்.]*

அத்தை அல்லது அம்மான் மகள்போல் ஒருவனை மணம்புரியும் உறவுமுறையுள்ளவன்.

**முறைப்பெயர்** *mur̤ai-p-peyar,* பெ.(n.) உறவுமுறைகாட்டும் பெயர்ச் சொல் (தொல்.சொல்.138); words indicating akin relationship. *எ.கா. தாய், தந்தை, மகன், மகள், பாட்டி, பாட்டன்.*

*[முறை + பெயர்.]*

**முறைப்பெயர்க்கிளவி** *mur̤ai-p-peyar-k-kiḷavi,* பெ.(n.) முறைப்பெயர் பார்க்க; see *mur̤ai-p-peyar.*

*[முறைப்பெயர் + கிளவி.]*

**முறைபிறழ்வைப்பு** *mur̤ai-pir̤aḻ-vaippu,* பெ.(n.) செய்யுட் குற்றங்களு ளொன்று (யாப்.வி.பக்.525); a defect in poetic composition.

*[முறை + பிறழ் + வைப்பு.]*

**முறைமசக்கு** *mur̤ai-mašakku,* பெ.(n.) கெட்ட நடத்தை; depravity. *'அவன் முறை மசக்காய்த் திரிகிறான்' (வின்.).*

*[முறை + மசக்கு.]*

**முறைமயக்கி** *mur̤ai-mayakki,* பெ.(n.) குப்பைமேனி (மலை.); Indian acalypha.

*[முறை + மயக்கி.]*

**முறைமயக்கு[1]-தல்** *mur̤ai-mayakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஒழுங்கின்மையாக்குதல் (இ.வ.); to put out of order, disarrange.

*[முறை + மயக்கு-தல்.]*

**முறைமயக்கு[2]** *mur̤ai-mayakku,* பெ.(n.) ஒழுங்கின்மை; disorderliness, irregularity.

*[முறை + மயக்கு.]*

**முறைமயங்கி** *mur̤ai-mayaṅgi,* பெ.(n.) முறைமயக்கி (யாழ்ப்.) பார்க்க; see *mur̤ai-mayakki.*

**முறைமாப்பிள்ளை** *mur̤ai-māppiḷḷai,* பெ.(n.) அத்தை அல்லது அம்மான் மகன் போல ஒருத்தியை மணம்புரியும் உறவுமுறை யுள்ளவன்; boy related in a particular manner to a girl and allowed by caste rules to marry her, as the father's sister's son or mother's brother's son.

தான் திருமணம் செய்து கொள்வதற்குக் குடும்ப மரபின்படி தகுதி உள்ள நெருங்கிய உறவுடைய ஆண்.

*[முறை + மாப்பிள்ளை.]*

**முறைமாறு-தல்** *mur̤ai-mār̤u-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ஒழுங்கு தப்பி வருதல்; to fail in propriety or order. 2. முறைப்படி தண்ணீர் பாய்ச்சுதல் (வின்.); to regulate the supply of water for irrigation by turns. 3. குல வழக்கத்திற்கு மாறாக மணம் புரிதல் (இ.வ.); to marry against recognised custom.

*[முறை + மாறு-தல்.]*

**முறைமுதற்கட்டில்** *mur̤ai-mudar̤-kaṭṭil,* பெ.(n.) அரியணை (சிங்காதனம்), அரசுக்கட்டில்; throne. *"மன்பதை காக்கு முறைமுதற் கட்டிலின்" (சிலப்.27 : 134).*

*[முறை + முதற்கட்டில்.]*

**முறைமூலம்** *mur̤ai-mūlam,* பெ.(n.) திப்பிலி நாவல்; a kind of *Nāval* tree.

*[முறை + மூலம்.]*

**முறைமை** *mur̤aimai,* பெ.(n.) 1. அடைவு; order. 2. ஒழுக்கம்; manners, conduct. *"முறைமையின் புகழு மன்றே மறமி"*

*(புறநா.39:10).* **3.** செங்கோல் நெறி (அரச நீதி); justice. *"உணர்கிலை முறைமை நோக்காய்" (கம்பரா.மாயாசன.19).* **4.** உரிமை; right, propriety. *"முறைமை யென்ப தொன்றுண்டு" (கம்பரா. நகர் நீங்கு.5).* **5.** உறவு; relationship by blood or marriage. **6.** ஊழ்; fate. **7.** தன்மை; nature.

*[முறை→முறைமை.]*

**முறையம்பிள்ளை** *muṟaiyam-piḷḷai,* பெ.(n.) முறையாம்பிள்ளை பார்க்க; see *muṟaiyām-piḷḷai. "மோட்டுக்கால் முறையம்பிள்ளை கேட்டால்" (குருகூர்ப்.23).*

*[முறையாம்பிள்ளை → முறையம்பிள்ளை.]*

**முறையாம்பிள்ளை** *muṟaiyām-piḷḷai,* பெ. (n.) ஊர்வேலைக்காரன் (நாஞ்.); a village servant.

*[முறை + ஆம் + பிள்ளை.]*

**முறையிடு[1]–தல்** *muṟai-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) உரியவர்களிடம் சொல்லிக் கவனிக்க வேண்டுதல், குறை தீர்க்க வேண்டுதல்; appeal to the authorities, petition. *குடிநீர் வேண்டி சென்னை நகர மக்கள் அமைச்சரிடம் முறையிட்டுக் கொண்டார்கள். நகராட்சி அதிகாரிகளிடம் பல முறை சொல்லியும், முறையிட்டும் சாலை செப்பனிடப்படவில்லை.*

*[முறை + இடு–தல்.]*

**முறையிடு[2]–தல்** *muṟai-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) குறை சொல்லிக் கொள்ளுதல்; to complain, express grievance. *"சகந்தானறிய முறையிட்டால்" (திருவாச. 21:3).*

தெ., ம. மொரயிடு; க. மொரெயிடு.

*[முறை + இடு–தல்.]*

**முறையிலார்** *muṟai-y-ilār,* பெ.(n.) கீழ் மக்கள் (சூடா.); base people, inferior people.

*[முறை + இலார். முறையான வாழ்வு வாழாத மக்கள்.]*

**முறையின்வைப்பு** *muṟaiyiṉ-vaippu,* பெ. (n.) நன்னூலார் கூறும் நூலின் அழகு பத்தினுள் ஒன்றாகிய எடுத்துக் கொண்ட பொருள்களை வரிசைப்படி வைப்பது; logical order in the treatment of a subject, systematic treatment, one of ten *nūl-aḻagu.*

*"சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்*
*நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்*
*ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்*
*முறையின் வைப்பே யுலகமலை யாமை*
*விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த*
*தாகுத னூலிற் கழகெனும் பத்தே" (நன்.13).*

*[முறை→முறையின் + வைப்பு.]*

**முறையீடு** *muṟai-y-īḍu,* பெ.(n.) குறை தீர்க்கக் கோரிக்கை; appeal, petition, prayer. *ஒழுங்கு முறை விற்பனைக் கடைகளில் பொருள் விற்பனை குறித்து மக்களுடைய முறையீட்டைக் கேட்டறிந்தார் அதிகாரி.*

*[முறையிடு → முறையீடு.]*

**முறையுடையரசன்** *muṟai-y-uḍai-y-arašaṉ,* பெ.(n.) செங்கோல்நெறி தவறாத அரசன்; a king who rules his country in a moral path and perform good deeds to his subjects. *"தொய்யில் காப்போர் அறிதலும் அறியார் முறையுடையரசன் செங்கோல் அவைய" (குறுந்.276:5).*

*[முறையுடை + அரசன்.]*

**முறையுளி** *muṟai-y-uḷi,* கு.வி.எ.(adv.) நியமப்படி; according to order. *"மூவகை யியக்கமு முறையுளி கழிப்பி" (சிலப்.8:42).*

*[முறை + உளி.]*

**முறையூர்** *muṟai-y-ūr,* பெ.(n.) சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டத்தில் பாலாற்றின் தென்கரையிலுள்ள ஊர்; a village in *Śivagaṅgai* district in *Tiruppattūr* Taluk, situated on the banks of *Pālāṟu.*

*[முறை + ஊர்..]*

மக்கள் தங்களுடைய வழக்குகளைத் தெரிவித்து முறை வேண்டி வந்தவர்கட்கு இந்த ஊர்ப்பெரியவர்கள் முறையாகவும், நேர்மையாகவும், நடுவுநிலை தவறாமலும் அறங்கூறியதால் இவ்வூர் முறையூர் எனப்பட்டிருக்கலாம்.

**முறையே** *muṟaiyē,* வி.அ.(adv.) சொல்லப்பட்டிருக்கும் வரிசையில் தனித் தனியாக; respectively. *குற்றம் செய்தவருக்கும் குற்றம் செய்யத் தூண்டியவருக்கும் முறையே ஐந்தாண்டு, மூன்றாண்டுக் கடுங்காவல் தண்டனை தரப்பட்டது.*

*[முறை → முறையே.]*

**முறையோர்** *muṟaiyōr,* பெ.(n.) முறைசெய்வோர் பார்க்க; see *muṟai-šeyvōr. "மன்னவன் முறையோர்தம்மை முன்விடுப்ப" (திருவாலவா.37:60).*

*[முறை → முறையோர்.]*

**முறைவன்** *muṟaivaṉ,* பெ.(n.) 1. சிவன்; *Śivā. "நான்மறை முக்கண் முறைவனுக்கே" (பதினொ.பொன்வண்.52).* 2. ஓட்டுநர்; driver. 3. நடத்துநர்; conductor. 4. யானைப் பாகன்; mahout of an elephant. *"மேலியன் முறைவர் நூலிய லோசை" (பெருங்.உஞ்சைக்.44:79).*

*[முறை → முறைவன்.]*

**முறைவாசல்** *muṟai-vāšal,* பெ.(n.) பல குடித்தனங்கள் இருக்கிற ஒரு வீட்டில் வாசல் தெளித்துக் கூட்டும் வேலையைக் குறிப்பிட்ட நாளைக்குக் குறிப்பிட்ட குடித்தனக்காரர் செய்ய வேண்டும் என்று தங்களுக்குள் பிரித்துக் கொள்ளும் முறை; the turn duty of each resident to keep the front -yard clean.

*[முறை + வாசல்.]*

**முன்[1]** *muṉ,*கு.பெ.எ.(adj.) & கு.வி.எ.(adv.) 1. இடத்தைக் குறித்து வருகையில் முகத்தை நோக்கி இருப்பது; இடத்தால் முன்னாவது; in front of someone. *"என்னை முன்நில்லன் மின்தெவ்விர்" (குறள், 771). "முன்னே கடிவாளம் மூன்றுபேர் தொட்டிழுக்க" (தனிப்பா.) "மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும்" (தொல். எழுத்து.28). புத்தகம் உனக்கு முன்தானே இருக்கிறது. பேருந்து திடீரென்று நின்றதால் முன் இருக்கையில் தலை மோதியது. யானைமுன் கால் (பிங்.).* 2. காலத்தால் முன்னாவது (நன்.123, உரை); previous prior. *"முற்றுற்றுந் துற்றினை" (நாலடி, 190). "உடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன்" (அகநா.1:18). "பின்தூங்கி முன்னெழூஉம் பேதையே" (தனிப்பா.). "யானைவரும் பின்னே மணியோசை வரும் முன்னே" (பழ.).* 3. முன்னால்; forward. *காலை முன்வைத்தவன் திடுக்கிட்டு நின்றான்.* 4. காலத்தை குறித்து வருகையில், குறிப்பிட்டதற்கு முதலில் அமைவது அல்லது வந்தது; of time before; first part, etc. *ஐந்து*

*ஆண்டுகட்கு முன் நடந்த நிகழ்ச்சி.* 5. வெளிப்புறம் அமைவது; பயன்பாட்டில் முதன்மையாக அமைவது; front side, part, etc. *கதவின் முன்பக்கத்தைத் துடை.*

தெ. முனு; க. மு.

*[முல்→ முன். முல் = முன்மை (கருத்து).]*

**முன்²** *muṉ,*பெ.(n.) 1. பழமை (சூடா.); antiquity. *"கற்றோன்றி மண்றோன்றாக் காலத்தே வாளோடு முன்றோன்றி மூத்தகுடி" (பு.வெ.2:15).* 2. முதல் (பிங்.); that which is first or chief. 3. உயர்ச்சி (திவா.); eminence. 4. முன்றோன்றல் பார்க்க; see *muṉṟōṉṟal. "அறுமுகேசன் முன்" (திருவாலவா. காப்பு, 2).*

*[முல்→ முன். முல் = முன்மை.]*

**முன்³** *muṉ,*இடை. (part.) ஏழனுருபுள் ஒன்று (நன்.302); sign of the locative.

**முன்⁴** *muṉ,* பெ.(n.) 1. மனக்குறிப்பு; meaning, idea. *"முன்னுற வுணர்தல்" (தொல். பொருள்.127).* 2. பக்கம்; side. 3. உப்பு; salt.

க. முந்நு

*[முன்னு→முன்.]*

**முன்கட்டு** *muṉ-kaṭṭu,* பெ.(n.) 1. வீட்டின் முற்பகுதி; front apartments of a house (lobby). 2. கைகளை முன்னாக வைத்துக் கட்டுகை; pinioning the hands in front.

*[முன் + கட்டு.]*

பின்கட்டுக்கு எதிர்ச்சொல்.

**முன்கடை** *muṉ-kaḍai,*பெ.(n.) வீட்டுவாயில்; vestibule. *"தேரெம் முன்கடை நிற்க" (ஐங்குறு.5).*

தெ. முந்கட

*[முன் + கடை.]*

**முன்கலந்தவிருட்சத்தி** *muṉ-kalanda-viruṭšatti,*பெ.(n.) வில்வம்; a sacred tree-Bael tree-*Aegle marmelos* (சா.அக.).

**முன்கழுத்துக்கழலை** *muṉ-kaḻuttu-k kaḻalai,*பெ.(n.) கழுத்திலுள்ள (தைராய்டு) சுரப்பி வீங்குவதால் ஏற்படும் நோய்; goitre.

*[முன் + கழுத்து + கழலை.]*



**முன்கால்** *muṉ-kāl,* பெ.(n.) முன்னங்கால் பார்க்க; see *muṉṉaṅgāl.*

*[முன் + கால்.]*

**முன்குடுமி** *muṉ-kuḍumi,* பெ.(n.) தலையின் முன்பக்கமாக வைத்துக் கொள்ளுங் குடுமி; tuft of hair in front. *"சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா" (தனிப்பா.1, 29:54). "சோழியன் குடுமி சும்மா ஆடுமா?" (பழ.).*

*[முன் + குடுமி.]*

**முன்கூட்டியே** *muṉ-kūṭṭiyē,* வி.அ.(adv.) 1. முன்பே; in advance. *பணம் வேண்டும் என்று முன் கூட்டியே சொல்லக்கூடாதா?* 2. ஏற்கெனவே, முன்னரே; early, already. *அவர் யார் என்பது முன்கூட்டியே உனக்குத் தெரியுமா?*

*[முன் + கூட்டியே.]*

**முன்கை** *mun-kai,* பெ.(n.) 1. கையின் முன்பகுதி, முன்னங்கை; forearm. *"முன்கை யிறை யிறவா நின்ற வளை" (குறள், 1157). "யரம்பபோ ழவ்வளைப் பொலிந்த முன்கை" (அகநா.6:2). "அரிமயிர்த் திரண்முன்கை" (புறநா.11:1). "வளையணி முன்கை நின் இகுளைக்கு உணர்த்தென" (நற்.71:2). "தொகு வளை முன்கை மடந்தையொடு நட்பே" (குறுந்.15:6).* . 2. கை; hand. *"முன்கை நீண்டால் முழங்கை நீளும்" (பழ.).*

க. முந்கை.

*[முன் + கை.]*

**முன்கைவாதம்** *munkai-vādam,* பெ.(n.) முன்னங்கை இரண்டோடு முகமும் வீங்கி வலிக்கும் ஒரு வகையான காற்றுப் பிடிப்பு நோய்; a kind of rheumatism affecting the fore arms (சா.அக.).

*[முன்கை + **Skt.**வாதம்.]*

**முன்கொம்பு** *mun-kombu,* பெ.(n.) 1. விலங்கின் முன்வளைந்த கொம்பு (வின்.); horn bent forwards. 2. பல்லக்கு முதலியவற்றின் முன்தண்டு; front pole, as of palanquin.

*[முன் + கொம்பு.]*

**முன்கோபம்** *mun-kōbam,* பெ.(n.) முழுக்கத் தெரிந்து கொள்ளும் முன்பே தோன்றும் சினம்; short temper. *தன்னுடைய முன்கோபத்தினால் பல நல்ல வேலைகளை இழந்திருக்கிறார். முன் கோபம் பின்னிரக்கம்.*

*[முன் + **Skt.** கோபம்.]*

**முன்கோபி** *mun-kōbi,* பெ.(n.) விரைவில் சினங்கொள்ளக்கூடியவர்; person with a short temper. *முன் கோபியைக் கண்டால் மூன்றடி தள்ளியே நின்று பேசுதல் நலம்.*

*[முன் + **Skt.** கோபி.]*

**முன்கோலம்** *mun-kōlam,* பெ.(n.) நிலப் பனை; ground palm - *Curculigo orchioides* (சா.அக.).

**முன்சிகை** *mun-šigai,* பெ.(n.) முன்குடுமி பார்க்க; see *mun-kuḍumi.*

**முன்சொல்** *mun-šol,* பெ.(n.) பழமொழி (பிங்.);. old saying, proverb.

மறுவ. சொலவடை, முதுமொழி.

*[முன் + சொல்.]*

**முன்தட்டு** *mun-taṭṭu,* பெ.(n.) மரக்கலத்தின் முகப்புத் தட்டு; deck across the bow of a vessel.

*[முன் + தட்டு.]*

**முன்தள்ளு-தல்** *mun-taḷḷu-,* 5 செ.கு.வி. (v.i) ஒரு வரிசையில் இருந்து, முன் பக்கமாக நீண்டிருத்தல், துருத்துதல், வெளியே தள்ளி அமைதல்; stick out, project. *அவளுக்குச் சற்று முன்தள்ளிய பல். தெருவில் முன் தள்ளியிருக்கிற வீடுதான் அவருடைய வீடு.*

*[முன் + தள்ளு-தல்.]*

**முன்தானை** *mun-tāṉai,* பெ.(n.) முன்றானை பார்க்க; see *munrāṉai.*

*[முல்→ முன் + தானை. தானை = ஆடை.]*

**முன்தேர்க்குரவை** *mun-tēr-k-kuravai,* பெ.(n.) முன்றேர்க்குரவை பார்க்க; see *munrēr-k-kuravai.*

**முன்தொடரி** *mun-todari,* பெ.(n.) ஒரு வகைத் தொடரிப் பூண்டு; a thorny shrub.

**முன்நிறுத்து-தல்** *mun-niruttu-,*5 செ.கு.வி. (v.i.) ஒருவரை அல்லது ஒரு கருத்தை அல்லது ஒரு செய்தியை முதன்மைப்படுத்துதல், முதன்மை அளித்தல்; bring to the fore, project some one, keep something in focus. *மக்களுக்கு நன்றாக தெரிந்த ஒரு தலைவரை முன்நிறுத்தி செய்தி பரப்பும் பணியைச் செய்தால் தேர்தலில் வெற்றி பெறலாம். மக்களின் நிலையை முன் நிறுத்திப் பார்க்கையில் இதுபோன்ற திருவிழாக்கள் பயனற்றது.*

*[முன் + நிறுத்து-தல்.]*

**முன்நேரம்** *mun-nēram,* பெ.(n.) 1. ஒரு குறிப்பிட்ட நேரத்திற்கு முன்னமேயே உள்ள நேரம்; the time before the particular time. *தேர்வுக்கு முன்நேரத்திலேயே சென்றுவிடு.* 2. விடியற்காலை; early morning. *காலை முன்நேரமாக எழுதல் உடலுக்கு நலம்.* 3. கடந்த நாழிகை அல்லது மணித் துளிகளைக் கூறுவது; past minute or time. *"முன் நேரம் கப்பற்காரன். பின் நேரம் பிச்சைக்காரன்" (பழ.).*

*[முன் + நேரம்.]*

**முன்பகை** *mun-pagai,*பெ.(n.) இருவரிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டுச் சில நாட்கள் (அ) மாதங்கள் (அ) ஆண்டுகள் கழிந்தும் மனத்தாங்கல் உள்ள நிலை; enmity. *"முன்பகை செய்தால் பின் பகை விளையும்". "அவர்கள் இருவரும் முன்பகை கரணியமாக பேசுவதில்லை" (பழ.).*

*[முன் + பகை.]*

**முன்பணம்** *mun-panam,* பெ.(n.) 1. முன்கூட்டியே வைப்புத் தொகையாகப் பெறப்படும் பணம்; caution deposit. *அந்த நூலகத்தில் சேர ஐம்பது ரூபாய் முன்பணம் கட்ட வேண்டும். வங்கியில் இந்த வேலைக்குப் பத்தாயிரம் ரூபாய் முன்பணம் செலுத்த வேண்டும்.* 2. கூலியாக உள்ள தொகையில் முன் கூட்டியே தரப்படும் பணம்; advance payemnt. *வேலையாள் முன்பணம் வாங்கிக் கொண்டு போனார்.* 3. ஒரு பொருளை வாங்குவதற்கு அடையாளமாக முன்னே கொடுக்கும் சிறுதொகை, முன்னீட்டுத் தொகை; advance, earnest.

*[முன் + பணம்.]*

**முன்பதிவுசெய்-தல்** *munpadivu-šey-,* 1 செ.கு.வி. (v.i.) திரையரங்கம், தொடர் வண்டி நிலையம் முதலியவற்றில் முன்கூட்டியே இருக்கைகளைப் பதிவு செய்தல்; reserve seats, etc. in a cinema, train, etc. *நான் நாளை தொடர்வண்டி மூலமாக மதுரை செல்ல நேற்றே முன் பதிவு செய்துவிட்டேன்.*

*[முன் + பதிவு + செய்-தல்.]*

**முன்பன்** *munban,* பெ.(n.) 1. வலிமை யுடையவன்; powerful man. *"செருச்செய் முன்ப" (புறநா.41).* 2. தலைவன்; leader; master. *"முன்பனை முன்பு நோக்கி" (கம்பரா.நாகபாச.90).* 3. ஏலச்சீட்டு நடத்துபவன் (நாஞ்.); conductor of a chit-fund. 4. நிலம் வாங்கி வீடுகள் விற்க முதலீடு செய்து செயற்படுபவன்; promoter.

*[முன்பு→முன்பன்.]*

**முன்பனி** *mun-pani,* பெ.(n.) பருவகாலங்கள் ஆறனுள் இரவின் முற்பகுதியிற் பனி மிகுதியுடைய சிலை (மார்கழி), சுறவம் (தை)

மாதங்கள் (தொல்.பொருள்.10, உரை) (பிங்.); the months of *Mārkaḻi* and Tai, being the season in which dew falls during the early part of the night, one of six *paruvam*. *"முளரி கரியும் முன்பனிப் பானாட்"* (அகநா.163:8). *"பின்பனி அமையம் வருமென முன்பனி"* (நற்.224:2).

*[முன் + பனி]*

**முன்பால்** *muṉ-pāl,* கு.வி.எ.(adv.) முன்னாக; in front. *'அகத்தியன் முன்பாலிட்ட சாபம்' (சிலப்.3:2, உரை).*

*[முன்பு→முன்பால்]*

**முன்பாலைநாடு** *muṉ-pālai-nāḍu,* பெ.(n.) கடல் கோளால் அழிந்ததாகக் கருதப்படும் தமிழ் நாட்டுப் பகுதி; a division of the Tamil country, supposed to have been submerged in a deluge. *'ஏழ் முன்பாலை நாடும்' (சிலப்.8:2, உரை).*

*[முன் + பாலை + நாடு]*

**முன்பில்** *muṉpil,* கு.பெ.எ.(adj.) & கு.வி.எ. (adv.) முன்[1] பார்க்க; see *muṉ*[1]. *'முன்பிற் காதையில்' (சிலப்.7:1, அரும்.).*

*[முன்பு→முன்பில்]*

**முன்பிலாண்டு** *muṉpil-āṇḍu,* பெ.(n.) முன் சென்ற ஆண்டு, கடந்த ஆண்டு; previous year. *'முன்பிலாண்டை ஒழுகினபடி' (தெ.இ.க.தொ.i, 129).*

*[முன்பில் + ஆண்டு]*

**முன்பிற்படி** *muṉpiṟ-paḍi,* கு.வி.எ.(adv.) முன்போல; as before. *'முன்பிற் படியே....... செம்பாலையு மாயின' (சிலப்.3:86–9, உரை).*

*[முன்பில் + படி]*

**முன்பிறந்தாள்** *muṉ-piṟandāḷ,* பெ.(n.) 1. அக்கை, அக்காள் (திவா.); elder sister. 2. மூதேவி (பிங்.); goddess of misfortune.

*[முன் + பிறந்தாள்]*

**முன்பிறந்தான்** *muṉ-piṟandāṉ,* பெ.(n.) அண்ணன், தமையன்; elder brother.

*[முன் + பிறந்தான்]*

**முன்பின்**[1] *muṉ-piṉ,* கு.வி.எ.(adv.) 1. முந்தியும் பிந்தியும்; before and after, before and behind. 2. முன்பழக்கம், அறிமுகம்; familiar. *முன்பின் அறியாமல் ஒருவனுடன் சேராதே. முன்பின் விசாரித்துச் செய்.*

*[முன் + பின்]*

**முன்பின்**[2] *muṉ-piṉ,* பெ.(n.) வலிமை; strength. *"அடுபுலி முன்பின் தொடுகழல் மறவர்" (அகநா.75:6). "ஆனிற் பரக்கும் யானைய முன்பின்"* (புறநா.5:2). *"கடாஅஞ் செருக்கிய கடுஞ்சின முன்பின்" (நற்.103:3).*

*[முன் + பின்]*

**முன்பின்தெரியாத** *muṉpiṉ-teriyāda,* பெ.எ. (adj.) பழக்கம் இல்லாத; அறிமுகம் இல்லாத; unfamiliar, unknown, strange. *முன்பின் தெரியாத ஊரில் சரியான முகவரி இல்லாமல் நண்பனின் வீட்டை எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? முன்பின் தெரியாத ஆட்களிடம் மனம்விட்டுப் பேசக்கூடாது.*

*[முன் + பின் + தெரியாத]*

**முன்பின்நினைத்துப்பார்க்காமல்** *muṉpiṉ-niṉaittu-p-pārkkāmal,* கு.வி.எ.(adv.) விளைவுகளை எண்ணிப் பார்க்காமல்; thoughtlessly; without fore thought.

*முன்பின் நினைத்துப் பார்க்காமல் ஒரு செயலில் இறங்கிவிடாதே.*

*[முன் + பின் + நினைத்து + பார்க்காமல்.]*

முன்பின்பார்–த்தல் *munpin-pār-*,4 செ. குன்றாவி.(v.t.) நன்கு ஆராய்ந்து முடிவு செய்தல்; to consider carefully, as looking about; to weigh the pros and cons.

*[முன்பின் + பார்–த்தல்]*

முன்பு[1] *munbu*,பெ.(n.) 1. முற்காலம்; former time, ancient time. 2. முன்னிடம்; front. *"தோட்டியான் முன்பு துரந்து சமந்தாங்கவும்" (புறநா.14).* 3. பழமை (வின்.); antiquity.

தெ. முநுபு; க. முந்து; ம. மும்பு.

*[முன் → முன்பு]*

முன்பு[2] *munbu*,பெ.(n.) 1. உடல்வலிமை; physical strength. *"முன்பாலுடல் சினஞ்செருக்கி" (குறிஞ்சிப்.159). "முளிசினை பிளக்கு முன்பின் மையின்" (குறுந்.388:5).* 2. பெருமை; greatness.

*[முன் → முன்பு]*

முன்பு[3] *munbu*,கு.வி.எ.(adv.) 1. முன்னாக; before; infront of. *"தலையில் வணங்கவுமாங் கொலோ தையலார் முன்பே" (திவ்.திருவாய்.5. 3:7).* 2. முன்காலத்தில்; formerly. *"முன்புநின் றம்பி வந்து சரண்புக" (கம்பரா.வாலிவதை.117).*

*[முன் → முன்பு]*

முன்புத்தை *mun-puttai,* கு.வி.எ.(adv.) முன்பு[3] (திவ்.திருவாய்.1, 4, 2, பள்ளி.) பார்க்க; see *munbu*[3].

முன்புருவம் *mun-puruvam,* பெ.(n.) அடிக்கை எலும்பின் முனைப்பாகம் (வின்.); anterior bicipital ridge.

*[முன் + புருவம்]*

முன்புள்ளார் *munbuḷḷār,* பெ.(n.) மூதாதை; the ancients; forefathers, predecessors; ancestors. *"முன்புள்ளார்... என்பார்கள்" (திருவிருத். 34, வியா.பக்.206).*

*[முன்பு + உள்ளார்]*

முன்புற்றை *munpuṟṟai,* கு.வி.எ.(adv.) முன்பு[3] பார்க்க; see *munbu*[3]. *"முன்புற்றையிற் காட்டில்" (ஈடு, 7. 9:4).*

முன்மடி *mun-maḍi,* பெ.(n.) ஆடையின் மடியிற் செய்து கொள்ளும் பை (வின்.); tuck or fold in the cloth serving the purpose of a bag or receptacle.

து. முந்மடி.

*[முன் + மடி]*

முன்மணி[1] *mun-maṇi,* பெ.(n.) ஒரு மணிமாலையில் சேர்க்கப்பட்டு இருக்கும் மணிகளுக்கு எல்லாம் முதலாவதாகச் சேர்க்கப்பட்டு இருக்கும் மணி; first bead string in a garland of bead.

*[முன் + மணி]*

முன்மணி[2] *mun-maṇi*,பெ.(n.) கொட்டை கரந்தை; a plant, Indian globe thistle - *Sphaer anthus hirtus.*

முன்மற–த்தல் *mun-maṟa-*,3 செ.கு.வி.(v.i.) கடுமை (உக்கிரம்) கொள்ளுதல் (வின்.); to grow vehement; to burst into a passion.

*[முன்மறம் →முன்மற–த்தல்]*

**முன்மறம்** *mun-maram,* பெ.(n.) முன்கோபம் பார்க்க; see *mun-kōbam.* *"முன்மறத்திலே சொல்லாதே" (வின்.).*

**முன்மாதிரி** *mun-mādiri,* பெ.(n.) 1. கட்டுமானத்திற்கு அடிப்படையாக முதலில் எடுத்துக் கொள்ளப்படுவது அல்லது சிறு அளவில் உருவாக்கப்படுவது; model; miniature. *தலைவர் சிலைக்கு முன்மாதிரி இந்த நிழற்படம்தான். அமைக்கப்படவிருக்கும் அனல் மின்சார நிலையத்தின் முன்மாதிரியை அமைச்சர் பார்வையிட்டார்.* 2. பின்பற்றக் கூடிய வகையில் எடுத்துக்காட்டாக அமையும் ஒருவர் அல்லது ஒன்று; something exemplary, something worth following. *பொருளியல் வளர்ச்சியில் நம்நாடு பிற சிறு நாடுகளுக்கு முன்மாதிரியாக இருக்கலாம். இளம் அறிவிலாருக்கு அவர் நல்ல முன்மாதிரி.*

*[முன் + மாதிரி]*

**முன்மாரி** *mun-māri,* பெ.(n.) பருவமழைக்கு முன் செய்யும் விதைப்பு (யாழ்ப்.); cultivation when the seed is sown before the monsoon.

*[முன் + மாரி]*

**முன்முகப்பு** *mun-mugappu,* பெ.(n.) நுழைவு வாயில் அமைப்பு (யாழ்.அக.); entrance, as of a palace; facade.

*[முன் + முகப்பு]*

**முன்முகனை** *mun-muganai,* பெ.(n.) தொடக்கம் (யாழ்.அக.); commencement.

*[முன் + முகனை]*

**முன்முடுகுவெண்பா** *munmudugu-venbā,* பெ.(n.) முன்னிரண்டடிகள் முடுகிய ஓசை (சந்தங்) கொண்டு வரும் வெண்பா வகை; a kind of *venbā* having a quick flowing rhythm in the first two lines.

*[முன் + முடுகு + வெண்பா]*

**முன்முறை** *mun-murai,* பெ.(n.) முன்பிறப்பு; previous or past birth. *"முன்முறை செய்தவத்தினிம் முறை யியைந்தேம்" (பரிபா.11:138).*

*[முன் + முறை]*

**முன்மொழி** *mun-moli,* பெ.(n.) 1. பழமொழி (வின்.); old saying, proverb, adage. 2. தொகைமொழியில் இரண்டாவதாக வரும் மொழி; the second member of a compound word. *"முன்மொழி நிலையலும்" (தொல்.சொல்.419).* 3. முன்மொழி நிலையல் பார்க்க; see *munmoli-nilaiyal.*

மறுவ. முதுமொழி, சொலவடை.

*[முன் + மொழி]*

**முன்மொழி-தல்** *mun-moli-,* 2 செ.கு.வி. (v.i.) ஒருவரின் பெயரை அல்லது தீர்மானம் முதலியவற்றை உரியோரின் கவனத்திற்கு முன் வைத்தல்; propose someone's name, etc. for consideration in a formal meeting. *செயலாளர் பதவிக்குக் கூட்டத்தில் உங்கள் பெயரை நான் முன்மொழிகிறேன். நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை எதிர்க் கட்சித் தலைவர் முன்மொழிந்தார்.*

*[முன் + மொழி-தல்]*

**முன்மொழிந்துகோடல்** *munmolindu-kōdal,* பெ.(n.) உத்தி முப்பத்திரண்டனுள் பின்னர் அடிக்கடி கூற வேண்டியவற்றை முன்னர் எடுத்துக் கூறும் உத்திவகை (நன்.14); mention at the commencement

of what must needs be stated frequently in the course of a treatise, one of 32 utti.

*நுதலில் புகுதல் ஒத்துமுறை வைப்பே*
*தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்*
*முடித்துக் காட்டல் முடிவிடங் கூறல்*
*தானெடுத்து மொழிதல் பிறன் கோட்கூறல்*
*சொற்பொருள் விரித்தல் தொடர்ச்சொற் புணர்த்தல்*
*இரட்டுற மொழிதல் ஏதுவின் முடித்தல்*
*ஒப்பின் முடித்தல் மாட்டெறிந் தொழுகல்*
*இறந்தது விலக்கல் எதிரது போற்றல்*
*முன்மொழிந்துகோடல் பின்னது நிறுத்தல்*
*விகற்பத்தின் முடித்தல் முடிந்தது முடித்தல்*
*உரைத்து மென்றல் உரைத்தாம் என்றல்*
*ஒருதலை தணிதல் எடுத்துக்காட்டல்*
*எடுத்த மொழியின் எய்த வைத்தல்*
*இன்ன தல்லதிதுவென மொழிதல்*
*எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்*
*பிறநூல் முடிந்தது தானுடன்படுதல்*
*தன்குறி வழக்கமிகவெடுத் துரைத்தல்*
*சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்*
*ஒன்றின் முடித்தல் தன்னினமுடித்தல்*
*உய்த்துரை வைப்பென உத்தி எண்ணான்கே*
*(நன்.14)*

*[முன் + மொழிந்து + கோடல்]*

**முன்மொழிநிலையல்** *munmoḻi-nilaiyal,* பெ.(n.) தொகைமொழியுள் இரண்டாவது மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்கை; compound word in which there is emphasis of meaning on the second member.

*[முன்மொழி + நிலையல்]*

*முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்*
*இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்*
*அம்மொழி நிலையா தன்மொழி நிலையலும்*
*எனநான் கென்ப பொருணிலை மரபே*
*(தொல்.சொல்.414)*

தொல்காப்பியர் கூறும் நான்கு வகை மொழிநிலையல்: 1. முன்மொழி நிலையல், 2. பின்மொழி நிலையல், 3. இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையல், 4. அன்மொழி நிலையல்.

எ.கா. வேங்கைப்பூ, தாமரைப்பூ முதலான சொற்களில் வேங்கை, தாமரை முதலாய முன்மொழிகளில் பொருள் சிறந்து நிற்பது.

**முன்வழுக்கை** *munvaḻukkai,* பெ.(n.) தலையின் முன் பக்கத்தின் மயிர் உதிர்ந்துவிட்டப் பகுதி (வழுக்கை); baldness infornt of the head-*Calvities.*

*[முன் + வழுக்கை]*

**முன்வளம்** *mun-vaḷam,* பெ.(n.) 1. தோணியின் முன் பக்கம்; prow or bow of a ferry. 2. முன்னிடம்; front, forepart.

*[முன் + வள்ளம் – முன்வள்ளம் → முன்வளம்]*

**முன்வா–** *munvā-,* 18 செ.கு.வி.(v.i.) ஒன்றைச் செய்ய தாமே உடன்பட்டு ஆர்வத்துடன் அணியமாக இருத்தல்; come forward; express willingness. *தேர்தலைப் பற்றிப் பலர் தாமே முன்வந்து தங்கள் கருத்துக்களைக் கூறினர். ஆற்றைச் சுத்தப்படுத்தும் பணியை நடத்தப் பல சேவை அமைப்புகள் முன்வந்துள்ளன.*

*[முன் + வா]*

**முன்வாய்** *mun-vāy,* பெ.(n.) 1. வாயின் முன்பக்கம்; fore-part of the mouth. 2. உதடு (வின்.); lips. 3. பொலி தூற்றுவதில் காற்றுக்கு எதிர்ப்பக்கம் (வின்.); the direction opposite to that whence the

wind blows, in winnowing. 4. பொலியிற் பதருடன் கலந்துள்ள தவசக் குவியல் (இ.வ.); grain found mixed with chaff even after winnowing.

*[முன் + வாய்]*

**முன்வாய்ப்பல்** *munvāy-p-pal,* பெ.(n.) முன்னம்பல் (M.L.); incisor.

*[முன்வாய் + பல்]*

**முன்விட்டுவிடு-தல்** *munviṭṭu-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) முதன் முறையில் ஒரு செயலை செய்ய மறந்து விட்டு அதன் பிறகு அச்செயலை நினைத்து வருந்துதல்; repenting later, for an undone deed or action. *"முன்விட்டு விட்டுப் பின்நின்று கழுத்தறுக்கலாமா?" (பழ.).*

*[முன் + விட்டு + விடு-தல்]*

**முன்வை-த்தல்** *mun-vai-,*4 செ.கு.வி.(v.i.) முன்னிடுகை, திட்டம் முதலியவற்றை ஆய்வுக்காகத் தக்க முறையில் கவனத்திற்குக் கொண்டு வருதல்; purpose; put forward resolution, demand, etc. *தொழிலாளர்கள் முன்வைத்த கோரிக்கைகளை நிருவாகம் ஏற்கவில்லை. 'முன் வைத்த காலைப் பின் வைக்க மாட்டேன்' (பழ.).*

*[முன் + வை-த்தல்.]*

**முன்வைப்புத்தொகை** *mun-vaippu-t-togai,* பெ.(n.) ஏலம், ஒப்பந்தப் புள்ளி முதலியவற்றுக்காக ஒருவர் கட்ட வேண்டிய முன்பணம்; earnest money deposit.

*[முன் + வைப்பு + தொகை.]*

**முன்றணிவு** *munraṇivu,* பெ.(n.) மாட்டுக் குற்ற வகை (பெரியமாட்.17); a defect in cattle.

*[முன் + தணிவு]*

**முன்றளை** *munraḷai,* பெ.(n.) கொண்டி மாட்டுக்கு முன்னங்காலிற் கட்டுந்தளை (யாழ்.அக.); clog or cord fastening the forelegs of a refractory animal.

*[முன் + தளை]*

**முன்றாங்கி** *munrāṅgi,* பெ.(n.) மகளிர் கால்விரல்களிலணியும் அணி வகை, மெட்டி (நாஞ்.); a kind of ring worn by women, on the toes.

*[முன் + தாங்கு - முன்றாங்கு →முன்றாங்கி]*

**முன்றாதை** *munrādai,* பெ.(n.) பாட்டன் (யாழ்.அக.); grand-father.

*[முன் + தாதை]*

**முன்றாய்** *munrāy,* பெ.(n.) பாட்டி (யாழ்.அக.); grand - mother.

*[முன் + தாய்]*

**முன்றானை** *munrāṉai,* பெ.(n.) 1. புடவை முதலியவற்றின் தலைப்பு; the outer end of a saree or cloth. *"முன்றானையிலே முடிந்தாளலாம்படி" (ஈடு, 1. 10:11).* 2. மேற் போர்வை (யாழ்.அக.); upper garment.



*[முன்தானை→முன்றானை = சேலைக்கடை முனை (வே.க.)]*

**முன்றானைபோடு-தல்** *munrāṉai-pōḍu-*, 20 செ.கு.வி.(v.i.) முன்றானைவிரி-த்தல், பார்க்க; see *munrāṉai-viri-*.

*[முன்றானை + போடு-தல்]*

**முன்றானைவிரி-த்தல்** *munrāṉai-viri-*, 4 செ.கு.வி.(v.i.) ஒருவனுக்கு மனைவியாய் இருத்தல் (இ.வ.); to be one's wife; to yield to a man's embrace.

*[முன்றானை + விரி-த்தல்]*

**முன்றிணைமுதல்வன்** *munriṇai-mudalvaṉ*, பெ.(n.) குலமுன்னோரில் முதல்வன்; progenitor, ancestor. *"நின்முன்றிணை முதல்வர் போல நின்று" (பதிற்றுப்.14:20).*

*[முன் + திணை+முதல்வன்]*

**முன்றில்** *munril*, பெ.(n.) 1.வீட்டின் முன்னிடம்; front of a house. *"பலவின் சுளையுடை முன்றில்" (நற்.77). "தேம்பிழி நறவின் குறவர் முன்றில்" (அகநா.78:7). "வாரசும் பொழகு முன்றில்" (புறநா.114:5). "பல்கிளைக் குறவர் அல்கயர் முன்றில்" (நற்.44:8).* 2. வெளியிடம்; space. *"சிகரப்படர் முன்றிறொறும்" (கம்பரா. கடறா.47).*

தெ. முந்கிலி, முங்கிலி.

*[முன்→முன்று→முன்றில்.]*

இல்முன், முன்றில் என்பன ஒருபொருள் குறித்து வந்த சொல்லென்றறிக.

**முன்றுடரி** *munruḍari*, பெ.(n.) முன்றொடரி பார்க்க; see *munroḍari*.

**முன்றுடரிபின்றி** *munruḍari-piṉri*, பெ.(n.) முன்றொடரி (பரி.அக.) பார்க்க; see *munroḍari*.

*[முன்றொடரி→ முன்றுடரி + பின்று - முன்றுடரிபின்று→முன்றுடரி + பின்றி.]*

**முன்றுடரிபின்றுடரி** *munruḍari-piṉruḍari*, பெ.(n.) முன்றொடரி (கரு.அக.) பார்க்க; see *munroḍari*.

*[முன்றொடரி→முன்றுடரி + பின்றுடரி]*

**முன்றுறை** *munruṟai*, பெ.(n.) துறைமுகம்; port, harbour. *"முழங்குநீர் முன்றுறைக் கலம்புணர் கம்மியர்" (மணிமே.7:70).*

*[முன் + துறை.]*

**முன்றுறையரையர்** *munruṟai-y-araiyar*, பெ.(n.) முன்றுறை என்னுமூரில் வாழ்ந்த பழமொழி நானூரின் ஆசிரியர்; a poet, author of *Paḻamoḻi-Nāṉūṟu*, as a native of *Munruṟai*.

*[முன்றுறை + அரையர்]*

**முன்றூதன்** *munrūdaṉ*, பெ.(n.) முன்னே சென்று செய்தியைக் கூறுபவன் (வின்.); herald, forerunner.

*[முன் + தூதன்]*

**முன்றேர்க்குரவை** *munrēr-k-kuravai*, பெ.(n.) போரில் வெற்றியடைந்த அரசன் வெற்றிக் களிப்பால் தன் தேர்த்தட்டிலே நின்று போர்த்தலைவரோடு கைபிணைந்து ஆடுவதைக் கூறும் புறத்துறை (தொல். பொருள்.76); theme describing the dance of a king on the dais of his chariot, joining hands with his victorious warriors, in celebration of his victory.

*[முன் + தேர் + குரவை]*

**முன்றொடரி** *muṉṟoḍari,* பெ.(n.) நாயுருவி (சங்.அக.); a plant growing in hedges and thickets - *Achyranthus aspera.*

*[முன் + தொடரி. தொடர் →தொடரி]*

**முன்றோல்** *muṉṟōl,* பெ.(n.) ஆண்குறியின் நுனியை மூடி இருக்கும் தோல்; prepuce of the penis.

*[முன் + தோல்]*

**முன்றோன்றல்** *muṉṟōṉṟal,* பெ.(n.) 1. உடன் பிறந்தாருள் மூத்தவன்; first - born among brothers. *"பாண்டவரின் முன்றோன்றல் பார்முழுதுந் தோற்று" (நள.சுயம்.1).* 2. தமையன்; elder brother. *"தன்னுடைய முன்றோன்றல் கொண்டேக" (திவ்.இயற். பெரிய.ம.53).*

*[முன் + தோன்றல்]*

**முன்னங்கால்** *muṉṉaṅ-gāl,* பெ.(n.) 1. விலங்கின் கழுத்தை ஒட்டி அமைந்திருக்கும் முன்பக்கத்துக் கால்; foreleg of a quadruped. 2. முழங்காலின் முன்பக்கம் (வின்.); shin, the forepart of the leg. 3. பாதத்தின் மேற்பக்கம் (இ.வ.); instep.

*[முன் + கால் – முன்கால்→ முன்னங்கால்.]*

**முன்னங்கால்சப்பை** *muṉṉaṅgāl-šappai,* பெ.(n.) விலங்குகளின் முன்கால் தசை; animals fore leg muscle.

*[முன்னங்கால் + சப்பை.]*

**முன்னங்கை** *muṉṉaṅgai,* பெ.(n.) கையின் முன்பாகமான உறுப்பு; forearm.

*[முன் + கை – முன்கை→ முன்னங்கை.]*

**முன்னடி**[1] *muṉ-ṉ-aḍi,* பெ.(n.) 1. வீட்டின் முகப்பிடம் (வின்.); portion of a house near its entrance. 2. அருகில்; proximity. *அது முன்னடியிலே யிருக்கிறது.* 3. விளிம்பு; brink, edge. *கிணற்று முன்னடி.* 4. பாட்டின் முதலடி; first line of a poem. 5. முன்னடியான் பார்க்க; see *muṉṉaḍiyāṉ.*

*[முன் + அடி]*

**முன்னடி**[2] *muṉṉaḍi,* கு.வி.எ.(adv.) முன்பு (யாழ்.அக.); before.

*[முன் + அடி.]*

**முன்னடிபின்னடிசேவித்தல்** *muṉṉaḍi-piṉṉaḍi-šēvittal,* பெ.(n.) தெய்வப் பனுவல்களின் (திவ்வியப் பிரபந்தப் பாடல்களின்) முன்பாதிபின்பாதிகளின் முதல் நினைப்புகளை மட்டும் சொல்லுகை (அனுசந்திக்கை); a short method of reciting *Tivviya-p-pirabandam*, by which a portion only of each half of a stanza is recited.

*[முன்னடி + பின்னடி + சேவித்தல்.]*

**முன்னடிமாது** *muṉṉaḍi-mādu,* பெ.(n.) இலந்தை; jujube tree- *Zizphus jujube* (சா.அக.).

**முன்னடியார்** *muṉṉaḍiyār,* பெ.(n.) முன்னோர் (வின்.); ancestors.

*[முன்னடி →முன்னடியார்]*

**முன்னடியான்** *muṉṉaḍiyāṉ,* பெ.(n.) கோயிலின் வாயிலில் உள்ள சிறு தெய்வம்; minor deity in front of a shrine. *'சுவாமி வரங்கொடுத்தாலும் முன்னடியான் வரங்கொடான்' (வின்.).*

*[முன்னடி →முன்னடியான்]*

**முன்னடியில்** *munnadiyil,* கு.வி.எ. (adv.) 1. சிறிது நேரத்தில்; shortly. *முன்னடியில் வந்துவிட்டேன் (இ.வ.).* 2. அண்மையில்; near.

*[முன்னடி→முன்னடியில்]*

**முன்னடிவிளக்கு** *munnadi-viḷakku,* பெ. (n.) முன்கொண்டு செல்லும் கைவிளக்கு; light carried in front. *"சுடர்வேன் முன்னடி விளக்கா" (பதினொ.திருவாரூ.7).*

*[முன்னடி + விளக்கு]*

**முன்னடைப்பன்** *mun-n-aḍaippan,* பெ.(n.) அசை போடாமற் செய்யும் மாட்டு நோய் வகை (வின்.); a disease which prevents cattle from chewing the cud.

*[முன் + அடைப்பான்]*

**முன்னடையாளம்** *mun-n-aḍaiyāḷam,* பெ. (n.) முன்னறிகுறி (வின்.); portent, indication.

*[முன் + அடையாளம்]*

**முன்னணி[1]** *mun-n-aṇi,* பெ.(n.) 1. விளையாட்டு, தேர்தல் முதலியவற்றில் வெற்றி அடையும் வாய்ப்புடன் இருக்கும் நிலை, முன்னிலை; position ahead of others; the lead. *அந்த வேட்பாளர் ஐயாயிரம் ஒட்டு முன்னணியில் உள்ளார்.* 2. முதன்மை வகிக்கும் நிலை; fore front; leading writers, etc. *தொழில் வளர்ச்சியில் நம் நாடு முன்னணியில் உள்ளது. அந்தக் கட்சியின் முன்னணித் தலைவர்களுள் ஒருவர் இவர். அந்த முன்னணி நடிகர் பேட்டி தர மறுத்துவிட்டார்.* 3. குறிப்பிட்ட நோக்கத்திற்காகப் பலர் அல்லது பல அமைப்புகள் இணைந்து ஏற்படுத்தும் கூட்டமைப்பு; of political parties, etc. forming a front. *தேர்தலில் தமிழ் முன்னணி வெற்றிபெற வாய்ப்பு உள்ளது.*

*[முன் + அணி]*

**முன்னணி[2]** *munnaṇi,* பெ.(n.) தூசிப்படை (வின்.); van of an army.

க. முந்நணி

*[முன் + அணி]*

**முன்னணிசு** *mun-n-aṇišu,* பெ.(n.) தலை முண்டாசு வகை; a kind of head -dress. *"முத்துராயன் கொடுத்தான் முன்னணிசு" (விறலிவிடு.1108).*

*[முன் + அணிசு]*

**முன்னணை[1]** *mun-n-aṇai,* பெ.(n.) மாட்டுத் தொட்டி (வின்.); crib, manger.

மறுவ. கழனித்தொட்டி.

*[முன் + அணை]*

**முன்னணை[2]** *mun-n-aṇai,* பெ.(n.) 1. முதலில் பிறந்த குழந்தை அல்லது கன்று (திவ். திருமாலை, 19, வியா. பக்.71); elder-born child or calf. 2. முதலிற் செல்லும் ஏர்; leading plough, in ploughing. 3. கொண்டி மாட்டுக்கு முன்னங்காலிற் கட்டுந்தளை (இ.வ.); clog or cord fastening the forelegs of a refractory animal. 4. அணைக்குமுன் தற்காலிகமாகப் போடும் அணை (இ.வ.); ring - bund.

*[முன் + அணை]*

**முன்னத்தின்கால்** *munnattin-kāl,* பெ.(n.) முன்னங்கால் பார்க்க; see *munnaṅgāl.*

**முன்னத்தின்கால்சப்பை** *munnattinkāl-šappai,* பெ.(n.) முன்னனங்கால்சப்பை பார்க்க; see *munnaṅgāl-šappai.*

**முன்னத்தினருங்கிளவி** *munnattin-aruṅ-giḷavi*, பெ.(n.) குறிப்பினால் உணரப்படும் ஒரு சொல் (நன்.); a word of implication (அபி.சிந்.).

*[முன்னத்தின் + அருங்கிளவி.]*

**முன்னதம்** *munnadam*, பெ.(n.) நாட்டியத்தில் ஆட்காட்டிவிரலை மற்றை விரல்களினின்றும் பிரித்துச் செய்யும் மெய்ப்பாடு வகை (வின்.); a kind of hand-pose in which the fore-finger is held separate from the rest.

**முன்னதாக** *munnadāga*, வி.அ.(adv.) குறிப்பிடப்படும் நேரத்திற்கு அல்லது குறிப்பிடப்படுவதற்கு முன்பு; before; previously. *மின் தொடர் வண்டி புறப்படுவதற்கு இரண்டு மணி நேரம் முன்னதாகவே தொடர்வண்டி நிலையம் வந்து விட்டேன். இரு அணிகளுக்கு இடையே இதற்கு முன்னதாக நடைபெற்ற ஆட்டம் வெற்றி தோல்வியின்றி முடிந்தது.*

க. முந்தாகி

*[முன்னது + ஆக – முன்னதாக.]*

**முன்னது** *munnadu*, பெ.(n.) வரிசையில் ஒழுங்கில் முன் இருப்பது அல்லது முதலில் வருவது; the former; that which is first or in front. *இந்த இரு திரைப்படங்களில் முன்னதுக்கு நல்ல வரவேற்புக் கிடைத்திருக்கிறது.*

*[முன் → முன்னது]*

**முன்னந்தம்** *mun-n-andam*, பெ.(n.) முன் பார்வை (வின்.); front view.

*[முன் + அந்தம்]*

**முன்னந்தலை** *munnan-dalai*, பெ.(n.) நெற்றியிலிருந்து உச்சி வரையுள்ள தலைப்பாகம் (C.G.) forepart of the head, sinciput.

*[முன் + தலை→முன்னந்தலை]*

**முன்னந்தொடை** *munnan-doḍai*, பெ.(n.) 1. தொடையின் மேற்பகுதி; upper part of the thigh. 2. முன்தொடை இறைச்சி; fore-quarter of mutton.

*[முன் + தொடை→முன்னந்தொடை]*

**முன்னபாவம்** *mun-n-abāvam*, பெ.(n.) இன்மை (அபாவம்) நான்கனுள் முன்பு இல்லாமை (தருக்கசங்.96); previous non-existence, one of four *abāvam.*

*[முன் + **Skt.** அபாவம்]*

**முன்னம்¹** *munnam*, கு.பெ.எ.(adj.) & கு.வி.எ. (adv.) முன்¹ பார்க்க; see *mun¹*. *"நம்மினு முன்ன முணர்ந்த வளை" (குறள், 1277).*

க. முந்நம்

*[முன் →முன்னம்.]*

**முன்னம்²** *munnam*, பெ.(n.) 1. கருத்து; thought, intention. *"முன்ன முகத்தினுணர்ந்து" (புறநா.3).* 2. மனம் (திவா.); mind.

*[முன்னு→முன்னம்.]*

**முன்னம்³** *munnam*, பெ.(n.) 1. குறிப்பு; sign, indication. *"முன்னத்தா னொன்று குறித்தாய் போற் காட்டினை" (கலித்.61). "முன்னங் காட்டி முகத்தி னுரையா" (அகநா. 5:19).* 2. குறிப்புப் பொருள்; implication, suggestion. *முன்னவிலக்கு.*

*[முன்னு→முன்னம்.]*

முன்னம்[4] *munnam,* பெ.(n.) இம்மொழி சொல்லுதற்கு உரியாரும் கேட்டற்கு உரியாரும் இன்னாரெனப் படிப்போர் அறியுமாறு செய்யப்படுவதாகிய செய்யு ளுறுப்பு (தொல். பொருள்.519); indication of the person speaking and the person addressed, in a stanza.

*[முன்னு→முன்னம்]*

முன்னம்[5] *munnam,* பெ.(n.) அரிமா; lion.

முன்னம்[6] *munnam,* பெ.(n.) சீக்கிரி; black sirissa.

முன்னம்பல் *munnam-pal,* பெ.(n.) வாயின் முன்வரிசைப் பல் (C.G.); front tooth, incisor.

*[முன்னம்[1] + பல்]*

முன்னமரம் *munna-maram,* பெ.(n.) முன்னை; a small tree.

முன்னர் *munnar,* கு.வி.எ.(adv.) 1. முன்பு (பிங்.); before; inadvance; in front of. *"வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை" (குறள், 435). "அன்னை முன்னர்யாம் என்னிதற் படலே" (அகநா.95:15). "தெறலருங் கடவுள் முன்னனர்ச் சீறியாழ்" (நற்.189:3). "தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி" (புறநா.79:3).* 2. முற்காலத்தில்; in former times.

க. முந்ந

*[முன் → முன்னர்]*

முன்னர்விலக்கு *munnar-vilakku,* பெ.(n.) முன்னவிலக்கு பார்க்க; see *munna-vilakku.*

முன்னல் *munnal,* பெ.(n.) 1. நினைவு; thinking. 2. மனம்; mind.

தெ. முந்நு.

*[முன்னு → முன்னல்]*

முன்னவள் *munnaval,* பெ.(n.) 1. அக்கை (தமக்கை) (பிங்.); elder sister. 2. மூதேவி; goddess of Misfortune. *"முன்னவள் பதாகையோடு..... வந்துற்றவா போல்" (கந்தபு.சிங்கமு.443).*

*[முன் → முன்னவள்]*

முன்னவன் *munnavan,* பெ.(n.) 1. தேவன், கடவுள்; the first Being God. *"முன்னவன் போதியில்" (மணிமே.28:141).* 2. சிவன் (பிங்.); *Śiva. "முன்னவன் கூடல்" (கல்லா.32:10).* 3. அண்ணன் (சூடா.); elder brother. *"முன்னவன் வினவ" (கம்பரா.வேள்.4). "முன்னவனே முன் நின்றால் முடியாத பொருள் உளதோ" (பழ.).*

*[முன் → முன்னவன்]*

முன்னவிலக்கு *munna-vilakku,* பெ.(n.) குறிப்பினால் ஒன்றனை மறுத்து மேன்மை தோன்றச் சொல்லும் விலக்கணிவகை; a figure of speech in which a statement is heightened in effect by the suggestion of an apparent contradiction. *"முன்னத்தின் மறுப்பினது முன்னவிலக்கே மூவகைக் காலமு மேவிய தாகும்" (தண்டி. 43).*

*[முன்னம் + விலக்கு]*

முன்னவிலக்கணி வகைகள்: 1. இறந்த வினை விலக்கு, 2. எதிர்வினை விலக்கு, 3. நிகழ்வினை விலக்கு, 4. பொருள் விலக்கு, 5. குணவிலக்கு, 6. காரண விலக்கு, 7. காரிய விலக்கு, 8. வன்சொல் விலக்கு, 9. வாழ்த்து

விலக்கு, 10. தலைமை விலக்கு, 11. இகழ்ச்சி விலக்கு, 12. துணைசெயல் விலக்கு, 13. முயற்சி விலக்கு, 14. பரவச விலக்கு, 15. உபாய விலக்கு, 16. கையறல் விலக்கு, 17. உடன்படல் விலக்கு, 18. வெகுளி விலக்கு, 19. இரங்கல் விலக்கு, 20.ஐயவிலக்கு, 21. வேற்றுப் பொருள்வைப்பு விலக்கு, 22. சிலேடை விலக்கு, 23. ஏது விலக்கு.

**முன்னறிகுறி** *mun-n-arikuri*, பெ.(n.) பின் னிகழ்ச்சிக்கு அறிகுறியாக முன்னிகழ்வது; portent, presage.

*[முன் + அறிகுறி]*

**முன்னறிவிப்பு** *mun-n-arivippu*, பெ.(n.) 1. முன்கூட்டியே தெரிவிக்கும் நடவடிக்கை; fore warning; notice; notification. *தொழிலாளர்கள் முன்னறிவிப்புத் தராமல் வேலை நிறுத்தத்தில் இறங்கியதாக நிருவாகம் கூறியது. அடகு வைத்த நகைகளை முன்னறிவிப்பு இல்லாமல் ஏலம் போட முடியாது.* 2. வானிலையைப் பற்றிய முன்கணிப்பு; weather forecast. *கடற்கரை ஓரப் பகுதிகளில் மழை பெய்யும் என்பது இன்றைய வானிலை முன்னறிவிப்பு.*

*[முன் + அறிவிப்பு.]*

**முன்னன்** *munnan*, பெ.(n.) அண்ணன்; elder brother. *"பெட்பொடு முன்னனைக் காணும்" (இரகு.அவதாரநீங்.13).*

*[முன் →முன்னன்.]*

**முன்னா—தல்** *munnā-*, 6 செ.கு.வி.(v.i.) முன்னதாதல்; to be first; to be early. *"முன்னான பூதங்கள்" (கம்பரா. இரணியன் வதை.170).*

*[முன் →முன்னா—தல்]*

**முன்னாகக்கொடி** *munnāga-k-kodi*, பெ. (n.) பிள்ளைத் தாய்ச்சிக் கொடி; placental cord (சா.அக.).

மறுவ. நஞ்சுக்கொடி, தொப்புள் கொடி.

**முன்னாடி[1]** *munnādi*, பெ.(n.) முன்பக்கம்; infront portion. *'கீழ்த் தாடையிலுள்ள தீய மாட்டுச்சுழி முன்னாடியிருந்தா பண்ணாடிக்காகாது' (பழ.).*

*[முன் → முன்னாடி]*

**முன்னாடி[2]** *munnādi*, கு.வி.எ.(adv.) முன்னமே (உ.வ.); formerly, previously, already.

*[முன் → முன்னாடி]*

**முன்னாடி[3]** *munnādi*, வி.அ.(adv.) முன்னால்[1] பார்க்க; see *munnāl[1]*.

*[முன் → முன்னாடி]*

**முன்னால்[1]** *munnāl*, வி.அ.(adv.) 1. முன் பக்கமாக; forward; infront of. *கண்ணாடிக் கதவை முன்னால் தள்ளுதல்.* 2. முன்னர்; years ago; preceding; before. *இது நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த நிகழ்ச்சி. எனக்கு முன்னால் பேசியவர் யார்? முன்னால் போனா கடிக்கும். பின்னால் போனா ஒதைக்கும்.*

*[முன் → முன்னால்]*

**முன்னால்[2]** *munnāl*, இடை.(part.) முன் பக்கத்தில்; before some one or something. *எனக்கு முன்னால் கழுதை ஓடியது. 'முன்னால் பார்த்தால் சேவகன் குதிரை, பின்னாலே பார்த்தால் செட்டியார் குதிரை' (பழ.).*

*[முன் →முன்னால்]*

**முன்னாலே** *munnālē,* கு.வி.எ.(adv.) முன்னாடி[2] பார்க்க; see *munnāḍi²*.

*[முன் → முன்னாலே]*

**முன்னாள்[1]** *munnāḷ,* கு.பெ.எ.(adj.) பொறுப்பு, பதவி முதலியவை குறித்து வருகையில் கடந்த காலத்தில் இருந்ததைக் குறிப்பது; former; ex. *முன்னாள் அமைச்சர் ஒருவர் விழாவுக்குத் தலைமையேற்றார். இவன் என்னுடைய முன்னாள் மாணவன்.*

*[முன் + நாள்]*

**முன்னாள்[2]** *munnāḷ,*பெ.(n.) 1. முந்தினம்; yesterday; previous day. 2. முற்காலம்; former days. *"முன்னாள் பாய்விடைக ளேழடர்த்து" (திவ். பெரியதி.3. 4:4).*

மறுவ. மேனாள்

*[முன் + நாள்.]*

**முன்னாள்[3]** *munnāḷ,*பெ.(n.) தமக்கை (வின்.); elder sister.

*[முன் → முன்னாள்]*

**முன்னி** *munni,*பெ.(n.) முல்லை நிலத்தில் இயற்கையாக விளையும் ஒரு சிறு பயறு; a small size green gram grown in *mullai* tract.

*[முல் → முன் → முன்னி (வே.க.). முல் = சிறுமை.]*

ஒ.நோ. L. min, small. இதனின்றே minify, minim, minimum, minish, minor, minute முதலிய பல சொற்கள் திரிந்துள்ளதாகத் தெரிகிறது (வே.க.).

இயற்கையான தோற்றம் அல்லது இயக்கமெல்லாம் முன்னோக்கியே நிகழ்தலால் தோற்றக் கருத்தில் முன்னோக்கல் அல்லது முகங்காட்டற் கருத்து இரண்டறக் கலந்துள்ளது (வே.க.).

**முன்னிசிவு** *mun-n-iśivu,*பெ.(n.) உடம்பை முன்பக்கமாக வளையச் செய்யும் ஒருவகை ஊதைநோய் (தம்பவாதநோய்) (சீவரட்.165); a kind of rheumatism in which the body is bent forward.

*[முன் + இசிவு.]*

**முன்னிட்டி** *munniṭṭi,*பெ.(n.) விலங்குகளுக்கு உணவு வைக்குந் தொட்டி (வின்.); crib, manger, trough for fodder.

*[முன்னிடு → முன்னிட்டி]*

**முன்னிட்டு** *munniṭṭu,*வி.அ.(adv.) 1. ஒரு கரணியத்தை முன்வைத்து; advancing or offering any reason. *எந்தக் காரணத்தை முன்னிட்டும் விழாவிற்கு வராமல் இருந்து விடாதீர்கள்.* 2. ஒன்றைக் கரணியமாகக் கொண்டு; on account of. *தலைவர் இறந்ததை முன்னிட்டு வண்டிகளில் கறுப்புக் கொடி கட்டியிருந்தனர்.*

*[முன் + இட்டு.]*

**முன்னிடு[1]-தல்** *munniḍu-,*20 செ.கு.வி.(v.i.) 1. முந்துதல்; to advance; to go in front. 2. அணியமாயிருத்தல்; to be ready, prompt. 3. வெற்றியாதல் (அனுகூலமாதல்); to succeed, be successful. *உனக்குக் காரியம் முன்னிடும்.*

தெ. முந்நிடு; க. முந்திடு; ம. முந்நிடுக.

*[முன் + இடு-தல்.]*

**முன்னிடு²–தல்** *munniḍu-*,18 செ.குன்றாவி. (v.t.) 1. முன் வைத்தல்; to put before. 2. எதிர்ப்படுதல் (வின்.); to meet. 3. முன்னே போகவிடுதல் (வின்.); to let one go before or in advance. 4. நோக்கமாகக் கொள்ளுதல்; to bear in mind. *அந்தச் செயலை முன்னிட்டு வந்தான்.* 5. துணைக் கொள்ளுதல்; to invoke the aid of. *இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடும் (ஸ்ரீவசந.2:151).*

*[முன் + இடு–தல்.]*

**முன்னிருட்டு** *munniruṭṭu*,பெ.(n.) இருட் பக்க (அபரபட்சம்) இரவின் முற்றேரத்திலுள்ள இருள் (உ.வ.); darkness in the early hours of the night, as during the dark fortnight.

*[முன் + இருட்டு.]*

**முன்னிருப்பு** *mun-n-iruppu*, பெ.(n.) 1. முன்னிலைமை; former condition. 2. குடிவழிச் சொத்து (பூர்வ சொத்து); ancestral property. 3. கையிருப்புத் தொகை; balance on hand. 4. கணக்கில் முன்னேட்டிலிருந்து எடுத்தெழுதும் இருப்புத் தொகை; balance brought forward.

*[முன் + இருப்பு.]*

**முன்னில்–தல் (முன்னிற்றல்)** *munnil-*,14 செ.கு.வி.(v.i.) 1. முன்தோன்றுதல்; to appear before. *"முன்னின்றாண்டாய்" (திருவாச.21:2).* 2. துணைநிற்றல்; to stand by; to assist, guide. *"முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ" (பெரியபு.மனுநீதி.47).* 3. தலைமையேற்றல்; to take the lead. 4. பொறுப்பேற்றுக் கொள்ளுதல்; to assume responsibility.

*[முன் + நில்–தல்.]*

**முன்னிலவு** *munnilavu*, பெ.(n.) முன்னிலா (வின்.) பார்க்க; see *munnilā.*

*[முன் + நிலவு. முழுநிலவு நாள் (வெள்ளுவா) வருவதற்கு முந்திய நாட்கள்.]*

**முன்னிலா** *munnilā*,பெ.(n.) ஒளிப்பக்கத்து (பூர்வ பட்சம்) இரவின் முன்னேரத்திலுள்ள நிலவு; moonlight in the early hours of the night, as during the bright fortnight.

*[முன் + நிலா]*

**முன்னிலை¹** *munnilai*,பெ.(n.) 1. முன்னிற்ப –வள்–வன்–து; person or thing that stands in front. *"முன்னிலையாக்கல்" (தொல். பொருள்.101).* 2. தன்மை, முன்னிலை, படர்க்கை என்ற மூவிடங்களுள் ஒன்று; second person, the person or thing spoken to. *"உயிரீறாகிய முன்னிலைக் கிளவியும்" (தொல்.எழுத்து.152).* *"பெருவளக் கரிகாள் முன்னிலைச் செல்லார்" (அகநா.125:18).* *"ஒன்னார் முன்னிலை முருககிப் பின்னின்று" (புறநா.262:4).* 3. கரணியம் (தஞ்சைவா.7, தலைப்பு, உரை); cause. 4. முதன்மையானது; that which is essential. *"கலவிக்கு முன்னிலையாய்" (திருவிருத்.16, வியா.பக்.113).* 5. நேர்முகம் (சமுகம்); presence. *அவர் முன்னிலையிற் சொல்லியுள்ளேன்.* 6. வெளிப்படுமிடம்; place of manifestation. *"முன்னிலை கமரேயாக" (பெரியபு.அரிவாட்டாய.23).*

*[முன் + நிலை.]*

**முன்னிலை²** *munnilai*, பெ.(n.) 1. விளையாட்டு, தேர்தல் முதலியவற்றில் வெற்றி பெறுவதற்குரிய முதல் இடம்; முன்னணி; leading position in a race, etc.

*அந்த வேட்பாளர் பத்தாயிரம் நேரி (வாக்கு)கள் அதிகம் பெற்று முன்னிலையில் இருக்கிறார். இந்தப் போட்டித் தொடரில் எந்த நாடு முன்னிலையில் உள்ளது என்று தெரியவில்லை.* 2. ஒருவர் இருக்கும் இடத்தின் முன்பு; presence of someone. *இறைவன் முன்னிலையில் பூக்கட்டிப் போட்டுப் பார்த்தார்கள்.* 3. பேசுபவரின் முன் இருப்பவர்; person who is addressed; second person.

*[முன் + நிலை.]*

**முன்னிலைஅசைச்சொல்** *munnilai-asai -c-col,* பெ.(n.) முன்னிலையசை பார்க்க; see *munnilai-y-asai.*

*[முன்னிலை + அசை + சொல்]*

**முன்னிலைக்காட்சி** *munnilai-k-kātci,* பெ.(n.) இறைவனை முன்னால் (அணித்துறக்) காணும் காட்சி (பிரபஞ்சவி.); realising God as being immediately present.

*[முன்னிலை + காட்சி.]*

**முன்னிலைக்காரன்** *munnilai-k-kāran,* பெ.(n.) 1. கம்மாளர், வண்ணார் முதலிய குலங்களின் தலைவன் (யாழ்.அக.); headman of the caste, as of *Kammālar, Vannār,* etc. 2. ஒருவகைக் கீழ்த்தர வேலைக்காரன் (நாஞ்.); a petty officer.

*[முன்னிலை + காரன்]*

**முன்னிலைக்கிளவி** *munnilai-k-kilavi,* பெ.(n.) முன்னிலை[1], 2 பார்க்க; see *munnilai*[1], 2.

*[முன்னிலை + கிளவி.]*

**முன்னிலைப்படர்க்கை** *munnilai-p-padarkkai,* பெ.(n.) முன்னிலைப் பொருளில் வழங்கும் படர்க்கைச் சொல்; word which in form is in the third person, but is used in the second person. *'எம்பி முன்னிலைப் படர்க்கை (சீவக.1760, உரை).*

*[முன்னிலை + படர்க்கை]*

**முன்னிலைப்படுத்து-தல்** *munnilai-p-paduttu-,* 5 செ.கு.வி.(v.i.) தன்னை முதன்மை நிலையில் வைத்தல்; project one self; bring oneself to the fore front. *அவர் தன்னை முன்னிலைப்படுத்திக் கொள்ளக் கூடாது என்பதில் கவனமாக இருந்தனர்.*

*[முன்னிலை + படுத்து-தல்.]*

**முன்னிலைப்பரவல்** *munnilai-p-paraval,* பெ.(n.) கடவுளை முன்னிலைப் படுத்திப் புகழுகை (சீவக.17, பக்.448); praise addressed the God.

*[முன்னிலை + பரவல்]*

**முன்னிலைப்பாடு** *munnilai-p-pādu,* பெ.(n.) பிணைப்பொருள் (வின்.); bail, security, pledge.

*[முன்னிலை + பாடு. படு→பாடு.]*

**முன்னிலைப்புறமொழி** *munnilai-p-pura-moli,* பெ.(n.) முன்னிலையாக நிற்பாரைக் குறித்துப் பிறனைக் கூறுமாறு போலக் கூறுஞ்சொல் (தொல்.பொருள்.165, இளம்.); speech intended for one who is present but spoken as if to a third person.

*[முன்னிலை + புறமொழி]*

**முன்னிலைப்பெயர்** *munnilai-p-peyar,* பெ.(n.) முன்னிலை யிடத்துவரும் பெயர்ச் சொல் (தொல்.எழுத்து.321); second person pronoun or noun.

எ–டு: நீ, நீர், நீங்கள்

*[முன்னிலை + பெயர்]*

**முன்னிலையசை** *munnilai-y-asai,* பெ. (n.) முன்னிலையில் வழங்கும் அசைச் சொல் (புறநா.40, உரை); expletive used with the second person sing., as *miyā*in *Šenmiyā.*

*[முன்னிலை + அசை]*

**முன்னிலையில்** *munnilaiyil,* பெ.எ.(adj.) நிகழ்ச்சிக் கூட்டம் முதலியவைக் குறித்து வருகையில் ஒருவர் அல்லது பலர் முன்னின்று பொறுப்பேற்ற நிலையில்; ஒருவர் அல்லது பலர் முன்னின்று கவனிக்கும் நிலையில்; in the presence of. *மேலதிகாரியின் முன்னிலையில் ஞாயம் கேட்கப்பட்டது. தரைப்படைத் தலைவரின் முன்னிலையில் வன்முறையாளர்கள் படைக்கலன்களை ஒப்படைத்தனர். விருந்தினர் முன்னிலையில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று கூடத் தெரியாதா?*

*[முன்னிலை → முன்னிலையில்]*

**முன்னிலையேவலொருமைவிணைமுற்று** *munnilai-y-ēval-orumai-vinaimurru,* பெ.(n.) ஆய், உ, ஆல், எல், காண் என்னும் ஐந்து ஈறு (விகுதி)களையும் அகர முதல் ஔகாரவிறுதி நின்ற பன்னீருயிரையும் ஞ் ண் ந் ம் ன் ய் ர் ல் வ் ழ் ள் என்னும் பதினொரு மெய்களையும் ஈறாக உடைய இருதிணை முக்கூற்று ஒருமை முன்னிலையேவல் வினைச் சொற்கள்; second person singular imperative finite verb.

*[முன்னிலை+ஏவல்+ ஒருமை + வினைமுற்று.]*

**முன்னிலையேவல்பன்மைவினைமுற்று** *munnilai-y-ēval-panmai-vinai-murru,* பெ.(n.) மின் உம் என்னும் ஈறுகளை இறுதியில் உடையதாய் இடைநிலையேலாது எதிர் காலத்தைக் காட்டி வருமொழிகள்; second person plural imperative finite verb.

**முன்னிலையொருமைவினைமுற்று** *munnilai-y-orumai-vinaimurru,* பெ. (n.) ஐ, ஆய், இ என்னும் ஈறு (விகுதி)களை உடைய இருதிணை முக்கூற்றொருமை வினைமுற்று; second person singular finite verb.

**முன்னிலைவினை** *munnilai-vinai,* பெ. (n.) முன்னிலைப் பெயர் எழுவாயாக வரும் பொழுது அதனோடு சென்று இணையும் வினை; second person verb.

*[முன்னிலை + வினை]*

**முன்னிளவல்** *munniḷaval,* பெ.(n.) முன்றோன்றல் (திவா.) பார்க்க; see *munrōnral.*

*[முன் + இளவல்]*

**முன்னின்மை** *munninmai,* பெ.(n.) முன்ன பாவம் பார்க்க; see *munna-pāvam.* *"முன்னின்மையோடு பின்னின்மை யன்றி" (வேதா.சூ.35).*

*[முன் + இன்மை]*

**முன்னீட்டுத்தொகை** *munnīṭṭu-t-togai,* பெ.(n.) முன்பணம் பார்க்க; see *munpaṇam.*

*[முன் + ஈட்டுத்தொகை]*

**முன்னீடு[1]** *muṉ-ṉ-īḍu,* பெ.(n.) 1. முன் செல்லுகை; going before. 2. முன்னிடுகை; placing before. 3. தலைமை (யாழ்.அக.); leadership. 4. பொறுப்பாளி (வின்.); responsible person.

*[முன்னிடு→முன்னீடு]*

**முன்னீடு[2]** *muṉ-ṉ-īḍu,* பெ.(n.) பெண்டிர் காதணி வகை (வின்.); an ear-ornament, worn by women.

*[முன்னிடு→முன்னீடு]*

**முன்னீடு[3]** *muṉ-ṉ-īḍu,* பெ.(n.) முதல் அடைமானம்; first or prior mortgage.

*[முன்→முன்னீடு]*

**முன்னீர்[1]** *muṉṉīr,* பெ.(n.) நிலத்திற்கு முன் தோன்றிய கடல்; sea, as having been formed before land. *"முன்னீர் விழவி னெடியோன்" (புறநா.9, பாடபேதம்). "முன்னீராயினு முகந்துடன் புகுவோர்" (பெருங்.மகத.மேல்வீ.24:76).*

தெ. முந்நீரு; க. முந்நீர்.

*[முன் + நீர்]*

**முன்னீர்[2]** *muṉṉīr,* பெ.(n.) 1. சோற்றுக் கற்றாழைச் சாறு; juice of aloes. 2. வெடியுப்பு எரிநீர்; nitric acid. 3. முதலில் உண்டாகும் நீர்; first formed water (சா.அக.).

**முன்னீர்க்கோவை** *muṉṉīr-k-kōvai,* பெ.(n.) நீர்க்கோவை (ஜலதோஷம்) வகை (சீவரட்.); catarrh.

*[முன் + நீர்க்கோவை]*

**முன்னீர்ப்பழந்தீவு** *muṉṉīr-p-paḻantīvu,* பெ.(n.) கடலிலுள்ள இசை பன்னீராயிரம் தீவுகளடங்கிய கூட்டமாகும்; very old islands in the Indian ocean called as *Isai panniṟāyiram. தமிழகத்தின் தென் மேற்கில் இந்துமாக்கடலில் அமைந்த மாலத் தீவுகள் என்று கூறப்படும், பழமையான தீவுகளாகும். இதனை இலக்கத் தீவுகள் என்றும் கூறுவர். இத்தீவுகள் கடல் கொண்ட தமிழகத்தின் எஞ்சிய பகுதிகளாகும். முதல் இராசராசன் இத்தீவுகளைக் கடற்படையால் வென்று கைப்பற்றியுள்ளான். "முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும்" (முதல் இராசராசன் – மெய்க்கீர்த்தி).*

*[முன்னீர் + பழந்தீவு]*

**முன்னு[1]-தல்** *muṉṉu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கருதுதல்; to think, contemplate. *"வேறுபுல முன்னிய விரகறி பொருந" (பொருந.3).*

க. முந்நு

*[உன்னு-தல்→முன்னு-தல்.]*

**முன்னு[2]-தல்** *muṉṉu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. எதிர்ப்படுதல்; to meet. *"கதிர்முலைக் கன்னி மார்ப முன்னினர் முயங்கி னல்லால்" (சீவக.483).* 2. அடைதல்; to reach, arrive at. *"முனிவன் முன்னினானால்" (சூளா.தூது. 123).* 3. அணுகுதல்; to approach. *"நகர் நெறியின் முன்னினான்" (சீவக.1249).* 4. பொருந்துதல்; to get to, join. *"முன்னுபு கீழ்த்திசை நோக்கி" (சீவக.2636).* 5. பின்பற்றுதல்; to adhere to; to follow. *"முற்றுட னுணர்ந்தவ னமுத முன்னினார்" (சீவக.2639).*

*[முன்→முன்னு→முன்னு-தல்]*

முன்னு³–தல் *muṉṉu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. கிளர்தல்; to swell, rise, as the waves. *"நளிகடன் முன்னியது போலும்" (பரிபா.12:7).* 2. படர்ந்து செல்லுதல்; to spread. *"முன்னுங் கருவிடமுண்ட..... முன்னோன்" (திருக்கோ. 236).* 3. முற்படுதல்; to precede, go before. *"முன்னியாடு பின்யான்....... உங்ஙனே வந்து தோன்றுவனே" (திருக்கோ.16).* 4. நிகழ்தல் (சம்பவித்தல்); to happen. *"மடந்தைக்கு முன்னியதறிய" (திருக்கோ.229, கொளு.).*

*[முன்→முன்னு–தல்]*

முன்னுக்கு *muṉṉukku*, வி.அ.(adv.) ஓர் இடத்தின் முன்பாக; forward; to the fore. *நாற்காலியை கொஞ்சம் முன்னுக்கு இழுத்து போடு.*

*[முன்→முன்னுக்கு]*

முன்னுக்குக்கொண்டுவா–தல் (முன்னுக்குக்கொண்டுவரு–தல்) *muṉṉukku-k-koṇḍu-vā-*, 18 செ.கு.வி. (v.i.) வாழ்க்கையில் உயர்ந்த நிலைக்கு வரச் செய்தல்; முன்னேற்றுதல்; cause to come up; help someone rise to in the world. *நன்றாகப் படித்துக் குடும்பத்தை முன்னுக்குக் கொண்டு வர வேண்டும்.*

*[முன்னுக்கு + கொண்டு +வா–தல்]*

முன்னுக்குப்பின்முரணாக *muṉṉukku-p-piṉ-muraṇāga*, வி.அ.(adv.) முரண்பாடான முறையில்; ஒன்றை ஒன்று மறுக்கிற வகையில்; in a self contradict way. *முன்னுக்குப் பின் முரணாகப் பேசுபவரை எப்படி நம்புவது?*

*[முன்னுக்கு + பின் + முரணாக.]*

முன்னுக்குவா–தல் (முன்னுக்குவருதல்) *muṉṉukku-vā-*, 18 செ.கு.வி.(v.i.) 1. வளர்ச்சியடைதல்; to come to the fore; to advance, progress. 2. வாழ்க்கையில் உயர்ந்த நிலைக்கு வரச் செய்தல்; முன்னேற்றுதல்; come up; progress or advance in life. *பல இடர்களைத் தாண்டி முன்னுக்கு வந்தவனுக்குத்தான் பணத்தின் அருமை தெரியும். நன்றாகப் படித்து முன்னுக்கு வர வேண்டும் என்று வாழ்த்தினார்.*

*[முன்→முன்னுக்கு + வா–தல்]*

முன்னுச்சி *muṉ-ṉ-ucci*, பெ.(n.) தலையுச்சியின் முன்பகுதி; front part of the head, sinciput.

*[முன்→ முன்னுச்சி]*

முன்னுச்சிப்பூ *muṉṉucci-p-pū*, பெ.(n.) உச்சிப்பூ; an ornament for the forehead of a child.

மறுவ. தலைச்சுட்டிப்பூ

*[முன்னுச்சி + பூ]*

முன்னுடையாரும்பழம்பேரும்நீக்கி *muṉṉuḍaiyārum-paḷampērum-nīkki*, வி.எ.(adv.) நிலம் முன் யாருக்குச் சொந்தமாய் இருந்ததோ, அதைப் பொருள் கொடுத்துத் தனதாக்கிய பின், அவர் பெயரையும், நிலத்திற்கமைந்த அவரது உரிமைப் பெயரையும் வரி கணக்கில் இருந்து நீக்கித் தன் பெயரால் பதிவு செய்வது; removing the name of the seller from the tax account book and registering the name of the buyer, after owning the

property. *"இந்நிலம் ஏழுவேலியும், இறையிலி காராண்மையு முட்பட முன்னுடையாரும் பழம்பேரும் நீக்கி" (திருவாரூர் கல்வெட்டுத் தொகுதி.2:1 பக்.18).*

முன்னுதாரணம் *munnudāranam,* பெ.(n.) முன்மாதிரி பார்க்க; see *mun-mādiri.*

முன்னுரிமை *mun-n-urimai,* பெ.(n.) 1. பலவற்றுள் சிலவற்றிற்கு முதன்மை கருதி அளிக்கும் இடம்; priority. *அரசின் திட்டங்களில் வேளாண்மைக்கு முன்னுரிமை தரப்பட்டிருக்கிறது.* 2. சலுகை அளித்து ஏற்படுத்தும் வாய்ப்பு; preference. *பகுதி நேர வேலைக்குப் பெரும்பாலும் பெண்களுக்குத் தான் முன்னுரிமை.*

*[முன் + உரிமை]*

முன்னுரை[1]-த்தல் *mun-n-urai-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. முற்பட அறிவிப்புச் செய்தல்; to indicate before hand. *"முகம்போல முன்னுரைப்பதில்" (நான்மணி. 47).* 2. வருவது கூறுதல் (வின்.); to foretell, predict.

*[முன்→முன்னுரை-த்தல்.]*

முன்னுரை[2] *mun-n-urai,* பெ.(n.) 1. பழமொழி; ancient saying adage, proverb. 2. பழைய வரலாறு; ancient history. *"முன்னுரையிற் கேட்டறிவதில்லையே" (திவ்.இயற்.பெரிய. 6:59).* 3. முகவுரை; preface. *கட்டுரைகளில் முன்னுரை இடம் பெற்றிருக்கும்.*

*[முன்→முன்னுரை.]*

முன்னுற *munnura,* கு.வி.எ.(adv.) முன்பாக; previously, beforehand, already. *"முன்னுறக் காவா திழுக்கியான்" (குறள், 535). "மின்னொளிர் நெடுவேல் இளையோன் முன்னுற" (அகநா.203:10). "கூறுவன் வாழி தோழி முன்னுற" (நற்.233:6). "முறைநற் கறியுநர் முன்னுறப் புகழ்ந்த" (புறநா.224:5).*

*[முன் + உறு – முன்னுற]*

முன்னுறவுணர்தல் *mun-n-ura-v-unartal,* பெ.(n.) தலைவிக்கு முன்னுற்ற களவு நிலையைத் தோழி அறிதலைக் கூறும் அகத்துறை (திருக்கோ.62, கொளு.); theme describing a maid getting to know of the secret love-affair of her mistress.

*[முன் + உறு + உணர்தல்]*

முன்னுறுகிளவி *mun-n-uru-kilavi,* பெ.(n.) குறிப்பு மொழி; abstract language. *"முன்னுறு கிளவியிற் பண்ணுறப் பணிக்கலும்" (பெருங். உஞ்சை.கரடு.32:71).*

*[முன் + உறு + கிளவி]*

முன்னுறுபுணர்ச்சி *mun-n-uru-punarcci,* பெ.(n.) இயற்கைப் புணர்ச்சி (இறை.2, பக்.33); first union of lovers.

*[முன் + உறு + புணர்ச்சி.]*

முன்னூர் *munnūr,* பெ.(n.) தென்னார்க்காடு மாவட்டம், திண்டிவனம் வட்டத்தில் திண்டிவனத்திலிருந்து 22 கல்லன் மாத்திரி தொலைவிலுள்ள ஊர்; a city in South Arcot district in *Tindivanam* Taluk 22 km away from *Tindivanam. ஒரு பகுதியில் பல ஊர்கள் அமைந்திருக்கும்பொழுது முதலில் இருப்பது முன்னூர் எனப்படும் கரணியம் பற்றி இப்பெயர் வந்தது. இப்பகுதியில் முந்நூறு கோயில்கள் இருந்ததாகவும், அதனால் முந்நூறு என்று பெயர் பெற்று நாளடைவில் முன்னூறு ஆயிற்று என்றும் கூறுவர். இன்று இங்கு 75 கோயில்கள் உள்ளன.*

*[முன் + ஊர்.]*

**முன்னூல்** *munnūl,* பெ.(n.) 1. ஆதி நூல்; original treatise, as distinguished from subsequent works or commentaries. 2. மறை (வேதம்) (வின்.); the Vēdās.

*[முன் + நூல்.]*

**முன்னூற்கேள்வன்** *munnūr-kēlvan,* பெ.(n.) கடவுள் (யாழ்.அக.); god.

*[முன்னூல் + கேள்வன்.]*

**முன்னூற்றுவன்திருவாரூரன்** *munnūrruvan-tiruvārūran,* பெ.(n.) தமிழகத்தில் சோழர் பாண்டியர் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த சிவாகம நெறியுடைய சிவாச்சாரியார்கள் 48,000 பேர்களுள் முன்னூற்றுவர் அடங்கிய குழுவினருள் ஒருவரான திருவாரூரன் என்பவர் (தெ.இ.கல்.தொ.14, கல்.64); one among 48,000 *Šaiva Šivaccarryar's* called *Tiruvārūran*during the region of *Cōlā, Pandiya.*

**முன்னெச்சரிக்கை** *mun-n-eccarikkai,* பெ.(n.) 1. பேரிடர், கலவரம் முதலியவை நேரக் கூடிய சூழ்நிலையில் அவை நிகழாமல் தடுக்கும் ஏற்பாடு; precaution. *குடியரசு தலைவரின் வருகையை ஒட்டி முன்னெச்சரிக்கை நடவடிக்கையாகப் பலர் கைது செய்யப்பட்டனர்.* 2. முன்னறிவிப்பு; fore warning. *மார்புவலி ஒரு கடுமையான நோய்க்கான முன்னெச்சரிக்கையாகும்.*

*[முன் + எச்சரிக்கை]*

**முன்னெண்ணம்[1]** *mun-n-ennam,* பெ.(n.) 1. முன்னிகழ்ச்சி பற்றிய நினைவு; thoughts about the past. 2. முன் ஆய்வு; fore thought.

*[முன் + எண்ணம்]*

**முன்னெண்ணம்[2]** *munnennam,* பெ.(n.) விளைவு குறித்து அல்லது நடக்கப் போவது குறித்து அணியமாக இருப்பதற்கு ஏற்ற வகையில் முன்னரே செய்யும் சிந்தனை; fore thought, thoughtfulness. *காலையிலேயே முகில் கூட்டம் வானத்தில் நிரம்பி இருந்ததனால் முன்னெண்ணத்துடன் குடை கொண்டு வந்திருந்தான். முன்னெண்ணம் (யோசனை) இல்லாமல் கடன் வாங்கி விட்டு இப்போது வருத்தப்பட்டு என்ன பயன்?*

*[முன் + எண்ணம்.]*

**முன்னெழுச்சி** *mun-n-elucci,* பெ.(n.) முன்னெண்ணம்[1], 1 பார்க்க; see *mun-n-ennam*[1], 1.

*[முன் + எழுச்சி]*

**முன்னெற்றி** *munnerri,* பெ.(n.) நெற்றியின் மேற்பகுதி; upper part of the forehead. *"முன்னெற்றி நரைத்தன போல" (திவ். பெரியாழ்.3. 5:10).*

*[முன் + நெற்றி]*

**முன்னெற்றிமயிர்** *munnerri-mayir,* பெ.(n.) தலையின் முன்பக்க மயிர் (இ.வ.); fore-lock.

*[முன்னெற்றி + மயிர்]*

**முன்னே[1]** *munnē,* கு.வி.எ.(adv.) 1. முன்னால்; முன்னர்; ago; earlier; ahead. *நான்கு நாட்களுக்கு முன்னே அந்த நிகழ்ச்சி நடந்தது. ஒரு நாள் முன்னேயே வந்துவிட்டீர்களே? "முன்னே ஆட்டைப்பிடி பின்னே மாட்டைப் பிடி". "முன்னே ஒரு குறுணி பின்னே ஒரு முக்குறுணி". "முன்னே பார் பின்னே பார் உன்னைப் பார் என்னைப் பார்". "முன்னே பிறந்த காதைப் பார்க்கிலும்*

*பின்னே பிறந்த கொம்பு பலம்" (பழ.).* 2. முன்பு; before. *"முன்னே கொடுத்தா ருயப்போவர்" (நாலடி, 5).* 3. எதிரில்; in the presence of. *"முன்னே யுரைத்தான் முகமனே யொக்கும்" (தேவா.1199, 3).*

ம., க. முந்ந

*[முன்→ முன்னே]*

**முன்னே[2]** *munnē,* இடை.(part.) முன்னால்; முன்னர்; before someone or something.

*[முன்→ முன்னே]*

**முன்னேபின்னே** *munnē-pinnē,* வி.அ. (adv.) முன்பின்; before and after. *"முன்னேபின்னே செத்தால்தான் சுடுகாடு தெரியும்" (கோவை.).*

**முன்னேர்** *mun-n-ēr,* பெ.(n.) உழவில் முதலிற் செல்லும் ஏர் (உ.வ.); leading plough, in ploughing. *"முன்னேர் போன வழியே பின்னேர் போகும்" (கோவை).*

*[முன் + ஏர்]*

**முன்னேர்க்குண்டை** *munnēr-k-kuṇḍai,* பெ.(n.) உழவில் முந்திச் செல்லும் ஏர்மாடு (வின்.); leading team of oxen, in ploughing.

*[முன்னேர் + குண்டை]*

**முன்னேரம்** *munnēram,* பெ.(n.) 1. இளம் பகல்; early times, as forenoon. 2. விடியற் பொழுது; morning twilight. 3. அந்திவேளை (வின்.); evening twilight.

*[முன் + நேரம்]*

**முன்னேற்பாடு** *mun-n-ēṟpāḍu,* பெ.(n.) ஆயத்தப் பணி; preparatory work; preliminaries. *தேர்தல் முன்னேற்பாடுகள் செய்து முடிக்கப்பட்டுள்ளன. ஊருக்குச் செல்வதற்கான முன்னேற்பாடுகளைச் செய்யத் தொடங்கினாள்.*

*[முன் + ஏற்பாடு]*

**முன்னேற்றம்** *mu-n-nēṟṟam,* பெ.(n.) 1. உயர்நிலை; மேம்பாடு; வளர்ச்சி; வளர்ச்சியடைகை; progress; betterment; improvement. *நாட்டின் பொருளியல் முன்னேற்றத்திற்காகப் பல புதிய திட்டங்கள் போடப்பட்டன. அறிவியல் முன்னேற்றங்கள் குமுதாயத்தை மேம்படுத்துவனவாக இருக்க வேண்டும்.* 2. உடல் நலம் சீர்பெறுதல்; improvement in health. *நோய்வாய்ப்பட்ட தலைவரின் உடல்நிலையில் முன்னேற்றம் காணப்படுகிறது என்று மருத்துவ அறிக்கை தெரிவிக்கிறது. உடல்நிலை முன்னேற்றம் அடைந்ததும் வேலைக்கு வருவார்.*

*[முன்னேறு→முன்னேற்றம்.]*

**முன்னேற்று-தல்** *mun-n-ēṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) உயர்நிலையை அடையச் செய்தல்; மேம்படச் செய்தல்; advance. *பொருளியல் துறையில் நாட்டை முன்னேற்றத் திட்டங்கள் போடப்பட்டுள்ளன.*

*[முன் + ஏறு-தல்.]*

**முன்னேறு-தல்** *mun-n-ēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தடையைக் கடந்து முன் செல்லுதல்; to make headway against something. *போரில் படைகள் முன்னேறியிருப்பதாகச் செய்திகள் வந்தன. சுற்றி நின்ற கூட்டத்தைப் பிளந்து கொண்டு முன்னேற முயன்றனர் காவலர்கள்.* 2. உயர்நிலைக்குச் செல்லுதல்; மேம்படச் செய்தல்; progress; go forward; develop. *வாழ்க்கையில் முன்னேற வேண்டும்*

*என்ற எண்ணம் இருக்கிறது. நாடு தொழிற்துறையில் முன்னேற என்ன செய்ய வேண்டும்?* 3. உடல்நிலை சீரடைதல்; improve of health. *தந்தையின் உடல்நிலை முன்னேறுவதை நினைத்து ஆறுதல் கொண்டேன்.* 4. முந்திக்கொள்ளுதல் (வின்.); to anticipate, forestall.

*[முன் + ஏறு–தல்.]*

**முன்னை**[1] *munnai*, பெ.(n.) 1. பழமை; former times, antiquity. *"முன்னைப் பழம் பொருட்கும்" (திருவாச.7:9). "முன்னை நின் றாங்கே விலக்கிய எல்லாநீ" (கலித்.116:3).* 2. தமக்கை; elder sister. *"என்ற னன்னை நும்முன்னை" (கம்பரா. மிதிலைக்.124).* 3. தமையன் (திவா.); elder brother.

க., ம. முந்நெ

*[முன் → முன்னை]*

**முன்னை**[2] *munnai*, பெ.(n.) 1. முன்னைமரப் பொது; firebrand teak, *Premna*. 2. ஆ (பசு) முன்னை; headache-tree. 3. எருமை முன்னை; dusky-leaved firebrand teak. 4. பீநாறி மரம்; woolly - leaved firebrand teak. 5. முன்னை மர வகை; charcoal-tree.

**முன்னைக்கணம்** *munnai-k-kaṇam*, பெ.(n.) கடந்த காலம்; past time. *"முன்னைக் கணத்தி னிறந்தவனும்" (மேருமந்.662).*

*[முன் → முன்னை + கணம்]*

**முன்னைக்கீரை** *munnai-k-kīrai*, பெ.(n.) முன்னை மரத்தின் இலை; leaves of *munnai* tree.

*[முன்னை + கீரை]*

**முன்னைக்கூட்டி** *munnai-k-kūṭṭi*, கு.வி.எ. (adv.) முன்னைக்கூடி (நெல்லை) பார்க்க; see *munnai-k-kūḍi*.

*[முன்னை + கூட்டி]*

**முன்னைக்கூட** *munnai-k-kūḍa*, கு.வி.எ. (adv.) முன்னைக்கூடி (இ.வ.); see *munnai-k-kūḍi*.

*[முன்னை + கூட.]*

**முன்னைக்கூடி** *munnai-k-kūḍi*, கு.வி.எ. (adv.) முன்னமே (இ.வ.); before, already.

*[முன்னை + கூடி.]*

**முன்னைய** *munnaiya*, பெ.எ.(adj. ) முந்திய; previous. *முன்னைய ஆண்டுகளை விட இந்த ஆண்டு நல்ல மழை பெய்துள்ளது.*

*[முன் → முன்னை → முன்னைய]*

**முன்னையோர்** *munnaiyōr*, பெ.(n.) 1. முன்னோர்; predecessors, ancestors. *"முன்னையோரிறந்தார்" (கம்பரா. இந்திரசித். 8).* 2. பெரியோர்; elders. *"முன்னையோர் கொடுத்த நன்மனைக் கிழத்தி யாகிய வந்நிலை" (பதினொ. திருவிடை.7).*

*[முன்னை → முன்னையோர்]*

**முன்னைவினை** *munnai-viṇai*, பெ.(n.) பழவினை; past karma, destiny. *"உழல்வதெல்லாம்...... முன்னை வினையாய் விடும்" (நாலடி, 107).*

*[முன்னை + வினை.]*

**முன்னொட்டு** *mun-ṉ-oṭṭu*, பெ.(n.) ஒரு சொல்லாகத் தனித்து வராமல் ஒரு சொல்லுக்கு முன்னால் இணைக்கப்படும் இடைச்சொல்; prefix.

பொருள் – மென்பொருள்

மென் – முன்னொட்டு

*[முன் + ஒட்டு.]*

**முன்னொற்றி** *mun-n-orri*, பெ.(n.) முதல் அடைமானம்; first or prior mortgage.

*[முன் + ஒற்றி]*

**முன்னோக்கி** *munnōkki*, வி.எ.(adv.) 1. முன்பக்கமாக இருக்கும்; thrusting forward. *முன்னோக்கி நீண்ட பற்கள். முதுகுத் தண்டின் முன்னோக்கிய வளைவு.* 2. வருங்காலத்தைக் கருத்தில் கொண்டு; looking forward. *முன்னோக்கிய பார்வை இல்லையென்றால் முன்னேற்றமும் இல்லை.*

*[முன் + நோக்கி.]*

**முன்னோட்டம்** *mun-n-ōttam*, பெ.(n.) 1. பின்னர் முறையாக நடக்கவிருப்பது எப்படியிருக்கும் என்று தெரிவிக்கும் வகையிலான கணிப்பு; ஒன்றின் செயல்பாடு முதலியவற்றைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு நிகழ்த்தப்படும் ஆய்வு; trial; preview; trial run. *வரும் பொதுத் தேர்தல் பற்றிய முன்னோட்ட ஆய்வு. போக்குவரத்து ஏற்பாடுகள் குடியரசு தலைவரின் வருகைக்குப் போதுமானதா என்பதை அறியக் காவல்துறையினர் முன்னோட்டம் பார்த்தனர்.* 2. மேலெழுந்தவாரியாகப் பார்வையிடுகை; cursory glance or perusal.

*[முன் + ஓட்டம்.]*

**முன்னோட்டுக்கொள்(ளு)-தல்** *mun-n-ōttu-k-kol-*, 13 செ.குன்றாவி. (v.t.) ஆராய்ந்து கொள்ளுதல்; to learn by investigation. *"அவதா ரங்களை முன்னோட்டுக் கொண்டு" (ஈடு, 1: 3, பிர.).*

*[முன் + ஒடு + கொள்(ளு)-தல். ஒடு →ஓடு.]*

**முன்னோடி**[1] *mun-n-ōdi*, பெ.(n.) கொள்ளை நோயுள்ள காலத்தில் தெருவில் உலாவுவதாகக் கருதப்படும் பேய் (வின்.); an evil spirit, supposed to walk the streets in times of pestilence.

*[முன் + ஒடு – முன்னோடு→முன்னோடி.]*

**முன்னோடி**[2] *mun-n-ōdi*, பெ.(n.) 1. இன்றைய விரிவான வளர்ச்சிக்கு அன்று அடிப்படையாக இருந்தது; pioneer, precursor. *நாடகத்தின் முன்னோடி தெருக்கூத்து என்று அவர் குறிப்பிட்டார்.* 2. விரிவாக அமைக்க முன்கூட்டியே சிறு அளவில் ஆய்வு முறையில் செய்யப்படுவது; pilot. *சோயா அவரையில் இருந்து எண்ணெய் எடுக்கும் முன்னோடி ஆலை இது.* 3. முன்மாதிரி; பின்பற்றக் கூடியது; worth following; model. *அந்த எழுத்தாளர் இளைய தலைமுறைக்கு முன்னோடி.*

*[முன் + ஓடி.]*

**முன்னோடும்பிள்ளை** *mun-n-ōdum-pillai*, பெ.(n.) 1. வீட்டு வேலைகளைச் செய்வதில் வலிய வந்து உதவி செய்பவன் (இ.வ.); one who voluntarily helps in managing the affairs of a family. 2. குட்டியாண்டவனது முன்னடியான் (E.T.vi, 182); an attendant god of *kutti-y-āndavan.*

*[முன் + ஓடும் + பிள்ளை.]*

**முன்னோர்** *munnōr*, பெ.(n.) 1. முன் தலைமுறையினர்; predecessors, ancestors. *நமது முன்னோர் சில துறைகளில் மேம்பட்ட நிலை அடைந்திருந்தார்கள். அவர்களுடைய முன்னோர்களைப் பற்றி உசாவிய போது பல சுவையான செய்திகள்*

*(தகவல்கள்) கிடைத்தன.* 2. மந்திரித் தலைவர் (பிங்.); chief ministers. 3. பண்டையவர் (பூர்விகர்); the ancients. *"முன்னோர் மொழி பொருளே யன்றி" (நன்.9).*

*[முன் → முன்னோர்]*

மனித குலத்தில் முன் வாழ்ந்தோர்; ஒரு குடிவழியின் (பரம்பரையின்) மூதாதையர்.

**முன்னோலை** *mun-n-ōlai*, பெ.(n.) எழுதிக் கொடுத்திருப்பதற்கு முன்னுள்ள மூலச்சீட்டு (நாஞ்.); previous records or deeds.

*[முன் + ஓலை.]*

**முன்னோன்[1]** *munnōn*, பெ.(n.) 1. பிள்ளையார் (சூடா.); god Gaṇēša. 2. அருகன் (யாழ்.அக.); Arhat. 3. கடவுள்; God.

*[முன் → முன்னோன்]*

**முன்னோன்[2]** *munnōn*, பெ.(n.) 1. முன் தலைமுறையினன்; predecessor, ancestor. *"தாதைக் கொன்பது வழிமுறை முன்னோன்" (மணிமே.28:123–4).* 2. தகப்பன்; father. *"வாட்குடியின் முன்னோனது நிலை" (பு.வெ. 3:13, கொளு.).* 3. தமையன்; elder brother. *"தம்முன்னோர் தந்தை தாய்" (பு.வெ.9:33).*

*[முன் → முன்னோன்]*

**முனக்கம்** *munakkam*, பெ.(n.) 1. முணு முணுக்கை (நாஞ்.); muttering, murmuring; grumbling. 2. புலப்பம், வேதனைக்குரல்; moan.

*[முனங்கு → முனக்கு → முனக்கம்.]*

**முனகர்** *munagar*, பெ.(n.) கீழ்த்தரமானவன்; low, mean person. *"வினையின் முனகர் துன்னு மின்னாக் கடறு" (திருக்கோ.217).*

*[முனகு → முனகர்]*

**முனகல்** *munagal*, பெ.(n.) மெல்லிய குரலில் வெளிப்படுத்தும் ஒலி; groan. *குழந்தையின் முனகலைக் கேட்டு விழித்துக் கொண்டாள்.*

*[முனகு → முனகல்]*

**முனகு[1]–தல்** *munagu-*, 5 செ.கு.வி.(v.i.) துன்பம் முதலியவை தாங்காமல் மெல்லிய குரலில் தெளிவற்ற வகையில் பேசி எதிர்ப்பைத் தெரிவித்தல்; விருப்பமின்மை, எதிர்ப்பு, சலிப்பு முதலியவற்றை வெளிப்படுத்தும் வகையில் தெளிவில்லாமல் மெல்லிய குரலில் பேசுதல்; முணுமுணுத்தல்; groan with pain; mutter something, as a protest, etc. *இரவு முழுவதும் காய்ச்சலால் முனகிக் கொண்டிருந்தான். எடுபிடி வேலைக்கு நான்தான் கிடைத்தேனா என்று முனகியவாறே சென்றேன். வாய்க்குள்ளே முனகாதே உரக்கப் பேசு!*

*[முணகு → முனகு → முனகு–தல்.]*

**முனகு[2]** *munagu*, பெ.(n.) குற்றம்; defect, fault. *"முனகு தீரத் தொழுதெழு மின்கள்" (தேவா.356, 2).*

*[முனகு[1] → முனகு.]*

**முனங்கு[1]–தல்** *munangu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. குரலையடக்கிப் பேசுதல்; to mutter, murmur; to grumble. 2. வேதனையாற் புலம்புதல்; to moan.

*[முணகு → முனகு → முனங்கு → முனங்கு–தல்.]*

ஒ.நோ. **OE.** moen, Obs. mean, **E.** moan, to make along low murmur of physical or mental suffering, to complain, to lament misfortune, to lament for dead person (வே.க.முல்[5]).

**முனங்கு[2]** *munangu*, பெ.(n.) ஓரம் (இ.வ.); edge, border, side.

முனல் *mupal,* பெ.(n.) 1. முல்லைக் கொடிவகை; Arabian jasmine. 2. காட்டு மல்லிகை; wild jasmine.

முனாக்கம் *mupākkam,* பெ.(n.) சுரை; a creeper or climber, bottle gourd - *Calabash - Logenaria Vulgaris* (சா.அக.).

முனாது *mupādu,* பெ.(n.) 1. முன்னிடத் துள்ளது; that which is in front. *"சித்திரகூட முனாதென" (சீவக.1421).* 2. முன்புள்ளது; that which is earlier. *"எழுவினி வாழியென் னெஞ்சே முனாது" (குறுந்.11:4).*

*[முன்→ முனாது]*

முனி[1]-தல் *muni-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. வெறுத்தல்; to dislike. *"முனித னினைதல் வெரூஉதன் மடிமை" (தொல்.பொருள்.260). "முனிதக நிறுத்த நல்கல் எவ்வம்" (அகநா.98:4). "முனிபடர் உழந்தபாடில் உண்கண்" (குறு.357:1). "துளிகூர் மனத்தார் முனிபடர் உழக்கும்" (நற்.262:5). "முனித்தலைப் புதல்வர் தந்தை" (புறநா.250:8).* 2. சினங் கொள்ளுதல்; to be angry with. *"முடிபொரு ளன்று முனியன் முனியல்" (பரிபா.20:93).*

ம., க., து. முனி.

*[முன்→ முனி→ முனி-தல்.]*

முனி[2] *muni,* பெ.(n.) 1. முனிவன் (பிங்.); saint, sage. *"முனியுந் தம்பியும்...... இனிய பள்ளிகளெய்திய பின்" (கம்பரா. மிதிலைக். 139).* 2. புத்தன் (யாழ்.அக.); the Buddha. 3. அகத்திய முனி; Agastiya - *Šiddar.* 4. தெய்வம்; god.

*[முன்→ முனி. வடவர் காட்டும் மூலம் 'மன்' = கருது. இது முன் என்னும் தென் சொற்றிரிபு.]*

முனி[3] *muni,* பெ.(n.) 1. வில் (திவா.); bow. *"முனிநாண் கோத்து" (உபதேசகா. பஞ்சாக். 96).* 2. யானைக் கன்று; young elephant. *"முனியுடைக் கவளம்போல்" (நற்.360).* 3. சடைப்பேய் (இ.வ.); devil, goblin.

*[முல்→முன்→முனி (வே.க.). முல் = வளைதற் கருத்துவேர். சாய்தல் கோணுதல், வளைதல், நெளிதல், மடங்குதல், திருகுதல், வட்டமாதல், முடிதல், சுற்றுதல், சுழலுதல், புரளுதல், உருளுதல், உருண்டையாதல், திரிதல், திரும்புதல், சூழ்தல் முதலிய பலவும் வளைதற் கருத்தொடு தொடர்புள்ளவையாம்.]*

முனி[4] *muni,* பெ.(n.) 1. அகத்தி; a tree - *Coronilla grand flora.* 2. தேன்; honey.

*[முன்→ முனி.]*

முனிசடிலம் *muni-šadilam,* பெ.(n.) மருக்கொழுந்து (மூ.அ.); southernwood.

முனிசுவ்விரதர் *muni-šuvviradar,* பெ.(n.) தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் ஒருவர் (திருக்கலம்.காப்பு, உரை); an Arhat, one of 24 *Tirttaṅkarar.*

முனித்துருமம் *muni-t-turumam,* பெ.(n.) அகத்தி (மூ.அ.); West Indian pea-tree.

*[முனி[4] → முனித்துருமம்]*

முனித்துறை *muni-t-turai,* பெ(n.) விழா சடங்கு; rites and ceremonies. *"முனித்துறை முதல்வியர்" (பரிபா.11:82).*

*[முனி + துறை]*

முனிதளம் *muni-talam,* பெ.(n.) அகத்தி; a tree - *Sesbania grandi flora.*

முனிந்துரை *munintural,*பெ.(n.) வெந்தயம்; a plant - *Fenu greek - Trigonella foe numgraecum* (சா.அக.).

முனிநன் *muninan,* பெ.(n.) வெறுப்பவன்; one who dislikes or hates. *"நந்தோளிடை முனிநர் சென்ற வாறே" (ஐங்குறு.314).*

*[முனி→முனிநன்]*

முனிப்பூண்டு *muni-p-pūndu,* பெ.(n.) முனிதளம் பார்க்க; see *muni-talam.*

முனிபகா *munipagā,*பெ.(n.) வரகு; a millet - kodo millet-*Paspalum Scrobicu latum* (சா.அக.).

முனிபட்சி *muni-patci,* பெ.(n.) அவல்; flacked rice.

முனிபடர் *muni-padar,*பெ.(n.) வெறுத்தற்குரிய துன்பம்; despise grief. *"முனிபடர் உழந்த பாடில் உண்கண்" (குறுந்.357:1).*

முனிபத்திரி *muni-pattiri,* பெ.(n.) செவ்வகத்தி; red variety of Sesbania grandi flora (சா.அக.).

முனிபித்தலம் *muni-pittalam,* பெ.(n.) தாமிரம் (அரு.அக.); copper.

முனிமரபு *muni-marabu,* பெ.(n.) இறைமை; Godhead, divinity. *"அருமுனி மரபி னான்றவர்" (பரிபா.19:3).*

*[முனி + மரபு]*

முனிமூத்திரம் *muni-mūttiram,* பெ.(n.) 1. கல்லுப்பு (யாழ்.அக.); rock salt. 2. கூர்மை, கல்லுப்பு முதலியவை கலந்த உப்புக்கட்டி (வின்.); salt in lumps, composed of *kūrmai*, kalluppu etc.

*[முனி + மூத்திரம்]*

முனிமை *munimai,*பெ.(n.) முனிவருக்குரிய தன்மை; saintliness. *"முனிமை முகடாய மூவா முதல்வன்" (சீவக.1609).*

*[முனி →முனிமை]*

முனிமையின்வடிவு *munimaiyin-vadivu,* பெ.(n.) சமணர்கள் நோன்பேற்கும் வகை (சைனதீட்சை வகை); a kind of *titcai.* *"முனிமையின் வடிவினை முடியநின்று" (மேருமந்.1200).*

*[முனிமை + இன் + வடிவு]*

முனியகத்தி *muniya-katti,*பெ.(n.) பிரம்பு; rattan-*Calamus rotang* (சா.அக.).

முனியன் *muniyan,*பெ.(n.) சிற்றூர் சிறு தெய்வம் (உ.வ.); a village demon.

மறுவ. முனியாண்டி

*[முனி →முனியன்]*

முனிவர் *munivar,*பெ.(n.) 1. இருடிகள்; hermits, ascetics. *"முனிவர்களும் யோகிகளும்" (திவ்.திருப்பா.6). "பணியிய ரத்தைநின் குடையே முனிவர்" (புறநா.6:17).* 2. பதினெண் கணத்துள் ஒரு தொகுதியினர் (பிங்.); a class of sages, one of *patinen-kanam.* 3. உலகப் பற்றைத் துறந்து தவம் புரிந்து பல ஆற்றல்கள் பெற்றவர்; ascetic sage.

*[முனி → முனிவர்]*

முனிவரன் *munivaran,* பெ.(n.) சிறந்த உயர்வான முனிவர் (முனிசிரேட்டன்); eminent sage. *"தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்" (பு.வெ.சிறப்).*

*[முனி →முனிவரன்]*

முனிவறாமை *muṉi-vaṟāmai,* பெ.(n.) உயிர்த்துன்பம் பன்னிரண்டனுள் ஒன்றான தீராச் சினம் (கோபம்) (பிங்.); unappeasable wrath, as a cause of distress, one of 12 *yuir-t-tuṉbam.*

*[முனிவு + அறு + ஆ(மை)]*

முனிவன் *muṉivaṉ,*பெ.(n.) 1. உலகப்பற்றைத் துறந்த அறிவன் (ஞானி); sage. *"வந்தெதிர்ந்த முனிவனை" (கம்பரா. மிதிலைக்.85). "நீயே வடபான் முனிவன் றடவினுட் டோன்றி" (புறநா.201:8).* 2. கடவுள்; god. *"முனிவன் புத்திரன்" (திருவாலவா. காப்பு, 2).*

*[முனி→முனிவன்]*

முனிவிலனாதல் *muṉivilaṉ-ādal,* பெ.(n.) வணிகர் குணம் எட்டனுள் ஒன்றான சினமின்மை (பிங்.); being without anger, one of eight qualities of merchants.

வணிகர் குணங்கள் : 1. தனிமையாற்றல், 2. முனிவிலனாதல், 3. இடனறிந்தொழுகல், 4. பொழுதொடு புணர்தல், 5. வறுவது தெரிதல், 6. இறுவதஞ்சாமை, 7. ஈட்டல், 8. பகுத்தல்.

*[முனிவு + இலன் + ஆதல்]*

முனிவு *muṉivu,*பெ.(n.) 1. வெறுப்போடு கூடிய சினம்; anger, wrath. *"முனிவு தீர்ந்தோன்" (கம்பரா. வருண.82).* 2. வெறுப்பு (தொல். சொல்.386); dislike, aversion. 3. களைப்பு; fatigue. 4. வருத்தம்; suffering. *"முனிவிகந்திருந்த........ இரவல" (சிறுபாண். 40).* 5. முயற்சி (சிவதரு. சிவத.1, உரை); endeavour.

க. முனிபு, ம. முனிவு.

*[முனி→முனிவு]*

முனிவோன் *muṉivōṉ,*பெ.(n.) நாரை; heron (சா.அக.).

முனீந்திரன் *muṉīndiraṉ,* பெ.(n.) 1. சிறந்த முனிவர்; eminent sage. 2. புத்தன் (சூடா.); the Buddha. 3. அருகன் (சீவக.3094, உரை); Arhat.

*[முனி→ முனீந்திரன்]*

முனை¹-தல் *muṉai-,* 2 செ.கு.வி.(v.i.) பொருதல்; to fight. *"வில்லோர் உழவர் வெம்முனைச் சீறூர்" (நற்.3:5).*

க., து. முநி.

முனை²-தல் *muṉai-,* 2 செ.கு.வி.(v.i.) ஊக்கங் கொள்ளுதல்; to be zealous, enthusiastic. *'அவன் அந்தச் செயலில் முனைந்திருக்கிறான்' (உ.வ.).*

முனை³-தல் *muṉai,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. சினத்தல்; to be angry with; to resent. 2. வெறுத்தல்; to dislike. *"இன்றீம்பாலை முனையின்" (பெரும்பாண்.180).*

க., து. முநி.

முனை⁴-த்தல் *muṉai-,*4 செ.குன்றாவி. (v.t.) எதிர்த்தல்; to attack. *"முனைப்பது நோக்கிவேல் முனையவி ழற்றத்து" (கல்லா.70:16).*

முனை⁵-த்தல் *muṉai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. செயலில் முனைந்து இறங்குதல்; to be active, busy oneself in, bestir oneself. *"முனைத்திடா தசத்துச் சத்தின்முன்" (சி.சி.7:1).* 2. மூண்டு நிற்றல்; to be deeply engaged. 3. எடை கூடுதல்; to be of overweight. *சருக்கரையைக் கொஞ்சம் முனைக்கப் போடு (உ.வ.).* 4. முயற்சி மேற்கொள்ளுதல்; முயலுதல்; take efforts;

attempt. *சிறுகதைகளைத் தொகுத்து நூலாக வெளியிட முனைந்தார். ஒன்றைப் பற்றிச் சிந்திக்க முனையும் போது தான் அதில் உள்ள இன்னல்கள் தெரிய வரும்.*

முனை[6] *munai,*பெ.(n.) 1. போர்; battle, war. *"கடுநெறி முனையகன் பெரும்பாழ்" (பதிற்றுப்.25:9). "முனைதிறை கொடுக்குந் துப்பிற் றன்மலை" (அகநா.13:2).* 2. போர்க் களம்; battle field. *"முனையான் பெருநிரை போல" (குறுந்.80:6). "முனைமுருங்கத் தலைச் சென்றவர்" (புறநா.16:3).* 3. பகைப் புலம்; enemy country. *"முனைபாழ் படுக்குந் துன்னருந் துப்பின்" (குறிஞ்சிப். 128).* 4. பகை; hatred. 5. வெறுப்பு (சூடா.); dislike, aversion. 6. துணிவு (வின்.); boldness, valour. 7. கூட்டம், திரள் (ஈடு, 10. 5:10); crowed, collectiion. 8. குறிப்பிடப்படும் செயல்பாடு நிகழும் ஓர் இடம்; front as the place of action. *போர் முனை.*

க. மொநெ

முனை[7] *munai,*பெ.(n.) தவம்; austerity. *"முனைத் திறத்து மிக்கசீர் முனைவர்" (சீவக.707).*

முனை[8] *munai,*பெ.(n.) 1. முன்; front. *"அத்தி னகர மகர முனையில்லை" (தொல். எழுத்து.125).* 2. முகம் (ஈடு, 10. 5:10); face. 3. நுனி; point, sharpened end, edge. *"வெய்ய முனைத் தண்டு" (சீவக.1136, பாடபேதம்).* 4. கடலுட் செல்லும் நீண்ட கூரிய தரைப்பகுதி; cape, head-land. 5. ஓரம்; கோடி; விளிம்பு; corner of something. *குமரிமுனை.* 6. நீளமுடைய ஒரு பொருளில் அல்லது இணைக்கப்பட்ட ஒன்றின் தொடங்கும் இடம் அல்லது முடியும் இடம்; beginning or end part of a rope, street, etc. or anything connected. *நூலின் ஒரு முனையை எடுத்து ஊசியில் கோத்தான். தெருமுனையில் அந்தக் கடை உள்ளது. தொலைபேசியின் மறுமுனையில் பேசுவது யார் என்று தெரியவில்லை*

தெ. முந, க.மொநெ.

முனை[9] *munai,* பெ.(n.) தலைமை (அக.நி.); superiority, eminence.

முனைகாரன் *munai-kāraṉ,* பெ.(n.) முனைப்புள்ளவன் (வின்.); courageous person; valiant, brave man.

*[முனை[6] + காரன்]*

முனைகுலை-தல் *munai-kulai-,* 2 செ.கு.வி.(v.i.) ஊக்கங் குன்றுதல் (வின்.); to be dispirited, discouraged.

*[முனை + குலை-தல்]*

முனைகேடு *munai-kēḍu,* பெ.(n.) மதிப்புரவின்மை (மரியாதையின்மை) (வின்.); disrespect, insult.

*[முனை + கேடு]*

முனைசுனை *munaišunai,* பெ.(n.) 1. ஒழுங்கற்ற வேறுபாடு (யாழ்.அக.); invidious distinction. 2. ஏய்ப்பு (வஞ்சகம்) (இ.வ.); double dealing.

முனைஞர் *munaiñar,* பெ.(n.) படைத் தலைவர்; commander of an army. *"வேந்துவிடு முனைஞர்" (தொல்.பொருள். 57).*

*[முனை→ முனைஞர்]*

**முனைந்தோர்** *munaindōr,* பெ.(n.) பகைவர் (திவா.); enemies.

*[முனை→முனைந்தோர்]*

**முனைப்பதி** *munai-p-padi,* பெ.(n.) பாசறை (பிங்.); military encampment.

*[முனை + பதி]*

**முனைப்பாடி** *munaippāḍi,* பெ.(n.) வட ஆர்க்காடு தென்னார்க்காடு மாவட்டங்கள் அடங்கிய பகுதி, பழைய நாடுகளுள் ஒன்று; an ancient province comprising portions of North and South Arcot Districts. *"சிறந்த திருமுனைப்பாடித் திறம் பாடுஞ் சீர்ப்பாடு" (பெரியபு. திருநாவு.11) (I.M. P.N.A.387: S.A.737).*

மறுவ. திருமுனைப்பாடி

**முனைப்பாடியார்** *munai-p-pāḍiyār,* பெ.(n.) அறநெறிச்சாரம் என்ற நூலின் ஆசிரியராகிய புலவர்; a poet, author of *A ṟaneṟi-c-cāram.*

*[முனை + பாடியார்]*

**முனைப்பு** *munaippu,* பெ.(n.) ஒரு செயல், பணி முதலியவற்றைச் செய்வதில் காட்டும் மும்முரம்; கவனம்; determination; drive. *நம் அணியினர் இன்னும் சற்று முனைப்பாக விளையாடி யிருந்தால் வெற்றி பெற்றிருக்கலாம். எழுத்தாளன் ஆகிவிட வேண்டும் என்பது அவன் குறிக்கோள், அதே முனைப்பாக இருக்கிறான்.*

*[முனை→முனைப்பு]*

**முனைப்புலம்** *munai-p-pulam,* பெ.(n.) முனைப்பதி பார்க்க (தொல்.பொருள்,57, உரை); see *munai-p-padi.*

*[முனை + புலம்]*

**முனைமழுங்கு[1]-தல்** *munai-maḻuṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) கூர்மை கெடுதல்; to become blunt, as the edge of an instrument.

*[முனை + மழுங்கு-தல்]*

**முனைமழுங்கு[2]-தல்** *munai-maḻuṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) ஊக்கங் குன்றுதல்; to become dispirited, lose courage.

*[முனை + மழுங்கு-தல்]*

**முனைமுகம்** *munai-mugam,* பெ.(n.) 1. போர்க் களத்தின் முன்னிடம்; front of battle. *"முனைமுகத்து நில்லேல்" (ஆத்திசூ.).* 2. போர்க்களம்; battle field. 3. போரின் தொடக்கம்; commencement of battle. *"முனைமுகத்து மாற்றலர் சாய" (குறள், 749).*

*[முனை + முகம்]*

**முனைமேற்செல்(லு)-தல்** *munai-mēṟ-cel-,* 13 செ.கு.வி.(v.i.) பகைமேற் படையெடுத்தல்; to invade an enemy country. *"முனைமேற் சென்றோ ருறைபதி" (திவா.).*

*[முனை + மேற்செல்-(லு)தல்]*

**முனையடுவார்நாயனார்** *munai-y-aḍuvār-nāyaṉār,* பெ.(n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர் (பெரியபு.); a canonized *Šaiva* saint, one of 63.

இவர் இயற்பெயர், முனையடுவார். பொன்னித் திருநாட்டின் திருநீடுரைச் சார்ந்தவர்.

**முனையதரையன்** *munaiya-taraiyan,* பெ.(n.) ஓர் அரசன்; a king (அபி.சிந்.).

**முனையம்** *munaiyam,* பெ.(n.) வானூர்தி நிலையத்தைக் குறிப்பிடும்போது ஒரே நேரத்தில் பல வானூர்திகள் இறங்கும் ஓடுபாதை கொண்ட நிலையம்; airport terminal.

*[முனை→முனையம்]*

**முனையர்** *munaiyar,* பெ.(n.) முனையரையர் பார்க்க; see *munaiyaraiyar.* *"இம்முனையர் பெருந்தகையார்" (பெரியபு. நரசிங்க.2).*

**முனையரையர்** *munaiyaraiyar,* பெ.(n.) முனைப்பாடி நாட்டை ஆண்ட சிற்றரசர்; a dynasty of chiefs who ruled in *Munai-p-pāḍi.* *"காவல னார்நரசிங்க முனையரையர்" (பெரியபு.நரசிங்க.1).*

இவரின் சிறப்புப் பெயர் நரசிங்க முனையரையர். சமயம் சிவனியம். சுந்தர மூர்த்தி நாயனாரைத் தத்தெடுத்து வளர்த்தவர்.

**முனையிடம்** *munai-y-iḍam,* பெ.(n.) 1. போர்க் களம்; battle-field. 2. பாலை நிலத்தூர் (பிங்.); town in a desert tract.

*[முனை + இடம்]*

**முனையுள்ளோன்** *munai-y-uḷḷōn,* பெ.(n.) முனைகாரன் (வின்.) பார்க்க; see *munai-kāran.*

*[முனை + உள்ளோன்]*

**முனையூர்** *munai-y-ūr,* பெ.(n.) பெருங் கதையில் இடம்பெறும் தலைநகரத்தின் பெயர்; capital city. *இடவகனுக்கு உதயணன் கொடுத்த நாடுகளுள், ஒரு நாட்டின் தலைநகரத்தின் பெயர் (அபி.சிந்.).*

**முனையோர்** *munaiyōr,* பெ.(n.) பகைவர்; enemies. *"ஒன்னா முனையோர்க் கொழிக வினித்துயில்" (பு.வெ.4 : 21).*

*[முனை → முனையோர்]*

**முனைவர்** *munaivar,* பெ.(n.) குறிப்பிட்ட துறையில் ஆராய்ச்சி செய்து ஆய்வுக் கட்டுரை அளித்துப் பெறும் உயர்ந்த பட்டம்; Doctorate of Philosophy.

**முனைவன்**[1] *munaivan,* பெ. (n.) 1. கடவுள்; god, as the First Being. *"வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவன்" (தொல். பொருள்.649).* 2. முனிவன்; saint, sage. *"முனைத்திறத்து மிக்கசீர் முனைவர்" (சீவக.707).* 3. தலைவன்; chief. *"முனைவற் குற்றுழி வினைமுற்றி வருவோன்" (திருக்கோ. 329, கொளு.).* 4. புத்தன் (பிங்.); the Buddha. 5. அருகன்; Arhat. *"முனைவனுக் கிறைஞ்சினான் முருக வேளனான்" (சீவக. 1943).*

*[முனை→முனைவன்]*

**முனைவன்**[2] *munaivan,* பெ.(n.) பகைவன் (சது.); enemy.

*[முனை →முனைவன்]*

**முனைவு** *munaivu,* பெ.(n.) 1. வெறுப்பு (தொல்.சொல்.386); aversion, dislike, detest. 2. அவாவின்மை (சூடா.); freedom from desire. 3. வெறுப்போடு கூடிய சினம்; anger, wrath.

*[முனை→முனைவு]*

# மூ

மூ[1] *mū*, பெ.(n.) மகரமெய்யும் ஊகார உயிரும் சேர்ந்து பிறக்கும் உயிர் மெய்யெழுத்து; the compound of ம் and ஊ = மூ.

*[ம் + ஊ – மூ]*

மூ[2] *mū*, பெ.அ.(adj.) மூன்று (வின்.); three. *"மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு" (அகநா.282:8). "ஒருகணை கொண்டு மூவெயி லுடற்றி" (புறநா.55:2).*

க. மூ.

மூ[3]–த்தல் *mū-*, 4 செ.கு.வி.(v.i) 1. அகவை யுயர்தல்; to be senior in age. *"மூத்தோன் வருக வென்னாது" (புறநா.183).* 2. முதுமை யுறுதல்; to become old; to be older than another. *"தமியள் மூத்தற்று" (குறள், 1007).* 3. முடிதல்; to end. *"மூவா முதலா வுலகம்" (சீவக.1).* 4. கேடுறுதல்; to be damaged or spoiled. *"மதிலெய்த மூவாச்சிலை முதல்வர்க்கு" (தேவா.936, 4).*

க. மூது

*[முது → மூ → மூ–த்தல்]*

மூ[4] *mū*, பெ.(n.) மூப்பு (யாழ்.அக.); old age.

*[முது → மூ]*

மூ[5] *mū*, பெ.அ.(adj.) மூன்று என்னும் எண்ணின் பெயரடை; the adjectival form of *mūṉṟu* (மூன்று). *மூவேந்தர், மூவுலகு.*

மூக்கக்காவலம் *mūkka-k-kāvalam*, பெ.(n.) புரசு; a tree - *Butea frondosa* (சா.அக.).

மூக்கடிச்சதைநோய் *mūkkaḍi-c-cadai-nōy*, பெ.(n.) உள்நாக்கின் பின்புறம் தொண்டைக்கும் மூக்குக்கும் இடையில் உள்ள தொண்டைச் சதை (tonsil) அழன்று வீங்கும் நோய்; adenoids.

*[மூக்கடி + சதை + நோய்]*

மூக்கடைப்பான் *mūkkaḍai-p-pāṉ*, பெ.(n.) 1. நீர்க் கோவையினால் ஏற்படும் மூக்கடைப்பு (மருத்.); hindrance to breathing through the nostrils, due to cold. 2. மூக்கு நோய் வகை; polypus in the nose. 3. மாட்டு நோய் வகை; quinsy in cattle.

*[மூக்கு + அடைப்பான்]*

மூக்கடைப்பு *mūkkaḍaippu*, பெ.(n.) மூக்கடைப்பான் (இ.வ.) பார்க்க; see *mūkkaḍaippāṉ*.

*[மூக்கு + அடைப்பு]*

மூக்கணத்தாஞ்சாறு *mūkkaṇattāñjāṟu*, பெ.(n.) மூலிகை நீர் (கோவை.); medicinal herb water.

*[மூக்கணத்தாம் + சாறு]*

மூக்கணாங்கயிறு *mūkkaṇāṅ-gayiṟu*, பெ(n.) மாட்டின் மூக்கில் நுழைத்துத் தலையைச் சுற்றிக் கட்டியிருக்கும் கயிறு;



rope or string drawn through the bridge of the nose of the bullock as a bridle. *மூக்கணாங்கயிற்றைப் பிடித்து இழுத்ததும் மாடு நின்றது.*

*[மூக்கு + கயிறு]*

**மூக்கணாங்கயிறுபோடு[1]-தல்** *mūkkaṇāṅ-gayiṟu-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) வண்டி யிழுக்கும் மாட்டிற்கு மூக்கின் ஒரு துளையில் நுழைத்து மறுதுளையில் வாங்கி தலையைச் சுற்றிக் கட்டுதல்; drawning the rope or string through the bridge of the nose of the bullock.

*[மூக்கணாங்கயிறு + போடு-தல்.]*

**மூக்கணாங்கயிறுபோடு[2]-தல்** *mūkkaṇāṅ-gayiṟu-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) திருமணம் நடைபெறுதல் (கோவை.); to marriage. *உன் பிள்ளைக்கு மூக்கணாங்கயிறு போடணும் (கோவை.).*

*[மூக்கு + அணாம் + கயிறு + போடு-தல்]*

நாட்டுப்புற வழக்காக இச்சொல் பயன் படுத்தப்படுகிறது. ஆண்மகனாய் இருந்தால் கால்கட்டு போடுதல் அதாவது மணம் செய்வித்தலைக் குறித்ததாயிற்று. வீட்டுக்கு அடங்கி சொற்படி கேளாமல் தம் மனம் போன போக்கில் செல்லுபவர்களை நல்வழிப்படுத்தும் கரணியமாக வந்த சொல்லாகும். மேலும் பெண்களாய் இருப்பின் மணம் செய்வித்தலைக் குறித்து தாலிக் கயிறு மூக்கணாங்கயிறாயிற்று. இஃது பெண்ணடிமைக் கொள்கையையொட்டி எழுந்த சொல் எனலாம்.

**மூக்கணாஞ்சுண்டு** *mūkkaṇāñ-juṇḍu,* பெ.(n.) எருமையின் முகத்தில் கட்டும் கயிறு; a rope to tie arround the face of buffalo.

*[மூக்கு + அணாம் + சுண்டு]*

மூக்கணாஞ்சுண்டு இல்லாத மாட்டைப் போல அவன் பிள்ளைத் திரிகிறான் (கோவை.).

**மூக்கணை** *mūkkaṇai,* பெ.(n.) 1. மூக்காங்கயிறு பார்க்க; see *mūkkāṅ-gayiṟu.* 2. கட்டை வண்டியின் முன் பக்கம் உள்ள ஓட்டுநருடைய இருக்கை; driver's seat in front of the cart. 3. முகவணை (இ.வ.) பார்க்க; see *mugavaṇai.*

*[மூக்கு + அணை]*

**மூக்கணைமரம்** *mūkkaṇai-maram,* பெ.(n.) வண்டியின் ஏர்க்கால் மரம்; pole of a cart.

*[மூக்கணை + மரம்]*

**மூக்கந்தண்டு** *mūkkandaṇḍu,* பெ.(n.) மூக்குத்தண்டு (செங்கை.) பார்க்க; see *mūkku-t-taṇḍu.*

*[மூக்கு[1] + தண்டு]*

**மூக்கநாகம்** *mūkka-nāgam,* பெ.(n.) கொம்பேறிமூக்கன் பாம்பு; whip snake.

மறுவ. கண்குத்திப் பாம்பு

**மூக்கப்பன்** *mūkka-p-paṉ,* பெ.(n.) நீதிசாரம் நூலாசிரியர் (அபி.சிந்.); author of Nītišāram.

**மூக்கப்பூயம்** *mūkka-p-pūyam,* பெ.(n.) மூக்கம்பூயம் பார்க்க; see *mūkkam-pūyam*(சா.அக.).

**மூக்கம்** *mūkkam,* பெ.(n.) சீற்றம்; rage. *"படமூக்கப் பாம்பணையானோடு" (தேவா. 1232, 8).*

**மூக்கம்பூயம்** *mūkkam-pūyam,* பெ.(n.) புரசு; a tree - *Butea frondosa* (சா.அக.).

**மூக்கர்** *mūkkar,* பெ.(n.) கீழ்மக்கள் (திவா.); low, vulgar people.

**மூக்கரசா** *mūkkaraśā,* பெ.(n.) பனிப்பயறு; dew gram-*Phaseolus aconitifolius* (சா.அக.).

**மூக்கரட்டை** *mūkkaraṭṭai,* பெ.(n.) மூக்கிரட்டை (இ.வ.) பார்க்க; see *mūkkiraṭṭai* (சா.அக.).

**மூக்கரண்டி** *mūkkaraṇḍi,* பெ.(n.) கொடி வகை; spreading hogweed (சா.அக.).

**மூக்கரணைமூலம்** *mūkkaraṇai-mūlam,* பெ.(n.) மூக்கரணை வேர்; root of *mūkkaraṇai* (சா.அக.).

**மூக்கரத்தவொழுக்கு** *mūkkaratta-v-oḻukku,* பெ.(n.) மூக்கின் வழியே அரத்தம் வெளிப்படுகை; bleeding nose - *Epistaxis* (சா.அக.).

*[மூக்கு + அரத்தம் + ஒழுக்கு.]*

**மூக்கரிகத்தி** *mūkkarikatti,* பெ.(n.) வெற்றிலையினுடைய உடற்பகுதி, நடுத் தண்டு முதலியவற்றை வெட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு வகைச் சிறப்புக் கத்தி; a special kind of knife for cutting the stem of betel leaf.

*[மூக்கு[1] + அரி[1] + கத்தி]*

**மூக்கரிசியுடை-தல்** *mūkkariśi-yuḍai-,* 4 செ.கு.வி.(v.i.) சில்லுமூக்குடைதல்; to bleed in the nose.

*[மூக்கு + அரிசி + உடை-தல்]*

**மூக்கரைச்சாரணை** *mūkkarai-c-cāraṇai,* பெ.(n.) வெண்மையான ஒரு வகைக் கொடி; a creeper (சா.அக.).

**மூக்கறட்டை** *mūkkaṟaṭṭai,* பெ.(n.) 1. ஒரு பூடு; a prostate plant - hog weed - *Bauhavia procumbens* (சா.அக.). 2. மூக்கிரட்டை (யாழ்.அக.) பார்க்க; see *mūkkiraṭṭai.*

**மூக்கறிவு** *mūkkaṟivu,* பெ.(n.) மோப்பத் தாலறிகை (வின்.); scent, sense of smell.

*[மூக்கு[1] + அறிவு]*

**மூக்கறு[1]-த்தல்** *mūkkaṟu-,* 4 செ.கு.வி. (v.i.) மூக்கை அறுத்தல்; to disfigure one by cutting off one's nose. *"தங்கையும் மூக்கறுத்தாள் தான் தானே" (இராமநா. உயுத்.44).*

*[மூக்கு[1] + அறு-த்தல்]*

**மூக்கறு[2]-த்தல்** *mūkkaṟu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ஒரு சூழ்நிலையில் தெரிந்தோ தெரியாமலோ ஒன்றை வெளிப்படுத்துவதன் மூலம் ஒருவரை இழிவுபடுத்துதல்; humiliate; snub. 2. மானக்கேடு (அவமானம்) செய்தல் (இராமநா.உயுத்.44); to put one to disgrace. *"முதலாளி சொன்னது முத்தாபோச்சு தொழிலாளி சொன்னது மூக்கறுந்து போச்சு" (பழ.).*

*[மூக்கு + அறு-த்தல்]*

**மூக்கறுத்தான்** *mūkkaṟuttāṉ,* பெ.(n.) மூக்கிரட்டை (சங்.அக.) பார்க்க; see *mūkkiraṭṭai.*

*[மூக்கு + அறுத்தான்]*

**மூக்கறுப்பான்** *mūkkaṟuppāṉ,* பெ.(n.) மூக்குத் தொடர்புடைய ஒரு நோய்; a disease of the nose.

*[மூக்கு + அறுப்பான். மூக்கை அறுப்பது போன்று வலியைத் தரும் நோய்.]*

**மூக்கறுப்பு** *mūkkaṟuppu,* பெ.(n.) மானக் கேடு; disgrace. *"என் குடிக்கு ஒரு மூக்கறுப்பா" (இராமநா.உயுத்.44).*

**மூக்கறுபடு-தல்** *mūkkaṟu-paḍu-,*20 செ. கு.வி.(v.i.) இழிவுபடுத்துதல்; get snubbed; degrade one by nose-cut. *பக்கத்து வீட்டுக்காரருக்காக ஞாயம் பேச வந்து மூக்கறுபட்டுப் போனேன்.*

*[மூக்கு + அறு-படுதல்]*

**மூக்கறை** *mūkkaṟai,* பெ.(n.) குறைபாடு உடைய மூக்கினைப் பெற்ற-வன்-வள்-து; person or animal with a defective nose. *"மூக்கறை மட்டை மகாபல காரணி" (திருப்பு.266). 'மூக்கறையானுக்கு வாழ்க்கைப்பட்டால் முன்னும் போக விடான்; பின்னும் போக விடான்' (பழ.). 'மூக்கறைக்கு முகுரம் கட்டினால் சினம் (கோபம்) வரும்' (பழ.). 'மூக்கறையன் கண்ணாடியைப் பகைத்தது போல' (பழ.).*

க. மூகொறெ.

*[மூக்கு + அறை. அறு→அறை]*

**மூக்கறைச்சி[1]** *mūkkaṟaicci,* பெ.(n.) குறை மூக்குள்ளவள்; woman with a defective nose. *"உன்னைத் தனித்து உகப்பாள் மூக்கறைச்சியன்றோ" (ஈடு, 10. 3:9).*

க. முகொறதி

*[மூக்கறையன்→மூக்கறைச்சி]*

**மூக்கறைச்சி[2]** *mūkkaṟaicci,* பெ.(n.) 1. அரிதாரம்; yellow orpiment. 2. செடி வகை; a plant.

**மூக்கறையன்** *mūkkaṟaiyaṉ,* பெ.(n.) குறை மூக்குள்ளவன் (உ.வ.); man with a defective nose. *"மூக்கறையன் கண்ணாடியைப் பகைத்தது போல" (பழ.).*

க. மூகொறெய.

*[மூக்கறை→மூக்கறையன்]*

**மூக்கன்[1]** *mūkkaṉ,* பெ.(n.) பெரிய மூக்குள்ளவன் (வின்.); man with a large or prominent nose.

*[மூக்கு→மூக்கன்]*

**மூக்கன்[2]** *mūkkaṉ,* பெ.(n.) மீன்கொத்தி; king fisher. *"ஒல்காச் சிவல்மூக்க னொண் புறவு" (சினேந்.261).*

*[மூக்கு→மூக்கன்]*

மூக்கு நீண்ட பறவை வகை.

**மூக்கன்[3]** *mūkkaṉ,* பெ.(n.) 1. கீழ் மகன் (திவா.); low, vulgar man. 2. கடுஞ்சினம் (இ.வ.); rage.

**மூக்கன்[4]** *mūkkaṉ,* பெ.(n.) கொம்பேறி மூக்கன் எனும் பாம்பு வகை; a kind of snake. (சா.அக.).

*[மூக்கு→மூக்கன்]*

மூக்கு நீண்ட பாம்பு.

**மூக்கன்சம்பா** *mūkkaṉ-šambā,* பெ.(n.) சம்பா நெல்வகை; a kind of *šambā* paddy. *"மூக்கன் சம்பாச் சிறிய முள்ளுச்சம்பா" (நெல்விடு.181).*

**மூக்கன்வாளை** *mūkkaṉ-vāḷai,* பெ.(n.) மீன்வகை; a kind of fish. *"பவளைவாளை மூக்கன் வாளை" (பறாளை.பள்ளு.16).*

*[மூக்கன் + வாளை]*

**மூக்காங்கயிறு** *mūkkāṅgayiṟu,* பெ.(n.) எருத்தின் மூக்கைத் துளைத்துப் பூட்டுங் கயிறு (வின்.); rope or string put through a bullock's nose as a curb.

மறுவ. மூக்கணாங்கயிறு

*[மூக்கு + ஆம் + கயிறு.]*

**மூக்காங்கொழுந்து** *mūkkāṅgoḻundu,* பெ.(n.) மூக்கின் நுனி (வின்.); tip of the nose.

*[மூக்கு + ஆம் + கொழுந்து.]*

**மூக்காணி** *mūkkāṇi,* பெ.(n.) மாட்டு வண்டி நிலத்தில் ஊன்ற உதவும் கட்டை (கோவை.); pole use to instal a cart.

*[மூக்கு + ஆணி]*



**மூக்காந்தண்டு** *mūkkāntaṇḍu,* பெ.(n.) மூக்கினுடைய நடுத்தண்டு; bridge of the nose.

மறுவ. மூக்குத்தண்டு

*[மூக்கு + ஆம் + தண்டு = மூக்கின் எலும்புள்ள பாகம்.]*

**மூக்காமண்டை** *mūkkā-maṇḍai,* பெ.(n.) மூக்குத்தண்டு (இ.வ.) பார்க்க; see *mūkku-t-taṇḍu.*

*[மூக்கு + ஆ + மண்டை.]*

**மூக்கால்நீரருந்தல்** *mūkkāl-nīr-arundal,* பெ.(n.) மூக்கின் மூலம் தண்ணீர் குடிக்கை; to take water through nostrils - this is a cure for eye diseases (சா.அக.).

*[மூக்கு + ஆல் + நீர் + அருந்தல்.]*

**மூக்காலழு-தல்** *mūkkāl-aḻu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சிணுங்குதல் (உ.வ.); to whine, snivel, indicating discontent or unwillingness. 2. சிறிய செயலுக்குப் பெருமுயற்சி யெடுத்துக் கொள்ளுதல்; to take more effort for less work. *இந்தச் சிறிய வேலை செய்வதற்கே நீ மூக்காலழுகிறாய். நான் இதற்குமேல் செய்திருக்கிறேன் (உ.வ.).*

*[மூக்கால் + அழு-தல்.]*

**மூக்காவளை**[1] *mūkkā-vaḷai,* பெ.(n.) ஒரு வகை முள் பூடு; a thorny plant (சா.அக.).

**மூக்காவளை**[2] *mūkkā-vaḷai,* பெ.(n.) மர வகை (யாழ்.அக.); a tree.

மறுவ. மூக்காவனை

**மூக்காவனை** *mūkkāvaṉai,* பெ.(n.) கற்சூரை (வின்.); spurious wild indigo.

**மூக்காவேளை** *mūkkāvēḷai,* பெ.(n.) மூக்காய்வேளை பார்க்க; see *mūkkā-y-vēḷai.*

**மூக்கிகம்** *mūkkigam,* பெ.(n.) வசம்பு ; a plant, sweet flag - *Acorus Calamus* (சா.அக.).

மறுவ. மூக்கில்

மூக்கிரட்டை *mūkkiraṭṭai,* பெ.(n.) கொடி வகை (வின்.); spreading hog weed- *Boer haavia diffusa.*

மூக்கில் *mūkkil,* பெ.(n.) மூக்கிகம் பார்க்க; see *mūkkigam.*

மூக்கில்நீர்பாய்-தல் *mūkkil-nīr-pāy-,* 1 செ.கு.வி.(v.i.) மூக்கில் நீர்வடிதல்; running nose - *Catarrh* of the nose (சா.அக.).

*[மூக்கில் + நீர் + பாய்-தல்.]*

மூக்கில்விரலைவை-த்தல் *mūkkil-viralai-vai-,* 4 செ.குன்றாவி.(v.t.) வியப்படைதல்; be pleasantly surprised. *பாவாணரின் மொழி ஆராய்ச்சியை உணர்ந்த மூதறிஞர்கள் தமது மூக்கில் விரலை வைத்தனர்.*

*[மூக்கில் + விரல் + வை-த்தல்]*

மூக்கில்வேர்[1]-த்தல் *mūkkil-vēr-,* 4 செ.கு.வி.(v.i.) இரையின் மோப்பத்தால் கழுகுக்கு மூக்கில் வேர்வை யுண்டாதல்; to sweat in the nose like a vulture which scents its prey.

*[மூக்கில் + வேர்-த்தல்]*

மூக்கில்வேர்[2]-த்தல் *mūkkil-vēr-,* 4 செ.கு.வி.(v.i.) ஒருவர் பிறருக்குத் தெரிந்திருக்காது என்று நினைக்கிற செய்தியை மற்றொருவர் எப்படியோ தெரிந்திருத்தல், முன்னடையாளந் தெரிதல்; sense instinctively something one is after; nose out something; to get aclue or scent. *கடன் கேட்டு வந்துவிட்டானா? எனக்கு நேற்று பணம் வந்தது இவனுக்கு மூக்கில் வேர்த்திருக்கும்.*

*[மூக்கில் + வேர்-த்தல்]*

மூக்கிலழகி *mūkkil-aḻagi,* பெ.(n.) நிலக் குமிழ் மரம்; Kashmere tree - *Gmelina arborea.*

மூக்கிலி *mūkkili,* பெ.(n.) 1. குறை மூக்கு உள்ள-வன்-வள்-து; person or animal with a defective nose. *"மூக்கிலி முகத்தில்" (பிரபுலிங்.வசவண்.31).* 2. பசலை வகை, சிறு பசளை; large-flowered purslane. 3. நடைவழியில் முளைக்கும் ஒரு வகைப்பூடு, சிறுபூளை; a common wayside weed. 4. செடிவகை (கோஷ்டம்); Arabian costum.

தெ. முக்கிடி.

*[மூக்கு→மூக்கிலி]*

மூக்கிழந்தான் *mūkkiḻandāṉ,* பெ.(n.) ஒருவகை வெண்கொடி (மூக்கரைச் சாரணை); a white creeper - *Trianthima monogyna* (சா.அக.).

மூக்கிற்கரியார் *mūkkiṟkariyār,* பெ.(n.) குன்றிமணி; a twiner - *Abrus precatorius* (சா.அக.).

மூக்கிற்கல் *mūkkiṟ-kal,* பெ.(n.) காந்த ஆற்றல் உள்ள ஒருவகை இரும்புக்கட்டி (வின்.); black loadstone, magnetic oxide of iron.

மறுவ. காகச்சிலை

மூக்கிறைச்சி *mūkkiṟaicci,* பெ.(n.) ஒரு பூடு; a plant (சா.அக.).

மூக்கினி *mūkkiṉi,* பெ.(n.) 1. முந்திரி மரவகை; cashew tree - *Anacardium occidentale.* 2. கொடிமுந்திரி (திராட்சை); common grape vine.

**மூக்கு**[1] *mūkku,* பெ.(n.) 1. மூச்சு இழுத்து விடுதற்கும் நறுமணத்தை உணர்வதற்கும் பயன்படுகின்ற உடல் உறுப்பு; nose, nostril. *"மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே" (தொல். பொருள். 582). "உள்ளூன் வாடிய சுரிமூக்கு நொள்ளை" (அகநா53:8). "கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்ப" (புறநா.249:1). "அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி" (நற்.6:7).* 2. பறவையலகு (திவா.); bird's beak bill. *கோழி குப்பையைக் காலால் கிளறி மூக்கால் புழுவைக் கொத்திற்று. அவன் கிளி மூக்குக்காரன்.* 3. யானைத் துதிக்கை; elephant's trunk. *"மூரி யேழ் கடலுந்தரு மூக்கின" (தக்கயாகப்.273).* 4. ஏன வாயிலுள்ள மூக்கு போன்ற உறுப்பு; nose - shaped part of a cup, etc. spout of kettle or pot. *"கலசலப்பானை யொன்று மூக்குமடியுமுட்பட" (தெ.இ.கல்.தொ.2:5).* 5. வண்டிப்பாரின் தலைப்பகுதி; nose - shaped end of the pole of a cart. *"காடி வைத்த கலனுடை மூக்கின்" (பெரும்பாண். 57).* 6. முளை தோன்றும் வித்தின் முனை; germinating end of seeds. *"குன்றி மூக்கிற் கரியாருடைத்து" (குறள், 277).* 7. இலைக்காம்பு; base or stem of a leaf. *"மாஅத்து மூக்கிறு புதிர்ந்த" (ஐங்குறு.213).* 8. குறுநொய்; குறுநொய்யரிசி (இ.வ.); broken ends of rice.

தெ. மூக்கு; க. மூகு; ம. மூக்கு; து. மூகு.

*[முகத்தல் = மூக்கால் மணத்தை நுகர்தல். முக→முகு→முக்கு→மூக்கு = முகரும் உறுப்பு. முக→முகர்–தல் = மணத்தை நுகர்தல் (மு.தா. 44).]*

**மூக்கு**[2] *mūkku,* பெ.(n.) முரட்டுப் பேச்சு; rude talk. *"மூக்குப் பேசுகின்றா னிவனென்று" (திவ்.பெரியாழ்.5. 1:1).*

**மூக்குக்கண்ணாடி** *mūkku-k-kaṇṇāḍi,* பெ.(n.) பார்வைக் குறையுடையவர்கள் தங்கள் பார்வையைச் சரியாக்கிக் கொள்ள கண்களுக்குமுன் அணியும் ஒருவகை ஆடி; spectacles.

*[மூக்கு + கண்ணாடி]*

மூக்கின் மீது பொருத்தி ஒரு சட்டகத்தின் மூலம் இரண்டு கண்களுக்கும் நேராக நிற்குமாறு உள்ள ஆடி அமைப்பு. மூக்கின்மேல் பொருந்தியிருத்தலால் மூக்குக்கண்ணாடி எனப்பட்டது.



**மூக்குக்கணம்** *mūkku-k-kaṇam,* பெ.(n.) கணை நோய் வகை (பாலவா.41); a disease.

*[மூக்கு + கணம்]*

**மூக்குக்குத்து–தல்** *mūkku-k-kuttu-,* 5 செ.கு.வி.(v.i.) சிறுமியின் மூக்கில் மூக்குத்தி போன்ற நகைகளை மாட்டுவதற்காக துளையிடுதல்; to perforate the nose as of a girl - child to fix the nose-jewel.

*[மூக்கு + குத்து–தல்]*

சிற்றூர்களில் சிறுமிகளுக்கு மட்டுமின்றி, தொடர்ந்து மூன்று குழந்தைகள் பெற்று இறந்துவிடின் மூன்றாவதாகப் பிறக்கும் குழந்தைக்கு பெண் குழந்தையாக இருந்தால்

பிறந்தவுடனே மூக்குக்குத்தி மூக்கம்மாள், மூக்காயி எனப் பெயரிடுவதும், ஆண் குழந்தையாக இருந்தாலும் மூக்குக் குத்தி மூக்கன், பிச்சை எனப் பெயரிடுவதும் வழக்காம்.

**மூக்குக்கொழுந்து** *mūkku-k-koḷundu,* பெ.(n.) மூக்கினுடைய நுனிப்பகுதி (வின்.); tip of the nose.

மறுவ. மூக்காங்கொழுந்து

*[மூக்கு + கொழுந்து.]*

**மூக்குக்கோலா** *mūkku-k-kōlā,* பெ.(n.) பெரிய மூக்கினை உடைய கோலா மீன் (தஞ்சைமீன்.); a kind of sword fish with long nose.

*[மூக்கு + கோலா.]*

**மூக்குச்சட்டி** *mūkku-c-caṭṭi,* பெ.(n.) சாறு முதலியன ஊற்றுவதற்குப் பயன்படும் மூக்குள்ள ஏன வகை (உ.வ.); a vessel with a projecting lip, used to pour liquid food.

*[மூக்கு + சட்டி.]*

நீர்வடிய உதவும் மூக்கு போன்ற ஏன வகை.



**மூக்குச்சதை** *mūkku-c-cadai,* பெ.(n.) மூக்கில் வளர்ந்த தசை; adenoids - *Polypus* (சா.அக.).

*[மூக்கு + சதை.]*

**மூக்குச்சலாகை** *mūkku-c-calāgai,* பெ.(n.) தமிழ் மருத்துவத்தில் குறிப்பிடப்பட்டுள்ள 26 வகையான கருவிகளில் மூக்கினுள் பயன்படுத்தப்படும் இடுக்கிக் கருவி; one of the 26 surgical instruments mentioned in Tamil Medicine - *Nasal forceps.*

*[மூக்கு + சலாகை.]*

**மூக்குச்சளி** *mūkku-c-caḷi,* பெ.(n.) மூக்கில் இருந்து வெளிவரும் சளி; mucus of the nose, snivel, catarrhal discharge. *மூக்கிருக்கிற மட்டும் சளி உண்டு (பழ.).*

*[மூக்கு + சளி.]*

**மூக்குச்சாத்திரம்** *mūkku-c-cāttiram,* பெ.(n.) மூக்கு வழியாக மூச்சுக்காற்று வெளி வருவதைக் கொண்டு குறி சொல்லுவதைப் பற்றிய நூல்; art of divination by a study of respiration.

*[மூக்கு + சாத்திரம்.]*

**மூக்குச்சிந்து-தல்** *mūkku-c-cindu-,* 5 செ.கு.வி.(v.i.) மூக்குச்சளியை வெளிப் படுத்துதல்; to blow the nose.

*[மூக்கு + சிந்து-தல்.]*

**மூக்குச்சீறு-தல்** *mūkku-c-cīṟu-,* 5 செ. கு.வி. (v.i.) மூக்குச்சிந்து-தல் பார்க்க (வின்.); see *mūkku-c-cindu-.*

*[மூக்கு + சீறு-தல்.]*

**மூக்குச்சுழி-த்தல்** *mūkku-c-cuḻi-,* 4 செ. கு.வி.(v.i.) இகழ்ச்சிக் குறியாக மூக்கை நெரித்துத் திருப்புகை (யாழ்.அக.); to turn up one's nose in contempt.

*[மூக்கு + சுழி-த்தல்.]*

**மூக்குச்செள்ளு** *mūkku-c-cel̤l̤u,* பெ.(n.) அரிசிமாவு முதலியவற்றில் இருக்கும் சிறிய கருப்புப் பூச்சி (கோவை.); a black pest found in flour.

மறுவ. மூக்குவண்டு.

*[மூக்கு + செள்ளு.]*

**மூக்குடைபடு-தல்** *mūkkuḍaipaḍu-,* 20 செ.கு.வி.(v.i.) மூக்கறுபடு-தல் பார்க்க; see *mūkkaṟu-paḍu-.*

*[மூக்கு + உடைபடு-தல்.]*

**மூக்குண்ணி** *mūkkuṇṇi,* பெ.(n.) மூக்குப் புண்; ulcer destroying the nose (சா.அக.).

**மூக்குத்தடை** *mūkku-t-taḍai,* பெ.(n.) பெண்டிர் பூணும் மூக்கணி, மூக்குத்தி; nose - jewel worn by women.

*[மூக்கு + தடை.]*

**மூக்குத்தண்டு** *mūkku-t-taṇḍu,* பெ.(n.) மூக்கின் எலும்புள்ள மேற்பாகம்; bridge of the nose.

*[மூக்கு + தண்டு]*

**மூக்குத்தழுக்கி** *mūkku-t-tal̤ukki,* பெ.(n.) மூக்குத்தளுக்கு (யாழ்.அக.) பார்க்க; see *mūkku-t-tal̤ukku.*

**மூக்குத்தளுக்கு** *mūkku-t-tal̤ukku,* பெ.(n.) மூக்குத்தி, 1 பார்க்க; see *mūkkutti, 1.*

*[மூக்கு + தளுக்கு]*

**மூக்குத்தி**[1] *mūkkutti,* பெ.(n.) 1. பெண்கள் மூக்கு நுனியின் பக்கவாட்டுப் பகுதியில் துளையிட்டு அணிந்து கொள்ளும் சிறிய அணி (தெ.இ.கல்.தொ.2:339); nose - jewel worn by women. *"முத்தமிட வொட்டாத மூக்குத்தியைக் கழற்றி" (விறலி விடு.569).* 2. கொடி வகை; blunt leaved hogweed, *Boerhaavia verticillata.* 3. மூக்கொற்றி, 3 பார்க்க; see *mūkkoṟṟi, 3.*

மறுவ. மூக்குவாளி, மூக்கொற்றி

க., து. மூகுதி; ம. மூக்குத்தி.

*[மூக்கொற்றி→மூக்குத்தி]*



**மூக்குத்தி**[2] *mūkkutti,* பெ.(n.) மரவகை (கோவை); a kind of wood.

**மூக்குத்திக்காய்** *mūkkutti-k-kāy,* பெ.(n.) மருதன் காய்; a creeper (சா.அக.).

**மூக்குத்திச்செடி** *mūkkutti-c-ceḍi,* பெ.(n.) ஒருவகைச் செடி; a shrub - *Lantana indica.*

*[மூக்குத்தி + செடி]*

**மூக்குத்திப்பூ** *mūkkutti-p-pū,* பெ.(n.) மூக்குத்தி வடிவிலானப்பூ; flower of Lantana indica.

*[மூக்குத்தி + பூ.]*

**மூக்குத்திப்பூடு** *mūkkutti-p-pūḍu,* பெ.(n.) ஒருவகைப் பூண்டு; a plant (சா.அக.).

*[மூக்குத்தி + பூடு]*

**மூக்குத்திருகு** *mūkku-t-tirugu,* பெ.(n.) மூக்குத்தி, 1 பார்க்க; see *mūkkutti, 1.*

*[மூக்கு + திருகு]*

**மூக்குத்தூள்** *mūkku-t-tūḷ,* பெ.(n.) மூக்குப்பொடி பார்க்க; see *mūkku-p-poḍi. "மூக்குத்தூள் போடாத முண்டத்துக்கு, முப்பது பணத்தில் வெள்ளி டப்பி" (பழ.).*

*[மூக்கு + தூள்]*

**மூக்குநீர்** *mūkku-nīr,* பெ.(n.) மூக்குச்சளி; the watery mucus from the nostrils due to snot.

*[மூக்கு + நீர்]*

**மூக்குநீர்ப்பாய்ச்சல்** *mūkkunīr-pāyccal,* பெ.(n.) மூக்கிலிருந்து நீர் வடியும் சளி நோய்; a kind of cool disease.

மறுவ. நீர்க்கோர்வை, தடுமன்.

*[மூக்குநீர் + பாய்ச்சல்]*

**மூக்குநீர்வடிதல்** *mūkkunīr-vaḍidal,* பெ.(n.) மூக்கில் வழியும் சளி; watery discharge from the nostrils.

*[மூக்குநீர் + வடிதல்.]*

**மூக்குப்பிடிக்க** *mūkku-p-piḍikka,* வி.அ.(adv.) அளவுக்கு அதிகமாக குடித்தல்; அளவுக்கு அதிகமாக உண்ணுதல்; eat to one's fill or to surfeit. *திருமண வீட்டில் மூக்குப் பிடிக்க சோறு உண்டு வந்தாயா?*

*[மூக்கு + பிடிக்க]*

**மூக்குப்பிடிக்கவுண்(ணு)-தல்** *mūkku-p-piḍikka-v-uṇṇu-,* 16 செ.கு.வி.(v.i.) அளவுக்கதிகமாக உண்ணுதல்; அளவுக்கு அதிகமாக குடித்தல் (உ.வ.); to eat to surfeit.

*[மூக்குப்பிடிக்க + உண்ணு-தல்.]*

**மூக்குப்பிழிதல்** *mūkku-p-piḻidal,* பெ.(n.) ஆண்பிள்ளையாய்ப் பிறக்க வேண்டுமென்று கருப்பமான பெண்களுக்கு நான்கு, ஆறு அல்லது எட்டாவது மாதத்தில் செய்யப்படும் சடங்கு (புஞ்சவனம்); a ceremony during the pregnancy of a woman, performed with a view of securing a male child.

*[மூக்கு + பிழிதல்.]*

**மூக்குப்பிளவை** *mūkku-p-piḷavai,* பெ.(n.) மூக்கில் வரும் ஒருவகைப் புண் (யாழ்.அக.); an abscess in the nose.

*[மூக்கு + பிளவை.]*

**மூக்குப்பீ** *mūkku-p-pī,* பெ.(n.) மூக்கில் உள்ள உலர்ந்த சளிப்பொருக்கு (இ.வ.); dried mucus of the nose.

*[மூக்கு + பீ.]*

**மூக்குப்பீனசம்** *mūkku-p-pīṉašam,* பெ.(n.) 1. மூக்கில் உண்டாகும் ஒருவகை எரிச்சல் (பீனசரோகம்) நோய்; inflammation of the nose. 2. மூக்கில் சதை வளரும் நோய்; polypus in the nose.

*[மூக்கு + பீனசம்]*

**மூக்குப்புத்து** *mūkku-p-puttu,* பெ.(n.) மூக்கில் ஏற்படும் புற்றுநோய்; cancer of the nose (சா.அக.).

*[மூக்கு + புத்து. புற்று→புத்து).]*

**மூக்குப்புலாக்கு** *mūkku-p-pulākku,* பெ. (n.) மூக்கில் தொங்கவிடப்படும் ஓர் அணி (கோவை.); hanging ornament of nose worn by women.

*[மூக்கு + புலாக்கு]*

பெண்கள் காதுகளில் அணியும் அணிகலன்களுள் தோடு என்பது காதுகளில் ஒட்டினாற் போன்றும் தொங்கட்டான், தோலாக்கு, லோலாக்கு போன்றவை காதுகளில் தொங்கினாற் போன்றும் அணியும் அணிகலன்களாகும். இவை போன்றே மூக்கின் தண்டுப் பகுதியில் துளையிட்டு தொங்கினாற் போன்று அணியும் அணிகலன் மூக்குப்புலாக்கு. இஃது பழங்குடி மக்கள் அணியும் அணிகலனாகும்.



**மூக்குப்புழு** *mūkku-p-pulu,* பெ.(n.) ஒரு வகை புழு; maggot in the nose (சா.அக.).

**மூக்குப்பூரி** *mūkku-p-pūri,* பெ.(n.) 1. முதலிரண்டு ஆண் குழந்தைகள் பிறந்தவுடன் இறக்க, மூன்றாவது பிறந்தப் பிள்ளையும் அவ்வாறே இறந்து விடுமோ என்ற பயத்தில் அதைத் தடுப்பதற்காக மூக்குக் குத்தப் பெற்ற ஆண் குழந்தை; male child who is born after the early death of the first two previous male children of the same parents and whose nose is perforated in the belif that its death in childhood will thereby be averted. 2. பிளந்த மேலுதடு உள்ளவன்; hare - lipped.

*[மூக்கு + பூரி. பீறு→பூறு→பூறி→பூரி.]*

**மூக்குப்பூரு-தல்** *mūkku-p-pūru-,* 5 செ.கு.வி.(v.i.) மூக்குக்குத்து-தல் பார்க்க; see *mūkku-k-kuttu-.*

*[மூக்கு + பூரு-தல்]*

**மூக்குப்பூறி** *mūkku-p-pūri,* பெ.(n.) மூக்குப்பூரி பார்க்க; see *mūkku-p-pūri.*

**மூக்குப்பொட்டு** *mūkku-p-pottu,* பெ.(n.) மூக்குத்தி, 1 பார்க்க; see *mūkkutti, 1.*

*[மூக்கு + பொட்டு]*

**மூக்குப்பொடி** *mūkku-p-podi,* பெ.(n.) 1. (மூக்கால் உறிஞ்சப்படும்) புகையிலைத் தூள் (பொடி); snuff. 2. மூக்கிற்காகப் பயன்படுத்தும் ஒருவகைப் பொடி; a medicated powder used as a snuff in diseases.

*[மூக்கு + பொடி.]*

**மூக்கும்முழியுமாக** *mūkkum-muli yumāga,* வி.அ.(adv.) முக அழகோடு, முகப் பொலிவாக; with well - pronounced features. *உனக்குப் பார்த்திருக்கும் பெண் மூக்கும் முழியுமாக அழகாக இருக்கிறாள். குழந்தை மூக்கும் முழியுமாக இருக்கிறது.*

*[மூக்கு + முழியுமாக.]*

அளவான மூக்கும் விழியமைப்பும் உடைய பெண்ணை மூக்கு முழியுமாக இருக்கிறாள் என்று கூறுவது வழக்கு. 'விழிக்கிறாய்' என்பதை 'முழிக்கிறாய்' என்பது உலக வழக்கு. 'மூக்கும் விழியுமாக' என்பது 'மூக்கும் முழியுமாக' என்று வழங்குகிறது.

**மூக்குமீன்** *mūkku-mīṉ,* பெ.(n.) சுறா வகையைச் சேர்ந்த மீன்; a kind of sword fish.

*[மூக்கு + மீன்]*



**மூக்குமுட்ட** *mūkku-muṭṭa,* வி.எ.(adv.) மூக்குப்பிடிக்க பார்க்க; see *mūkku-p-piḍikka.*

*[மூக்கு + முட்ட]*

**மூக்குயர்[1]-தல்** *mūkkuyar-,* 2 செ.கு.வி.(v.i.) மூக்கு நீண்டு காணுகை; இது ஒரு வகை இறப்பிற்கான குறி என்பர்; nose appearing to be elongated, this is one of the symptoms of death.

*[மூக்கு + உயர்-தல்]*

**மூக்குயர்[2]-த்தல்** *mūkkuyar-,* 2 செ.கு.வி. (v.i.) பிறந்த குழந்தையின் மூக்கைச் சப்பையாகாமலிருக்க இழுத்து விடுதல்; to pinch up the nose of a new - born infant to prevent it being flat - nosed. *"அண்ணா உரிஞ்சி மூக்குயிர்த்தார்" (சீவக.2703).*

*[மூக்கு + உயர்-த்தல்]*

**மூக்குரட்டை** *mūkkuraṭṭai,* பெ.(n.) மூக்கிரட்டை பார்க்க; see *mūkkiraṭṭai.*

**மூக்குரணம்** *mūkkuraṇam,* பெ.(n.) மூக்குப்புண்; ulcer nose (சா.அக.).

*[மூக்கு + இரணம். **Skt.** rṇa > த. இரணம்.]*

**மூக்குரத்தம்** *mūkku-rattam,* பெ.(n.) மூக்கிலிருந்து அரத்தம் வழிகை; bleeding from the nose.

*[மூக்கு+அரத்தம்-மூக்கரத்தம்→மூக்குரத்தம்.]*

**மூக்குரி-த்தல்** *mūkkuri-,* 4 செ.குன்றாவி. (v.t.) மூக்கறு-த்தல் பார்க்க; see *mūkkaṟu-. 'அவனை மூக்குரித்து விட்டான்'.*

*[மூக்கு + உரி-த்தல்.]*

**மூக்குவட்டகை** *mūkku-vaṭṭagai,* பெ.(n.) விளிம்பில் மூக்குடன்கூடிய குவளை; cup with a nose - shaped lip. *"ஸ்ரீ ராஜராஜ தேவர் – சேரமானையும், பாண்டியர்களையும், மலைநாட்டு எறிந்து கொண்ட வெள்ளியின் திருப்பரி கலங்கள் – மூக்கு வட்டகை ஒன்று" (தெ.கல்.தொ.2, கல். 91).*

*[மூக்கு + (வட்டிகை→) வட்டகை]*

**மூக்குவாளி** *mūkku-vāḷi,* பெ.(n.) மூக்கணி வகை (வின்.); a ring worn in the nose.

*[மூக்கு + வாளி. வாளி = ஒருவகைக் காதணி.]*

**மூக்குவேர்-த்தல்** *mūkku-vēr-,* 4 செ.கு.வி. (v.i.) மூக்கில்வேர்-த்தல் பார்க்க; see *mūkkil-vēr-.*

*[மூக்கு + வேர்-த்தல்.]*

**மூக்குறட்டை** *mūkkuṟaṭṭai,* பெ.(n.) மூக்கிரட்டை பார்க்க; see *mūkkiraṭṭai.*

**மூக்குறாங்காற்று** *mūkkuṟāṅ-gāṟṟu,* பெ.(n.) சுழல் காற்று (இ.வ.); cyclone.

*[மூக்கு[5] + உறு + ஆம் + காற்று.]*

**மூக்குறிஞ்சு-தல்** *mūkkuṟiñju-,* 5 செ.கு.வி. (v.i.) ஓசை உண்டாக மூக்கினால் மூச்சை உள்வாங்குதல்; to sniff. *"மூக்குறிஞ்சி முலையுணாயே" (திவ். பெரியாழ்.2. 2 : 2). சளி அதிகமானதால் குழந்தை மூக்குறிஞ்சிக்கிட்டேயிருக்கு.*

*[மூக்கு + உறிஞ்சு-தல்]*

**மூக்கூளை** *mūkkūḷai,* பெ.(n.) மூக்குச்சளி (யாழ்.அக.) பார்க்க; see *mūkku-c-caḷi.*

*[மூக்கு + ஊளை.]*

**மூக்கை** *mūkkai,* பெ.(n.) மொட்டு (சங்.அக.); bud.

க. மக்கெ

*[மொக்கு→மூக்கை.]*

**மூக்கைச்சிந்து-தல்** *mūkkai-c-cindu-,* 5 செ.கு.வி.(v.i.) ஒன்றை நினைத்த மாத்திரத்தில் கண்ணீர் விடுதல், அழுதல்; shed tears, weep fainty at the slightest prompting.

*[மூக்கு→ மூக்கை + சிந்து-தல்]*

**மூக்கைச்சுளி-த்தல்** *mūkkai-c-cuḷi-,* 4 செ.கு.வி.(v.i.) மூக்குச்சுழி-த்தல் (வின்.) பார்க்க; see *mūkku-c-cuḷi-.*

**மூக்கைச்சொறி-தல்** *mūkkai-c-coṟi-,* 2 செ.கு.வி.(v.i.) எளிமை காட்டுதல்; to plead poverty or abject condition, as by rubbing the tip of one's nose. *"தயங்க வைத்தாய் எனப் பேசி மூக்கைச் சொறிந்து" (திருப்பு.695).*

*[மூக்கு + ஐ + சொறி-தல்.]*

**மூக்கைத்துளை-த்தல்** *mūkkai-t-tuḷai-,* 4 செ.கு.வி.(v.i.) மணம், நாற்றம் போன்றவை மூக்கை பாதித்தல்; excite the sense of smell of fragrance or flavour; stink to high heaven of bad smell nosy aroma which excity a nose. *வெங்காயக் குழம்பு மணம் மூக்கைத் துளைத்தது. மூக்கைத் துளைக்கும் சாக்கடை நாற்றம்.*

*[மூக்கு + ஐ + துளை-த்தல்]*

**மூக்கைநுழை-த்தல்** *mūkkai-nuḻai-,* 4 செ.கு.வி.(v.i.) பிறருடைய செய்கையில் அழைப்பில்லாமல் தலையிடுதல்; poke one's nose. *நீ அடுத்தவர் வழக்கில் மூக்கை நுழைக்காதே?*

*[மூக்கு→மூக்கை + நுழை-த்தல்.]*

**மூக்கைநெறி-த்தல்** *mūkkai-neṟi-,* 4 செ.கு.வி.(v.i.) மூக்குச்சுழி-த்தல் (வின்.) பார்க்க; see *mūkku-c-cuḻi-.*

**மூக்கைப்பிடி-த்தல்** *mūkkai-p-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மூச்சுப் பயிற்சி செய்தல் (பிரணாயமஞ் செய்தல்); to control the breath, as in devotional exercises. 2. மந்திரம் சொல்லுதல் (இ.வ.); to mutter mantras. 3. கெட்ட நாற்றம் தாங்காமல் மூக்கைப் பிடித்தல்; bad smell stink to nose.

*[மூக்கு→மூக்கை + பிடி-த்தல்]*

**மூக்கொலியன்[1]** *mūkkoliyan,* பெ.(n.) மெல்லிய ஒலியன்; nasal phoneme.

*[மூக்கு + ஒலியன்]*

**மூக்கொலியன்**[2] *mūkkoliyan*, பெ.(n.) சங்கு (மூ.அ.); chank.

*[மூக்கு + ஒலியன்]*

**மூக்கொற்றி** *mūkkoṟṟi*, பெ.(n.) 1. மூக்குத்தி (வின்.) பார்க்க; see *mūkkutti*. 2. மூக்கொற்றிக்கோரை (சங்.அக.) பார்க்க; see *mūkkoṟṟi-k-kōrai*. 3. கொடிவகை (வின்.);a climber-*Thumbergia racemosa*.

*[மூக்கு+ஒற்று-மூக்கொற்று→மூக்கொற்றி.]*

**மூக்கொற்றிக்கோரை** *mūkkoṟṟi-k-kōrai*, பெ.(n.) புல்வகை (வின்.); a kind of club grass - *Scirpus antaracticus*.

*[மூக்கொற்றி + கோரை]*

**மூக்கொற்றிப்பூடு** *mūkkoṟṟi-p-pūḍu*, பெ.(n.) சிறுசெடி வகை (வின்.); a plant *Inula Indica*.

தெ. மூக்கிதி

*[மூக்கொற்றி + பூடு]*

**மூக்கொற்றிப்பூண்டு** *mūkkoṟṟi-p-pūṇḍu*, பெ.(n.) மூக்கொற்றிப்பூடு (வின்.) பார்க்க; see *mūkkoṟṟi-p-pūḍu*.

**மூக்கொற்றைக்கோரை** *mūkkoṟṟai-k-kōrai*, பெ.(n.) மூக்கொற்றிக்கோரை (வின்.) பார்க்க; see *mūkkoṟṟi-k-kōrai*.

*[மூக்கொற்றி + கோரை]*

**மூக்கோட்டை**[1] *mūkkōṭṭai*, பெ.(n.) மூக்குத் துளை; nostril.

*[மூக்கு + ஓட்டை]*

**மூக்கோட்டை**[2] *mūkkōṭṭai*, பெ.(n.) வழிபட்டோர்க்கு பாடலியற்றும் ஆற்றலை அளிக்கும் கொற்றவைக் கோயில்; a shrine of *Durgā* who is said to endow Her votaries with poetic power.

**மூக்கோலம்** *mūkkōlam*, பெ.(n.) புழுங்கலரிசி; boiled rice (சா.அக.).

**மூக்கோலியன்** *mūkkōliyan*, பெ.(n.) சங்கு; chank; conch-shell.

**மூகம்** *mūgam*, பெ.(n.) 1. ஊமை; dumbness. 2. வாய்பேசாநிலை (மௌனம்) (சூடா.); speechlessness, silence. 3. வறுமை (யாழ்.அக.); poverty. 4. ஒருவகை மீன் (யாழ்.அக.); a kind of fish. 5. பேய் வகை (யாழ்.அக.); a class of devils.

**மூகரன்** *mūgaran*, பெ(n.) 1. காது கேட்காதவன், செவிடன்; a deaf man. 2. ஊமையன்; a dumb man.

*[மூகன் →மூகரன்.]*

**மூகன்**[1] *mūgan*, பெ.(n.) கீழ்மகன் (திவா.); low, mean person.

*[மூக்கன்[2] →மூகன்.]*

**மூகன்**[2] *mūgan*, பெ.(n.) 1. ஊமையன்; dumb man. *"சீறிச்சமண்மூகன்" (தக்கயாகப்.189)*. 2. ஓர் அசுரன்; an *Asuran*. *"மூக நாமதானவன்" (பாரத.அருச்சுனன்றவ.79)*. 3. ஏழை (வறிஞன்) (யாழ்.அக.); poor man.

*[மூழ்→மூகு→மூகன் = ஊமையன்.]*

**மூகா-த்தல்** *mūgā-*, 4 செ.கு.வி.(v.i.) பேசாமலிருத்தல் (மௌனமாக) (யாழ்.அக.); to be silent.

*[மூகம் + ஆ - மூகா →மூகா-த்தல்.]*

மூகி *mūgi,* பெ.(n.) கேழ்வரகு (நாமதீப.354); ragi.

மூகை[1] *mūgai,* பெ.(n.) ஊமை (பிங்.); dumb person.

மூகை[2] *mūgai,* பெ.(n.) 1. ஈரற் குலை (பிங்.);liver. 2. படைக்கூட்டம்; vast horde. *"நான்முகத்தன மூகை சூழ வமைந்த" (தக்கயாகப்.621).*

தெ. மூக = படைக்கூடம்.

மூகை[3] *mūgai,* பெ.(n.) சங்கஞ்செடி (சங்அக.); mistletoe berrythorn.

மூகைச்சிலேட்டுமம் *mūgai-c-cilēṭṭumam,* பெ.(n.) கழுத்துக்குள் ஊமையைப் போல உண்டாக்கும் இரைச்சலை உண்டாக்கி கோழையை வெளியேத் தள்ளும் ஒருவகை நோய்; a diseases marked by the sound dumb, in the throat and copious phlegm which is thrown out.

*[மூகை + Skt. சிலேட்டுமம்.]*

மூகைமை *mūgaimai,* பெ.(n.) ஊமையாய் இருக்கும் தன்மை; dumbness. *"மூகைமைக் கொள்கையே மிக்கான்" (தணிகைப்பு. வீராட்ட.43).*

*[மூகை → மூகைமை.]*

மூகையலரி *mūgai-y-alari,* பெ.(n.) அலரி மரம்; a tree - *Nerium Odorum* (சா.அக.).

மூகையெழுத்து *mūgai-y-eḻuttu,* பெ.(n.) ஊமையெழுத்து (வின்.); consonant being mute.

*[மூகை + எழுத்து]*

மூங்கமார்ப்படல் *mūṅgamār-p-paḍal,* பெ.(n.) பட்டி போட உதவும் மூங்கில் (கோவை.); bamboo which is used to make cow-shed.

*[மூங்கமார் + படல்]*

மூங்கர் *mūṅgar,* பெ.(n.) ஊமையர்; dumb persons. *"கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டு வித்து" (தேவா.1040, 2).*

மூங்கா[1] *mūṅgā,* பெ.(n.) 1. கீரிவகை; a species of mongoose. *"மூங்கா வெருகுஎலி மூவரி அணிலோடு ஆங்கு அவை நான்கும் குட்டிக்குரிய" (தொல்.பொருள். மரபு.6).* 2. கீரி (மூ.அ.); mongoose.

தெ., க. முங்கி; ம. மூங்னா.

*[மூக்கு → (மூங்கு) → மூங்கா = மூக்கு நீண்ட கீரி வகை.]*

மூங்கா[2] *mūṅgā,* பெ.(n.) ஆந்தை (நாஞ்.); owl.

ம. முங்ஙா

மூங்காப்பிள்ளை *mūṅgā-p-piḷḷai,* பெ.(n.) கீரிப்பிள்ளை; mongoose.

*[மூங்கா[1] + பிள்ளை.]*

மூங்கி *mūṅgi,* பெ.(n.) பாசிப்பயறு (மலை.); green gram.

மூங்கிடப்பை *mūṅgiḍappai,* பெ.(n.) நீளவாட்டில் பிளந்த மூங்கிற்றுண்டு (உ.வ.); splint, splinter, lath of bamboo.

*[மூங்கில் + தப்பை – மூங்கிற்றப்பை → மூங்கிடப்பை.]*

மூங்கில் *mūṅgil,* பெ.(n.) உள்ளீடற்ற குழாய் போன்ற தண்டுப் பகுதியில் கணுக்களைக் கொண்டதும் நீண்டு வளர்வதுமான புறக்காழுள்ள பெரும்புல் வகை; bamboo-

*Bambusa arundinacea. "அம்பணை மூங்கிற் பைம்போழ்" (பெருங்.உஞ்சைக்.42: 48). "முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்" (அகநா.85:8). "ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்" (நற்.28:7). "கூழை மூங்கிற் குவட்டிடை யதுவே" (குறுந்.179:7). "கான்முளை மூங்கிற் கவர்கிளை போல" (பதிற்றுப்.84:12).* 2. கழை (புனர்பூச) நாள் (திவா.); the seventh naksatra.

ம. மூங்கில்

வகைகள்: 1. மூங்கில், 2. கல் மூங்கில், 3. வேசி மூங்கில், 4. காட்டுமூங்கில், 5. சிறுமூங்கில், 6. பொன் மூங்கில், 7. கெட்டி மூங்கில், 8. நெட்டை மூங்கில், முள் மூங்கில், 9. உக்கா மூங்கில் (சா.அக.).

மூங்கில்துறைப்பட்டு *mūṅgil-tuṟai-p-paṭṭu,* பெ.(n.) தென்னார்க்காடு மாவட்டம், கள்ளக்குறிச்சி வட்டத்தில், திருவண்ணா மலையிலிருந்து சற்றொப்ப 30 கல்லன்மாத்திரி தொலைவிலுள்ள ஊர்; a city in South Arcot dist., about 30 km away from *Tiruvaṇṇāmalai.*

*[மூங்கில் + துறைப்பட்டு]*

தென் பெண்ணையாற்றின் கரையில் அமைந்துள்ள ஊர். ஆற்றங்கரையில், மூங்கில்கள் நிறைந்திருந்தமையால் மூங்கில் துறைப்பட்டு என்று பெயர் பெற்றது.

மூங்கில்நாடா *mūṅgil-nāḍā,* பெ.(n.) மூங்கிலால் செய்யப்பட்ட, பட்டுத்தறிக்குரிய நாடா; weaver's instrument for silk loom made of bamboo.

*[மூங்கில் + நாடா]*

மூங்கில்புல்லூரி *mūṅgil-pullūri,* பெ.(n.) மூங்கிலின் மேற் படரும் புல்லுருவி வகை; bamboo parasite.

*[மூங்கில் + புல்லூரி]*

மூங்கில்போத்து *mūṅgil-pōttu,* பெ.(n.) மூங்கிற்போத்து பார்க்க; see *mūṅgiṟ-pōttu.*

*[மூங்கில் + போத்து.]*

மூங்கில்முத்து *mūṅgil-muttu,* பெ.(n.) மூங்கின்முத்து பார்க்க; see *mūṅgiṉ-muttu.*

*[மூங்கில் + முத்து]*

மூங்கில்முளை *mūṅgil-muḷai,* பெ.(n.) மூங்கிலின் முளை; shoot of bamboo.

*[மூங்கில் + முளை]*

மூங்கில்மோவு *mūṅgil-mōvu,* பெ.(n.) மூங்கில் கணு; joints of bamboo.

*[மூங்கில் + மோவு]*

மூங்கிலடி *mūṅgil-aḍi,* பெ.(n.) நெல்லை மாவட்டச் சிற்றூர்; a village name, in Nellai Dt.

*[மூங்கில் + அடி]*

மூங்கிலம்மா *mūṅgil-ammā,* பெ.(n.) சிற்றூர் பெண் தெய்வம் (தேவதை) (இ.வ.); village deity.

*[மூங்கில் + அம்மா]*

மூங்கிலரிசி *mūṅgil-ariši,* பெ.(n.) மூங்கிலினின்று உண்டாகும் விதை (சீவக. 1422, உரை); the seed of the bamboo.

*[மூங்கில் + அரிசி]*

**மூங்கிலரிசிதேன்கொழுக்கட்டை** *mūṅgil-ariši-tēṉ-koḻu-k-kaṭṭai,* பெ.(n.) மலைவாழ் இனத்தவரின் சிறப்பு உணவு (கோவை.); food of the inhabitant in hills.

*[மூங்கிலரிசி + தேன் + கொழு + கட்டை]*

**மூங்கிலாடை** *mūṅgil-āḍai,* பெ.(n.) மூங்கிலின் உட்புறத்தில் மெல்லியதாக உள்ள தாள் (சிறுபாண்.236, உரை); paper - like tissue inside bamboos.

*[மூங்கில் + ஆடை]*

**மூங்கிலிலை** *mūṅgil-ilai,* பெ.(n.) மூங்கிலின் இலை; bamboo leaves. *"மூங்கில்இலை மேலே தூங்கும் பனிநீரே" (பழ.).*

*[மூங்கில் + இலை.]*

குடற் சூலை; வயிற்று நோய்; அரத்தத்துடிப்பு, குழந்தைப் பேறு அழுக்கு, இருமல், கண்ணின் சிவப்பு முதலிய நோய்களை மூங்கிலிலை நீக்கும்.

**மூங்கிலுப்பு** *mūṅgil-uppu,* பெ.(n.) மூங்கிலிலிருந்து எடுக்கப்படும் ஒரு மருத்துவ குணமுள்ள உப்பு; a medicinal salt found in bamboo (சா.அக.).

*[மூங்கில் + உப்பு]*

**மூங்கிலூமத்தை** *mūṅgil-ūmattai,* பெ.(n.) ஒரு வகை ஊமத்தை; a plant - *Dhatura milal* (சா.அக.).

*[மூங்கில் + ஊமத்தை]*

**மூங்கிற்கழி** *mūṅgiṟ-kaḻi,* பெ.(n.) இலை, முட்கிளை நீக்கப்பட்ட மூங்கிற் கொம்பு; bamboo stick.

*[மூங்கில் + கழி.]*

**மூங்கிற்குத்து** *mūṅgiṟ-kuttu,* பெ.(n.) 1. மூங்கிற்புதர் பார்க்க (இ.வ.); see *mūṅgiṟ-pudar.* 2. மூங்கிற்போத்து பார்க்க (வின்.); see *mūṅgiṟ-pōttu.*

*[மூங்கில் + குத்து]*

**மூங்கிற்குருத்து** *mūṅgiṟ-kuruttu,* பெ.(n.) அடிபட்ட அரத்த வீக்கங்களைப் போக்கும் தளிர்; the tender leaves of bamboo is capable of curing contused swelling - Bamboo plast (சா.அக.).

*[மூங்கில் + குருத்து]*

**மூங்கிற்குழல்** *mūṅgiṟ-kuḻal,* பெ.(n.) மூங்கிற்குழாய் (யாழ்.அக.) பார்க்க; see *mūṅgiṟ-kuḻāy.*

*[மூங்கில் + குழல்]*

**மூங்கிற்குழாய்[1]** *mūṅgiṟ-kuḻāy,* பெ.(n.) புல்லாங்குழல் (வின்.); flute of bamboo.

*[மூங்கில் + குழாய்]*

**மூங்கிற்குழாய்[2]** *mūṅgiṟ-kuḻāy,* பெ.(n.) பண்டை காலத்தில் மருந்து, தேன் முதலியவைக் கெடாதபடிக்கு வைப்பதற்காகச் செய்யும் மூங்கிற் குழாய்; a hallow bamboo used for preserving honey, medicines etc. *'மூங்கிற் குழாய்க்குள்ளே பெய்தலை*



*உடைய....... கட் டெளிவை' (மலைபடு.171, உரை).*

*[மூங்கில் + குழாய்]*

**மூங்கிற்கொட்டை** *mūṅgiṟ-koṭṭai,* பெ.(n.) மூங்கிலரிசி (யாழ்.அக.) பார்க்க; see *mūṅgil-arişi.*

*[மூங்கில் + கொட்டை]*

**மூங்கிற்கொத்து** *mūṅgiṟ-kottu,* பெ.(n.) மூங்கிற்குத்து, 1 (இ.வ.) பார்க்க; see *mūṅgiṟ-kuttu, 1.*

**மூங்கிற்கோல்** *mūṅgiṟ-kōl,* பெ.(n.) மூங்கிற்கழி பார்க்க; see *mūṅgiṟ-kaḻi. 'மூங்கிற் கோலைத் தலையிலே வலித்துக் கட்டின' (பெரும்பாண்.285, உரை).*

*[மூங்கில் + கோல்]*

**மூங்கிற்சம்பா** *mūṅgiṟ-šambā,* பெ.(n.) சம்பா நெல் வகை; a kind of *šambā* paddy. *"நெடு மூக்கன் அரிக்கராவி மூங்கிற் சம்பா" (முக்கூடற்.97).*

*[மூங்கில் + சம்பா.]*

மூங்கிலரிசி போன்ற அரிசியைக் கொண்ட சம்பா நெல்.

**மூங்கிற்பட்டை** *mūṅgiṟ-paṭṭai,* பெ.(n.) 1. மூங்கிற்பிளாச்சு பார்க்க; see *mūṅgiṟ-piḷāccu.* 2. மூங்கிற் கணுவின் மேலுள்ள உறை (உ.வ.); sheath at the knot of a bamboo.

*[மூங்கில் + பட்டை]*

**மூங்கிற்பண்ணை** *mūṅgiṟ-paṇṇai,* பெ.(n.) அடர்த்தியான மூங்கிற்காடு (நாஞ்.); dense clump of bamboo.

*[மூங்கில் + பண்ணை]*

**மூங்கிற்பத்தை** *mūṅgiṟ-pattai,* பெ.(n.) மூங்கிற்பிளாச்சு (இ.வ.) பார்க்க; see *mūṅgiṟ-piḷāccu.*

*[மூங்கில் + பத்தை]*

**மூங்கிற்பாய்** *mūṅgiṟ-pāy,* பெ.(n.) மூங்கிலால் செய்யப்பட்ட பாய்; mat made up of bamboo tree. *மூங்கிற் பாயும் முரட்டுப் பெண்டாட்டியும் (பழ.).*

*[மூங்கில் + பாய்]*

**மூங்கிற்பிளாச்சு** *mūṅgiṟ-piḷāccu,* பெ.(n.) நீளத்தில் பிளந்த மூங்கில் துண்டு (கொ.வ.); splint, splinter, lath of bamboo.

*[மூங்கில் + பிளாச்சு]*

**மூங்கிற்பிளிச்சு** *mūṅgiṟ-piḷiccu,* பெ.(n.) 1. மூங்கிற்பிளாச்சு (இ.வ.) பார்க்க; see *mūṅgiṟ-piḷāccu.* 2. ஒல்லியான மூங்கிற் கழி (சீவக.634, உரை); thin bamboo stick.

*[மூங்கில் + பிளிச்சு]*

**மூங்கிற்புதர்** *mūṅgiṟ-pudar,* பெ.(n.) நெருங்கி வளர்ந்த மூங்கில் தொகுதி (வின்.); cluster of bamboos.

*[மூக்கில் + புதர்]*

**மூங்கிற்புல்** *mūṅgiṟ-pul,* பெ.(n.) புல்வகை (மூ.அ.); a kind of grass.

*[மூங்கில் + புல்]*

**மூங்கிற்போத்து** *mūṅgiṟ-pōttu,* பெ.(n.) கொத்தாக உள்ள மூங்கிற் கன்று (வின்.); cluster of bamboo saplings.

*[மூங்கில் + போத்து]*

**மூங்கிற்றண்டு** *mūṅgiṟṟaṇḍu,* பெ.(n.) மூங்கிற்கழி (யாழ்.அக.) பார்க்க; see *mūṅgiṟ-kaḻi.*

*[மூங்கில் + தண்டு]*

**மூங்கிற்றப்பை** *mūṅgiṟṟa-p-pai,* பெ.(n.) மூங்கிற்பிளாச்சு (வின்.) பார்க்க; see *mūṅgiṟ-piḷāccu.*

*[மூங்கில் + தப்பை]*

**மூங்கின்முத்து** *mūṅgiṉ-muttu,* பெ.(n.) மூங்கிலிலிருந்து தோன்றுவதாகக் கருதப் படும் முத்து வகை (வின்.); a kind of pearl said to be obtained from the bamboo.

*[மூங்கில் + முத்து]*

**மூங்கினெல்** *mūṅgiṉel,* பெ.(n.) மூங்கிலரிசி (வின்.) பார்க்க; see *mūṅgil-ariši.*

*[மூங்கில் + நெல்]*

**மூங்கு[1]** *mūṅgu,* பெ.(n.) மூங்கி (வின்.) பார்க்க; see *mūṅgi.*

**மூங்கு[2]** *mūṅgu,* பெ.(n.) சிறுபயறு; small pulse.

**மூங்கை** *mūṅgai,* பெ.(n.) மூகை[1] பார்க்க; see *mūgai[1]. "தீய புறங்கூற்றின் மூங்கையாய்" (நாலடி, 158).*

**மூங்கைநோய்** *mūṅgai-nōy,* பெ.(n.) நோய் வகை (கடம்ப.பு.இலீலா.127); a kind of disease.

**மூங்கைமை** *mūṅgaimai,* பெ.(n.) ஊமைத் தன்மை; dumbness. *"தலைசாய்த் தங்கிருந்தார் மூங்கை மையால்" (நீலகேசி, 271).*

*[மூங்கை → மூங்கைமை]*

**மூங்கையர்** *mūṅgaiyar,* பெ.(n.) ஊமையர்; dumb person (சா.அக.).

*[மூங்கை → மூங்கையர்.]*

**மூங்கையான்** *mūṅgaiyāṉ,* பெ.(n.) ஊமையன்; dumb person. *"மூங்கையான் பேசலுற்றான்" (கம்பரா.நாட்.1).*

*[மூங்கை → மூங்கையான்]*

**மூங்கையூசி** *mūṅgai-y-ūši,* பெ.(n.) வலை பின்னுதற்கு ஏற்றவாறு மூங்கிலாலான ஒரு வகை ஊசி; a needle manufactured from bamboo to knit fish net.

**மூங்கைரோகம்** *mūṅgai-rōgam,* பெ.(n.) மூங்கைநோய் பார்க்க; see *muṅgai-nōy.*

**மூச்சடக்கம்** *mūccaḍakkam,* பெ.(n.) 1. உயிரடங்கி நிற்கை; suspended animation. 2. ஒரு வகை நோய்; a disease in which breath is restrained (சா.அக.).

*[மூச்சு + அடக்கம்]*

**மூச்சடக்கு-தல்** *mūccaḍakku-,* 5 செ. குன்றாவி.(v.t.) மூச்சுக் காற்றை உள் அடக்குதல்; to control and hold the breath. *"மூச்சடக்கி யென்றும் வார்புனலிடையே நின்று" (குற்றா.தல. வடவருவி.28).*

*[மூச்சு + அடக்கு-தல்]*

**மூச்சடை-த்தல்** *mūccaḍai-,* 4 செ. குன்றாவி. (v.t.) மூச்சுத் திணறச் செய்தல்; to cause choking.

*[மூச்சு + அடை-த்தல்]*

**மூச்சடைப்பான்** *mūccaḍaippāṉ,* பெ.(n.) மூச்சடைப்பு, 2 பார்க்க; see *mūc-c-aḍaippu,* 2.

*[மூச்சடை → மூச்சடைப்பான்.]*

**மூச்சடைப்பு** *mūccaḍaippu,* பெ.(n.) 1. மூச்சு வாங்குகை; difficulty in respiration; hard breathing; panting for breath. 2. முட்டு மூச்சு வாங்குகை; choking, asphyxia (செ.அக.).

*[மூச்சடை → மூச்சடைப்பு]*

**மூச்சன்** *mūccaṉ,* பெ.(n.) வலியவன் (யாழ்ப்.); powerful, strong person.

**மூச்சிழுப்பு** *mūcciḻuppu,* பெ.(n.) ஈளை நோய் (சுவாசகாசம்), இருமல் நோய்; asthma.

*[மூச்சு + இழுப்பு]*

**மூச்சு** *mūccu,* பெ.(n.) 1. உயிர் வாழ்வதற்காக நுரையீரலுக்குள் இழுத்து வெளிவிடும் காற்று, உயிர்ப்பு; respiration, breath. *"மூச்சுவிடு முன்னே முந்நூறு நானூறும்" (தனிச்.சிந்.111:1). மூச்சுவிட மறந்தவர் யாருமிலர்.* 2. ஆண்மை (யாழ்.அக.); manliness. 3. வலிமை, பலம் (யாழ்.அக.); strength. 4. ஆக்கம், முயற்சி; effort. *முதல் மூச்சில் (இ.வ.).*

ம. மூச்சு

**மூச்சுக்காட்டாமை** *mūccu-k-kāṭṭāmai,* பெ.(n.) அமைதியாக இருக்கை (நிச்சத்தமாயிருக்கை); breathless silence. *இதைப்பற்றி அவளிடம் மூச்சுக் காட்டாதே.*

*[மூச்சுக்காட்டு + ஆ + மை.]*

**மூச்சுக்காட்டு-தல்** *mūccu-k-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.t.) 1. ஆளரவஞ் செய்தல்; to show signs of life. 2. ஆண்மை காட்டுதல் (யாழ்.அக.); to show signs of courage. 3. எதிர்மறை வடிவங்களில் தான் ஓர் இடத்தில் இருப்பதற்கான அறிகுறியை வெளிப்படுத்துதல்; utter a sound or word as a sign of one's presence. பொய் *வெளிப்பட்டதும் அவன் மூச்சுக் காட்டவில்லை.*

*[மூச்சு + காட்டு-தல்.]*

**மூச்சுக்காண்கை** *mūccu-k-kāṇgai,* பெ.(n.) இறப்புக் குறியாக மேல் மூச்சுத் தோன்றுகை (இ.வ.); breathing hard, as a sign of expiring.

*[மூச்சு + காண்கை.]*

**மூச்சுக்கிளைக்குழலழற்சி** *mūccu-k-kiḷai-k-kuḻal-aḻaṟci,* பெ.(n.) நுரையீரல் நோய் வகை; a kind of lungs disease.

*[மூச்சு + கிளை + குழல் + அழற்சி.]*

**மூச்சுக்குத்து** *mūccu-k-kuttu,* பெ.(n.) ஒருவகைக் காற்றுப் பிடிப்பு நோய் (வின்.); a kind of gout.

*[மூச்சு + குத்து.]*

**மூச்சுக்குப்பி** *mūccu-k-kuppi,* பெ.(n.) முத்துக் குளியாளும், சங்குக் குளியாளும், கடலில் மூழ்க புது முறையில் கையாளும் உயிர்ப்புக் குப்பி; aspirator bottle handled by pearl divers, and conch divers.

*[மூச்சு + குப்பி.]*

மூச்சுக்குழல் *mūccu-k-kuḻal,* பெ.(n.) தொண்டையில் இருந்து நுரையீரல் வரை அமைந்திருக்கும் மூச்சுப் போகும் குழல் போன்ற பாதை; windpipe, trachea.

*[மூச்சு + குழல்.]*




மூச்சுக்குழாய்விரிவழற்சி *mūccu-k-kuḻāy-viri-vaḻaṟci,* பெ.(n.) நுரையீரலின் அடிப்பகுதியில் உண்டாகும் ஒருவகை நோய்; bronchi-ectasis.

*[மூச்சுக்குழாய் + விரிவழற்சி.]*

மூச்சுண்டை *mūccuṇḍai,* பெ.(n.) மூசுண்டை பார்க்க; see *mūšuṇḍai. "மூச்சுண்டை விற்று..... பாடுபட்டு" (ஆதியூரவதானி, 3).*

மூச்சுத்தாங்கல் *mūccu-t-tāṅgal,* பெ.(n.) மூச்சடைப்பு (யாழ்.அக.) பார்க்க; see *mūccaḍaippu.*

*[மூச்சு + தாங்கல்.]*

மூச்சுத்திணறல் *mūccu-t-tiṇaṟal,* பெ.(n.) சீராக மூச்சுவிட முடியாத அளவில் மூச்சுத் தடைபடும் நிலை; suffocation in breathing. *அவனுக்கு மூச்சுத் திணறல் ஏற்பட்டது (உ.வ.).*

*[மூச்சு + திணறல்.]*

மூச்சுப்பறிதல் *mūccu-p-paṟidal,* பெ.(n.) 1. மூச்சுக்காற்று வெளியே செல்கை; breathing out, exhalation. 2. உடல் நலம் குறைவுபடுகை (பலவீனப்படுகை); becoming weak.

*[மூச்சு + பறிதல்.]*

மூச்சுப்பிடி–த்தல் *mūccu-p-piḍi-,*4 செ.கு.வி. (v.i.) 1. மூச்சுக்காற்றை உள்ளடக்குதல் (வின்.); to control or suppress the breath. 2. மூச்சுத் திணறுதல் (வின்.); to be short of breath. 3. இடுப்பில் சுளுக்கிக் கொள்ளுதல்; to be sprained at the hip. *மூட்டையைத் தூக்கினேன். மூச்சுப் பிடித்துக் கொண்டு விட்டது.* 4. முழுமூச்சாக முயலுதல்; to strain one's powers.

*[மூச்சு + பிடி–த்தல்.]*

மூச்சுப்பிடிப்பு *mūccu-p-piḍippu,* பெ.(n.) 1. ஒரு வகை மூச்சு உயிர்ப்பு நோய்; pleurisy; pleurodynia. 2. மூச்சுக் காற்றை உள் அடக்குகை (வின்.); suppression of breath. 3. இடுப்பில் உண்டாகும் சுளுக்குநோய் (M.L.); sprain at the hip.

*[மூச்சு + பிடிப்பு.]*

மூச்சுப்பேச்சு *mūccu-p-pēccu,* பெ.(n.) 1. பேசுகை (வின்.); talk. 2. உயிரோடு இருப்பதற்கான அடையாளம்; sign of life. *மூச்சுப் பேச்சு இல்லை (யாழ்.அக.).*

*[மூச்சு + பேச்சு.]*

மூச்சுப்பொறு–த்தல் *mūccu-p-poṟu-,* 4 செ.குன்றாவி.(v.t.) மூச்சை உள் அடக்குதல் (வின்.); to suppress breath.

*[மூச்சு + பொறு–த்தல்.]*

**மூச்சுமுட்டல்** *mūccu-muṭṭal,* பெ.(n.) 1. மூச்சுத் திணறுகை; suffocation. 2. மூச்சு இருமல் நோய் (பைஷஜ.); asthma.

*[மூச்சு + முட்டல்.]*

**மூச்சுமுட்டு–தல்** *mūccu-muṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) மூச்சுத் தடைப்பட்டுத் திணறுதல்; suffocate; breathe hard. *சமையல் அறையின் புகையால் அம்மாவுக்கு மூச்சு முட்டியது (உ.வ.).*

*[மூச்சு + முட்டு–தல்.]*

**மூச்சுவாங்கு[1]–தல்** *mūccu-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) மூச்சு இரைத்தல்; gasp for breath; pant. *பத்து அடி நடப்பதற்குள் உனக்கு மூச்சு வாங்குகிறதே!*

*[மூச்சு + வாங்கு–தல்.]*

**மூச்சுவாங்கு[2]–தல்** *mūccu-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மூச்சுக் காற்றை உள்ளே அடக்குதல் (யாழ்.அக.); to restrain breath, as in making an effort or dragging a heavy thing. 2. பெருமூச்சு விடுதல்; to breathe hard. *மூச்சு வாங்க ஓடி வந்தான்.* 3. வெடிப்புக் காணுதல்; to crack, split open, to give way, as a wall. *இந்தக் கட்டடம் மூச்சு வாங்கி விட்டது.*

*[மூச்சு + வாங்கு–தல்.]*

**மூச்சுவாங்குதல்** *mūccu-vāṅgudal,* பெ. (n.) 1. இளைப்பினால் பெருமூச்சு வருகை; panting, breathing hard, as in fatigue. 2. இறப்புக் காலத்தில் பெருமூச்சு விடுகை; long-drawn breathing at the moment of death.

*[மூச்சு + வாங்குதல்.]*

**மூச்சுவிடாமல்** *mūccu-viḍāmal,* வி.அ. (adv.) 1. வாய்திறவாமல்; in breathless silence. 2. இடைவிடாமல்; without break or intermission. *மூச்சுவிடாமல் பாடுகிறாள். மூச்சுவிட நேரமில்லை. மூச்சுவிடாமல் மழைபெய்கிறது.*

**மூச்சுவிடு[1]–தல்** *mūccu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) இயற்கையான காற்றை மூக்கின் வழியே உள்ளே இழுத்து, இழுத்த காற்றை வெளியே விடுதல் (ஆசுவாசப்படுத்திக் கொள்ளுதல்); to breathe respire. *மூன்று மாடி ஏறி வந்திருக்கிறேன், கொஞ்சம் மூச்சு விட்டுக் கொள்கிறேன். "மூச்சு விடுமுன்னே" (தனிப்பா. i, 80:160).*

*[மூச்சு + விடு–தல்.]*

**மூச்சுவிடு[2]–தல்** *mūccu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. எதிர் மறையில் அல்லது எதிர்மறைப் பொருளில் சிறிதளவு தெரிவித்தல்; make even a mention of say not to breathe a word. *அப்பாவிடம் எழுதுகோலைத் தொலைத்தது பற்றி மூச்சு விடாதே!. நேரில் சந்தித்த போது தனக்கு வேலை கிடைத்தது குறித்து அவர் மூச்சு விடவில்லை.* 2. மூச்சுவாங்கு[2]–தல், 3 பார்க்க; see *mūccu-vāṅgu[2], 3.*

*[மூச்சு + விடு–தல்.]*

**மூச்செடுத்தல்** *mūcceḍuttal,* பெ.(n.) 1. மேல் மூச்சு எழுகை (யாழ்.அக.); gasping one's last breath. 2. மூச்சடக்குகை (இ.வ.); holding one's breath.

*[மூச்சு + எடுத்தல்.]*

**மூச்செறி–தல்** *mūcceṟi-,* 2 செ.கு.வி.(v.i.) மூச்சுவிடு[1]–1, (வின்.) பார்க்க; see *mūccu-viḍu[1]-,1.*

*[மூச்சு + எறி–தல்.]*

**மூச்சை** *mūccai,* பெ.(n.) மூர்ச்சை (வின்.) பார்க்க; see *mūrccai.*

**மூச்சொடுங்குகை** *mūccoḍuṅgugai,* பெ.(n.) உயிர்ப்பு (பிராணன்) ஒடுங்குகை (வின்.); ceasing to breathe, as when dying.

*[மூச்சு + ஒடுங்குகை.]*

**மூசடை** *mūšaḍai,* பெ.(n.) 1. பழுதாய்ப் போகை; rancidity. 2. பழுதாய்ப் போன பண்டம் (இ.வ.); anything that has become rancid, anything unclean.

க. முசரி

**மூசணம்** *mūšaṇam,* பெ.(n.) மிளகு; pepper - *Piper nigrum* (சா.அக.).

**மூசரச்சாரம்** *mūšara-c-cāram,* பெ.(n.) சவுட்டுப்பு; salt extracted from fuller's earth (சா.அக.).

**மூசல்** *mūšal,* பெ.(n.) 1. மொய்க்கை (பிங்.); swarming, thronging. 2. இறப்பு (பிங்.); death. 3. கெடுகை (வின்.); being spoiled.

*[மூசு→மூசல்.]*

**மூசாந்தம்** *mūšāndam,* பெ.(n.) வெண்டாமரை (மலை.); white lotus.

**மூசாம்பரம்** *mūšāmbaram,* பெ.(n.) 1. கரிய போளம்; scarlet flowered aloe. 2. கரிய போளப் பிசின்; resinous inspissated juice of aloe. 3. கூட்டு மருந்துச் சரக்கு; a compound of catechu formed with the juice of young coconuts, arecanuts and other spices.

உரு. முசாம்பர்

**மூசி[1]** *mūši,* பெ.(n.) பொன்னாங்கண்ணி; a prostate plant - Illec brumsessile (சா.அக.).

**மூசி[2]-த்தல்** *mūši-,* 4 செ.கு.வி.(v.i.) மூச்சிழைத்தல்; gasp.

*[முசு→முசி→மூசி→மூசி-த்தல்.]*

**மூசு[1]-தல்** *mūšu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. மொய்த்தல்; to swarm about, gather round. *"வண்டு மூசுதேறன் மாந்தி"* *(நெடுநல்.33).* *"மிஞிறுமூசு கவுள சிறுகண் யானை" (அகநா.159:16).* *"புன்மூசு கவலைய முண்மிடை வேலி" (புறநா.116:4).* *"மூசு வண்டறை பொய்கையும் போன்றதே" (அப்பர் தேவாரம்).* 2. மூச்சு விடுதல்; to respire.

தெ. மூசுறு

**மூசு[2]-தல்** *mūšu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கெடுதல் (வின்.); to go bad, to be spoiled, rancid. 2. சாதல் (பிங்.); to die. 3. மோப்பம் பிடித்தல் [தெ.மூட்சூட்சு]; to sniff. *"நாசிமூசி" (திருவாலவா. 36 : 22).*

**மூசு[3]** *mūšu,* பெ.(n.) இடவகையில் நெருக்கமாக இருக்கை (மொய்க்கை); swarming, thronging. *"வண்டு மூசறா" (சீவக.418).* *"வியன்பணை முழங்கும் வேன்மூ சமுவத்து" (பதிற்று.31:30).* *"வளவ னென்னும் வண்டுமூசு கண்ணி" (புறநா.227:9).*

**மூசு[4]** *mūšu,* பெ.(n.) இளங்காய், பிஞ்சு; green or unripe fruit. பலாமூசு.

தெ. முசுரு; க. முசுரு.

*[முள் →முளு→முசு→ மூசு. ஒ.நோ.உளு →உசு. ள- ச போலித் திரிபு (வே.க.முல்').]*

**மூசுண்டை** *mūšunḍai,* பெ.(n.) 1. தின்பண்டம் (செ.வழ.); eatables. 2. கேடுற்ற பணிகாரம் (வின்.); spoiled cake.

**மூசுமல்லிகை** *mūšu-malligai,* பெ.(n.) ஊசி மல்லிகை (பதார்த்த.331); eared jasmine.

*[ஊசிமல்லிகை→மூசுமல்லிகை]*

நல்ல தரமான இனப்பெருக்கத்தை உண்டாக்கும், ஒரு வகைப் பூ (சா.அக.).

**மூசுமூசெனல்** *mūšu-mūšeṉal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of crunching sound, as of cattle eating seeds. 2. பெருமூச்சு விடுதற் குறிப்பு; onom. expr. of breathing hard, as when intensely at work; panting, as in running.

**மூசெனல்** *mūšeṉal,* பெ.(n.) மூசுமூசெனல் (இ.வ.) பார்க்க; see *mūšu-mūšeṉal.*

**மூசை** *mūšai,* பெ.(n.) 1. மண்ணாலான குகை; crucible. 2. மாழை (உலோகங்கள்)களை உருக்கி வார்ப்பதற்கான மட்கரு; earthen mould for casting molten metal.

*[மூழை→மூசை.]*

முள்→முழை. முழைத்தல் = துளைத்தல். முழை = குகை. முழை→மூழை = குழிந்த இடம். மூழை →மூசை = மண்குகை, மட்கரு (தேவநேயம்.12:101).

வடமொழியில் இச்சொல்லுக்கு மூலமில்லை. மா.வி.அ. இச்சொல்லை 'மூஷ' (சுண்டெலி) என்னும் சொல்லோடிணைக்கிறது (வ.மொ.வ.).

**மூசைப்புல்** *mūšai-p-pul,* பெ.(n.) முட்செடி (சங்கஞ்செடி); mistle-toe berry thorn.

*[மூசை + புல்.]*

**மூஞ்சான்** *mūñjāṉ,* பெ.(n.) கடல் மீன் வகை; sea -fish, scarlet-*Serranus miniatus.*

**மூஞ்சி** *mūñji,* பெ.(n.) 1. மூக்கும் வாயும் சேர்ந்த பகுதி; muzzle. 2. முகம்; face. *"பிணி கொண் மூஞ்சிப் பிசாசகன்" (நீலகேசி, பூதவாதச்.3). தவறு செய்தால் மூஞ்சிமேலே அடிப்பேன்.*

தெ., க. மூதி; ம. மூச்சி.

*[முந்து→(மூந்து)→மூஞ்சு→மூஞ்சி.]*

முகத்தில் நீண்டிருப்பது மூக்கு.

**மூஞ்சிகாட்டு[1]–தல்** *mūñji-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) எளிமையைக் காட்டுதல்; to wear a long face. *"கணக்கு கேட்டால் மூஞ்சியைக் காட்டுகிறான்" (உ.வ.).*

*[மூஞ்சி + காட்டு–தல்.]*

**மூஞ்சிகாட்டு[2]–தல்** *mūñji-kāṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மூஞ்சியாலடி–த்தல் பார்க்க; see *mūñjiyāl-aḍi-.*

*[மூஞ்சி + காட்டு–தல்.]*

**மூஞ்சிக்குண்டையம்** *mūñji-k-kunḍaiyam,* பெ.(n.) சுறா மீன் வகை (நெல்லைமீன.); a kind of shark fish-*Selachoidei.*

**மூஞ்சிச்சுவர்** *mūñji-c-cuvar,* பெ.(n.) நெற்றிச்சுவர் (கட்டட.நாமா.15); gable wall.

*[மூஞ்சி + சுவர்.]*

**மூஞ்சிசுண்டு–தல்** *mūñji-šunḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. முகத்தைச் சுளித்தல்; to be wry - faced. 2. முகங்கருகுதல்; to look small or withered.

மறுவ. முகவாட்டம்

*[மூஞ்சி + சுண்டு–தல்.]*

**மூஞ்சித்திருக்கை** *mūñji-t-tirukkai,* பெ. (n.) திருக்கை மீன் வகையுளொன்று; a kind of ray - fish.

*[மூஞ்சி + திருக்கை.]*



**மூஞ்சியாலடி–த்தல்** *mūñjiyāl-aḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) உடன்படாமைக் குறிப்புத் தோன்ற எரிந்து விழுதல் (இ.வ.); to show irritability or bad temper, show the sign of disagreement by irritation.

*[மூஞ்சியால் + அடி–த்தல்.]*

**மூஞ்சியிலடி–த்தல்** *mūñjiyilaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) மூஞ்சியாலடி–த்தல் பார்க்க; see *mūñjiyāl-aḍi-. மூஞ்சியில் அடித்தாற்போல் விடை சொல்லி அனுப்பிவிட்டான் (கோவை.).*

*[மூஞ்சியில் + அடி–த்தல்.]*

**மூஞ்சிவாளை** *mūñji-vāḷai,* பெ.(n.) முகவழகுடையதொரு வாளை மீன்; scabbard fish silvery, attaining 16 inch in length.

*[மூஞ்சி + வாளை.]*

**மூஞ்சு–தல்** *mūñju-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. நக்கியுண்ணுதல்; to lick. 2. மூசு–தல் (வின்.) பார்க்க; see *mūśu-.*

*[மூசு–தல் → மூஞ்சு–தல்.]*

**மூஞ்சுறு** *mūñjuṟu,* பெ.(n.) மூஞ்சூறு (வின்.) பார்க்க; see *mūñjūṟu.*

**மூஞ்சூற்றுமுள்ளன்** *mūñjūṟṟu-muḷḷaṉ,* பெ.(n.) கிழங்குள்ள கொடி வகை (யாழ்.அக.); a bulbous-rooted creeper.

*[மூஞ்சூறு + முள்ளன்.]*

**மூஞ்சூறு** *mūñjūṟu,* பெ.(n.) 1. உயிரி வகை (பிராணி) (உ.வ.); musk-rat, *Sorex indicus.* 2. மாட்டுநோய் வகை (இ.வ.); a cattle disease. 3. எலி வகைகளுள் ஒன்று; a kind of shrew mouse.

*[மூஞ்சுறு → மூஞ்சூறு.]*

**மூஞ்சூறுவாணம்** *mūñjūṟu-vāṇam,* பெ.(n.) உந்து கூண்டு வாணம், ஒருவகை ஏவுகணை; a kind of rocket.

*[மூஞ்சூறு + வாணம்.]*

மூஞ்சூறு வடிவில் செய்யப்பட்ட வாணம்.

**மூஞ்சை** *mūñjai,* பெ.(n.) 1. கோணியமுகம் (வின்.); pouting, sullen countenance. 2. நீண்ட முகம் (யாழ்.அக.); longish face. 3. நீண்ட மூக்கு (யாழ்.அக.); longish nose.

*[மூஞ்சி → மூஞ்சை.]*

**மூஞ்சையன்** *mūñjaiyaṉ,* பெ.(n.) முகங் கோணியவன் (வின்.); pouter, sulky fellow. *"மூஞ்சையப்பன் முகத்தைப் பார்" (பழ.).*

*[மூஞ்சை → மூஞ்சையன்.]*

மூட்கு[1]–தல் *mūṭku-,*5 செ.குன்றாவி.(v.t.) அகப்பையால் எடுத்தல் (இ.வ.); to ladle out, as rice from a pot.

*[மூழ்கு–தல்→மூட்கு–தல்.]*

மூட்கு[2]–தல் *mūṭku-,*5 செ.குன்றாவி.(v.t.) சிக்கலை விடுவித்தல் (இ.வ.); to unravel, to free, as from an encumbrance.

*[மீள்–தல்→மூள்–தல்→மூட்கு–தல்.]*

மூட்சி *mūṭci,* பெ.(n.) சினமிகுதி; violent temper; rage. *"மூட்சியிற் கிழித்த வோலை" (பெரியபு.தடுத்தாட்.56).*

*[மூள்→மூட்சி. மூள்–தல் = சினம் மிகுதல்.]*

மூட்டங்கட்டு[1]–தல் *mūṭṭaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மாழை (உலோக) உருக்கக் குழி யுண்டாக்குதல் (வின்.); to make a pit or cavity to serve as a crucible for melting metals. 2. முகில் ஒருங்கு சேர்தல்; to gather, as clouds. *முகில் மூட்டங் கட்டுகிறது.*

*[மூட்டம் + கட்டு–தல்.]*

மூட்டங்கட்டு[2]–தல் *mūṭṭaṅ-kaṭṭu-,*5 செ. குன்றாவி.(v.t.) 1. மண் முதலியவற்றால் மூடுதல் (இ.வ.); to cover with mud etc., as a corpse in the funeral pyre. 2. ஆயத்தப்படுத்துதல், ஒழுங்கு பண்ணுதல், தக்க திறமையுடன் இருத்தல்; to prepare, fit, arrange. 3. தொடங்குதல் (வின்.); to set going, commence as an undertaking.

*[மூட்டம் + கட்டு–தல்.]*

மூட்டங்கலை[1]–தல் *mūṭṭaṅ-galai-,* 4 செ.கு.வி.(v.i.) வானம் வெளிவாங்குதல்; to release the rain cloud.

*[மூட்டம் + கலை–தல்.]*

மூட்டங்கலை[2]–த்தல் *mūṭṭaṅ-kalai-,* 4 செ.குன்றாவி.(v.t.) மூடியுள்ள மூட்டத்தை நீக்குதல் (வின்.); to break open or break up, as a covering or coating of mud.

*[மூட்டம் + கலை–த்தல்.]*

மூட்டம்[1] *mūṭṭam,*பெ.(n.) முகில், புகை போன்றவை பெருமளவில் திரண்டிருத்தல்; thick mass of clouds, smoke, etc. *முகில் மூட்டம் ஞாயிறு ஒளியை மறைத்திருந்தது. பனி மூட்டத்துக்குள் சிக்கி வழி தெரியாமல் திண்டாடினோம்.*

*[மூடு→மூட்டம்.]*

மூட்டம்[2] *mūṭṭam,*பெ.(n.) 1. மூடியிருப்பது (சது.); which is covered. 2. உலை முகம் (யாழ்.அக.); furnace. 3. மூடுதழல்; smouldering fire. 4. மூடிய தவசக் குவை; heap of corn protected by a cover of straw and mud. 5. மகளிர் மகபேறுக் காலத்திற்குப் பின்னும் அடுத்து வரும் மாதவிடாய்க்கு முன்னுமுள்ள காலம்; interval between a woman's delivery and the first subsequent menstruation. *அவள் மூட்டத்திலேயே கருக்கொண்டாள் (இ.வ.).* 6. விறகு (யாழ்.அக.); fuel. 7. சொக்கப்பனை (வின்.); bon fire. 8. ஆயத்தம்; readiness. *மூட்டம் பண்ணுகிறான் (வின்.).* 10. கம்மக் கருவி வகை (யாழ்.அக.); a smith's tool.

*[மூடு→மூட்டம்.]*

மூட்டம்[3] *mūṭṭam,* பெ.(n.) மூளல்; kindling fire (சாஅக.).

மூட்டம்பண்ணு–தல் *mūṭṭam-paṇṇu-,* 5 செ.கு.வி.(v.i.) ஒரு செயல் செய்வதற்கு அணியப்படுத்துதல் (வின்.); to prepare, as for a journey.

*[மூட்டம் + பண்ணு–தல்.]*

**மூட்டம்பிரி–த்தல்** *mūṭṭam-piri-*, 4 செ. குன்றாவி.(v.t.) மூட்டங்கலை–தல் (வின்.) பார்க்க; see *mūṭṭaṅ-kalai-*.

**மூட்டம்பொதி–தல்** *mūṭṭam-podi-*,4 செ. குன்றாவி.(v.t.) மூட்டங்கட்டு–தல், 3 பார்க்க; see *mūṭṭaṅ-kaṭṭu-, 3.*

*[மூட்டம் + பொதி–தல்.]*

**மூட்டம்போடு–தல்** *mūṭṭam-pōḍu-*, 20 செ.கு.வி.(v.i.) மரக்கட்டளைகளை அடுக்கி தீயிட்டுக் கொளுத்திக் கரி உண்டாக்குதல்; to assemble the wooden logs for charred wood.

*[மூட்டம் + போடு–தல்.]*

தென்தமிழ் நாட்டில் குறிப்பாக மதுரை, இராமநாதபுரம், விருதுநகர், திருநெல்வேலி போன்ற மாவட்டங்களில் மானாவாரிப் பகுதி மிகுந்திருப்பதால் அங்கு வேலிக்காத்தான் எனும் செடி மரமாகவும் செடியாகவும் வளர்ந்து காணப்படும். பயிர்த் தொழில் இல்லாத வேனிற்காலங்களில் இவற்றை வெட்டி துண்டுகளாக்கி மொத்தமாக அடுக்கி வைத்துச் சருகு முதலியவற்றால் மூடி மண்ணால் பூசி தீயிட்டு எரிப்பர். தீ கொழுந்து விட்டு எரியாவண்ணம் நீரால் அணைத்துப் புகை மட்டும் வரும்படி செய்தால், மரத்துண்டுகளனைத்தும் கரியாகி விடும். இது பல்வேறு வகையில் பயன்படும்.

**மூட்டாங்கயிறு** *mūṭṭāṅ-kayiṟu*, பெ.(n.) மரக்கலத்தைக் கட்டுதற்குரிய கயிறு; catamaran, boat tieing rope.

*[பூட்டாங்கயிறு→மூட்டாங்கயிறு.]*

**மூட்டாதஅக்கினி** *mūṭṭāda-akkiṉi*, பெ.(n.) காமத்தீ; fire of passion (சா.அக.).

**மூட்டாள்** *mūṭṭāḷ*, பெ.(n.) மூட்டை தூக்கி; porter. *சீட்டாளுக் கொரு மூட்டாளா? (உ.வ.).*

க. மூடேயாளு

*[மூட்டு→மூட்டை + ஆள்.]*

**மூட்டு[1]–தல்** *mūṭṭu-*,5 செ.குன்றாவி.(v.t.) 1. தீ உண்டாக்குதல்; அடுப்பில் நெருப்பு பற்ற வைத்தல்; make fire kindle; fire in the hearth. *"கல்லா உமணர்க்குத் தீமூட் டாகும்" (அகநா.257:17). "மூட்டிய தீ" (நாலடி, 224). தீ மூட்டி குளிர் காய்ந்தனர். அடுப்பை மூட்டி உலை வைத்தல்.* 2. சிரிப்பு, சினம் முதலியவற்றை உண்டாக்குதல் அல்லது ஏற்படுத்துதல்; make some one laugh or angry; create mischief. *தண்ணீர் குடிக்கும் போது சிரிப்பு மூட்டாதே! உங்களுக்குள் வாய்ச்சண்டை மூட்டி விட்டது யார்?*

*[மூள்→மூட்டு→மூட்டு–தல்.]*

**மூட்டு[2]–தல்** *mūṭṭu-*,5 செ.குன்றாவி. (v.t.) சணற்பை, துணி முதலியவற்றில் இரு விளிம்புகள் இணையும்படி சேர்த்தல்; சேர்த்துத் தைத்தல்; bring closer; sew together. *மிக எளிமையாக நெல் கூலத்தை மூட்டினான். நிறவேட்டி (லுங்கி)யை மூட்டித் தைத்துத்தர ஐந்து ரூபாயா?*

*[மூள்→மூட்டு→மூட்டு–தல்.]*

**மூட்டு[3]–தல்** *mūṭṭu-*,5 செ.குன்றாவி.(v.t.) 1. ஒன்றைச் செலுத்துதல்; to cause to enter, to put into. *"கடுபுகு கதிர் மூட்டி" (கலித்.8).* 2. பொருந்துதல், கூடுதல்; to join, link. *"கால் கொடுத்தெலும்பு மூட்டி" (தேவா.631:3).* 3. பகையை ஏற்படுத்தி சண்டைக்குத் தூண்டி விடுதல்; to stimulate, as a quarrel, to stir up, as feelings. *அவனைப் பற்றி*

*இவனிடத்தில் மூட்டினான்.* 4. தைத்தல்; to stitch, sew together. 5. மிகைப்படுத்துதல் (வின்.); to increase. *இருவருக்கும் நன்றாய் மூட்டிவிட்டு விட்டான் (உ..வ.).*

தெ. முட்டிஞ்சு; ம. மூட்டுக.

*[மூள்→மூட்டு (பி.வி.) →மூட்டு–தல்.]*

**மூட்டு[4]** *mūṭṭu-,* பெ.(n.) உடல், அணி முதலியவற்றின் பொருத்து; joint, articulation. *"கவசத்தையும் மூட்டறுத்தான்" (கம்பரா. சடாயுவ.113).* 2. சந்திப்பு (யாழ்.அக.); junction. 3. குதிரைக் கடிவாளம் (பிங்.); bridle, bit. 4. கோள் (யாழ்.அக.); tale - bearing. 5. கட்டு; tie, bond. *"வன்றாண் மிசைப் பிணித்த வல்லிகளின் மூட்டறுத்து" (கந்தபு.மீட்சிப்.8).* 6. கட்டப்பட்டது (வின்.); that which is tied. 7. தையல்; stitch. 8. மனவெழுச்சி (வின்.); excitement provocation. 9. வாழையிலைக் கற்றை; bundle of banana leaves. *மூட்டுமூட்டாய்ப் பிரிந்து போய்விட்டது (உ.வ.).* 10. பொத்தகக் கட்டடப் பகுதி; binding of books. 11. எலும்புகளின் இணைப்பு; bone joint. *முழங்கால் மூட்டு விலகியிருக்கலாம் என்று முதலுதவி அளித்தவர் கூறினார்.*

ம., தெ. மூட்டு; க. மூட்டை.

*[மூள்→மூட்டு.]*

**மூட்டு[5]** *mūṭṭu,* பெ.(n.) வளையம், தோல், சாட்டைவார் மூன்றும் சேர்ந்த மதங்கத்தின் பகுதி (கலைமகள்.xii, 399); comprising the *vaḷayam, tōl* and *śāṭṭaivār.*

*[மூள்→மூட்டு.]*

**மூட்டு[6]** *mūṭṭu,* பெ.(n.) 1. மூடுகின்ற பொருள்; that which forms a cover, coating, wrapper. *"மாலையை மூட்டாகப் பெய்து வெயிலை மறைத்து" (சீவக.1267, உரை).* 2. மூட்டம், 1 (வின்.) பார்க்க; see *mūṭṭam, 1.*

*[மூள்→மூட்டு.]*

**மூட்டுக்கயிறு** *mūṭṭu-k-kayiṟu,* பெ.(n.) நெசவு ஆலையில் பாவு கீழே விழாமல் இருக்கக் கட்டியுள்ள கயிறு; rope tied, to prevent the warp falling down.

*[மூட்டு + கயிறு.]*

**மூட்டுக்காயம்** *mūṭṭu-k-kāyam,* பெ.(n.) உடற்பொருத்திலுள்ள காயம் (C.E.M.); wound at a joint.

*[மூட்டு + காயம்.]*

**மூட்டுச்சாட்டு** *mūṭṭu-c-cāṭṭu,* பெ.(n.) 1. கோள் (யாழ்ப்.); scandal; backbiting. 2. சந்து (இ.வ.); joint.

*[மூட்டு + சாட்டு.]*

**மூட்டுச்சூலை** *mūṭṭu-c-cūlai,* பெ.(n.) மூட்டுச்சூலைவளி பார்க்க; see *mūṭṭu-c-cūlai-vaḷi.*

*[மூட்டு + சூலை.]*

**மூட்டுச்சூலைவளி** *mūṭṭu-c-cūlai-vaḷi,* பெ.(n.) சூலை நோய் வகை; inflammation of the joints.

மறுவ. மூட்டுச்சூலைவாயு

*[மூட்டுச்சூலை + வளி.]*

**மூட்டுச்சேலை** *mūṭṭu-c-cēlai,* பெ.(n.) மூட்டித் தைத்த புடைவை (இ.வ.); patched saree.

*[மூள்→மூட்டு + சேலை.]*

**மூட்டுத்தாபனரோகம்** *mūṭṭu-t-tābaṉa-rōgam*, பெ.(n.) மூட்டுகள் வீங்கும் ஒருவகை நோய்; inflammation of the joints - *Acroarthiritis* (சா.அக.).

*[மூட்டு + **Skt.** தாபனரோகம்.]*

**மூட்டுத்திமிர்வாயு** *mūṭṭu-t-timir-vāyu*, பெ.(n.) மூட்டுத்திமிரூதை பார்க்க; see *mūṭṭu-t-timir-ūdai*.

**மூட்டுத்திமிரூதை** *mūṭṭu-t-timir-ūdai*, பெ.(n.) மூட்டிற் பிடிப்பு உண்டாக்கும் ஒருவகை ஊதை நோய் வகை (M.L.); anchylosis of joint.

*[மூட்டு + திமிர் + ஊதை.]*

**மூட்டுநழுவல்** *mūṭṭu-naḻuval*, பெ.(n.) உடற்பொருத்துப் பிசகல் (M.L.); dislocation of a joint.

மறுவ. மூட்டுப்பிசகல்.

*[மூட்டு + நழுவல்.]*

**மூட்டுப்பூச்சி[1]** *mūṭṭu-p-pūcci*, பெ.(n.) படுக்கைக்கட்டில், நாற்காலி முதலியவற்றின் இடுக்குகளில் இருந்து கொண்டு மாந்தனின் அரத்தத்தை உறிஞ்சி வாழும் ஒருவகைப் பூச்சி; bed-bug - *Cimex lectularius*.

*[மூடு→மூட்டு + பூச்சி. மூடு = முகடு.]*

**மூட்டுப்பூச்சி[2]** *mūṭṭu-p-pūcci*, பெ.(n.) கம்பளிப்பூச்சி (G.S.A.D.I.126); hairy caterpillar.

*[மூடு→ மூட்டு + பூச்சி.]*

**மூட்டுப்பூச்சிமருந்து** *mūṭṭu-p-pūcci-marundu*, பெ.(n.) கீரைப்பூச்சி மருந்து; vermifuge - for bugs (சா.அக.).

*[மூட்டுப்பூச்சி + மருந்து.]*

**மூட்டுவலி** *mūṭṭu-vali*, பெ.(n.) மூட்டில் உண்டான துன்பம்; pain in the joints - *Arthralgia, arthro dynia*.

*[மூட்டு + வலி.]*

**மூட்டுவாய்** *mūṭṭu-vāy*, பெ.(n.) பொருத்து (இலக்.வி.640, உரை, பக்.643); joint, clasp.

*[மூட்டு[4] + வாய்.]*

**மூட்டுவிலகல்** *mūṭṭu-vilagal*, பெ.(n.) மூட்டுநழுவல் (இங்.வை.) பார்க்க; see *mūṭṭu-naḻuval*.

*[மூட்டு + விலகல்.]*

**மூட்டை[1]** *mūṭṭai*, பெ.(n.) 1. தவசம் முதலியவை நிரப்பப்பட்டு கட்டப்பட்ட அல்லது தைக்கப்பட்ட சணற்பை; sack holding grain etc. *கூடத்தில் நெல் மூட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.* 2. எடுத்துச் செல்ல எளிமையாக இருக்கக் கட்டி வைத்திருப்பது அல்லது பொதிந்து வைத்திருப்பது; anything which is bundled up so as to be carried easily. *அழுக்குத் துணி மூட்டையை மிதிவண்டியில் வைத்திருந்தான். சிறுவர்கள் நூல்கள் அடங்கிய மூட்டையைத் தூக்க முடியாமல் திணறுகிறார்கள்.* 3. சணற் பையின் கொள்ளளவாகிய ஏறக்குறைய இருபத்து நான்கு மரக்காலைக் குறிப்பிடுவது; a term referring to the capacity of a sack, approximately twenty four measures. *எத்தனை மூட்டை நெல் விளைந்தது. அரிசி மூட்டை என்ன விலை?* 4. உள்ளே பண்டம் வைத்துக் கட்டப்பட்ட கட்டு அல்லது பொட்டணம்; bundle, that which is tied up, bag, wallet, satchel. *இந்தத் துணிகளையும் மூட்டையில்*

*வைத்துக்கட்டு (உ.வ.).* 5. பொதி; load carried in a sack, bale. *அரிசி மூட்டைகளையெல்லாம் வண்டியிலேற்றிக் கொண்டு போய்விட்டார்கள்.* 6. 48 பட்டணம்படி கொண்ட ஒரு கோணி அளவு; a large measure of capacity, bag, as of rice, containing generally 48 Madras measures (G.Tj.P.I.134). 7. பெரும் பொய் (இ.வ.); great lie. *அவன் மூட்டை யளக்கிறான்.*

ம. மூட்ட; தெ. மூட; க. மூடே.

*[முள் → மூள் → மூட்டு → மூட்டை = கட்டு, பொட்டணம், பொருள் நிறைந்த கோணி (தேவநேயம் 12:102)]*

**மூட்டை[2]** *mūṭṭai*, பெ.(n.) மூட்டுப்பூச்சி[1] பார்க்க; see *mūṭṭu-p-pūcci*[1]. *"மூட்டை கலம் புழுதி முக்கலம்" (தமிழ்நா.பக்.228).*

ம. மூட்ட.

*[மூடு → மூட்டை.]*

**மூட்டைக்காரன்** *mūṭṭai-k-kāraṉ*, பெ.(n.) 1. பொதி சுமக்கும் தொழிலாளி; porter. *"மூட்டைக்காரனுக்கு முழங்காலிலே அறிவு" (பழ.).* 2. பெரும் பொய் கூறுவோன் (இ.வ.); great liar.

மறுவ. மூட்டைத்தூக்கி

*[மூட்டை + காரன்.]*

**மூட்டைக்கொல்லி** *mūṭṭai-k-kolli*, பெ. (n.) சிறுதும்பை; small dead nettle, a kind of plant (சா.அக.).

**மூட்டைகட்டு-தல்** *mūṭṭai-kaṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. படிப்பு, வணிகம் முதலியவற்றை இனித் தொடர்வதில் பயன் இல்லை என்று நிறுத்துதல்; stop or discontinue studies, business, etc. *படிப்பை மூட்டை கட்டி வைத்துவிட்டு அப்பாவோடு சேர்ந்து வணிகத்தைக் கவனித்தான்.* 2. ஓர் இடத்திலிருந்து வெளியேறுதல்; quit, leave. *இனிமேல் இங்கு உனக்கு வேலை இல்லை, மூட்டைகட்டு!*

*[மூட்டை + கட்டு-தல்.]*

**மூட்டைத்தூக்கி[1]** *mūṭṭai-t-tūkki*, பெ.(n.) முடக்கற்றான்; palsy curer - *Cardiospermum halicacabum* (சா.அக.).

**மூட்டைத்தூக்கி[2]** *mūṭṭai-t-tūkki*, பெ.(n.) பொருள்களைத் தூக்கிச் செல்லுங் கூலியாள்; porter.

*[மூட்டை + தூக்கி.]*

**மூட்டைநாறி** *mūṭṭai-ṉāṟi*, பெ.(n.) ஓம வல்லி; a plant - *Country borage* (சா.அக.).

**மூட்டைப்பூச்சி** *mūṭṭai-p-pūcci*, பெ.(n.) மூட்டுப்பூச்சி[1] பார்க்க; see *mūṭṭu-p-pūcci*[1]. *"மூட்டைப் பூச்சியைப் போல கடிக்கிறாயே" (பழ.).*

*[மூட்டை + பூச்சி.]*

மாந்தனின் அரத்தத்தை உறிஞ்சி இடுக்குகளில் வாழும் சிறு பூச்சி.

**மூட்டைமுடிச்சு** *mūṭṭai-muḍiccu*, பெ.(n.) பயணத்திற்கான பொருள்; bag and baggage. *பாட்டியின் மூட்டை முடிச்சுகளை வைக்கவே வண்டியில் இடம் போதவில்லை.*

*[மூட்டை + முடிச்சு.]*

**மூட்டையவிழ்-த்தல்** *mūṭṭai-y-aviḻ-*, 4 செ.கு.வி. (v.t.) மூட்டைவிடு-தல் (இ.வ.) பார்க்க; see *mūṭṭai-viḍu-*.

*[மூட்டை + அவிழ்-த்தல்.]*

**மூட்டைவிடு—தல்** *mūṭṭai-viḍu-,* 20 செ. கு.வி.(v.i.) பொய்ச் செய்தி கூறுதல் (இ.வ.); to give out a fictitious account; to start false rumours.

*[மூட்டை + விடு—தல்.]*

**மூட** *mūḍa,* பெ.அ.(adj.) அறிவுக்கு ஒவ்வாத, முட்டாள்தனமான; absurd, foolish. *மூடப்பழக்கம், மூடக் கொள்கை, மூடச்சொல்.*

**மூடக்காய்** *mūḍa-k-kāy,* பெ.(n.) நோய் விழுந்து சரியாக வெடிக்காதப் பருத்தி (கோவை.); uncracked diseased cotton.

**மூடக்கொத்தான்** *mūḍa-k-kottāṉ,* பெ.(n.) முடக்கொற்றான்; balloon vine a creeper - *Cardiospermum halicacabum* (சா.அக.).

**மூடகபாணி** *mūḍaga-bāṇi,* பெ.(n.) இலைக் கள்ளி; leafy spurge - *Euphorbia nerifolia.*

**மூடகருப்பம்** *mūḍa-karuppam,* பெ.(n.) 1. கருப்பத்திலிறந்த குழந்தை (சிசு) (யாழ். அக.); still - born child. 2. மகப்பேறு காலத்தில் குழந்தையை எளிதில் வெளியேறாமல் செய்யும் நோய் வகை (சீவரட். 208); a disease in which a pregnant woman is not easily delivered of her child.

**மூடத்தட்டு—தல்** *mūḍa-t-taṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) உப்பளப் பாத்திகளில் தேங்கியிருக்கும் உப்புநீர் மீது படியும் பாசி போன்ற ஆடையை, வாருபலகையினால் கலைத்து அப்புறப்படுத்துதல்; remove the layer like fungus settled on the top of the salt water stagnant in the salt - pan.

**மூடத்தனம்** *mūḍattaṉam,* பெ.(n.) முட்டாள்தனம்; சோர்வுடன் கூடிய தன்மை; அறிவீனம்; stupidity, dullness, ignorance.

*[மூடம் + தனம்.]*

**மூடதை** *mūḍadai,* பெ.(n.) மூடத்தனம் (யாழ்.அக.) பார்க்க; see *mūḍa-t-taṉam.*

**மூடநம்பிக்கை** *mūḍa-nambikkai,* பெ.(n.) பழக்கத்தினால் ஏற்றுக் கொள்ளும், அறிவுக்கு ஒவ்வாத நம்பிக்கை; supersititious belief. *மூடநம்பிக்கையால் கிராமத்தில் பெண்கள் பிறந்த குழந்தையின் எடையைப் பார்க்க அனுமதிப்பதில்லை. அறிவியலாளரிடையிலும் மூடநம்பிக்கைகள் உண்டு.*

*[மூடம் + நம்பிக்கை.]*

**மூடபத்தி** *mūḍa-patti,* பெ.(n.) கரணியம் அறியாமல் செய்யும் இறையன்பு (உ.வ.); superstition, blind zeal, bigotry.

*[மூடம் + (பக்தி)→பத்தி.]*

**மூடம்¹** *mūḍam,* பெ.(n.) 1. முகில்சூழ்ந்த வனம் (மந்தாரம்); dark, clouded sky. *வானம் இன்று மூடமாயிருக்கிறது (பே.வ.).* 2. குளிர் (யாழ்.அக.); chillness; cold. 3. மறைந்த இடம்; place of concealment, secret place. *"வேட்கைவிட்டார் நெஞ்சின் மூடத்துளே நின்று முத்தி தந்தானே" (திருமந்.2614).*

க. மோட.

*[மூடு→மூடம்.]*

**மூடம்²** *mūḍam,* பெ.(n.) 8 மரக்கால் கொண்ட முகத்தலளவை (தைலவ.தைல.); a measure of capacity = 8 marakkal.

மூடம்[3] *mūḍam*, பெ.(n.) 1. அறிவின்மை (பிங்.); foolishness, stupidity. 2. மயக்கவுணர்வு; confusion; error. *"பாசண்டி மூடம்" (அறநெறி.16).* 3. ஐயம் (யாழ்.அக.); doubt.

மூடமா *mūḍamā*, பெ.(n.) காட்டுமா; wild mango - *Buch anania latifolia* (சா.அக.).

மூடர் *mūḍar*, பெ.(n.) மூடன் பார்க்க; see *mūḍan*. *மூடர்கள் சேர்க்கையில் தப்பாமல் கெடுதி வரும். மூடர் கூட்டுறவு முழுதும் கேடு. மூடர் முன்பு மூர்க்கம் பேசாதே (பழ.).*

*[மூடன் → மூடர்.]*

மூடல் *mūḍal*, பெ.(n.) 1. மூடுகை; covering. 2. மூடி; cover; lid. *சாடியின் மூடல்.*

*[மூடு → மூடல்.]*

மூடலை *mūḍalai*, பெ.(n.) மதிகேடு; lack of sense. *"மூடலையாவதன் காரண மென்னை" (நீலகேசி.380).*

மூடவாதம் *mūḍa-vādam*, பெ.(n.) 1. மலமும் நீரும் சேர்ந்து கொப்பூழ் இருக்கும் இடத்தில் குடலை இழுத்துப் பிடித்து வயிற்றுக்குள் துன்பத்தை உண்டாக்கும் ஒரு வகை ஊதை நோய்; a disease marked by constipation suppession of urine, pain and stiffness round the novel (சா.அக.).

மூடன் *mūḍan*, பெ.(n.) 1. அறிவிலான்; fool, ignoramus, stupid person. *"பயன் றெரித றேற்றாத மூடர்" (நாலடி, 316).* 2. கீழ்மகன் (திவா.); low, mean man. *மொட்டைக் கடிதத்தை வைத்து மனைவிமேல் ஐயப்படுகிறான் மூடன் (உ.வ.).*

மூடனம்[1] *mūḍanam*, பெ.(n.) மூடம்[3], 1 (இ.வ.) பார்க்க; see *mūḍam[3], 1.*

*[மூடம் → மூடனம்.]*

மூடனம்[2] *mūḍanam*, பெ.(n.) மிளகு (மலை.); black pepper.

மூடாக்கு *mūḍākku*, பெ.(n.) முக்காடு பார்க்க; see *mukkāḍu.*

*[மூடு + ஆக்கு.]*

மூடாத்துமா *mūḍāttumā*, பெ.(n.) மூடன் (உ.வ.); fool, stupid person.

மூடாதியந்தம் *mūḍādiyantam*, பெ.(n.) முட்டைச் சிலந்தி; a kind of abscess (சா.அக.).

மூடாந்தகாரம் *mūḍānda-kāram*, பெ.(n.) மிகை அறிவின்மை (வின்.); excessive mental darkness.

மூடாம்பரக்கண் *mūḍāmbarakkaṇ*, பெ.(n.) அரைக்கண் பார்வையான மெய்ப்பாட்டுக் கண் (அவிநயக்கண்) வகை (பரத.பாவ.94); seeing with half- closed eyes; squinting eyes.

*[மூடு + அம்பரம் + கண்]*

மூடி[1] *mūḍi*, பெ.(n.) 1. ஒரு கொள்கலனின் திறப்பை மூடுவதற்கு அந்தத் திறப்பின் அளவே இருக்கும் ஒரு சிறிய தட்டு; anything that is designed for closing or covering a container. *'சாடிக்கேற்ற மூடி'.* 2. எழுதுகோல் போன்றவற்றில் மேல் பகுதியைப் பாதுகாக்க செருகி மூடும் அமைப்பு; cap of a pen, etc. *எழுதுகோலின் மூடி தொலைந்துவிட்டது. "மூடி வைத்தாலும் முணுமுணு என்னும், தைத்து வைத்தாலும் டமடம என்னும்", "மூடாத உடைமை முக்காற் காசும் பெறாது" (பழ.).*

*[மூடு → மூடி.]*

**மூடி**[2] *mūḍi,* பெ.(n.) 1. மூடு கருவி; that which covers, cover, lid top. 2. தேங்காய் மூடி (கொ.வ.); half of a split coconut. 3. கொத்து மல்லி (மலை.); coriander.

தெ. மூட; ம. மூடி.

*[மூடு→மூடி.]*

**மூடி**[3] *mūḍi,* பெ.(n.) மூடத்தன்மை யுள்ளவள்; stupid, foolish woman. *"ஏடி மூடி" (அரிச். பு.மயான.37).*

**மூடிக்கீரை** *mūḍi-k-kīrai,* பெ.(n.) எலிச் செவிக் கீரை; a prostate weed - *Merremia gangetica (emargineta)* (சா.அக.).

**மூடிகநஞ்சு** *mūḍiga-nañju,* பெ.(n.) எலி நஞ்சு; rat poison.

**மூடிகம்** *mūḍigam,* பெ.(n.) 1. பெருச்சாளி; bandicoot. *"மீனு மானேன் மாய்ந்து மூடிகமு மானேன்" (பிரமோத்.15:29).* 2. எலி (யாழ்.அக.); rat.

**மூடிகாராதி** *mūḍikārādi,* பெ.(n.) பூனை (யாழ்.அக.); cat.

**மூடிமறை–த்தல்** *mūḍ-maṟai-,* 4 செ.கு.வி. (v.i.) நடந்து விட்ட ஒன்றைப் பிறர் அறிந்துவிடாதவாறு செயல்படுதல்; cover up. *கொலையை மூடி மறைக்க முயற்சி செய்கிறார்கள். எவ்வளவு மூடி மறைத்தாலும் உண்மை ஒருநாள் தெரியாமலா போகும்?*

*[மூடி + மறை–த்தல்.]*

**மூடியம்மன்** *mūḍiyammaṉ,* பெ.(n.) பெண் கடவுள்; goddess. *'மூடியம்மனை வழிபட மும்மாரி மழைபொழியும் மக்கள் குறை தீரும்' (கோவை.).*

*[மூடி + அம்மன்.]*

**மூடிவை–த்தல்** *mūḍi-vai-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. சேமித்துப் பாதுகாத்தல்; to preserve, keep safe. *"ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி மூடி வைத்திட்ட மூர்க்கனொ டொக்குமே" (தேவ.1218, 9).* 2. கமுக்கமாக (இரகசியம்) மறைத்து வைத்தல்; to conceal, hide,as secrets.

*[மூடு→மூடி + வை–த்தல்.]*

**மூடு**[1]**–தல்** *mūḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கதவு, பலகணி (சன்னல்) போன்றவற்றை அடைத்தல்; close of doors, etc., shut a door, etc. *பலகணியை (சன்னலை) மூடாதே!* 2. பெட்டி, பை முதலியவற்றின் திறப்பை (ஒரு பொருளை உள்ளே போட முடியாத அளவுக்கு) அடைத்தல்; be in closed condition of a case, box, etc.; close a case, box, etc. *நான் பார்த்த போது பெட்டி மூடித்தான் இருந்தது. தண்ணீர்த் தவலையை மூட மறந்து விட்டேன்.* 3. கண், வாய் முதலியவற்றின் இமைகளை, உதடுகளை ஒன்று சேர்த்தல்; close, close the eyes, mouth. *ஊழ்கத்தின் (தியானத்தின்) போது அவருடைய கண்கள் மூடி இருந்தன. வாயை மூடித்தூங்கு!* 4. நீட்டிய நிலையில் இருக்கும் புத்தகம் போன்றவற்றை மடக்கியோ, இணைத்தோ ஒன்று சேர்த்தல்; close, close the fingers, the book, etc. *பிறந்த குழந்தையின் கை மூடி இருக்கும். கொட்டாவி வந்ததும் புத்தகத்தை மூடினான்.* 5. மறைக்கப்பட்டிருத்தல் அல்லது மறைத்தல்; to hide, screen; to obscure. *"மூடி மேனியை" (கம்பரா.பிரமாத்திர.173). பனிமூடிய மலை. கையால் காதை மூடினான்.* 6. கல்வி நிறுவனம், தொழிற்சாலை முதலியவை இடைக்காலமாகவோ நிலையாகவோ செயல்படாமல் நிறுத்தி வைத்தல்; be closed, shut down for the

day or permanently, close a shop, instituions, factory etc, for the day or permanently. *விரைந்து போ, கடை மூடிவிடும். நிருவாகம் தொழிற் சாலையை மூடிவிட முடிவு செய்துள்ளது.* 7. வெளியேறும் நீர் முதலிய நீர்மங்களைக் குழாய் அல்லது அதன் அமைப்பிலிருந்து வெளியேறாமல் நிறுத்துதல்; stop, close, turn off the flow of water etc. from a tap etc. *குழாயை மூடிவிட்டாயா?* 8. போர்த்தல்; to cover, shroud, veil. *"மூடித்தீக் கொண்டெழுவர்" (நாலடி, 24). "மூடி முக்காட்டுக்குள்ளே போகிறவள்தான் ஓடி, ஓடி மாப்பிள்ளை கொள்வாள்" (பழ.).* 9. அடைத்தல்; to shut in, enclose; to close, as the eyes; to shut, as the mouth. *கண்மூடித் திறந்தான்.* 10. சுற்றிக் கொள்ளுதல்; to surround, encompass. *"ஆர்த்துமண்டி மூடினான்" (கம்பரா. நாகபாச. 92).*

தெ. மூயு; க. முச்சு; ம. முடுக.

மூடு²-தல் *mūḍu-*, 5 செ.கு.வி.(v.i.) நோய் முதலியன மிகுதல்; to reach a critical stage, as a disease, to come to a head.

மூடு³ *mūḍu*, பெ.(n.) 1. வேர்; root. *"மன்னு புனன் மூட்டில்விடக் கொப்பெலாந் தழைத் தோங்கும்" (குற்றா.தல.மூர்த்தி.17).* 2. கரணியம்; cause; origin. *இவற்றிற் கெல்லாம் அவன்தான் மூடு.* 3. சிறுதூறு; small bush. 4. பெட்டையாடு (தொல். பொருள்.619); ewe. 5. நிலை; stand, as of a chariot. *தேர் மூடு (இ.வ.).*

தெ. மோடு; ம. மூடு.

மூடு⁴ *mūḍu*, பெ.(n.) மூட்டுப்பூச்சி பார்க்க; see *mūṭṭu-p-pūcci. "மூட்டுக்குங் கொதுகுக்கும்" (அருட்பா.vi, தனிப்பா. பக்.750).*

*[முகடு→மூடு.]*

மூடு⁵ *mūḍu*, பெ.(n.) மூடன், 1 பார்க்க; see *mūḍaṉ, 1. "மூடாய முயலகன்" (தேவா. 878, 3).*

மூடுகுப்பாயம் *mūḍu-kuppāyam*, பெ.(n.) 1. நீண்ட சட்டை (அங்கி) (யாழ்ப்.); mantle; long coat. 2. மேற் போர்வை (யாழ்.அக.); overcoat.

*[மூடு + குப்பாயம். குப்பாயம் = சட்டை.]*

மூடுசன்னி *mūḍu-šaṉṉi*, பெ.(n.) ஒரு வகை இசிவு (சன்னி) நோய்; catalepsy.

*[மூடு + சன்னி.]*

மூடுசாந்து *mūḍu-šāndu*, பெ.(n.) தளம் முதலியவற்றிற்குப் பயன்படுத்தும் அரைத்த சாந்து (யாழ்ப்.); lime mortar used in flooring, terracing, etc.

*[மூடு + சாந்து.]*

மூடுசீலை *mūḍu-šīlai*, பெ.(n.) 1. மூடுவதற்குப் பயன்படும் ஒருவகைத் துணி; cloth to cover medicine or medicinal vesael. 2. போர்த்தும் ஆடை (வின்.); wraper, cloth-cover.

*[மூடு + சீலை.]*

மூடுசுரம் *mūḍu-šuram*, பெ.(n.) காமக் காய்ச்சல்; fever due to passion.

*[மூடு + சுரம்.]*

மூடுசூளை *mūḍu-šūḷai,* பெ.(n.) செங்கற் காளவாய் வகை (வின்.); a kind of brick kiln.

*[மூடு + சூளை.]*

மூடுடமரம் *mūḍuḍa-maram,* பெ.(n.) மரவகை; East Indian stainwood- *Chloroxylon swietenia.*

*[மூடு + உடைமரம்.]*

மூடுதார் *mūḍu-tār,* பெ.(n.) மூடுசீலை (வின்.) பார்க்க; see *mūḍu-šīlai.*

*[மூடு + தார். தாறு→தார்.]*

மூடுதிரை *mūḍu-tirai,* பெ.(n.) மூடுசீலை (வின்.) பார்க்க; see *mūḍu-šīlai.*

*[மூடு + திரை.]*

மூடுதூறு *mūḍu-tūṟu,* பெ.(n.) பிணத்தை மூடிவைப்பதற்கானப் போர்வை (பிரேதச் சீலை); winding sheet.

*[மூடு + தூறு. தூறு = புதர், காடு.]*

மூடுபல்லக்கு *mūḍu-pallakku,* பெ.(n.) மூடிய பல்லக்கு வகை; a kind of covered palanquin.

*[மூடு + பல்லக்கு]*

மூடுபனி *mūḍu-paṉi,* பெ.(n.) பொருள்களைத் தெளிவாகப் பார்க்க முடியாதபடி அடர்த்தியாகப் பெய்யும் பனி; fog, mist. *மூடுபனி காரணியமாகப் பாதை தெரியாததால் வண்டிகள் மெதுவாகச் சென்றன. நேற்று அதிகாலை மூடுபனி அதிகமாக இருந்ததனால் வழக்கமாகச் செல்ல வேண்டிய வானூர்திகள் செல்லவில்லை.*

*[மூடு + பனி.]*

மூடுபாறை *mūḍu-pāṟai,* பெ.(n.) வாய்க்கால், கண்மாய் மேல் மூடும் கல்; covering stone of a tunnel or a sluice.

*[மூடு + பாறை.]*

மூடுமந்திரம் *mūḍu-mandiram,* பெ.(n.) 1. கமுக்கமாக நடக்கும் செயல்பாடு; profound secret. 2. இன்னது நடக்கிறது என்பது தெளிவாக தெரியாத, உணர்ந்து கொள்ள முடியாத நிலை; veiled activity, secrecy. *யார் அமைச்சராகப் போகிறார் என்பது மூடு மந்திரமாகவே இருக்கிறது.*

*[மூடு + மந்திரம்.]*

மூடுவழி *mūḍu-vaḻi,* பெ.(n.) கோட்டை முதலியவற்றில் கட்டடத்தால் மூடிக் காக்கப்பட்ட வழி (கட்டட.நாமா.);subterranean passage, as in a fort.

*[மூடு + வழி.]*

மூடை *mūḍai,* பெ.(n.) பொதி, பண்ட மூட்டை; sack, sack-load, pack. *"பொதிமூடைப் போரேறி" (பட்டினப்.137). "மனைக்குவைஇய கறிமூடையாற்" (புறநா.343:3).* 2. மிகச் செறிந்த கூலக் கோட்டை; packed bundle, as of paddy. *"கடுந்தெற்று மூடை" (புறநா.285).* 3. கூலக் குதிர்; a large receptacle for grains. *"கடுந்தெற்று மூடையின்" (பொருந.245).*

தெ. முட; க. மூடெ; ம. மூட.

*[முள் →மூள்→மூட்டு→மூட்டை →மூடை.]*

மூண்டன் *mūṇḍaṉ,* பெ.(n.) மிளகு (மலை.); black pepper.

மூண்டாணி *mūṇḍāṇi,* பெ.(n.) மூன்று வீசம் (நாஞ்.) பார்க்க; see *mūṉṟu-vīšam.*

*[முண்டாணி →மூண்டாணி.]*

**மூணான்** *mūṇāṉ*, பெ.(n.) கொடிய நஞ்சு வாய்ந்த மீன்; a highly poisionous fish. *இம்மீன் கடற்பரப்பில் பஞ்சு போல மிதக்கும்.*



**மூத்த** *mūtta*, பெ.அ.(adj.) 1. உறவு முறைச் சொற்களோடு வருகையில் முதலில் பிறந்தவர், குறிப்பிடப்படும் பலரில் முதலாவதாக அமைந்து இருப்பவர்; with kinship terms born first, elder first among many. *"நின்று மூத்த யாக்கை யன்னநின்" (புறநா.24:27). "ஐந்தலை அவிர்பொறி அரவ மூத்த" (பரிபா.19:72). "மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய" (பதிற்று.22:10). மூத்த மகன். மூத்த மருமகள். "மூத்தது மோழை; இளையது காளை" (பழ.).* 2. முதன்மைப் பதவியில் இருப்பவரைக் குறிக்கையில், இருப்பவர்களில் நீண்ட காலமாகப் பணிபுரியும் அல்லது பட்டறிவுள்ள; of officials senior or experienced. *மூத்த அதிகாரிகளுடன் கலந்து முடிவு எடுக்க வேண்டும். மூத்த தலைவர்.*

*[முது →மூ→மூத்த.]*

**மூத்தகுடி[1]** *mūtta-kuḍi*, பெ.(n.) பழமையான குடி; ancient citizens, who have come from a respectable family. *"கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு முற்றோன்றி மூத்தகுடி" (பு.வெ. 2:14.).*

*[மூத்த + குடி.]*

**மூத்தகுடி[2]** *mūtta-kuḍi*, பெ.(n.) முதல் மனைவி (கோவை.); first wife. *மூத்தகுடியிருக்க இன்னொரு முந்தானை குடி எதுக்கு (கோவை.).*

மறுவ. மூத்தாள்

*[மூத்த + குடி.]*

**மூத்தகுடிமகள்** *mūtta-kuḍi-magaḷ*, பெ.(n.) முதல் மனைவியின் மகள் (கோவை.); a daughter of first wife.

மறுவ. மூத்தாள் மகள்

*[மூத்தகுடி + மகள்.]*

**மூத்தண்ணா** *mūttaṇṇā*, பெ.(n.) பெரியண்ணன், தமையன் (இ.வ.); eldest brother.

*[மூத்த + அண்ணா.]*

குடும்பத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட உடன் பிறந்த ஆண்மக்கள் இருக்க அதில் முதலாவதாகப் பிறந்தவனை மூத்த அண்ணா என்பர்.

**மூத்ததிகாரம்** *mūttadikāram*, பெ.(n.) தலைமை அதிகாரம் (T.A.S.); supreme authority.

*[மூ→மூத்த + அதிகாரம்.]*

**மூத்ததிருப்பதிகம்** *mūtta-tiruppadigam*, பெ.(n.) காரைக்கால் அம்மையார் இயற்றியதும் பதினோராந் திருமுறையில் உள்ளதுமான ஒரு பதிகம் (பெரியபு. காரைக்கா.63); a poem in *Patiṉōrāṉ-tirumuṟai* by *Kāraikkāl-ammaiyār.*

*[மூ→மூத்த + திருப்பதிகம்.]*

**மூத்தநயினார்** *mūtta-nayiṉār,* பெ.(n.) சிவனின் மூத்த மகனான பிள்ளையார்; *Piḷḷaiyār,* as the eldest son of *Śivā.* *"பெருச்சாளியை மூத்த நயினார் மொடுவாய்க் கொடுபோனார்" (குற்றா. குற. 93:2).*

*[மூ→மூத்த + நயினார். நாயனார்→நயினார்.]*

**மூத்தநாயனார்** *mūtta-nāyaṉār,* பெ.(n.) மூத்தநயினர் பார்க்க; see *mūtta-nayiṉār. "மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை" (பதினொ.).*

*[மூ→மூத்த + நாயனார்.]*

**மூத்தப்பன்** *mūttappaṉ,* பெ.(n.) பாட்டன்; father's father. *"எம்மு னெந்தை மூத்தப்பன்" (தேவா.1086, 9). "தம் மூத்தப்பன்" (திவ். திருப்பல்.6).*

ம. முத்த ப்பன்

*[முது→ மூ→மூத்த + அப்பன்.]*

**மூத்தபிள்ளை** *mūtta-piḷḷai,* பெ.(n.) திருவாங்கூர் அரசரால் நாஞ்சில் நாட்டு வேளாளர்க்குக் கொடுக்கப்படும் பட்ட வகை (நாஞ்.); a title conferred on the *Vēḷāḷas* of *Nāñcilnāḍu,* by Travancore kings.

*[மூ→மூத்த + பிள்ளை.]*

**மூத்தபிள்ளையார்** *mūtta-piḷḷaiyār,* பெ.(n.) மூத்தநயினார் பார்க்க; see *mūtta-nayiṉār. "மூத்த பிள்ளையார் திருமும் மணிக்கோவை" (பதினொ.).*

*[மூ→மூத்த + பிள்ளையார்.]*

**மூத்தம்** *mūttam,* பெ.(n.) முழுத்தம் பார்க்க; see *muḻūttam. "மூத்தமொன்றின் முடிந்தவர்" (கம்பரா. கரன்வதை.189).*

*[முழுத்தம்→மூத்தம்.]*

**மூத்தமாமியார்** *mūtta-māmiyār,* பெ.(n.) 1. மாமனாரின் மூத்த மனைவி; first wife of one's father-in-law. 2. மனைவியின் தமக்கை (செ.வ.); elder sister-in-law.

*[மூ→மூத்த + மாமியார்.]*

**மூத்தவர்** *mūttavar,* பெ.(n.) மூத்தவன் பார்க்க; see *mūttavaṉ.வீட்டில் மூத்தவர்களைக் கலந்து கொண்டு பிறகு சொல்கிறேன்.*

*[மூ→மூத்தவர்.]*

**மூத்தவன்** *mūttavaṉ,* பெ.(n.) 1. அகவையிற் பெரியவன்; one who is senior in age. 2. அண்ணன்; elder brother. *"மூத்தவற் கரசு வேண்டி முன்பு தூதெழுந்தருளி" (திவ்.பெரியதி. 4. 6 : 7).* 3. மேலோன் (வின்.); superior.

*[மூ→மூத்தவன்.]*

**மூத்தவாரை** *mūttavārai,* பெ.(n.) பச்சோந்தி; chameleon (சா.அக.).

மறுவ. பச்சோணான், பச்சோந்தி.

**மூத்தார்** *mūttār,* பெ.(n.) 1. மூத்தோர், 1 பார்க்க; see *mūttōr, 1. "மூத்தா ரிளையார் பசுப் பெண்டிர்" (ஆசாரக்.65).* 2. கணவனுடைய தமையன் (இ.வ.); husband's elder brother.

*[மூ→மூத்தார்.]*

**மூத்தாள்** *mūttāḷ,* பெ.(n.) 1. முதியவள் (பிங்.); aged woman. 2. தமக்கை (பிங்.); elder sister. 3. மூதேவி (யாழ்.அக.) பார்க்க; see *mūdēvi.* 4. முதல் மனைவி; first wife.

*[மூ→மூத்தாள்.]*

**மூத்தானுப்பு** *mūttāṉ-uppu,* பெ.(n.) மூத்திரவுப்பு பார்க்க; see *mūttiravuppu.*

**மூத்திர அமிலம்** *mūttira-amilam,* பெ.(n.) சிறுநீர் புளியம் (அமிலம்); uric acid (சா.அக.).

*[மூத்திரம் + **Skt.** அமிலம்.]*

**மூத்திரக்கட்டி** *mūttira-k-kaṭṭi,* பெ.(n.) சிறுநீர்ப்பையில் உண்டாகும் கட்டி; urinary abscess (சா.அக.).

*[மூத்திரம் + கட்டி.]*

**மூத்திரக்கடுப்பு** *mūttira-k-kaḍuppu,* பெ. (n.) சிறுநீர் தொடர்புடைய நோய்; disurea - *Urrodynia* (சா.அக.).

மறுவ. நீர்கடுப்பு, நீர்ச்சுருக்கு.

*[மூத்திரம் + கடுப்பு.]*

**மூத்திரக்கல்** *mūttira-k-kal,* பெ.(n.) மூத்திரப் பையில் உண்டாகும் கல் அடைப்பு நோய் (இங்.வை.); stone in the bladder, a disease.

மறுவ. சிறுநீர்க்கல்

*[மூத்திரம் + கல்.]*

**மூத்திரக்கழலை** *mūttira-k-kaḻalai,* பெ. (n.) சிறுநீர் வரும் வழியில் உண்டாகும் கட்டி; a tumour or growth in the urethra - *Urethropyma* (சா.அக.).

*[மூத்திரம் + கழலை.]*

**மூத்திரக்கழிச்சல்** *mūttira-k-kaḻiccal,* பெ.(n.) 1. உடம்பில் உள்ள நுட்பமான மாசுகளையும், ஈரல், நீர்ப்பை அழுக்குகளையும், நீர்க்கட்டு முதலிய நச்சுக்களையும் வெளிப்படுத்தும் ஒருவகைக் கழிச்சல்; a urinary disease. 2. சிறுநீரை மிகைப்படுத்தும் மருந்து; diuretic (சா.அக.).

*[மூத்திரம் + கழிச்சல்.]*

**மூத்திரக்காதம்** *mūttira-k-kādam,* பெ. (n.) சிறுநீர் கொஞ்சங் கொஞ்சமாய் வருதல் அல்லது சொட்டுச் சொட்டாய் விழல்; retention of urine and intermittent flow of urine during micturition.

*[மூத்திரம் + **Skt.** காதம்.]*

**மூத்திரக்கிரிச்சரம்** *mūttira-k-kiric caram,* பெ.(n.) 1. கல்லடைப்பு; blocking the passage of urine by the urinary calculus. 2. நீர்ச்சுருக்கு; burning sensation or scalding pain white passing urine due to calculus (சா.அக.).

*[மூத்திரம் + **Skt.** கிரிச்சரம்.]*

**மூத்திரக்கிருச்சம்** *mūttira-k-kiruccam,* பெ.(n.) 1. மூத்திரக்கல் பார்க்க; see *mūttira-k-kal.* 2. மூத்திரக்கிருச்சிரம் (வின்.) பார்க்க; see *mūttira-k-kirucciram.*

**மூத்திரக்கிருச்சிரம்** *mūttira-k-kiruc ciram,* பெ.(n.) துன்பப்பட்டுச் சிறிது சிறிதாக மூத்திரம் போகச் செயும் நோய்வகை; strangury, scant urination, difficulty in passing urine.

*[மூத்திரம் + **Skt.** கிருச்சிரம்.]*

**மூத்திரக்கிறீச்சனம்** *mūttira-k-kiṟiccaṉam,* பெ.(n.) மூத்திரக்கிருச்சம் பார்க்க; see *mūttira-k-kiruccam.*

*[மூத்திரம் + கிறீச்சனம்.]*

**மூத்திரக்குடல்விருத்தி** *mūttira-k-kuḍal-virutti,* பெ.(n.) வழக்கமாக வருகின்ற சிறுநீரை அடக்கியடக்கி அகாலத்தில் பெய்வதினால் அம்மூத்திரம் உள்ளே தங்கி, பையில் கட்டுண்ட நீரைப்போல் துளி துளியாய்க் கலங்கி நீர்ச் சுருக்குடன் வெளிப்படும் ஒரு வகை நோய்; a kind of urinary disease caused by suppression and detention of urine in the bladder - *Retention of urine* (சா.அக.).

*[மூத்திரம் + குடல் +* **Skt.** *விருத்தி.]*

**மூத்திரக்குடுக்கை** *mūttira-k-kuḍuk kai,* பெ.(n.) சிறிது நேரம் கூட சிறுநீரை வெளியேற விடாமல் அடக்கும் தன்மையில்லாதவ–ன்–ள் (வின்.); person incontinent of urine.

*[மூத்திரம் + குடுக்கை.]*

**மூத்திரக்குண்டி** *mūttira-k-kuṇḍi,* பெ.(n.) சிறுநீரைத் தூங்கும்போது படுக்கை யிலேயே வெளியேற்றுபவ–ன்–ள் (உ.வ.); person who passes urine in bed during sleep.

*[மூத்திரம் + குண்டி.]*

**மூத்திரக்குண்டிக்காய்** *mūttira-k-kuṇḍi-k-kāy,* பெ.(n.) அரத்தத்தில் உள்ள கெட்ட நீரைப் பிரித்து சிறுநீராக மாற்றும் உடல் உறுப்பு (இங்.வை.); kidney.



*[மூத்திரம் + குண்டி + காய்.]*

**மூத்திரக்குண்டிக்காய்க்குழல்** *mūttira-k-kuṇḍi-k-kāy-k-kuḻal,* பெ.(n.) மூத்திரக் குண்டிக்காயினின்றும் மூத்திரப் பைக்குச் சிறுநீர் செல்லும் சிறுநீர்க் குழல் (இங்.வை.); ureter.

*[மூத்திரக்குண்டிக்காய் + குழல்.]*

**மூத்திரக்குண்டிக்காய்நோய்** *mūttira-k-kuṇḍi-k-kāy-nōy,* பெ.(n.) மூத்திரக் குண்டிக்காயைப் பற்றிய நோய் வகை (M.L.); bright's disease, *Albuminuria.*

*[மூத்திரக்குண்டிக்காய் + நோய்.]*

**மூத்திரக்குழல்** *mūttira-k-kuḻal,* பெ.(n.) 1. மூத்திரக் குண்டிக்காயுள் சிறுநீர் சுரக்குங் குழல்; tubulus urinifer. 2. மூத்திரக்குண்டிக்காய்குழல் பார்க்க; see *mūttira-k-kuṇḍi-k-kāy-k-kuḻal.*

*[மூத்திரம் + குழல்.]*

**மூத்திரக்குழல்வாதம்** *mūttira-k-kuḻal-vādam,* பெ.(n.) சிறுநீர்ப் பையில் உண்டாகும் காற்றுப் பிடிப்பு நோய்; paralysis of the ureter - *Ureterolysis* (சா.அக.).

*[மூத்திரக்குழல் +* **Skt.** *வாதம்.]*

**மூத்திரக்குளவி** *mūttira-k-kuḷavi,* பெ.(n.) மூத்திரங் குடிப்பதாகக் கருதப்படும் குளவி வகை (யாழ்.அக.); a kind of hornet, said to lick urine.

*[மூத்திரம் + குளவி.]*

**மூத்திரக்கோசம்**[1] *mūttira-k-kōšam,* பெ. (n.) 1. அண்டப்பை; scrotum. 2. மூத்திரா சயம் பார்க்க; see *mūttirā-šayam.*

*[மூத்திரம் + **Skt.** கோசம்.]*

**மூத்திரக்கோசம்**[2] *mūttira-k-kōšam,* பெ. (n.) மூத்திரக்குண்டிக்காய்; kidney.

*[மூத்திரம் + **Skt.** கோசம்.]*

**மூத்திரச்சங்கம்** *mūttira-c-cangam,* பெ. (n.) நீரிழிவு நோய் (வின்.); diabetes.

*[மூத்திரம் + **Skt.** சங்கம்.]*

**மூத்திரச்சங்கிரகணம்** *mūttira-c-cangiragaṇam,* பெ. (n.) சிறுநீரைக் கட்டுப்படுத்தும் மருந்து; drug or medicine that suppresses urine.

*[மூத்திரம் + **Skt.** சங்கிரகணம்.]*

**மூத்திரச்சுக்கிலம்** *mūttira-c-cukkilam,* பெ. (n.) மூத்திரத்துடன் விந்து இறங்கும் வெட்டை நோய் (யாழ்.அக.); the whites, a disease in which semen is discharged along with urine, leucorrhea.

*[மூத்திரம் + **Skt.** சுக்கிலம்.]*

**மூத்திரத்தங்கல்** *mūttira-t-tangal,* பெ. (n.) சிறுநீரைத் தேக்கி வைத்திருக்கை; retention of the urine - *Auria.*

*[மூத்திரம் + தங்கல்.]*

**மூத்திரத்தடை** *mūttira-t-tadai,* பெ. (n.) சிறுநீர் அடைப்பு; stricture.

*[மூத்திரம் + தடை.]*

**மூத்திரத்தாரை** *mūttira-t-tārai,* பெ. (n.) 1. சிறுநீர் கீழ் இறங்குகை (மூத்திர நீரோட்டம்); flow of urine. 2. மூத்திரத் துளை (பைஷஜ.291) பார்க்க; see *mūttira-t-tuḷai.*

*[மூத்திரம் + தாரை.]*

**மூத்திரத்தாரைகடுப்பு** *mūttira-t-tārai-kaḍuppu,* பெ. (n.) சிறுநீர் இறங்கும் வழியில் உண்டாகும் எரிச்சல்; irritability of the urethra - *Urethrism.*

*[மூத்திரத்தாரை + கடுப்பு.]*

**மூத்திரத்தாரைச்சுருக்கம்** *mūttira-t-tārai-c-curukkam,* பெ. (n.) சிறுநீர் இறங்கும் வழியில் ஏற்படும் அடைப்பு முதலிய நோய்; stricture of the urethra - *Urethrostenosis.*

*[மூத்திரத்தாரை + சுருக்கம்.]*

**மூத்திரத்தாரைப்புண்** *mūttira-t-tārai-p-puṇ,* பெ. (n.) சிறுநீர் இறங்கும் வழியில் உண்டாகும் புண்; ulceration of the urinary passage.

*[மூத்திரத்தாரை + புண்.]*

**மூத்திரத்தாரையடைப்பு** *mūttira-t-tārai-y-aḍaippu,* பெ. (n.) சிறுநீர் இறங்கும் வழியில் உண்டாகும் அடைப்பு; obstruction of the passage in the urethra - *Urethro phraxis.*

*[மூத்திரத்தாரை + அடைப்பு.]*

**மூத்திரத்தாரையழற்சி** *mūttira-t-tārai-y-aḻaṟci,* பெ. (n.) சிறு நீர் இறங்கும் வழியில் ஏற்படும் எரிச்சல்; inflammation of the urethra - *Urethritis.*

*[மூத்திரத்தாரை + அழற்சி.]*

**மூத்திரத்தாரைவலி** *mūttira-t-tārai-vali,* பெ.(n.) சிறுநீர் இறங்கும் வழியில் உண்டாகும் வலி; pain in the urethra - *Urethralgia.*

*[மூத்திரத்தாரை + வலி.]*

**மூத்திரத்துவாரம்** *mūttira-t-tuvāram,* பெ.(n.) மூத்திரத்துளை பார்க்க; see *mūttira-t-tuḷai.*

*[மூத்திரம் + **Skt.** துவாரம்.]*

**மூத்திரத்துளை** *mūttira-t-tuḷai,* பெ.(n.) சிறுநீர் வெளிவரும் வழி; urethra.

*[மூத்திரம் + துளை.]*

**மூத்திரநாளம்** *mūttira-nāḷam,* பெ.(n.) மூத்திரப்பையில் ஓடும் நாடி நரம்புகள்; rend arteries and venis.

*[மூத்திரம் + நாளம்.]*

**மூத்திரநெய்ப்பற்று** *mūttira-ney-p-paṟṟu,* பெ.(n.) சிறுநீரில் காணப்படும் மஞ்சள் நிற நெய்மப் பொருள்; a yellowish oily substance in the urine - *Urein.*

*[மூத்திரம் + நெய்ப்பற்று.]*

**மூத்திரநோய்** *mūttira-nōy,* பெ.(n.) சிறுநீர் தொடர்புடைய நோய்; a urinary disease.

*[மூத்திரம் + நோய்.]*

**மூத்திரப்பந்தம்** *mūttira-p-pandam,* பெ.(n.) சிறுநீர்ப் பிரியாமை; suppression of urine (சா.அக.).

*[மூத்திரம் + பந்தம்.]*

**மூத்திரப்பரீட்சை** *mūttira-p-parīṭcai,* பெ.(n.) நோயாளியின் உறக்கத்தில் இருந்து விழித்தபின்பு வருகின்ற சிறுநீரை ஆராய்கை; the urine which is passed by the patient before day break after awaking from sleep should be selected for Examination. That which comesout in the middle of discharge should be the proper urine for examination.

*[மூத்திரம் + **Skt.** பரீட்சை.]*

**மூத்திரப்பலா** *mūttira-p-palā,* பெ.(n.) முள் வெள்ளரி, கக்கரிக்காய்; cucumber with thorny edges (சா.அக.).

**மூத்திரப்பவுந்திரம்** *mūttira-p-pavun diram,* பெ.(n.) சுரந்த சிறுநீரை வெளி வராமல் கட்டும் ஒரு வகை நோய் (M.L.); urinary fistula.

*[மூத்திரம் + **Skt.** பவுந்திரம்.]*

**மூத்திரப்பாதை** *mūttira-p-pādai,* பெ.(n.) சிறுநீர் இறங்கும் வழி; urethra.

*[மூத்திரம் + பாதை.]*

**மூத்திரப்பாலை** *mūttira-p-pālai,* பெ.(n.) ஒரு வகை மூத்திர நோய்; a kind of urinary disease (சா.அக.).

*[மூத்திரம் + பாலை.]*

**மூத்திரப்பாளம்** *mūttira-p-pāḷam,* பெ.(n.) மூத்திர நோய் வகை (தஞ்.சரசு. iii, 140); a disease of the urninary-organs.

**மூத்திரப்பாளை** *mūttira-p-pāḷai,* பெ. (n.) ஒருவகையான சிறுநீர் நோய்; a kind of urinary disease (சா.அக.).

**மூத்திரப்பிந்து** *mūttira-p-pindu,* பெ.(n.) சொட்டுச் சிறுநீர்; a urinary disease - *Stricture of urethra* or the enlargement of the prostate glad (சா.அக.).

**மூத்திரப்பிரளயம்** *mūttira-p-piralayam,* பெ.(n.) மிகைச் சிறுநீர்; excess of urine (சா.அக.).

*[மூத்திரம் + **Skt.** பிரளயம்.]*

**மூத்திரப்புடம்** *mūttira-p-pudam,* பெ.(n.) கீழ் வயிறு; the lower region of the abdomen (சா.அக.).

**மூத்திரப்புரட்டு** *mūttira-p-purattu,* பெ.(n.) சிறுநீர், மலவாய் வழியாக வெளியேறுகை; the discharge of urine through the anus - *Urochesia.*

**மூத்திரப்புரீடங்கள்** *mūttira-p-purīdangal,* பெ.(n.) சிறுநீரும் மலமும் (சலமலங்கள்) (இறை.1, உரை, பக்.9); urine and faeces (சா.அக.).

*[மூத்திரம் + **Skt.** புரீடங்கள்.]*

**மூத்திரப்புளிப்பு** *mūttira-p-pulippu,* பெ. (n.) புளிப்பு சிறு நீர்; uric acid.

*[மூத்திரம் + புளிப்பு.]*

**மூத்திரப்பேதி** *mūttira-p-pēti,* பெ.(n.) மூத்திரக்கழிச்சல் பார்க்க; see *mūrttira-k-kaliccal.*

*[மூத்திரம் + **Skt.** பேதி.]*

**மூத்திரப்பை** *mūttirappai,* பெ.(n.) உடலில் மூத்திரந்தங்கும் உறுப்பு; bladder.



*[மூத்திரம் + பை.]*

**மூத்திரப்பைக்கல்** *mūttirappai-k-kal,* பெ.(n.) மூத்திரக்கல் பார்க்க; see *mūttira-k-kal.*

*[மூத்திரப்பை + கல்.]*

**மூத்திரப்பைக்கழலை** *mūttirappai-k-kalalai,* பெ.(n.) சிறுநீர்ப்பையில் உள்ள ஒருவகைக் கட்டி; tumour of the bladder.

*[மூத்திரப்பை + கழலை.]*

**மூத்திரப்பைகுத்தல்வலி** *mūttirappai-kuttal-vali,* பெ.(n.) சிறுநீர்ப் பையில் ஏற்படும் ஒரு வகைக் குத்தல் வலி; neuralgia of bladder.

*[மூத்திரப்பை + குத்தல்வலி.]*

**மூத்திரப்பைசோர்வு** *mūttirappai-šōrvu,* பெ.(n.) சிறுநீர்ப்பையை முடக்கும் காற்றுப் பிடிப்பு நோய்; paralysis of the bladder.

*[மூத்திரப்பை + சோர்வு.]*

**மூத்திரப்பைதாபிதம்** *mūttirappai-tābidam,* பெ.(n.) மூத்திரப்பைநோய் பார்க்க; see *mūttirappai-nōy.*

**மூத்திரப்பைநோய்** *mūttirappai-nōy,* பெ.(n.) சிறுநீர்ப்பையில் உண்டாகும் ஒரு வகை எரிச்சல் நோய்; inflammation of the bladder, *Cystitis.*

*[மூத்திரப்பை + நோய்.]*

**மூத்திரப்பைரோகம்** *mūttirappai-rōgam,* பெ.(n.) மூத்திரப்பைநோய் பார்க்க; see *mūttirappai-nōy.*

*[மூத்திரப்பை + ரோகம்.]*

**மூத்திரப்பைவலி** *mūttirappai-vali,* பெ. (n.) சிறுநீர்ப்பையில் ஏற்படும் ஒருவகை வலி; cramps in the bladder (சா.அக.).

*[மூத்திரப்பை + வலி.]*

**மூத்திரப்பைவீக்கம்** *mūttirai-p-pai-vikkam,* பெ.(n.) மூத்திரப்பைநோய் பார்க்க; see *mūttirappai-nōy.*

**மூத்திரம்** *mūttiram,* பெ.(n.) சிறுநீர்; urine. *ஆத்திரத்தை அடக்கினாலும் மூத்திரத்தை அடக்க முடியாது. "உங்கள் மூத்திரப் பிள்ளையை" (திவ்.பெரியாழ்.4 : 6 : 9).*

ம. முள்; வ. மூத்ர.

*[முள் → (மொள்) → மோள் → மோளுதல் = சிறுநீர்விடுதல். மோள் + திரம் – (மோட்டிரம்) → மோத்திரம் → மூத்திரம். மோள் என்னும் வினையும் மோத்திரம் என்னும் பெயர் வடிவும் இன்றும் பாண்டி நாட்டி வழக்கென அறிக.]*

**மூத்திரம்பெய்[1]–தல்** *mūttiram-pey-,*1 செ.கு.வி.(v.i.) சிறுநீர் கழித்தல்; to make water, to urinate. *'மூத்திரம் பெய்கிறதற் குள்ளே முப்பத்தெட்டுக் குணம்' (பழ.).*

*[மூத்திரம் + பெய்–தல்.]*

**மூத்திரம்பெய்[2]–தல்** *mūttiram-pey-,* 1 செ.குன்றாவி.(v.t.) புறக்கணிப்பு செய்தல்; to disregard. *மேலிருந்து வந்த ஆணையை மூத்திரம் செய்தான்.*

*[மூத்திரம் + பெய்–தல்.]*

**மூத்திரமஞ்சள்** *mūttira-mañjaḷ,* பெ.(n.) மஞ்சள் நிறமுடைய சிறுநீர்; yellow pigment of the urine which gives the urine its yellow colour - *Urochrome.*

*[மூத்திரம் + மஞ்சள்.]*

**மூத்திரமடக்கமுடியாமை** *mūttiram-aḍakka-muḍiyāmai,* பெ.(n.) சிறுநீர் வெளியேறாமல் அடக்க இயலாமை; inability to retain the urine - *Enuresis or Urrcratia* (சா.அக.).

*[மூத்திரம் + அடக்கமுடியாமை.]*

**மூத்திரமதிகப்படுத்தல்** *mūttiramatiga-p-paDuttal,* பெ.(n.) சிறுநீர் மிகைப் படுகை; increase of urinary secreation - *Uragogue* (சா.அக.).

*[மூத்திரம் + அதிகப்படுத்தல்.]*

**மூத்திரமருந்து** *mūttira-marundu,* பெ.(n.) சிறுநீர் கழிச்சல் மருந்து; diuretics (சா.அக.).

*[மூத்திரம் + மருந்து.]*

**மூத்திரமார்க்கம்** *mūttira-mārkkam,* பெ.(n.) மூத்திரத்துளை பார்க்க; see *mūttira-t-tuḷai* (சா.அக.).

*[மூத்திரம் + மார்க்கம்.]*

**மூத்திரமிகுதி** *mūttira-migudi,* பெ.(n.) சிறுநீர் அதிகமாக வெளியேறுகை; passing excess of urine (சா.அக.).

*[மூத்திரம் + மிகுதி.]*

**மூத்திரமுரித்தல்** *mūttira-murittal,* பெ.(n.) கற்றாழையினால் சிறுநீரை முரிக்கும் செய்முறைகளில் ஒன்று; a process in the course of alchemy (சா.அக.).

*[மூத்திரம் + முரித்தல்.]*

**மூத்திரரோகம்** *mūttira-rōgam,* பெ.(n.) மூத்திரநோய் பார்க்க; see *mūttira-nōy.*

*[மூத்திரம் + **Skt.** ரோகம்.]*

மூத்திரலம்[1] *mūttiralam,* பெ.(n.) மூத்திர வர்த்தனகாரி பார்க்க; see *mūttira-varattaṉakāri.*

மூத்திரலம்[2] *mūttiralam,* பெ.(n.) சிறுநீர் கடுப்பு; inflammation of the urethra (சா.அக.).

மூத்திரவடைப்பு *mūttira-v-aḍaippu,* பெ.(n.) மூத்திரக்கிருச்சரம் (M.L.) பார்க்க; see *mūttira-k-kiruccaram.*

*[மூத்திரம் + அடைப்பு.]*

மூத்திரவண்டல் *mūttira-vaṇḍal,* பெ.(n.) சிறுநீர் மாசு; deposits in the urine, precipitated urine (சா.அக.).

*[மூத்திரம் + வண்டல்.]*

மூத்திரவண்டவிருத்தி *mūttira-vaṇḍa-virutti,* பெ.(n.) சிறுநீர் மாசு வளர்ச்சி அடைகை; enlargement of the scrotum due to extravation of urine - *Urocele* (சா.அக.).

*[மூத்திரவண்டல் + **Skt.** விருத்தி.]*

மூத்திரவமிலம் *mūttiravamilam,* பெ.(n.) சிறுநீர் புளியம்; uric acid (சா.அக.).

*[மூத்திரம் + **Skt.** அமிலம்.]*

மூத்திரவர்த்தனகாரி *mūttira-varttaṉa kāri,* பெ.(n.) சிறுநீர் மிகையாகச் சுரப்பதற்கான மருந்து (இங். வை.); diuretic.

மூத்திரவாதம் *mūttira-vādam,* பெ.(n.) மூத்திரவோதம் பார்க்க; see *mūttira-v-ōdam*(சா.அக.).

*[மூத்திரம் + **Skt.** வாதம்.]*

மூத்திரவாய்ப்போக்கு *mūttira-vāy-p-pōkku,* பெ.(n.) சிறுநீர் வெளியேற்றும் வாய்; urethral discharge (சா.அக.).

*[மூத்திரம் + வாய் + போக்கு.]*

மூத்திரவிசர்ச்சனி *mūttira-višar-c-caṉi,* பெ.(n.) மூத்திரப்பையை ஒட்டிய தசை வகை (வின்.); a urinary muscle - *Accelerator urini.*

மூத்திரவியக்கம் *mūttira-viyakkam,* பெ.(n.) சிறுநீர் தேக்கம்; retention of urine - *Uroschesis* (சா.அக.).

மூத்திரவியர்வை *mūttira-viyarvai,* பெ.(n.) வியர்வைப் பொருட்களில், சிறுநீரில் உள்ள உப்புகள் கலந்திருக்கை; presence of urinous materials in the sweat - *Uridrosis* (சா.அக.).

*[மூத்திரம் + வியர்வை.]*

உடம்பிலுள்ள கழிவுப் பொருட்கள் சிறுநீரின் மூலமாக வெளியேற்றப்படுகிறது. இதில் உப்பும் ஒரு கழிவுப் பொருளாகும். வேர்த்தலின் போது உடம்பின் மீது உப்புத் துகள் படிந்துள்ளதால் வந்த பெயராகலாம்.

மூத்திரவிருத்தி *mūttira-virutti,* பெ.(n.) சிறுநீர் வெளியே பாய்ந்து வடிகை; extravasation of urine (சா.அக.).

*[மூத்திரம் + விருத்தி.]*

மூத்திரவிரேசனீயம் *mūttira-virē šaṉīyam,* பெ.(n.) மூத்திரவர்த்தனக்காரி பார்க்க; see *mūttira-varttaṉakkāri.*

மூத்திரவிலக்கணம் *mūttira-v-ilakkaṇam,* பெ.(n.) சிறுநீரின் தன்மை; nature of urine (சா.அக.).

*[மூத்திரம் + இலக்கணம்.]*

மூத்திரவுப்பு *mūttira-v-uppu,* பெ.(n.) சிறுநீரின் உப்பு (பைஷஜ.); urea acid.

*[மூத்திரம் + உப்பு.]*

மூத்திரவெச்சம் *mūttira-v-eccam,* பெ.(n.) மூத்திரப் பையில் இருந்து மூத்திரம் முழுவதும் வெளியேறாமல் எஞ்சியிருப்பது; residual urine (சா.அக.).

*[மூத்திரம் + எச்சம்.]*

மூத்திரவெரிச்சல் *mūttira-vericcal,* பெ.(n.) சிறுநீர் கழிக்கும் போது உண்டாகும் எரிச்சல் (M.L.); irritation of the bladder.

*[மூத்திரம் + எரிச்சல்.]*

மூத்திரவெரிப்பு *mūttira-verippu,* பெ.(n.) சிறுநீரின்காரம்; alkalinity of the urine-*Alkalinuria* (சா.அக.).

*[மூத்திரம் + எரிப்பு.]*

மூத்திரவெள்ளை *mūttira-veḷḷai,* பெ.(n.) பால்நிறம் கொண்ட சிறுநீர்; milky urine-*Chyluria* (சா.அக.).

*[மூத்திரம் + வெள்ளை.]*

மூத்திரவோதம் *mūttira-v-ōdam,* பெ.(n.) சிறுநீர்ப்பையில் இருந்து வெளிவராது தினம் தினம் தேங்கிய மூத்திரம் அதிகமாகி குடலைப் பெருக்கச் செய்யும் ஒருவகை நோய்; a disease caused by retention of urine (சா.அக.).

மறுவ. மூத்திரவாதம்

*[மூத்திரம் + வோதம்.]*

மூத்திராசயம் *mūttirāšayam,* பெ.(n.) மூத்திரப்பை பார்க்க; see *mūttira-p-pai.*

மூத்திராசயவாதரோகம் *mūttirā-šayavāda-rōgam,* பெ.(n.) மூத்திரப் பையின் வீக்கம்; inflammation of the bladder.

*[மூத்திரம் + **Skt.** சயவாதரோகம்.]*

மூத்திராதிக்கியம் *mūttirātikkiyam,* பெ.(n.) சிறுநீர் தொடர்புடைய நோய்; urinary disease (சா.அக.).

*[மூத்திரம் + ஆதிக்கியம்.]*

மூத்திராதிசாரம் *mūttirādi-šāram,* பெ.(n.) நோயாளியின் உடலில் சிறுநீர் அதிகரித்து அடிக்கடி வெளியேரும் ஒருவகை நோய்; a urinary disease in which large quantity of urine is passed-*Diabetes insipidus* (சா.அக.).

மறுவ. நீரிழிவுநோய்.

*[மூத்திரம் + **Skt.** ஆதிசாரம்.]*

மூத்திரோற்சங்கம் *mūttirōṟšaṅgam,* பெ.(n.) சிறுநீர் அரத்தமாக இறங்குகை (யாழ்.அக.); painful and bloody discharge of urine.

மூத்தோர் *mūttōr,* பெ.(n.) 1. முதியவர், அகவை முதிர்ந்த பெரியவர்; aged persons; elders. *"விருந்தினர் மூத்தோர் பசுசிறை பிள்ளை" (ஆசாரக்.22). மூத்தோர் சொல் (வார்த்தை) அமிழ்தம் (பழ.). "மூத்தோர் சொல்லும் முழு நெல்லிக்காயும் முன்னே கசக்கும் பின்னே இனிக்கும்" (பழ.).* 2. பண்டிதர் (திவா.); learned persons. 3. அமைச்சர்; ministers.

*[முது → மூ → மூத்தோர்.]*

மூத்தோன் *mūttōṉ,* பெ.(n.) 1. அகவை மேற்பட்டவன்; aged person. 2. அண்ணன் (பிங்.); elder brother. 3. பிள்ளையார் (பிங்.); *Gaṇēšaṉ* as the eldest of *šivā's* sons. 4. 48 அகவை முதல் 64 அகவைக்குட்பட்ட

மனிதன் (வின்.); man between 48 and 64 years age. 5. முதியவன்; elderly man, senior.

*[முது→மூ→ மூத்தோன்.]*

**மூத்தோன்கைக்கொம்பு** *mūttōn-kai-k-kombu,* பெ.(n.) யானைக் கொம்பு; elephant's tusk (சா.அக.).

*[மூத்தோன் + கை + கொம்பு.]*

**மூதண்டக்கொடி** *mūdaṇḍa-k-koḍi,* பெ.(n.) சீந்திற்கொடி; moon creeper - *Tinosphora Cordifolia* (சா.அக.).

**மூதண்டகசாயம்** *mūdaṇḍa-kašāyam,* பெ.(n.) அறுகம் வேரும் மிளகும் சேர்த்துக் காய்ச்சிய கருக்கு நீர் (கஷாயம்); decoction of pepper and the internodes of the dub-grass - *Cynodon dactylon.*

*[மூதண்டம் + கசாயம்.]*

**மூதண்டகன்னி** *mūdaṇḍa-kaṉṉi,* பெ.(n.) 1. தூதுவளை; a prickly climber - *Solanum trilobatum.* 2. பிரமியிலை; bramia plant - *Gratiola moniera* (சா.அக.).

**மூதண்டசத்தி** *mūdaṇḍa-šatti,* பெ.(n.) கந்தக நஞ்சு; a kind of arsenic.

**மூதண்டசித்திச்சி** *mūdaṇḍa-šitticci,* பெ.(n.) கருமத்தை; a black or blue variety of dhatura (சா.அக.).

**மூதண்டசூதகளிகம்** *mūdaṇḍa-šudakaḷigam,* பெ.(n.) பிரண்டை; a climber - *Vitis quadrangularis* (சா.அக.).

**மூதண்டம்**[1] *mūdaṇḍam,* பெ.(n.) 1. முட்டை வடிவமான பேருலகம் (பிரமாண்டம்); the universe, believed to be egg-shaped. *"உந்திக்கமலம் விரிந்தால் விரியும்...... இம் மூதண்டமே" (அஷ்டப்.திருவாங்க.மா.19).* 2. பேருலகத்தின் கூரை(பிரமாண்டத்தின் முகடு) (பிங்.); roof of the universe.

*[மூது + Skt. அண்டம்.]*

**மூதண்டம்**[2] *mūdaṇḍam,* பெ.(n.) 1. கொம்மட்டி; a melon. 2. அறுகம் வேர்; dub -grass. 3. சரக்கொன்றை; a tree - *Cassia fistula.* 4. பெண் கருவகத்தில் உண்டாகும் சினை; ovum (சா.அக.).

**மூதண்டமூலி** *mūdaṇḍa-mūli,* பெ.(n.) வில்வம்; a sacred tree - bael tree - *Aegle marmelos* (சா.அக.).

**மூதணங்கு** *mūdaṇaṅgu,* பெ.(n.) காளி (துர்க்கை) (சூடா.); Durgā.

*[மூது + அணங்கு.]*

**மூதம்** *mūdam,* பெ.(n.) விந்து (இந்திரியம்) (சங்.அக.); semen.

**மூதரி-த்தல்** *mūtari-,* 4 செ.குன்றாவி. (v.t.) மூதலி-த்தல் பார்க்க (உ.வ.); see *mūdali-.*

*[மூதலி-த்தல்→ மூதரி-த்தல்.]*

**மூதலி-த்தல்** *mūdali-,* 4 செ.குன்றாவி. (v.t.) மெய்ப்பித்தல், நிறுவுதல் (நிரூபித்தல்); to establish with evidence to confront with proof. *"அவன் படியை நெஞ்சுக்கு மூதலிக்கிறார்" (ஈடு,1. 10 : 5).*

தெ. மூதலிந்ட்சு; க. மூதலிசு.

**மூதலிப்பி-த்தல்** *mūdali-p-pi-,* 4 செ. குன்றாவி. (v.t.) மெய்ப்பித்தல்; to cause to prove.

**மூதறி-தல்** *mūdaṟi-,* 2 செ.கு.வி.(v.i.) 1. அறிவு முதிர்தல்; to be ripe in wisdom.

2. பழமையான செய்திகளை அறிதல்; to know the past. *"மூதறியு மம்மனை மார் சொல்லுவார்" (திவ்.இயற்.சிறிய.ம.19).*

*[முது→மூது→மூதறி→மூதறி-தல்.]*

**மூதறிஞர்** *mūdariñar,* பெ.(n.) அகவை நிரம்பிய அறிஞர், பெரும் அறிஞர்; scholar of great repute. *நேற்று மூதறிஞர் இராசாசி அவர்கள் வருகை தந்தார்.*

*[மூது + அறிஞர்.]*

**மூதறிவாளன்** *mūdarivāḷaṉ,* பெ.(n.) அறிவு முதிர்ந்தோன்; man of ripe wisdom. *"மூதறிவாளர் முதல்வன்" (திவ்.பெரியாழ். 5. 2 : 2).*

*[முது→மூது→மூதறி→மூதறிவாளன்.]*

**மூதறிவு** *mūdarivu,* பெ.(n.) மெய்யறிவு, பேரறிவு; mature understanding, ripe wisdom.

*[மூது + அறிவு.]*

**மூதா**[1] *mūdā,* பெ.(n.) கிழ ஆன் (பசு, கிழமாடு); aged cow. *"வளைதலை மூதா" (பதிற்றுப். 13:6).*

*[முதிய + ஆ – மூதா = முதியமாடு.]*

**மூதா**[2] *mūdā,* பெ.(n.) தம்பலப் பூச்சி (இந்திர கோபம்); the cochineal insect.

மறுவ. மூதாய்.

*[முதாய்[2]→மூதா.]*

**மூதாக்கள்** *mūdākkaḷ,* பெ.(n.) மூதாட்கள் (சங்.அக.) பார்க்க; see *mūdāṭkaḷ.*

**மூதாட்கள்** *mūdāṭkaḷ,* பெ.(n.) முன்னோர் (யாழ்.அக.); forefathers, ancestors.

*[மூது + ஆள் – மூதாள்→மூதாட்கள்.]*

**மூதாட்டி** *mūdāṭṭi,* பெ.(n.) 1. அகவை முதிர்ந்த பெண், முதியவள்; respectable old woman. *"நரை மூதாட்டி ஒருத்தியை" (மணிமே.20 : 40).*

*[மூதாளன் (ஆ.பா.)→மூதாட்டி (பெ.பா.).]*

**மூதாதை** *mūdādai,* பெ.(n.) பாட்டன், தாத்தா, தந்தையைப் பெற்ற தந்தை, தாயைப் பெற்றத் தந்தை; grand father. *"மூதாதை மாதாளும் பாகத்தெந்தை" (திருவாச.5 : 30).*

*[முது(மை) + தாதை.]*

**மூதாதையர்** *mūdādaiyar,* பெ.(n.) தன் மரபில் அல்லது குடிவழியில் முன் வாழ்ந்தோர்; ancestors. *நாகரிகத்தின் ஒவ்வொரு படியையும் நம் மூதாதையர் கடந்து வந்திருக்கின்றனர்.*

*[மூதாதை→மூதாதையர்.]*

**மூதாய்**[1] *mūdāy,* பெ.(n.) பாட்டி, தாயைப் பெற்றத் தாய், தந்தையைப் பெற்றத் தாய்; grand mother, maternal, and paternal grand-mother.

*[மூது + ஆய்.]*

**மூதாய்**[2] *mūdāy,* பெ.(n.) தம்பலப்பூச்சி; cochineal insect.

*[ஈயன்மூதாய்→மூதாய்.]*

**மூதாளன்** *mūdāḷaṉ,* பெ.(n.) முதியவன், அகவை முதிர்ந்தவன்; aged person. *"நரை மூதாளர் நாயிடக் குழிந்த" (புறநா.52). "மூதாளர் கைபிணி விடுத்து" (அகநா. 366:10).*

*[மூது + ஆள் – மூதாள்→மூதாளன்.]*

**மூதானந்தம்** *mudāṉandam,* பெ.(n.) 1. மாபெரும் மகிழ்ச்சி; Supreme Bliss. *"மூதானந்த வாரிதியே" (அருட்பா, 5, முறையிட்ட.9).* 2. தன் கணவன் இறந்த போதே மனைவி உயிர்நீங்கிய பேரன்பை நினைந்து கண்டோர் கூறும் புறத்துறை (தொல்.பொருள்.79); theme in which the bystanders describe the great love of a wife dying immediately on her husband's death.

மறுவ. பேரானந்தம்

*[மூது + **Skt.**ஆனந்தம்.]*

**மூதிக்கம்** *mūdikkam,* பெ.(n.) சிவனார் வேம்பு (மலை.); wiry indigo.

**மூதிகா** *mūdigā,*பெ.(n.) மூதிக்கம் பார்க்க; see *mūdikkam.*

**மூதிசகம்** *mūdišagam,*பெ.(n.) மூதிக்கம் (மூ.அ.) பார்க்க; see *mūdikkam.*

**மூதிதம்** *mūdidam,* பெ.(n.) எருக்கிலை; leaf of a plant calotrophis, *Gigantia* (சா.அக.).

**மூதியோலை** *mūdi-yōlai,* பெ.(n.) முகரியோலை (நாஞ்.); uneven palm-leaf.

மறுவ. முறியோலை.

*[மூறியோலை→மூதியோலை.]*

**மூதிரம்** *mūdiram,*பெ.(n.) அவரை; a twiner - *Dolichor lablab* (சா.அக.).

**மூதிரி[1]-த்தல்** *mūdiri-,* 4 செ.குன்றாவி. (v.t.) மூதலி-த்தல் பார்க்க; see *mūdali-.*

*[மூதலி-த்தல்→மூதிரி-த்தல்.]*

**மூதிரி[2]** *mūdiri,*பெ.(n.) 1. கிழமாடு, எருது; aged ox. 2. கிழ எருமை; aged buffalo. 3. எருமை; buffalo.

*[முது→ மூது →மூதிரி.]*

**மூதிரை** *mūdirai,*பெ.(n.) 1. ஆறாவது விண்மீனான யாழ் (திருவாதிரை) (பிங்.); the sixth naksatra. 2. சிவபிரான் (சூடா.); god *Šivaṉ.*

**மூதில்** *mūdil,*பெ.(n.) 1. பழங்குடி; ancient family. 2. பழைய மறக்குடி; ancient warrior - tribe. *"தமியன் வந்த மூதிலாள" (புறநா.284). "மூதில் அருமன் பேர் இசைச் சிறுகுடி" (நற்.367:6). "சிவந்த காந்தண் முதல் சிதைமூதிற்" (பதிற்று.15:11).*

*[முது→மூது→மூதில்.]*

**மூதிற்பெண்டிர்** *mūdiṟ-peṇḍir,* பெ.(n.) மறக்குடி மகளிர்; women of warrior - tribes. *"மூதிற்பெண்டிர் கசிந்தழ நாணி" (புறநா.19).*

*[மூதில் + பெண்டிர்.]*

**மூதின்முல்லை** *mūdiṉ-mullai,* பெ.(n.) மறக்குடியிற் பிறந்த ஆடவர்க்கேயன்றி அக்குடியில் உள்ள மகளிர்க்கும் மறம் (வீரம்) உண்டாதலைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு.வெ.8 : 21); theme describing the spirit of valour manifested among women of warrior tribes.

*[மூதின் + முல்லை.]*

**மூது[1]** *mūdu,*பெ.(n.) முதுமை; oldness, elderliness. *"மூதானவன் முன்னர் முடிந்திடும்" (கம்பரா.பிராட்டி களங்கான்.18).*

க. மூதி

*[முது→மூது.]*

**மூது**[2] *mūdu*, பெ.(n.) ஈகை (அரு.நி.); gift.

**மூதுகரி** *mūdukari*, பெ.(n.) எலிப்பயறு; a pulse (சா.அக.).

**மூதுணர்–தல்** *mūdunar-*, 2 செ.குன்றாவி. (v.t.) நன்றாக உணர்தல்; to know thoroughly, to have ripe knowledge of. *"மூதுணர்ந்தவ ரன்றி மொழிவரோ" (உபதேசகா.சிவபுண்.229).*

*[முது→ மூது + உணர்–தல்.]*

**மூதுணர்ந்தோர்** *mūdunarndōr*, பெ.(n.) அறிவு முதிர்ந்தோர் (சூடா.); persons of ripe knowledge.

*[மூதுணர்–→மூதுணர்ந்தோர்.]*

**மூதுணர்வு** *mūdunarvu*, பெ.(n.) முதிர்ந்த அறிவு; ripe knowledge or wisdom. *"மூதுணர்வின் மிக்கான் மதிவீடணன்" (கம்பரா.அதிகாயன்.87).*

*[மூதுணர்–→மூதுணர்வு.]*

**மூதுரை** *mūdurai*, பெ.(n.) 1. பழமொழி, காலம்காலமாக வழங்கிவருவதும் எடுத்துக்காட்டாகக் கூறப்படுவதுமான பெரியோர் சொல்; proverb. *"மூழை யுப்பறியாத தென்னு மூதுரையு மிலளே" (திவ்.பெரியாழ்.3.7: 4).* 2. பிற்கால ஒளவையார் இயற்றியதாகக் கருதப்படும் அற நூல்; a didactic poem attributed to *Auvaiyār*. 3. மறை (வேதம்); the *Vēdās*. *"முற்று மோர்ந்தவர் மூதுரை யர்த்தமே" (தாயு. பொன்னைமாதரை.51).*

*[முது→மூது + உரை.]*

**மூதுவர்** *mūduvar*, பெ.(n.) முன்னோர்; elders, ancients. *"விண்ணாட்டவர் மூதுவர்" (திருவிருத்.2).*

*[முது→மூது → மூதுவர்.]*

**மூதூர்** *mūdūr*, பெ.(n.) 1. பழைய ஊர்; ancient village. *"பொற்கொடி மூதூர்ப் பொழிலாட்ட மர்ந்தாங்கு" (சிலப்.14 : 82). "செறிந்தசேரிச் செம்மண் மூதூர்" (அகநா.15:7). "மல்லன் மூதூர் வயவேந்தே" (புறநா.18:12). "நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்" (நற்.45:4). "ஆதி யருமன் மூதூ ரன்ன" (குறுந்.293:4).* 2. திருவள்ளூர் மாவட்டத்தில் கடம்பத்தூர் ஊராட்சியில் உள்ள ஊர்; a Village in Tiruvalluvar District. *இப்பகுதியிலுள்ள ஊர்களுள் மிகவும் பழமையான காலத்தில் தோன்றியதால் மூதூர் எனப் பெற்றது போலும்.*

*[மூது + ஊர்.]*

**மூதேவி** *mūdēvi*, பெ.(n.) 1. திருமகளுக்கு முந்திப் பிறந்த, தீவினைப் பயன் விளைவிப்பதாகக் கருதப்படும் பெண் தெய்வம்; goddess of Misfortune, as the elder sister of Lakshmi. *மூதேவியின் பிறந்த வீடு. "சீதேவியாள் பிறந்த செய்யதிருப்பாற் கடலில் மூதேவியேன் பிறந்தாள் முன்" (தனிப்பா.1, 179:1).* 2. அருவருப்பான தோற்றம் கொண்டவள் (வின்.); deformed person. 3. ஆக்கங் கெட்ட சோம்பெறிப் பெண்; sloth woman. *'மூதேவியடைந்து முடங்கிக் கிடக்கிறாள்' (உ.வ.).* 4. பெரும்பாலும் ஒரு பெண்ணைத் திட்டுவதற்குப் பயன்படுத்தும் சொல்; a word used mostly to scold a woman with. *பத்து மணி வரை தூங்காதே, மூதேவி!*

*[மூ + தேவி.]*

**மூதேவிகொடி** *mūdēvikoḍi,* பெ.(n.) மூதேவி கொடியின் சின்னமாக உள்ள காகம் (பிங்.); crow, as the emblem on the banner of *M ūdēvi.*

*[மூதேவி + கொடி.]*

**மூதேவிபடை** *mūdēvipaḍai,* பெ.(n.) மூதேவியின் ஆய்தமாகவுள்ள துடைப்பம் (பிங்.); broom, as the weapon of *Mūdēvi.*

*[மூதேவி + படை.]*

**மூதேவிமூலி** *mūdēvi-mūli,* பெ.(n.) சிறு பூளை; a plant woolly caper - *Achyranthes lanata* (சா.அக.).

**மூதேவியூர்தி** *mūdēvi-y-ūrdi,* பெ.(n.) மூதேவியின் ஊர்தியாகிய கழுதை (பிங்.); donkey as the vehicle of *Mūdēvi.*

*[மூதேவி + ஊர்தி.]*

**மூதை**[1] *mūdai,* பெ.(n.) 1. வேளாண்மைச் செய்வதற்காக வெட்டித் திருத்திய காடு (அக.நி.), பழங்கொல்லை; ground cleared of wood and prepared for tillage. 2. மூதணங்கு பார்க்க; see *mūdaṇaṅgu.*

*[முது→மூது→ மூதை.]*

**மூதை**[2] *mūdai,* கு.பெ.எ.(adj.) முந்தை; old, past, ancient. *"மூதைவினை கடைக்கூட்ட" (சிலப்.9, இறுதிவெண்பா.).*

*[முது→மூது→ மூதை.]*

**மூதை**[3] *mūdai,* பெ.(n.) இசங்கு (மலை.); mistletoe berrythorn.

மறுவ. சங்கஞ்செடி.

*[மூகை→ மூதை.]*

**மூதைச்சுவல்** *mūdai-c-cuval,* பெ.(n.) பழைய மேட்டு நிலம்; elevated land. *"மூதைச்சுவற் கலித்த முற்றா இளம்புல்" (குறுந்.204:3).*

*[மூதை + சுவல்.]*

**மூந்திக்கருக்கல்** *mūndi-k-karukkal,* பெ.(n.) அந்திநேரம், மாலைக்காலம், பகலின் முடிவு நேரம்; evening twilight.

*[முந்தி→மூந்தி + கருக்கல்.]*

**மூப்பமார்** *mūppamār,* பெ.(n.) தேனெடுத்தல் மற்றும் வேட்டையாடுந் தொழிலில் திறனுடைய, ஒருவகை இனத்தவர்; a caste, in which people are experts in collecting honey from bee-hives, and in hunting.

*[மூ→மூப்பு→ மூப்பமார்.]*

**மூப்பர்** *mūppar,* பெ.(n.) 1. பெரியோர்; elders in age; superiors. *"மூப்பரை யிகழ்ந்தே மாகில்" (அரிச்.பு.நகர்நீ.151).* 2. கிறித்துவ மதத் தலைவருள் ஒருவகையார் (வின்.); deacons.

*[மூ →மூப்பு→மூப்பர் (வே.க.).]*

**மூப்பறுக்கும்திரி** *mūpparukkum-tiri,* பெ.(n.) சிறு குழந்தைகளுக்கு மலக்கட்டுண்டான போது மலவாயினின்று மலத்தை வெளிப்படுத்தப் பயன்படுத்தும் ஒரு மருத்துவ திரி; a medicinal wick used as suppository to expel the faeces from the rectum of children (சா.அக.).

*[மூப்பறுக்கும் + திரி.]*

**மூப்பன்** *mūppan,* பெ.(n.) 1. நகரப் பரதவன்; city fishermen. 2. பரதவர் தலைவர்; head of fishermen. 3. கிறித்துவ மதத்

தலைவருள் ஒரு வகையார்; christian pastor. 4. ஒரு குலத்தாரின் ஊர்த்தலைவன்; head man, in some castes. 5. இலைவாணியர் முதலான சில குலங்களின் பட்டப் பெயர்; title of *Ilaivāṇiyar*and other castes. *"வருஞ்சனிக்கு மூப்பராம்" (சினேந்.141) (E.T.5, 118).*

*[மூ→மூப்பு→ மூப்பன்.]*

மூப்பான் *mūppāṉ,* பெ.(n.) 1. அகவை முதிர்ந்தவன்; aged person. 2. முதியவன்; elder. 3. சிவன்; *Šivāṉ. "மூப்பான் மழுவும்" (தனிபா.1, 32 : 61).*

*[மூ→மூப்பு→ மூப்பான்.]*

மூப்பானசுவாமி *mūppāṉa-šuvāmi,* பெ.(n.) திருவிதாங்கூரில் ஒரு தலைமைப் பணியாளன் (வின்.); a principal officer in Travancore.

*[மூப்பான் + **Skt.** சுவாமி.]*

மூப்பி *mūppi,*பெ.(n.) 1. முதுமகள்; aged woman; elderly woman. *'மூப்பி மாராலே..... நீராட்டி' (சீவக.1892, உரை).* 2. தலைவி (வின்.); woman of distinction; mistress.

ம. மூப்பி

*[மூ→மூப்பு→மூப்பி.]*

மூப்பு *mūppu,*பெ.(n.) 1. அகவை, முதுமை; seniority in age; old age. *"முனிதக்க மூப்புள" (நாலடி, 92). மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய (அகநா.7:4).* 2. தலைமை (யாழ்.அக.); power of management, leadership. 3. ஒட்டாரச் செருக்கு (பிடிவாதம்) (இ.வ.); wilfulness.

ம. மூப்பு; தெ., க.முப்பு.

*[மூ→ மூப்பு.]*

மூப்புக்கழிவு *mūppu-k-kaḻivu,* பெ.(n.) 1. ஊர்த் தலைவனுக்குச் சேர வேண்டிய பொருள்; dues payable to the village headman (M.M.509). 2. வரித் தொகை யிலிருந்து ஊர்த் தலைவனுக்கு உரியதைக் கொடுத்ததால் கழிக்கப்படும் பகுதி (இ.வ.); deduction from the revenue on account of the dues paid to the village headman.

*[மூப்பு + கழிவு.]*

மூப்புக்களவு *mūppu-k-kaḷavu,* பெ.(n.) மூப்புக்கழிவு, 1 பார்க்க; see *mūppu-k-kaḻivu, 1.*

*[மூப்பு + களவு.]*

மூப்புமுகனை *mūppu-mugaṉai,*பெ.(n.) தலைமை பற்றிவரும் சொற் செலவு (செல்வாக்கு) (யாழ்ப்.); influence due to age, rank, etc.

*[மூப்பு + முகனை.]*

மூய்¹-தல் *mūy-,* 1 செ.குன்றாவி.(v.t.) 1. மூடுதல் (திவா.); to cover. *"பருமணன் மூஉய்" (பரிபா.10 : 4).* 2. நிரப்புதல்; to full. *"கயிறுகுறு முகவை மூயின" (பதிற்றுப்.22).*

தெ. மூயு.

மூய்²-தல் *mūy-,*1 செ.கு.வி.(v.i.) 1. நெருங்கிச் சூழ்தல்; to surround closely. *"ஆயிரரு மங்கண் மூயினர்க ளண்ணலை" (கந்தபு. சகத் திரவா.18).* 2. முடிதல்; to end. *கதை மூய்ந்தது.*

மூய்³-தல் *mūy-,*2 செ.குன்றாவி.(v.t.) துப்புதல் (இ.வ.); to spit.

*[உமிழ்→(முழ்)→முழி→மூய்→மூய்-தல்.]*

மூய்[4] *mūy*,பெ.(n.) 1. மூடி; cover. *"பொன்பெய் பேழை மூய்திறந் தன்ன" (குறுந்.233).* 2. பூப்பெட்டி; flower basket. *"முத்துநீர்ச் சாந்தடைந்த மூஉய்" (பரிபா. 10:14).*

மூர்க்கண்டவன் *mūrkkaṇḍavaṉ,* பெ.(n.) கொட்டைப் பாக்கு; arecanut.

மூர்க்கி *mūrkki,* பெ.(n.) மூவிலைக் கொழுந்து; three leaved wild lime - *Trichilia spinosa* (சா.அக.).

மூர்ச்சனம் *mūrccaṉam*,பெ.(n.) பித்தத்தினால் நினைவு தவறுதல்; loss of consciousness due to excess of bile humour.

*[மூச்சு→மூர்ச்சை→மூர்ச்சனம்.]*

மூர்ச்சனை *mūrccaṉai,* பெ.(n.) 1. மூர்ச்சை, 1 பார்க்க; see *mūrccai, 1. "முந்திய வுயிர்ப்புமற மூர்ச்சனை யடைந்தான்" (பிரமோத்.5 : 22).* 2. பெருமூச்சு விடுகை, ஆழ்துயர்படுகை, நெட்டுயிர்ப்பு; sigh, deep breath. *"முரிவுற்றார்களின் மூர்ச்சனை செய்பவால்" (சீவக.1627).* 3. கமகம் பத்தனுளொன்று (பரத.இராக.24); the regulated rise and fall through the musical scale, modulation, one of ten kamagam.

*[மூர்ச்சை→மூர்ச்சனை.]*

மூர்ச்சி–த்தல் *mūrcci-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மயக்கமடைதல், உணர்விழத்தல்; to swoon, faint. *"அன்பினால் மூர்ச்சித்த வன்பருக்கு" (தாயு.சுகவாரி.4).* 2. பெருமூச்சு விடுதல்; to sigh. *"துயர் சிறிதாறி மூர்ச்சியா" (கம்பரா. சடாயுவு.139).*

*[மூச்சு→மூர்ச்சை→மூர்ச்சி→மூர்ச்சி–த்தல்.]*

மூர்ச்சிதம் *mūrccidam*,பெ.(n.) 1. அறிவின்மை; ignorance. 2. மூர்ச்சை, 1, 2 பார்க்க; see *mūrccai, 1, 2.* 3. உயரம்; height.

*[மூச்சு→மூர்ச்சை→மூர்ச்சி→மூர்ச்சிதம்.]*

மூர்ச்சை[1] *mūrccai,* பெ.(n.) 1. மயக்க மடைகை, அறிவு இழக்கை, உணர்வு இழக்கை (பிரக்ஞை) (உ.வ.); fainting, loss of consciousness, swoon, syncope. 2. வாட்டம் (யாழ்.அக.); languioshing. 3. மூர்ச்சனை, 3 (இசை.) பார்க்க; see *mūrccaṉai,3. அந்தப் பாட்டில் மூர்ச்சை நன்றாகயிருந்தது.* 4. கூர்மை; sharpness. *கத்தியின் மூர்ச்சை.*

*[மூச்சு→(மூச்சை)→மூர்ச்சை.]*

ஒ.நோ. கோத்தல்→கோர்த்தல்

மூர்ச்சை[2] *mūrccai*,பெ.(n.) ஓர் இசையின் சிறப்பியல்பு (கனம் கிருஷ்ணையர், 16); distinguishing marks of a musical mode.

*[மூச்சு→மூர்ச்சை.]*

மூர்ச்சைசுரம் *mūrccai-šuram,* பெ.(n.) மயக்கம் உண்டாக்கும் ஒருவகைக் காய்ச்சல்; fever that causes unconsciousness (சா.அக.).

*[மூர்ச்சை + சுரம்.]*

மூர்ச்சைதெளி–தல் *mūrccai-teḷi-,* 2 செ.கு.வி. (v.i.) மயக்கத்திலிருந்து தெளிதல்; to recover from swoon (சா.அக.).

*[மூர்ச்சை + தெளி–தல்.]*

மூர்ச்சைப்புழு *mūrccai-p-puḻu,* பெ.(n.) பாக்குகளில் இருக்கும் ஒருவகைப் புழு, இப்பாக்கை வாயில் போட்டுக் கொண்டால்

மயக்கம் உண்டாகும்; a worm in the areca nut that causes fainting (சா.அக.).

*[மூர்ச்சை + புழு.]*

**மூர்ச்சைபித்தம்** *mūrccai-pittam,* பெ.(n.) மார்பு எரிச்சல், வாய்க் கசப்பு, முழங்கால், தொடை வலி, வாந்தி, செரிமானம் சரியில்லாமை முதலிய நோய் வகை; a disease marked by bitterness in the mouth, burning sensation in the chest, pain in the knee and thighs, vomitting and indigestion (சா.அக.).

*[மூர்ச்சை + பித்தம்.]*

**மூர்ச்சைரோகம்** *mūrccai-rōgam,* பெ.(n.) மயக்கம். மூக்கின் துளைகளில் 4 துளி முலைப்பால் விடத் நீங்கும் இம் மயக்கம்; the faint or swoon is relieved by dropping breast milk into the nostrils (சா.அக.).

*[மூச்சு→மூர்ச்சை + **Skt.** ரோகம்.]*

**மூர்ச்சைவலி** *mūrccai-vali,* பெ.(n.) மயக்க வலிப்பு; fainting fits (சா.அக.).

*[மூர்ச்சை + வலி.]*

**மூர்ச்சைவாயு** *mūrccai-vāyu,* பெ.(n.) மூர்ச்சை உண்டுபண்ணுவதாகக் கருதும் காற்று (வாயு) (வின்.); a wind in the body, supposed to cause swooning.

*[மூர்ச்சை + **Skt.** வாயு.]*

**மூர்ச்சைவிழல்** *mūrccai-viḻal,* பெ.(n.) மயங்கி விழுகை; get swooned (சா.அக.).

*[மூர்ச்சை + விழல்.]*

**மூர்த்தம்** *mūrttam,* பெ.(n.) முழுத்தம் (முகூர்த்தம்) பார்க்க; see *muḻuttam.*

*"பிறந்த நாளும் பெற்ற மூர்த்தமும்" (பெருங்.நரவான.6, 73).*

**மூர்த்திசெட்டிவெட்டு** *mūrtti-šeṭṭi-veṭṭu,* பெ.(n.) பழைய நாணய வகை (பணவிடு.141); an ancient coin.



**மூர்த்திநாயனார்** *mūrtti-nāyaṉār,* பெ.(n.) சிவனடியார் அறுபத்து மூவரில் ஒருவர்; one among 63 canonized šaivasaints.

*[மூர்த்தி + நாயனார்.]*

பாண்டிய நாட்டின் மதுராபுரி நகரத்தைச் சார்ந்தவர். இயற்பெயர் மூர்த்தியார். சமண சமயத்தைச் சார்ந்த வடுகக் கருநாட மன்னன் மூர்த்தியாரை இகழ்ச்சி படுத்த எண்ணி தொடர் துன்பங்கள் கொடுத்தான் என்றும் அதைப் பொருட்படுத்தாமல் மூர்த்தியார் திருத்தொண்டு செய்து வந்தார் என்றும், அப்பொழுது அரசன் நம் அடியார்க்கு யாரும் சந்தனக்கட்டை விற்கக் கூடாது என்று தடைவிதித்ததாகவும், இதனால் சந்தனக்கட்டை எங்கும் கிடைக்கவில்லை என்றும், அரசன் உடனே சிவனடியாரின் கையை சந்தனக்கல்லில் வைத்து முழங்கை எலும்பு ஒடியும்படி அடித்ததாகவும், அடியார் அப்போது சிவனியமும் தமிழும் தழைக்க இந்நாட்டிற்கு ஒரு நல்ல அரசன் எப்பொழுது தான் வருவானோ? என வேண்ட, அன்று இரவு அரசன் இறந்து

விட்டதாகவும், அவருக்கு (அரசன்) பிள்ளைகள் இல்லாததால் அமைச்சர்கள் யானையைக் கண்கட்டிவிட்ட தாகவும், யானையிடம் உன் திருவருளால் நாட்டையாள ஒருவரைத் தெரிந்து சுமந்து வரும்படி வேண்டியதாகவும் யானை மூர்த்திநாயனாரைச் சுமந்து வந்ததாகவும் அன்று முதல் மூர்த்தியார் உலகாண்டு பின்பு இறைவனடி சேர்ந்தார் என தொண்டர் மாக்கதை (பெரிய புராணம்) கூறுகிறது.

**மூர்வம்** *mūrvam,* பெ.(n.) செடி வகையைச் சார்ந்த பெருங்குரும்பை; bow string hemp stemless plant (சா.அக.).

**மூரல்** *mūral,* பெ.(n.) 1. பல் (பிங்.); tooth. 2. புன்சிரிப்பு (பிங்.); smiling. *"மூரல் முறுவலொடு மதைஇய நோக்கே" (குறுந். 286:5). "உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு" (அகநா.60:4).* 3. சோறு; boiled rice. *"பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவீர்" (பெரும்பாண்.168).* 4. பால் (பரி.அக.); milk. 5. ஒரு வகை கடல் மீன்; a kind of sea - fish.

தெ. முரியு, முருகு; க. முருவ; ம. முரல்; து.முரிஜ.

**மூரலி–த்தல்** *mūrali,* 4 செ.கு.வி.(v.i.) புன்முறுவல் செய்தல்; to laugh, smile. *"மூரலித்த முகத்தினன்" (உபதேசகா. அயமுகி.61).*

*[மூரல்→மூரலி–த்தல்.]*

**மூரன்முறுவல்** *mūraṉ-muṟuval,* பெ.(n.) புன்சிரிப்பு; smile. *'முட்போன்ற பல்லு விளங்கும் மூரன் முறுவலையும்' (பு.வெ.11, ஆண்பாற்.9, உரை). "மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே" (குறுந்.286).*

*[மூரல்→மூரன் + முறுவல்.]*

**மூரா** *mūrā,* பெ.(n.) மீன்பிடிகலத்தின் முன்பக்கம் (முகவைமீன்.); frontage of fishing boat.

**மூரி**[1] *mūri,* பெ.(n.) 1. பெருமை; greatness. *"மூரிக் கடற்றானை" (பு.வெ.3:3) (பிங்.). "முழங்குதிரை கொழீஇய மூரீ எக்கர்" (நற்.15:1).* 2. வலிமை; strength. *"மூரிவெஞ்சிலை" (கம்பரா.கும்பகருண.26).* 3. பழமை (வின்.); antiquity. 4. கிழ அகவை; old age. *"மூரியெருத்தாலுழவு" (இன்.நாற். 21).* 5. எருமை; buffalo. *"மோட்டிள மூரி யுழக்க" (கம்பரா. அகலிகை. 69).* 6. எருது; ox, bullock. *"நெறிபடு மருப்பி னிருங்கண் மூரியொடு" (பதிற்றுப்.67 : 15).* 7. விடையோரை (இடபராசி) (திவா.); taurus of the zodiac. 8. திமில் (யாழ்.அக.); hump. 9. துண்டம்; bit, part. *"வெண்ணிண மூரி யருள" (புறநா.393).* 10. முறியோலை பார்க்க; see *muṟi-y-ōli.* 11. முரண் (பிங்.); enmity. 12. நெரிவு (வின்.); crack, breach.

ம. மூரி; தெ., க., து. முரி.

**மூரி**[2] *mūri,* பெ.(n.) 1. சோம்பல்; laziness, indolence. 2. சோம்பல் முரிப்பு; shaking off laziness. *"பொய்த்ததோர் மூரியா னிமிர்ந்து" (கம்பரா.உண்டாட்35).*

**மூரிநிமிர்–தல்** *mūri-nimir-,* 2 செ.கு.வி. (v.i.) நெட்டை முரித்தல்; to stretch one self, as from laziness. *"சிங்கம்... மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு" (திவ். திருப்பா.23).*

மறுவ. சோம்பல் முறித்தல்.

*[முரி → மூரி →மூரி + நிமிர்தல் = உடம்பை நீட்டிச் சோம்பல் முறித்தல் (வே.சொ.க.).]*

**மூரிப்போ–தல்** *mūri-p-pō-*,8 செ.கு.வி. (v.i.) முதுமையால் வலிமையற்றுப் போதல்; to become weak by age. *முன்பே மூரிப் போய்ப் பல விடங்களிலும் பூண்கட்டிக் கிடக்கிறதொரு சொத்தை வில்லை (திவ்.பெரியாழ்.3. 9 : 2, வியா.பக்.771).*

*[மூரி + போ–தல்.]*

**மூரிபோ–தல்** *mūri-pō-*,8 செ.கு.வி.(v.i.) மூரிநிமிர்–தல் பார்க்க; see *mūri-nimir-. "நாஞ்சின் மூரிபோகாது முடுக்கும்" (பரிபா.20:54).*

*[மூரி + போ–தல்.]*

**மூரிமுரி–த்தல்** *mūri-muri-*, 4 செ.கு.வி. (v.i.) மூரிநிமிர்–தல் பார்க்க; see *mūri-nimir-.*

*[மூரி + முரி–த்தல்.]*

**மூரியோலை** *mūri-y-ōlai*,பெ.(n.) முறியோலை (நாஞ்சில்.) பார்க்க; see *muṟi-y-ōlai.*

*[மூரி + ஒலை.]*

**மூரிவலனாதி** *mūri-valaṉādi*,பெ.(n.) பருந்து; kite.

**மூருகடந்தை** *mūru-kaḍandai*, பெ.(n.) இலந்தை; jujube - *zizphus* (சா.அக.).

**மூருகணிக்கரம்** *mūru-kaṇikkaram*, பெ.(n.) கத்திரிக்காய்; brinjal (சா.அக.).

**மூருவம்** *mūruvam*,பெ.(n.) மூர்வம் பார்க்க; see *mūrvam.*

*[மூர்வம்→மூருவம்.]*

**மூலஅபானக்கடுப்பு** *mūla-abāṉa-k-kaḍuppu*,பெ.(n.) மலவாய்ப் பகுதியில் எரிச்சலுடன் வலி ஏற்படுகை; irritating pain caused in the region of anus (சா.அக.).

**மூலக்கச்சம்** *mūla-k-kaccam*, பெ.(n.) மூலைக்கச்சம் (உ.வ.) பார்க்க; see *mūlai-k-kaccam.*

*[மூலை + கச்சம் → மூலக்கச்சம்.]*

**மூலகஞ்சம்** *mūla-kañjam*,பெ.(n.) 1. சுவற்று முள்ளங்கி; large radish - *Raphanus sativus.* 2. சின்ன முள்ளங்கி; small radish - *Raphanus sativus* (சா.அக.).

**மூலகஞ்சரம்** *mūla-kañjaram*, பெ.(n.) சின்ன முள்ளங்கி; small radish - *Raphanus sativus* (சா.அக.).

**மூலகஞ்சானி** *mūla-kañjāṉi*, பெ.(n.) ஆற்று முள்ளங்கி; wall radish - *Blumea aurita* (சா.அக.).

**மூலக்கடுப்பு** *mūla-k-kaḍuppu*,பெ.(n.) மூல நோய் (வின்.); piles (சா.அக.).

*[மூலம் + கடுப்பு.]*

**மூலக்கணம்** *mūla-k-kaṇam*, பெ.(n.) அரத்தமும் சளியும் கலந்து வெளியேறி குழந்தைகளைத் தாக்கும் ஒருவகை நோய்; a disease in children due to congenital heat marked by passing of bloody and mucus faeces.

மறுவ. முக்குக்கணம்

*[மூலம் + கணம்.]*

**மூலக்கரணி** *mūla-k-karaṇi*,பெ.(n.) ஒருவகை நஞ்சு; a kind of arsenic.

**மூலக்கரப்பன்** *mūla-k-karappaṉ,* பெ.(n.) ஒரு வகைத் தோல் நோய்; a skin disease (சா.அக.).

**மூலக்கல்** *mūla-k-kal,* பெ.(n.) தலைக்குள் இருக்கும் நச்சுக்கல்; a kind of poisonous stone in the head (சா.அக.).

*[மூலம் + கல்.]*

**மூலக்கல்வி** *mūla-k-kalvi,* பெ.(n.) தொடக்கப் பள்ளிக் கல்வி; elementary education. *மூலக் கல்வி நாங்கள் வாசித்தா லாபத்தோ (பெண்மதி மாலை.பக்.29).*

*[மூலம் + கல்வி.]*

**மூலக்கழிச்சல்** *mūla-k-kaḻiccal,* பெ.(n.) அறுவகைக் கழிச்சல் நோய்களுள் ஒன்று; one of six *kaḻiccal*, Chronil euterities.

*[மூலம் + கல்.]*

**மூலக்கனல்** *mūla-k-kaṉal,* பெ.(n.) மூலச்சூடு பார்க்க; see *mūlā-c-cūḍu.*

*[மூலம் + கனல்.]*

**மூலக்காட்டுமாடு** *mūla-k-kāṭṭu-māḍu,* பெ.(n.) கறவை (பசு) மாட்டின் வகையில் ஒன்று; a species of milchy cow.

*[மூலம் + காட்டு + மாடு.]*

**மூலக்காணி** *mūlakkāṇi,* பெ.(n.) கர்க்கடக நஞ்சு (யாழ்.அக.); mineral poison.

**மூலக்காரன்** *mūla-k-kāraṉ,* பெ.(n.) 1. மூல நூலை இயற்றியவன்; author of a work, as distinguished from its commentator. 2. மூல நோய் உள்ளவன் (வின்.); person suffering from piles. 3. எதற்கும் உடனடியாக சினம் கொள்ளும் குணம் உடையவன் (வின்.); short - tempered man.

*[மூலம் + காரன்.]*

**மூலக்கால்** *mūla-k-kāl,* பெ.(n.) குளம்பு விரிந்து போன மாடு; cow with widened hoof.

**மூலக்காற்று** *mūla-k-kāṟṟu,* பெ.(n.) மூலைத் திசையினின்று அடிக்கும் காற்று (மீனவ.); wind that blows from the corner of two direction.

*[மூலை→மூலம் + காற்று.]*

**மூலக்கிரகம்** *mūla-k-kiragam,* பெ.(n.) அரச மரம்; a sacred tree called pipal-*Ficus religiosa* (சா.அக.).

**மூலக்கிரந்தி** *mūla-k-kirandi,* பெ.(n.) 1. நல்ல அரத்தம் கெடுவதால் வரும் நோய்; a disease due to impure blood in the body. 2. மூலநோய், 1 (M.L.) பார்க்க; see *mūla-nōy, 1.*

மறுவ. வயிற்றுக்கடுப்பு

*[மூலம் + கிரந்தி.]*

**மூலக்கிராணி** *mūla-k-kirāṇi,* பெ.(n.) 1. அறுவகைக் கழிச்சல் (கிராணி) நோய்களுள் ஒன்று; chronic enteritis, one of six *Kirāṇi.* 2. மூலநோய், 1 பார்க்க; see *mūla-nōy, 1.* 3. வயிற்றளைச்சல் (வின்.); dysentry.

*[மூலம் + Skt. கிராணி.]*

**Skt.** *கிராணி* > த. கழிச்சல்.

அறுவகைக் கழிச்சல் (கிரகணி) நோய்கள்: 1. பித்தக் கழிச்சல்; 2. வெப்ப ஊதைக் கழிச்சல், 3. சளி ஊதைக் கழிச்சல்; 4. மேகக் கழிச்சல்; 5. மூலக்கழிச்சல்; 6. ஊதைக் கழிச்சல்.

**மூலக்கூடல்** *mūla-k-kūḍal*, பெ.(n.) பெருங் குடல் அடிக்கூறு, மலவாய்; rectum.

**மூலக்கூறு**[1] *mūlakkūṟu*, பெ.(n.) உயிரற்ற ஒருபொருளைத் துண்டித்துக் கொண்டு போய்க் கடைசியாகப் பிரிக்க முடியாததெனக் கருதப்படும் நிலையில் உள்ள மூலப்பொருளின் அனைத்துப் பண்புகளையும் கொண்ட ஒரு குறிப்பிட்ட அணுவோ அல்லது வெவ்வேறு அணுக்களின் இணைவோ கொண்ட சிறு பகுதி; molecule.

*[மூலம் + கூறு.]*

**மூலக்கூறு**[2] *mūla-k-kūṟu*, பெ.(n.) பொருள்களின் அடிப்படைத் தத்துவம்; radical part or essential principle of a substance.

*[மூலம் + கூறு.]*

**மூலக்கொடி** *mūla-k-koḍi*, பெ.(n.) அல்லிக் கொடி; water lily (சா.அக.).

**மூலக்கொதி** *mūla-k-kodi*, பெ.(n.) 1. மூல நோய் உண்டாக்கும் ஒருவகை எரிச்சல் (வின்.); painful sensation from piles. 2. மூலநோய், 1 பார்க்க; see *mūla-nōy, 1.*

*[மூலம் + கொதி.]*

**மூலக்கொதிப்பு** *mūla-k-kodippu*, பெ.(n.) மூலக்கொதி பார்க்க; see *mūla-k-kodi.*

*[மூலம் + கொதிப்பு.]*

**மூலகணம்** *mūla-kaṇam*, பெ.(n.) 1. வெப்பம் கரணியமாக குழந்தைகளுக்கு மலத்தில் சீழ், அரத்தம் இரண்டும் கலந்து விழும் ஒரு நோய் வகை (பைஷஜ.); a disease in children due to congential heat marked by passing of bloody and mucus faeces. 2. மூலக்கணம் பார்க்க; see *mūla-k-kaṇam.*

மறுவ. முக்குக்கணம்

**மூலகதலம்** *mūla-kadalam*, பெ.(n.) 1. ஒருவகை முருங்கை; moringa. 2. முண்முருங்கை, 1 (மூ.அ.); see *muṉ-muruṅgai.*

**மூலகந்தம்**[1] *mūla-kandam*, பெ.(n.) இருவேலி; cuscus-grass.

**மூலகந்தம்**[2] *mūla-kandam*, பெ.(n.) மரம், பூண்டு இவைகளின் வேர்; root of plant, trees and herbs (சா.அக.).

**மூலகபம்** *mūla-kabam*, பெ.(n.) முருங்கை; drumstic tree - *Moringa oleifera* (சா.அக.).

**மூலகபல்லவம்** *mūlaga-pallavam*, பெ.(n.) முருங்கை மரம்; drumstic tree - *Moringa oleifera* (சா.அக.).

**மூலகம்** *mūlagam*, பெ.(n.) 1. கற்பூர வாழைப் பழம்; a kind of fragrant plantain fruit. 2. கிழங்கு; tuber ous root. 3. முள்ளங்கி; radish (சா.அக.).

**மூலகம்பகைத்தான்** *mūlagam-pagaittāṉ*, பெ.(n.) சீந்திற்கொடி ; moon creeper - *Tinosphora corelifolia* (சா.அக.).

**மூலகரணாதி** *mūla-karaṇādi*, பெ.(n.) சிவனார் வேம்பு; Siva's neem - Indigoferra asphalathifolia (சா.அக.).

மூலகவொளி *mūlaga-v-oḷi,* பெ.(n.) மூலாக்கினி, 2 பார்க்க; see *mūlā-k-kiṉi,* 2. *"சுடரிலகு மூலகவொளி மேவியருவி பாய" (திருப்பு.586).*

மூலகன்மம் *mūla-kaṉmam,*பெ.(n.) ஆதனை ஒட்டிக் கொண்டு இருக்கிற கன்மம் (சி.சி.2, 39, சிவஞா); karma eternally clinging to the soul.

*[மூலம் + **Skt.** கன்மம்.]*

மூலகா *mūlagā,*பெ.(n.) முள்ளங்கி; radish - *Raphanus sativus* (சா.அக.).

மூலகாரணம் *mūla-kāraṇam,* பெ.(n.) முதற்கரணியம்; first cause. *நானவற்றினுக்கு மூல காரணமாகுவன் (பிரபுலிங்.மாயைகோ.68).*

*[மூலம் + காரணம்.]*

மூலகுணக்காரன் *mūla-kuṇa-k-kāraṉ,* பெ.(n.) மூலக்காரன், 3 (வின்.) பார்க்க; see *mūla-k-kāraṉ, 3.*

மூலகுருவாசான் *mūla-guruvāšāṉ,* பெ.(n.) பொன்மாற்று சித்தர்; alchemist (சா.அக.).

மூலங்கீரனார் *mūlaṅgīraṉār,* பெ.(n.) கழக காலப் புலவன்; poet in kaḻagam age. *முள் முருக்கின் நெற்றைப் பேயினுடைய கைவிரலுக்கு உவமை கூறியவர். சோழ நாட்டு திருச்சாய்க்காடு இவர் செய்யுளில் வந்துள்ளது (நற்.73).* பேய்கள் பலியுண்ண *மூதூர் மன்றங்களுக்கு வருவதை இவர் கூறுகிறார். திருச்சாய்க் காட்டின் வளத்தையும் சிறப்பித்துக் கூறியுள்ளார். இவ்வூர் இக்காலத்தில் சாயாவானம் என்று வழங்கப்படுகிறது. இவர் பாடியதாக நற்றிணையில் ஒரு பாடல் உள்ளது. பாலையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.*

> *"வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன*
> *மாணா விரல வல்வாய்ப் பேஎய்*
> *மல்லன் மூதூர் மலர்ப்பலி உணீஇய*
> *மன்றம் போழும் புன்கண் மாலைத்*
> *தம்மொடும் அஞ்சும் நம்மிவண் ஒழியச்*
> *செல்ப என்ப தாமே செவ்வரி*
> *மயிர் நிரைத் தன்ன வார்கோல் வாங்குகதிர்*
> *செந்நெலஞ் செறுவின் அன்னந் துஞ்சும்*
> *பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்ன என்*
> *நுதல் கவின் அழிக்கும் பசலையும்*
> *அயலோர் தூற்றும் அம்பலும் அளித்தே"*
> *(நற்.73).*

மூலச்சி *mūlacci,*பெ.(n.) காற்றுக்கொடி (கொத்தான்); air creeper, leafless creeper - *Cassytha filiformia* (சாஅக.).

மூலச்சிறைபோடு-தல் *mūla-c-ciṟai-pōḍu-,*20 செ.கு.வி.(v.i.) ஒரு சடங்கு; one kind of rite, function, observance.

*[மூலை + சிறை + போடு-.]*

கணவன் இறந்த இரவுக்குப் பின் வரும் அதிகாலையில் மனைவியின் பட்டுச் சேலையை அவிழ்த்து வெள்ளைச் சேலை உடுத்துவர். இச்சடங்கு அவளை மூலையிற் சிறை வைத்தற்கு அடையாளமாக நடத்தப்படுகிறது (கோவை.).

மூலச்சுன்னம் *mūla-c-cuṉṉam,* பெ.(n.) குடற் சுன்னம் (நச்சுக் கொடியில் இருந்து எடுக்கப்படும் காரத்தன்மை உடைய கலவை); an alkaline compound prepared from the placental cord (சா.அக.).

மூலச்சூடு *mūla-c-cūḍu,* பெ.(n.) 1. கணைச்சூடு; a disease of children. 2. மூலநோய்; piles.

3. மூலக்கொதி, 1 பார்க்க; see *mūla-k-kodi, 1.*

*[மூலம் + சூடு.]*

மூலச்சோதி *mūla-c-cōdi,* பெ.(n.) கடவுள் (வின்.); god, as the Primeval Light.

*[மூலம் + **Skt.** சோதி.]*

மூலசத்தி *mūla-šatti,* பெ.(n.) தலைமையான ஆற்றல் (சத்தி); serpents power in the human system - *`kundalini'* the seat of power the Godless of *Moola ātharam* (சா.அக.).

*[மூலம் + சத்தி.]*

மூலசதுர்வர்க்கம் *mūla-šatur-varkkam,* பெ.(n.) நான்கு வகைக் கிழங்கு; four sorts of tuber.

*[மூலம் + சதுர்வர்க்கம்.]*

மூலசம் *mūlašam,* பெ.(n.) கிழங்குள்ள செடிகொடி (வின்.); plants and creeper having tubers.

மூலசாமூலம் *mūla-šāmūlam,* பெ.(n.) பெருவழுதலை; a plant - a big species of brinjal (சா.அக.).

மூலஞ்சிவப்பி *mūlañ-jivappi,* பெ.(n.) நச்சுப்புல்; a poisonous grass (சா.அக.).

மூலட்டம் *mūlaṭṭam,* பெ.(n.) மூலட்டானம் பார்க்க; see *mūlaṭṭāṉam. "திருமூலட்டந் தொழுது" (காஞ்சிப்பு.தழுவக்கு.172).*

மூலட்டானம் *mūlaṭṭāṉam,* பெ.(n.) திரு மூலட்டானம் (தேவா.725, 4); the sacred shrine of *Tiruvārūr.*

மூலட்டானன் *mūlaṭṭāṉaṉ,* பெ.(n.) 1. திருவாரூரிற் கோயில் கொண்டுள்ள சிவன்; the presiding deity at the Temple of *Tiruvārūr. "மணியாரூர்த் திருமூலட்டானனாரே" (தேவா. 720, 1).* 2. மூலவர் பார்க்க; see *mūlavar.*

*[மூலட்டானம்→மூலட்டானன்.]*

மூலத்தம்பம் *mūla-t-tambam,* பெ.(n.) ஒரு சிற்ப நூல் (வின்.); a treatise on architecture.

*[மூலம் + **Skt.**தம்பம்.]*

மூலத்தனம் *mūla-t-taṉam,* பெ.(n.) மூலதனம் (யாழ்.அக.)பார்க்க; see *mula-taṉam.*

*[மூலம் + **Skt.** தனம்.]*

மூலத்தானம் *mūla-t-tāṉam,* பெ.(n.) 1. அடிப்படை; base, foundation. 2. கருவறை; sanctum sanctorum of a temple. 3. மூலவர் (யாழ்.அக.) பார்க்க; see *mūlavar.* 4. அரச இருக்கை (வின்.); royal residence, palace.

*[மூலம் + **Skt.** தானம்.]*

மூலத்திரவியம் *mūla-t-tiraviyam,* பெ.(n.) மூலதனம் (யாழ்.அக.) பார்க்க; see *mūla-taṉam.*

*[மூலம் + **Skt.** திரவியம்.]*

மூலத்தின்சாரம் *mūlattiṉ-šāram,* பெ.(n.) 1. சிறுநீர்; urine. 2. கல்லுப்பு; rock salt.

மூலத்தினவு *mūla-t-tiṉavu,* பெ.(n.) எரிச்சலை உடைய மலவாய்; irritation in the anus (சா.அக.).

*[மூலம் + தினவு.]*

**மூலத்தீ** *mūlatti*, பெ.(n.) உயிர் ஆதன் (சீவாத்மா); liberated soul (சா.அக.).

**மூலத்தீசுர்** *mūla-t-tīšur*, பெ.(n.) திருமந்திரம் எழுதிய திருமூலர்; *Thirumoolar*, author of *Thirumantiram* (சா.அக.).

**மூலத்துருவம்** *mūla-t-turuvam*, பெ.(n.) விண்கோள் நிலை அளவு வகை; epoch-longitude, longitude of a planet.

**மூலத்துவாரம்** *mūla-t-tuvāram*, பெ.(n.) மூலத்துளை பார்க்க; see *mūla-t-tuḷai*.

[*மூலம் +* **Skt.** *துவாரம்.*]

**மூலத்துளை** *mūla-t-tuḷai*, பெ.(n.) மலவாய்த் துளை; anal orifice.

**மூலதடி** *mūla-taḍi*, பெ.(n.) ஆண் குறி; male organ, penis (சா.அக.).

[*மூலம் + தடி.*]

**மூலதனம்**[1] *mūla-taṉam*, பெ.(n.) தொழில் தொடங்கத் தேவைப்படும் அல்லது பயன்படுத்தப்படும் முதல் (பணம்); capital, investment. *பத்து கோடி ரூபாய் மூலதனத்தில் நிறுவப்பட்ட தொழிற்சாலை. சில நாடுகள் உள்நாட்டுத் தொழில்களில் அயல் நாட்டவர் மூலதனம் போடுவதை வரவேற்கின்றன. உழைப்பையே மூல தனமாகக் கொண்டு வாழ்க்கையில் முன்னேறியவர்.*

[*மூலம் +* **Skt.** *தனம்.*]

**மூலதனம்**[2] *mūla-taṉam*, பெ.(n.) தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வருகிற உடமை, சொத்து; hereditary property.

[*மூலம் + தனம்.*]

**மூலதாது** *mūla-tādu*, பெ.(n.) மூலப் பொருள் (தனிமம்); elements (சா.அக.).

[*மூலம் +* **Skt.** *தாது.*]

**மூலதேசியம்** *mūla-tēšiyam*, பெ.(n.) செழு மலர்க் கொன்றை; large flower cassia - *Cassia florida* (சா.அக.).

**மூலநாசம்** *mūla-nāšam*, பெ.(n.) அடியோடு அழிகை; eradication, complete destruction. *மூலநாசம் பெற முடிக்கு மொய்ம்பினாள் (கம்பரா.சூர்ப்ப.8).*

[*மூலம் + நாசம்.*]

**மூலநாடி**[1] *mūla-nāḍi*, பெ.(n.) சுழுமுனை (திருமந்.622); a principal tubular vessel of the human body, said to lie between *iṭai* and *piṅgalai*, one of *taša-nāḍi*.

[*மூலம் + நாடி.*]

**மூலநாடி**[2] *mūla-nāḍi*, பெ.(n.) மலவாய் நாடி; nerves in the anus (சா.அக.).

[*மூலம் + நாடி.*]

**மூலநாயன்**[1] *mūla-nāyaṉ*, பெ.(n.) திருமூலர்; great siddher named Tirumoolar (சா.அக.).

**மூலநாயன்**[2] *mūla-nāyaṉ*, பெ.(n.) வடிநீர் (கியாழம்); decoction.

**மூலநாள்** *mūla-nāḷ*, பெ.(n.) 19ஆம் விண்மீனாகிய குருகு (நட்சத்திரம்); the 19th nakšatra.

[*மூலம் + நாள்.*]

**மூலநிதரி** *mūla-nitari*, பெ.(n.) வட்டத் திருப்பி; root of a twiner - *Cissampelos pareira* (சா.அக.).

மூலநோக்காடு *mūla-nōkkāḍu,* பெ.(n.) மூலநோய், 1 பார்க்க; see *mūla-nōy, 1.*

*[மூலம் + நோக்காடு.]*

மூலநோய்[1] *mūla-nōy,* பெ.(n.) மலவாயில் உண்டாகும் ஒருவகை நோய்; piles haemorrhoids.

*[மூலம் + நோய்.]*

மலவாயில் உள்ள நாளம் என்னும் அரத்த நரம்பானது கிழங்கு முளையைப் போலவும், வேர்களைப் போலவும், ஊன் முளைகளைப் போலவும் காணும் ஒரு வகை நோய்.

மூலநோய்[2] *mūla-nōy,* பெ.(n.) ஆணவ மலம்; an impurity eternally clinging to the soul. *"மூல நோய் தீர்க்கு முதல்வன் கண்டாய்" (தேவா.845, 9).*

*[மூலம் + நோய்.]*

மூலப்பட்டை *mūla-p-paṭṭai,* பெ.(n.) சித்திர மூலத்தின் மேற்தோல் (சங்.அக.); bark of Ceylon leadwort.

*[மூலம் + பட்டை.]*

மூலப்படி *mūla-p-paḍi,* பெ.(n.) கிணற்றுப் படிக்கட்டில் நீருக்கருகில் உள்ள கடைசிப்படி (கோவை.); a last foot-stone in the stair-case of a well.

*[மூலம் + படி.]*

மூலப்படை *mūla-p-paḍai,* பெ.(n.) அறுவகைப் படையுள் நீண்ட காலமாகத் தொடர்ந்து வரும் படை (குறள், 762, உரை) (சுக்கிரநீதி. 303); soldiers who have been maintained from very early times or from time immemorial; reserved force, one of *aṟuvagai-p-paḍai. "உலைவிடத் தூறஞ்சா வன்கண் தொலைவிடத்துத் தொல்படைக் கல்லால் அரிது" (குறள், 762).*

வ. மௌலம்

*[மூலம் + படை.]*

அறுவகைப்படை : 1. மூலப்படை; 2. கூலிப் படை; 3. நாட்டுப் படை; 4. காட்டுப்படை; 5. துணைப் படை; 6. பகைப்படை அறுவகைப் படையுள்ளுஞ் சிறப்புடையது மூலப்படை. மூலப்படையை வள்ளுவர் தொல்படை என்பர். வாழையடி வாழையாக இருந்து வருவதும், எவ்வகை ஊற்றையும் பொருட்படுத்தாததும், இறப்பிற்கு அஞ்சாததும், போரையே விரும்புவதும், அரசனைக் காக்க என்றும் உயிரை உவந்து ஈவதும், எக்காரணத்தையிட்டும் அறை போகாததும் வென்றே மீள்வதும் தொல்படைத் திறங்களாம். போர்க் காலத்துப் பெரும்படை அமைதிக் காலத்து வேண்டாவாதலின், போர் முடிந்த பின் மூலப்படை யொழிந்த பிறவெல்லாம் கலைக்கப்படுவது மரபு. அன்று மூலப்படைப் பகுதிகள் தலைநகரிலும், பிற கோநகர்களிலும் எல்லைப் புறங்களிலும் புதிதாய் வெல்லப்பட்ட பகைவர் நாட்டிலும் நிறுத்தப் பெறும் (பழ.தமிழ்.43).

மூலப்பவுத்திரம் *mūla-p-pavuttiram,* பெ.(n.) காற்றுபிடிப்பு, பித்தம் உடம்பில் மிகையாகி மலவாயின் அடியில் வீங்கிப் புடைத்துப் பழுத்து உடைந்து அதனின்று நீர் இடையறாது ஒழுகிக் கொண்டிருக்கும் நோய்; fistula in ano.

*[மூலம் + Skt. பவுத்திரம்.]*

மூலப்பாண்டு *mūla-p-pāṇḍu,* பெ.(n.) உடல் காய்ந்து, முகம் வீங்கி வெளுத்து, வலு குறைந்து, கைகால் ஓய்ந்து, சூலை மேற்கொண்டு, உணவு சுருங்கும் ஒருவகை நோய்; a disease marked by dryness of

the skin bloated face, paleness, loss of viality etc, a kind of dropsy (சா.அக.).

மூலப்பாண்டுசூலை *mūlappāṇḍu-šūlai,* பெ.(n.) உடல் வறண்டு, வெளுத்துத் திமிர் ஏறி, வீங்கி, கை கால் வளைந்து, கட்டி மலம் சிறுத்தும், அரத்த சோகையுடனும், கைகால்கள் விறைப்புடனும், களைப்புடனும் காணப்படும் ஒரு வகை நோய்; a kind of dropsy accompanied by anaemia, swelling loss of sensation pain in the limbs and stiffness of joints fatigue etc (சா.அக.).

*[மூலப்பாண்டு + சூலை.]*

மூலப்பினிசம் *mūla-p-piṉišam,* பெ.(n.) மூக்கில் தசை வளர்ச்சியை உண்டாக்கும் ஒரு வகை நோய்; a disease called sinus (சா.அக.).

மூலப்புற்று *mūla-p-puṟṟu,* பெ.(n.) மலவாய் வழியில் ஏற்படும் புற்று நோய்; cancer in the rectal region (சா.அக.).

*[மூலம் + புற்று.]*

மூலப்பொருள் *mūla-p-poruḷ,* பெ.(n.) 1. மூலகரணியமானப் பொருள்; the primary elements. 2. கடவுள் (வின்.); god, as the primal Being.

*[மூலம் + பொருள்.]*

மூலபகந்தரம் *mūla-pagandaram,* பெ.(n.) மூலப்பவுத்திரம் பார்க்க; see *mūla-p-pavuttiram.*

மூலபஞ்சாட்சரம் *mūla-paññāṭšaram,* பெ.(n.) ஐந்து எழுத்தாலாகிய நமசிவாய மந்திரம் (வின்.); the mystic mantra of five letters viz. *nama-šivāya.*

*[மூலம் + **Skt.** பஞ்சாட்சரம்.]*

மூலபண்டாரம் *mūla-paṇḍāram,* பெ.(n.) நிதி வைப்பு; treasure kept in reserve. *"எங்கள் பாண்டிப் பிரான்றன் னடியவர்க்கு மூலபண்டாரம் வழங்குகின்றான்" (திருவாச. 36 : 5).*

*[மூலம் + பண்டாரம்.]*

மூலபத்திரம் *mūla-pattiram,* பெ.(n.) செப்பு நெருஞ்சில்; a prostate plant - Indigofera enneaphylla (சா.அக.).

மூலபதம் *mūla-padam,* பெ.(n.) சொல்லின் முதல் நிலை (பகுதி) (வின்.); etymon, radix or indivisible part of a word.

*[மூலம் + **Skt.** பதம்.]*

மூலபரடை *mūla-paraḍai,* பெ.(n.) தலைமை அவை; chief assembly.

மூலபரணி *mūla-paraṇi,* பெ.(n.) முருங்கை மரம்; drumstic tree - *Moringa oleifera* (சா.அக.).

மூலபலதம் *mūla-paladam,* பெ.(n.) பலா மரம்; jack tree - *Arto carpus integri folia* (சா.அக.).

மூலபலம் *mūla-palam,* பெ.(n.) மூலப்படை பார்க்க; see *mūla-p-paḍai. "மூல பலவதைப் படலம்" (கம்பரா.).*

மூலபலா *mūla-palā,* பெ.(n.) ஒரு வகைப் பலா; a kind of jack tree (சா.அக.).

மூலபவுந்திரம் *mūla-pavundiram,* பெ.(n.) மூலப்பவுத்திரம் பார்க்க; see *mūla-p-pavuttiram.*

*[மூலம் + **Skt.** பவுந்திரம்.]*

**மூலபாடம்** *mūla-pādam,* பெ.(n.) உரையில்லாத மூலம் (வின்.); bare text without commentary.

*[மூலம் + பாடம்.]*

**மூலபிருத்தியன்** *mūla-piruttiyaṉ,* பெ.(n.) கடவுள் சிவனுக்குத் தொண்டு செய்யும் தலைமைப் பணியாளன் (சண்டேசுரர்); *Śaṇḍēśurar,* as the chief servant of *Śiva.*

**மூலபேரம்** *mūla-bēram,* பெ.(n.) மூலவர் பார்க்க; see *mūlavar.*

**மூலம்[1]** *mūlam,* பெ.(n.) 1. விதையினின்று முன்தோன்றும் முளை; seed-leaf. 2. முளையின் மாற்றமாகிய வேர்; root. 3. திரண்ட வேராகிய கிழங்கு (பிங்.); bulb, tuber. *"முதிர்கனி மூல முனிக்கண மறுப்ப" (கல்லா.38).* 4. வேரை ஒட்டிய அடிமரம்; trunk of a tree. *"போதி மூலம் பொருந்தி" (மணிமே.26: 47).* 5. அடிப்படை; fundamental cause. 6. முதல் (ஆதி); origin, source, that which is original. *"மூலவோலை மாட்சியிற் காட்ட" (பெரியபு.தடுத்.56).* 7. கரணியம்; cause, foundation. *"மூலமாகிய மும்மலம்" (திருவாச. 2, 111).* 8. வாயில்; agency, means. *இது அவன் மூலமாகக் கிடைத்தது.* 9. முகாமை (பிரதானம்); importance. *"மூலவேள்விக்கு" (கம்பரா. பிரமாத்.164).* 10. மூலவர் (யாழ்.அக.) பார்க்க; see *mūlavar.* 11. மரம்; tree. 12. குருகுவிண்மீன் (பிங்.), மூலநாள்; the 19th naksatra. 13. அண்மை; nearness. 14. உரிமையாளர்; ownership. 15. இதளியம் (பாதரசம்); mercury. 16. சித்திர மூலம்; ceylon lead wort.

வ. மூல.

*[முல்→மூல்→மூலம் = முளை.]*

**மூலம்[2]** *mūlam,* பெ.(n.) மலவாய் ஓரத்திலோ, உட்பகுதியிலோ முளையைப் போல் உருவாகி வலியையும் மலச்சிக்கலையும் உண்டாக்கும் ஒரு நோய்; piles. *அவன் மூலநோயால் தாக்கப்பட்டுள்ளதால் அவனின் மூலம் அடிக்கடி வெளிவந்துவிடுகிறது.*

*[முல்→மூல்→மூலம் = முளை. அண்டியில் முளைபோல் தோன்றும் நோய்.]*

**மூலம்[3]** *mūlam,* பெ.(n.) 1. பிறிது ஒன்று தோன்றுவதற்கு அடிப்படையாக இருக்கும் பொருள்; source, origin. *இந்தச் சிக்கலுக்குப் பல காரணங்கள் இருக்கலாம். இருப்பினும் மூலகரணியம் இதுதான். இந்தச் செய்திக்கு மூலம் ஓர் ஆங்கிலப் பத்திரிகை. உண்மையாக, வாழ்க்கையில் நடந்த ஒரு நிகழ்ச்சியை மூலமாக வைத்துத்தான் இந்தக் கதையை எழுதினேன்.* 2. படி (பிரதி) எடுப்பதற்கு உரிய அடிப்படையான முதல் உருவாக்கம்; original of something. *இந்த ஓவியத்தின் மூலம் எங்கு உள்ளது?* 3. முதன் நூலாசிரியரால் எழுதப்பட்ட பாடம்; the original text. *சிலப்பதிகாரத்தின் மூலம் மட்டும் கொடு. உரையை நான் படித்திருக்கிறேன்.*

*[முல்→மூல்→மூலம்.]*

**மூலம்[4]** *mūlam,* பெ.(n.) அடிப்படை ஆவணம், ஓலை (ஆதாரப்பத்திரம்); document of title. *இந்த வீட்டு ஆவணத்தின் மூலம் என் அப்பாவிடம் உள்ளது.*

*[முல்→மூல்→மூலம்.]*

**மூலம்[5]** *mūlam,* இடை.(part.) ஒன்றின் ஊடாக அல்லது வழியாகப் பயன்படுத்தி ஒரு செயல் நடைபெறுவதாகக் காட்டும் இடைச்சொல்; a term to express the

sense of by means of, by through. *பேராசிரியரோடு தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ள முயன்றேன். ஆழ்துளைக் கிணறு மூலம் நிலத்தடி நீரை எடுத்து வேளாண்மைக்குப் பயன்படுத்துகிறார்கள். இடி விழுந்தால் மின்சார இடிதாங்கி மூலம் நிலத்தில் இறங்கிவிடும்.*

மூலம்[6] *mūlam,* பெ.(n.) முதலீடு; capital, investment. *"இந்நிலத்துக்கு மூலமான பணம்" (திருத்துறைப்பூண்டி கல்.1, 39, தெ.இ.கல்.தொ.17, கல் 546-39).*

*[முல்→மூல்→மூலம்.]*

மூலமட்டம் *mūla-maṭṭam,* பெ.(n.) மூலைமட்டம் பார்க்க; see *mūlai-maṭṭam.*

மூலமந்திரம்[1] *mūla-mandiram,* பெ.(n.) 1. தலைமை மந்திரம்; the chief mantra. *"மும்மைசா லுலகுக் கெல்லா மூல மந்திரத்தை" (கம்பரா.வாலிவ.71).* 2. அடிப்படை மந்திரம் (பிரணவம்); the mystic syllable ōm.

*[மூலம் + மந்திரம்.]*

மூலமந்திரம்[2] *mūla-mandiram,* பெ.(n.) செய்வினைகட்கு மூலிகைகளை பயன்படுத்த வேண்டி, வேரைப் பிடுங்குவதற்கு முன் சொல்லும் மந்திரம்; before collecting the herbs for medical purposes, some religious function with mantram is to be performed (சா.அக.).

*[மூலம் + மந்திரம்.]*

மூலமுக்கணை *mūla-mukkaṇai,* பெ.(n.) வில்வம்; Bael - *Crataeva religiosa* alias *Aegle mernaelos* (சா.அக.).

மூலமுளை *mūla-muḷai,* பெ.(n.) மூல நோயின் கரணியமாக மலவாயில் காணப்படும் முளை போன்ற நுனி; the fleshy excresence protruding out-wards in the rectum caused by piles (சா.அக.).

மூலமுளைமுனை *mūla-muḷai-muṉai,* பெ.(n.) மலவாயில் தோன்றும் முளையின் முனை; tip of the fleshy growth in the piles (சா.அக.).

*[மூலமுளை + முனை.]*

மூலமுறிவெங்கொதிப்பு *mūla-muṟi-veṅg odippu,* பெ.(n.) 1. மூலச்சூடு, மூலக் கொதிப்பு; internal heat of system. 2. மலவாய் வெளிப்படல்; prolapse of the anus.

*[மூலம் + முறி + வெம்மை + கொதிப்பு..]*

மூலமொழி *mūla-moḻi,* பெ.(n.) முதலில் தோன்றிய மொழி, தாய்மொழி; primary or parent language.

*[மூலம் + மொழி.]*

மூலர் *mūlar,* பெ.(n.) திருமூலர்; saint Thirumoolar. *"மூலர் முறை யொன்று" (சேக்கிழார்.பு.96).*

மூலர்முறை *mūlar-muṟai,* பெ.(n.) திருமந்திரம் (சேக்கிழார்.பு.96); Tiru mandiram.

*[மூலர் + முறை.]*

மூலரத்தக்கணம் *mūla-ratta-k-kaṇam,* பெ.(n.) குழந்தைகளுக்கு மலவாயில் மலத்துடன் அரத்தத்தை உண்டாக்கும் நோய்; a cogenital disease in children causing bloody stools (சா.அக.).

*[மூலம் + அரத்தக்கணம்.]*

**மூலரவி** *mūla-ravi,* பெ.(n.) காக்கையின் நால்வகை இனத்தில் ஒருவகை; one of the four varieties of crow (சா.அக.).

**மூலரோகம்** *mūla-rōgam,* பெ.(n.) மூல நோய்[1] (பதார்த்த) பார்க்க; see *mūla-nōy*[1].

*[மூலம் + **Skt.** ரோகம்.]*

**மூலவக்கினி** *mūla-vakkiṉi,* பெ.(n.) சிறுநீர்; urine (சா.அக.).

**மூலவர்** *mūlavar,* பெ.(n.) கோயிலுள் கருவறையில் நிலையாக உள்ள கடவுளின் வடிவம் (மூர்த்தி); idol fixed in the sanctum sanctorum of a temple, dist. fr. *uṟcavar. மூலவர் வழிபாடு முத்தி தரும்.*

*[மூலம் → மூலவர்.]*

கோயிலில் கால்கோள் செய்யப்பட்ட கடவுள்.

**மூலவள்ளி** *mūla-vaḷḷi,* பெ.(n.) வெற்றிலை (பிங்.), இலைக்கொடி; betel vine - *Piper betel*.

**மூலவன்னிதீச்சலம்** *mūlavaṉṉi-ticcalam,* பெ.(n.) சிறுநீரக புளியம் (அ) உப்பு; uric acid or salts (சா.அக.).

**மூலவாசல்** *mūla-vāšal,* பெ.(n.) 1. கோயிலின் உட்பக்கக் கருவறை வாயில்; entrance into the sanctum sanctorum of a temple. *"மூலவாசல் வெளிவிட்டு" (திருப்பு.399).* 2. உச்சித்துளை; fontanelle.

*[மூலம் + வாசல். வாயில்→வாசல்]*

**மூலவாய்க்கால்** *mūla-vāykkāl,* பெ.(n.) தொடக்கவாய்க்கால் (கோவை); beginning of water-course.

*[மூலம் + வாய் + கால்.]*

**மூலவாய்வு** *mūla-vāyvu,* பெ.(n.) இடுப்புப் புடிப்பு; முக்கோண மூட்டெலும்பு சார்ந்த ஒரு நோய்; the gas in the sacral region (சா.அக.).

**மூலவாயு**[1] *mūla-vāyu,* பெ.(n.) செரிமானம் சரியில்லாமல் உடல் வெளுத்து மலம் கருகி வயிறு எப்பொழுதும் இரைந்து கொண்டிருக்கும் ஒரு வகை நோய்; a windy disease attended with loss of appetite bloodlessness and noisy bowels (சா.அக.).

*[மூலம் + **Skt.** வாயு.]*

**மூலவாயு**[2] *mūla-vāyu,* பெ.(n.) வளிப் பிடிப்பால் (வாதம்) உண்டாகும் நோய் (வின்.); wind in the intestines, a disease.

*[மூலம் + **Skt.** வாயு.]*

**மூலவிக்கிரகம்** *mūla-vikkiragam,* பெ.(n.) மூலவர் (வின்.) பார்க்க; see *mūlavar.*

**மூலவியாதி** *mūla-viyādi,* பெ.(n.) மூலநோய்[1] (வின்.) பார்க்க; see *mūla-nōy*[1].

**மூலவிருள்** *mūlaviruḷ,* பெ.(n.) 1. ஆதனைப் பற்றியிருக்கும் அறியாமையாகிய இருள் (வின்.); the original darkness of the soul. 2. ஆணவ மலம் (யாழ்.அக.); the original impurity of the soul.

*[மூலம் + இருள்.]*

**மூலவுதிரம்** *mūla-vudiram,* பெ.(n.) மூலம் கரணியமாக மலவாயில் உண்டாகும் அரத்தம்; bleeding from the piles (சா.அக.).

*[மூலம் + உதிரம்.]*

மூலவுப்பு *mūla-v-uppu,* பெ.(n.) மண்டை ஓட்டில் இருந்து செய்யப்படும் ஒருவகை உப்பு; a kind of salt extracted from the human skull (சா.அக.).

*[மூலம் + உப்பு.]*

மூலவுபத்திரவம் *mūlavupattiravam,* பெ.(n.) மூலநோய்[1] பார்க்க; see *mūla-nōy.*

*[மூலம் +* **Skt.** *பவுத்திரம்.]*

மூலவெதுப்பு *mūla-veduppu,* பெ.(n.) மாடுகளுக்கு உண்டாகும் ஒருவகை நோய் (மாட்டுவா.158); a disease of cattle.

*[மூலம் + வெதுப்பு.]*

மூலவெழுத்து *mūla-v-eḻuttu,* பெ.(n.) 1. மூலாக்கரம் பார்க்க; see *mūlā-k-karam.* 2. முளைமந்திரம் (பிரணவம்); the mystic incantation *ōm.* *"மூல வெழுத்துடனைந்துங் கொளுவி" (கந்தபு. கயமுகனு.72)*

*[மூலம் + எழுத்து.]*

மூலவேர் *mūla-vēr,* பெ.(n.) அடிவேர்; tap root, main root of a tree. *"மகாமேரு பர்வதத்தை மூல வேருடன் முடியுடன் வாங்கினவன்று" (தக்கயாகப்.161, உரை).*

*[மூலம் + வேர்.]*

மூலவேர்த்தைலம் *mūla-vēr-t-tailam,* பெ.(n.) நடுநிலக்கடல் (முத்தியதரைக்கடல்) சார்ந்த பகுதிகளில் காணப்படும் ஒப்பனைச் செடிகளின் வேரில் இருந்து எடுக்கப்படும் நெய்மம்; oil prepared out of plumbgo root (சா.அக.).

*[மூலம் + வேர் +* **Skt.** *தைலம்.]*

மூலவோலை *mūla-v-ōlai,* பெ.(n.) மூல ஆவணம்; original of a deed, as distinguished form its copy. *"மூலவோலை மாட்சியிற் காட்ட வைத்தேன்" (பெரியபு. தடுத்தாட்.56).*

*[மூலம் + ஓலை.]*

மூலா *mūlā,* பெ.(n.) கொடி முல்லை; a creeper (சா.அக).

மூலாக்கரம் *mūlā-k-karam,* பெ.(n.) பிற எழுத்துக்களுக்கு மூலமான அகரம் (வின்.); the fundamental or basic letter from which all other letters are derived.

மறுவ. முதலெழுத்து.

மூலாக்கினி *mūlākkiṉi,* பெ.(n.) 1. இரைப்பை எரிச்சல், அடிவயிறு எரிச்சல்; the gastric fire. 2. மூலாதாரத்தில் உள்ள சூடு; internal heat having its seat in the *mūlātāram.*

*[மூலம் +* **Skt.** *அக்கினி.]*

மூலாகமம் *mūlākamam,* பெ.(n.) உலகத் தோற்ற வரலாறு; the book of genesis evolution of universe.

*[மூலம் + வேர் +* **Skt.** *ஆகமம்.]*

மூலாசனம் *mūlāšaṉam,* பெ.(n.) வேர் கிழங்குகளாகிய உணவு (யாழ்.அக.); food consisting only of roots and bulbs.

மூலாசாரம் *mūlāšāram,* பெ.(n.) மருந்துக்குப் பயன்படுத்தும் வேர்களை உடைய மூலிகை; herbs and plants whose roots are only used in medicine (சா.அக.).

மூலாட்டிநாடிகம் *mūlāṭṭi-nāḍigam,* பெ.(n.) ஒருவகைச் செடி (மூக்கிரட்டை); a prostate plant hogweed-*Boerhaavia procumbens* (சா.அக.).

**மூலாதாரம்**[1] *mūlātāram,* பெ.(n.) 1. அடிப்படை; fundamental cause. 2. ஆறுமூல(தார)ங்களுள் குய்யத்துக்கும் குதத்துக்கும் நடுவில் நான்கு இதழ்த் தாமரை போலுள்ள சக்கரம் (சிலப்.3:26, உரை); a cakkiram or nerve - plexus in the body. described as a four - petalled lotus, situated between the base of the sexual organ and the anus, one of *āṟātāram.*

*[மூலம் + Skt. ஆதாரம்.]*

**மூலாதாரம்**[2] *mūlātāram,* பெ.(n.) ஒன்றைத் தோற்றுவிக்க அல்லது ஒரு தொழிலைச் செய்ய அடிப்படையாகவும் மூலமாகவும் அமைவது; resources. *தேவையான மூலாதாரங்களும், பட்டறிவும் உடையவர்கள் மட்டுமே விண்ணப்பிக்கவும்.*

*[மூலம் + Skt. ஆதாரம்.]*

**மூலாதிரசம்** *mūlādi-rašam,* பெ.(n.) ஒருவகைச் செடி (அரத்தை); a plant - *Galangal - Alpinia galangal* (சா.அக.).

**மூலாமை** *mūlāmai,* பெ.(n.) கடல்வாழ் ஆமைவகையுளொன்று (முகவைமீன.); a species of sea tortoise (சா.அக.).

*[மூலம் + ஆமை.]*

**மூலாவளி** *mūlāvaḷi,* பெ.(n.) மூளை; brain (சா.அக.).

**மூலான்** *mūlāṉ,* பெ.(n.) நச்சுத் தன்மையுள்ள மீன்; a poisonous fish.

இம்மீனின் பல் படின் நெஞ்சடைக்கவும், இறக்கவும் நேரிடும் (செங்கை.மீன.).

**மூலி**[1] *mūli,* பெ.(n.) 1. மருந்தாகவுதவும் புல், பூண்டு செடி, கொடி; plant. *"பாதாள மூலி படருமே" (நல்வழி.23).* 2. மருந்துவேர்; medicinal root. 3. கிழங்கு; root of a tree.

த. மூலி > வ. மூலின்.

*[மூல்→மூலி.]*

**மூலி**[2] *mūli,* பெ.(n.) காரணியப் பொருளாகக் கருதப்படுபவன் (பூதன்); one who is the cause. *"மூலிவடிவா மெயினன்" (பாரத. அருச்சுனன்றவ.103).*

**மூலிக்கரணம்** *mūli-k-karaṇam,* பெ.(n.) 1. மூலம், ஆதி; commencement. 2. விலை ஆவணம்; sale deed.

*[மூலி + கரணம்.]*

**மூலிக்கை** *mūlikkai,* பெ.(n.) மூலிகை (யாழ்.அக.)பார்க்க; see *muligai.*

**மூலிகற்பம்** *mūli-kaṟbam,* பெ.(n.) மூலிகைகளைக் கொண்டு செய்த உடல் வலுவேற்றும் மருந்து (காய கற்பம்); herbs used in the preparation of rejuvenating drugs (சா.அக.).

*[மூலி + கற்பம்.]*

**மூலிகை** *mūligai,* பெ.(n.) மருந்தாகப் பயன்படும் செடி கொடிகளின் வேர், இலை முதலியன; roots leaves etc. of plants, used for medicine . *மூலிகை அறுத்தால், மூன்றுலகு ஆளலாம் (பழ.).*

வ. மூலிகா.

*[மூலி→மூலிகை. த. மூலிகை > வ. மூலிகா.]*

**மூலிகைச்சத்து** *mūligai-c-cattu,* பெ.(n.) மூலிகையில் உள்ள உயிர்ச் சத்து; the active principles of a drug.

*[மூலிகை + சத்து.]*

**மூலிகைச்சரக்கு** *mūligai-c-carakku,* பெ.(n.) சித்த மருத்துவத்தின்படி 1008 பொருட்கள்; 1008 products for Siddha medicine (சா.அக.).

*[மூலிகை + சரக்கு.]*

**மூலிகைச்சாறு** *mūligai-c-cāṟu,* பெ.(n.) மருந்துப் பூண்டினின்று பிழிந்தெடுத்தச் சாறு; juice of the herbs (சா.அக.).

*[மூலிகை + சாறு.]*

**மூலிகைச்செம்பு**[1] *mūligai-c-cembu,* பெ.(n.) மூலிகைகளில் இருந்து எடுக்கும் செம்பு; copper extracted from herbs (சா.அக.).

*[மூலிகை + செம்பு.]*

**மூலிகைச்செம்பு**[2] *mūligai-c-cembu,* பெ.(n.) திருமூலர் திருமந்திரம் 1000ல் சொல்லி உள்ள முறையில் மூலிகையிலிருந்து எடுத்தச் செம்பு; copper extracted from herbs - The method of extraction is told in Thirumandiram.

*[மூலிகை + செம்பு.]*

**மூலிகைப்பயிர்** *mūligai-p-payir,* பெ.(n.) மருந்தாகப் பயன்படும் விளைபயிர்; medicinal herbs.

*[மூலிகை + பயிர்.]*

**மூலிகைமர்மம்** *mūligai-marmam,* பெ.(n.) மூலிகையின் மறைபொருள் (கமுக்கங்களை) பற்றிய நூல்; secrets about the herbs (சா.அக.).

*[மூலிகை + மர்மம்.]*

**மூலிகையீயம்** *mūligai-yīyam,* பெ.(n.) திருமூலர் திருமந்திரம் 1000த்தில் சொல்லியுள்ள மூலிகையினின்று ஈய மெடுக்கும் முறை, ஈய மூலிகை; the method of extracting lead from herbs is told in `Thirumandiram' lead extracted from herbs (சா.அக.).

*[மூலிகை + ஈயம்.]*

**மூலியம்**[1] *mūliyam,* பெ.(n.) 1. விலை; price. 2. விலைக்கு வாங்கிய பொருள் (யாழ்.அக.); article purchased. 3. ஊதியம், கூலி (யாழ்.அக.); wages, salary. 4. வாயில் (நிமித்தம்); means agency.

*[மூலம்→மூலி→மூலியம்.]*

த. மூலம் →வ. மூல்யம்

**மூலியம்**[2] *mūliyam,* வி.அ.(adv.) வாயில்; through. *யார் மூலியமாய்ச் செய்தி தெரிவித்தாய்? (உ.வ.).*

*[முல்→மூல்→மூலம்→ மூலியம்.]*

**மூலை** *mūlai,* பெ.(n.) 1. இருபக்கங்களோ, கோடுகளோ சந்திக்கும் கோணம்; corner where two sides or lines meet. *"மூலை முடுக்குகளும்" (இராமநா.சுந்.3). சதுரத்துக்கு நான்கு மூலைகள். சேலைத் தலைப்பின் ஒரு மூலை கிழிந்திருந்தது.* 2. கோணத் திசை; intermediate point of direction. *ஈசான மூலையில் வீடு.* 3. முனை; tip, corner of a street. *தெரு மூலையில் வண்டி நிற்கிறது.* 4. மிகச் சிறு அளவு; no worth or value, of no avail. *கல்யாணச் செலவுக்கு இந்த*

*ஆயிரம் ரூபாய் எந்த மூலைக்கு? பெரும் புள்ளிகளே அவனை எதிர்க்க முடியாத போது நீ எந்த மூலைக்கு?*. 5. வீடு (வின்.); house. *மூலை வீட்டிலே முட்டை இடுகிறான் (பழ.)*. 6. அறை மூலை; corner of the room. *"இருட்டறை மூலையிலிருந்த குமரி" (திருமந். 1514).*

ம. மூல; தெ. மூல; க. மூலெ.

*[முல்→மூல்→மூலை.]*

**மூலைக்கச்சம்** *mūlai-k-kaccam,* பெ.(n.) பின் கச்சத்திலிருந்து ஆடைநுனி தொங்கும்படி உடைகட்டும் வகை; fashion of tying a man's cloth so that one end is partly tucked in behind and partly let freely down.

*[மூலை + கச்சம்.]*

**மூலைக்கப்புப்பாய்தல்** *mūlai-k-kappu-p-pāydal,* பெ.(n.) குழந்தைகளின் விளையாட்டு வகை (இ.வ.); a children's game.

*[மூலை + கப்புப்பாய்தல்.]*

**மூலைக்கார்த்திகை** *mūlai-k-kārttigai,* பெ.(n.) நளி (கார்த்திகை) மாதத்தில் நளி விண்மீனுக்கு (திருக் கார்த்திகைக்கு)ப் பின் வரும் நாட்கள் (இ.வ.); the day of the month of *Kārtigai* after *Tiru-k-kārttigai.*

**மூலைக்கால்** *mūlai-k-kāl,* பெ.(n.) முழுத்தக்கால் பார்க்க; see *muḻutta-k-kāl*. *"மூலைக்கால் நாட்டும் விதி" (சர்வா. சிற்.39).*

*[மூலை + கால்.]*

**மூலைக்காற்று** *mūlai-k-kāṟṟu,* பெ.(n.) மூலைத் திசையினின்று அடிக்குங் காற்று (வின்.); wind blowing from an intermediate point of the compass.

*[மூலை + காற்று.]*

**மூலைக்குடா** *mūlai-k-kuḍā,* பெ.(n.) 1. குடா துறைமுகம் முதலியவற்றின் மூலை; corner of a bay harbour, etc. 2. வீடு, வயல் முதலியவற்றின் மூலையிடம் (வின்.); out-of-the way room in a large house; remote corner of a large field.

*[மூலை + குடா.]*

**மூலைக்குத்து** *mūlai-k-kuttu,* பெ.(n.) 1. முற்றத்து மூலைக்கு எதிராக வீட்டுத் தலைவாயிலின் நிலை அமைந்திருக்கை; position of a house in which its main door-way faces a corner of the courtyard. 2. மூலைப்பார்வை பார்க்க; see *mūlai-p-pārvai.*

*[மூலை + குத்து.]*

**மூலைக்குமூலை** *mūlaikku-mūlai,* வி.எ. (adv.) சிதறுபட (உ.வ.); in a scattered manner.

*[மூலை + கு + மூலை.]*

**மூலைக்குமூலைவரிசை** *mūlaikku-mūlai-varišai,* பெ.(n.) ஒன்றுவிட்டொரு கல் எதிர்முகமாகச் சாயும்படி அமைக்கும் கட்டட முறை (C.E.M.); diagonal bond, herring bone work, rows of parallel lines in which the alternate rows slope in different directions.

*[மூலைக்குமூலை + வரிசை.]*

**மூலைக்கை** *mūlai-k-kai,* பெ.(n.) வீட்டின் மூலை முகட்டுச் சட்டம் (வின்.); beam from a corner to the ridge of a roof.

*[மூலை + கை.]*

**மூலைகா–த்தல்** *mūlai-k-kā-,* 4 செ.கு.வி. (v.i.) கணவனை இழந்த மனைவி வீட்டுக்குள் ஒரு மூலையிற் கிடந்து துன்பமடைதல் (இ.வ.); to lie mourning in a corner of a house, as a recently widowed woman.

*[மூலை + கா–த்தல்.]*

**மூலைத்தாய்ச்சி** *mūlai-t-tāycci,* பெ.(n.) நாலுமூலைத்தாய்ச்சி என்னும் விளையாட்டு; a game.

*[மூலை + தாய்ச்சி.]*

**மூலைத்திசை** *mūlai-t-tišai,* பெ.(n.) பெருந்திசைகளுக்கு நடுவேயுள்ள கோணத் திசை (வின்.); intermediate point of the compass.

*[மூலை + திசை.]*

**மூலைப்பார்வை** *mūlai-p-pārvai,* பெ.(n.) 1. கோணத் திசையை நோக்கிய வீட்டு நிலை; position of the house facing an intermediate point of the compass, considered in auspicious. 2. சாகுந் தறுவாயில் விழி ஒருபுறமாகச் செருகி நிலைக்குத்திடுகை; fixed, oblique look of the eyes at the time of death.

*[மூலை + பார்வை.]*

**மூலைமட்டப்பலகை** *mūlai-maṭṭa-p-palagai,* பெ.(n.) மூலைமட்டம் பார்க்குங் கருவி (C.E.M.); mason's set - square.

*[மூலை + மட்டம் + பலகை.]*

கட்டடத்தின் மூலையின் ஒழுங்கைக் கண்டறியப் பயன்படுத்தும் கோணமுடையதாகச் செய்யப்பட்ட 'T' அல்லது 'ட' வடிவ கருவி.



**மூலைமட்டம்** *mūlai-maṭṭam,* பெ.(n.) 1. நேர்கோணம்; right angle. 2. மூலை மட்டப்பலகை பார்க்க; see *mūlai-maṭṭa-p-palagai.*

*[மூலை + மட்டம்.]*

**மூலைமட்டம்பார்த்தல்** *mūlai-maṭṭam-pārttal,* பெ.(n.) வாயில் நிலையில் மூலைகளின் சரிசம அளவை அளவிட்டுப் பார்க்கை; testing a door-frame by diagonal measurement.

*[மூலை + மட்டம் + பார்த்தல்.]*

**மூலைமுடக்கு** *mūlai-muḍakku,* பெ.(n.) 1. மூலைமுடங்கி பார்க்க; see *mūlai-muḍaṅgi.* 2. மூலைமுடுக்கு பார்க்க; see *mūlai-muḍukku.*

*[மூலை + முடக்கு.]*

**மூலைமுடங்கி** *mūlai-muḍaṅgi,* பெ.(n.) வளைந்து செல்லும் சிறு வழி (வின்.); crooked way.

*[மூலை + முடங்கி.]*

**மூலைமுடுக்கு** *mūlai-muḍukku,* பெ.(n.) 1. பொருள்களுக்கு இடையில் உள்ள சிறு இடைவெளி; small gaps between things. *வீட்டின் மூலை முடுக்கெல்லாம் தேடியும் விரலணி (மோதிரம்) கிடைக்கவில்லை.* 2. எளிதில் சென்றடைய முடியாத இடம்; unreachable corner of a country, etc. *இந்தப் பத்திரிகை நாட்டின் மூலை முடுக்கெல்லாம் கிடைக்கும்.* 3. சந்து பொந்து; nook and corner.

*[மூலை + முடுக்கு.]*

**மூலையடியே** *mūlai-y-aḍiyē,* கு.வி.எ. (adv.) எதிர்பாராத வகையில் (எதேச்சையாய்); at one's pleasure, as one likes. *"மூலையடியே சுகானுபவம் பண்ணித் திரிந்தார்களாம் படி" (ஈடு.4. 9 : 5).*

*[மூலை + அடியே.]*

**மூலையடிவழி** *mūlai-y-aḍi-vaḻi,* பெ.(n.) குறுக்கு வழி; short cut. *"எனக்கு இங்ஙனே யிருப்பதொரு மூலையடிவழி யுண்டாவதே" (ஈடு, 10. 8 : 3).*

*[மூலை + அடி + வழி.]*

**மூலையரம்** *mūlai-y-aram,* பெ.(n.) மூன்று பட்டையுள்ள அரம் (வின்.); three-sided rasp or file.

*[மூலை + அரம்.]*



**மூலையோட்டம்** *mūlai-y-ōṭṭam,* பெ.(n.) நேர்க்கோணமின்றி மூலையாய் அமைகை (வின்.); angular extension, diagonal extending out of square.

*[மூலை + ஓட்டம்.]*

**மூலையோடு[1]–தல்** *mūlai-y-ōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) நேர்க்கோணமின்றி மூலை வாக்கில் அமைதல் (வின்.); to be elongated as a corner to run out of square.

*[மூலை + ஓடு–தல்.]*

**மூலையோடு[2]** *mūlai-y-ōḍu,* பெ.(n.) 1. கூரை முகட்டில் வேயும் ஓடு வகை; ridge-tile. 2. கூடல் வாயில் இடும் ஓடு; a kind of tile used for covering the valley of a roof.

*[மூலை + ஓடு.]*



**மூலைவாக்கு** *mūlai-vākku,* பெ.(n.) மூலை கோணிய நிலை (வின்.); diagonal position, oblique position.

*[மூலை + வாக்கு.]*

**மூலைவாங்கல்** *mūlai-vāṅgal,* பெ.(n.) மூலையோட்டம் பார்க்க; see *mūlai-y-ōṭṭam.*

*[மூலை + வாங்கல்.]*

**மூலைவாசல்** *mūlai-vāšal,* பெ.(n.) தெருவிற்கு நேராகவன்றி ஒதுக்கமாய் அமைந்த வாயில்; gate or door - way, at or near a corner of a house.

*[மூலை + (வாயில்) வாசல்.]*

**மூலைவாட்டம்** *mūlai-vāṭṭam,* பெ.(n.) மூலைவாக்கு பார்க்க; see *mūlai-vākku.*

*[மூலை + வாட்டம்.]*

**மூலைவாட்டு** *mūlai-vāṭṭu,* பெ.(n.) மூலைவாக்கு பார்க்க; see *mūlai-vāṭṭu.*

*[மூலை + வாட்டு.]*

**மூலைவிட்டம்** *mūlai-viṭṭam,* பெ.(n.) நான்கு கோணத்தில் உள்ள எதிர் மூலைகளைச் சேர்க்குங் கோடு; diagonal.

*[மூலை + விட்டம்.]*

**மூவகைச்சத்தி** *mūvagai-c-catti,* பெ.(n.) விழைவு ஆற்றல் (இச்சா சத்தி), செயலாற்றல் (கிரியாசத்தி), அறிவாற்றல் (ஞானசத்தி) எனும் மூவகையாற்றல்; the three powers 1. the power of affection and benevolence to souls. 2. the power of creation - Evolution of universe. 3. the power of knowledge (சா.அக.).

*[மூவகை + சத்தி.]*

**மூவகைப்பாலகர்** *mūvagai-p-pālagar,* பெ.(n.) 1. பால் குடிக்கும் குழந்தை; those infants which can take only milk. 2. பாலும் குடிப்பதோடு சோறு தின்னும் குழந்தை; those which can take and live on in milk and rice. 3. சோறு மட்டும் தின்னும் குழந்தை; those that can live on rice only (சா.அக.).

*[மூவகை + பாலகர்.]*

**மூவகைமதம்** *mūvagai-madam,* பெ.(n.) மூன்று வகையான மதம்; three kinds of religions.

*[மூன்று→மூ + வகை + மதம் .]*

மக்களின் அறிவு நிலைக்கேற்ப மதம் 1. சிறுதெய்வ வணக்கம், 2. பெருந்தேவ மதம், 3. கடவுள் சமயம் என மூவகைப்படும்.

இம்மை நலத்தை மட்டும் நோக்கி இன்பக் காலத்திலும், துன்பக் காலத்திலும், ஐம்பூதமும் ஆவிகளும் போன்ற சிறு தெய்வங்கட்கு உணவு படைத்துக் காவு கொடுப்பதும், சிறு தெய்வ வணக்கம்; சிவன் அல்லது திருமால் பெயரால் இறைவனை நாள்தோறும்வழிபட்டு, உயிர்க் கொலை நீக்கிக் காய்கனி மட்டும் படைத்து, அவ்வம்மத அடையாளந் தாங்கி இருதிணை யுயிருக்கும் தீங்கு செய்யாது இயன்றவரை நன்மையே செய் தொழுகுவது பெருந்தேவ மதம்; எங்கும் நிறைந்திருக்கும், இறைவனை உருவ வணக்கமின்றி உள்ளத்திலேயே வழிபட்டு, தன்னையே படைத்து, முக்கரணமுந் தூய்மையாகி இல்லறத்திலேனும் துறவறத்திலேனும் நின்று, இயன்றவரை எல்லாவுயிர்கட்கும் நன்மையே செய்து, இம்மையிலேனும் மறுமையிலேனும் வீடு பெற வொழுகுவது கடவுள் சமயமாம்.

சிறு தெய்வ வணக்கத்திற்கு உருவம் இன்றியமையாதது; பெருந்தே வழிபாட்டிற்கு, அது வழிபடுவாரின் அகக் கரண வளர்ச்சிக் கேற்றவாறு இருந்தும் இல்லாமலும் இருக்கலாம் (தேவநேயம்–12, பக்.107).

**மூவகையிடம்** *mūvagai-y-iḍam,* பெ.(n.) தமிழ் இலக்கணங்கள் கூறும் தன்மை, முன்னிலை, படர்க்கை; place of Tamil

gramatical verse first person, second person and third person, etc.

*[மூன்று + வகை + இடம்.]*

மூவங்கம் *mū-vaṅgam,* பெ.(n.) 1. காசு (வெள்வங்கம்); tin. 2. ஈயம்பொதி (கருவங்கம்); lead. 3. துத்தநாகம் (நாகம்); zinc (சா.அக.).

*[மூ + அங்கம்.]*

மூவசைச்சீர் *mū-v-asai-c-cīr,* பெ.(n.) உரிச்சீர்; metrical foot of three syllables. *"வெண்பா வினமா நேரசையாலிற்ற மூவசைச் சீர்" (காரிகை, உறுப்.6).*

*[மூ + அசை + சீர்.]*

மூவட்சி *mū-v-aṭsi,* பெ.(n.) தேங்காய் (தைலவ.தைல.); coconut, as having three eyes.

*[மூ + Skt. அட்சி.]*

தேங்காயின் மேற்பரப்பில் மூன்று புள்ளிகள் காணப்படும். இம்மூன்றும் சிவனின் முக்கண் என பக்தர் கூறுவதால் இதற்கு மூவட்சி எனப் பெயர் வந்திருக்கலாம்.

மூவடிமுக்கால் *mūvaḍi-mukkāl,* பெ.(n.) வெண்பாவிற் கொருபெயர்; a kind of *Veṇbā.*

*[மூவடி + முக்கால். மூன்று முழுவடியும் (அடிதோறும் நான்கு சீர் கொண்டது) ஒரு முக்காலடியும் (மூன்று சீர் கொண்டது) கொண்டது.]*

மூவடிமுப்பது *mū-v-aḍi-muppadu,* பெ.(n.) இடைக்காடர் செய்ததாகக் கூறப்படுவதும், சிந்தடிச் செய்யுள் முப்பது கொண்டதுமான ஒரு நூல் (தொல்.பொருள். 548, உரை); a poem of 30 stanzas of three lines each, attributed to *iḍai-k-kāḍar.*

*[மூன்று + அடி – மூன்றடி→மூவடி + முப்பது.]*

மூன்றடிச் செய்யுட்கள் முப்பது கொண்டவை. இந்நூல் தற்போது இல்லை (கலை.).

மூவடிவு *mū-vaḍivu,* பெ.(n.) ஆண், பெண், அலி என்ற மூவகை வடிவம்; the three forms of living things viz. *āṇ,peṇ,ali.*

*[மூ + வடிவு.]*

மூவணை *mūvaṇai,* பெ.(n.) மூன்று இணை ஏர் மாடு (வின்.); three yokes of oxen.

*[மூன்று + இணை.]*

மூவர்[1] *mūvar,* பெ.(n.) 1. முவ்வடிவுகள்; the Hindu trinity. *"பலர்புகழ் மூவருந் தலைவராக" (திருமுரு.162).* 2. மூவேந்தர் பார்க்க; see *mūvēndar. "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்" (தொல். பொருள்.391). "முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்" (புறநா.35:4). "தமிழ்கெழு மூவர் காக்கு" (அகநா.31:14).* 3. தேவாரக் குரவர்களான அப்பர், சம்பந்தர், சுந்தரர், ஆகிய மூன்று நாயன்மார்கள்; the three Saiva saints, viz. Appar, šampandar, šundarar authors of the Tēvāram hymns. *"மூவர்செய் பனுவல்" (தாயு. சச்சிதா.3).*

*[மூ→மூவர்.]*

மூவர்[2] *mūvar,* பெ.(n.) அந்தணர், அரசர், வணிகர் எனும் மூன்று பிரிவினர்; three section of people, Brahmins, kings and traders who are considered to be high-birth.

*[மூ→மூவர்.]*

"இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றி னின்ற துணை" (குறள், 41). "என்னுங்குறளில் இயல்புடைய மூவர்" என்பது அதிகார வியைபால் அந்தணர், அரசர், வணிகர் என்னும் முக்குலத் தில்லறத்தாரையே குறிக்கும் பிரமசாரியன், வானப்பிரத்தன், சந்நியாசி என்று பரிமேலழகர் கூறியிருப்பது பொருந்தாது. துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் என்னுங் குறளிலுள்ள துறந்தார் என்னுஞ் சொல்லே துறவியரைக் குறிக்கும் (பழ.த.ஆ.பக்.99).

**மூவர்தண்பொழில்** *mūvar-taṇpoḻil,* பெ.(n.) தமிழ்நாடு; Tamil Nadu.

*[மூவர் + தண்பொழில். மூவர் = சேர, சோழ, பாண்டியர்.]*

பரதகண்ட மெனப்படும் இந்துதேயம், பழங்காலத்தில் நாவல் மரத்தான் சிறப்புற் றிருந்தமையால், நாவலம் பொழில் எனப்பட்டது.

ஒரு காலத்தில் குமரி மலை முதல் பனிமலை (இமயம்) வரையும் முத்தமிழ் வேந்தர் ஆட்சி செலுத்தியமையால், நாவலந் தண்பொழிற்கு மூவர் தண்பொழில் 'மூவர் தண்பொழில்' என்பது தென்னாட்டை அல்லது தமிழ்நாட்டை மட்டும் குறித்தது (சொ.ஆ.க.).

**மூவரசர்** *mū-v-arašar,* பெ.(n.) மூவேந்தர் பார்க்க; see *mū-vēndar.*

*[மூ + அரசர்.]*

**மூவராயர்** *mūvarāyar,* பெ.(n.) மூவேந்தர் பார்க்க; see *mū-vēndar. "மூவராயர் கண்டன்" (தெ.இ.கல்.தொ.1:10).*

*[மூவரையர் → மூவராயர்.]*

**மூவரியணில்** *mū-vari-y-aṇil,* பெ.(n.) முதுகில் நீளமாக மூன்று வரிகளுடைய அணில் வகை; striped squirrel, Sciurus palmarum, as having three longitudinal stripes along its back. *"மூவரியணிலோடாங்கவை நான்குங் குட்டிக்குரிய" (தொல்.பொருள்.561).*

*[மூ + வரி + அணில்.]*



**மூவரையர்** *mū-v-araiyar,* பெ.(n.) மூவராயர் பார்க்க; see *mūvarāyar.*

*[மூ + அரையர்.]*

**மூவளபிசைத்தல்** *mūvaḷa-pišaittal,* பெ.(n.) செய்யுளில் ஓசை குறையுமிடத்து நெடில்கள் தனது இரண்டு மாத்திரை அளவிலிருந்து மூன்று மாத்திரை அளபாய் நீட்டித்து ஒலிப்பது (அளபெடை); a letter lengthened in sound either in literary. *"ஓஒதல் வேண்டு மொளி மாழ்குஞ் செய்வினை ஆஅதும் என்னு மவர்" (குறள், 653).*

மறுவ. அளபெடை.

*[மூன்று + அளபு + இசைத்தல். நெட்டுயிர்கள் மூவலகு பெற்று ஒலிப்பது.]*

எழுத்துக்களின் ஒலியளவு கூறும்போது ஒவ்வொரு மாத்திரையையும் ஒரு அலகாகக் கொண்டனர். ஒலியலகினை அளவு என்றும் குறிப்பர். உயிரெழுத்துக்களில் குறில் ஓரலகு பெறும். நெடில் ஈரலகு பெறும். நெட்டுயிர்கள் சில சூழலில் மூன்று மாத்திரை அளவினதாக ஒலிக்கப்படுவதும் உண்டு. அதுவே அளபெடை.

**மூவறிவுயிர்** *mūvaṟivuyir,* பெ.(n.) ஊறு, சுவை, நாற்றம் ஆகிய மூவறிவு மட்டுமே யுள்ள சிதலெறும்பாதியான சிற்றுயிர்கள்; creatures such as ants, having only three senses. *"சிதலும் எறும்பும் மூவறிவினவே பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். பொருள்.மரபு.30).*

*[மூ + அறிவு + உயிர். உற்றறிதல், சுவைத்தறிதல், நுகர்ந்தறிதல் அல்லது முகர்ந்தறிதல் ஆகிய மூன்று அறிவினை மட்டும் பெற்ற சிதலெறும்பு முதலிய உயிர்கள்.]*

**மூவன்** *mūvaṉ,* பெ.(n.) கழக கால அரசன்; a king belongs to *Šaṅgam* period.

பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர்க்கு விரைவில் பரிசில் தராமையால் இகழப் பெற்றவன் (புறநா.209). பொறையன் என்னும் சேர மன்னன் மூவனுடையப் பல்லைப் பிடுங்கித் தொண்டி நகரின் மதில் வாயிற் கதவிலே அழுத்தினான் என்று தெரிகிறது (நற்.18). பாலை திணை குறித்து பொய்கையார் பாடிய பாடலில் மூவன் பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது.

*"பருவரல் நெஞ்சமொடு பல்படரகல*
*வருவர் வாழி தோழி மூவன்"*
*முழுவலி முள்ளெயி றழுத்திய கதவிற்*
*கானலந் தொண்டிப் பொருநன் வென்வேல்*
*தெறலருந் தானைப் பொறையன் பாசறை*
*நெஞ்ச நடுக்குறூஉந் துஞ்சா மறவர்*
*திரைதபு கடலின் இனிது கண் படுப்பக்*
*கடாஅங் கழீஇய கதனடங்கியானைத்*
*தடவு நிலை யொரு கோட்டன்ன*
*ஒன்றிலங் கருவிய குன்றிறந்தோரோ"*
*(நற்.18.).*

**மூவாசை**[1] *mū-v-āšai,* பெ.(n.) மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்ற மூவகைப்பட்ட பற்று; the three desires or passions, viz., *maṉ-ṉ-āšai, peṉ-ṉ-āšai, Poṉ-ṉ-āšai.*

*[மூ + ஆசை.]*

**மூவாசை**[2] *mūvāšai,* பெ.(n.) பிணத்தின் மேல் மூடும் சீலை (இ.வ.); cloth spread over a corpse.

**மூவாதியார்** *mūvādiyār,* பெ.(n.) ஐந்திணை எழுபது என்ற நூலை இயற்றிய ஆசிரியர்; a poet, author of *Aintiṇai-y-eḻubadu.*

**மூவாமருந்து** *mūvā-marundu,* பெ.(n.) அமிழ்தம்; சாவா மருந்து; nectar, as preventing old age. *"மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலின்" (சிலப்.2 : 46).*

*[மூ + ஆ + மருந்து.]*

**மூவாமலை** *mūvā-malai,* பெ.(n.) மேரு மலை (பிங்.); the Mount *Mēru.*

**மூவாமுதல்** *mūvā-mudal,* பெ.(n.) கடவுள் (யாழ்.அக.); God.

*[மூ + ஆ + முதல்.]*

**மூவாயிரவர்** *mū-v-āyiravar,* பெ.(n.) தில்லை வாழ் பிராமணர் மூவாயிரவர்; the community of 3000 Brahmins, being special devotees of the God at Chidambaram. *"மூவாயிரவர்க்கு மூர்த்தி யென்னப் பட்டானை" (தேவா.17, 7).*

*[மூ + ஆயிரம் – மூவாயிரம்→மூவாயிரவர்.]*

மூவார் *mūvār,* பெ.(n.) மூப்பில்லாத தேவர்; the *Dēvas,* as never ageing. *"மூவார் தொழுதெழு வடிவம்" (மேருமந்.874).*

*[மூ + ஆ – மூவா→மூவார்.]*

மூவார்விரியன் *mūvār-viriyaṉ,* பெ.(n.) நீளம் குறைந்து தடித்துள்ள பாம்பு வகை (கோவை.); a kind of short and pursy *viriyaṉ* snake. *இருபக்கமும் தலையிருப்பது போல் தோற்றமளிக்கும் பாம்பு.*

*[மூவார் + விரியன்.]*

மூவிசை *mū-v-iśai,* பெ.(n.) மந்தம், மத்திமம், உச்சம் என்ற மூன்றான பண் வகை (வின்.); pitch of three grades, viz. mandam, mattimam, uccam.

*[மூ + இசை.]*

மூவிடம் *mū-v-iḍam,* பெ.(n.) தன்மை, முன்னிலை, படர்க்கை என்ற மூன்று இடங்கள் (பிங்.); the three persons, viz., *taṉmai, muṉṉilai, paḍarkkai.*

மறுவ. மூவகையிடம்

*[மூ + இடம்.]*

தன்மை – நான், நாங்கள், யான், யாம்

முன்னிலை – நீ, நீங்கள், நீர், நீவிர்

படர்க்கை – அவன், அவள், அது.

மூவிரல்தட்டல் *mūviral-taṭṭal,* தொ.பெ. (vbl.n.) நாடி பார்த்த பின் மூவிரலையும் நிலத்தின் மேல் தட்டல்; patting the three fingers on the earth after feeling the pulse (சா.அக.).

*[மூன்று + விரல் + தட்டல்.]*

மூவிருந்தேக்கி *mūvirundēkki,* பெ.(n.) தொப்புள்; umbilicus (சா.அக).

மூவிலை[1] *mū-v-ilai,* பெ.(n.) மூவிலை வேல் பார்க்க; see *mū-v-ilai-vēl.* *"கொலைமலி மூவிலையான்" (தேவா.923, 11).*

மூவிலை[2] *mū-v-ilai,* பெ.(n.) 1. குப்பை மேனி; a plant used as antidote- *Acalypha-indica.* 2. நரிப்பயறு (மலை.); field-gram. 3. வில்வம்; bael, as triple - leaved. *"நல்லறுகு மூவிலைப் பத்திரமிரண்டும்" (செவ்வந்தி.பு. பிரமதேவன். 43).*

மூவிலைக்குருந்து *mūvilai-k-kurundu,* பெ.(n.) பொதிகை மலைச் சாரலில் தாமிரபரணி ஆற்றங்கரையில் விளைவதாகச் சொல்லும் ஒருவகைச் செடி; a plant said to grow in the *Podigai* mountain and the shores of the river *Tamaraparani* (சா.அக.).

*[மூன்று + இலை + குருந்து.]*

மூவிலைச்சி *mūvilaicci,* பெ.(n.) வில்வம்; a sacred tree - *Aegle mermelos alias Crataeva religiosa* (சா.அக.).

மூவிலைச்சூலம் *mūvilai-c-cūlam,* பெ.(n.) மூவிலைவேல் பார்க்க; see *mūvilai-vēl.* *"மூவிலைச் சூலமென்மேற் பொறி" (தேவா.937, 1).*

*[மூ + இலை + சூலம்.]*

மூவிலைப்பயறு *mūvilai-p-payaṟu,* பெ.(n.) ஒருவகைப் பயறு, நரிப்பயறு; a variety of pulse, field-gram - *Phaseolus aconitifolius (சா.அக.).*

*[மூ + இலை + பயறு.]*

**மூவிலைமின்னி** *mūvilai-minni,* பெ.(n.) அவரை (சங்.அக.); a twiner beans - *Dolichos lab lab* (சா.அக.).

**மூவிலைவேல்** *mūvilai-vēl,* பெ.(n.) முத்தலை வேல் (திரிசூலம்); trident. *"மூவிலை வேல் வலனேந்திப் பொலிபவனே" (திருவாச. 6 : 9).*

*[மூவிலை + வேல்.]*

**மூவிலைவேலோன்** *mūvilaivēlōn,* பெ.(n.) முத்தலை வேல் தாங்கிய வயிரவன் (பிங்.); Bhairava, as wielding the trident.

*[மூவிலைவேல் → மூவிலைவேலோன்.]*

**மூவிழை** *mūviḻai,* பெ.(n.) பாவு நெசவில் பயன்படுத்தப்படும் ஊடிழை; yarn that intervenes the warp.

*[மூ + இழை.]*

**மூவினம்** *mūvinam,* பெ.(n.) 1. ஆன் (பசு), எருமை, ஆடு ஆகிய மூவகைப்பட்ட கால்நடை; the three kinds of cattle, viz., *paśu, erumai, āḍu. "மூவின மேய்த்தல் சேவினந் தழுவல்" (இலக்.வி.390).* 2. வல்லினம் மெல்லினம் இடையினம் என்ற மூவகை மெய்யெழுத்து (நன்.236); the three classes of consonants, viz., v*allinam, mellinam, iḍaiyinam.*

*[மூ + இனம்.]*

**மூவு-தல்** *mūvu-,* 5 செ.கு.வி.(v.i.) விலகுதல் (யாழ்.அக.); to separate, remove.

த. மூவு-தல்; E. move.

*[ஒவு-தல் → மூவு-தல் = நீங்குதல்.]*

**மூவுதவமணி** *mūvudava-mani,* பெ.(n.) யானைக் குன்றிமணி; barricary seed - *Adanan thera pavonia* (சா.அக.).

**மூவுலகம்** *mūvulagam,* பெ.(n.) மூவுலகு பார்க்க; see *mūvulagu. "மூவுலகம் விளைத்த வுந்தி" (திவ்.இயற். திருவாசி.4).*

*[மூ + உலகம்.]*

**மூவுலகளந்தோன்** *mūvulagaḷandōn,* பெ.(n.) திருமால்; Visṇu.

*[மூவுலகு + அளந்தோன்.]*

**மூவுலகாளி** *mūvulagāḷi,* பெ.(n.) 1. கடவுள்; god. *"முனைவன் மூவுலகாளி" (திவ்.திருவாய்.8:9:5).* 2. இந்திரன் (யாழ். அக.); indra.

*[மூவுலகு + ஆளி. ஆள் → ஆளி.]*

**மூவுலகு** *mū-v-ulagu,* பெ.(n.) துறக்கம் (சுவர்க்கம்), நிலவுலகம் (மத்தியம்), கீழுலகு (பாதாளம்) என்ற மூன்று உலகங்கள்; the three worlds. *"மூவுலகுங் கேட்குமே... கொடுத்தா ரெனப் படுஞ்சொல்" (நாலடி,100).*

*[மூ + உலகு.]*

**மூவுலகுணர்ந்தமூர்த்தி** *mūvulagunarnda-mūrtti,* பெ.(n.) அருகன்; Arhat.

*[மூவுலகு + உணர்ந்தமூர்த்தி.]*

**மூவெயில்** *mū-v-eyil,* பெ.(n.) திரிபுரம்; the three cities, destroyed by *Śivan. "முக்கண்ணான் மூவெயிலு முடன்றக்கால்" (கலித்.2:4).*

*[மூ + எயில்.]*

**மூவேந்தர்** *mū-vēndar,* பெ.(n.) சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூன்று தமிழரசர்; the three Tamil kings, viz., *Cēraṉ, Cōḻaṉ, Pāṇḍiyaṉ. "முடியா லுலகாண்ட மூவேந்தர் முன்னே" (தேவர்.880, 11).*

*[மூ + வேந்தர்.]*

**மூவேந்திரவேளார்** *mu-vēndiravēḷār,* பெ.(n.) விருப்பாட்சி தேவராயர் காலத்தில் வாழ்ந்த கணக்கு அதிகாரி; a contemporary accountant of *viru-p-pāṭciDevarayar. "இப்படிக்கு இவர்கள் சொல்ல இந்த பிரமாணம் எழுதினென் இன்னாட்டுக் கணக்கு உத்திராபதியாரான அறிவுடை மூவேந்த வேளார்" (புது.கல்.715/40).*

இவர் காலம் கி.பி.1476.

**மூவேல்** *mūvēl,* பெ.(n.) மூன்று வகை வேலமரம்; the three kinds of acacia tree. *(வெள்வேல், கருவேல், குட்டிவேல்)* (சா.அக.).

*[மூ + வேல்.]*

**மூழ்[1]–தல்** *mūḻ-,*2 செ.கு.வி.(v.i.) பற்றிக் கொள்ளுதல்; to seize, take hold of. *"மூழ்ந்த பிணி நலிய" (நன்.417, விருத்.).*

*[மூள்–தல்→மூழ்–தல்.]*

**மூழ்[2]–த்தல்** *mūḻ-,*4 செ.குன்றாவி.(v.t.) மூழ்கச் செய்தல்; to submerge, engulf. *"மூழ்த்த நாளந்நீரை மீனாயமைத்த பெருமானை" (திவ்.பெரியதி.6. 8 : 2).*

*[முழு→மூழ்→மூழ்–த்தல்.]*

**மூழ்[3]–த்தல்** *mūḻ-,*4 செ.கு.வி.(v.i.) முதிர்தல் (பதிற்றுப்.அரும்.); to be mature.

*[ஊழ்–த்தல்→மூழ்–த்தல் = முதிர்தல்.]*

**மூழ்[4]–த்தல்** *mūḻ-,*4 செ.குன்றாவி.(v.t.) 1. மூடுதல்; to close, as a bud. *"மறவரும் வாய் மூழ்த்தனரே" (புறநா.336).* 2. மொய்த்தல்; to swarm round. *"கதழ்பு மூழ்த்தேறி" (பரிபா.10 : 18).* 3. வளைத்தல்; to surround. *"முரணுடை வேட்டுவர் மூழ்த்தனர்" (பெருங்.உஞ்சைக்.56 : 49).*

*[முகிழ்–த்தல்→மூழ்–த்தல்.]*

**மூழ்[5]** *mūḻ,* பெ.(n.) மலர் அரும்பு, முகிழ் (யாழ்ப்.); flower - bud.

மறுவ. போது, மொட்டு.

*[முகிழ்→மூழ்.]*

**மூழ்கடி–த்தல்** *mūḻgaḍi-,*4 செ.குன்றாவி. (v.t.) மூழ்கச் செய்தல்; to drown.

*[மூழ்கு + அடி–த்தல்.]*

**மூழ்கல்** *mūḻgal,* தொ.பெ.(vbl.n.) முழுகல்; bathing (சா.அக.).

மறுவ. தலை நீராடல்.

**மூழ்கிக்கப்பல்** *mūḻgi-k-kappal,* பெ.(n.) நீரில் மூழ்கிச் செல்லும் கப்பல்; submarine.

**மூழ்கு[1]–தல்** *mūḻgu-,*5 செ.கு.வி.(v.i.) 1. நீர் மடத்தின் கீழ் செல்லுதல், முழுகுதல்; submerge, get drowned; sink. *பயிர்கள் நீரில் மூழ்கி உள்ளன.* 2. நினைவு முதலியவற்றில் அழுந்துதல், துயரம் முதலியவற்றில் ஆழ்தல், அமிழ்தல்; get buried in thought, etc., be immersed in grief, etc. *"வேட்கை வெந்நீரிற் கடிப்ப மூழ்கி" (திருவாச.6:41). "சுரையம்பு மூழ்க" (கலித்.6). பழைய நினைவுகளில் மூழ்கிப் போனார். வேலையில் மூழ்கிவிட்டால் வீட்டை மறந்து விடுவார்.*

*[முழுகு→மூழ்கு→மூழ்கு–தல்.]*

**மூழ்கு²–தல்** *mūḻgu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. புகுதல்; to reach, enter. *"வானமூழ்கிச் சில் காற்றிசைக்கும்" (மதுரைக்.357).* 2. மறைதல்; to be hidden, screened. *"வியன்மலை மூழ்கிச் சுடர்கான் மாறிய செவ்வி நோக்கி" (சிறுபாண்.170).* 3. தங்குதல்; to abide, to remain. *"முளிமுதன் மூழ்கிய வெம்மை தீர்ந்து" (கலித்.16).*

தெ. முநுகு; க. முழுகு; ம. முநுகுக.

*[முழுகு→மூழ்கு→மூழ்கு–தல்.]*

**மூழ்கு³–தல்** *mūḻgu-*, 5 செ.கு.வி.(v.i.) ஈடுவைத்த பொருள் திருப்ப முடியாமல் போதல்; pledged things cannot retained.

**மூழ்த்தம்** *mūḻttam*, பெ.(n.) முழுத்தம் பார்க்க; see *muḻuttam*. *"ஊழ்வினை துரப்பவோடி யொன்று மூழ்த்தத் தினுள்ளே" (சீவக.2763).*

*[முழுத்தம்→மூழ்த்தம்.]*

**மூழ்த்து¹–தல்** *mūḻttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. மூழ்²–, பார்க்க; see *mūḻ²-*. 2. ஆழ்த்துதல்; to plunge, immense, weigh down.

*[முழுத்து→மூழ்த்து→மூழ்த்து–தல்.]*

**மூழ்த்து²** *mūḻttu*, வி.அ.(adv.) விரைந்து; speedly. *"வகைவகை யூமூழ் கதழ்பு மூழ்த்தேறி" (பரிபா.10:18). "மூழத்திறுத்த வியன் றானையொடு" (பதிற்று.33:5).*

**மூழக்கு** *mūḻakku*, பெ.(n.) மூன்று உழக்கு (தொல்.எழுத்து.457, உரை); three *uḻakku*. குறச்சிறார். *"மூழக்குழக்குத் தினை தந்தார்" (தமிழ்நா.29).*

*[மூ + உழக்கு.]*

**மூழட்டி** *mūḻaṭṭi*, பெ.(n.) மிளகு; pepper - *Piper nigrum*.

**மூழல்** *mūḻal*, பெ.(n.) 1. மூடி; lid. *'காண்டிகைச் செப்பு ஒன்று அடியும் மூழலும் உட்பட' (தெ.இ.கல்.தொ.2:5).* 2. கழற்காய் (திவா.); bonduc nut.

*[மூழ் →முழல்.]*

**மூழாக்கு** *mūḻākku*, பெ.(n.) மூழக்கு (தொல்.எழுத்து.457, உரை) பார்க்க; see *mūḻakku*.

*[மூலக்கு→மூழாக்கு.]*

**மூழி¹** *mūḻi*, பெ.(n.) 1. உட்குழிந்த அகப்பை (திவா.); ladle. 2. நீர்க்கலம் (கமண்டம்); a vessel for holding water. *"மயிற்பீலியோடு மூழிநீர் கையிற்பற்றி" (பெரியபு. திருஞான. 601).* 3. வேள்வி (யாகம்)க்குப் பயன்படுத்தும் ஏன வகை (சீவக.2464, அரும்.); a vessel used in sacrifices. 4. நீர்நிலை (பிங்.); reservoir of water, tank. 5. துழாவிக் கடையும் மத்து (வின்.); churning stick.

க. மூழி

*[மூழ்→மூழி.]*

**மூழி²** *mūḻi*, பெ.(n.) சோறு (சூடா.); boiled rice, cooked rice.

*[மூழ்→மூழி. மூழ் = அரும்பு. அரும்புபோல் இருக்கும் சோற்றை மூழி என்றிருக்கலாம்.]*

**மூழிவாய்** *mūḻi-vāy*, பெ.(n.) பூக்கூடை; flower - basket. *"மூழிவாய் முல்லை மாலை" (சீவக.833).*

*[மூழி + வாய். மூழ் = மலர் மொட்டு. மூழ்→ மூழி = மலர், மூழிவாய் = மலர்க்கூடை.]*

மூழை *mūḷai,* பெ.(n.) 1. குழிந்த இடம்; hallow place. *"குன்றை யம்மூல மூழைவாய் வைத்து" (கம்பரா.மருத்து.116).* 2. உட்குழிந்த அல்லது சமைத்த உணவை முகக்கும் அகப்பை; ladle. *"மூழை சுவையுணரா தாங்கு" (நாலடி, 321).* 3. துழாவிக் கடையும் மத்து (சது.); churning strick. 4. சோறு; boiled rice.

*[மூழி→மூழை.]*

மூள்(ளு)தல் *mūḷ-,* 16 செ.கு.வி.(v.i.) 1. நெருப்புப் பற்றுதல்; kindle, catch fire. *"ஆலையில் மூண்ட நெருப்பைத் தீயணைப்பு வீரர்கள் அணைத்தனர்".* 2. சினம், ஐயம் முதலியவை உள்ளத்தில் எழுதல்; to rouse the anger, suspicion. *அவன் பார்க்கும் பார்வையைக் கண்டதுமே அவருக்கு ஐயம் மூண்டது.* 3. ஊக்கத்துடன் முற்படுதல் (முனைதல்); to enter upon with earnestness. *"முதலற முடிக்க மூண்டான்" (கம்பரா.மாயாசீ.96).* 4. இடையூறு (தகராறு), கலவரம் முதலியன ஏற்படுதல்; to dispute, war, etc. *தலைவர் சுடப்பட்டதால் நாட்டில் கலவரம் மூண்டது.* 5. பொருந்துதல்; to be suitable. 6. கூடுதல், மிகுதல்; to increase.

*[முள்→மூள்→மூள்(ளு)-தல்.]*

மூளி[1] *mūḷi,* பெ.(n.) 1. பெண்களைக் குறித்து, அணிகலன்கள் முதலியவை இல்லாத வெறுமை; வழக்கமாய் உள்ள அணிகலனில்லாத-வன்-வள்-து; person or thing devoid of the usual ornaments, etc. *கல்யாணத்திற்கு மூளிக் கழுத்துடனா போவது? கணவனை இழந்து மூளியாகி நிற்கும் மகளைக் கண்டு மனம் அழுதது.* 2. பொருளில் வடிவமோ கூர்மையோ இல்லாத குறைபாடு; defect in shape, sharpness, etc. in certain articles. *முனை உடைந்து மூளியாகி கிடந்தது உளி. மூளிச் சட்டியானாலும் கொழுக்கட்டை வேக வேண்டும் (பழ.). சிதைந்து மூளியாகக் கிடந்தன சிற்பங்கள். உறுப்புக் குறையுள்ள பொருள் எல்லாம் மூளியும் காளியுமாய்க் கிடக்கிறது (உ.வ.).* 3. பெண்ணைக் குறித்த ஒரு வசைச் சொல்; an addrishing word for woman an conlempt. 4. பெண்ணைக் குறிக்கும் பொதுச்சொல்; a term for addrishing woman. *"ஒருநாழியாலும் வரும். ஒரு மூளியாலும் வரும்" (பழ.).*

*[முள் →மூள்→மூளி.]*

மூளி[2] *mūḷi,* பெ.(n.) 1. உறுப்புக் குறை; defect of limb, deformity. *"சூர்ப்பணகையை மூளியாக்க" (இராமநா. உயுத்.26). காதறுந்த மூளி மூக்கறுந்த மூளியைப் பார்த்துச் சிரித்தாளாம்.* 2. தலைப்பகுதியில் பின்னப்பட்டிருப்பது; that which has lost a part or piece, especially at the top. *மூளிக்குடம்.* 3 குறைவுள்ள கருமம்; that which is defective. *அவன் வராமையால் அந்தக் கருமம் மூளியாய்ப் போயிற்று.* 4. அழகற்றவள்; ugly woman, a term of abuse. 5. துளையுள்ளது; that which bore. 6. துளையறுந்தது; that which is torn bore.

*[முள் →மூள்→மூளி.]*

மூளிக்காதவன் *mūḷi-k-kādavaṉ,* பெ.(n.) மடங்கிய அல்லது சுருங்கிய காதினை உடையவன் (கோவை.); bent, or contracted ear-lobe.

*[மூளி + காதவன். காதன்→காதவன்.]*

**மூளிக்காதி** *mūḷi-k-kādi*, பெ.(n.) காதணியில்லாதவள்; women without ear jewels.

*[மூளி + காதி. காது→காதி.]*

**மூளிக்காது** *mūḷi-k-kādu*, பெ.(n.) 1. பெண்டிரின் அணிகலன்கள் அணியாத காது; woman's ear devoid of the usual ornaments. 2. அறுபட்ட காது; ear with torn lobe.

*[மூளி + காது.]*

**மூளிச்சட்டி** *mūḷi-c-caṭṭi*, பெ.(n.) குறைபாடுடைய பானை; defective pot. *"மூளிச்சட்டியானாலும் கொழுக்கட்டை வேகும்" (பழ.).*

*[மூளி + சட்டி.]*

**மூளிக்குடம்** *mūḷi-k-kuḍam*, பெ.(n.) ஒரு மருங்கு வாயுடைந்த குடம்; damaged mouth pot.

*[மூளி + குடம்.]*

**மூளிநாய்** *mūḷi-nāy*, பெ.(n.) காதறுபட்ட நாய் (வின்.); dog with clipped ears.

*[மூளி + நாய்.]*

**மூளிமுக்காடு** *mūḷi-mukkāḍu*, பெ.(n.) மகளிர் தலையை மறைக்கும் துணி (வின்.); hood, covering for the head of a woman.

*[மூளி + முக்காடு.]*

**மூளிமுலை** *mūḷi-mūlai*, பெ.(n.) காம்பு இல்லாத முலை; absence of the nipple - *Athelia* (சா.அக.).

*[மூளி + முலை.]*

**மூளிமோதரம்** *mūḷi-mōdaram*, பெ.(n.) கணையாழி, விரலணி (கோவை.); finger - ring.

*[மூளி + மோதரம்.]*

**மூளியாடு** *mūḷi-y-āḍu*, பெ.(n.) மிகச்சிறிய காதுகளையுடைய ஆடு (கோவை.); sheep with small ears.

*[மூளி + ஆடு).]*

**மூளியுதடு** *mūḷi-yudaḍu*, பெ.(n.) பிளந்த உதடு (வின்.); hare lip.

*[மூளி + உதடு.]*

**மூளியோடு** *mūḷiyōḍu*, பெ.(n.) சிதைந்த ஓடு (வின்.); chipped tile.

*[மூளி + ஓடு.]*

**மூளிவண்டி** *mūḷi-vaṇḍi*, பெ.(n.) மேற்கூடு இல்லாத மாட்டு வண்டி (கோவை.); bullock cart without roof.

*[மூளி + வண்டி.]*



**மூளுவான்சொறி** *mūḷuvāṉ-šoṟi*, பெ.(n.) சொறி – கடல் மீன் (தஞ்சை, மீன்.); a sea fish.

**மூளை** *mūḷai,* பெ.(n.) 1. உடல் உறுப்புகளைச் செயற்படுத்துவதும் கட்டுப்படுத்துவதும் உணர்வுகளைத் தோற்றுவிப்பதுமான, மண்டையோட்டினுள் அமைந்திருக்கும் உறுப்பு; brain. *"மூளையார் சிரத்து" (திவ்.பெரியதி.4. 2 : 8).* வலிப்பு நோய்க்கு *மூளையில் ஏற்படும்* பாதிப்பே கரணியம். 2. அறிவு, சிந்தனைத் திறன்; brain, intelligence. *மூளை இருந்தால் இப்படிச் செய்வாயா? அவருக்கு இருக்கும் மூளையில் கால்பங்கு நமக்கு இருந்தால் போதும்!* 3. எலும்புக்கு நடுவில் உள்ள பொருள் (மச்சை) (சூடா.); bone marrow, medullary substance, one of *catta-tātu.*

ம. மூள; வ.மஜ்ஜா

**OE.**mearg, **Os., OHG.** marg, **ON.**mergh, **E.** marrow.

*[மூள் → மூளை = எலும்பிற்கு அல்லது மண்டையோட்டிற்கு உள்ளிருப்பது.]*

பிடரியில் முள்ளந்தண்டு நடுவில் இருந்து மண்டை வரைக்கும் நான்கு பிரிவுகளாய் உள்ள குழகுழப்பான வெண்மையுள்ள ஒரு தசைப்பற்று. இது ஆண்களுக்கு பொதுநிலையில் 1500 சிற்றெடை (grams)யும், பெண்களுக்கு (1200 சிற்றெடையும் இருக்கும் என்பர். அகவை ஆக ஆக எடையும் வலுவும் குறையும் (சா.அக.).



**மூளைக்கட்டி** *mūḷai-k-kaṭṭi,* பெ.(n.) மூளையில் உண்டான கட்டி; abscess of the brain.

*[மூளை + கட்டி.]*

**மூளைக்கமர்** *mūḷai-k-kamar,* பெ.(n.) தலையின் மூளைப் பகுதிகளின் இடையேயுள்ள இடைவெளி; the fissure separating the two hemispheres of the brain - *Intercerebral fissure* (சா.அக.).

**மூளைக்கலக்கம்** *mūḷai-k-kalakkam,* பெ.(n.) மூளையில் ஏற்படும் கலக்கம், அறிவுப் பிறழ்சி; brain disorders, paranoea.

*[மூளை + கலக்கம்.]*

**மூளைக்காய்ச்சல்** *mūḷai-k-kāyccal,* பெ.(n.) மூளையில் ஏற்படும் அழற்சியினால் பெரும்பாலும் குழந்தைகளுக்கு உண்டாகும் காய்ச்சலோடு கூடிய நோய்; brain fever.

*[மூளை + காய்ச்சல்.]*

**மூளைக்கால்கள்** *mūḷai-k-kālgaḷ,* பெ.(n.) முகுளத்தையும் சின்ன மூளையையும் ஒன்று சேர்க்கும் நரம்புப் பட்டைகள்; a pair of bands which connect the pons and the oblongata with the cerebrum cruracerebri (சா.அக.).

*[மூளை + கால்கள்.]*

**மூளைக்கொதிப்பு** *mūḷai-k-kodippu,* பெ.(n.) 1. வெயிலால் தாக்கப்படுகை; sunstroke. 2. தலையில் சென்று தாக்கும் மிகையான குருதியோட்டம்; rush of blood to the head. *மிக்கபடிப்பால் அவனுக்கு மூளைக் கொதிப்பு உண்டாயிற்று.*

*[மூளை + கொதிப்பு.]*

**மூளைகெடு–தல்** *mūḷai-keḍu-*,20 செ.கு.வி. (v.i.) அறிவு குறைதல்; to be weak in brain power.

*[மூளை + கெடு–தல்.]*

**மூளைச்சலவைசெய்–தல்** *mūḷai-c-calavai -šey-*, 1 செ.கு.வி. (v.i.) சிந்தித்து முடிவுக்கு வரவிடாமல் ஒன்றைத் திரும்ப திரும்பச் சொல்லி அல்லது சான்று காட்டி அதை ஏற்கச் செய்தல்; brain wash.

*[மூளை + சலவை + செய்–தல்.]*

**மூளைச்சுரம்** *mūḷai-c-curam*, பெ.(n.) மூளைக்காய்ச்சல் பார்க்க; see *mūḷai-k-kāyccal.*

*[மூளை + சுரம்.]*

**மூளைச்சோர்வு** *mūḷai-c-cōrvu*, பெ.(n.) உறுதியாக நிற்கும் திறன் இல்லாத மூளை; weakness of brain (சா.அக.).

*[மூளை + சோர்வு.]*

**மூளைத்தாபிதம்** *mūḷai-t-tābidam*, பெ.(n.) கொதிப்புடன் உள்ள மூளை; inflammation of the brain (சா.அக.).

மறுவ. மூளைக்கொதிப்பு

*[மூளை + Skt. தாபிதம்.]*

**மூளைதாபனரோகம்** *mūḷai-t-tābaṉa-rōgam*, பெ.(n.) மூளையில் ஏற்படும் நோய்; cerebral inflammation.

**மூளைப்பாரிசவாயு** *mūḷai-p-pāriša-vāyu*, பெ.(n.) மூளைக்கு வரும் ஒரு வகை நோய்; cerebral paralysis.

*[மூளை + **Skt.** பாரிசவாயு.]*

**மூளைப்பித்தம்** *mūḷai-p-pittam*, பெ.(n.) தலை மூளையில் பித்தம் சேர்ந்தால் மது உண்டவரைப் போல பிதற்றி, அறிவைக் கெடுத்துவிடும் ஒரு வகை நோய்; a disease which spoils the intellect of the person and makes him behave little, a intoxicated person. It is caused by bile humour affecting the brain (சா.அக.).

*[மூளை + பித்தம்.]*

**மூளைப்பிதுக்கம்** *mūḷai-p-pidukkam*, பெ.(n.) மூளை பிதுங்கி விடுகை (இங்.வை.); protrusion of the brain, as from an accident.

*[மூளை + பிதுக்கம்.]*

**மூளையதிர்ச்சி** *mūḷai-y-atircci*, பெ.(n.) தலையில் அடிபடுவதால் உண்டாகும் மூளைக் கலக்கம் (இங்.வை.); concussion of the brain.

*[மூளை + அதிர்ச்சி.]*

**மூளையமுக்கம்** *mūḷai-y-amukkam*, பெ.(n.) மூளை அழுந்தி விடுகை (இங்.வை.); compression of the brain, as from an accident.

*[மூளை + அமுக்கம்.]*

**மூளையரத்தவொழுக்கு** *mūḷai-y-aratta - v-oḻukku*, பெ.(n.) அரத்தப் போக்குடைய மூளை; cerebral haemorrhage.

*[மூளை + அரத்தம் + ஒழுக்கு.]*

**மூளையில்லாதவன்** *mūḷai-y-illādavaṉ*, பெ.(n.) மூடன், அறிவிலி; fool, as devoid of brains.

*[மூளை + இல்லாதவன்.]*

**மூளைவறண்டவன்** *mūḷai-vaṟaṇḍavaṉ,* பெ.(n.) 1. கோணற் புத்தியுள்ளவன் (வின்.); eccentric man. 2. மூளையில்லாதவன் (இ.வ.); பார்க்க; see *mūḷai-y-iilādavaṉ.*

*[மூளை + வறண்டவன்.]*

**மூற்றை** *mūṟṟai,* பெ.(n.) மும்மடங்கு; three -fold; triple. *"நூற்றுப்பத்து நுவன்ற தோன் முகன் மூற்றைக் கையினன்" (கந்தபு. கயமுகன்.2).*

*[மூன்று→மூற்றை.]*

**மூறுவஞ்சி** *mūṟu-vañji,* பெ.(n.) முத்து; pearl, one of the nine gems (சா.அக.).

**மூறுவா** *mūṟuvā,* பெ.(n.) பெருங்குரும்பை (மலை.); bowstring hemp.

**மூறைக்கல்** *mūṟai-k-kal,* பெ.(n.) கடலடியிற் கிடைக்கும் கல் வகைகளுள் விலை மதிப்புடையது (நெல்லைமீன.); valuable stone among stones found under the sea.

**மூறைமுள்** *mūṟai-muḷ,* பெ.(n.) நீர்பரப்பின் மேல் பந்துபோல் மிதக்கும் ஓருயிரி; an aquatic floating creeper resembling like ball. *மூல நோயுடையார் உண்ண மூலம் குணமாகும்.*

**மூன்றாங்கட்டு** *mūṉṟāṅ-kaṭṭu,* பெ.(n.) 1. வீட்டின் மூன்றாங் கட்டடப் பகுதி (உ.வ.); the third compartment of a house. 2. ஒடிந்த உறுப்புக்கு இறுதியாக மூன்றாம் முறை கட்டுங் கட்டுப் போலுள்ள முடிவான தீர்மானம் (வின்.); final or decisive opinion, as the third and last bandage to a broken limb (செ.அக.).

*[மூன்று + ஆம் + கட்டு.]*

**மூன்றாங்கல்** *mūṉṟāṅ-kal,* பெ.(n.) மூன்று கல் வைத்து ஆடும் கல்லாட்டம் (கோவை.); a kind of three stone game or play.

மறுவ. கல்லாங்கல், கூழாங்கல்.

*[மூன்றாம் + ஆம் + கல்.]*

ஆட்டத்தின் பெயர் : மூன்று கற்களைக் கொண்டு ஆடும் ஆட்டம் மூன்றாங்கல்.

ஆடுமுறை : மூன்று கற்களுள் ஒன்றைக் கீழ் வைத்து ஏனையிரண்டையும் கையில் வைத்துக் கொண்டு அவற்றுள் ஒன்றை மேலெறிந்து இன்னொன்றைக் கீழ்வைத்து முந்திக் கீழ் வைத்ததை எடுத்துக் கொண்டு மேலெறிந்ததைப் பிடித்தல் வேண்டும். பின்பு மீண்டும் ஒன்றை மேலெறிந்து கையிலுள்ளதைக் கீழ் வைத்துக் கீழிருந்ததை எடுத்துக் கொண்டு மேலெறிந்ததைப் பிடித்தல் வேண்டும். இவ்வாறே பன்னிருமுறை தொடர்ந்து தவறாது ஆடிவிடின் பழமாம். பன்னிரு முறைக்கும் கீழ்வருமாறு பாட்டுப் பாடப்படும்.

1. ஒன்றாவது – ஒன்றாங்காய், 2. இரண்டாவது – இரத்தினகிளி (அல்லது ஈச்சங்காய்), 3. மூன்றாவது முத்துச்சரம், 4. நாலாவது நாற்காலி, 5. அஞ்சாவது பஞ்சவர்ணம், 6. ஆறாவது பாலாறு, 7. ஏழாவது எழுத்தாணி, 8. எட்டாவது கொட்டாரம், 9. ஒன்பதாவது ஓலைப்பூ, 10. பத்தாவது பனங்கொட்டை, 11. பதினொன்றாவது தென்னம்பிள்ளை, 12. பன்னிரண்டாவது தென்னை மரத்தடியிலே தேரோடும் பிள்ளையார்.

ஒருத்தி ஆடும் போது தவறிவிடின், அடுத்தவள் ஆடல் வேண்டும். ஆடினவள் மறுமுறையாடும் போது, மீண்டும் முதலிலிருந்தே ஆடல் வேண்டும் (தமிழ் நாட்டு விளையாட்டுகள், பாவாணர், பக்.63).

நெல்லையில் பெண்கள் இவ்விளையாட்டை விளையாடும் பொழுது கீழ்வரும் பாட்டைப் பாடிக் கொண்டே விளையாடுவார்கள்.

*ஓரி உலகெலாம், உலகெலாம்*
*சூரியன், சூரியன் தங்கச்சிக்கு*
*சுந்தரவள்ளிக்கு, மாயக்*
*குறத்திக்கு நாளை கல்யாணம்.*

**மூன்றாங்கால்** *mūṉṟāṅ-kāl,* பெ.(n.) 1. திருமணம் போன்றவற்றிற்கு மூன்று நாள் முன்பு நடும் பந்தற்கால் (வின்.); the first post of a marriage 'pandal' set up three days before the wedding. 2. மூன்றாம் தலைமுறை உறவு (வின்.); consanguinity of the third degree. 3. மூன்றாம் ஆண்குழந்தை (இ.வ.); the third male child of a person.

*[மூன்று + ஆம் + கால்.]*

**மூன்றாங்குட்டம்** *mūṉṟāṅ-kuṭṭam,* பெ.(n.) உடல் சிவப்பாகி, கொஞ்சம் நாள் கழித்து உடம்பு வெளுத்துத் துன்புறுத்தும் ஒருவகைத் தொழுநோய்; third stage of leprosy (சா.அக.).

*[மூன்று + ஆம் + குட்டம்.]*

**மூன்றாங்கொம்பு** *mūṉṟāṅ-kombu,* பெ.(n.) மூன்றாம் நாள் விதைப்பதற்காக அதற்கு முன் இரண்டு நாளும் நீரில் ஊறவைத்த நெல்விதை (தஞ்சை.); seeds of paddy kept in water for two days, for sowing on the third day.

மறுவ. மூன்றாங்கோப்பு

*[மூன்று + ஆம் + கொம்பு.]*

**மூன்றாந்தரச்சங்கு** *mūṉṟāndara-c-caṅgu,* பெ.(n.) புழுத்தாக்குதலுக்குட்பட்ட சங்கு (நெல்லை.); a marine shell, an inferior conch affected by worms.

*[மூன்று + ஆம் + தரசங்கு.]*

**மூன்றாந்திருவந்தாதி** *mūṉṟān-tiru-v-andādi,* பெ.(n.) நாலாயிரத் தெய்வப் பனுவலுள் பேயாழ்வார் வெண்பாவிற் பாடிய அந்தாதி நூல்; an *antāti*n *veṇbā* metre in *Nālāyira-p-pirabandam* by *Pēyāḻvār.*

*[மூன்று + ஆம் + திருவந்தாதி.]*

**மூன்றாநடவு** *mūṉṟā-naḍavu,* பெ.(n.) மூன்றாவது முறை பிடுங்கி நடும் நாற்று (இ.வ.); third transplantation of seedlings.

*[மூன்று + ஆம் + நடவு.]*

**மூன்றாம்சுற்று** *mūṉṟām-šuṟṟu,* பெ.(n.) 1. மூன்றாவது சுற்றுப் பாதை; கோயிற் கருவறையைச் சுற்றியுள்ள மூன்றாவது சுற்றுப்பாதை; vicinity surrounding a shrine in a temple. 2. விளையாட்டு, பேச்சு வார்த்தை மூன்றாம் நிலையில் இருக்கை; third circular of sports, talk.

*[மூன்று + ஆம் + சுற்று.]*

**மூன்றாம்பாட்டன்** *mūṉṟām-pāṭṭaṉ,* பெ.(n.) முப்பாட்டன் (இ.வ.); grand father's grand father.

*[மூன்று + ஆம் + பாட்டன்.]*

**மூன்றாம்பிறைக்காய்ச்சல்** *mūṉṟām-piṟai-k-kāyccal,* பெ.(n.) மூன்று நாட்களுக்கு ஒருமுறை விட்டு விட்டு வரும் காய்ச்சல்; a fever whose paroxysms

return every third day or every 48 hours - *Tertian fever* (சா.அக.).

*[மூன்று + ஆம் + பிறை + காய்ச்சல்.]*

**மூன்றாம்வளையமூலவிரணம்** *mūṉṟām-vaḷaiya-mūla-viraṇam,* பெ.(n.) மலவாயில் உண்டாகும் மூல முளை எரிச்சல்; piles (சா.அக.).

*[மூன்று + ஆம் + வளையம் + மூலம் + **Skt.**இரணம்.]*

**மூன்றாமீற்றுப்பசும்பால்** *mūṉṟām-īṟṟu-p-pašum-pāl,*பெ.(n.) நாட்பட்ட சளி (கபம்) நோயைப் போக்கும் பால்; milk of the cow that has given birth to the third calf (சா.அக.).

*[மூன்று + ஆம் + ஈற்று + **Skt.** பசு + அம் + பால்.]*

**மூன்றாமுறைக்காய்ச்சல்** *mūṉṟā-muṟai-k-kāyccal,*பெ.(n.) ஒரு நாள் விட்டு ஒரு நாள் வரும் காய்ச்சல் நோய் (M.L.); malaria tertian fever.

*[மூன்று + ஆம் + முறை + காய்ச்சல்.]*

**மூன்றாவது** *mūṉṟāvadu,* பெ.(n.) 1. இரண்டாவதற்கு அடுத்துள்ளது; that which is third. 2. வெற்றிலைப் பாக்குடன் சேர்த்து உண்ணும் மூன்றாவது பொருளான சுண்ணாம்பு; quick lime, as the third article used in chewing betel, the other two being betel and areca-nut.

*[மூன்று →மூன்றாவது.]*

**மூன்றிலைமேனி** *mūṉṟilai-mēṉi,* பெ.(n.) குப்பைமேனி; rubbish plant - *Acalypha indica* (சா.அக.).



**மூன்று** *mūṉṟu,* பெ.(n.) இரண்டுக்கு மேல் அடுத்துள்ள எண்; three. *சார்ந்து வரல் மரபின் மூன்றலங் கடையே (தொல்.எழுத்து.1). "அறனும் பொருளு மின்பமு மூன்றும்" (புறநா.28:15). "இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்" (நற்.214:1). "மூன்றுட னீன்ற முடங்கர் நிழத்த" (அகநா.147:4). "மூன்று முடிச்சு கழுத்தில் விழட்டும்; முப்பது இலைகள் குப்பையில் விழட்டும்" (பழ.). "மூன்று காசுக் குதிரை ஆறு காசு வைக்கோல் தின்கிறதாம்". "மூன்று மாதத்திற்கு முன்னே பல் போனவளுக்கு முறுக்குக் கடையில் என்ன வேலை". "மூன்று வீட்டுக்கு முக்காலி நான்கு வீட்டிற்கு நாற்காலி".*

தெ. மூது; க. மூட்ரு; ம. முந்நு; து. முகி.

**மூன்றுகட்டுவீடு** *mūṉṟu-kaṭṭu-vīḍu,* பெ.(n.) 1. மூன்று முற்றங்களைக் கொண்ட வீடு; comprising three court yards house. 2. மூன்று மாடி உள்ள வீடு; three terrace house.

*[மூன்று + கட்டு + வீடு.]*

**மூன்றுகாலம்** *mūṉṟu-kālam,*பெ.(n.) இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய மூன்று காலங்களைக் குறிப்பது; three types of tense, viz. present tense, past tense, future tense. *முக்காலமும் அறிந்த முனிவன்.*

*[மூன்று + காலம்.]*

**மூன்றுகொட்டைக்காய்** *mūṉṟu-koṭṭai-k-kāy*, பெ.(n.) மூன்று விதையுள்ள நிலக்கடலை (கோவை.); three seeds ground -nut.

*[மூன்று + கொட்டை + காய்.]*

**மூன்றுதண்டர்** *mūṉṟu-taṇḍar*, பெ.(n.) மூன்று (திரி) தண்டத் துறவிகள்; ascetics with trident - staff. *"மூன்று தண்டரொன்றினர்" (திவ்.திருச்சந்.52).*

*[மூன்று + தண்டர்.]*

**மூன்றுதாள்** *mūṉṟu-ṭāḷ*, பெ.(n.) 1. ஒரு வகைச் சீட்டாட்டம் (கோவை.); a kind of a game at cards. 2. தனித்தனியாக மூன்று காகிதத்தின் பெயர்; three paper. 3. மூன்று கால்கள்; three legs.

*[மூன்று + தாள்.]*

**மூன்றுதுறைசன்னல்** *mūṉṟu-tuṟai-šaṉṉal*, பெ.(n.) மூன்று கதவுடைய சாளரம்; window with three doors.

*[மூன்று + துறை + சன்னல்.]*

**மூன்றுநிலைமாடக்கோயில்** *mūṉṟu-niḷai-māḍa-k-kōyil*, பெ.(n.) மூன்று அடுக்குடையக் கோயில்; the three storeyed (storied) temple.



*[மூன்று + நிலை + மாடம் + கோயில்.]*

**மூன்றுநூல்** *mūṉṟu-nūl*, பெ.(n.) பூணூல்; the sacred thread, as having three strands. *"மூன்றுநூல் கிடந்த தோண்முனி" (கம்பரா.கிளை.137).*

*[மூன்று + நூல்.]*

**மூன்றுப்பு** *mūṉṟuppu*, பெ.(n.) கடலுப்பு, இந்துப்பு, கல்லுப்பு என்னும் மூன்று வகை உப்பு; the three salts, viz., *kaḍaluppu, induppu, kalluppu* (சா.அக.).

*[மூன்று + உப்பு.]*

**மூன்றுபத்திரி** *mūṉṟu-pattiri*, பெ.(n.) சாதி இலை, இலவங்க இலை, தாளிச இலை; mace, cinnamon leaf, Himalayan silverfur (சா.அக.).

*[மூன்று + பத்திரி.]*

**மூன்றுபத்திவீடு** *mūṉṟu-patti-vīḍu*, பெ.(n.) மூன்றுகட்டுவீடு பார்க்க; see *mūṉṟu-kaṭṭu-vīḍu.*

*[மூன்று + பத்தி + வீடு.]*

**மூன்றுபுள்ளிநண்டு** *mūṉṟu-puḷḷi-naṇḍu*, பெ.(n.) மேலோட்டில் மூன்று புள்ளிகளுடைய கடல் நண்டு (தஞ்சைமீன.); three dotted sea-shore crabs.

*[மூன்று + புள்ளி + நண்டு.]*



**மூன்றுமா** *mūṉṟu-mā,* பெ.(n.) 'ங' என்ற குறியுள்ளதும், இருபதில் மூன்று கொண்டதுமான கீழிலக்க (பின்ன)வெண்; the fraction 3/20.

*[மூன்று + மா.]*

**மூன்றுவர்ணத்தி** *mūṉṟu-varṇatti,* பெ.(n.) பன்றி முள்; the thorn of a porcupine (சா.அக.).

**மூன்றுவீசம்** *mūṉṟu-vīšam,* பெ.(n.) 'ங' என்ற குறியுள்ளதும் பதினாறில் மூன்று கொண்டதுமான கீழிலக்க (பின்ன)வெண்; the fraction 3/16.

*[மூன்று + வீசம்.]*

**மூன்றுவேளை** *mūṉṟu-vēḷai,* பெ.(n.) காலை, நண்பகல், மாலை என்ற நாளின் மூன்று பகுதிகள்; three period of a day called morning, after-noon and evening.

*[மூன்று + வேளை.]*

**மூன்றேமுக்கால்** *mūṉṟē-mukkāl,* பெ.(n.) அளவுப் பெயர்; measurement. எண்ணிக்கையில் மூன்றும், மேலும் ஒன்றில் முக்கால் பங்கும் (3/4). *"மூன்றே முக்கால் நாழிகையிலே முத்து மழை பெய்தது. வாரி எடுக்கு முன்னே மண் மாரியாய்ப் போயிற்று" (பழ.).*

*[மூன்று + முக்கால்.]*

**மூனானாத்து** *mūṉāṉāttu,* பெ.(n.) நேற்றைக்கு முந்திய நாளுக்கு முந்தைய நாள் (முகவைமீன.); two - days before yesterday.

*[மூன்றாம்நேற்று → மூனானேற்று → மூனானாத்து.]*

**மூனை** *mūṉai,* பெ.(n.) தவசங்களுள் ஒன்றான கம்புக்கு மேலுள்ள தோல்; skin layer that covers the millet, husk.

மறுவ. சொங்கு, கொங்கு, கொங்கை.



